தாமும் அநுபவித்து அநுபவ யோக்யரைக் "காணீர்" "காணீர்" என்று காட்டுகிறார்.

(முகிழ்முலையீர்) பர்(ஃ)க்த்யங்குரம். ... ... (௪)

அவ—அஞ்சாம்பாட்டு. திருமுழந்தாளைவிட்டு திருத்துடையை அநுபவிக்கிறார். *

ஸ்வா.—(பிறங்கியவித்யாதி) விபரீதப்ரகாசகையான பேய்ச்சியுடைய முலையைச் சுவைத்து, (உண்டிட்டு) ஆஸ்வாதித்து, அமுது செய்திட்டு. (இட்டு) ஜகத்துக்கு உபகரித்திட்டு. (உறங்குவான்போலே) கண்வளருவாரைப்போலே ஆடப்பார்த்துக் கிடந்த ப்ரகாரத்

காணுங்கோள். (முகிழ்முலையீர் வந்துகாணீரே.) முகிழ்த்தமுலையையுடையீர் வந்து காணுங்கோள். ... ... ... ... (௪)

அவ.—அஞ்சாம்பாட்டு. திருமுழந்தாளினழகை அநுபவித்தவநந்தரம், திருத்துடையினழகை யநுபவிக்கிறார்.

மூ.— பிறங்கிய பேய்ச்சி முலைசுவைத் துண்டிட்டு
உறங்குவான் போலே கிடந்தவிப் பிள்ளை
மறங்கொ ளிரணியன் மார்வைமுன் கீண்டான்
குறங்குகளை வந்து காணீரே குவிமுலையீர் வந்துகாணீரே. (ரு)

வ்யா.—(பிறங்கியபேய்ச்சி முலைசுவைத்துண்டிட்டு.) க்ரௌர்யத்தால் வந்த ப்ரகாசத்தை யுடையளான பூதனையுடைய முலையைப் பசையறச் சுவைத்து புஜித்து. "உண்டிட்டு" என்று-ஒரு முழுச்சொல்லு. (உறங்குவான்போலே கிடந்தவிப்பிள்ளை) செய்த பராக்ரமம் ஒன்றும் தெரியாதபடி உறங்குமவன்போலக்கிடந்த இப்பிள்ளை.

டைய ஓரோதடாவுண்ண அவளை இழந்தாளாகநினைத்துஎருவிறுவீர்த்து எழில் மத்தின் பழந்தாம் பாலோச்சப் பயத்தால் தவிழ்ந்தான்" என்றந்வயம். ... ... ... ... ... ... ... ... (௪)

அரு.—அஞ்சாம்பாட்டு.—"பிறங்குதல்" ப்ரகாசமாய், அத்தை ஹேதுபூர்வமாக வருளிச்செய்கிறார் (க்ரௌர்யேத்யாதி). "சுவைத்து" என்றும் "உண்டிட்டு" என்றும் சொல்லுகையால் பலித்தவர்த்தம் (பசையற) என்றது. (செய்த) இத்யாதிக்குத் தாத்பர்யம்- பூதநா நிரஸநார்த்தமாகச் செய்த பராக்ரமத்துக்கு இவனிடத்தில் ஸூசகமொன்றும் தெரியாதபடியென்னுதல். பூதனையை நசிப்பிக்குமிடத்தில் ரக்தங்களை வற்றப்பண்ணுதல், மாம்ஸங்களை ஒழிப்பித்தல், அஸ்திகளைத் தளர்த்துதல் இவை

தைக்கண்டு " இப்பிள்ளை " என்கிறாள். (மறங்கொளித்யாதி) பிள்ளையைச்சீறி வெகுண்ட மறத்தாலேயிறே ஹிரண்யனைப்பிளந்தது. இப்படி பிளந்தவனுடைய திருத்துடைகளை ரக்தஸ்பர்ஶத்தோடே காணீர் என்றாப்போலே இருக்கிறது. இப்போது இதுசொல்லுகிறது விரோதி நிரஸந ஸாமர்த்யத்தாலும், தார்ம்மைக்யத்தாலுமிறே; அன்றிக்கே ஸ்வாபாவிகமாகத்தழுவுகிற போதைத்திருக்குறங்குகளைவந்து காணீரென்கிறாரென்றுமாம்.

" குவிமுலையீர் " என்று பஞ்க்தி வர்த்தநர்களாகிறவர்களை அழைக்கிறார். ... ... ... ... ... ... (௫)

அவ.—ஆறாம்பாட்டு. திருத்துடையை அநுபவித்து திருக்கடிப்ரதேசத்தை அநுபவிக்கிறார்.

ஸ்வா.—(மத்தவித்யாதி) மதித்த ஆனைகளையுடையஶ்ரீவஸுதே

---

(மறங்கொளித்யாதி) ப்ரஹ்லாத விஷயமான சீற்றத்தையுடையனை ஹிரண்யனுடைய மார்வை முற்காலத்திலே பிளந்து பொகட்டவனுடைய அச்சுவடு தோற்றும்படியிருக்கிற திருத்துடைகளை வந்து காணுங்கோள். (குவிமுலையீர் வந்து காணீரே) குவிகிற முலையையுடைய நீங்கள் வந்து காணுங்கோள். ... ... ... (௫)

அவ.—ஆறாம்பாட்டு. திருத்துடையிலழகை அநுபவித்த வநந்தரம் திருக்கடி ப்ரதேசத்திலழகை அநுபவிக்கிறார்.

மூ.—மத்தக்களிற்று வசுதேவர் தம்முடை
சித்தம் பிரியாத தேவகிதன் வயிற்றில்
அத்தத்தின் பத்தாநாள் தோன்றிய வச்சுதன்
முத்தமிருந்தவா காணீரே முகிழ்நகையீர் வந்துகாணீரே. (௬)

வ்யா.—(மத்தவித்யாதி)மத்தகஜங்களையுடையரான ஶ்ரீவஸு

---

யொன்றும் தெரியாதபடி யென்னுதல். " மறம்" கோபம். இது பகவத் விஷயத்தில் கோபமாகில் க்ஷமிக்கலாயிருக்குமென்று திருவுள்ளம்பற்றி ஆஶ்ரிதர் விஷயமானகோபமாக வருளிச்செய்கிறார் (ப்ரஹ்லாதேத்யாதி). (அச்சுவடுதோற்றும்படி) அந்த அடையாளம் தோன்றும்படி. அதாவது-திருத்துடைகளைக் கண்டால் ஸந்நிவேச விசேஷத்தாலே அவனே இவனென்று தோற்றும்படியிருக்கை. "இடந்த இப்பிள்ளையான மார்பைமுன் கீண்டானுடைய குறங்குகளை" என்றந்வயம். ... ... ... (௫)

அ௫. —ஆறாம்பாட்டு.—(திருக்கடி ப்ரதேசத்தில்) கடிப்ரதேசவர்த்தி பும்ஸ்த்வசிஹ்நமான அவயவ விசேஷத்தில்.

வர் தம்முடைய ஹ்ருதயத்துக்குத்தகுதியாகப் பரிமாறுகிற தேவகியுடைய திருவயிற்றிலே. (அத்தத்தின் பத்தாநாள் தோன்றிய வச்சுதன்) என்று அவதரித்த திருநக்ஷத்ரத்தை மங்களாசாஸநபரராகை யாலே மறைத்தருளிச் செய்கிறார். (தோன்றிய) என்கையாலே (க) "தேவகீபூர்வஸந்த்யாயாம் - தேவகீபூர்வ ஸந்த்யாயாம்" என்கிறபடியே சேதநனைப்போலே கர்மநிபந்தநமன்றிக்கே அநுக்ரஹத்தாலே ஆவிர்ப்ப(ர்ப)வித்தானென்கிறது. "அச்சுதன்" என்கிறது-ஆஸ்ரிதரை எல்லாதசையிலும் நழுவவிடாதவனென்றபடி. முத்தம்—சண்ணம். முகிழ்நகை-மந்தஸ்மிதம். ... ... ... ... ... (ரு)

அவ.—எழாம்பாட்டு. திருக்கடி ப்ரதேசத்தில் நின்றும்போந்து திருமருங்கினழகை அநுபவிக்கிறார்.

---

தேவர் தம்முடைய ஹ்ருதயத்துக்குத் தகுதியாகப் பரிமாறுகிற தேவகிப்பிராட்டிதன் வயிற்றிலே. (அத்தத்தினித்யாதி) அத்தத்துக்குப் பத்தாநாளிலே. மங்களாசாஸநபரராகையாலே விரோதிகள் அறிந்து அபிசரிக்கைக்கு அவகாசமில்லாதபடி திருவவதரித்த நாளை மறைத்தருளிச் செய்கிறார். (தோன்றிய வித்யாதி) (க) "அச்யுத பா⁴ஸநா। தேவகீ பூர்வஸந்த்⁴யயா ஆவிர்பூ⁴தம் - அச்யுதபாநுநா। தேவகீ பூர்வஸந்த்யாயாமாவிர்ப்பூதம்" என்கிறபடியே - கர்ப்பவாஸதோஷமற ஆவிர்ப்பவித்து, ஆஸ்ரிதரை ஒருகாலமும் நழுவவிடாதவனுடைய முத்தமிருந்தபடியைக்காணுங்கோள். (முகிழ்நகையீர் வந்து காணீர்) முகிழாநின்றுள்ள நகையையுடைய நீங்கள் வந்து காணுங்கோள். முத்தம்-சண்ணம், அதாவது - கடிப்ரதேசம். முகிழ்நகை - மந்தஸ்மிதம். ... ... ... ... ... ... (ரு)

அவ.—எழாம்பாட்டு.— திருக்கடிப்ரதேசத்தினழகை யநுபவித்தவநந்தரம், திருமருங்கினழகையநுபவிக்கிறார்.

---

(பத்தாநாளிலே) என்றது- திருவோணத்திலென்றபடி. ரோஹிணியாயன்றோ திருநக்ஷத்ரமிருப்பது; இப்படி யருளிச் செய்வானென்னென்ன வருளிச்செய்கிறார் (மங்களாசாஸநேத்யாதி). பிறந்த வென்னாதே "தோன்றிய" என்றதுக்குத் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (அச்சுதேத்யாதி). (முகிழாநின்ற) முகுளியாநின்ற; அதாவது- ஸங்குசிதமாகாநின்றவென்றபடி. "நகை" ஸ்மிதம். ... ... ... ... ... (ரு)

அரு·—எழாம்பாட்டு —(இருங்கையித்யாதி) (திருமருங்கின்) ஒக்கலையின்.

---

(க) வி-பு-ரு-ரு-உ.

ஸ்வா.—(இருங்கையித்யாதி) பெரிதான கையையும் மதத்தையு முடைத்தாயிருக்கிற குவலயாபீடத்தாலே கொலை கருதிவந்த பாகனைக்கொன்று, ஆனையையும் நிரஸித்து, கொம்பைப்பறித்துக்கொண்டு கம்ஸனிருந்த உயர்ந்தவிடத்தில் ஓடிச்சென்று குதித்த பரமனென்னுதல்; ஊரில் இடைப்பிள்ளைகள் "மதம்பட்டது" என்று இழுத்துக்கொண்டுவிளையாடுகிறகளிறுகளை, அவர்களைவிழுத்தள்ளி பறித்துக்கொண்டோடுகிறபரமனென்னுதல். இங்கு "பரமன்" என்றது-ஓட்டத்தில் மிக்கவனென்றபடி. பரமன்றன்னுடைய (நெருங்குபவளமும்)செறியக்கோத்த பவளமும் நேரிதானபொன்நாணும் முத்துவடங்களையுமுடைத்தான திருவரைக்கு மேலான திருமருங்குலை அநுபவிக்கிறார்.

(வாணுதல்) ப்ரகாசத்தையுடைய தா(ஸ)ந்தி. ... ... (எ)

மூ.—இருங்கை மதகளி றீர்க்கின்றவனைப்
பருங்கிப் பறித்துக் கொண்டோடும் பரமன்றன்
நெருங்கு பவளமும் நேர்நாணும் முத்தும்
மருங்கு மிருந்தவா காணீரே வாணுதலீர் வந்து காணீரே. (எ)

வ்யா.—(இருங்கையித்யாதி) பெரியதுதிக்கையை யுடைய மத்தகஜமான குவலயாபீடத்தைத் தன்வசமாக நடத்தாநின்றுள்ள பாகனைக்கொன்று. பருங்குதல் - கொல்லுதல். (பறித்தித்யாதி) அதின் கொம்புகளைப் பறித்துக்கொண்டு கம்ஸனிருந்த உயர்ந்த நிலத்திலே ஓடிச்சென்று குதித்த பரமனுடைய. அன்றிக்கே, ஊரில் இடைப்பிள்ளைகள் விளையாடுகிறவர்களிலே, லீலோபகரணங்களிலே ஆனையாகப்பண்ணி, பெரிய கையையுடைய மத்தகஜமென்று இழுத்துக்கொண்டு திரிகிறவர்களை, அடர்த்துப் பறித்துக்கொண்டோடாநிற்கும் பரமனென்னுதல். (நெருங்கித்யாதி) நெருங்கக்கோத்த பவளவடமும், நேரிதான பொன்நாணும், முத்துவடமும், இவற்றோடே சேர்ந்த திருமருங்கு மிருந்தபடியைக் காணுங்கோள். (வாணுதலீர்

"ஈர்க்குகை" நடத்துகையாய், அருளிச்செய்கிறார் (தன்வசமித்யாதி). (பாகனை) மாவுத்தனை. "கொண்டோடும்" என்கிற பதஸ்வாரஸ்யத்தைப் பற்றி யோஜநாந்தரம் (அன்றிக்கே யித்யாதி). "விளையாடுகிறவர்களிலே" என்றதுக்கு "திரிகிறவர்களை" என்றத்தோடந்வயம். (பண்ணி)என்றவநந்தரம் "இருக்கிறஞன்றை" என்று கூட்டிக்கொள்வது. "வாள்" என்று

தாம்பாலேகட்டின திருவுதரத்தைக் காட்டுகிறாள். "பிள்ளைக்கு ரஸி
க்கவேணும்" என்று தான் ரஸவத்பதார்த்தங்களை †புஜிக்கையாலே
இவள் முலைப்பாலும் மதுரமென்கிறது. பதரப்படாமை-தப்பாமை.

"ஒளிவளை" என்று ப்ரகாசமான அங்கபார்ஹஸிக்ஹம். ... (௯)

அவ.—பத்தாம்பாட்டு. திருவுதரத்தில் நின்றும் திருமார்பிலே
பெருகுகிறார்.

வ்யா.—(பெருமாவித்யாதி) மிகவும் பெரிய உரலோடே கட்
டுண்டிராநிற்கச்செய்தேயிறே இரண்டு பெரிய மருதுகளையும் தவழ்
ந்து முறித்தது. முறிந்த ஓசையிலே புரிந்துபார்த்துச் சிரித்தபடி
கண்டு "இப்பிள்ளை" என்றது. இப்பிள்ளையுடைய ஸ்ரீகௌஸ்து

---

கிடந்ததொரு தாம்பாலே கட்டின கயிற்றின் தழும்பு காணலாம்படி
யிருக்கிற வயிற்றினழகிருக்கிறபடியைக் காணுங்கோள். (ஒளிவளையீர்
வந்து காணீரே) ஒளியையுடைத்தான வளையையுடைய நீங்கள் வந்து
காணுங்கோள். ... ... ... ... ... ... (௯)

அவ.—பத்தாம்பாட்டு, திருவுதரத்தினழகை யநுபவித்த வந
ந்தரம், திருமார்வினழகை அநுபவிக்கிறார்.

மூ.— பெருமா வுரலில் பிணிப்புண் டிருந்தங்
கிருமா மருத மிறுத்த விப்பிள்ளை
குருமா மணிப்பூண் குலாவித் திகழும்
திருமார் விருந்தவா காணீரே சேயிழையீர் வந்து காணீரே (௧௦)

வ்யா.—(பெருமாவித்யாதி). மிகவும் பெரியவுரலோடு கட்டுண்
டிருந்து அத்தசையிலே அத்தையும் இழுத்துக்கொண்டு தவழ்ந்து
போய், தன்னை நலிவதாகச் சேர்ந்துநின்ற இரண்டு பெரியமருதுக
ளின் நடுவே சென்றுபுக்கு அவற்றை முறித்த முக்த்த(ஃ)னான வனு
டைய. (குருமாவித்யாதி) ஸ்ரேஷ்டமாய் ஸ்லாக்யமான ஸ்ரீகௌ

---

அரு.—பத்தாம்பாட்டு.—(பெருமாவித்யாதி) "பெரு" "மா" என்றும்
சொல்லுகிற த்விருக்திக்குத்தாத்பர்யம் (மிகவும்பெரிய) என்றது. "பிணிப்
புண்டு" என்றதுக்கர்த்தம் (கட்டுண்டு) என்றது. பிணிப்புண்டிருந்து மருத
மிறுத்த வென்கிற ஸமபிவ்யாஹாரத்தைக் கடாக்ஷித்து * அங்கு பததாத்
பர்யம் (அத்தசையிலேத்யாதி). பிள்ளை பததாத்பர்யம் (முக்த்த(ஃ)னா)
என்றது. "குரு" என்று - குருவாய், "மா" என்று - மஹத்தாய் பலி
தார்த்தத்தை யருளிச்செய்கிறார் (ஸ்ரேஷ்டமாயித்யாதி). குலாவியீ

† (பா) ஜீவிக்கையாலே.

பம்போலே சிறந்து விளங்காநின்ற நீலரத்நமென்னுதல்; ஏதேனு மொரு ரத்நமாகிலும் திருமேனியின் ப்ரபை (ஒளி) யாலே நீலமாய்த் தென்னுதல்; ஏவம்ப்ரகாரமான திருமார்பைக் காணீரென்கிறார்.

''சேயிழை'' என்று-பக்தி(பூண்)ப்ரகாசகமான ஆத்மபூஷணம். (௧௦)

அவ.—பதினோராம்பாட்டு. திருமார்பில்நின்றும் திருத்தோளிலே பெருகுகிறார்.

வ்யா.-(நாள்களித்யாதி) திருவவதரித்தநாள் தொடங்கி சென்ற மாஸத்தை நாலென்பது, அஞ்சென்பது, ஒன்பதென்பது, இருபதென்பதாய் காலத்தை மயக்குகிறது, காலக்ருதபரிணாமசக்தியில்லாமையிறே; அன்றிக்கே இதுதன்னை த்ருஷ்டிதோஷபரிஹாரார்த்தமாகவும் மயக்கி அருளிச்செய்கிறாராகவுமாம். (தாளித்யாதி) கண்

டார் பசக்கிற ஆபரணம் அசைந்து விளங்காநின்றுள்ள திருமார்வினழகிருக்கிறபடியைக் காணுங்கோள். (சேயிழையீர் வந்து காணீரே) சிவந்த ஆபரணங்களையுடைய நீங்கள் வந்து காணுங்கோள். ... (௧௦)

அவ.—பதினோராம்பாட்டு. திருமார்வினழகை யநுபவித்தவநந்தரம், திருத்தோள்களினழகை யநுபவிக்கிறார்.

மூ.—நாள்களோர் நாலைந்து திங்க ளளவிலே
தாளைநிமிர்த்துச் சகடத்தைச் சாடிப்போய்
வாள்கொள் வளையெயிற் றாருயிர் வவ்வினான்
தோள்களிருந்தவா காணீரே சுரிகுழலீர் வந்து காணீரே. (௧௧)

வ்யா.— (நாள்களோரித்யாதி.) திருவவதரித்தபின்பு சென்ற நாள்கள் ஒருநாலைந்து மாஸத்தளவிலே. மாஸம் நாலென்றும், அஞ்சென்றும், ஒன்பதென்றும், இருபதென்றும் தெரியாதபடி, இப்படி மயக்கி அருளிச்செய்வது-மங்களாசாஸந பரராகையாலே த்ருஷ்டி தோஷ பரிஹாரார்த்தமாக. (தாளையித்யாதி) தனித்துக் கண்வளர்ந்தருளுகிற விடத்திலே அஸுராவேசத்தாலே நலிவதாக வந்து கிட்டுகிற

னாத்தம் (அசைந்து) என்றது. ... ... ... ... ... (௧௦)

அநு.—பதினோராம்பாட்டு. (நாள்களோரித்யாதி) ''நாலைந்து'' என்று அநேகார்த்தம் தோற்றும்படி சொல்லுவானென்? ஒன்றை நிஷ்கர்ஷித்துச் சொல்லவொண்ணாதோ வென்ன வருளிச்செய்கிறார். (மாஸமித்யாதி). (மயக்கி) ஸந்தேஹிக்கும்படி பண்ணி அதியால்பத்திலே அதிமாநுஷ சேஷ்டிதம் செய்தானென்றால் த்ருஷ்டிதோஷமாமென்று கருத்து. ''சாடு

வளருகிறவிடத்திலே சகடாஸுரன்வந்து கிட்டுகிறவளவிலே முலை வரவுதாழ்த்துச் சீறித்திருவடிகளை நிமிர்க்க, ப்ரதிகூலித்துக் கிட்டின வனுகையாலே அவன் முடிந்தமை தோன்றச் சாடினனென்கிறார். (சாடிப்போய்) என்றது - சாடிவிட்டென்றபடி.

(வாள்கொளித்யாதி) இதுக்குமுன்னே செய்ததை பின்னை அருளிச்செய்தது முன்புள்ள யுகங்களும் ப்ரகாசித்தபடியாலேயா தல்; அன்றியிலே அங்வயத்தைக்கினைத்தாதல். ஒளியையும் வளையையு முடைத்தானஎயிற்றையுடைய பேச்சியுடைய. (ஆருயிர்வவ்வினான்) முடித்தற்கரிய உயிரைவவ்வினான். தோள்களிருந்த ப்ரகாரத்தை

---

சகடத்தை முலைவரவு தாழ்த்துச் சீறி நிமிர்த்து, திருவடிகளாலே கட்டழியவுதைத்து. இவன் ஸ்தர்யார்த்தமாகத் திருவடிகளை நிமிர்த் தாலும் ப்ரதிகூலித்து வந்து கிட்டுகையாலே சகடம் பக்ந(ഭഗ്നു)மா கத் தட்டில்லையிறே. (சாடிப்போய்) என்றது - சாடிவிட்டென்றபடி.

(வாள்கொளித்யாதி.) ஒளியையுடைத்தாய் வளைந்திருக்கிற எயி றுகளையுடையளான பூதனையுடைய முடித்தற்கரிய உயிரை அபஹரி த்தவனுடைய. (க) "பேய்ச்சி பெருமுலையூடுயிரை வற்ற வாங்கியுண் டவாயான்" என்னக்கடவதிறே. சகடாஸுர நிரஸநத்துக்கு முன் னே பூதநா நிரஸநமாயிருக்க, மாறியருளிச் செய்தது க்ரம விவ க்ஷயாவன்று; ஹர்ஷாதிசயத்தாலே முன்னபடி. சொல்லவேணு மென்றறியாமை. எயிற்றை யுடையவளை "எயிறு" என்கிறது, "ஒண் டொடி" என்னுமாபோலே. (தோள்களித்யாதி.) அவன் முலைப்பா லோடே உயிரை வற்ற வாங்குகிறபோது செறித்ததோள்களினு

---

கை" நலிகையாய்; அதில் பலிதம் (கட்டழிய உதைத்து) என்றது.

"எயிறு" தந்தம். இத்தையுடையவளென்று லக்ஷணயா அர்த்த மரு ளிச்செய்கிறார் (ஒளியித்யாதி). ஆர்-பூர்ணமாய், அத்தால்பலிதம் (முடித் தற்கரிய) என்றது. "வவ்வுகை" வாங்குகையாய் அர்த்தம் (அபஹரித்த வன்) என்றது. இதுக்குப்ரமாணம் (பேச்சியித்யாதி). "எயிற்று" என் றால் பூதனையைச் சொல்லுமோவென்ன; "தொடி" என்று-வளையாய், ஒளி ய வளையையுடைய ஸ்த்ரீயை "ஒண்டொடி" என்றுசொல்லுமாபோலே சொல்லுமென்றருளிச் செய்கிறார் (எயிற்றையித்யாதி). (செறித்த) சலித்த. ... ... ... ... ... ... ... ... (௧௧)

---

(க) தி-மொ-௧-௩-௧.

பெரியாழ்வார் திருமொழி க-ப,உ-தி,கஉ-பா,மைத்தடங்கண்ணி. கூர

வந்துகாணீரென்கிறார். வவ்வுதல்-வாங்குதலாய், அப்போது வெளித்த தோள்களிறே.

(சுரிகுழல்). தா (ஸ்வா) ந்தரூப ப்ரபத்தி. ... ... (கக)

அவ. — பன்னிரண்டாம்பாட்டு. திருத்தோள்களில் நின்றும் திருக்கைத்தலத்திலே போகிறார்.

வ்யா.—(மைத்தடமித்யாதி) (மைத்தடங்கண்ணியசோதை) ஒப்பனைக்கு உபலக்ஷணம். வளர்ப்பார் பலருண்டாயிருக்கச் செய்தேயும் தானேயிறே வளர்ப்பாள். (செய்த்தலேயித்யாதி) பூ(பூ)ஸாரமுள்ள க்ஷேத்ரத்திலே அப்போதலர்ந்த நீலம்போலே யிருக்கிற

---

டைய அழகிருக்கிறபடியைக் காணுங்கோள்; சுருண்ட குழலையுடையரான நீங்கள் வந்து காணுங்கோள். ... ... ... ... (கக)

அவ.—பன்னிரண்டாம்பாட்டு. திருத்தோளினழகை யநுபவித்த வநந்தரம், திருக்கைத்தலத்தினழகை யநுபவிக்கிறார்.

மூ.—மைத்தடங்கண்ணி யசோதைவளர்க்கின்ற
செய்த்தலை நீலநிறத்துச் சிறுப்பிள்ளை
நெய்த்தலை நேமியும் சங்கும் நிலாவிய
கைத்தலங்கள் வந்து காணீரே கனங்குழையீர் வந்து காணீரே.

வ்யா.—(மைத்தடங்கண்ணி.) கறுத்துப் பெருத்திருந்துள்ள கண்ணையுடையவளென்னுதல்; அஞ்ஜநாலங்க்ருதமாய் விஸ்த்ருதமாயிருந்துள்ள கண்ணையுடையவ ளென்னுதல். (அசோதை வளர்க்கின்ற.) இப்படியிருந்துள்ள கண்ணழகையுடைய யசோதைப்பிராட்டி வைத்தகண்வாங்காமல் நோக்கிவளர்க்கிற. வளர்ப்பார் பலருமுண்டாயிருக்கச் செய்தேயும்,அவர்கள்கையில் காட்டிக்கொடாதே தானேயிறே வளர்ப்பாள். (செய்த்தலையித்யாதி.) பூ(பூ)ஸாரமுள்ள க்ஷேத்ரத்திலே அப்போதலர்ந்த குவளைப்பூவின் நிறம்போலிருக்கிற நிறத்தையுடையனான சிறுப்பிள்ளையினுடைய. அவள் சீராட்டி வளர்த்த

---

அரு.—பன்னிரண்டாம்பாட்டு. (மைத்தடங் கண்ணியித்யாதி) விசேஷண தாத்பர்யம் (இப்படியித்யாதி). "யசோதை" என்றபதத்துக்குத் தாத்பர்யம் (வளர்ப்பாரித்யாதி). "தலையானசெய்" என்றர்த்தமாய் "நீலம்" என்றது - நீலோத்பலமாய், அதின் தாத்பர்யமருளிச்செய்கிறார் (பூஸாரமித்யாதி). "அசோதைவளர்க்கின்ற" என்ற பதத்தைக் கடாக்ஷித்து த்ருஷ்டாந்தத்துக்குத் தாத்பர்யம் (அவளித்யாதி). (சீராட்டி) லாலன

நிறத்தையுடைய. (சிறுப்பிள்ளை) இவனுடைய அதிமாநுஷங்களைக் கண்டாலும் சிறுப்பிள்ளையாகவிறே இவள் நினைத்திருப்பது.

(நெய்த்தலைநேமியும்) கூரிய தலையையுடைத்தான நேமியென்னுதல். அவன் நினைவை அறிகையாலே *கருதுமிடம் பொருது, திருக்கையிலே நிற்கிற கூர்மையாதல்; ஆயுதஸாமாந்யத்தாலே நெய் என்னவுமாம்; திருக்கைகளோட்டை ஸ்பர்ஶமாகவுமாம்; (௧) "கையெல்லாம்நெய்" என்னக்கடவதிறே. (சங்கும்) ஆழ்வானைப்போலே போக்குவரத்துச் செய்யாதே இருந்தவிடத்திலேயிருந்து கருதுமிடம் போரவல்ல ஓசையையுடைய ஸ்ரீபாஞ்சஜந்யமிறே. இவைதன்னை இவன்தான் ஒவ்வொருபோது காட்டக்காணுமிறே. "அப்பூச்சி

முசுமுசுப்பையெல்லாம் திருநிறத்திலே தோன்றும்படியிருக்குமாயிற்று.

(நெய்த்தலைநேமியும் சங்கும் நிலாவிய) கூரிய நுதியை யுடைத்தான திருவாழி யென்னுதல்; ஆயுத ஸாமாந்யத்தாலே நெய்யணிந்திருக்கும் திருவாழி யென்னுதல்; (௧) "கையெல்லாம் நெய்" என்கிற திருக்கையின் ஸ்பர்ஶத்தாலே நெய்ச்சுவடிமாறாத திருவாழியென்னுதல். இப்படியிருக்கிற திருவாழியும், இதுபோலே (௨) *கருதுமிடம் பொருதுவந்து கையில் நிற்கவும் வேண்டாதே, கைவிடாதேயிருந்து தன்னோசையாலே எதிரிகளை அழிக்கவல்ல ஸ்ரீபாஞ்சஜந்யமும் நிரந்தரமாக வர்த்தியாநின்றுள்ள கையும் ஆழ்வார்களுமான சேர்த்தியை ஓரோசமயங்களிலே இவன்தான் இவளுக்கும் காட்டிக்கொடுக்க

கம் பண்ணி. (முசுமுசுப்பு) ப்ரத்தை. அதாவது- புஷ்டியாக வளருகை.

"நெய்" என்றதுக்கு இரண்டர்த்தம் கூர்மையென்றும், க்ரு(ஸ்ஸு)தமென்றும். முந்தினவர்த்தம் (கூரியவித்யாதி). "தலை" என்றதுக்கர்த்தம் (நுதி) என்றது. (நுதி) அக்ர(ஈ)ம். இரண்டாமர்த்தத்தை இரண்டுவகையாகவருளிச்செய்கிறார் (ஆயுதஸாமாந்யேத்யாதிவாக்யத்வயத்தாலே). (ஆயுதஸாமாந்யத்தாலே) என்றது - லோகத்தில் ஆயுதங்களுக்கு நெய் தடவுகிற ப்ரகாரத்தால் வந்த ஸாத்ருஸ்யத்தாலே யென்கை. (அணிந்திருக்கை) தடவியிருக்கை. (கையெல்லாம் நெய்) என்றது - "கையெல்லாம் நெய் வயிறுபிள்ளை பரமன்று" என்கிற திருமொழியில் பாசுரம். (௩) "ఉపసంహర సర్వాత్మన్ రూపమేతచ్చతుర్భుజమ్ - உபஸம்ஹர ஸர்வாத்மந் ரூபமேதச் சதுர்ப்புஜம்" என்று உபஸம்ஹ்ருதமான திருவாழி திருச்சங்குகளை யசோதை காணக்கூடுமோவென்ன வருளிச்செய்கிறார் (கையுமித்

(௧) தி-மொ-௧0-எ-௩. (௨) தி-வாய்-௧0-௬-அ. (௩) வி-பு-ரு-௩-௧௩.

காட்டுகிறான்" என்று இவற்றையிறே எம்பாரருளிச்செய்தது. நிலாவுதல் - வர்த்தித்தல். இப்படியிருக்கிற திருக்கைத் தலத்தை அநுபவிக்க வாருங்கோ ளென்கிறார்.

"கனங்குழை" என்றது - காதுப்பணியாய், ஸ்ரோதாக்களைச் சொல்லுகிறது. ... ... ... ... ... ... (கஉ)

அவ. —பதின்மூன்றாம்பாட்டு. திருக்கைத்தலத்தில் நின்றும் திருக்கழுத்திலே பெருகுகிறார்.

வ்யா.—(வண்டமரித்யாதி) பிள்ளை சிறுமல்நாட பூவைப்பல காலும் முடிக்கையாலே வண்டுகளுக்கு வஸ்தவ்யபூமி இவள் குழலி றே. தன்மகனாக ஸ்நேஹித்துக்கொண்டு வளர்க்கிற ஸ்ரீநந்தகோபர்

---

மிறே. (கைத்தலமித்யாதி) திருக்கைத்தலத்தினழகை வந்துகாணுங்கோள். கனவிதாந காதுப்பணியையுடைய நீங்கள் வந்து காணுங்கோள். கநமென்று-பொன்னாகவுமாம். ... ... ... (கஉ)

அவ.—பதின்மூன்றாம்பாட்டு. திருக்கைத்தலத்தினழகை அநுபவித்த வநந்தரம், திருக்கழுத்தினழகை யநுபவிக்கிறார்.

மூ.—வண்டமர் பூங்குழ லாய்ச்சிமகனாகக்
கொண்டுவளர்க்கின்ற கோவலர்குட்டற்கு
அண்டமும் நாடு மடங்க விழுங்கிய
கண்டமிருந்தவா காணீரே காரிகையீர் வந்து காணீரே. (கங)

வ்யா.—(வண்டமரித்யாதி.) பிள்ளைகள் அஞுங்காமைக்காகத் தாய்மார் தங்களை அலங்கரித்துக்கொண்டிருப்பார்களாய்த்து ; அப்படியே இவளும் காலபுஷ்பங்களைப்பலகாலும் முடிக்கையாலே மதுபாநம்பண்ணும் வண்டுகளுக்கு வஸ்தவ்யபூமி இவள் குழலிறே. ஆகையாலே வண்டுகள் படிந்து கிடக்கிற பூவோடே கூடின குழலையுடையளான யசோதைப்பிராட்டி தன்மகனாக ஸ்நேஹித்துக்கொண்டு

---

யாதி). (கனவிதான) கனத்ததான. (பணி) ஆபரணம். ... ... (கஉ)

அந —பதின்மூன்றாம்பாட்டு. (வண்டமரித்யாதி) "வண்டமர்பூங்குழல்" என்று நிரூபித்துச்சொல்லுகையாலே, இவள் எப்போதும் அலங்கரித்திருக்குமென்று தோற்றுகையாலே, அதுக்கு ஹேதுவை அருளிச்செய்யாநின்று கொண்டு, சப்தார்த்தமருளிச் செய்கிறார் (பிள்ளைகளித்யாதி வாக்யத்ரயத்தாலே). (அஞுங்காமைக்காக) என்றது-பயப்படாமைக்காக வென்றபடி. (காலபுஷ்பம்) என்றது-தத்காலவிகஸித புஷ்பங்களென்ற

மகனுக்கு. இவர் அடியறிந்தவராகையாலே "மகனை" என்றது - இவளபிமாந மென்கிறார். (அண்ட மித்யாதி) அண்டங்களும் அண்டாந்தர்க(ர்)தமான சேதநாசேதநங்களும் திருவயிற்றில் ஒரு புடையிலே அடங்கும்படி இடமுடைத்தான கண்டமென்கிறார்.

"காரிகையீர்" என்று ப(பு)க்தி பாரவஶ்யமுடையாரை அழைக்கிறார். ... ... ... ... ... ... ... (௧௮)

அவ.—பதினாலாம்பாட்டு. திருக்கண்டத்தில் நின்றும் திருப்பவளத்திலே பெருகுகிறார்.

ஸ்வா.—(என்தொண்டையித்யாதி) ஆதொண்டைபோலேயிருக்

---

வளர்க்கிற ஶ்ரீநந்தகோபர்மகனுக்கு. இவர்அடியறிந்தவராகையாலே "மகனைக்கொண்டு" என்கிறார்; அவள், "தன்மகன்" என்றிறே நினைத்திருப்பது.

(அண்டமித்யாதி.) அண்டத்தையும் அண்டாந்தர்வர்த்திகளான சேதநாசேதநங்களையும் திருவயிற்றில் ஒருபுடையிலேஅடங்கும்படி விழுங்கின வென்னுதல்; ஒன்றும் பிறிகதிர்ப்படாதபடி எல்லாவற்றையும் சேரவிழுங்கின வென்னுதல். (கண்டமித்யாதி) இப்படியிருக்குமுள்ள திருக்கழுத்தி னழகிருந்தபடியைக் காணுங்கோள்; அபிருசிகளான நீங்கள் வந்து காணுங்கோள். காரிகையார் - அழகுடைய ஸ்த்ரீகள். ... ... ... ... ... ... ... (௧௮)

அவ.—பதினாலாம்பாட்டு, திருக்கழுத்தினழகை யநுபவித்தவநந்தரம் திருப்பவளத்தினழகை அநுபவிக்கிறார்.

௱,—என் தொண்டைவாய்ச் சிங்கம் வாவென்றெடுத்துக்கொண்டு
அந்தொண்டைவா யமுதா தரித்தாய்ச்சியர்
தந்தொண்டை வாயால் தருக்கிப் பருகுமிச்
செந்தொண்டைவாய்வந்துகாணீரே சேயிழையீர்வந்துகாணீரே.

வ்யா.—(என்தொண்டையித்யாதி.) ஆதொண்டை போலே

---

படி. "குட்டன்" பிள்ளை; இத்தையருளிச்செய்கிறார் (மகனுக்கு) என்று.

"அடங்க" என்றதுக்கிரண்டர்த்தம்-அடங்கும்படியென்றும், எல்லாமென்றும். இவ்விரண்டையும் அடைவே அருளிச்செய்கிறார் (அண்டத்தையு மித்யாதி வாக்யத்வயத்தாலே). ... ... ... ... (௧௩)

அந.—பதினாலாம்பாட்டு. (என்தொண்டையித்யாதி) "தொண்டை"

கிற திருப்பவளத்தையுமுடையனாய் ஸிம்ஹக்கன்றுபோலே க(ர்)வத்தையுமுடையனாயிருக்கிற பிள்ளையை "என்பிள்ளை" என்று அழைத்தெடுத்துக்கொண்டு இடைப்பெண்களெல்லாம் அழகிதாயிருக்கிற தொண்டைவாயில் ஊறுகிற அம்ருதத்தை ஆதரித்துத்தங்கள் கோவைவாயாலே இவனுடைய திருப்பவளத்தை நெருக்கிப் பருகப்பருக, பின்னையும் செந்தொண்டைவாயாயிருக்கிற ஆஸ்சர்யத்தை வந்து காணீரென்கிறார்.

சேயிழை- ப (ஃ)க்திப்ரகாஸகமான ஆத்மபூஷணம். ... (கச)

அவ.—பதினைந்தாம்பாட்டு. திருப்பவளத்தில் நின்றும் போந்து திருமுக மண்டலத்தில் ஸமுதாயசோபையை அநுபவிக்கிறார்.

---

யிருக்கிற திருப்பவளத்தையும் ஸிம்ஹக்கன்றுபோலே செருக்கையுமுடையனாயிருக்கிற இவனை என்னுடையவனென்று அபிமாநித்து வாவென்று அழைத்து எடுத்துக்கொண்டு இடைப்பெண்களெல்லாரும் அழகிய தொண்டைபோலேயிருக்கிற திருவத(ஃ)ரத்திலூறுகிற அம்ருதத்தை ஆதரித்துத்தங்கள் கோவைவாயாலே நெருக்கிப் பாநம் பண்ணுகிற. "தருக்கிப்பருகும்" என்றது - செருக்கிப்பருகுமென்னவுமாம். (இச்செந்தொண்டைவாயித்யாதி) இப்படி அவர்கள் பருகப் பருகப்பின்னையும் சிவப்பு மாறாதேயிருக்கிற இத்திருப்பவளத்தை வந்துகாணுங்கோள்; சிவந்த ஆபரணங்களையுடைய நீங்கள் வந்து காணுங்கோள். ... ... ... ... ... (கச)

அவ. — பதினைந்தாம்பாட்டு. திருப்பவளத்தினழகை அநுபவித்த வநந்தரம் திருமுக மண்டலத்தில் ஸமுதாய சோபையை அநுபவிக்கிறார்.

---

கோவைப்பழம். (ஸிம்ஹக்கன்று போலே) என்றது - ஸிம்ஹக்கன்றின் செருக்கு போலேயென்றபடி. "தொண்டைவாய்ச் சிங்கம்" என்றது - என்னுடையதென்று அபிமாநித்தெடுத்துக் கொள்ளுகைக்கு ஹேதுவென்று தோன்றுகைக்காக அத்தை முந்துற வ்யாக்யாநம் செய்தாரென்று கண்டு கொள்வது. "தருக்கி" என்றதுக்கு-நெருக்கியென்றும், செருக்கியென்றும் இரண்டு பொருள். இத்தை யதாக்ரமமாக அருளிச்செய்கிறார் (இடைப் பெண்களித்யாதி வாக்யத்வயத்தாலே). "தொண்டை" என்ற போதே சிவப்பு ஸித்தமாயிருக்க, "செம்" என்று விசேஷித்ததுக்குத் தாத்பர்யம் (இப்படி யித்யாதி). "ஆய்ச்சியர் அந்தொண்டைவாய் அமுதாதரித்து" என்றந்வயம். ... ... ... ... ... ... (கச)

அந.—பதினைந்தாம் பாட்டு. (நோக்கியித்யாதி) "வாக்கும்" "நோக்

வ்யா.-(நோக்கியித்யாதி). பிள்ளையைத்திருமஞ்ஜநம் செய்விப்ப தாக உபக்ரமித்து திருமேனிக்குத்தகுதியாக மஞ்சட்காப்பும் நேராக வரைத்து மற்றும் வேண்டும் உபகரணங்களும் சேர்த்துவைத்துத் "திருமேனிக்குத் தகுதியோ" என்று இவற்றையும் பார்த்த அசோதை இம்மஞ்சளாலே திருநாவும் வழித்து நீராட்டுகிறபோது, அவளுக்கு வசவர்த்தியான குணங்களையுடையனாகையாலே பூர்ணனுக்கென்கிறது. மாதா முதலானோரை நாமக்ரஹணம் பண்ணுகிற வாக்கும், "என்னைப்பாரீர்" "என்னைப்பாரீர்" என்கிறவர்களைக் கடாக்ஷிக்கிற திருநயநங்களும், மந்தஸ்மிதம்பண்ண உபக்ரமிக்கிற திருவதரஸ்ப்புரத்தை யும், அந்தஸ்ப்புரத்தையோடேகூடின மந்தஸ்மிதமும், ஒருவிசேஷண

மூ.—நோக்கி யசோதை நுணுக்கிய மஞ்சளால்
நாக்குவழித்து நீராட்டு மிந்நம்பிக்கு
வாக்கு நயநமும் வாயு முறுவலும்
மூக்கு மிருந்தவாகாணீரே மொய்குழலீர் வந்துகாணீரே. (கரு)

வ்யா.—(நோக்கியித்யாதி) திருமேனியின் ஸௌகுமார்ய மறி யும் யசோதைப்பிராட்டி அதுக்குத் தகுதியாம்படி பார்த்து, நே ராக அரைத்தமஞ்சள்காப்பாலே திருநாவை வழித்து திருமஞ்ஜநம் செய்யும்படி விதேயதயாபூர்ணனை இவனுக்கு. (வாக்குமித்யாதி) மாதா முதலானோரை நாமக்ரஹணம் பண்ணுகிற வாக்கும், "என்னைப் பாரீர் என்னைப்பாரீர்" என்ன, அவர்களைக் கடாக்ஷிக்கிற திருநயநங் களும், மந்தஸ்மிதஞ்செய்ய உபக்ரமிக்கிற திருவதரஸ்ப்பு(ஸ்பு)ரணத் தையும், அந்த ஸ்ப்பு(ஸ்பு)ரத்தையோடே கூடின மந்தஸ்மிதமும்,

---

கும்" என்கிற ச(ஶ)ப்தங்களைக் கடாக்ஷித்து (ஸமுதாயசோபை)என்றது.

"நோக்கி" "நுணுக்கி" என்கிற பதங்களில் தாத்பர்யங்களைக்கடா க்ஷித்து "யசோதை" என்றதுக்குத் தாத்பர்யம் (திருமேனியினித்யாதி). (அதுக்கு) ஸௌகுமார்யத்துக்கு. (நேராக) ஸூக்ஷ்மமாக; வழுமூண வென்றபடி. "நீராட்டும்" என்றத்தைக் கடாக்ஷித்து (விதேயதயா) என் றது. வாகா(ஹ)திகளுடைய அழகு தோன்றுகைக்காக விசேஷித்தருளிச் செய்கிறார். (மாதா முதலானோரையித்யாதி). கீழ்ப்பாட்டில் "இச்செந் தொண்டைவாய்" என்று அதரத்தை அநுபவித்தபடி சொல்லியிருக்கை யாலே இங்கே "வாயும்" என்றதுக்கு (ஸ்ப்புரத்தை) என்கிறார். [స్ఫురితో భావః-స్ఫురత్తా - ஸ்ப்புரதோ பாவஃ-ஸ்ப்புரத்தா] சலநமென்றபடி.

மிட்டுச் சொல்லவேண்டாத திருமூக்கின் அழகு மிருந்தப்ரகாரத்தை அநுபவிக்க அழைக்கிறார்.

(மொய்குழலீர்)கைங்கர்யத்துக்கு பூர்வக்ஷணவர்த்தியாய் ப்ரார்த்த நாரூபையான ப்ரபத்திகள். ... ... ... ... (கரு)

அவ.—பதினைரும்பாட்டு. ஸமுதாயசோலையிலே அநுஸந்தித்த திருக்கண்களிலழகு பின்னாட்டுகையாலே மீண்டும் அது தன்னையே அநுபவிக்கிருர்.

ஸ்வா.—(விண்கொளித்யாதி) அவதாரங்களுக்கு ஹேது ஸாது பரித்ராணுதிகளிறே. விண்ணைத்தங்களுக்கு வஸ்தவ்ய பூமியாகக் கொண்டிருக்கிற அமரர்களுக்கு வந்த க்லேசம் தீர்க்கும்போது அவர்க

(க) "மாட்டுயர் கற்பகத்தின் வல்லியோ கொழுந்தோ வறியேன்" என்று நித்யஸந்தேஹஜநகமான திருமூக்குமாகிற இச்சேர்த்தியழகிருந்தபடி காணுங்கோள்; செறிந்த குழலையுடைய நீங்கள் வந்து காணுங் கோள். ... ... ... ... ... ... ... (கரு)

அவ.—பதினைரும்பாட்டு, ஸமுதாய சோலையின் நடுவே அநுபவித்த திருக்கண்களினழகு பின்னாட்ட, அத்தை அநுபவிக்கிருர். அது தன்னில் எல்லாவற்றுக்கும் பின்பநுபவித்தது திருமூக்கினழகிறே. திருமூக்குக்கும் திருக்கண்களுக்கும் ஒருசேர்த்தியுண்டே; அத்தாலும், பாதாதிகேசமநுபவித்து வருகிற அடைவுக்குச் சேர்ந்ததாகையாலும் திருக்கண்களிலே சுழியாறுபட்டு அநுபவிக்கிருர்.

மூ.—விண்கொளமரர்கள் வேதனைதீர முன்
மண்கொள் வசுதேவர்தம் மகனாய் வந்து
திண்கொளசுரரைத்தேய வளர்கின்றான்
கண்களிருந்தவா காணீரே கனவளையீர் வந்துகாணீரே. (கசு)

வ்யா.—(விண்கொளித்யாதி). அவதாரப்ரயோஜநம் ஸாது பரித்ராணுதிகளாகையாலே ஸ்வர்க்காதி லோகங்களை இருப்பிடமாகவுடைய இந்த்ராதி தேவர்களுக்கு ஆஸுரப்ரக்ருதிகளால்வரும் துஃக்

அரு.—பதினைரும்பாட்டு. (விண்கொளித்யாதி) கீழ்ப்பாட்டில் நயனத்தை அநுபவித்திருக்க "கண்களிருந்தவாறு" என்று புநஃ அநுபவிப்பானென்னென்ன (ஸமுதாயேத்யாதி). ஆனால் அத்தையும் அநுபவித்தால் நயநமே பின்னாட்டுவானென்னென்ன ஹேதுவை யருளிச்செய்கிருர் (அது தன்னிலித்யாதி வாக்ய த்வயத்தாலே).

(க) தி-வாய்-எ-எ-உ.

ளடியாக மண்கொள் வசுதேவர்க்கு வந்தக்லேசமும் தீர்க்கவேணு மென்றிறே அவர்க்கு புத்ரனாக முற்பாடவதரித்தது. அவர்கள் தங்கள் க்லேசம் தீர்த்தாராயிருப்பதும் இவர்க்லேசம் தீர்த்தாலிறே.

(திண்கொளித்யாதி) பின்பு திருவாய்ப்பாடியிலே கம்ஸாதிகள் தேய, வளர்ந்தது தன்க்லேசம் தீருகைக்காகவிறே. திண்மையாவது- கம்ஸன் முதலானாருடைய ஆஸுரபா(வ)த்தாலும், ஜந்மத்தாலும், வந்த நெஞ்சில் வலி ; அதாவது - மாதாவென்றும், பிதாவென்றும் ஸ்வஸாவென்றும், பந்துக்களென்றும் பாராமல் கல்லிடைமோதியும், அல்பம் க்ருபைபிறவாத கம்ஸன்முதலான அஸுரர்களை வயிற்றெரி கொளுந்தி க்ஷயிக்கும்படியாகவிறே திருவாய்ப்பாடியிலே போய் வளர்ந்தருளுகிறதும். வளர்கின்றவனுடைய கடாக்ஷந்தான் அநு கூலவர்க்கம் தழைக்கவும் ப்ரதிகூலவர்க்கமும் முடியவுமாயிறே யிருப்பது.

---

கம் போம்படியாக முன்னே பூமியை இருப்பிடமாகவுடைய ஸ்ரீ வஸுதேவருக்குப் புத்ரனாய் வந்தவதரித்து, தன்னைப்பற்றச் சிறைப் பட்டிருந்த ஸ்ரீவஸுதேவர் து:க்கத்தைத்தீர்த்து, பின்னை தேவர் கள் து:க்கம் தீர்க்கைக்காக முன்னே இங்கேவந்தவதரித்தானாய்த்து. (க) "தந்தைகாலில் விலங்கற வந்துதோன்றிய தோன்றல்" என்னக் கடவதிறே.

(திண்கொளித்யாதி) காயப(ல)லமும் மநோப (ல)லமுமுடைய ரான அஸுரர்களானவர்கள் க்ஷயித்துச் செல்லும்படியாகத் தான்வள ராநிற்கிறவனுடைய. இவன் கால் நெடுக நெடுக அஸுரவர்கம் க்ஷீண மாய் விட்டதிறே. (கண்களித்யாதி) இப்படி அநுகூலரக்ஷணமும் ப்ரதிகூல நிரஸநமும் பண்ணுமிடத்தில் இவர்கள் தழைக்கவும் அவர்கள் க்ஷயிக்கவும் கடாக்ஷிக்கும் திருக்கண்களினழகிருக்கிற படி

---

(முன்னே) என்றத்தை (வந்தவதரித்து) என்றத்தோடேயன்வயிப்பது. முன்னே அவதரித்து என்றதுக்குத் தாத்பர்யம் (தன்னைப்பற்ற வித்யாதி). இதுக்குப்ரமாணம் (தந்தைகாலிலித்யாதி).

திண்மை ஸாமாந்ய சப்தமாகையாலே அருளிச்செய்கிறார் (காயேத் யாதி). "அசுரரை" என்கிற ஐகாரம் அவ்யயம். "தேயவளர்கின்றான்" என்கிற பதத்தைக் கடாக்ஷித்து ரஸோக்தி (இவனித்யாதி). தழைக்கடா க்ஷித்துத் தாத்பர்யம் (இப்படியித்யாதி). ... ... ... (கசு)

---

(க) தி-மொ-அ-டு-க.

(கனவளை) ஸ்ப்ருஹாவஹமுமாய் மமதாவிஶிஷ்டமுமான அநந்யார்ஹ சிந்ஹம். ... ... ... ... ... (கசு)

அவ. —பதினேழாம்பாட்டு. திருக்கண்களில் நின்றும் திருப்புருவத்தில் பெருகுகிறார்.

வ்யா. —(பருவமித்யாதி) திருவின்வடிவொக்கும் தேவகி, பருவம் நிரம்பி ரக்ஷகனுகாதிருக்கச் செய்தேயும் பாரெல்லாம் உஜ்ஜீவிப்பிப்பதாக நோற்றுப்பெற்ற. (உருவுகரிய வித்யாதி) மிக்கப்ரகாசத்தை யுடைய நீலரத்நம்போலே யிருக்கிற திருமேனியையுடைய க்ருஷ்ணனுடைய திருப்புருவங்களில் அழகைக் காணீரென்கிறார். கீழ் "அழகைக் காணுங்கோள்; பொன்னுலே செய்தவளையையுடைய நீங்கள் வந்து காணுங்கோள். ... ... ... ... ... (கசு)

அவ.—பதினேழாம்பாட்டு. திருக்கண்களினழகை யநுபவித்த வநந்தரம் திருப்புருவத்தினழகை அநுபவிக்கிறார்.

மூ.—பருவம் நிரம்பாமே பாரெல்லாமுய்ய
திருவின் வடிவொக்கும் தேவகிபெற்ற
உருவுகரிய வொளிமணி வண்ணன்
புருவமிருந்தவா காணீரே பூண்முலையீர் வந்து காணீரே. (கஎ)

வ்யா.— (பருவமித்யாதி). சக்ரவர்த்தித் திருமகனைப்போலே பருவம் நிரம்பினபின்பு விரோதிகளை நிரஸித்து லோகத்தை உஜ்ஜீவிப்பிக்கையன்றிக்கே, பருவம் நிரம்புவதுக்கு முன்னே (க) *திண்கொளசுரரைத்தேய வளருகையாலே லோகமெல்லாம் உஜ்ஜீவிக்கும்படியாக, பூதநா சகட யமளார்ஜுநாதிகளைத் தொட்டில் பருவமே பிடித்திறே நிரஸித்துச் சென்றது. (திருவின்வடிவொக்கும் தேவகிபெற்ற), லக்ஷ்மீதுல்யஸ்வபாவையான தேவகிப்பிராட்டி இப்

அரு.—பதினேழாம்பாட்டு (பருவமித்யாதி,"பருவம்நிரம்பாமே"என்கிற விசேஷணத்துக்கு வ்யாவர்த்த்யத்தை அருளிச்செய்யாநின்றுகொண்டு ஸ்வாநுபவப்ரதா(நா)நாதிமுகேந உஜ்ஜீவநம்விவக்ஷிதமானால் அது ஸந்நிஹிதர்க்கே ப்ராப்தமாகையாலே "பாரெல்லாம்" என்கையாலே விரோதிநிரஸநமே சொல்லவடுப்பதென்று அத்தை ஸப்ரமாணமாக வருளிச்செய்கிறார் (சக்ரவர்த்தித்யாதி). பால்யம் தொடங்கி விரோதிநிரஸநம் பண்ணினத்தை இசைவிக்கிறார் (பூதநேத்யாதி). "வடிவு" என்றுஸ்வபா(வ)வமாய் பரோபகார சீலையான பிராட்டியைப்போலே இவளும் பிள்ளையைப் பெற்று லோகத்தை வாழ்வித்தாளென்கிறார் (லக்ஷ்மீத்யாதி). (இப்படி

(க) க-உ-கசு.

தன்னதேவகி" என்றத்தை "திருவின்வடிவொக்கும் தேவகி" என்று சாப்தமாக வருளிச்செய்கிறார். திருவின் வடிவொக்குகையாவது-வை தர்ம்யத்தில் ஏகதேசத்ருஷ்டாந்தம்.

"பூண்முலை" என்றது - ப(ஃ)க்தி ப்ரகாசகமான ஆத்மபூஷணம்; அதாவது பராவரகுருக்கள் ப்ரகாசிப்பித்ததிறே. ... (கள)

அவ.—பதினெட்டாம்பாட்டு. திருப்புருவத்தினின்றும் திருமகரக்குழையிலே போகிறார்.

---

படிக்கீடாக தோற்றுப் பெற்ற. திருவின்வடிவொக்கு மென்கையாலே - கீழ் "உள்ளமுதன்னதேவகி" என்றது - இங்கே ஸ்பஷ்டமாயிற்றதிறே.

(உருவித்யாதி) ரூபத்தால் கரியதாய் உஜ்ஜ்வலமாயிருந்துள்ள மணிபோன்ற வடிவை யுடையவனுடைய. (புருவமித்யாதி.)* மதநன் கருப்புச்சிலைபோலேயிருக்கிற திருப்புருவங்களி னழகைக் காணுங்கோள். ஆபரணலங்க்ருதமான முலையையுடைய நீங்கள் வந்து காணுங்கோள். ... ... ... ... ... (கள)

அவ.—பதினெட்டாம்பாட்டு. திருப்புருவத்தினழகை யநுபவித்த வநந்தரம், திருமகரக்குழையி னழகை அநுபவிக்கிறார்.

மூ.—மண்ணும் மலையும் கடலு முலகேழும்
உண்ணுந்திறத்து மகிழ்ந்துண்ணும் பிள்ளைக்கு
வண்ண மெழில்கொள் மகரக்குழையிவை
திண்ணமிருந்தவா காணீரே சேயிழையீர் வந்து காணீரே. (கஅ)

---

க்கு) உய்யும்படிக்கு "திருவின் வடிவொக்கும்" என்றவிசேஷணம் லோகமுய்யும்படிபெற்றதுக்கு ஹேதுவென்று திருவுள்ளம். இங்கு இப்படி ஹேதுகர்ப்ப(ஃ)விசேஷணமாகையாலும், "உள்ளமுது" என்கிறவிடமும் ஹேதுகர்ப்பவிசேஷணமாகையாலும், இங்கே "திரு" என்கிறபதம் ஸ்பஷ்டமாகையால் "உள்ளமுது" என்கிறபதமும் இவ்வர்த்தத்தைச் சொல்லிற்றென்று மூதலிக்கிறார் (திருவினித்யாதி).

"புருவமிருந்தவாறு" என்று சொல்லுகையாலே இந்தப்ரகாரத்தை விசேஷித்துக் காட்டுகிறார் (மதநனித்யாதி). (கருப்புச்சிலை) கரும்பு வில்லு. ... ... ... ... ... ... ... ... (கள)

அரு.—பதினெட்டாம்பாட்டு. (மண்ணுமித்யாதி) (திருமகரக்குழை) என்றது - மகரமத்ஸ்யம் போலேயிருக்கிற கர்ணபூஷணமென்றபடி. அவயவங்களை அநுபவிக்கிறப்ரகரணமாகையாலே திருக்காதில் ஆபரணங்களை அநுபவித்ததே திருக்காது அநுபவித்ததென்று கருத்து.

ஸ்வா.—(மண்ணித்யாதி) ஸர்வாதாரமான பூமியும், பூத(ஸூ)ரங்களும், பூமிக்கு ரக்ஷகமாகச் சூழ்ந்த ஸமுத்ரங்களும் மேலும் கீழுமான பதினாலு லோகங்களும். (உண்ணும் திறந்து மகிழ்ந்துண்ணும் பிள்ளைக்கு) மகிழ்ச்சியாவது - ஸம்ஸாரிகளுடைய பாபகரணங்கள் ஒடுங்கப் பெற்றோமென்கை. அழகிய நிறத்தையுமுடைத்தாய் கண்டவர்களுடைய சி(சி)த்தத்தை அபஹரித்தால் வாங்கவொண்ணாத திண்மையிறே.

(சேயிழை) பூர்வவத். ... ... ... ... (௧அ)

அவ.—பத்தொன்பதாம்பாட்டு. திருமகரக்குழையில் நின்றும் திருநெற்றியிலே பெருகுகிறார்.

---

வ்யா.—(மண்ணுமித்யாதி). ஸர்வாதாரமான பூமியும், பூமிக்காதாரமான பர்வதங்களும், பூமிக்கு ரக்ஷகமான ஸமுத்ரங்களும், மற்றுமுண்டான ஸகல லோகங்களும் ப்ரளயங்கொள்ளாதபடி திருவயிற்றிலே வைக்கிறவளவில், "இவற்றை ரக்ஷிக்கப்பெற்றோமே" என்னும் உகப்பாலே இதுவே தா(ரா)ரகமாகத்திருவயிற்றிலேவைத்த பாலகனுக்கு. (வண்ணமித்யாதி). திருமேனிக்குப் பரபாக(ர)மானதிருநிறத்தையும் ஸ்வஸம்ஸ்த்தாந வைசித்ரியால் வந்த அழகையுமுடைய திருமகரக்குழைகளான இவற்றினுடைய, கண்டவர்கள் கண்ணையும் நெஞ்சையும் கவரும்படியான திண்மை யிருக்கிறபடியைக் காணுங்கோள்; அழகிய ஆபரணங்களாலே அலங்க்ருதைகளான நீங்கள் வந்து காணுங்கோள்.... ... ... ... ... (௧அ)

அவ.—பத்தொன்பதாம்பாட்டு. திருமகரக் குழையினழகை அநுபவித்த வநந்தரம், திருநெற்றியினழகை அநுபவிக்கிறார்.

---

"உலகேழும்" என்றால் போராதோ? "மண்ணும்மலையும் கடலும்" என்றுசொல்லவேணுமோவென்ன இதுகளுடைய விசேஷங்களைக்காட்டிக் கொண்டு க்ரமகியாமகமும் காட்டுகிறார் (ஸர்வாதாரமித்யாதி). இப்படி விசேஷங்களைக் காட்டுகையால் இப்படிப்பட்டிருக்கிறவற்றை உண்ணுமவனென்று அவனுக்கு ஓரதிசயம் சொல்லிற்றென்று திருவுள்ளம். "வண்ணத்தையும் எழிலையும் கொள்ளாநிற்கிற" என்று திருவுள்ளம்பற்றி யருளிச் செய்கிறார் (திருமேனிக்கித்யாதி). "எழில்" அழகு. திண்மைக்குத் தாத்பர்யம் (கண்டவர்களித்யாதி). (கவருகை) வசீகரிக்கை. "சே" என்று- அழகு. "இழை" ஆபரணம். ... ... ... ... ... (௧அ)

வ்யா.—(முற்றிலுமித்யாதி) ஊரில் பெண்களாய் கொட்டகமெடுத்து விளையாடித்திரிகிறவர்களுடைய சிறுசுளகும், மணல்கொழித்துச் சோறிடுகிற சிறுபாத்ரங்களையும், அவர்கள் பேச்சுக்கொண்டுவிளையாடுகிற கிளி பூவைகளுமான லீலோபகரணங்களை இவர்கள் கையைப்பிடித்துப்பறித்துக்கொண்டு பிடிகொடாமல் ஓடுகிற பரமன்றன்னுடைய நெற்றியிருந்த ப்ரகாரத்தைக் காணீரோவென்கிறார்.

"நேரிழை" என்கையாலே-ஸம்ச்லேஷத்திலும் கழற்ற வேண்டாத ஆபரணங்கள். அதாவது - அத்யந்தம் ஸூக்ஷ்மரூபஜ்ஞாநமான ஆத்மபூஷணம். (கக)

---

மூ.—முற்றிலும் தூதையும் முன்கைமேல் பூவையும்
சிற்றிலிழைத்துத் திரிதருவோர்களைப்
பற்றிப் பறித்துக் கொண்டோடும் பரமன்றன்
நெற்றியிருந்தவா காணீரே நேரிழையீர் வந்து காணீரே. (கக)

வ்யா.—(முற்றிலுமித்யாதி) கொட்டகமிட்டு விளையாடித்திரிகிற பெண்களை, மணல்கொழிக்கிற சிறு சுளகையும் மணற்சோறுக்குகிற சிறுபானையையும், முன்கைமேல் வைத்துப் பேச்சுக்கொண்டு விளையாடும்பூவையையும் பூவை-நாகணைவாய்ப்புள். (பற்றியித்யாதி) கையைப்பிடித்து, வன்மையாலே பறித்துக்கொண்டு பிடிகொடாமல் ஓடும்தீம்பில் தலைவனானவனுடைய. (நெற்றியித்யாதி.) அந்த ஆயாஸத்தாலே குறுவெயர்ப்பு அரும்பின திருநெற்றியினழகைக் காணுங்கோள்; நுண்ணியதான ஆபரணங்களையுடைய நீங்கள் வந்து காணுங்கோள். ஆபரணத்துக்கு நுட்பமாவது-தொழிலினுடையஸௌக்ஷ்ம்யமாதல்; ஸௌகுமார்யாநுகுணமான லாக(ஃ)வமாதல். (கக)

---

அரு. —பத்தொன்பதாம்பாட்டு. (முற்றிலுமித்யாதி) "சிற்றிலிழைத்துத் திரிதருவோர்களை - முற்றிலுமென்று தொடங்கி" என்று அந்வயமுகேந அர்த்தமருளிச் செய்கிறார் (கொட்டகமித்யாதி). (கொட்டகம்) சிறிய க்ருஹம். (முற்றில்) சிறு சுளகு. தூதையினர்த்தம் (சோறுக்குகிறவித்யாதி). (குறுவெயர்ப்பு) ஸூக்ஷ்மஸ்வேதம். (அரும்பின) அரும்புபோலேயுண்டாயிருக்கிற வென்றபடி. ஆபரணங்களுக்கு ஆகாரத்தில் ஸூக்ஷ்மதையென்று தோற்றுமைக்காக வருளிச் செய்கிறார் (ஆபரணத்துக்கியாதி). (தொழிலினுடைய) வேலையினுடைய. (ஸௌக்ஷ்ம்யம்) நேர்த்தி. ஸூக்ஷ்மபுத்திக்ருதமென்றபடி. (லாகவம்) கனமாகாமை. ... ... (கக)

அவ.—இருபதாம்பாட்டு. திருநெற்றியில் நின்றும் திருக்குழலிலே பெருகுகிறார்.

வ்யா.—(அழகியவித்யாதி) ஷோடசவர்ணியான பொன்னாலே சமைக்கப்பட்ட அழகியகோலை அழகியதிருக்கையிலேபிடித்து, திருவடிகளில் சாத்தின வீரக்கழல், சிலம்பு, சதங்கை இவை முதலானவற்றின் த்வநியெங்கும் ப்ரகாசிக்க, துள்ளிப்போன இளங்கன்றுகளும் த்வநிவழியே வரும்படியாக மறித்து ஸஞ்சரிக்கிறபோது திரு

---

அவ. —இருபதாம்பாட்டு. திருநெற்றியினழகை யநுபவித்தவநந்தரம், திருக்குழலினழகை அநுபவிக்கிறார்.

மூ.—அழகிய பைம்பொன்னின் கோலங்கைக்கொண்டு
கழல்கள் சதங்கை கலந்தெங்கு மார்ப்ப
மழகன்றினங்கள் மறித்துத் திரிவான்
குழல்களிருந்தவா காணீரே குவிமுலையீர் வந்து காணீரே. (௨௰)

வ்யா.—(அழகியவித்யாதி) கண்டவர்கள் கண்ணுக்கழகியதாய், பசும்பொன்னாலே சமைந்திருப்பதான கோலை, கன்றுகளை மறிக்கைக்கு உபகரணமாக வெறும்புறத்திலே ஆலத்தி வழிக்கவேண்டும்படி அழகியதான கையிலே பிடித்துக்கொண்டு. (கழல்களித்யாதி) கன்றுகளை மறிக்கைக்காக அதிர ஓடுகையாலே திருவடிகளிலே சாத்தியிருக்கிற வீரக்கழல்களும் சதங்கைகளும் தன்னிலே கலந்து எங்குமொக்க த்வநிக்க. (மழகன்றித்யாதி) இளங்கன்றுகளினுடைய திரள்களைக் கைகழியப்போகாமல் மடக்குவித்து ஸஞ்சரியாநின்றுள்ளவனுடைய. (குழல்களித்யாதி) (௧) "நெறித்த குழல்களை நீங்க முன்

---

அரு. —இருபதாம்பாட்டு. (அழகியவித்யாதி) "அழகிய" என்றதை கோலுக்கு விசேஷணமாகவும், "அம்" என்றதை "பொன்" என்றதுக்கு விசேஷணமாகவுமருளிச்செய்கிறார் (கண்டவர்களித்யாதி). "கன்றினங்கள் மறித்துத் திரிவான்" என்றதைக் கடாக்ஷித்து "அங்கைக்கொண்டு" என்றதுக்கு அர்த்தமருளிச்செய்கிறார் (கன்றுகளையித்யாதி). "மறித்துத் திரிவான்" என்றதைக் கடாக்ஷித்து சதங்கையின் த்வநிக்கு ஹேதுவருளிச் செய்கிறார் (கன்றுகளை மறிக்கைக்காக வித்யாதி). கழல் பதார்த்தம் (வீரக்கழல்) என்றது. இதொரு ஆபரணவிசேஷம். "மழ" என்றதுக்கர்த்தம் (இள) என்றது. (கைகழியப்போகாமல்) தூரப்போகாமல். (௨௰)

---

(௧) ௨-௭-௫.

வடிகளை அதிரவிட்டோடுகையாலே அசைந்து கவர்கிற திருக்குழல்
களைக் காணீரென்கிறார். ப்ரஶஸ்தகேசனிறே.

(குவிமுலை) பூர்வவத். "காணீர்" "காணீர்" என்று இருபது ப்ர
காரமும், (க)* முடிச்சோதி ப்ரகாரம்போலே யிருக்கச் செய்தேயும்
பாதாதிகேசமாக அநுஸந்தித்து, ப்ராப்யாநுரூபம் ஸ்வரூபமாகவும்,
ஸ்வரூபாநுரூபம் ப்ராப்யமாகவும் அநுஸந்தித்திறே இவையுடையவர்
களை அழைத்து இருகால் "காணீர்" "காணீர்" என்றது. அவனுடைய
உபேயபா(ஞ)வமும் உபாய பா(ஞ)வமும் அறியுமவர்களையென்னவு
மாம். இப்படிகாட்டக் கண்டாலிறே மங்களாசாஸந † பரிபாக
மாவது. (உ0)

அவ.—இருபத்தோராம்பாட்டு. நிகமத்தில் இத்திருமொழி கற்
றார்க்குப் பலம் சொல்லித் தலைக்கட்டுகிறார்.

ஸ்வா.—(சுருப்பார்குழலி)பிள்ளைசீறுமல்நாட† பூமுடிக்கையாலே
வண்டுகள் மாறாமல் செல்லுமிறே. இப்படிப்பட்ட யசோதை பிள்

---

ளேடி" என்கிறபடியே அதிர ஓடுகையாலே அசைந்து நீங்கிச்செல்
லும் திருக்குழலின் அழகிருக்கிறபடியைக் காணுங்கோள்; குவிகிற
முலையையுடைய நீங்கள் வந்து காணுங்கோள். ... ... ... (உ0)

அவ.—இருபத்தோராம்பாட்டு நிகமத்தில் இத்திருமொழி கற்
றார்க்குப் பலம்சொல்லித் தலைக்கட்டுகிறார்.

மூ.—சுருப்பார் குழலி யசோதை முன்சொன்ன
திருப்பாதகேசத்தைத் தென்புதுவைப் பட்டன்
விருப்பாலுரைத்த விருபதோடொன்றும்
உரைப்பார்போய் வைகுந்தத் தொன்றுவர் தாமே. (உக)

வ்யா.—(சுருப்பார் குழலியித்யாதி) மெல்லொற்று வல்லொற்
றாய், சுரும்பாரென்கிறவிது - "சுருப்பார்" என்று கிடக்கிறது. குழ
லில் முடித்த பூக்களின் மதுவைப்பாநம் பண்ணுகைக்காக வண்டுகள்

---

அரு.—இருபத்தோராம்பாட்டு. (சுருப்பார்குழலியித்யாதி) "சுருப்பு-
வண்டு, ஆர்தல் - படிதல்" என்றர்த்தமருளிச் செய்கைக்காக சப்த நிர்வா
ஹம் காட்டுகிறார் (மெல்லொற்றித்யாதி). குழலிலே வண்டு ஆர்கை
க்கு ப்ரஸக்தி பூர்வகமாக அர்த்தமருளிச் செய்கிறார் (குழலித்யாதி).
முதற்பாட்டில் "கோதைக்குழலாள் யசோதை" என்றுமாலையை நிரூபக
மாகச் சொல்லுகையால் அது ஸார்வகாலிகமாகையாலே இங்கே "சுருப்
பார்குழலி" என்று வண்டுகளை நிரூபகமாக வருளிச் செய்கையாலே

---

(க) தி-வாய்-ந-க. † (பா) பரிகரமாவது. † (பா) காலபுஷ்பங்களை.

ளையைக் கொண்டாடிப் பலர்க்கும் காட்டி (முன்சொன்ன திருப்பாத கேசத்தைத் தென்புதுவைபட்டன்) அவன் தான் ஸ்ரீ மதுரையிலே அவதரித்துத் திருவாய்ப்பாடியிலே போநதாப்போலேயிறே, இவர் தாமும் திருப்புத்தூரிலே அவதரித்துத் திருமாளிகையிலே போந்த படி. (பட்டன்) ப்ராஹ்மணோத்தமன்.

(விருப்பால்) யசோதை விரும்பினாப்போலன்றிறே இவர் விரு

---

எப்போதும் படிந்து கிடக்கும்படியான குழலையுடைய யசோதைப் பிராட்டி. (முன்சொன்ன திருப்பாதகேசத்தை) அவதார ஸமகாலத்திலே தானுமநுபவித்து, பிறர்க்கும் அழைத்துக் காட்டிச்சொன்ன பாதாதிகேசத்தை. (தென்னித்யாதி.) அழகிய ஸ்ரீவில்லிபுத்தூருக்கு நிர்வாஹகராய் ப்ராஹ்மணோத்தமரான பெரியாழ்வார் அத்யாதரத்தோடே அருளிச்செய்த.

அவளுடைய ஆதரத்தளவு மன்றிறே இவருடைய ஆதரம்; (௧) "கோதைக்குழலாளசோதை" (௨) "பிணைத்தோளிளவாய்ச்சி" (௩) "மைத்தடங்கண்ணியசோதை" இத்யாதிகளாலே யசோதைப் பிராட்டியை வர்ணித்துச் சொன்னவையும், (௪) "உழந்தாள் நறுநெய்" (௫) "அதிருங் கடல்நிற வண்ணன்" (௬) "கோக்கி யசோதை" இத்யாதிகளாலே அவனுடைய சேஷ்டிதங்களாகச் சொன்னவையும், (௭) "மறங்கொளிரணியன் மார்வை முன் கீண்டான்" (௮) "இருமாமருதமிறுத்த விப்பிள்ளை" (௯) "சகடத்தைச் சாடிப்போய் வாள்கொள் வளையெயிற்றுருயிர் வவ்வினான்" இத்யாதிகளாலே இவனுக்கு நிரூபகமாக வருளிச்செய்த அவதாராந்தர சேஷ்டிதங்களும், இவ்வவதாரந்தன்னில் உத்தரகால சேஷ்டிதங்களு

---

எப்போதும் வண்டுகள் படிந்து கிடக்குமென்று திருவுள்ளம். "அசோதை முன்சொன்ன" என்று சொல்லி, இங்கே "விருப்பாலுரைத்த" என்று விசேஷிக்கையாலே அதுக்கு அநுகுணமாக (அத்யாதரத்தோடே) என்றது.

அவளிற்காட்டில் இவருடைய ஆதரம் அதிசயமாவானென்? ஸமமன்றோவென்ன வருளிச் செய்கிறார் (அவளுடைய வித்யாதி). இந்த ஆதராதிசயத்தை உபபாதிக்கிறார் (கோதைக் குழலாளென்று தொடங்கி, அருளிச் செய்தாராமித்தனை) என்றுமளவும். (நிரூபகமாக வருளிச்செய்த)என்றது (உத்தரகால சேஷ்டிதங்களும்) என்றதுக்கும் விசேஷணம்.

---

| | | |
|---|---|---|
| (௧) ௧-௨-௧. | (௨) ௧-௨-௩. | (௩) ௧-௨-௧௨. |
| (௪) ௧-௨-௪. | (௫) ௧-௨-௯. | (௬) ௧-௨-௧௫. |
| (௭) ௧-௨-௫. | (௮) ௧-௨-௧௦. | (௯) ௧-௨-௧௧. |

ம்பியுரைத்தபடி. (இருபதோடொன்று முரைப்பார்) பூர்வபூர்வோச்சாரண க்ரமத்தாலே உரைப்பார்; ஸாபிப்ராயமாக வுரைப்பார். இவருடைய அபிமாநத்தாலே (க)"சூழ்ந்திருந்தேத்துவர் பல்லாண்டு"

மென்னும்படி, அவதாரகாலத்துக்குப் பிற்பாடராயிருக்கச் செய்தேயும் * மயர்வற மதிநலமருளப் பெறுகையாலே ஸர்வகாலத்திலுள்ளதும் ப்ரகாசிக்கும்படியான தசை பிறந்த இவர் இவ்விஷயத்தில் ஆதராதிசயத்தாலே அருளிச் செய்தாராயிற்று.

யசோதைப் பிராட்டியுடைய ஸ்நேஹத்தை யுடையராய்க் கொண்டு அநுபவித்ததும், அவன் பாதாதி கேசமநுபவித்துப் பிறர்க்குக் காட்டின கட்டளையிலே பேசினதுமான இதுவே, அவளோடு இவர்க்கு ஸாம்யம். ஆகையாலே, "அசோதை முன்சொன்ன திருப்பாத கேசத்தைத் தென்புதுவைப் பட்டன் விருப்பாலுரைத்த" என்றருளிச் செய்தாராய்த்து. இந்த ந்யாயத்தாலே மேலில் திருமொழிகளிலும் இப்படி வந்தவற்றிற்கு வகையிட்டுக் கண்டுகொள்வது.

(இருபதோடொன்று முரைப்பார்.) இந்த இருபத்தொரு பாட்டையும் ஸாபிப்ராயமாகச் சொல்லுவாரென்னுதல்; பா (ஹா) வபந்த (பந்த)மில்லையே யாகிலும் சப்தமாத்ரத்தைச் சொல்லுவாரென்னுதல்.

---

ஆகில் இவர் யசோதையாக அருளிச் செய்தபடி யென்னென்ன வருளிச் செய்கிறார் (யசோதை யித்யாதி). (இப்படி வந்தவற்றிற்கு) என்றது- யசோதாதிகளான ஸம்பந்த ஸம்பந்திகளை வர்ணித்தும், அவதாராந்தரத்திலும் இவ்வவதாரந் தன்னிலுமுண்டான சேஷ்டிதங்களையும் சொல்லிக் கொண்டும், அவ்வவரோராகச் சொல்லும் பாசுரங்களாகச் சொல்லுகிறவற்றுக்கு மென்றபடி. (வகையிட்டுக் கண்டுகொள்வது) என்றது - மயர்வற மதிநலம் பெற்றவராகையாலும் தத்தத்பா (ஹா) வனையாலும் வந்ததென்று கண்டுகொள்வது. இந்த மயர்வறமதிநலமருளுகையே இப்படி தத்தத் பாவனையாகைக்கும் ஹேதுவென்று கொள்வது.

"விருப்பால்" என்றத்தை, "உரைப்பார்" என்றத்தோடே அநுஷங்கித்து அர்த்தமருளிச் செய்கிறார் (ஸாபிப்ராயமாகவித்யாதி). (ஸாபிப்ராயமாக) பா(ஹா)வபந்த பூர்வகமாக. அநுஷங்கியாமல் பக்ஷாந்தரம் (பா(ஹா) வேத்யாதி). விக(ஃ)தமான குண்டட்டத்தை-தட்டுப்படுகையை யுடைத்தானதென்றுய், அது தன்னிலும், (உ)*ப்ரஜ்ஞாதித்வாத் ஸ்வார்த்தே அண்ப்ரத்யயமும், ஆதிவ்ருத்தியுமாய் வைகுண்டட மென்றதாகத் திருவுள்ளம் பற்றித்

---

(க) தி-பல்-கஉ.

என்கிற தேசத்திலே போய் அவர்களோடே மங்களாசாஸநம் பண்ணப் பெறுவார். (உக)

பிள்ளை திருவடிகளே சரணம்.

முதற்பத்து இரண்டாந்திருமொழி முற்றிற்று.

---

ஸ்வா.—மாணிக்கங்கட்டி ப்ரவேசம். — கீழே சொக்கடலிலே திவ்யாவயவங்களை யசோதைப்பிராட்டி அநுபவித்தப்ரகாரத்தை தத்காலம்போலே மிகவும் விரும்பி அநுபவித்தாராய் நின்றார்; இனிமேல் அவள் பிள்ளையைத் தொட்டிலிலே வளர்த்தித் தாலாட்டின

---

(போயித்யாதி) இவ்விஷயத்தை பரிபூர்ணாநுபவம் பண்ணலாம்படியான ஸ்ரீ வைகுண்டத்திலேபோய் (க) "சூழ்ந்திருந்தேத்துவர் பல்லாண்டு" என்கிறபடியே அவனை அநுபவித்து மங்களாசாஸநம் பண்ணிக்கொண்டு ஒருகாலமும்பிரிவின்றி இருக்கப்பெறுவர். (உக)

பெரியஜீயர் திருவடிகளே சரணம்.

—ооо—

முதற்பத்து இரண்டாந்திருமொழி முற்றிற்று.

—ооо—

## முதற்பத்து மூன்றாம் திருமொழி

## மாணிக்கங்கட்டி ப்ரவேசம்.

வ்யா.—மாணிக்கங்கட்டி ப்ரவேசம். கீழிற்றிருமொழியிலே திருவடிகள் தொடங்கி திருமுடியளவுமுண்டான திவ்யாவயவங்களை யசோதைப்பிராட்டி அநுபவித்த ப்ரகாரத்தை, தத்காலம் போலே மிகவும் விரும்பி அநுபவித்தாராய் நின்றார்; இனிமேல் அவள் பிள்

---

தாத்பர்யார்த்த மருளிச் செய்கிறார (இவ்விஷயத்தை மித்யாதி). (இவ்விஷயத்தை) இத்திருமொழி ப்ரதிபாத்யனான க்ருஷ்ணனை. வக்த்ரு வைலக்ஷண்யத்தாலும் ப்ரதிபாத்ய ஸ்வபாவத்தாலும் ப(ஃ)லம் சொல்லுகிறார் (சூழ்ந்திருந்தித்யாதி).

"தென்புதுவைப்பட்டன், சுருப்பார்குழலி அசோதைமுன் சொன்ன திருப்பாத கேசத்தை விருப்பாலுரைத்த இருபதோடொன்றும் விருப்பாலுரைப்பார் வைகுந்தத்திலேபோய்தாமேஎன்றுவர்" என்றந்வயம்.(உக)

ஜீயர் திருவடிகளே சரணம்.

அரு-மாணிக்கங்கட்டிப்ரவேசம்.-*வண்ணமாடங்களிலேபிறந்தமையை அநுபவித்து, கீழில் திருமொழியிலே அவயவங்களை அநுபவித்து, மேலே தாலாட்டுகையால் வந்தக்ரமந்தோற்றவ்ருத்தகீர்த்தநம்பண்ணுகிறார் (கீழ்

---

(க) தி-பல்-கஉ. (உ) பாணினி ஸூ. ரு-ச-கஅ.

ப்ரகாரத்தை தத்காலம்போலே மிகவும் விரும்பி அருளிச்செய்கிறார்.

ஸர்வஸ்மாத்பரனாய், அவாப்தஸமஸ்தகாமனாய், ஸர்வப்ரகார நிரபேக்ஷனாய், நாராயண சப்தவாச்யனான ஸர்வேஶ்வரன் யாதோரிடத்திலே யாதொரு திருமேனியோடே அவதரித்தாலும் அவனுடைய ஸ்த்திதி க(X)மந சயநாதிகளைக்கண்டால் மிகவும் விரும்பித் தங்களாலானவளவும் கிஞ்சித்கரித்தன்றி நிற்கவொண்ணாதிறே ப்ரஹ்மேஶாநாதிகளுக்கும். இத்தையசோதைப்பிராட்டி மநோரதித்துக்கொண்டாளாக அவள் தாலாட்டின ப்ரகாரத்தைத் தாமும் ப்ரத்யக்ஷமாகக் கண்டருளி மிகவும் விரும்பி அவனுடைய நீர்மையையும் மேன்மையையும் அருளிச்செய்து தாலாட்டுகிறார்.

அவ.—முதற்பாட்டு. ப்ரஹ்மா கிஞ்சித்கரித்த திருப்பள்ளித்

---

தொட்டிலிலே வளர்த்தித் தாலாட்டின ப்ரகாரத்தை, தத்காலம்போலே விரும்பி யநுபவித்துப்பேசுகிறார்.

ஸர்வஸ்மாத்பரனாய், அவாப்த ஸமஸ்தகாமனாய், ஸர்வப்ரகார நிரபேக்ஷனாய், நாராயண சப்தவாச்யனான ஸர்வேஶ்வரன், யாதோரிடத்திலே யாதொரு திருமேனியோடே அவதரித்தாலும் அவனுடைய ஸ்த்திதி க(X) மந சயநாதிகளைக் கண்டால் மிகவும் விரும்பித் தங்களால் ஆனவளவும் கிஞ்சித்கரித்தன்றி நிற்க வொண்ணாதிறே ப்ரஹ்மேசாநாதிகளுக்கும். இத்தை, யசோதைப்பிராட்டி மநோரதித்துக்கண்டாளாகச் சொல்லித்தாலாட்டின ப்ரகாரத்தை, தாம் * மயர்வற மதிநல மருளப் பெற்றவராகையாலே தத்காலம்போலே ப்ரத்யக்ஷமாகக்கண்டு மிகவும் உகந்து அவனுடைய மேன்மையையும் நீர்மையையு மருளிச்செய்து தாலாட்டுகிறார்.

அவ—முதற்பாட்டு.—அண்டாதிபதியான ப்ரஹ்மா, இவனு

---

த்யாதி). (வளர்த்தி) கண்வளர்த்தி.

இத்திருமொழியிலே ப்ரஹ்மேஶாநாதிகள் கிஞ்சித்கரித்ததாயிருக்கையாலே இடைச்சேரியிலே அவர்களுக்கு வந்து அநுவர்த்திக்கக் கூடுமோ வென்கிற சங்கையைப் பரிஹரிக்கிறார் (ஸர்வஸ்மாத் பரனித்யாதி). ப்ரஹ்மாதிகள் அநுவர்த்தநங்களை யசோதை அறியாதிருக்கத் தாம் அவளாகச் சொல்லுகிறவர் இப்படி சொல்லப்போமோவென்ன வருளிச்செய்கிறார் (இத்தையித்யாதி). "கோ - குடந்தைக் கிடந்தாய்" என்கிற பதங்களைக் கடாக்ஷித்து (மேன்மையையும் நீர்மையையும்) என்றது. ... ... *

அநு.—முதற்பாட்டு. (மாணிக்கமித்யாதி) முந்துற ப்ரஹ்மாவினுடைய கிஞ்சித்காரத்தை அருளிச்செய்கைக்கு நியாமகம் (அண்டாதிபதியான).

---

† (பா) மநோரதித்துக்கொண்டாளாக.

தொட்டிலே அங்கீகரித்து வர்ணிக்கிறார்.

ஸ்வா — (மாணிக்கமித்யாதி) ஷோடசவர்ணியான ஆணிப் பொன்னாலே நாநாவர்ணமாகவும், பிள்ளைக்குத் தகுதியாகவும் சமைத்த தொட்டிலிலே பதித்த மாணிக்க ஒழுங்குக்கு நடுவே வயிரம் முதலான நவரத்நங்களையும் பதித்து ப்ரஹ்மாவானவன் விரும்பிவரவிட்டானென்கிறார். அருளப் பாடிட்டாலல்லது வரவுமரிதிறே அவர்களுக்கு. † (அவர்கள் வரவிட்டவர்களுக்கு) உபஹாரத்தோடே வரும்போதாகிலும் வரலாம்போலே காணும். ஸ்வாதந்த்ர்யகாமரிலுங் காட்டில் தச்சேஷ பூதர்க்குள்ள ஏற்றம்பாரீர். "விடுதந்தான்" என்றது-தன் பக்கலில் நின்றும் அங்குத்தைக்கேயாமென்று நீக்கிவிட்டுத் தந்தானென்கிறது. "மாணி" என்றும்-சிறுமை; "குறள்" என்றும்-சிறுமை; சிறுமை பெரிதாம்படியான குறளாயிறே மஹாபலி யஜ்ஞவாடத்திலே சென்று இரந்தது. கௌரவம் யாசிதாந்தமாயிறே

---

டைய பருவத்துக் கநுகுணமாகப் பண்ணின கிஞ்சித்காரத்தைச் சொல்லுகிறது.

மூ.—மாணிக்கங்கட்டி வயிரமிடைகட்டி

ஆணிப்பொன்னால்செய்த வண்ணச்சிறுத்தொட்டில்

பேணியுனக்குப் பிரமன் விடுதந்தான்

மாணிக்குறளனே தாலேலோ வையமளந்தானே தாலேலோ(க)

வ்யா. —(மாணிக்கமித்யாதி.) இரண்டருகும் மாணிக்கத்தையும் நடுவே வயிரத்தையும் பகைத்தொடையாகக் கொண்டு ஒழுங்குபடக் கட்டி, "இதுக்குமேலே மாற்றில்லை" என்னும்படியான பொன்னாலே சமைத்ததாகையாலே அழகியதாய்ப் பருவத்துக்குத் தகுதியாம்படி சிறியதாயிருந்துள்ள தொட்டிலை. (பேணியித்யாதி) ஆதரித்து உனக்கு ப்ரஹ்மா வரவிட்டான். (மாணியித்யாதி) உன்னுடைமை பெறுகைக்காக இரப்பிலே தழும்பேறின ப்ரஹ்மசாரியாய்ச் சென்று இரந்த வாமநரூபியானவனே! தாலேலோ; இரப்புப்பெற்ற

---

என்றது.(பருவத்துக்கு) என்றது-பிள்ளையினுடைய பருவத்துக்கென்றபடி.

(பகைத்தொடை) பர பாக (ஜு`X) ம். ஆணிசப்தார்த்தம் (இதுக்குமேலித்யாதி) வண்ணமென்றதினர்த்தம் (அழகியதாய்) என்றது. மாணிசப்தார்த்தம் (ப்ரஹ்மசாரியாய்) என்றது. (இரப்பு) என்றது - இரக்கப்பட்டதையென்றபடி. ... ... ... ... ... ... (க)

---

† குண்டலிதம் க்வாசித்கம்.

யிருப்பது. (வையமளந்தானே) இரப்புப்பெற்றவாறே பூரித்துத்ரிவிக்ரமனானானிறே. அளந்த போதை ஸ்வாதந்த்ர்ய நிவ்ருத்தி ஸமானத்தாலேயிறே ப்ரஹ்மா வரவிட்டதும். ... ... ... (க)

அவ.—இரண்டாம்பாட்டு. இவ்வளவேயோ ருத்ரபாவாஹநனும் வரவிட்டானென்கிறார்.

ஸ்வா.—(உடையித்யாதி) உடையிலே ஆர்ந்த பொன்மணி முதலான ரத்நங்களோடே அலங்க்ருதமாகவும் மிக்கப்ரகாசத்தையுடைத்தானமாதளம்பூமுதலானபூத்தொழில்களையும் சேர்த்து, (இடைவிரவி

ஹர்ஷத்தாலே வளர்ந்து லோகத்தை அளந்த த்ரிவிக்ரமனானவனே! தாலேலோ. ... ... ... ... ... ... ... (க)

அவ.—இரண்டாம்பாட்டு. ப்ரஹ்மாவுக்கநந்தரம் பரிகணிதனாய் ஈஶ்வராபிமானியான ருத்ரன் கிஞ்சித்கரித்தபடியைச் சொல்லுகிறது.

மூ.—உடையார் கனமணியோ டொண்மாதளம்பூ
இடை விரவிக் கோத்த வெழில்தெழ்கினோடும்
விடையேறு காபாலி யீசன் விடுதந்தான்
உடையாய்அழேலழேல்தாலேலோவுலகமளந்தானே தாலேலோ.

வ்யா.—(உடையித்யாதி) திருவரைக்குச் சேர்த்திருப்பதான பொன்மணியோடும் நடுநடுவே கலசிக்கோத்த அழகிய இடைச்சரிகையோடும் கூடியிருக்கிற அழகிய மாதளம்பூக்கோவையான

அரு.—இரண்டாம்பாட்டு. (உடையித்யாதி) (ப்ரஹ்மாவுக்கநந்தரம் பரிகணிதனாய்) என்றது-(க) "ஸ ப்ரஹ்மா ஸ ஶிவஸ்ஸேந்த்ர:- ஸப்ரஹ்மா ஸஶிவஸ்ஸேந்த்ர:" என்கிற ஶ்ருதியைப்பற்ற. * ஈஶபதத்தில் "ஈஷ்டே-நியமயதி-ஈஶ:- ஈஷ்டே-நியமயதி-ஈஶ:" என்கிற வ்யுத்பத்தியை உட்கொண்டருளிச் செய்கிறார் (ஈஶ்வராபிமானியான) என்று.

"உடையார்கனமணியோடு இடைவிரவிக்கோத்தஎழில்தெழ்கினோடும் ஒண்மாதளம்பூ" என்றந்வயித்து அர்த்தம் (திருவரையித்யாதி). (மணி) கிங்கிணி. "தெழ்கினோடும்" என்ற ஸமுச்சயம் இங்கும் அநுஷங்கித்தாரென்று கொள்வது. விரவியினர்த்தம் (கலசி) என்றது. "தெழ்கு" அரசிலைத்தொங்கல். அத்தை அருளிச்செய்கிறார் (இடைச்சரிகை) என்று. "மாதளம்பூ" என்றது - இந்தப்பூக்களைப் போலே பண்ணின ஆபரணங்களையுடைத்தானதென்று விவக்ஷித்து பலிதார்த்தம் (அழகியவித்யாதி)-

(க) தை-நா-ன-க.

விக்கோத்த எழில்தெழ்கினூடும்) எழில்தெழ்கு-விளங்காநின்ற இடைச்சரி. (விடையித்யாதி) ருஷபவாஹநனும், கபாலநிருபகனும், ஸ்வகோஷ்ட்டிக்கு நியந்தாவுமா யிருக்கிற ருத்ரன் விடுதந்தான். (உடையாய்) இவையெல்லாம் வரவிடுவதற்கு முன்னேயும் இவர்கள் தங்களையு முடையாயென்கிறார். (அழேலழேல்) "மாரோதீ:, மாரோதீ:-மாரோதீ:, மாரோதீ:" என்று தாலாட்டுகிறார். தாலாட்டாவது-நாவசைத்தல். ஏல்-பொருத்தம். லோகத்தை அளக்கிறபோது "என்தலையில் மிதியாதேகொள்" என்றாரில்லையிறே. அறிந்தார்களாகில் தலைமேலாக நிற்கவும் கூடுமிறே. ... ... ... ... ... (உ)

---

அரைவடத்தை. (விடையித்யாதி). ருஷபவாஹநனும், கபால நிருபகனும், ஸ்வகோஷ்ட்டிக்கு நியந்தாவா யிருக்கிற ருத்ரன் வரவிட்டான். (உடையாயித்யாதி). ஒருவர் "என்னது" என்று வரவிட்டாற் போதும் அவர்களோடு அவர்களுடைமையோடு வாசியற எல்லாவற்றையுமுடையவனே! அழாதேகொள், அழாதேகொள், தாலேலோ. (உலகமித்யாதி) திருவுலகளந்தருளின வ்ருத்தாந்தத்தாலே உன்னுடைய ஸர்வஸ்வாமித்வத்தை அடிப்படுத்தி வைத்தவனே! தாலேலோ வென்று தாலாட்டினதா யிருக்கிறது. தாலாட்டாவது - நாவசைத்தல். ... ... ... ... ... ... *(உ)

அவ. —மூன்றும்பாட்டு. ப்ரஹ்ம ருத்ரர்களை எண்ணினால், பின்பு தன்னை எண்ணும்படியான முதன்மையையுடையனான இந்த்ரன் கிஞ்சித்கரித்தபடியைச் சொல்லுகிறது.

---

(கபாலநிருபகனும்) கபாலத்தை நிருபகமாக வுடையனும். இன்னத்தை யுடையாய் என்னுமையாலே அருளிச்செய்கிறார் (ஒருவரித்யாதி.) இப்பாட்டில் "மாணிக்குறளன்" என்றதுக்கு அநுகுணமாக "வையமளந்தான்" என்றதுக்கு ஸௌலப்யபரமாக வருளிச்செய்து, இப்பாட்டில் "உடையாய்" என்றதுக்கநுகுணமாக "உலகமளந்தான்" என்றதுக்கு பரத்வம்தோன்ற வருளிச்செய்கிறார் (திருவுலகளந்தவித்யாதி). (அடிப்படுத்தி) என்று சா(ஸ்வா)டு. திருவடிகளிலே படுத்தினவென்றும், நிலைநிறுத்தின வென்றும். (நாவசைத்தல்) என்றது - பிள்ளைகளைத் தூங்கப் பண்ணுகைக்காக நாக்கை அசைத்துக்கொண்டு சப்திக்கை யென்கை. (உ)

அ௩. —மூன்றும்பாட்டு. (என்னித்யாதி) "இந்திரன் தானும்" என்று விசேஷித்ததைக் கடாக்ஷித்து அவதாரிகை (ப்ரஹ்மேத்யாதி).

ஸ்வா.—மூன்றாம்பாட்டு. (என்னித்யாதி) என்தம்பிரானாய், (எழில் திருமார்வற்கு) எழில் விளங்காநின்ற திருமார்பை யுடையவனுக்கு. (சந்தமித்யாதி) ஸமுதாயசோபைக்குத் தகுதியாய், செவ்வித்தாமரை போலே யிருக்கிற திருவடிகளையுடையவனுக்கு. (இந்திரன் தானும்) அவர்களோடு ஸமனான தானுமென்றபடி. (எழிலித்யாதி) எழிலையும் ஓசையையுமுடைத்தான கிங்கிணியையும் தந்துவனாய் நின்றான். அதாரவிப்ரக்ருஷ்டனாய் வந்து நின்றான். தாலேலோ. ... (௩)

அவ.—நாலாம்பாட்டு. இவ்வளவேயோ தேவர்களெல்லாரும் உபஹாரபாணிகளாய் வந்தார்களென்கிறார். (க) "త్రైలోక్యే

மூ.—என்தம்பிரானா ரெழில் திருமார்வற்குச்
சந்தமழகிய தாமரைத் தாளற்கு
இந்திரன்றானு மெழிலுடைக் கிண்கிணி
தந்துவனாய்நின்றான் தாலேலோ தாமரைக்கண்ணனே தாலேலோ.

வ்யா. —(என்னித்யாதி) என் தம்பிரானார் எழில் திருமார்வற்கு. எழில் - அழகு. "என் தம்பிரானார்" என்கிறவிது - திருமார்பினழகுக்குத் தோற்றுச்சொன்ன வார்த்தை. (சந்தமித்யாதி) சிவப்பாலும் விகாஸாதிகளாலும் நிறமழகிய தாமரைப் பூப்போலே யிருக்கிற திருவடிகளை யுடையவனுக்கு. (இந்திரனித்யாதி.) த்ரைலோக்ய நிர்வாஹகனான முதன்மையையுடைய இந்த்ரன் தானும், அழகையுடைத்தான கிண்கிணியைக் கொடுவந்து ஸமர்ப்பித்து ஸ்வநைச்யம் தோற்ற அதார விப்ரக்ருஷ்டனாய் நின்றான். தாலேலோ. (தாமரையித்யாதி) கிஞ்சித்கரித்தவர்களைக் குளிரக் கடாக்ஷிக்கும் தாமரைபோன்ற திருக்கண்களை யுடையவனே! தாலேலோ. (௩)

அவ.—நாலாம்பாட்டு. இந்த்ரனுக்குக் கீழாய், தனித்தனி ப்ரதாநரான தேவர்கள் ஸமுதாயேந பண்ணின கிஞ்சித்காரத்தைச் சொல்லுகிறது.

---

சந்தமென்ற தினர்த்தம் (நிறம்) என்றது. (உ) "ఇది - పరమైశ్వర్యే- இதி - பரமைஶ்வர்யே" என்கிற தா (ధా) த்வர்த்தத்தைக் கடாக்ஷித்து அருளிச்செய்கிறார் (த்ரைலோக்யேத்யாதி). உவனாயென்றதுக்கர்த்தம் (ஸ்வநைச்யேத்யாதி).

அரு.—நாலாம்பாட்டு. (சங்கித்யாதி) இந்த்ரனுக்கநந்தரம் அவர்களைச் சொல்லுகையைக் கடாக்ஷித்தவதாரிகை (இந்த்ரனுக்கித்யாதி).

(க) (உ) ధాౕది

[Telugu-script text] - ரிக்தபாணிஸ்து நோபேயாத் ராஜாநம் தைவதம்குரும்." என்கையாலே ராஜாவும் தெய்வமும் குருவும் இவனேயாகையாலே உபஹார பாணிகளாய்க் கொண்டு வந்தார்களென்கிறார்.

ஸ்வா.-(சங்கித்யாதி) சங்குகளில்வைத்துக்கொண்டு நன்றானவலம்புரியானதும். (சேவடிக்கிண்கிணியும்) பாதச்சதங்கைகளும். (அங்கைச்சரிவளையும்) அழகிய திருக்கைக்குத் தகுதியான சரிகளும் வளைகளும். (நாணும்) திருவரைநாணும். (அரைத்தொடரும்) அரைவடமும். (அங்கணித்யாதி) அழகியதாய், இடமுடைத்தான விசும்பில் அமரர்கள் போகவிட்டார்கள். (செங்கணித்யாதி). சிவந்த திருக்கண்களையுடைய நீலமேகம் போன்றவனே! தாலேலோ. (தேவகிசிங்கமே)

---

மூ.—சங்கின்வலம்புரியும் சேவடிக் கிண்கிணியும்
அங்கைச்சரிவளையும் நாணு மரைத்தொடரும்
அங்கண்விசும்பிலமரர்கள் போத்தந்தார்
செங்கட்கருமுகிலே தாலேலோ தேவகிசிங்கமே தாலேலோ.

வ்யா.—(சங்கித்யாதி.) சங்குகளில் வைத்துக்கொண்டு உத்க்ருஷ்டமாய் மங்களாவஹமான வலம்புரியும், சிவந்த திருவடிகளிலே சாத்தத்தக்க சதங்கையும். "சேவடிக் கிண்கிணி" என்கையாலே, "கிண்கிணி" என்று-பாதச்சதங்கையைச் சொல்லுகிறது. (அங்கைச்சரியித்யாதி.) அழகிய திருக்கைக்கு ஆபரணமான முன்கைச்சரிகளும், திருத்தோள்வளைகளும். திருமார்புக் கலங்காரமாகச் சாத்தத்தக்க நாணும், அரை வடமும். அன்றிக்கே, அரைத்தொட ரோட்டைச் சேர்த்தியாலே, நாணென்றது - அரைநாணுகவுமாம். (அங்கணித்யாதி). அழகியதாய் இடமுடைத்தான ஸ்வர்க்காதி லோகங்களில் தேவர்கள் வரவிட்டார்கள். (செங்கணித்யாதி.) ஓராபரணமும் வேண்டாதபடி தாமரைபூத்த காளமேகம்போலே சிவந்த திருக்கண்களோடே சேர்ந்த ஶ்யாமளமானவடிவையுடையவனே! தாலேலோ.

---

"வலம்புரி" என்றது-ப்ரதக்ஷிணாவர்த்தமான சங்கென்றபடி. "கிங்கிணி" என்றால் சதங்கையைச் சொல்லுமோவென்ன (சேவடியித்யாதி). (முன்கைச்சரி) முன்கைவளை. புந: வளையென்றதுக்கர்த்தம் (திருத்தோள்வளைகளும்) என்றது. (அரைவடம்) அரையிலேகட்டி காலளவும் தொங்குகிற முத்துமாலை. (அரைநாண்) பொன்னரை நாண். "செங்கட்கருமுகிலே" என்ற சப்தார்த்தம் (ஓராபரணமுமித்யாதி). ... ... (௩)

தேவகீபுத்ரனென்கிற ப்ரஸித்தியாலே சொல்லுகிறார். இது தான் ச்ருதி சோதி (ஸீ°க)தமுமாயிறே இருப்பது. ஆழ்வாரருளிச்செய்தா ரென்கிற இதேயிறே ஏற்றம். ... ... ... ... (ச)

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (எழிலித்யாதி) எழில் விளங்காநின்ற திருமார்புக்கு. (ஏற்குமிவையென்று) சேருமிவையென்று. (அழகிய வைம்படையும்) அழகிய ஸ்ரீ பஞ்சாயுதமும். (ஆரமும்) திருமுத்து வடமாதல்; திருக்கழுத்துக்குத் தகுதியான ஆபரணமாதல். (வழுவி லித்யாதி) கொடுத்துக்கொள்ளிலிறே வழுவாவது. வழுவற்றகொடை யான். (வயிச்சிராவணன்) வைஶ்ரவணன். (தொழுதுவனாய் நின்றான்) (தேவகிபித்யாதி). தேவகிப்பிராட்டிவயிற்றில் பிறப்பாலே ஸிம்ஹக் கன்று போலே யிருக்கிற செருக்கையுடையவனே! தாலேலோ. (ச)

அவ.— அஞ்சாம்பாட்டு. உத்தரதிக்பாலகனாய் உதாரனான வைஶ்ரவணன் கிஞ்சித்கரித்த படியைச் சொல்லுகிறது.

மூ.—

எழிலார் திருமார்வுக்கேற்கு மிவையென்று
அழகிய வைம்படையு மாரமுங்கொண்டு
வழுவில் கொடையான் வயிச்சிராவணன்
தொழுதுவனாய்நின்றான் தாலேலோ தூமணிவண்ணனே தாலேலோ.

வ்யா.—(எழிலித்யாதி) வெறும்புறத்திலே ஆலத்தி வழிக்க வேண்டும்படி அழகு மிக்கிருந்துள்ள திருமார்புக்குச் சேருமிவை யென்று. (அழகியவித்யாதி) அழகியதாயிருந்துள்ள ஸ்ரீ பஞ்சாயுத மாகிற ஆபரணமும், (க) * கோலமாமணியாரமும் கொண்டு. (வழு விலித்யாதி) கொடுத்துக் கொள்ளுதல், கொடுக்க முசித்தல்செய்கை யாகிற குற்றமில்லாத கொடையையுடையவனான வைஶ்ரவணன்.

அரு.—அஞ்சாம்பாட்டு. (எழிலித்யாதி) இந்த்ரனுக்குக் கீழ்ப்பட்ட தேவர்களெல்லாருடைய கிஞ்சித்காரம் கீழ்ப்பாட்டில் சொல்லியிருக்க, குபேரனை விசேஷித்தருளிச் செய்ததற்கு "வழுவில் கொடையான்" என்றத்தைக் கடாக்ஷித்து நியாமகமருளிச் செய்கிறார் (உத்தரேத்யாதி).

ஐம்படை யென்றதினர்த்தம் (ஸ்ரீபஞ்சாயுதம்) என்றது. "அழகிய" என்றத்தை "ஆரம்" என்றத்தோடும் கூட்டியருளிச் செய்கிறார் (கோல மித்யாதி). இல்லையாகில் திருமார்புக்கோரதிறே யென்று திருவுள்ளம். (கொடுத்துக் கொள்ளுதல்) ப்ரத்யுபகாரம் கொள்ளுதல். (முசித்தல்) க்லே சித்தல். "வழுவு" என்றதுக்கர்த்தம் (குற்றம்)என்றது. தூய்மையினர்த்

(க) அமல-௬.

இத்தை அங்கீகரிக்க வேணுமென்று ப்ரபதநம்பண்ணி அநுராகவிப்ர க்ருஷ்டனாய் நின்றான். த்ரவ்யஸாத்யமான வஸ்து வல்லவிறே. அஞ்ஜ லிஸாத்யமிறே. (தூமணிவண்ணன்) இவன் த்ரவ்ய ஸாத்யனல்ல னென்றறிந்து தொழுதபின்பு திருமேனியிலுண்டான ப்ரகாசம் சொல்லுகிறது. நீலரத்நம்போன்ற நிறத்தையுடையவன். (ரு)

ஸ்வா.-ஆறும்பாட்டு. (ஓதக்கடலித்யாதி) அத்யந்தம் அகாத(ஆழ) மாய் அலை எறியாநின்றுள்ள ஸமுத்ரத்தில் நீர்மையை யுடைத்தான முத்துக்களாலே சேர்க்கப்பட்ட ஒளியையுடைத்தான ஹாரமும்; முத்தாரமென்றபடி. (சாதிப்பவளமும்) முத்தின் இடையிலே நிழ லெழும்படி கலந்து கோத்த சாதியான பவளமும். (சந்தச்சரிவளை

---

அரவை- "அரா" என்னுமாபோலே, "வைஸ்ரவணன்" என்கிற வித்தை- "வயிச்சிராவணன்" என்கிறது. (தொழுதித்யாதி) இத்தை அங்கீகரிக்க வேணுமென்று அஞ்ஜலிபண்ணிக்கொண்டு அநுராகவிப்ர க்ருஷ்டனாய் நின்றான், தாலேலோ. (தூமணியித்யாதி) ஓராபரண மும் வேண்டாதபடி பழிப்பற்ற நீலரத்நம்போலே யிருக்கிற வடி வை யுடையவனே! தாலேலோ. ... ... ... ... (ரு)

அவ.—ஆறும்பாட்டு. பஸ்சிம திக்பாலகனாய் ஸமுத்ராதிபதி யான வருணன் கிஞ்சித்கரித்தபடியைச் சொல்லுகிறது.

மூ. —

ஓதக்கடலி லொளிமுத்தினாரமும்
சாதிப்பவளமும் சந்தச் சரிவளையும்
மாதக்கவென்று வருணன் விடுதந்தான்
சோதிச் சுடர்முடியாய்! தாலேலோ சுந்தரத்தோளனே தாலேலோ.

வ்யா.—(ஓதமித்யாதி) திரைக்கிளப்பத்தை யுடைத்தான கட லில் ஒளியையுடைத்தானமுத்துக்களாலே சேர்க்கப்பட்ட ஆரமும். அதுக்குப்பரபாக(சோபை)மாம்படி ஆக்கனன்றிக்கே ஜாதியானபவளப் படியும். (சந்தச்சரிவளையும்) திருக்கைக்குத் தகுதியாம்படி அழ

---

தம்(பழிப்பற்ற) என்றது. "வண்ணமென்றதினர்த்தம்(வடிவு)என்றது.(ரு)

அரு.—ஆறும்பாட்டு. (ஓதவித்யாதி) "கடலில்" என்றத்தையும், "வரு ணன்" என்றத்தையும் உட்கொண்டு இங்குவிசேஷித்ததுக்குத் தாத்பர்யம் தோன்ற அவதாரிகை யருளிச்செய்கிறார் (பஸ்சிமேத்யாதி).

ஓதமென்றதினர்த்தம் (திரைக்கிளப்பம்) என்றது. (ஆக்கனன்றிக்கே) க்ருத்ரிமமன்றிக்கே. "சந்தம்" என்று - அழகாய், இத்தையருளிச்செய்

யும்) அழகு விளங்கா நின்றுள்ள சரியும்வளையும். (மாதக்கவென்று) மஹத்துமாய் தகுதியுமாயிருக்குமென்று. (வருணன் விடுதந்தான்) வருணன் கொண்டுவந்தான். (சோதிச்சுடர் முடியாய்) ஆதிராஜ்ய ஸூசகமாய், சேஷித்வப்ரகாசகமுமாய், மிக்க ப்ரபை(ஒ)யையுடைத்தான திருவபிஷேகத்தையும், அதுக்குத் தகுதியாக அழகு விளங்கா நின்றுள்ள திருத்தோள்களையு முடையவனே! தாலேலோ. (சு)

ஸ்வா.—ஏழாம்பாட்டு. (கானாரித்யாதி) தன் நிலத்திலே வளர்ந்து தழைத்து பரிமளப்ரசுரமான திருத்துழாயாலே கட்டப்பட்ட திருமாலையும். (வானித்யாதி) வானிலே ஆர்ந்திருந்த கற்பகம்போலே செழுமை குன்றுமல் பல மரங்களுமுண்டாயிருக்கச்செய்தேயும் ஒரு

---

நிபதாயிருந்துள்ள சரிகளும் வளைகளும். (மாதக்கவித்யாதி) பெருவிலையனாய், "அங்குத்தைக்குத்தகுதியாயிருந்துள்ளவை இவை" என்று வருணன் வரவிட்டான். (சோதியித்யாதி) ஆதிராஜ்ய ஸூசகமாய் மிக்க தேஜஸ்ஸை யுடைத்தான திருவபிஷேகத்தை யுடையவனே! தாலேலோ. (சுந்தரத்தோளித்யாதி) ஆபரணங்கள் மிகையாம்படி அழகிய திருத்தோள்களை யுடையவனே! தாலேலோ. (சு)

அவ.—ஏழாம்பாட்டு. திவ்யமஹிஷிகளில் ப்ராதாந்யையான பெரியபிராட்டியார் வரவிட்ட உபஹாரத்தைச் சொல்லுகிறது.

மூ.—

கானார் நறுந்துழாய் கைசெய்த கண்ணியும்
வானார் செழுஞ்சோலை கற்பகத்தின் வாசிகையும்
தேனார் மலர்மேல் திருமங்கை போத்தந்தாள் [லோ. (எ)
கோனே அழேலழேல் தாலேலோ குடந்தைக் கிடந்தானே தாலே

வ்யா.—(கானாரித்யாதி) தன் நிலத்திலே வளருகையாலே தழைத்து பரிமளோத்தரமாயிருந்துள்ள திருத்துழாயாலே கைத்தொழில் தோன்றப்பண்ணின திருமாலையும். (வானாரித்யாதி) ஆகாசப்பரப்

---

கிறார் (திருக்கைக்கித்யாதி). இங்கே (சரிகளும்) என்றது - முன்கை சங்கு வளைகள். (வளைகளும்) என்றது - சங்கு தோள்வளைகள். ஸமுத்ராதிபதி கொடுத்ததாகையாலே சங்கென்று சொல்லவேணுமிறே. "சோதிச்சுடர்" என்ற மிமிசைக்கர்த்தம் (மிக்கதேஜஸ்ஸு) என்றது. ... ... ... (சு)

அரு.—ஏழாம்பாட்டு. (கானாரித்யாதி) "கான்" கானமென்றர்த்தமாய், இப்படி விசேஷித்துச்சொன்னதுக்குத் தாத்பர்ய மருளிச் செய்கிறார் (தன்னிலத்திலித்யாதி). வாசிகையன்றபதத்துக்கர்த்தமருளிச் செய்

மரமே ஒருதோப்பாகப்பணைப்பதான கற்பகப்பூவாலே சமைத்ததிரு வாசிகையும். (தேனுரித்யாதி) தேன்மாறுதசெந்தாமரை மலர்மேலே நித்யவாஸம் பண்ணுகிற பெரிய பிராட்டியார் வரவிட்டாள். "திரு மங்கை" என்கையாலே (க) "யுவதிஸ்ச குமாரிணீ" என்கிறபடியே பருவத்தால் இளையவளிறே. இவளிறேவரவிட்டாள். இவள் வரவிடுமதெல்லாம் அப்ராக்ருதமாயிறேயிருப்பது. அப்ராக் ருதர் கையிலேயிறே வரவிடுவதும். (கோனே) என்றது-உபய விபூ திக்கும் நிர்வாஹகனே! ஆயர் குலத்துக்கு நிர்வாஹக னென்னுதல். அழேலழேல் தாலேலோ. (குடந்தைக்கிடந்தானே) உபயவிபூதியை யும் நிர்வஹிப்பது, த்ருதீயவிபூதியிலே கண்வளர்ந்துபோலேகாணும்.

ஸ்வா.—எட்டாம்பாட்டு (கச்சித்யாதி) சாத்தின சிறுக்காம்பன்

---

படங்களும் நிறையும்படி அழகியதாய்ச் சோலை செய்து நிற்கிற கற் பகப்பூவாலே செய்த திருநெற்றி மாலையும். (தேனுரித்யாதி). தேன் மாறுத செந்தாமரை மலரின்மேலே நித்யவாஸம் செய்யாநிற்பா ளாய், (க) "யுவதிஸ்ச குமாரிணீ" என்னும் பருவத் தையுடையளான பெரிய பிராட்டியார் வரவிட்டாள். (கோனேயித் யாதி). எல்லாரும் இஞ்சித்கரிக்க வேண்டும்படி ஸர்வ சேஷியாயுள்ள வனே! அழாதேகொள், அழாதேகொள் தாலேலோ. (குடந்தையித் யாதி). அந்த மேன்மைக்கு எதிர்த்தட்டான நீர்மை தோன்றத்திருக் குடந்தையிலே கண்வளர்ந்தருளினவனே! தாலேலோ. ... (எ)

அவ.—எட்டாம்பாட்டு. பெரிய பிராட்டியாருக்கு அநந்தரம் பரிகணிதையான ஸ்ரீ பூமிப்பிராட்டி வரவிட்ட உபஹார விசேஷத் தைச் சொல்லுகிறது.

மூ.—

கச்சொடு பொற்சுரிகைக் காம்பு கநகவளை
உச்சிமணிச்சுட்டி யொண்டாள் நிரைப் பொற்பூ
அச்சுதனுக் கென்றவநியாள் போத்தந்தாள்
நச்சு முலையுண்டாய் தாலேலோ நாராயணா அழேல் தாலேலோ.

வ்யா.—(கச்சித்யாதி). திருவரையில் சாத்தின பரியட்டத்தின் மேலே கட்டுமதான கச்சோடே அதிலே சொருகத்தக்க அழகிய சுரி கையாகிற ஆயுதமும், திருவரைக்கு அநுகுணமாகச் சாத்தும் சிறுக்

---

கிரர் (திருநெற்றிமாலை)என்று. மங்கையான திருவென்றதுக்கர்த்தம் (யுவ திஸ்சேத்யாதி). (எ)

அரு.—எட்டாம்பாட்டு. (கச்சித்யாதி) "பொற்சுரிகை" அழகியதான

---

(க)

சேலையின்மேலே கட்டின கச்சிலே சொருகினபொன்னாலே சமைந்த சிறுச்சுரிகையும். (கனவளையும்) திருக்கையிலே சாத்தஸ்ப்ருஹணீய மான வளையும். (உச்சிமணிச்சுட்டி) உச்சியிலே சாத்த ரத்நாலங்கார மான சுட்டியும். (ஒண்டாள் நிரைப்பொற்பூ) அழகிய திருவடிகளிலே ஒழுங்குபடச்சாத்துகைக்குப்பொற்பூ; அன்றியேஒள்ளியதாளையுடைத்தானபூவென்னுதல். "ஒண்டார்" என்று பாடமானபோது ஒழுங்கு படத் திருமுடியில் சாத்த ஒள்ளியதாரை யுடைத்தான பொற்பூவும். (அச்சுதனுக்கென்று) ஆஸ்ரிதரை ஒருநாளும் நழுவவிடாதவ னென்னுதல்; தன்படிகளொன்றும் நழுவவிடாதவனென்னுதல். (அவனியாள் போத்தந்தாள்) ஸ்ரீ பூமிப்பிராட்டி வரவிட்டாள். (நச்சுமுலையுண்டாய்) வெறும் புறத்திலே பேய்ச்சிமுலையென்ன அமையுமிறே; அதின்மேலே நஞ்சேற்றின முலையையிறே அமுது செய்தது. (நாராயணா) நாராயணனாகையாலேயிறே ப்ரஹ்மேசாநாதிகள் உபஹார பாணிகளாய் வந்ததும். அழேலழேல் தாலேலோ. (அ)

---

காம்பன் சேலையும், திருத்தோள்களுக்கு அலங்காரமான பொன்வளையும், திருமுடியிலே சாத்துகைக்கு ரத்நாலங்க்ருதமான சுட்டியும், ஒள்ளியதாளை யுடைத்தாய் திருமுடியிலே ஒழுங்குபடச்சாத்துகைக்கிடான பொற்பூவும். (அச்சுதனித்யாதி). ஆஸ்ரிதரை ஒருகாலமும் நழுவவிடாதவனுக்கென்று ஸ்ரீ பூமிப்பிராட்டி வரவிட்டாள். (நச்சுமுலையித்யாதி). பூபா(ர)ர நிரஸநம் பண்ணுகைக்கு அடியிட்டு, பூதனையை முடிக்கைக்காக அவளுடைய நஞ்சேற்றின முலையை யுண்டவனே! தாலேலோ. (நாராயணவித்யாதி.) உபயவிபூதியிலுள்ளாரும் கிஞ்சித்கரிக்க வேண்டும்படி உபயவிபூதி நாத(த்)த்வ ஸூசகமான நாராயணசப்த வாச்யனானவனே! அழாதேகொள் தாலேலோ.

---

சூர்க்கத்தி. (சிறுக்காம்பன்சேலை) எழுத்துச்சிற்றுடை. நிரையென்றதுக்கர்த்தம் (ஒழுங்குபடச்சாத்துகை) என்றது. (ஒழுங்கு) வரிசை. கீழ்ப்பாட்டுக்களையெல்லாம் கடாக்ஷித்து நாராயண பதப்ரயோகதாத்பர்யம் (உபயேத்யாதி). ... ... ... ... ... ... ... ... (அ)

அ௫—ஒன்பதாம்பாட்டு. (மெய்யித்யாதி) ப்ரஹ்மாதிகள் கிஞ்சித்கரித்தபடியைச் சொல்லுகையாலே லீலாவிபூதியிலுள்ளாரெல்லாரும் கிஞ்சித்கரித்தபடியும், ஸ்ரீபூமிகளுடைய கிஞ்சித்காரம் சொல்லுகையால் நித்யவிபூதியிலுள்ளாரெல்லாரும் கிஞ்சித்கரித்தபடியும் அருளிச்செய்து, இப்பாட்டில் துர்க்கையினுடைய கிஞ்சித்காரத்தைச் சொல்லக்கூடுமோ? லீலாவிபூதியிலுள்ளாரோடே கூட்டியன்றோ சொல்லவடுப்பது என்ன ;உபய

ஸ்வா.—ஒன்பதாம்பாட்டு. (மெய்யித்யாதி) திருமேனியிலே மர்த்தி(ர்)க்கைக்காக சந்தந கஸ்தூரி கர்ப்பூரப்பொடியோடே மஞ்சள் பொடியும், சிவந்து புடைபரந்து நீண்ட திருக்கண்களுக்குத் தகுதியாகச் சாத்துகைக்கு அஞ்ஜநமும், திருநெற்றி அழகு பெறச் சாத்துகைக்குச் சிந்தூரமும்.

(வெய்யகலைப்பாகி) ஸ்வாதந்த்ர்ய நிபந்தநமானகலைகளை நாவிலே

---

அவ.—ஒன்பதாம்பாட்டு. அவதாரகாலத்திலே ஒக்கப்பிறந்து இத்தலையைப் பேணிப்போன பாந்த(ஸ்)வ விசேஷத்தாலே கீழ்ச் சொன்னவர்களெல்லாரிலும் வ்யாவ்ருத்தையான துர்க்கை, தன்னுடைய ஸ்நேஹாநுகுணமாகப்பண்ணின கிஞ்சித்காரத்தைச்சொல்லுகிறது.

மூ.—மெய்திமிரு நானப்பொடியோடு மஞ்சளும்
செய்ய தடங்கண்ணுக் கஞ்சநமும் சிந்தூரமும்
வெய்ய கலைப்பாகி கொண்டுவளாய் நின்றாள்
ஐயாவழேலழேல்தாலேலோ அரங்கத்தணையானே! தாலேலோ.

வ்யா.—(மெய்யித்யாதி). திருமேனியிலேமர்தி(ர்)க்கைக்கிடான சந்தந கஸ்தூரி கர்ப்பூராதி ஸுகந்தத்ரவ்ய ஸமுதாயசூர்ணத்தோடே நிறம்பெறச் சாத்தத்தக்க மஞ்சள் பொடியும், சிவந்து புடை பரந்து நீண்ட திருக்கண்களுக்குச் சாத்துகைக்குத் தகுதியான அஞ்ஜநமும், திருநெற்றியில் அழகுபெறச் சாத்துகைக்குச் சிந்தூரமும்.

( வெய்யவித்யாதி ) வெவ்விதான கலையை வாஹநமாக

---

வ்யாவ்ருத்தை யாகையாலே தனித்தருளிச் செய்தாரென்றவதாரிகையிடுகிறார் ( அவதாரேத்யாதி ). ப்ரேமபாரவஸ்யத்தாலே அவதாரகாலத்தில் உதவிக்கம்ஸன் நலிவுக்குத்தப்புவித்த அதிசயமும் ஸம்ராதுபந்த(ஸ்)மும் விசேஷமென்று புரஸ்கரித்தாரென்று திருவுள்ளம்.

திமிருபதார்த்தம் ( மர்த்திக்கை )என்றது. நானப்பொடியென்றதினர்த்தம் (சந்தநேத்யாதி). "நானம்" நாற்றம். (க) "கரியவாகிப் புடைபரந்து மிளிர்ந்து செவ்வரியோடிநீண்ட" என்ற ப்ரமாணத்தைக் கடாக்ஷித்து "தடம்" என்றதுக்கு - நீட்சியு மர்த்தமாக வருளிச்செய்கிறார் (சிவந்தித்யாதி).

. (கலையை) ம்ருகத்தை. "வெய்யகலைப்பாகி" என்கிறபதம் கர்த்ரு

---

(க) அமலன்-அ.

நின்று நடத்துகையாலே "வெய்யகலைப்பாகி" என்கிறது; அன்றியே வெவ்விய கலையை வாஹநமாகவுடைய விஷ்ணு துர்க்கை யென்னவுமாம். வெம்மை-அவளுடைய ஸ்வாதந்த்ர்யமாகவுமாம். ஐயா! அழேலழேல் தாலேலோ. (அரங்கத்தணையானே) அவதாரகந்தமான உரகமெல்லணையானை அரங்கத்தணையானிறே. (க) "தேனார் திருவரங்கம் தென்கோட்டி" என்னக் கடவதிறே. ... ... (௯)

அவ.—பத்தாம்பாட்டு. நிகமத்தில் இத்திருமொழி கற்றார்க்குப் பலம் சொல்லித் தலைக்கட்டுகிறார்.

---

வுடைய துர்க்கை(நூ)யானவள் கொண்டுவந்து அதூரவிப்ரக்ருஷ்டையாய் நின்றாள். (ஐயாவித்யாதி). ஸர்வஸ்வாமியானவனே! அழாதே கொள், தாலேலோ. (அரங்கத்தித்யாதி) அந்த ஸர்வஸ்வாமித்வத்தை நிர்வஹிக்கைக்கிடாகக் கோயிலில் திருவரவணையிலே பள்ளி கொண்டருளினவனே! தாலேலோ. அன்றிக்கே, "வெய்ய கலைப் பாகி" என்கிறது, வெம்மை -விருப்பத்துக்கு வாசகமாகையாலே ஸ்ப்ருஹணீயமான கலைகளை நாவிலே நின்று நடத்துகிற ஸரஸ்வதியைச் சொல்லுகிறதாய், அடியிலே எல்லாருக்கும் ப்ரதாநனாகச் சொல்லப் பட்ட ப்ரஹ்மாவுக்கு ப்ரதாந மஹிஷியானவள் பண்ணின கிஞ்சித் காரத்தைச் சொல்லுகிறதென்று வாக்யார்த்தமாக்கி, மேலுடைய அதுக்குச் சேர நிர்வஹிக்கவுமாம். ... ... ... (௯)

அவ.—பத்தாம்பாட்டு. நிகமத்தில், இத்திருமொழிகற்றார்க்குப் பலம் சொல்லித் தலைக்கட்டுகிறார்.

மூ.—வஞ்சனையால் வந்த பேய்ச்சி முலையுண்ட
அஞ்சநவண்ணனை யாச்சி தாலாட்டிய
செஞ்சொல் மறையவர் சேர்புதுவைப் பட்டன் சொல்
எஞ்சாமை வல்லவர்க்கில்லை யிடர்தானே. (௧0)

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.

---

வாசகபதமாகையாலே இது முந்தினதாய், அந்வயத்திலே மேல் பதங்களான "மெய்திமிரு" இத்யாதிபதங்களுக்கெல்லாம் இதுக்கநுகுணமர்த்தம் சொல்லிக்கொள்வதென்கிறார் (மேலுடையவித்யாதி). யத்வா (வாக்யார்த்தமாக்கி) என்றது - இப்பாட்டுக்கு இப்படி அவதாரிகையாக்கி என்றபடி. (மேலுடைய) என்றது - பதார்த்தமாகச் சொல்ல வேண்டுவதெல்லாமென்றபடி. ... ... ... ... ... ... ... (௯)

(க) ௩-திருவ-௬௨.

ஸ்வா.—பத்தாம்பாட்டு. (வஞ்சனையித்யாதி) ச(ஂ)க்த ரூபை யான பேச்சி முலையைத் தாய்முலைபோலே யுண்ட. (அஞ்ஜந வண்ணனை) விரோதி போகப் பெற்றோமென்று திருமேனி அஞ்ஜநம் போலே நிறம்பெற்றபடி. (ஆய்ச்சி தாலாட்டிய) யசோதைப்பிராட்டி தாலாட்டின ப்ரகாரத்தை. (செஞ்சொலித்யாதி) இவர் தத்வநிர்ணயம் பண்ணினபின்பு திருமாளிகையிலுள்ளார்க்கு அத்யந்தம் அதிகு (ஸ) ஹ்யமாயிருக்கிற வேதசாஸ்த்ரமெல்லாம் செவ்விதாய் தோற்றி இவர் திருவுள்ளத்தோடே அவர்களும் சேருகையாலே "செஞ்சொல்மறைய வர்"என்கிறது. (பட்டன்சொல்) ஆப்தவாக்யம். (எஞ்சாமை வல்லவர்க்கு) ஸாபிப்ராயமாக வல்லவர்க்கு. எஞ்சல் - சுருங்கல். (இல்லை இடர்தானே) இடரில்லை என்னாதே, "இல்லை இடர்" என்கிறார்,

---

வ்யா.—(வஞ்சனையித்யாதி). (௧) "தாயாய்வந்தபேய்" என்கிற படியே பேயான தன்வடிவை மறைத்துத் தாய்வடிவைக் கொண்டு வஞ்சித்து வந்த பூதனையுடைய முலையை, அவள் தாயாய்வந்தாப் போலே தானும் பிள்ளையாய்க்கொண்டு, தாய்முலை உண்ணுமாபோலே உண்ணுகிற்கச்செய்தே அவள் முடியும்படியாகவுண்ட. (அஞ்சன வண்ணனை), விரோதிபோகப் பெற்றோமென்னும் ஹர்ஷத்தாலே திருமேனியில் பிறந்தபுகரைச்சொல்லுகிறது. (ஆச்சியித்யாதி) மாதா வான யசோதைப்பிராட்டி தாலாட்டின படிகளை. (செஞ்சொலித்யாதி) யதாபூ(ஂ)தவாதியாகையாலே செவ்விய சொல்லை யுடைத்தான வேதத்தைத் தங்களுக்கு நிரூபகமாக வுடையவர்கள் சேர்ந்து வர்த்திக்கிற ஸ்ரீ வில்லிபுத்தூரில் ப்ராஹ்மணோத்தமரான பெரியாழ்வாரருளிச் செய்த சப்தத்தை. (எஞ்சாமையித்யாதி) ஸங்கோசமற

---

அரு.—பத்தாம்பாட்டு. (வஞ்சனையித்யாதி) "வஞ்சனையால் வந்த" என்றும், "வஞ்சனையால் முலையுண்ட" என்றும் அநுஷங்கித்து ப்ரமாணமாகத் தாத்பர்ய மருளிச் செய்கிறார் (தாயாயித்யாதி). "முலையுண்ட" என்ற வநந்தரம் "அஞ்ஜநவண்ணனை" என்றதுக்குப் பலிதம் (விரோதி யித்யாதி). (௨) "முப்பதும் தப்பாமே" என்றாப்போலே ஒருபாட்டு விடாமலென்றுதல், "இடர்போமோ, போகாதோ" என்கிற ஸம்ஶயமற என்றுதல் திருவுள்ளம்பற்றி (ஸங்கோசமற) என்றது. ... ... (௰)

ஜீயர் திருவடிகளே சரணம்.

---

(௧) தி-மொ-௧-௫-௭. (௨) திருப்பாவை-௩௰.

(க) "ஜ்ருஷ்டாவிதா-த்ருஷ்டாவிதா" (உ) "நம:-நம:" என்னுமாபோலே. ராவது - இவர் அபிமாநத்திலே ஒதுங்காமையிறே. தானே போகையாலே இல்லையென்கிறார். ... ... ... ... ... (க0)

பிள்ளைதிருவடிகளே சரணம்.

—oo✕oo—

வ்யா—தன்முகத்துப்ரவேசம். கீழேயசோதை "அழேல், அழேல்" என்ன, அழுதபடியாலே அழுகை ஆற்றுகைக்காக நிலாமுற்றத்தே கொண்டு புறப்பட்டு அம்புலியம்மானைக்காட்ட, அழுகையை மறந்து "அத்தைப்பிடித்துத்தா" என்ன; இவன் கன்றுமைக்காக "இப்போதே பிடித்துத்தருகிறேன்" என்று, இவள் "அம்புலி! வா, வா" என்று பலகாலும் அழைத்த பாசுரத்தாலே அவன் அவதாரத்திலே மெய்ப்பாடு தோன்ற லீலாரஸம் கொண்டாடுகிற ப்ரகாரத்தைக்கண்டு "நாம் வேண்டாவென்று நியமிப்போமாகில் இவன் கன்றும்; இவன்தன்னை உளுக்கிக்கொள்ளவும் வேணுமே, உளும்போது மேன்மையும் நீர்மையும் நடக்கவேணுமே" என்று இவனுடைய லீலாரஸத்தை அநு

அதிகரிக்கவல்லவர்களுக்கு ஒரு துக்கமில்லை. (க0)

பெரியஜீயர் திருவடிகளே சரணம்.

பெரியாழ்வார் திருமொழி முதற்பத்து மூன்றாந்திருமொழி முற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளே சரணம்,

## முதற்பத்து நான்காந் திருமொழி

### தன்முகத்து ப்ரவேசம்.

—oo✕oo—

அவ,—கீழிற்றிருமொழியிலே - யசோதைப் பிராட்டி அவனுடைய ஸௌஸ்வாநுகுணமாக அழுகையை மாற்றிக் கண்வளரப் பண்ணுகைக்காகச்சீராட்டிக்கொண்டுதாலாட்டினப்ரகாரத்தை தத்பா(வ்)வயுக்தராய்க்கொண்டு தாமும் அப்படி அருளிச்செய்தார்; இனிமேல், தொட்டில் பருவம்போய், தவழ்ந்து விளையாடத்தக்க பருவமான பின்பு அவன்*நிலாமுற்றத்தே போந்து தவழ்ந்து புழுதியளைவது, சந்த்ரனை யழைப்பதானப்ரகாரத்தை, அவள் அநுபவித்து அவனுக்கு

அரு. —தன்முகத்து ப்ரவேசம்.—கீழ்தாலாட்டி, இங்கே சந்த்ரனை அழைக்கைக்கு பருவக்ரமத்தைத் திருவுள்ளம்பற்றி ஸங்கதி அருளிச் செய்கிறார் (கீழித்யாதி).

(க) ரா-பா-க-எஅ. (உ) திருமந்த்ரம்.

மதிபண்ணி "விண்டனில் மன்னியமாமதீ" என்று மங்களாசாஸநபர ராய் சூழ்ந்திருந்தேத்துகிறவர்களையும் அழைக்கிறார்.

"மாமதி" என்றால் மதியையுடையவர்களைக் காட்டுமோவென்னில், (க)"விஜ்ஞாநம் யஜ்ஞம் தநுதே-விஜ்ஞாநம் யஜ்ஞம் தநுதே"(உ)"தத்குண ஸாரத்வாத் தத்வ்யபதேச:-தத்குணஸாரத்வாத் தத்வ்யபதேச:" என்கிறந்யாய

உகப்பாகச் சந்த்ரனை வரச்சொல்லித் தான் பலகாலும் அழைத்த ப்ரகாரத்தைத், தாமும் அநுபவபூர்வகமாகப் பேசி இனியராகிறார்.

பரமபதத்தில் (ங) "அவாக்யநாதர: - அவாக்யநாதர:" என்கிறபடியே பெருமதிப்பனாய் ஒருவார்த்தை சொல்லக்கடவனன்றிக்கே தன்னோடொக்க முகம்பார்த்து வார்த்தை சொல்லுகைக்கு ஒரு தத்வாந்தரமில்லாமையாலே அநாதரித்திருக்குமவன், லீலாவிபூதியிலே ஸம்ஸாரி ஸம்ரக்ஷணார்த்தமாகத் தன் இச்சையாலே இதரஸஜாதீயனாய் வந்தவதரித்து அவதாரத்தில் மெய்ப்பாடு தோற்ற சைசவாத்யவஸ்த்தைகளை அடைந்து தத்ததவஸ்த்தாநுகுணமாகச்செய்த சேஷ்டிதாதிகளை அநுஸந்தித்தால் *மயர்வற மதிநல மருளப்பெறுகையாலே அவன்மேன்மையையும் நீர்மையையும் தெளியக்கண்டவர்கள் அதிலே வித்த(த்)ராய் அநுபவிக்கச்சொல்லவேண்டாவிறே. மற்றுமுள்ள ஆழ்வார்களையும்போலன்றிக்கே இவ்வவதார விஷயத்தில் அதிப்ரேமாதிசயத்தாலே கோ(ஸ்ரீ)பஜந்மத்தை ஆஸ்த்தாநம்பண்ணி, இவ்வவதாரரஸமெல்லாம் அநுபவிப்பதாக இழிந்தவிவர் அவனுடைய பாலசேஷ்டிதங்களில் ஒன்றும் நழுவவிடாரிறே; ஆகையாலே, அவன்

பிற்பாடரான ஆழ்வாருக்குத்தத்காலம்போலேதத்பா(பா)வயுக்தராய்க்கொண்டு பரத்வ ஸௌலப்யங்களைக் கண்டு வித்த(த்)ராய்அநுபவிக்கக்கூடுமோவென்ன வருளிச்செய்கிறார் (பரமபதத்திலித்யாதி). (ங) "ஸர்வமிதமப்யாத்த:- ஸர்வமிதமப்யாத்த:" என்றதால் வந்த பெருமதிப்பால் அவாகித்வமும், அநாதரத்வமுமென்று திருவுள்ளம்பற்றி எடுத்த ஶ்ருதிக்கர்த்தமருளிச்செய்கிறார் (பெருமதிப்பனாயித்யாதி). (மெய்ப்பாடு) யாதார்த்த்யம். மற்றை ஆழ்வார்களைப்போலே இவரும் மயர்வற மதிநலமருளப்பெற்றவராகையாலே வித்த(த்)ராய் அநுபவித்தாரென்று தாத்பர்யம். ஆனால்அவர்களைப்போலே ஒரோ சேஷ்டிதத்தை அநுபவியாமல் அவதாரமே தொடங்கி எல்லாசேஷ்டிதங்களையும் அநுபவிப்பானென்னென்னவருளிச்செய்கிறார் (மற்றுமுள்ளவித்யாதி).

(க) தை-ஆ-டு. (உ) ப்ரஹ்மஸூ-ரு-உ-ங-உக. (ங) சாந்தோ-ங-கச-உ.

த்தாலே காட்டுமிறே. மங்களாசாஸந பரராயிருக்கிற திருவடியும் பெருமாள் திருவுள்ளம் கன்றுமைக்காக "இவ்வஸ்துவை உண்டாக்கிப்பரியவேணுமென்று திருவுள்ளத்திலே ஓடுகிறதனறோகார்யம், கடுக அழைத்தருளீர்" என்றானிறே. மங்களாசாஸநந்தான் அவன் யாதொன்றிலே உற்றகாலத்து அங்கு ரஸிக்கவும் வேணும்; அதுகார்யமன்றாகில் விலக்கவும் வேணும். கார்யமன்றென்ன வொண்ணாதே; இது அவதாரகாலத்தில் மெய்ப்பாடாகையாலே.

"மன்னியமாமதியைப் பிடித்துத்தா" என்று அவன் சொல்லி ஆசரிக்கையாலே "ஆசார்ய முகத்தாலே ஆர்க்கும் ஜ்ஞாநமுண்டாக வேணும்" என்று காட்டுகிற தென்னவுமாம். ஆசார்யன்றானும் மன்னிய மாமதியுடையவர்களையும் அழைத்துக்காட்டுமிறே.

அவ.—முதற்பாட்டு. "நான் உனக்கு அம்புலியம்மானைப்பிடித்துத் தருகிறேன்" என்று ஸ்த்தலாந்தரத்திலே கொண்டுபோய்வைக்க, அங்கே புழுதியைக் கண்டவாறே "அத்தை அளைந்து விளையாடுவது, பூர்வஸ்ம்ருதியாலே அத்தைப் பிடித்துத் தரவேணும்" என்பதான ப்ரகாரத்தை அருளிச்செய்கிறார். *

வ்யா. — (தன்முகமித்யாதி) தவழ்கையாலே உச்சிமணிச்சுட்டி முன்னேதூங்கத் தூங்க, தவழ்ந்துபோகையாலே திருவரையிலே

---

புழுதியளைவது சந்த்ரனை அழைப்பதான சேஷ்டிதங்களைத் தத்காலத்தில் யசோதைப் பிராட்டி அநுபவித்தாப்போலே தாமும் அநுபவித்துப் பேசுகிறார். *

மூ.—தன்முகத்துச்சுட்டித் தூங்கத்தூங்கத் தவழ்ந்துபோய்
பொன்முகக் கிண்கிணியார்ப்பப் புழுதியளைகின்றான்
என்மகன் கோவிந்தன் கூத்தினை யிளமாமதீ !
நின்முகம் கண்ணுளவாகில் நீயிங்கே நோக்கிப் போ. (க)

வ்யா.—முதற்பாட்டு. (தன்னித்யாதி) வெறும்புறத்திலே ஆலத்தி வழிக்கவேண்டும்படியான தன் திருமுகத்திலே அழகுக்கு உடலாக நாலும்படி கட்டின சுட்டியானது தவழுகைக்காகத்திருமுடியை நாற்றுகையாலே பலகாலும் அசையும்படியாகவும், திருவரையிலே

---

அரு.—முதற்பாட்டு. (தன்முகத்தித்யாதி) "தன்முகம்" என்று விசேஷித்ததுக்குத் தாத்பர்யம் (வெறும்புறத்திலித்யாதி). (நாலும்படி) தொங்கும்படி. (நாற்றுகை) சாய்க்கை. "தூங்கத்தூங்க" என்றவநந்தரம் "பொன்முகக்கிண்கிணியார்ப்ப" என்றந்வயித்து அர்த்தமருளிச்செய்கிறார் (திரு

பெரியாழ்வார் திருமொழி, க-ப, ச-தி, உ-பா, என்சிறுக்குட்டன். ஏக

சாத்தின கிண்கிணித்வநிக்க, புழுதி அளைகின்ற ப்ரகாரத்தைக் கண்டு ப்ரியப்பட்டு "என்மகன் கோவிந்தன்" என்று, இவன் விளையாடுகிறதை "நோக்கிப்போ, நோக்கிப்போ" என்ன; அவன் நோக்காமையாலே, உன் முகத்தில் கண்ணுளவாகில் கண்படைத்த ப்ரயோஜநம் பெற நீ இங்கே நோக்கிப்போவென்கிறார். நோக்காமைக்கடி உன்னுடைய அத்யந்தவைரூபவமிறே. (க) "கதிர்ஞான மூர்த்தியனாய்" (உ) "உனக்கொன்றுணர்த்துவன் நான்" என்னுமாபோலே நித்யவிபூதியிலும் த்ருதீயவிபூதியிலுமுண்டான ஜ்ஞாநவிசேஷங்கள் தமக்கு விதேயமாகையாலே அவற்றை அழைத்து இவனுக்கு உணர்த்துகிறார். அழைக்கையாவது - அங்குத்தை படிகளைத் தம்முடைய திருவுள்ளத்திலே சேர்த்து உபதேசிக்கையிறே. அன்றிக்கே அவதாரத்திலே மெய்ப்பாடு தோன்ற அவன் நடத்துகிற லீலாரஸத்தைத்தாமும் கொண்டாடுகிறாரென்னவுமாம். ... ... ... ... ... ... (க)

---

சாத்திக்கிடக்கிற அழகிய முகத்தையுடைத்தான கிண்கிணியானது த்வநிக்கும்படியாகவும் தவழ்ந்துபோய்ப் புழுதியளையா நின்றான். "பொன்முகக்கிண்கிணி" என்றது - சேவடிக் கிண்கிணி யென்கிற பாதச்சதங்கையாகவுமாம். அதிறே தவழும்போது மிகவும் சப்திப்பது. (என்மகனித்யாதி). என் பிள்ளையான கோவிந்தனுடைய மநோஹாரிசேஷ்டிதத்தை. (இளமாமதி) இத்தைக்கண்டுகொல் தாழ்ந்து நிற்கவேண்டியிருக்க, அது செய்யாதே போகிற அதிமுக்த(ஃ)னை சந்த்ரனே! "இளமாமதி" என்றது - இளமையால் மிக்க மதியென்றபடி. (நின்முகமித்யாதி) உன்னுடைய முகத்தில் கண்ணுண்டாமாகில் கண்படைத்த ப்ரயோஜநம் பெறும்படி நீ இங்கே பார்த்துப்போ. ..., (க)

மூ.—என் சிறுக்குட்ட னெனக்கோரின்னமு தெம்பிரான்

தன்சிறுக்கைகளால் காட்டிக்காட்டி யழைக்கின்றான்

---

வரையிலித்யாதி). இரண்டாமர்த்தத்துக்கு அர்த்தஸ்வாரஸ்ய முண்டென்று நியாமகம்காட்டுகிறார் (அதிறேயித்யாதி). "கூத்திலே" என்றதினர்த்தம் - மநோஹாரிசேஷ்டிதத்தை) என்றது. இளமை சொன்னதுக்கு ஹார்த்த(ரூ) பா(வ)வம் (இத்தையித்யாதி). ஆனால் "மாமதி" என்னக்கூடுமோவென்ன வருளிச்செய்கிறார் (இளமாமதியித்யாதி). ... ... ... ... (க)

---

(க) தி-வாய்-க-உ-அ. (உ) தி-வாய்-க-உ-கு.

ஸ்வா.—இரண்டாம்பாட்டு. (என்னித்யாதி) என்னுடைய சிறுப்பிள்ளை. (எனக்கோரின்னமுது) அந்த அம்ருதத்தில் வ்யாவ்ருத்தி. (எம்பிரான்) எனக்குப் புத்ரனாய் என் மலடு நீங்க அவதரித்த மஹோபகாரகன். (தன்னித்யாதி) தனக்குத்தகுதியான சிறுக்கைகளாலே பலகாலும் காட்டிக்காட்டி அழைக்கின்றான். (அஞ்சநமித்யாதி) என்சிறுக்குட்டனான அஞ்ஜநவண்ணனுடனேயோடே மாமதியான நீயும் விளையாட அறுதியிட்டாயாகில். (மஞ்சில் மறையாதே) மேகத்தில் சொருகாதே. (மாமதி மகிழ்ந்தோடிவா) முற்பட "இளமதி" என்று, இப்போது "மாமதி" என்கையாலே காலக்ருத பரிணாமம் தோற்றுகிறது. அபிமத விஷயத்திலே ஓடிச் செல்லுமாபோலே மகிழ்ச்சியோடே ஓடிவா வெனகிறார். ... ... (உ)

---

அஞ்சந வண்ணனோ டாடலாட வுறுதியேல்
மஞ்சில் மறையாதே மாமதீ! மகிழ்ந்தோடிவா. (உ)

வ்யா—இரண்டாம்பாட்டு. (என்சிறுக்குட்டன்) என்னுடைய சிறுப்பிள்ளை. (எனக்கோரின்னமுது) தன் பருவத்தாலும் சேஷ்டிதங்களாலும் அத்விதீயமாய் இனிதான அம்ருதம்போலே எனக்கு ரஸாவஹனானவன். (எம்பிரான்),எனக்குப்புத்ரனாய்வந்தவதரித்தும், தன் சேஷ்டிதங்களை யெல்லாம் அநுபவிப்பித்தும், இப்படியே எல்லாப்படியாலும் எனக்குஉபகாரகனானவன். (தன்னித்யாதி) தனக்குத் தகுதியான சிறுக்கைகளாலே பலகாலும் உன்னைக்காட்டி அழையாநின்றான். (அஞ்சனமித்யாதி) கண்டவர்கள் கண்குளிரும்படி அஞ்ஜநம்போலே யிருக்கிற திருநிறத்தை யுடையனான இவனோடே விளையாடலாட வேண்டுதியாகில். (மஞ்சிலித்யாதி) மேகத்திலே சொருகி மறையாதே; வடிவாலும் குளிர்த்தியாலும் ஶ்லாக்யனான சந்த்ரனே! "நம்மை அழைக்கப்பெற்றோமே" என்று உகந்து ஆதரம் தோற்றக் கடுக நடையிட்டுவா. ... ... ... ... ... (உ)

---

அரு—இரண்டாம்பாட்டு. (என்னித்யாதி)"குட்டன்" என்றபதத்தையும் "காட்டிக் காட்டி அழைக்கின்றான்" என்ற பதத்தையும் கடாக்ஷித்துத் தாத்பர்யமருளிச் செய்கிறார் (தன்பருவத்தாலுமித்யாதி). "என்சிறுக்குட்டன் சிறுக்கைகளால் காட்டிக் காட்டி அழைக்கின்றான்" என்றத்தைத் திருவுள்ளம்பற்றி "எம்பிரான்" என்றதுக்கும் தாத்பர்யமருளிச் செய்கிறார் (எனக்குப் புத்ரனாயித்யாதி). "ஆடல்"-விளையாடல். ... ... (உ)

அவ.—மூன்றும்பாட்டு. பிள்ளைமுகத்தில் குளிர்ச்சிக்கு சந்த்ரன் குளிர்ச்சி ஒவ்வாதென்கிறார்.

ஸ்வா.—(சுற்றுமித்யாதி) ப்ரபா(பூ)வானுன ஒளிவட்டம்சுற்றுமெங்கும் சோதிபரந்து சூழ்ந்து. (எத்தனை செய்யிலும்) உயரத்தில் நின்று போக்குவரத்துச்செய்து திரியிலும். (என்மகன்முகம் நேரொவ்வா) என்மகன் முகத்தில் குளிர்ச்சிக்கும் ப்ரஸந்நதைக்கும் நேரொவ்வா. (வித்தகன்) ஸாமர்த்யமும் ஸர்வகாரணத்வமு முடையவன். (வேங்கடவாணன்) திருமலையிலே நித்யவாஸம் செய்கிற ஸுலபன். * கானமும் வானரமுமானவற்றுக்கு முகம்கொடுத்து உன்னை அநாதரித்திறே அவன்வாய்திறவாதிருக்கிறது; ஆயிருக்கநீ அவன்அழைக்கவும்

மூ.—சுற்று மொளிவட்டம் சூழ்ந்து சோதிபரந்தெங்கும்
எத்தனை செய்யினு மென்மகன் முகம் நேரொவ்வாய்
வித்தகன் வேங்கடவாண னுன்னைவிளிக்கின்ற
கைத்தலம் நோவாமே யம்புலீ! கடிதோடிவா. (௩)

வ்யா.—மூன்றும்பாட்டு. (சுற்றுமித்யாதி) ஒளியை யுடைத்தான மண்டலமானது அக்ஷயமாய்க்கொண்டு சுற்றும் சூழ்ன்று அகளங்கமாய்க்கொண்டு இடமெங்கும் தேஜஸ்ஸாலே வ்யாப்தமாய் எல்லாம் செய்தாலும். (என்மகனித்யாதி) என்மகனுடைய ஸுவ்ருத்தமாய் ஜ்யோதிர்மயமான முகத்துக்கு ஸர்வதா ஸத்ருமாகமாட்டாய். (வித்தகனித்யாதி) அழகாலும் குணசேஷ்டிதங்களாலும் விஸ்மயநீயனாய், துர்மாநிகளான உன்போல்வாரை அநாதரித்து (க) * கானமும் வாநரமுமான வற்றை ஆதரித்துக்கொண்டு திருமலையிலே வர்த்திக்கிற

அரு—மூன்றும்பாட்டு. (சுற்றுமித்யாதி) "ஒளிவட்டம் சூழ்ந்து எங்கும் சோதிபரந்து எத்தனை செய்யிலும்" என்றநுவதித்து அர்த்தமருளிச்செய்கிறார் (ஒளியையித்யாதி). "சுற்றும் சூழ்ந்து" என்றதால் பலிதம் (அக்ஷயமாய்க்கொண்டு) என்றது; பூர்ணமாயென்றபடி. "எங்கும்பரந்து" என்றதால் பலிதம் (அகளங்கமாய்க்கொண்டு) என்றது. "என்மகன் முகம்-வேங்கடவாணன் விளிக்கின்ற" என்றபதங்களைக் கடாக்ஷித்து "வித்தகன்" என்றதுக்கர்த்தம் (அழகாலுமித்யாதி). அதிகாரிபுருஷர்களாகையாலே துர்மாநித்வம்பலிதம். "கைத்தலம் நோவாமே" என்கையாலே பலி

(க) ச-திரு-சஎ.

பெற்று வாராதிருக்கிறாயிறே. (உன்னை யித்யாதி) உன்னைக்குறித்து அழைக்கிற திருக்கைத்தலம் நோவாமே அம்புலீகடிதோடிவா. (௩)

வ்யா.—நாலாம்பாட்டு. (சக்கரக்கையனித்யாதி) திருக்கையிலே *கருதுமிடம்பொருதும் திருவாழியையுடையவன். இடமுடைத்தான திருக்கண்ணாலே முழுநோக்காகப் பார்த்து மத்ய(ஷீ)மாங்கத்திலே யிருந்து உன்னையேகுறித்துக்காட்டும். (தக்கதறிதியேல்) கண்படைத் தாயாகில் இத்தைக்காண்; கண்ணுக்குந் தகுதி இவனைக்காண்கைகாண். (சந்திரா சலம்செய்யாதே) எல்லாருக்கும் ஆஹ்லாதகரனாயிருக்கிற நீ இவனுக்கு வெறுப்புச்செய்யாதே. (மக்களித்யாதி) நபும்ஸகத்வ

---

வன். உன்னை ஆதரித்து அழைக்கிற திருக்கைத்தலம் நோவாதபடி யாக அம்புலீ! மிகவும் விரைந்தோடிவா. ... ... ... (௩)

மூ.—சக்கரக்கையன் தடங்கண்ணால் மலரவிழித்து
ஒக்கலைமேலிருந்துன்னையே சுட்டிக்காட்டுங்காண்
தக்கதறிதியேல் சந்திரா! சலம்செய்யாதே
மக்கள்பெறாத மலடனல்லையேல் வாகண்டாய். (௪)

வ்யா.—நாலாம்பாட்டு. (சக்கரக்கையன்) (க) * கருதுமிடம் பொரும் திருவாழியைக் கையிலே யுடையவன். இத்தால் - நீ வாரா தொழிந்தால் உன்னை சிக்ஷிக்கைக்கீடான பரிகரமுடையவனென்கை. (தடங்கணித்யாதி) இடமுடைத்தான திருக்கண்களாலே உன்னள வில் ப்ரீதிதோற்ற மலரப்பார்த்து. (ஒக்கலைமேலிருந்து) என்னு டைய மருங்கிலே யிருந்து. (உன்னையித்யாதி) வேறொன்றில் கண் வையாதே உன்னையே குறித்துக்காட்டுங்காண். (தக்கதறிதியேல்) உனக்குத்தகுதியானது அறிதியாகில். (சந்திரா சலம் செய்யாதே) எல்லார்க்கும் ஆஹ்லாதகரனாயிருக்கிற நீ இவனுக்கு வெறுப்புச் செய்யாதே. (மக்களித்யாதி) பிள்ளைகள் பெறாத வந்த்ய(ஷீ)

---

தம் (ஆதரித்து) என்றது. "விளிக்கின்ற" என்றதினர்த்தம் (அழைக்கிற) என்றது. ... ... ... ... ... ... ... ... (௩)

அரு—நாலாம்பாட்டு. (சக்கரக்கையனித்யாதி) "ஆழி கொண்டு உன்னை யெறியும்" என்றத்தை உட்கொண்டருளிச் செய்கிறார் (இத்தா லித்யாதி). "சுட்டி" என்றதினர்த்தம் (குறித்து) என்றது. (உ) "சந்த்ர ஆஹ்லாதநே" என்கிற தா(தூ)துவைப்பற்ற வருளிச் செய் கிறார் (எல்லார்க்கு மித்யாதி). (வெறுப்புச் செய்யாதே) என்றது-இவனு க்கு வெறுப்புண்டாம்படி செய்யாதேயென்றபடி. (வெறுப்பு) கோபிக்கை.

---

(க) தி-வாய்-கo-௬-அ. (உ) ப்வாதி.

றும் பலமெல்லேயேல் வா. ஒன்றுபெற்று பலகாலாறு முண்டுபோலே காணும். ... ... ... ... ... ... (௪)

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (அழகியவித்யாதி) அழகு விளங்காநின்றுள்ள திருப்பவளத்திலே ஊறுகின்ற வாக (?) ம்ருதத்தோடே கூடி, உருத்தெரியாததாய், முற்றுமழலையான இளஞ்சொல்லாலே உன்னை அழைக்கின்றான். கொடுத்தார் கொடுத்தார்முலைகளும் உண்டு, எடுத்தாரெடுத்தாரோடெல்லாம் சீர்மைதோன்றச் சிரித்து உறவாடியிருப்பானான ஸர்வாதிகன் அழைக்க அழைக்க நீ போவதியாகில். (நின் செவிபுழையிலவாகாதே) புழை-ஸுஷிரம். உன்னுடைய ப்ரா

---

ணல்லவாகில் வந்துகொடுநில் கிடாய். ... ... ... (௪)

மூ.—அழகிய வாயிலமுதவூறல் தெளிவுறா
மழலைமுற்றாத இளஞ்சொல்லாலுன்னைக் கூவுகின்றான்
குழகன்சிரீதரன் கூவக்கூவ நீபோதியேல்
புழையிலவாகாதே நின்செவி புகர்மாமதீ. (௫)

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (அழகியவித்யாதி) அழகிய திருப்பவளத்திலே ஊறுகின்ற ஜலமாகிற அம்ருதத்தோடேகூடி உருத்தெரியாததாய் மழலைத்தனத்துக்குள்ள முற்றுதல்தானுமின்றிக்கேயிருக்கிற இளஞ்சொல்லாலே உன்னையழையாநின்றான். (குழகன்) கொடுத்தார் கொடுத்தார் முலைகளெல்லாமுண்டு, எடுத்தா ரெடுத்தாரோ டெல்லாம் பொருந்தியிருக்கும் கலப்புடையவன். (சிரீதரன்) கீழ்ச்சொன்ன சீர்மைக்கு எதிர்த்தட்டான மேன்மையையுடையவன். ஸ்ரீதரத்வம் ஸர்வாதிகத்வ ஸூசகமிறே. (கூவக்கூவ நீபோதியேல்) ஒருகால்போலே பலகாலும் அழையாநிற்க, கேளாதாரைப்போலே நீ போவதியாகில். (புழையித்யாதி) உன்னுடைய செவித்துளையிலவாகாதோ. புழை-

---

அரு.—அஞ்சாம்பாட்டு. (அழகியவித்யாதி) "தெளிவுறா" என்றதுக் கர்த்த மருளிச் செய்கிறார் (தெரியாததாய்) என்றது; அக்ஷரம் வ்யக்தமாகத் தெரியாத சொல்லென்றபடி. (மழலைத்தனத்துக்கு) - அவ்யக்ததைக்கு. (முற்றுதல் தானும்) பரிபாகாதிக்யம் தானும். "குழகன்" ஸம்ஶ்லேஷணஶீலனென்று சப்தார்த்தம் திருவுள்ளம்பற்றி, அத்தை உபபாதித்துக்கொண்டு தாத்பர்ய மருளிச் செய்கிறார் (கொடுத்தாரித்யாதி). "நின்செவி-புழையிலவாகாதே" என்றவயித்து அர்த்தமருளிச் செய்கிறார் (உன்னுடைய வித்யாதி). "செவித்துளை" என்றது-ஶ்ரவணேந்த்ரியத்தை

வணேந்த்ரியத்துக்கு ப்ரயோஜநமில்லையாகாதோ? (புகர்மாமதீ) உன்னுடைய ப்ரகாசம் லோகப்ரஸித்தமன்றோ? ... ... (ரு)

வ்யா.—ஆறும்பாட்டு. (தண்டித்யாதி) ஆயுதகோடியிலும் ஆபரண கோடியிலுமாயிருக்கிற ஸ்ரீபஞ்சாயுதங்களை இடமுடைத்தான திருக்கையிலேயுடையவன். "ஏந்தும்" என்கையாலே போக (த்²ர)

---

ஸ்வாஷிரம். உன்னுடைய ஸ்ரவணேந்த்ரியத்துக்கு ப்ரயோஜநமில்லையாகாதோவென்கை. (புகர் மா மதீ). உன்னுடைய தேஜஸ்ஸுக்கும் பெருமைக்கும் போருமோ இது. ... ... ... * (ரு)

மூ.—தண்டொடு சக்கரம் சார்ங்கமேந்தும் தடக்கையன்
கண்டுயில்கொள்ளக் கருதிக்கொட்டாவி கொள்கின்றான்
உண்டமுலைப் பாலறாகண்டாயுறங்கா விடில்
விண்டனில் மன்னிய மாமதீ! விரைந்தோடிவா. (சு)

வ்யா.—ஆறும்பாட்டு. (தண்டித்யாதி) கதை (X²) யும் திருவாழியும் ஸ்ரீசார்ங்கமும். மற்றவிரண்டுக்கும் உபலக்ஷணம். (ஏந்தும் தடக்கையன்) இவற்றை, பூ ஏந்தினாப்போலே ஸர்வகாலமும் தரித்துக்கொண்டிருக்கும் இடமுடைத்தான திருக்கைகளை யுடையவன். இவைதான் ஆபரண கோடியிலும் ஆயுதகோடியிலுமாயிறே யிருப்பது. இத்தால் - இவ்வழகை அநுபவித்து வாழலாயிருக்க, இவற்றின்வீர்யத்துக்கு இலக்காய்முடிந்துபோகாதே கொள்ளென்கை.

---

இல்லையாகில் பதி(பதி)ரனுக்கும் துளையுண்டிறே. (ஸ்வாஷிரம்) துளை. கூவக் கூவப்போனல் ஸ்ரவணேந்த்ரிய மில்லாதே போகக்கூடுமோ வென்ன வருளிச்செய்கிறார் (உன்னுடைய ஸ்ரவணேத்யாதி). (இது) என்றது—கூவக்கூவப்போகையென்கை. க்ருஷ்ணன் கண்கொண்டு கண்டநுபவியாமல் நீ போனல் உன்னுடைய காந்தியும் ஆதிக்யமும் வ்யர்த்தமென்று கருத்து. ... ... ... ... ... ... ... (ரு)

அரு—ஆறும்பாட்டு. (தண்டித்யாதி) "இந்தமூன்றே" என்கைக்கு நியாமகமில்லாமையாலே அருளிச்செய்கிறார் (கதை(X²)யுமித்யாதி). பிடிக்குமென்னாதே "ஏந்தும்" என்கைக்குத் தாத்பர்யம் (இவற்றையித்யாதி). வர்த்தமாநார்த்தம் (ஸர்வகாலமும்) என்றது. இவை ஆயுதங்களாயிருக்க பூ ஏந்தினாப்போலே அழகுக்குடலாயிருக்குமோ வென்ன வருளிச் செய்கிறார் (இவைதானித்யாதி). இவ்விசேஷணம் "விரைந்தோடிவா" என்றதுக்கு ஹேதுவென்று தாத்பர்ய மருளிச் செய்கிறார் (இத்தாலித்யாதி).

ரூபமாய் பூவேந்திறைப்போலே யிருக்கை. (கண்டுயிலித்யாதி) நித்ரை கொள்வானாகக் கருதினதுக்கு ஸூசகமிறே கொட்டாவி. எல்லாருடைய கருத்துக்களையும் குலைத்துவருகிற நித்ரை இவன் கருதுதவின் வசமாகையாலே; இவன்வ்யாபாரங்களெல்லாம் இப்படியிறே. (உண்டவித்யாதி) "நான்வந்து முகம் காட்டுமளவும் உறங்காமல் நோக்கவொண்ணாதோ" என்று நினைத்திருக்கிறாயாகில், உண்டமுலைப்பால் ஜரிக்கும்போதும் உறங்கவேணுமிறே. ஜரிக்கையாவது- "நம்முடைய வசநபரிபாலநம் செய்யார்களாகில் ஸங்கல்பந்தன்னிலே கிடக்கிறார்கள்" என்று இழவோடே நசைஅறுகையிறே. உறக்கமாவது-லீலாரஸவ்யாபாரங்களில் நிர்ப்ப(ப்ப)ரத்வமிறே. (க) "[illegible]-அநஶ்நந்" என்றால், இவன் இங்கே ஒன்றை புஜிக்கக்கூடுமோ வென்னில்? (உ) "[illegible]-அஶ்நாமி" என்றும் சொன்னானிறே. (விண்டனிலித்யாதி) ஸம்ஸாரிகளுடைய போக(போக்ய) வ்யாபாரங்களில் அவன் ஸ்வகரணநியமநம் செய்திருக்கிறப்போலே, நாமும் அவனுடைய லீலாரஸவ்யா பாரங்களைக் கண்டநுபவிக்க,"வாருங்கோள்"என்றுத்ரிபாத்விபூதியிலே ஒருப்பட்ட ஜ்ஞாநமுடையவர்களை அழைக்கிறார்.

"மாமதி" என்றது - பக்தி (பக்தி) யை. ஜ்ஞாநபரப்த வாச்யையுமாயிறே ப(ப)க்திதானிருப்பது. பிள்ளையுறங்காவில்லிதாஸரை "மஹாமதிகள்" என்றிறே எம்பார் போல்வார் அருளிச்செய்வது. விரைந்தோடி வாருங்கோள். "மாமதி" என்று ஜாத்யேகவசநம். (சு)

(கண்டுயிலித்யாதி) கண்வளர்ந்தருளுவதாக நினைத்து, அதுக்கு ஸூசகமாகக் கொட்டாவி கொள்ளாநின்றான். (உண்டவித்யாதி) கண்வளர்ந்தருளாதொழியில், அமுதசெய்த முலைப்பால் ஜரியாது கிடாய். ஆனபின்பு (விண்டனில் மன்னியமாமதீ விரைந்தோடிவா) உச்சஸ்த்தலத்திலே வர்த்தியாநிற்பானாய் வடிவில் பெருமையையுடையனா யிருக்கிற சந்த்ரனே! உன்னுடைய உயர்த்திக்கும் பக்வதைக்கு மீடாக ஸத்வரனாய்க்கொண்டு ஓடிவா. ... ... ... ... (சு)

"உறங்காவிடில் உண்டமுலைப்பாலறு கண்டாய்" என்றந்வயித்து அர்த்தம் (கண்வளரவித்யாதி). "விண்டனில் மன்னிய" என்றதையும் "மா" என்றதையும் விரைந்தோடிவருகைக்கு ஹேதுவாக்குகிறார் (உன்னுடைய வித்யாதி). (பக்வதை) பூர்ணமாகை. ... ... ... (சு)

(க)ப்வேதா-ச-சு. (உ) கீ.கூ.உசு.

அவ.—ஏழாம்பாட்டு. உறங்கக்கருதினவன் உறங்கியபோதே உணர்ந்து, பூர்வஸம்ருதியாலே “அம்புலியைப்பிடித்துத்தா” என்ன; பலகாலும் அழைக்க நீ வாராமையாலே கோபிக்கவுங்கூடும்; கடுகவாவென்கிறாள்.

ஸ்வா.—(பாலகனித்யாதி) “சிறுப்பிள்ளை” என்று பரிபவித்து விஷ்ணுபடராலே நலிவுபடாதேகொள். பலவிடங்களிலும் உன் பரிபவத்தைப் போக்கினவனன்றோ இவன். அவன் யாதொரு ஜந்மத்திலே தாழநின்றாலும் உனக்கு உத்தேஸ்யரான ப்ரஹ்மேஸாநாதிகளுக்கும் வரவேண்டியிறே யிருப்பது இவனழைத்தால். (பண்டித்யாதி) முன்பே ஒருகாலத்திலே வடதளசாயியுடைய அகடிதம் கேட்டறியாயோ? அவனென்றிராய் இவனை. இவன் கோபிக்குமாகில் உனக்குமேலே எழப்பாய்ந்து உன்னையும் கைக்கொள்ளும். இதில்

மூ.—பாலகனென்று பரிபவஞ்செய்யேல் பண்டொருநாள்
ஆலினிலைவளர்ந்த சிறுக்கனவனிவன்
மேலெழப்பாய்ந்து பிடித்துக்கொள்ளும் வெகுளுமேல்
மாலைமதியாதே மாமதீ மகிழ்ந்தோடிவா. (எ)

வ்யா.—ஏழாம்பாட்டு. (பாலகனித்யாதி) “இவன் சிறுப்பிள்ளையன்றோ” என்று பருவத்தைப்பார்த்துக் குறைய நினைக்கையாகிற பரிபவத்தைப் பண்ணாதே கொள். (பண்டொரு வித்யாதி) முன்பொருகாலத்திலே ஜகத்தையடையத் திருவயிற்றிலே வைத்து, ஒரு பவனை ஆலந்தளிரிலே கண்வளர்ந்த சிறுப்பிள்ளையானவன் இவன்காண். அந்த அகடிதக(ஃ)டநா ஸாமர்த்த்யமெல்லா முடையவனென்கை. (மேலெழவித்யாதி) இவன் சீறுமாகில் மேலே எழக்

அரு.—ஏழாம்பாட்டு. (பாலகனித்யாதி) பரிபவம் பண்ணாதேயென்கைக்கு ப்ரஸக்தி ஏதென்கிற சங்கையிலே சப்தார்த்தம் (இவனித்யாதி). (பவனை) என்றது- “பவ்-(ப4வ) ஆ” என்னும்-உண்டாகாநிற்கிற என்றர்த்தமாய், முகிழ்விரியாநிற்கிற தளிரென்றபடி. பலிதார்த்தம் (அந்தவகடிதேத்யாதி). இதுப்ரிபவம் செய்யாமைக்கும், பிடித்துக்கொள்ளுகைக்கும் ஹேதுவென்று திருவுள்ளம். “இவன்” என்றத்தை மேலுமநுஷங்கித்து “வெகுளுமேல் மேலெழப்பாய்ந்து பிடித்துக் கொள்ளும்” என்றந்வயித்தர்த்தமருளிச்செய்கிறார் (இவனித்யாதி). “வெகுளும் சிறுபாலகன்”

ஸம்ப்ரயமில்லை. (க)"ஜன்மஸிதிபித்யாதி". அடிபட்டது கைப்பட அரிதோ? (மாலைமதியாதே) இவனுடைய வ்யாமோஹத்தைப் பாராதே, நீ "ஆஞ்ஞாபரிபாலகம் பண்ணுகிறவர்க்கு த்வத்தாலே தாழ்த்துவருகிறோம்" என்றிரே. அவன்வ்யாமோஹத்துக்கிடாக "நம்மை அழைக்கப் பெற்றோம்" என்று மகிழ்ந்து கடுக ஓடிவா. ... ... ... (எ)

வ்யா.—எட்டாம்பாட்டு. (சிறியனித்யாதி) "இதுக்குமுன்பு சிறியனான திசைகளில் எழப்பாய்ந்ததுண்டோ?" என்று நினைக்கிறாயாகில், அவன் சிறுமைப்பெருமை அறிந்திலை. மஹாபலி, பாதாளலோகத்திலே கர்மபா (ஶ) வனையாலே வந்த ஔதார்யச் செருக்குப் போய், ப்ரஹ்மபா (ஶ) வனையோடே யிருக்கிறான். அங்கே சென்று கேட்டுக்கொள். என்னிளம் சிங்கத்தைச் சிறியனென்றிகழாதே

---

குதித்து உன்னைப்பிடித்துக்கொள்ளும். (மாலையித்யாதி) ஆனபின்பு இப்படி பெரியனானவனைச் சிறியனென்று பரிச்சேதியாதே, பெருமையையுடைய சந்த்ரனே! உன் பெருமைக்கிடாக "இவன் நம்மை ஆதரித்து அழைக்கப்பெற்றோமே" என்னும் உகப்புத்தோற்ற ஓடிவா.

மூ.—சிறியனென் றென்னிளஞ்சிங்கத்தை யிகழேல் கண்டாய்
சிறுமையின் வார்த்தையை மாவலி யிடைச்சென்று கேள்
சிறுமைப் பிழைகொள்ளில் நீயும்உன் தேவைக்குரியை காண்
நிறைமதீ நெடுமால் விரைந்துன்னைக் கூவுகின்றான். (அ)

வ்யா.—எட்டாம்பாட்டு. (சிறியனித்யாதி) பாலஸிம்ஹம்போலே செருக்கையும் வீர்யத்தையு முடையனாயிருக்கிற என்னுடைய

---

என்றத்தை "மதியாதே" எல்லாவிடத்திலும் கூட்டிக்கொண்டர்த்த மருளிச்செய்கிறார் (சிறியனென்று பரிச்சேதியாதே) என்று. "மாமதீ! இவனை பாலகனென்று பரிபவம் செய்யேல், இவன் பண்டொருநாள் ஆலினிலை வளர்ந்த சிறுக்கனவன், வெகுண்டுமேல் மேலெழப்பாய்ந்து பிடித்துக் கொள்ளும், ஆகையாலே மாலே பாலகனென்று மதியாதே ஓடிவா" என்றன்வயம். (எ)

அரு.—எட்டாம்பாட்டு, (சிறியனித்யாதி) "என்னிளம் சிங்கத்தைச் சிறியனென்றிகழேல் கண்டாய்" என்றந்வயித்து அர்த்தமருளிச்செய்கிறார் (பாலேத்யாதி). "இளம் சிங்கம்" என்றத்தை தத்ஸத்ருஶனென்றுக்கி அந்தஸாத்ருஶ்யத்தை இரண்டுவகையால் காட்டுகிறார் (செருக்கையும் வீர்யத்தையுமுடையனாய்) என்று. "இளம் சிங்கம்" என்று நீ சொல்லாநிற்க

(க) தி-செ-டு.

கொள். (சிறுமைப்பிழை கொள்ளில்) "அவன் சிறியனாகவேண்டிற்று, நம்முடைய பெருமையாலேவந்த அபராதத்தாலே" என்று கொள்ளுவதியாகில். (நீயுமுன்தேவைக்குரியைகாண்) "நானும்தேவைக்குரியேனே" என்று நினைக்கிறாயாகில், உனக்கும் பராதீநகர்த்த்ருத்வம் விஹிதமாயிருக்கிலும், அதுதானும் ஆஜ்ஞாரூபகைங்கர்யமாயிருக்கும், அத்தை தர்மி. நிறைமதியன்றோ நீ. ஆஜ்ஞாரூபகைங்கர்யத்தில் நீ அறியாததுண்டோ? பி (ழ்) திழூலமாகவும் வரவேணுங்காண். என்றுதான் நீ ஸ்வாதீநனாயிருந்தாய். (நெடுமால் விரைந்துன்னைக் கூவுகின்றான்) உன்னளவேயல்ல காண். அவனுடைய ஸ்வாதந்த்ர்யத்தால்வந்தவ்யாமோஹம். அந்தவ்யாமோஹத்துக்கீடாககடுகவா.

பிள்ளையை, பருவத்தைப்பார்த்துச் "சிறுப்பிள்ளை" என்று அநாதரியாதே கிடாய். (சிறுமையித்யாதி) இவனுடைய பால்யத்தினுடைய விசேஷத்தைவாமநனாய்ச்சென்று, தன்னைவசீகரித்து "மூவடி" என்று, இரந்து இரண்டடியாலே ஜகத்தையடைய அளந்து, ஓரடிக்குத் தன்னைச் சிறையிலே வைக்கப்பட்ட மஹாபலி பக்கலிலே சென்று கேட்டுக்கொள். (சிறுமையித்யாதி) "இப்படியிருக்கிறவன் விஷயத்தில் சிறுமையை நினைத்த இது நமக்கு அபராதம்" என்று புத்திபண்ணுவதியாகில், அப்போது நீயும் அவன் திறத்தில் அடிமைக்கு ப்ராப்தன்காண். (நிறையித்யாதி) பரிபூர்ணனான சந்த்ரனே ஸர்வாதிகனான அவன், பெரிய த்வரையோடே உன்னை அழையாநின்றான்; ஆனபின்பு நீ உன்பூர்த்திக்கீடாக ஓடிவாவென்று கருத்து. (அ)

மூ.—தாழியில் வெண்ணெய் தடங்கையார விழுங்கிய
பேழைவயிற்றெம்பிரான் கண்டாயுன்னைக் கூவுகின்றான்
ஆழிகொண்டுன்னை யெறியும் ஐயுற வில்லைகாண்
வாழவுறுதியேல் மாமதீ மகிழ்ந்தோடிவா. (கூ)

நான் "சிறியன்" என்றால் குற்றமென்னென்ன வருளிச்செய்கிறார் (பருவத்தையித்யாதி). "வார்த்தை" என்றதினர்த்தம் (விசேஷத்தை) என்றது; அதாவது-வ்யாபாரம், (விசேஷத்தை) என்றவநந்தரம் "இவன்" என்று அத்த்யாஹார்யம். (தன்னை) என்றது-மஹாபலியை. (வைக்க) என்றவநந்தரம், "அப்படிச்சிறைப்பட" என்று கூட்டுவது. "சிறுமை" என்றது-நினைக்கையிலே லாக்ஷணிக மென்றர்த்தமருளிச் செய்கிறார் (இப்படியித்யாதி). (புத்தி பண்ணுவதியாகில்) இப்படி அறிந்து க்ஷாமணம் பண்ணுயாகி லென்றபடி. (நீயும்) ஸாபராதனானீயு மென்றபடி. "தேவை" என்றது-கார்யமாய், (அடிமை) என்கிறார். ... ... ... ... (அ)

ஸ்வா.—ஒன்பதாம்பாட்டு. (தாழியித்யாதி) "நெடுமால் உன்னைக் கூவுகின்றான்" என்கிற வ்யாமோஹம் "கிரந்தரூ ஸ்வாதந்த்ர்ய கார்யமாயிருக்குமோ" என்று நினைக்கிறாயாகில், இது ஸாக்ஷாத் வ்யாமோஹமன்று. அதுதானேதென்னில்; தாழியில் வெண்ணெய் தடங்கையார விழுங்கிய பேழைவயிற்றெம்பிரான் காண் உன்னைக் கூவுகின்றான். இதுதான் ஸாக்ஷாத் வ்யாமோஹம். "தாழியில் வெண்ணெய்" என்றது- தேஹகுணத்தால் வந்த தண்ணேற்றம். (க) "சிறுமாமனிசர்" என்னுமாபோலே அந்நபாநாதிகளாலே த(்)ரிக்கிற தேஹத்தால் வந்த சிறுமை, பெருமையாம்படி ஆத்மகுணத்தால் ஸூரிகளோடொக்கவந்த மஹத்வமும, (உ) "விண்ணுளாரிலுஞ்சீரியர்" என்கிற மஹத்வத்தையுமுடையவர்களையிறே "வெண்ணெய்" என்கிறது. வெண்ணெயிருந்த பாத்ரமிறே தாழியாகிறது. ஸம்ஸாரிகளுடைய ஆத்மகுணம் தேஹகுணத்தைப் பின்செல்லும், முமுக்ஷுக்களுடைய தேஹகுணம் ஆத்மகுணத்தைப்பின் செல்லும். மயர்வறமதிநலம்பெற்ற ஆழ்வார்களும் முமுக்ஷுக்களாயிருந்தார்களே யாகிலும் இவர்களுடைய ஆத்மகுணம் தேஹகுணத்தைப்பின்செல்லும். "தாழியில் வெண்ணெய்" என்றது-ஆத்மகுணம் தேஹ குணத்தைப் பின்செல்லுகிற ஆழ்வார்களை; இவர்களை விரும்புகையிறே ஸாக்ஷாத் வ்யாமோஹமாவது. (தடங்கை) "பருவத்துக்குத் தக்கதையன்றே" என்னும்படி வெண்ணெய் கண்டவாறே கைகள் விரிந்தபடி. (ஆரவிழுங்கிய) வயிறாரவிழுங்கிய. (பேழை வயிற்றெம்பிரான்) முலை

---

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (தாழியித்யாதி). தாழியிலே சேர்த்திருக்கிற *வெண்ணெயை அபிநிவேசாதிசயத்தாலே, "பருவத்துக்குத் தக்க கையன்றே" என்னும்படி வெண்ணெயைக் கண்டவாறே விஸ்த்ருதமான கை நிறையும்படி அள்ளி அமுதுசெய்த. (பேழையித்யாதி). உள்ளுப்புக்க த்ரவ்ய கௌரவத்தாலே விசைத்துப்பெரு

---

அரு—ஒன்பதாம்பாட்டு. (தாழியித்யாதி) இளம்பருவமாயிருக்க, "தடங்கை" என்னக்கூடுமோ வென்கிற சங்கையைப் பரிஹரியாநின்றுகொண்டு அர்த்தமருளிச்செய்கிறார் (தாழியிலேயித்யாதி). (அபிநிவேசாதிசயத்தாலே) என்றதுக்கு (அள்ளிஅமுது செய்த) என்றத்தோடன்வயம். (உள்ளுப்புக்கத்ரவ்யம்) என்றது - திருவயிற்றில் ப்ரவேசித்த வெண்ணெயென்றபடி. "பேழை" என்று - இடமுடைமையாய், அத்தாலே பலிதம் (விசைத்துப்பெருத்து) என்றது. "விசைத்து" என்ற பாடமானபோது -

---

(க) தி-வாய். அ-௧0. (உ) தி-வி. எ௬.

ப்பால்போலே ஜரிக்குமதன்றே. (க) "உண்டொத்த திருவயிற்றன் என்னவுமொண்ணாதே (உ) "வயிறு பிள்ளை பரமன்று"என்கையாலே புக்க த்ரவ்யத்துக்குத் தக்கபடி உதைத்துக் காட்டுமே. (பேழை) பெருமை. (எம்பிரான்) எங்கள் குலத்துக்கு மஹோபகாரகனானவன் அவன் கூவுகிறது தன்குறை தீரவன்றுகாண்; உன்குறைதீர. உன் குறைதீரத் தன்குறை தீருங்காண்.

(ஆழியித்யாதி) ஆதித்யனை மறைத்துப் பகலை இரவாக்கின ஆழ்வானை ஏவிவிடுமாகில் இரவைப் பகலாக்கவும் கூடுமென்றிராய். முன்பே பாரதயுத்தத்துக்கு நாளிட்டபோது நீ நின்ற நிலையைப்பாராய். "அதொருகார்யப் பாட்டாலே ஒருகால் செய்தானாகில் அந்த ஹேதுவெனக்குண்டோ" என்று ஸந்தேஹிக்கவேண்டா. அதுதான் வேண்டிற்றும் அவர்கள் வசவர்த்தியாகாமையன்றோ? அது உனக்குமில்லையோ. அத்தை தர்ஶியாய். (வாழுவித்யாதி) வாழுகையாவது-நீ இப்போ நிற்கிறநிலைதன்னிலே (ங)"ஜீவிஷ்யதி சசீக்ஷேம-ததிஷ்யேவசநம் தவ"என்கையிறே. (ச)"த்யஜ-த்யஜ,த்யஜ்ய-த்யஜ்ய"என்று உன்முற்பட்ட நிலையைக் குலைத்து அவன் மீண்டும் அதிலே நிறுத்தினால் அதுபழையநிலையாமோ? "தவ-வசநம்" என்றபோதே மற்றொன்றிலே நிறுத்தி

---

த்திருக்கிற திருவயிற்றையுடையனாய், எங்கள் குலத்துக்கு உபகாரகனாயிருக்கிறவன் காண் உன்னை அழையா நிற்கிறான். இத்தால்-தன் பருவத்துக்கீடாக வெண்ணெயை விரும்பி விழுங்கினாப்போலே யிருப்பதொன்று காண் உன்னை அழைக்கிறது மென்கை.

(ஆழியித்யாதி). அவ்வெண்ணெய்த்தாழியை எட்டாதபடி வைக்கில் கல்லைக்கொண்டு எறிந்து உடைக்குமாபோலே, நீயும் வாராதிருக்கில் தலையை அறுக்கைக்காகத் திருவாழியைக்கொண்டு உன்னை எறியும்; இதில் ஒரு ஸம்ஶய மில்லைகாண். (வாழுவித்யாதி). அப்படி

---

பரிணமித்தென்றபடி. "இசைத்து" என்றுபாடமானபோது கனமாய் என்றபடி. சந்த்ரனை அழைக்கும்போது "வெண்ணெய்விழுங்கிய" என்று சொல்லுவானேனென்னென்னில், தாத்பர்யமருளிச் செய்கிறார் (இத்தாலித்யாதி). வெண்ணெயில் அபிநிவேசம் உன்னிடத்திலுமுண்டென்றுகருத்து.

ஆனால், ஆழிகொண்டு எறிவானேனென்னென்ன வருளிச்செய்கிறார் (அவ்வெண்ணெயித்யாதி). "ஐயுற" என்றதினர்த்தம் (ஸம்ஶயமில்லை) என்றது. ... ... ... ... ... ... ... .. (கூ)

---

(க)தி-மொ-கக-சு. (உ)தி-மொ-கO-எ-ரு. (ங)கீ-கஅ-எக. (ச)

னும் நிற்கவேணுமிறே. பழையபநிலையில்(௧) "மோஷ்ச்ச-மாசுசஃ" என்ன வொண்ணுதே. (வாழவுறிதியேல்) வஸுவர்த்தியாய் வாழவேணுமென்றிருந்தாயாகில். (மாமதியித்யாதி) அறிவுடையாரெல்லோர்க்கும் வேணுங்காண் இந்த பாரதந்த்ர்யத்தாலே வந்தமகிழ்ச்சி. (௯)

அவ.—பத்தாம்பாட்டு. நிகமத்தில், இத்திருமொழி கற்றூர்க்குப் பலம் சொல்லித் தலைக்கட்டுகிருர்.

ஸ்வா.—(மைத்தடமித்யாதி) ஒப்பனைக்கு உபலக்ஷணம். (தன்னித்யாதி) பிள்ளைசிறுமல் ஒப்பித்தாக் தன்மகனென்கிருர். அவன்

---

அவன் க்ரோதத்துக்கு விஷயமாய் முடிந்து போகாதே ஜீவிக்கவேண்டி யிருந்தாயாகில், பெருமையையுடைய சந்த்ரனே! உன் பெருமைக்கீடாம்படி ப்ரீதனாய் ஓடிவா. ... ... ... * (௯)

அவ.—பத்தாம்பாட்டு. நிகமத்தில், இத்திருமொழி கற்றூர்க்குப் பலம் சொல்லித் தலைக்கட்டுகிருர்.

மூ.—மைத்தடங்கண்ணி யசோதைதன்மகனுக்கிவை
ஒத்தனசொல்லி யுரைத்தமாற்ற மொளி புத்தூர்
வித்தகன் விட்டுசித்தன் விரித்ததமிழிவை
எத்தனையும் சொல்லவல்லவர்க் கிடரில்லையே. (௧௦)

வ்யா.—(மைத்தடங்கண்ணி அசோதை) கறுத்துப் பெருத்திருந்துள்ள கண்ணையுடையளான யசோதை. அஞ்ஜநத்தாலே அலங்க்ருதமாய்ப் பரந்திருந்துள்ள கண்ணையுடையவளென்னுதல்; * அஞ்ஜநவண்ணனை இவனை அநவரதம் பார்த்துக்கொண்டிருக்கையாலே, இவனுடைய திருமேனியின் நிறம் ஊறி, அத்தாலேமைத்து, இவன் பக்கல் ஸ்நேஹத்தாலே விகஸிதமான கண்ணையுடையவளென்னுதல். (தன்னித்யாதி). தன்னுடைய புத்ரனை இவனுக்கு நினைவுக்கும்

---

அரு.— பத்தாம்பாட்டு. (மைத்தடமித்யாதி) "மைத்தடங்கண்ணி" என்றது - ஸ்வாபாவிகமான கறுப்பென்றும், அஞ்ஜநத்தாலும், அஞ்ஜநவண்ணனாலும் வந்த கறுப்பென்றும் அர்த்தத்ரயமருளிச் செய்கிருர் (கறுத்தித்யாதி வாக்யத்ரயத்தாலே). (பெருத்து) என்றவிடத்தில் பெரியதாயிருக்கை - ஸ்வாபாவிக விஸாலதையாதல், ஹர்ஷத்தால்வந்த விசாலதையாதல் என்றிரண்டர்த்தமருளிச் செய்கிருர் (அஞ்ஜநத்தாலேயித்யாதி வாக்யத்வயத்தாலே). "தன்மகனுக்குஒத்தன- இவை-சொல்லி" என்றந்வயித்தர்த்தமருளிச் செய்கிருர் (தன்னுடைய வித்யாதி.) (நினைவக்கும்) என்

(௧) ஸ்ரீ-க அ-ஸ்ர ஸ்ர.

நினைவுக்கும் சொலவுக்கும் ஒத்தனசொல்லி. அதாவது – அதிதூரத்திலே ஓடுகிற அம்புலியைப்பிடித்துத் தரவேணுமென்ன; "அவனுக்குப்பிடித்துத்தருகிறேன்" என்று சொல்லி, பிடிக்கை தனக்கு அசக்யமாயிருக்கையாலே பலகாலும் வரவேணுமென்று இவள் உரைத்தாளிறே. அம்புலியை இவளுரைத்த மாற்றத்தை. (ஒளிபுத்யாதி) அந்நிலமிதிதானே ஜ்ஞாநப்ரகாசத்தை உண்டாக்குகையாலே "ஒளிபுத்தூர்" என்கிறார். திருமாளிகைக்கு "ஸ்ரீவில்லிபுத்தூர்" என்று திருநாமமிறே. (வித்தகன்) ஸமர்த்தன். மயர்வற மதிநலம் பெறுவதற்கு முன்னே திருநந்தவநம் செய்து திருத்துழாய் பறித்துத்திருமாலை சாத்தின ஸாமர்த்யமிறே. அன்றிக்கே மங்களாசாஸநப்ரேமத்தைத் திருவுள்ளத்துக்குள்ளே உடையவரென்னுதல். (விட்டுசித்தன்) இவருடைய நிலை வடபெருங்கோயிலுடையான் திருவுள்ளத்திலே கிடக்கையாலேயாதல்; (க) * அரவத்தமளிப்படியே அவன்தான் இவர் திருவுள்ளத்திலே எப்போதும் கிடக்கையாலேயாதல்.

---

சொலவுக்கும் சேர்ந்தவையாயிருக்கிற இவற்றைச்சொல்லி, மென்மையும் வன்மையும் தோன்றும்படியாகச் சந்த்ரனைக்குறித்துச் சொன்ன பாசுரத்தை. (ஒளியித்யாதி). நிலமிதிதானே ஜ்ஞாநப்ரேமங்களை விளைக்கும் தேஜஸ்ஸையுடைத்தான ஸ்ரீவில்லிபுத்தூரில் மங்களாசாஸநம்

---

றது – "கண்டுயில் கொள்ளக்கருதி" என்றும் "மேலெழப்பாய்ந்து பிடித்துக்கொள்ளும்" என்றும் "ஆழிகொண்டுன்னை எறியும்" என்றும் சொல்லுகிற பிள்ளை நினைவுக்கு மென்றபடி. (சொலவுக்கும்) என்றது– "மழலை மூற்றாத விளஞ்சொல்லால் கூவுகின்றான்" இத்யாதியால் சொல்லுகிற சொலவுக்கு மென்றபடி. இது– "தவழ்ந்துபோய்" இத்யாதி செயலுக்கு முபலக்ஷணம். (இவற்றை) என்றது – இம்மூன்றுக்கும் அநுகுணங்களான அர்த்தங்களை என்கை. (மென்மை) என்றது – மார்த்தவம். அதாவது – "என் சிறுக்குட்டன்" "தன்சிறுக்கைகளால்" "கைத்தலம் நோவாமே" இத்யாதியில் சொல்லுகிற ம்ருதுத்வகுணம். (வன்மை) காடி(ந்)ந்யம். அதாவது–"சக்கரக்கையன்" "பிடித்துக்கொள்ளும் வெகுளுமேல்" "என்னிளம்சிங்கத்தை" இத்யாதியில்சொல்லுகிற வீர்யமென்றபடி. மாற்றமென்றதினர்த்தம் (பாசுரத்தை) என்றது. வித்தகனென்றதினர்த்தம் (மங்களாசாஸநஸமர்த்தரான) என்றது. (கo)

ஜீயர் திருவடிகளே சரணம்.

---

(க) பெரி-தி-டு-உ-கo.

(விரித்ததமிழிவை) என்று-இவைதன்னை யசோதைப் பிராட்டி சொன்ன பாசுரங்களை வ்யாஜமாகக்கொண்டு ஸகல ஶாஸ்த்ரங்களையும் மங்களாஶாஸந பர்யந்தமாக விரித்ததிறே. "தமிழ்" என்று தேசியான பாஷையாலே அருளிச்செய்தது இவர்க்ருபையிறே. "இத்தனையும்" என்றது - "அநந்த வேதசாஸ்த்ரங்களில் சொல்லுகிற அர்த்தங்களெல்லாம் ஓதி அறியப்பெற்றிலோம்" என்கிற க்லேசம். இவர் அபிமாநத்திலே ஒதுங்கி இப்பத்துப்பாட்டையும் பா(ஷா) வபந்த (ஸந்)த்தோடே சொல்லவல்லவர்களுக்கு எங்ஙனே க்லேசமுண்டாவது; அதில்லை யென்கிறார். ... ... ... ... ... (கo)

பிள்ளை திருவடிகளே சரணம்.

உய்யவுலகு ப்ரவேசம்.—கீழே ப்ரஹ்மா முதலானோர் அழையாதிருக்க, சிலர் உபஹாரங்களை வரவிடுவாரும், உபஹாரங்களைக் கொண்டுவந்து அங்கிகரிக்கவேணுமென்றுதொழுவாரும், அவன் அழைக்கிறானென்று அழைக்காலும் வாராதாருமாய் நின்றது இந்த விபூதி;

---

பண்ண ஸமர்த்தரான பெரியாழ்வார் விஸ்தரித்தருளிச் செய்ததாய் த்ராவிடரூபமாயிருக்கிற இவை பத்துப்பாட்டையும் ஏதேனுமொருபடி சொல்ல வல்லவர்களுக்கு துக்கமென்பது ஒன்றுமில்லை. (கo)

பெரியஜீயர் திருவடிகளே சரணம்.

பெரியாழ்வார் திருமொழி

## முதற்பத்து நாலாந்திருமொழி முற்றிற்று.

—(*)—

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## முதற்பத்து அஞ்சாந்திருமொழி.

### உய்யவுலகு ப்ரவேசம்.

அவ.—கீழ்த்திருமொழியிலே, அவன் நிலாமுற்றத்திலேயிருந்து புழுதியளைவது, அம்புலியை அழைப்பதானபடியை, யசோதைப்பிராட்டி தானநுபவித்து, அவைதன்னைச் சந்த்ரனைப்பார்த்துச் சொல்லி, "இவனோடே விளையாடவேண்டி யிருந்தாயாகில் விரைந்து வா" என்று பலஹேதுக்களாலும் அவனை அழைத்தப்ரகாரத்தைத்தா

---

அரு.—உய்யவுலகுப்ரவேசம். அம்புலியை அழைப்பதான பருவம் போய், செங்கீரைக்கூத்தாடத் தக்கபருவமானவாறே அந்தரஸந்தன்னை அநுபவிக்கிறவராகையாலே ததநுரூபமாக வ்ருத்தவர்த்திஷ்யமாணங்களை யருளிச்செய்கிறார் (கீழ்த்யாதி). (பலஹேதுக்களாலும்) என்றது-

அந்த விபூதியிலுள்ளார் பிராட்டிமார் கொடுத்த உபஹாரங்களையும் கொண்டு ஆழ்வார் அழைத்தாரென்றால் மஹாமதிகளாகையாலே வருவர்களிறே. "பவளவாயீர் வந்து காணீர்" என்று பலகாலும் அழைக்கையாலே த்ருதீய விபூதியிலுள்ளாரெல்லாரும் வருவர்களிறே. ஆஸ்ரித பாரதந்த்ரயத்தாலும், தன்னுடையவர்களுக்குப் பரதந்த்ரனாகிறதாலும் வ்யாவர்த்தியாவானிவனொருவனுமிறே. இவ்வர்த்தத்தை "உய்யவுலகு தொடங்கி (க) மெய்ச்சூது சங்கமளவும்" யசோதைப் பிராட்டி பாசுரத்தாலே இவர் அநுபவித்து உகக்கிறவையும் மங்களாசாஸநமிறே, அவனை நியமிக்கையாலே. பிள்ளைகளுடைய ந்ருத்த விசேஷங்களிலே "செங்கீரை" என்றுஒருதுறையுண்டு- தமிழர் சொல்லுவது, அதாதல்; "கீர்" என்று பாட்டாய், அதுக்கு நிறம்-சிவப்பாகி, "பாட்டுக்குத் தகுதியாக ஆடு" என்று நியமிக்கிறாராதல். ... *

---

மும் பேசி, பிற்காலமாயிருக்கச்செய்தே தத்காலம் போலே இவனுடைய அந்த சேஷ்டிதத்தை அநுபவித்தாராய் நின்றார்; இனிமேல் அவனுடைய பருவத்துக்கீடாக "அவன் செங்கீரையாடுகிறது காணவேணும்" என்று ஆசைப்பட்டு, அவனைப்பலபடியாகப் புகழ்ந்து கொண்டு "எனக்கு ஒருகால் செங்கீரை ஆடவேணும்" என்று பலகாலும் அபேக்ஷித்து அந்த சேஷ்டிதரஸத்தை அவளநுபவித்தபடியைத், தாமும் தத்காலம்போலே அநுபவித்து, அவள் பேசினப்போலே பேசி இனியராகிறார்.

அவனை ஸ்நேஹத்ரபூர்வகமாகச் செங்கீரை ஆடவேணு மென்று பலகாலு மபேக்ஷிக்கிறதும், அந்த சேஷ்டிதாநுபவம் பண்ணுகிறதுமே அவளோடு இவர்க்கு ஸாம்யம். * மய்ர்வறமதிநலம் பெற்றவராகையாலே அவன்படிகளடங்கலும் ப்ரகாசிக்கையாலே தர்மைக்யத்

---

"கூத்தினை-நோக்கிப்போ" இத்யாதிகளான பாட்டுக்களில் வருகைக்கு உபயுக்தமாகச்சொன்ன ஹேதுக்களாலு மென்றபடி. "உய்யவுலகுபடைத்துண்ட மணிவயிறு" இத்யாதி ஸம்போதநங்களைக்கடாக்ஷித்து (பலபடியாக) என்றது.

யசோதையைப்போலே அநுபவிக்கிறாராகில் அவதாராந்தரங்களையும் பரத்வாதிகளையும் சொல்லக்கூடுமோ வென்ன வருளிச்செய்கிறார் (அவனையித்யாதி). "தர்மைக்யத்தாலே" என்ற ஹேதுவை (பரத்வாதிகளில்) என்கிறவிடத்திலும் கூட்டிக்கொள்வது.

---

(க) உ-க-

ஸ்வா.-முதற்பாட்டு. (உய்யவித்யாதி) (க)“ஸதேவ-அஸந்நேவ” என்று மூலப்ரக்ருதியிலே கிடந்த ஆத்மாக்களை போக(ஶூந்ய) மோக்ஷ யோக்யராக ஸ்ருஷ்டிக்க, ஸ்ருஜ்யரான வளவிலே மீண்டும் அபராதங்களிலே ப்ரவர்த்திக்கையாலே, ஸம்ஹரிக்க ப்ராப்தமாயிருக்கச்செய்தேயும் ஸம்ஹரியாமல், அழகிய திருவயிற்றிலே வைத்து ரக்ஷிக்கையாலே “உய்யவுலகுபடைத்துண்ட மணிவயிறு” என்கிறார். (ஊழியித்யாதி) கல்பந்தோறும், கல்பந்தோறும். “பல” என்கையாலே-கல்

---

தாலே அவதாராந்தர சேஷ்டிதங்களையும், இவ்வவதாரந்தன்னில் உத்தரகாலசேஷ்டித விசேஷங்களையும், பாத்வாதிகளிலுண்டான படிகளையும், உகந்தருளின நிலங்களில் நிலையால் தோற்றுகிற குணவிசேஷங்களையுமெல்லாம் தம்முடைய ப்ரேமாதிசயத்தாலே இவ்வஸ்துவுக்கு விசேஷணமாக்கிக்கொண்டு புகழ்ந்து, அந்த சேஷ்டிதரஸத்தை அநுபவிக்கிறது இவர்க்கு விசேஷம். ... ... ... *

மூ.—உய்ய வுலகுபடைத்துண்ட மணிவயிறா !
ஊழிதோறூழி பலவாலினிலை யதன்மேல்
பைய வுயோகுதுயில்கொண்ட பரம்பரனே
பங்கயநீணயனத் தஞ்சனமேனியனே
செய்யவள் நின்னகலம் சேமமெனக்கருதிச்
செல்வுபொலி மகரக்காது திகழ்ந்திலக
ஐய வெனக்கொருகாலாடுக செங்கீரை
ஆயர்கள் போரேறே ஆடுகவாடுகவே. (க)

வ்யா —முதற்பாட்டு. (உய்யவித்யாதி) கரண களேபர விதுரராய்போக(ஶூந்ய)மோக்ஷஶூந்யராய்க் கிடக்கிறஆத்மாக்கள்உஜ்ஜீவிக்கைக்கு உறுப்பாக லோகத்தை ஸ்ருஷ்டித்து, பின்பு அவாந்தர ப்ரளயம் வர, அதில் அழியாதபடி உள்ளேவைத்து நோக்கின அழகிய திருவயிற்றை யுடையவனே ! (ஊழிதோறித்யாதி) ப்ரவாஹரூபேண வருகிற பல கல்பங்கள் தோறும் ஜகத்தையடங்க விழுங்கின திருவயிற்

---

அரு.—முதற்பாட்டு. (உய்யவித்யாதி) “உய்ய” என்று விசேஷிக்கைக்கு முன்பு உய்வன்றிக்கே யிருந்ததோ வென்ன வருளிச்செய்கிறார் (கரணேத்யாதி). மணியினர்த்தம் (அழகிய) என்றது. “பல-ஊழிதோறூழி” என்றந்வயித்து, “உண்டமணி வயிறு” என்றத்தைக் கடாக்ஷித்து அர்த்தமருளிச் செய்கிறார் (ப்ரவாஹேத்யாதி.) (உ)“தஸ்ய யதா கப்யாஸம் புண்டரீக

---

(க) தை-ஆ-சு-க. (உ) சாந்தோ-க-சு.

ஸ்வா.—மாணிக்கக்கிண்கிணிப்ரவேசம்.—கீழே "ஆடுக, ஆடுக" என்று ஆயாஸிப்பித்தார். இத்தால் ப்ரயோஜநம் அவதாரத்தில் மெய்ப்பாடுதோன்றினஒழுக்கமாகையாலே,வர் ஞுஸ்ரமாதிகளுக்கும் ஸாஸ்த்ரஸித்தமாய், சக்த்யநுகுணமாய், †மங்களபர்யந்தமான நடப்புவேணுமென்றதாய்த்து. இனிமேல் "சப்பாணி" என்கிற வ்யாஜத்தாலே ஆகிஞ்சந்யத்தை வெளியிட்டு லோகத்தை ரக்ஷிக்கிறார்.

ஸ்வா.—முதற்பாட்டு.(மாணிக்கமித்யாதி) ஆணிப்பொன்னால்வாயழகியதான உடைமணியுடையமருங்கின்மேல் மாணிக்கக்கிண்கிணி

டிதத்தை, தத்காலத்திலே யசோதைப்பிராட்டி ப்ரார்த்தித்தநுபவித்தாப்போலே*மயர்வற மதிநல மருளப்பெறுகையாலே அந்த ஸ்நேஹத்தை யுடையராய்க்கொண்டு, தாமும் தத்காலம்போலே அநுபவித்தாராய்நின்றார்; இனி, சப்பாணிகொட்டுகையாகிற பால சேஷ்டிதத்தைச் செய்தருள வேணுமென்று அவனைப்ரார்த்தித்து அந்தசேஷ்டிதரஸத்தை அவளநுபவித்தாப்போலே ஒரு சேஷ்டிதத்தை அநுபவித்தவளவில் பர்யாப்தி பிறவாத அபி(ரு)நிவேசாதிசயத்தாலே அந்த சேஷ்டிதரஸத்தையு மநுபவிக்க ஆசைப்பட்டு, அவள் பேசினாப்போலே பேசித் தாமு மநுபவிக்கிறார். *

மூ.— மாணிக்கக்கிண்கிணியார்ப்ப மருங்கின்மேல்
ஆணிப்பொன்னாற்செய்த வாய்பொன்னுடைமணி
பேணிப்பவளவாய் முத்திலங்கப்பண்டு [சப்பாணி. (க)
காணிகொண்டகைகளால் சப்பாணி கருங்குழற்குட்டனே!

வ்யா.—முதற்பாட்டு. (மாணிக்கமித்யாதி) மாற்றெழும்பின பொன்னாலே சமைக்கப்பட்டதாய்ப் பழிப்பற்று அழகியதாயிருந்

வேறுபட்டிருக்குமென்று, அதுக்கு அநந்தரம் இத்தை அநுபவிக்கிறாரென்று ஸங்கதியென்று திருவுள்ளம். (அநுபவித்தாப்போலே) என்றவநந்தரம் "இவ்வாழ்வார்" என்றுசேஷம். (அவளநுபவித்தாப்போல்)என்றதுக்கு (அநுபவிக்க ஆசைபட்டு) என்றத்தோடந்வயம். ... ... ... ... ... *

அரு.—முதற்பாட்டு. (மாணிக்கக்கிண்கிணியித்யாதி) "ஆணிப்பொன்னாற் செய்த ஆய் பொன்னுடைமணி - மருங்கின்மேலே மாணிக்கக்கிண்கிணி ஆர்ப்ப" என்றந்வயித்தர்த்த மருளிச் செய்கிறார் (மாற்றெழும்பின வித்யாதி). "ஆணி" என்று விசேஷித்ததுக் கர்த்தம் (மாற்றெழும்பின) என்றது. அதாவது - நிறம் அதிகமான வென்றபடி. "ஆய்" என்றதினர்த்தம் (பழிப்பற்று)

† (பா) ஸ்வரூபாநுரூபமான.

ஆர்ப்ப. பொன் - அழகு. மாணிக்கக்கிண்கிணி சப்திக்குமோவென்னில்; நா, மாணிக்கமாகையாலே சப்திக்கும். கிண்கிணிக்கு மாணிக்கம் புறம்பே பதித்தாலும் சப்தியாது.

(பேணியித்யாதி) விருப்பத்தோடே திருப்பவளத்தில் திருமுத்துத் தோன்றும்படி ஸ்மிதம்செய்து கொண்டு (க) "குடங்கையில் மண்கொண்டளந்து" என்கிறபடியே முன்பொருகாலத்திலே மஹாப(ப)லி யஜ்ஞவாடத்திலே சென்று (உ) "தன்குடங்கை நீரேற்றான்" என்கிறபடியே உதகபூர்வகமாகக்கொண்ட கைகளாலே சப்

துள்ள அரைவடத்தை யுடைத்தான மருங்கின் மேலே மாணிக்கக் கிண்கிணியானது த்வநிக்க. "ஆய் பொன்னுடைமணி" என்கிற விடத்தில், ஆய்தல் - தெரிதலாய், பழிப்பறுதலைச் சொல்லுகிறது. "ஆணிப்பொன்னால் செய்த" என்று கீழே சொல்லுகையாலே, மேல் "பொன்" என்று-அழகைச் சொல்லுகிறது. மாணிக்கக்கிண் கிணி சப்திக்குமோ வென்னில்; நா, மாணிக்கமாகையாலே சப்திக்கும். கிண்கிணிக்குப் புறம்பே மாணிக்கம் பதித்தாலும் சப்தியாது.

(பேணியித்யாதி) என்னுடையநிர்ப்பந்தத்துக்காகவன்றிக்கே, விருப்பத்தோடே. பவளம்போலேயிருக்கிற திருவதரமும் திருமுத்தும் பரபாக(ரா)த்தாலே விளங்கும்படி ஸ்மிதம் செய்துகொண்டு. அன்றிக்கே, "பேணி" என்றது-உன்திருமேனி யலையாதபடி பேணிக்கொண்டென்னவுமாம். (பண்டித்யாதி) முன்பு, (க) "குடங்கையில் மண்கொண்டு" என்கிறபடியே உன்னுடைமையான பூமியைமஹாபலி பக்கலிலேசென்று உத(க)பூர்வகமாகப்பரிக்ரஹித்த

என்றது. "வெண்கலக்கிண்கிணியன்றோ சப்திப்பது, அல்லது சப்தியாதே" என்று சங்காநுவாதம் பண்ணி பரிஹரிக்கிறார் (மாணிக்கமித்யாதி). கிண்கிணி வெங்கலமேயாய், நாக்குமாத்ரம் மாணிக்கமாகையாலே சப்திக்கு மென்று கருத்து. நாக்கு மாத்ரம் மாணிக்கமென்னவேணுமோ? மாணிக்கம் அழுத்தின வெண்கலக் கிண்கிணி என்றாலோவென்ன வருளிச்செய்கிறார் (கிண்கிணிக்கித்யாதி).

"பேணி" என்றதுக் கிரண்டர்த்தம் - ஆதரமும், போஷித்தலும். இவ்விரண்டையும் அடைவேயருளிச் செய்கிறார் (என்னுடையவித்யாதி வாக்யத்வயத்தாலே). "குடங்கை" குவித்தகை. இது சப்பாணி கொட்டுகை

(க) ௪-௩-க. (உ) ௩-திருவ-௬உ.

பாணி. கருகின திருக்குழலையும், பிள்ளைத்தனத்தையு முடைய வனே! சப்பாணி.

"சப்பாணி" - அஞ்ஜலியை ப்ரகாசிப்பிக்கிறது. இருகால் "சப்பாணி" என்கையாலே உபாய பா(வ)வத்திலும் உபேய பாவத்திலும் ஆகிஞ்சந்யம் வேணுமென்று அவனைக்கொண்டுப்ரகாசிப்பிக்கிறார். "காணி" என்கையாலே-பலரும் "என்னது" என்று தோன்ற அபிமாநித்துப் பிறர்க்கும் வழங்கிக் கொண்டு போரினும் இந்த விபூதி "அவனுடைய காணி" என்கிறது. அதுதன்னையிறே இவன் இரந்து கொண்டதும். .... .... .... .... (க)

ஸ்வா.—இரண்டாம்பாட்டு. (பொன்னித்யாதி) தன்னுடைய திருவரையிலே சாத்தின பொன்னரை நாணோடே கோவைப்பட்ட மாணிக்கக் கிண்கிணி சப்திக்க. திருக்குழலிலே சாத்தின

---

திருக்கைகளாலே. இத்தால்-தன்மேன்மைபாராதே ஆஸ்ரிதர்க்காகத்தன்னை அழியமாறிக் கார்யம்செய்யும் கையென்கை. (சப்பாணி) சப்பாணி கொட்டியருளவேணும். (கருங்குழலித்யாதி). கருகின திருக்குழலையும், பிள்ளைத்தனத்தையு முடையவனே! சப்பாணிகொட்டி யருளவேணும். .... .... .... .... .... (க)

மூ.—பொன்னரைநாணொடு மாணிக்கக்கிண்கிணி
தன்னரையாடத் தனிச்சுட்டி தாழ்ந்தாட
என்னரைமேல்நின்றிழிந் துங்களாயர்தம் [ சப்பாணி. (உ)
மன்னரைமேல் கொட்டாய் சப்பாணி மாயவனே!கொட்டாய்

வ்யா.—இரண்டாம்பாட்டு. (பொன்னித்யாதி.) பொன்னாலே செய்யப்பட்ட திருவரைநாணோடே சேர்ந்த மாணிக்கக் கிண்கிணியானது தனக்கு வாஸஸ்தாநமான கடிப்ரதேசத்திலே கிடந்து சப்திக்க. (தனியித்யாதி.) திருக்குழலில் சாத்தின அத்விதீயமான

---

யிலே ஹேதுவென்று தாத்பர்ய மருளிச்செய்கிறார் (இத்தாலித்யாதி). சப்பாணி கொட்டுகையாவது - இரண்டுகையும் சப்திக்கும்படி தட்டுகை. "கொட்டாய்" என்று மேல்பாட்டுக்களிலிருக்கையாலே, இங்கு அநுஷங்கித்தாரென்று கண்டுகொள்வது. ... ... ... ... ... ... (க)

அரு.—இரண்டாம்பாட்டு. (பொன்னித்யாதி) தன்னென்றதுக்கர்த்தம் (தனக்கு) என்றது; அதாவது - கிண்கிணிக்கென்றபடி. (சப்திக்க) என்றது- அரையிலே ஆடுகையால் அர்த்தஸித்தம். "தனி" என்று விசேஷிக்கையால் அரைவடத்தில்சுட்டிகளைவ்யாவர்த்திக்கிறார்(திருக்குழலித்யாதி). "அரை"

சுட்டியானது திருநெற்றியிலே தாழ்ந்தசைய. (என்னரையித்யாதி) தன்னரைமேலிருந்தது அவர்க்கு உகப்பாமாபோலே, தனக்கு அவர் மடியில் இவனைக்காண்கை ப்ரியமாகையாலே "என்னரைமேல் நின்றிழிந்து" என்கிருள். உங்கள் தமப்பனாராய் ஆயர்க்கெல்லாம் நிர்வாஹகரா யிருக்கிறவருடைய மடியிலே யிருந்து கொட்டாயென்கிருள். மாயவன் - ஆஶ்சர்ய சக்தியுக்தன். .... .... .... (உ)

அவ.—ஶ்ரீநந்தகோபர் யசோதைப்பிராட்டி மருங்கிலே காண்கைதமக்கு அபிமதமாகையாலே மீண்டும் உன்மாதாவின் மருங்கிலே யிருந்து விளையாடென்கிருர்.

---

சுட்டியாகிற ஆபரணம் திருநெற்றியிலே தாழ்ந்தசைய. (என்னித்யாதி) என்னுடைய மடியில் நின்றும் இழிந்து உங்கள் தமப்பனாராய் ஆயர்க்கெல்லாம் நிர்வாஹகரா யிருக்கிறவர் மடியிலே யிருந்து சப்பாணிகொட்டியருளாய். இத்தால்-தன்மடியிலேயிருந்து சப்பாணி கொட்டுகிறதிலும், அவர் மடியிலிருந்து சப்பாணி கொட்டக்காண்கை தனக்கு உகப்பாகையாலே அத்தைச் செய்தருளவேணுமென்று அபேக்ஷித்தாளாய்த்து. (மாயவனே) ஆஶ்சர்ய பூ(஭ூ)தனானவனே!. .... .... .... .... .... .... (உ)

மூ.— பன்மணி முத்தின்பவளம்பதித்தன்ன
என்மணிவண்ண னிலங்குபொற்றேட்டின்மேல்
நின்மணிவாய் முத்திலங்க நின்னம்மைதன் [பாணி. (௩)
அம்மணிமேல்கொட்டாய் சப்பாணி ஆழியங்கையனேசப்

வ்யா.—மூன்றும்பாட்டு. (பன்மணியித்யாதி). (என்மணிவண்ணன்) என்னுடையவ னென்று அபிமானிக்கலாம்படி எனக்கு

---

என்றது - மருங்காகையாலே; அங்கேயிருந்து சப்பாணி கொட்டக் கூடாமையாலே (மடியில் நின்றும்) என்றது. "உங்கள்" என்ற பஹுவசநம் லோக வ்யவஹாரத்தைப்பற்ற. லோகத்தில், ஒருவனை ஒருவன் "உங்கள் தமப்பன் வந்தான்" என்று சொல்லுவனிறே. ... ... ... ... ... (உ)

அ௩.—மூன்றும்பாட்டு. (பன்மணியித்யாதி) ஸம்புத்தியாகையாலே மூன்றுறவெடுக்கிருர் (என்மணிவண்ணன்) என்று. "மணிவண்ணு" என்றுதல் "மணிவண்ணனே" என்றுதல் அருளிச்செய்யாதே "மணிவண்ணன்" என்று ப்ரதமாந்தமாகச் சொல்லக்கூடுமோ வென்ன; இது அண்மை விளி. அதாவது - கிட்ட விருக்கிறவனை அழைக்கும் ஸம்போதநம். ஆகையாலே சொல்லக்கூடுமென் றருளிச்செய்கிருர் (என்னுடையவித்யாதி).

ஸ்வா.— மூன்றாம்பாட்டு. (பன்மணியித்யாதி). பன்மணி யாவது-"மாணிக்கம், மரதகம், புஷ்பராகம், வைரம், நீலம், கோமேதகம், வைடூர்யம்" என்கிற மணிவகை ஏழும். முத்தும், இனிய பவளமும் ஆக நவரத்நங்கள்பதித்து. (அன்ன)நிம்நோந்நதமாகாமை ஒத்து. என்னுடையவனென்று தன்னுடையவனை நான் அபிமாநிக்கும்படி ப(ு)வ்யனாய், நீலரத்நநிறத்தையுடையனை உன்னுடைய திருக்காதிலே சாத்துகையாலே அதிப்ரகாசகமான பொற்றொட்டின்மேலே.

(நின்மணியித்யாதி) உன்னுடைய அழகியதான திருப்பவளத்தில் திருமுத்தும் ப்ரகாசிக்க. (நின்னம்மை) (க) ✻ இவனைப் பெற்ற வயிறுடையாள். (உ) "ஸுஜாதம்- சுகதாதம்" என்னுமாபோலே, "நின்னம்மை" என்கிறார். தன்னுடைய, (அம்மணிமேல்) "அம்ம

ப(ு)வ்யனாய் நீலரத்நம்போன்ற வடிவையுடையனாயிருக்கிறவனே? (பன்மணியித்யாதி) மாணிக்கம், மரகதம், புஷ்பராகம், வைரம், நீலம், கோமேதகம், வைடூர்யமென்கிற பலவகைப்பட்டரத்நங்களும், முத்தும், இனிய பவளமும்பகைத்தொடையாகஅழுத்தி வாசா(ு)மகோசரமான அழகையுடைத்தாய்க்கொண்டு விளங்காநின்ற பொற்றொட்டினழகுக்கு மேலே.

(நின்னித்யாதி) உன்னுடைய அழகிதான திருப்பவளத்தில் திருமுத்துக்கள் ப்ரகாசிக்க. (நின்னம்மையித்யாதி) உன்னைப்பிள்ளையாகப் பெற்ற பா(க்)க்யத்தை யுடையளான அவளுடைய மடிமேலே யிருந்து சப்பாணிகொட்டாய். "அம்மணி" என்று அரைக்

"பன்மணி" என்றதில் பன்மையைக்காட்டுகிறார் (மாணிக்கமித்யாதி). "முத்தின்" என்றவிடத்தில் "இன்" என்றதுக்கர்த்தம் (இனிய)என்றது. (பகைத்தொடை) பரபாக (ு) ம். "அன்ன" என்றது-ஸத்ருஶமென்றர்த்தமாய், பிள்ளை அழகு வாசாமகோசர மாகையாலே க்ருஷ்ணனுக்கு ஸத்ருஶமென்றர்த்த மருளிச்செய்கிறார் (வாசாமித்யாதி). "தொட்டின்மேல்" என்று பாடமானபோது தொட்டிலிலேயிருந்து சப்பாணிகொட்டின அழகுக்குமேலே யென்றர்த்தயருளிச் செய்கிறார் (தொட்டினழகுக்குமேலே) என்று.

"அம்ம" என்னவமைந்திருக்க "நின்" என்றதுக்குத் தாத்பர்யம் (உன்னையித்யாதி). தொட்டிலிலே சப்பாணி கொட்டி அங்கு நின்றும் வந்து திருத்தாயார் மடியிலே சப்பாணி கொட்டா யென்கிறாரென்று திருவுள்ளம்.

(க) உ-உ-சு. (உ) ஸஹஸ்ரநாமம்.

ணி'' என்றும். "அம்மணம்'' என்றும் - அரைக்குப்பேர்; ஒக்கலைக் குப் பேர். ஒக்கலையிலே யிருந்து சப்பாணி கொட்டாயென்கிறார். (ஆழியங்கையனே) இவன் சப்பாணி கொட்டும்போது இவன் திருவுள்ளத்தில் கருத்தை யறிந்து திருக்கையிலாழ்வார்களும் நீங்கநின்று இவர் தம்மைப்போலே உகப்பார்களிறே. அருகாழியாகவுமாம்.

"என்மணிவண்ணன் - பன்மணி முத்தின்பவளம்பதித்தன்ன- இலங்கு பொற்றொட்டின்மேல்'' என்றநுவயம். .... .... (ங)

ஸ்வா.—நாலாம்பாட்டு. (தூநிலாவித்யாதி) யசோதை பிள்

குப்பேர். இத்தால் ஸ்ரீநந்தகோபர் தம்முடைய மடியிலிருந்து சப்பாணி கொட்டுகிறதிலும் தாயார் மடியிலிருந்து சப்பாணி கொட்டக்காண்கை தமக்கு உகப்பாகையாலே அத்தைச்செய்ய வேணுமென்று அபேக்ஷித்தாராய்த்து. (ஆழியங்கையனே) திருவாழியை அழகிய திருக்கையிலே உடையவனே யென்னுதல்; "ஆழி'' என்று-திருவாழி மோதிரமாதல். .... .... .... .... .... (ங)

மூ.—தூநிலாமுற்றத்தே போந்துவிளையாட
வானிலாவம்புலீ! சந்திரா! வாவென்று
நீநிலாநின்புகழாநின்ற வாயர்தம் [சப்பாணி. (ச)
கோநிலாவக்கொட்டாய் சப்பாணி குடந்தைக்கிடந்தானே!

வ்யா.—நாலாம்பாட்டு. (தூநிலாவித்யாதி) தூய்தான நிலா

(இத்தால்) என்றது-இப்பாட்டாலென்றபடி. (ஸ்ரீநந்தகோபர்) என்றதுக்கு (அபேக்ஷித்தாராய்த்து) என்றத்தோடந்வயம்.

இதில் நந்தகோபர்த(ூ)சையைஅடைந்துசொல்லுகையாலே, கீழ்ப்ரவேசத்தில் யசோதையின்தசையை ப்ராபித்தாரென்று சொன்னது-ப்ராயிகாபிப்ராயேணவென்று கருத்து. "முதல் பாட்டிலே யசோதைதன்மடியிலேசப்பாணி கொட்டவேணுமென்றபேக்ஷித்தாள்; அதிலும் உகப்பாகையாலே நந்தகோபர் மடியிலிருந்து சப்பாணி கொட்டவேணுமென்றபேக்ஷித்தாள் இரண்டாம் பாட்டில். அங்கே நந்தகோபர் மடியில் சப்பாணிகொட்டின வநந்தரம் க்ருஷ்ணன் தொட்டிலிலே போந்து அங்கே சப்பாணிகொட்டக் கண்டு மீளவும் தம்மடியில் சப்பாணிகொட்டுகையிலும் இனிதாகையாலே, தாய்மடியிலிருந்து கொட்டப்பார்க்கவேணுமென்றபேக்ஷித்தார் மூன்றாம்பாட்டில்,'' என்று ஸங்கதி கண்டு கொள்வது. ... ... ... ... ... ... (ங)

ளையை ஒக்கலையிலே எடுத்துக்கொண்டு தூய்தான நிலாமுற்றத்தி லே புறப்பட்டு, "ஆகாசத்திலே ஸஞ்சரிக்கிற அம்புலீ? சந்திரா ? வா" என்று, "அம்புலீ" என்று பிள்ளையழைக்கும் பேராலே அழைக்கி ருள். (வாவென்று) பிள்ளையோடே விளையாட வாவென்று நியமித் து. (நீ நிலா) நீ நின்று. (நின்புகழாநின்ற) உன்னை, மேன்மை யையும், பிள்ளைத்தனத்தில் நீர்மையையும் சொல்லிப் புகழா நிற்பா ய். (ஆயர்தம்கோ) அறிவுகேட்டாலே தனித்தனியே கர்த் தாக்களாயிருக்கிற இடையரையும் தம்முடையகுணபா(ஶ)வத்தாலே நியமித்து ஆளவல்லராகையாலே "ஆயர்தம்கோ" என்கிருர். (நிலாவ) அவன் நிலைபெற. அவன் ஸத்தை பெற்று வர்த்திக்க. (குடந்தைக் முற்றத்திலே போந்து. (விளையாடவித்யாதி) "ஆகாசத்திலேவர்த் திக்கிற அம்புலீ ! சந்திரா ! விளையாடவா" என்று, அம்புலியையு மழைத்து. (நீ நிலா) நீ நின்று. (நின்னித்யாதி) உன்சேஷ்டிதங் களிலே வித்த (ஞ) ராய்க்கொண்டு உன்னைப்புகழாநிற்கிற ஸர்வகோ (ஶ) பநிர்வாஹகரான உங்கள் ஐயர் உன்னுடைய சேஷ்டிதத்தைக் கண்ட ஹர்ஷத்தாலே உஜ்ஜ்வலமாம்படியாகச் சப்பாணி கொட்ட

அரு.—நாலாம்பாட்டு. (தூநிலாவித்யாதி) (தூய்தான) நிர்மலமான. "வானிலா வம்புலீ சந்திரா விளையாடவா" என்றநவயித்தர்த்தமருளிச்செய் கிருர் (ஆகாசத்திலே யித்யாதி). நிலாவென்றதினர்த்தம் (வர்த்திக்கிற) என் றது. அழைக்கையிலுண்டான ஆதராதிசயத்தாலே "அம்புலீ சந்திரா வா" என்றத்விருக்தியாகையாலே "அம்புலீ விளையாடவா" என்றும், "சந் திரா விளையாடவா" என்றும் வாக்ய பேதம் திருவுள்ளம்பற்றி "விளையாடவா என்றும்" என்று ஸமுச்சயிக்கிறது. (அம்புலியையும்) என்ற சகாரத்துக்கு "உன் ஞேடே அம்புலியையும் விளையாட அழைத்து" என்றர்த்தம். "நின்" என் றத்தையும் "புகழாநின்ற" என்றத்தையும் கோ(ஶ)வுக்கு விசேஷணமாக்கி, அதில், "நின்" என்றது-க்ருஷ்ணஸம்பந்திபரமாய் அந்த ஸம்பந்த விசே ஷத்தைச் சொல்லாநின்று கொண்டு அர்த்தமருளிச் செய்கிருர் (உன்னித் யாதி). "ஆயர்தம்" என்று விசேஷித்ததினர்த்தம் (ஸர்வேத்யாதி). "நிலா வ" என்றதுக்கு - உஜ்ஜ்வலராம்படியென்றர்த்தமாய் அத்தை ஹேதுபூர்வக மருளிச் செய்கிருர் (உன்னுடைய வித்யாதி). (க) "குடந்தையுள் கிடந்த வாறெழுந்திருந்து பேசுவாழிகேசனே" என்கிற பாசுரத்தையுட்கொண்டு

(க) தி-ச-வி-சுக.

கிடந்தானே) (க) "திகழக்கிடந்தாய் கண்டேன்," (உ) "கிடந்தவா றெழுந்திருந்து பேசு" என்னவும் கண்வளர்ந்தருளுகிறவனே ?.

"தூநிலாமுற்றத்தே போந்து-வாநிலா அம்புலீசந்திரா விளையாடவா வென்று-நின்புகழாநின்ற ஆயர்தம்கோ - நிலாவ கொட்டாய் - குடந்தைக்கிடந்தானே-நீநிலாவக்கொட்டாய் சப்பாணி" என்றந்வயம். .... .... .... .... .... .... (ச)

ஸ்வா.— அஞ்சாம்பாட்டு. (புட்டியித்யாதி) மத்த்யமாங்கத்தில் சேறும் புழுதியும். (ந)"சொட்டுச்சொட்டு"என்று துளியாநின்றால் சேறுதன்னடையே உண்டாமிறே. புழுதியளைந்து விளையாடாநின்றால், நனைந்தவிடம் சேறாய் நனையாதவிடம் புழுதியுமாயிறே யிருப்பது. மற்றைப்படியாகிலுமாமிறே;(ச)*உன்னொடு தங்கள்கருத்தாயின. "புட்டி" என்று ஜக(ஃ)நபார்ஶ்வத்துக்குப்பேர். அவதாரத்தில் மெய்ப்பாடு தோன்றும்போது நீஹாரங்களும் வேணுமிறே. (அட்டியமுக்கி) சேற்றையும் புழுதியையும் மேலே கொடுவந்திட்டு வேணும். (குடந்தை யித்யாதி) ஆஶ்ரிதபராதீநனாய்க் கொண்டு திருக்குடந்தையிலே கண்வளர்ந்தருளுகிறவனே? .... .... (ச)

மூ.—புட்டியிற்சேறும் புழுதியும்கொண்டுவந்து
அட்டியமுக்கி யகம்புக்கறியாமே
சட்டித்தயிரும்தடாவினில் வெண்ணெயுமுண் [சப்பாணி(ரு)
பட்டிக்கன்றே! கொட்டாய்சப்பாணி பற்பநாபா! கொட்டாய்

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (புட்டியித்யாதி) மத்த்ய (ஞ்ஜ) மாங்கத்தில் சேற்றையும் புழுதியையும் கொண்டுவந்து (ந) * சொட்டுச் சொட்டென்னத் துளிக்கத் துளிக்கப் புழுதியிலே யிருந்து விளையாடுகையாலே, திருவரையில் நனைந்தவிடம் சேறும், நனையாதவிடம் புழுதியுமாயிறேயிருப்பது. (அட்டியமுக்கி) இப்படியிருக்கிறஆகாரத்தோடேவந்து மேலேஅணைக்கையாலே அந்தச் சேற்றையும் புழு

இந்தபாரதந்த்ர்யம் சப்பாணி கொட்டுகையிலே ஹேதுவாகவருளிச்செய்கிறார் (ஆஶ்ரிதேத்யாதி). ... ... ... ... ... ... ... (ச)

அரு.—அஞ்சாம்பாட்டு. (புட்டியித்யாதி) "புட்டி" என்றதினர்த்தம் (மத்த்யமாங்கத்தில்) என்றது; அதாவது - திருவரையைத்திருவுள்ளம்பற்றி. சேறுண்டாகைக்கு ப்ரஸக்தியருளிச் செய்கிறார் (சொட்டுச்சொட்டித்யாதி).

(க) தி-வாய்-ரு-அ-க- (உ) தி-ச.வி-சுக. (ந) க-க0-க. (ச) க-கூ-அ.

கையாலே உறைக்கப்பூசாநின்றால் நிஷேதிக்கில் “பிள்ளை சீறும்” என்றுபார்த்து மந்தஸ்மிதம் செய்திருக்குமிறே. (அகம்புக்கித்யாதி) உள்ளே புக்குஇவன்காணாமை மறையவைத்த பாத்ரங்களில் தயிரையும்வெண்ணெயையும் அமுதுசெய்யாநிற்கும்.(பட்டிக்கன்றே) பட்டிபுகாமல் வேலியடைத்து வைத்த கர்ஷகனறியாமல் பயிர்களைக் களவிலே போய்த்தின்றுமதிறே பட்டிக்கன்று; அதுபோலே அகம் புக்கு, அறியாமே வைத்தவற்றை நான்அறியாதபடி உன்கையாலே “பட்டிக்கன்றே” என்கிறார். ஸகலஜகத்காரணமான தாமரையைத் திருநாபியிலே யுடையவனைகையாலே “பற்பநாபன்” என்கிறார். (௫)

ஸ்வா.—ஆரும்பாட்டு. (தாரித்தித்யாதி) (தாரித்து) “இவர்களுக்கு ஸ்த்திதி எங்கே? அவர்கள்ஐவர், நாங்கள் நூற்றுவர்” என்

---

தியையும் கொண்டுவந்து மேலேயிட்டு உறைக்கப்பூசி. (அகம்புக்கித்யாதி) ஓடிப்போய் உள்ளேபுக்கு, வைத்தநான்அறியாதபடியாக, சட்டிகளிலே தோய்த்துவைத்த தயிரையும், தடாக்களிலே சேர்த்து வைத்த வெண்ணெயையும் அமுது செய்யாநிற்கும். (பட்டியித்யாதி) பட்டிதின்று திரியும் கன்றுபோலே களவே யாத்ரையாய்த் திரியுமவனே!சப்பாணிகொட்டு. (பற்பநாபா) ஸகலஜகத்காரணமான தாமரையைத் திரு நாபியிலே யுடையவனே! .... ＊ (௫)

மூ.—தாரித்து நூற்றுவர் தந்தைசொற்கொள்ளாது
போருய்த்துவந்து புகுந்தவர் மண்ணாளப்
பாரித்தமன்னர்படப் பஞ்சவர்க்கன்று
தேருய்த்த கைகளால்சப்பாணிதேவகிசிங்கமே! சப்பாணி.(௬)

வ்யா.-ஆரும்பாட்டு. (தாரித்தித்யாதி)“தரித்து”என்கிறவித்தை நீட்டிக்கிடக்கிறது. தரித்து - பொறுப்புண்டாய் என்னுதல்; புத்தி

---

“பட்டிக்கன்றே” என்றதைக் கடாக்ஷித்து “அகம்புக்கு” என்றதுக்கர்த்தம் (ஓடிப்போயுள்ளேபுக்கு) என்றது. ... ... ... ... (௫)

அரு.—ஆரும்பாட்டு. (தாரித்தித்யாதி) (பொறுப்புண்டாய்) என்றது - பாண்டவர்களிடத்தில் கோபத்தை ஸஹித்தென்றபடி. (புத்திபண்ணி) என்றது - க்ருஷ்ணன் சொல்லை ஹிதமாக புத்திபண்ணியென்றபடி. “தாரித்து” என்றதுக்கு “தந்தைசொல்கொள்ளாது” என்றத்தோடந் வயமென்று திருவுள்ளம்பற்றி,“நூற்றுவர்” என்றதுக்கு “மன்னர்” என்றவநந்தரத்திலே

கிற பக்ஷபாதத்தாலே நிருபாதிகபித்ருவசந பரிபாலநம் செய்யாதே. (போருய்த்தித்யாதி) க்ருஷ்ணபக்ஷபாதிகளோடே போரை நடத்துவதாக, யுத்த பூமியிலே முற்பட அணியும் கையும் வகு

பண்ணி யென்னுதல். (நூற்றுவர்) இதுக்கு - மேலே அந்வயம். (தந்தை சொற்கொள்ளாது) (க)"ஸர்வேஷாமேவ லோகாநாம்பிதாமாதாசமாதவ: - ஸர்வேஷாமேவலோகாநாம்பிதாமாதாசமாதவ:" என்கிறபடியே ஸர்வலோகத்துக்கும் பிதாவாகையாலே தங்களுக்கும் பிதாவான நீ இரண்டு தலையையும் சேர்க்கைக்குத் தூதாகவெழுந்தருளி, "பாண்டவர்களும் நீங்களும் பரஸ்பரம் விரோதித்திருக்கவேண்டா, ப்ராப்தி எல்லார்க்குமொக்கும்; ஆனபின்பு, ராஜ்யத்தை ஸமவிபாக(பா)ம்பண்ணி(பு)புஜித்துச்சேர்ந்திருங்கோள்; அதுசெய்யமாட்டிகோளாகில், தலைக்கு இரண்டு ஊராகஅவர்களுக்குப் பத்தூர் தன்னைக் கொடுங்கோள் ; அதுவும் செய்யிகோளாகில் அவர்களுக்குக் குடியிருக்கைக்கு ஓரூர் தன்னையாகிலும் கொடுங்கோள்." என்று, இப்படி அருளிச்செய்த வசநத்தில் ஒன்றையும் கைக்கொள்ளாதே.

(போருய்த்தித்யாதி) பின்பு ரோஷத்தாலே (உ) * வீரபோக்யா வஸுந்தரா - வீரபோக்யா வஸுந்தரா வன்றோ? "யுத்தத்தைப்பண்ணி ஜயித்தவர்கள் ராஜ்யத்தைஆளுங்கோள்" என்றபடியாலே, யுத்தத்தை நடத்துவதாக கர்வோத்தரராய் வந்து யுத்தபூமியிலே புகுந்தவர்களாய், பாண்டவர்களை அழியச்செய்து, பூமிப்பரப்படங்கலும்

அந்வயமென்றருளிச் செய்கிறார் (நூற்றுவரித்யாதி). க்ருஷ்ணன் நூற்றுவர்க்குத் தந்தையோவென்ன வருளிச்செய்கிறார் (ஸர்வேஷாமித்யாதி). "நீ - தூதாக வெழுந்தருளி - இப்படி அருளிச் செய்த" என்றந்வயம். (ங) "பத்தூர் பெறுதன்று பாரதம் கைசெய்த" என்றபாசுரத்தைத் திருவுள்ளம்பற்றியருளிச்செய்கிறார் (தலைக்கித்யாதி). (ஒன்றையும் கைக்கொள்ளாதே) என்றவிடத்தில் (ச)"ஸூச்யக்ரம் ந ப்ரதாஸ்யாமி விநா யுத்தேந கேசவ! ஸூச்யக்ரம் நப்ரதாஸ்யாமி விநாயுத்தேநகேசவ" என்ற வசநமநுஸந்தேயம்.

நூற்றுவர் போருற்றுவருகைக்கும் - க்ருஷ்ணன் கோபித்துச் சொன்ன வார்த்தை ஹேதுவென்றருளிச் செய்கிறார் (பின்பித்யாதி). "மண்ணாளப் பாரித்த" என்றதுக்குத் தாத்பர்யம் (பாண்டவர்களையித்யாதி). (ரு) "க்ருஷ்ணாச்ரயா: க்ருஷ்ணபலா: க்ருஷ்ணநாதாச்ச பாண்டவா: - க்ருஷ்ணாச்ரயா: க்ருஷ்ணபலா:

(க) பார-ஆர-கஅக-ருஎ. (உ) பார-உத்யோ. (ங) உ-க-க.
(ச) பார-உத்யோ. (ரு) பார-த்ரோ-கஅங.உச.

த்துப் புகுந்தவர். (மன்னுளவித்யாதி) பூமியெல்லாம் நாங்களே ஆளவேணுமென்று மநோரதித்த ராஜாக்கள், தழைத்த மரங்களெல்லாம் நின்றவாறறியாமல் பட்டு விழுந்தாப்போலே முடிந்து போக. "மன்னர்" என்கிற பன்மை - "பட" என்ற ஒருமையாலே, "அவர் பட்டார், இவர்பட்டார்" என்கிற பர்வக்ரமமில்லையென்கிறது. "பர்வக்ரமமில்லை" என்றது-சிலர் ப்ராணனோடே நின்றார்களாக இவர் காணாமையாலே.(க)" ஸ்ரீமாந் ஸ்ந்ருசாஷ - ரேயமஸ்தி புரீலங்கா" என்று லங்கையைத் திருவடி காணாதாப்போலே.

(பஞ்சவர்க்கன்று தேருய்த்த கைகளால்) பாண்டவர்களுக்கென்னாதே "ஐவர்" என்றது-முன்பே நூற்றுவரென்று பரிகணிக்கையாலே. (அன்று) தங்கள் வெறுமை தோன்ற நின்றவன்று. "பார்த்தஸாரதி" என்னும்படி ஆயுத மெடுக்க வொண்ணா தென்று விலக்குகையாலே தேர்க்காலாலே துகைத்தானிறே. உய்த்தல்-நடத்தல். தேருய்த்தகைகளால் ஆஶ்ரிதபாரதந்த்ர்யம் அங்கே உண்டானாப்போலே, இங்கும் என்னபேக்ஷக்கிடாகச்செய்தருள வேணுமென்று ப்ரார்த்திக்கிறார். (தேவகிசிங்கமே) தேவகிபெற்ற, ராஜகுலத்வமான கர்வம் தோன்ற ஸிம்ஹக்கன்று போலே இருக்கிறவனே?. "தாருய்த்து" என்றுபாடமானபோது "தார்" என்று-அணிவகுக்கையாய், அணிவகுத்தென்றபடி.

---

தாங்களே ஆளுவதாகப்பாரித்த ராஜாக்களான நூற்றுவரும், ஒருவர் சேஷியாதபடி பட்டுப் போம்படியாக. (பஞ்சவர்க்கித்யாதி) உன்னையல்லது வேறு துணையில்லாத பாண்டவர்கள் ஐவர்க்கும், தங்கள் வெறுமைதோன்ற நின்ற வன்று, "ஆயுதமெடுக்க வொண்ணாது" என்கையாலே ஸாரத்யத்திலே அதிக்ருதனாய் ப்ரதிபக்ஷமித்தனையும் தேர்க்காலிலே நெரிந்து போம்படி, தேரைநடத்தின கைகளாலே சப்பாணி கொட்டவேணும். (தேவகி சிங்கமே) தேவகிப்பிராட்டி வயிற்றில்பிறப்பாலே ஸிஹ்மக்கன்றுபோலே செருக்கியிருக்கிறவனே! சப்பாணி. .... .... .... .... * (௬)

---

க்ருஷ்ணநாதாஶ்ச பாண்டவாः" என்கிற வசநத்தையுட்கொண்டர்த்தமருளிச் செய்கிறார் (உன்னையல்லதித்யாதி). "மன்னர்பட" என்றத்தைக் கடாக்ஷித்து "தேருய்த்த" என்றதுக்கர்த்தமருளிச்செய்கிறார்.(ஆயுதமித்யாதி).(௬)

---

(க) ரா-ஸு-சங-உ௫.

"தந்தைசொற்கொள்ளாது தாரித்து மண்ணுளப்பாரித்து மன்னர், நூற்றுவர்-போருய்த்து வந்து புகுந்தவர் பட-பஞ்சவர்க்கு அன்று தேருய்த்த கைகளால்- தேவகி சிங்கமே சப்பாணி" என்றந்வயம். .... .... .... .... .... .... .... (௬)

ஸ்வா.— ஏழாம்பாட்டு. (பரந்தித்யாதி) ஆயாமவிஸ்தாரங்கள் எல்லைகாணவொண்ணாதபடியாகப் பரந்து, (இட்டுநின்ற படுகடல் தன்னை) தன்னை ஆஶ்ரயித்து வந்தார்க்குத் தன் பக்கலுண்டான ரத்நாதிகளைக் கொடுத்து வற்றாமல் நின்ற ஸமுத்ரந்தன்னை. "படு" என்று-ஆழ்தல்; ரத்நாகரமாதல். (இரந்தித்யாதி) முன்பு இதுசெய்து போந்த ஔதார்யத்தைக் கணிசித்தும், (க) "ஸமுத்ரம் ராகவோ ராஜா ஶரணம் கந்துமர்ஹதி- ஸமுத்ரம் ராகவோ ராஜாஶரணம் கந்துமர்ஹதி" என்கிற உபதேசத்தாலேயிறே இவர் தாம் சரணம் புக்கது. அது பலிப்பது குணாதிகவிஷயத்திலேயிறே. தன்னை இரந்திட்டகைமேலே திரைகளை எறிந்து கொண்டு மோதவிட.

மூ.—பரந்திட்டு நின்ற படுகடல் தன்னை
இரந்திட்டகைமே லெறிதிரைமோதக்
கரந்திட்டுநின்ற கடலைக் கலங்கச் [ணி. (எ)
சரந்தொட்டகைகளால் சப்பாணி சார்ங்கவிற்கையனே! சப்பா

வ்யா.—ஏழாம்பாட்டு. (பரந்தித்யாதி). (உ) "அப்ரமேயோ மஹோததி: - அப்ரமேயோமஹோததி:" என்கிறபடியே ஒருவராலும் எல்லைகாணவொண்ணாதபடி விஸ்தீர்ணமாய்நின்ற ஆழ்ந்த கடலானது. "படு" என்று - ஆழம். அன்றிக்கே - ரத்நாதிகள் படுகிற கடலென்னுமாம். (தன்னையித்யாதி) (௩) "அஞ்ஜலிம் ப்ராங்முக: க்ருத்வா ப்ரதிஶிஶ்யே மஹோததே:- அஞ்சலிம்ப்ராங்முக: க்ருத்வா ப்ரதிஶிஶ்யே மஹோததே:" என்கிறபடியே- "லங்கையிலே போம்படியாக வழி தரவேணும்" என்று தன்னைக்குறித்துச் சரணம் புகுந்த கையின் மேலே அலையெறிகிற திரைகளானவற்றை மோத.

அரு.—ஏழாம்பாட்டு, (பரந்தித்யாதி) (அலையெறிகிற திரைகளானவற்றை) என்றது - முன்னலையைத்தள்ளுகிற பின்னலைகளானவற்றை யென்றபடி. யத்வா, "அலையெறிகிற" என்று முழுச்சொல்லாய், திரைக்கிளப்பத்தைச் சொல்லுகிற தென்னவுமாம். அதாவது - கிளம்பாநின்றுள்ள வென்றபடி. (ஆழ்ந்த கடலானது) என்றதுக்கு (திரைகளானவற்றை) என்றத்தோடந்வயம். "மோத" என்றது. அடிக்கவென்றபடி.

(க) ரா-யு-கக-௩க. (உ) (௩) ரா-யு-உக-க.

(கரந்தித்யாதி) சரண்யத்வத்தை மறைத்து நின்று, ஸமுத்ரம் ஹ்ருதயம் கலங்கி வந்து திருவடிகளிலே விழும்படியாக, (க) "சாபமாநய-ஸௌமித்ரே-சாபமாநய-ஶராம்ஶ்ச" என்று சரந்தொட்ட கைகளால். "கடல்" என்று-நியந்த்ருத்வேந விஶேஷ்யபர்யந்தமாக அபிமாநியான வருணனைக் காட்டுகிறது. (சார்ங்கவில்கையனே) திருக்கையிலே ஸ்ரீஸார்ங்கம்திருவில்லை வாங்கினபோதே சரந் தொடுகைமிகையாம்படியிறே, ஸமுத்ரம் கீழ் மண்கொண்டு மேல் மண்ணெறியும்படியாக பீ(ஷீ)தியாலேகலங்கினபடி. .... .... (எ)

( கரந்தித்யாதி ) முகம்காட்டாதே மறைந்துநின்ற கடலை, பீ (ஷீ) தியாலே கீழ்மண்கொண்டு மேல் மண்ணெறியும்படி கலங்க, (க) "சாபமாநய ஸௌமித்ரே ஶராம்ஶ்சாஶீவிஷோபமாந் -சாபமாநய ஸௌமித்ரெ ஶராம்ஶ்சாஶீ விஷோபமாந்" என்கிறபடியே சீறி, சரம்தொட்ட கைகளாலே சப்பாணி. "கடல்" என்கிற சப்தத்தாலே-அபிமாநியான வருணனைச் சொல்லுகிறது. (சார்ங்கவிற்கையனே) அப்போது, கையும் வில்லுமாய் நின்ற அழகையுடையவனே! என்னுதல்; கையிலே வில்லை வாங்கினபோதை வீரப்பாட்டைச் சொல்லுதல். .... .... .... .... .... .... .... * (எ)

மூ.—குரக்கினத்தாலே குரைகடல்தன்னை
நெருக்கியணைகட்டி நீணீரிலங்கை
அரக்கரவிய வடுகணையாலே
நெருக்கியகைகளால்சப்பாணி நேமியங்கையனேசப்பாணி (அ)

"கரந்து" என்றதினர்த்தம் (முகங்காட்டாதே மறைந்துநின்ற) என்றது. (மறைந்துநின்ற கடலை) என்றவநந்தரம் "குறித்து" என்று சேஷம். "கலங்கச்சரம் தொட்ட" என்கிற ஸமபிவ்யாஹாரலப்யமான சீறுதலைப்ரமாண பூர்வகமாக வருளிச் செய்கிறார் (சபமாநயேத்யாதி). த்ருஷ்டமான ஸமுத்ரம் முகங்காட்டாதிருக்குமோ வென்ன வருளிச்செய்கிறார் (கடலென்கிற வித்யாதி). சார்ங்கம் ஆபரணகோடியும் ஆயுதகோடியுமாயிருக்கையைப்பற்றி இரண்டு தாத்பர்யம் அடைவே யருளிச் செய்கிறார் (அப்போது இத்யாதி வாக்யத்வயத்தாலே). ... ... ... ... ... ... (எ)

அரு.-எட்டாம்பாட்டு.(குரக்கித்யாதி) "குரைகடல்தன்னை" என்னவமைந்திருக்க, "குரக்கினத்தாலே" என்றுவிசேஷிப்பானென்னென்ன, ஸாகா(ஶா)ம்ருகங்களுடையஸ்வபா(வா)வத்தைத்திருவுள்ளம்பற்றி தாத்பர்யமருளிச்செ

(க) ரா-யு-உக-உஉ.

ஸ்வா.—எட்டாம்பாட்டு. (குரக்கித்யாதி) ஸ்ரீவாநர ஸமூஹத்தாலே, பெரிய முழக்கத்தையுடைத்தான ஸமுத்ரத்தை இரண்டருகிலும் தேங்கிப்போரும்படி நடுவே அணைகட்டி. குரங்குகள் வர்த்திப்பது பர்வதாக்ரங்களிலும், வர்ஷஜலபீதியாலே பர்வதகுஹைகளிலுமிறே. அவற்றுக்கும் ஸமுத்ரத்துக்கும் என்னசேர்த்திதான். அவன் நினைத்தால் சேராததில்லையிறே. (நீணீரித்யாதி) "கடலை அகழாகவுடையலங்கையை இருப்பிடமாகவுடையோம்" என்கிற கர்வத்தையுடையராய், போ(ஃ)க்த்ருத்வ நிபந்தநமான ஸ்வாதந்த்ர்யாக்நிதோன்றவர்த்திக்கிறவர்களிறேராக்ஷஸர். அந்தஅக்நியைவிளக்குப்பிணம்போலேஉருமாய்ந்துபோம்படிஅடுகணையாலேஅவித்து,*(அவர்கள் வயிற்றிலேயாம்படி) நெருக்கினானிறே. குரக்கினத்தாலே கடலை

வ்யா.—எட்டாம்பாட்டு. (குரக்கித்யாதி) நீருக்கு அஞ்சி உயர்ந்த நிலங்களிலே வர்த்திக்கும் குரங்குகளினுடைய திரளாலே, ஆழத்தாலும்பரப்பாலும்திரைக்கிளப்பத்தையுடைத்தாய்க்கொண்டு கோ(ஃ)ஷியாநின்ற ஸமுத்ரத்தை, இரண்டருகும் தேங்கிப் போரும்படிநடுவேஅணைகட்டி. (நீணீரித்யாதி)(க)"நீள்கடல்சூழிலங்கை" என்கிறபடியே-பரந்தகடலை அகழாகவுடைத்தான லங்கையை யிருப்பிடமாகவுடைய ராகையாலே, "இந்த அரண் உண்டாயிருக்க, நமக்கொரு குறையுமில்லை" என்று செருக்கி யிருக்கும் ராக்ஷஸரானவர்

ய்கிறார்(நீருக்கித்யாதி). இத்தால்அகடிதகட(ஃ)நம்தோன்றுகிறதென்றுகருத்து. "கடலை" என்றால்போந்திருக்க "தன்னை" என்றத்தால்ஸூசிதமான அதிசயத்தையும், "குரை" என்றவிசேஷணத்தையும், சொல்லுவானென்னென்ன (உ) "பரந்திட்டுநின்றபடுகடல்தன்னை" என்கிற பாசுரத்தையுட்கொண்டு தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஆழத்தாலுமித்யாதி). (கொண்டு) என்ற பர்யந்தம் "தன்னை" என்றுசொன்ன அதிசயத்தைச்சொல்லுகிறது. ஆகஆழத்தையும் பரப்பையுமுடைத்தாகையாலும், நீருக்கும் கோஷத்துக்கும் குரங்குகள் பயப்படுகையாலும், அணைகட்டுகையும்துர்க்க(ஃ)டமென்றுதோற்றுகைக்காக,விசேஷித்தாரென்றுகருத்து. "நெருக்கி" என்றதினர்த்தம்(இரண்டருகுமித்யாதி). நெருக்குதல்-ஒட்டுதல். "நீணீர்" என்றவிடத்தில் "நீர்" என்று-ஸமுத்ரமென்றுகொண்டு ப்ரமாணபூர்வகமர்த்தமருளிச்செய்கிறார் (நீள்கடலித்யாதி). அகழுக்குப்பரப்புவேண்டுகையாலே "நீள்" என்றத்தை "பரந்த" என்றது. "நீணீரிலங்கை" என்றத்தோடு "அரக்கர்" என்றுசேரச்சொன்னத்தால் பலிதம் (இந்த

(க) தி-வாய்-க-கூ-எ. (உ) க-சு-எ. * குண்டலிதம் க்வாசித்கம்.

நெருக்கி அடுகணையாலே அரக்கரை நெருக்குகையாலே, அவன்ஏவுங் காலத்து "குரங்கு, அம்பு" என்கிற வாசிகண்டிலோம். அடுகணை தான், "அரக்கரவிய" என்கையாலே நெருப்புக்கு நீராய், (க) "ஸாகரம் சோஷயிஷ்யாமி" என்கையாலே நீருக்கு நெருப்பாயுமிருக்குமிறே. ஒருவாலி, ஒருகரதூஷணாதிகள், ஒரு மாரீசன் முதலானோரைக் கொல்லுகையாலே "அடுகணை" என்று நிரூபகமாகிற தென்னவுமாம். நெருக்கியகைகளால் சப்பாணி. (நேமியங்கையனே) விரோதி நிரஸநத்துக்கு அடுகணைதானே அமைந்திருக்கையாலே, திருவாழி - அழகுக்கு உடலாமித்தனையிறே. அம் - அழகு. அன்றிக்கே * கருதுமிடம் பொருதுபோகைக்கு, நேமி, அம்பு, குரங்கு என்றிரு வாசியில்லை போலே காணும். .... (அ)

ஸ்வா—ஒன்பதாம்பாட்டு. (அளந்திட்டவித்யாதி) அவன் நாளுக்குப் பொருந்தின பரிமாணமாகவும், புரையடங்கவும் அளந்திட்டகல்தூணை, "தந்னையொழிய தேவதாஸத்பா(வ)வம்நாஸ்தி"

---

கள் முழுக்காயாக அவியும்படியாக, ப்ரதிபக்ஷநிரஸநசீலமான அம்புகளாலே நெருங்கப்பொருத கைகளாலே சப்பாணி. (நேமியங்கையனே சப்பாணி) திருவாழியை அழகிய திருக்கையிலேயுடையவனே! சப்பாணி. விரோதி நிரஸநத்துக்கு அடுகணைதானே அமைந்திருக்கையாலே, திருவாழி அழகுக்குடலாமித்தனையிறே. (அ)

மூ.—அளந்திட்டதூணை யவன்தட்டவாங்கே
வளர்ந்திட்டு வாளுகிர்ச் சிங்கவுருவாய்
உளந்தொட்டிரணிய னொண்மார்வகலம் [ணி. (கூ)
பிளந்திட்டகைகளால் சப்பாணி பேய்முலையுண்டானே! சப்பா

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (அளந்தித்யாதி) "முன்பே நரஸி

---

வித்யாதி). (முழுக்காயாகஅவியும்) என்றது-காய்காயாம்படி அவிஞ்சுபோகை. "அடு" என்றதினர்த்தம் (ப்ரதிபக்ஷத்யாதி). கணையென்றதினர்த்தம் (அம்புகளாலே) என்றது. "நெருக்கிய" என்றத்தால் பலிதார்த்தம் (நெருங்கப்பொருத) என்றது. ... ... ... ... ... ... ... (அ)

அரு.— ஒன்பதாம்பாட்டு. (அளந்தித்யாதி) தூணையென்னவமைந்திருக்க "அளந்திட்டதூணை" என்றுவிசேஷித்ததுக்குபா(வ)வம் (முன்பேயித்யாதி). மேல் "அவன்" என்றத்தை இங்கும்கூட்டிக்கொள்வதாகத் திருவுள்

---

(க) ரா-யு-உக-உஉ.

என்றிருக்கிற அவன் தட்ட. (ஆங்கித்யாதி) அவன் தட்டினவிடத்தே வளருகிற. (சிங்கவுருவாய்) ஊர்த்த்வ நரஸிம்ஹமாக வளர்ந்திட்டு. ஸ்ரீகஜேந்த்ரன் "நாராயணா! வாராய்" என்றானிறே. வ்யாப்தியிலும் விசேஷ்யபர்யந்தமான அஸ்தித்வமுண்டாயிருக்கச்செய்தேயும் அது பாராமல்(க)"மணிவண்ணா நாகணையாய்"என்றவோபாதியிறேஇவர் நாராயணவென்றதும். இங்கு அங்ஙனன்றிக்கே, அஸ்தித்வ நாஸ்தித்வவிகல்பம் தோன்றுகையாலே (உ) "எங்குமுளன்" என்று வ்யாப்தியைக் கணிசித்து அதுக்கொரு ஹேதுவேண்டுகையாலே "கண்ணன்" என்ற பா (ஞ) கவதனைக் காய்ந்த பொறாமையாலே

---

ம்ஹத்தை வைத்து நட்டதூண்" என்ன வொண்ணுதபடி தானே தனக்குப் பொருந்தப்பார்த்து அளந்து நட்டதூணை. (அவன் தட்ட) வேறேசிலர் தட்டில், கையிலே அடக்கிக்கொண்டு வந்து தூணிலே பாய்ச்சினர்களென்னவொண்ணுதபடி அவன்தானே, (உ) "எங்கு முளன்" என்று ப்ரஹ்லாதன் பண்ணின ப்ரதிஜ்ஞை பொறுமல், (ந) "பிள்ளையைச்சீறிவெகுண்டுதூண் புடைப்ப" என்கிறபடியே அவனைச்சீறி, அந்தச் சீற்றத்தினுடைய அதிசயத்தாலே, "ஆனால், நீ சொல்லுகிறவன் இங்கில்லை" என்று அழன்று அடிக்க. (ஆங்கே) அடித்த விடமொழிய ஸ்த்தலாந்தரத்திலே தோன்றினும் "இவன் இங்கில்லை" என்ற ப்ரதிஜ்ஞை நிலைநின்றதாமென்று, அத்

---

ளம்பற்றியருளிச்செய்கிறார் (தானே) என்று. (தான்) ஜ்யோதிஶ்ஶாஸ்த்ரஜ்ஞனுமாய்சில்பஶாஸ்த்ரஜ்ஞனுமானதானே. (பொருந்தப்பார்த்து)என்றது-சந்த்ரதாராபலமுண்டாகப்பார்த் தென்றபடி. "அளந்திட்ட" என்றது- தேரைத்தப்பளைமுதலானவையில்லாமல் உள்ளும்புறம்புமாராய்ந்திட்ட வென்றபடி. "ஸர்வம்வாக்யம் ஸாவதாரணம்" என்கிறந்யாயத்தையுட்கொண்டு அவனேதட்ட என்றர்தமாக்கி அவதாரணதாத்பர்யமருளிச்செய்கிறார் (வெறேயித்யாதி). (கையிலே) என்றவநந்தரம் "நரஸிம்ஹத்தை" என்றுசேஷம். (அவன்றானே) என்றதுக்கு (அழன்றடிக்க) என்றத்தோடந்வயம். தட்டுகைக்கு ஹேதுவை யருளிச்செய்கிறார் (எங்குமுளனித்யாதி). (ஆனால்) என்றது - எங்கு முளனானலென்றபடி. (ஆனால்) என்றவநந்தரம் "இங்குமுண்டாகவேணுமே" என்று சேஷம். (அழன்று) எரிந்துகொண்டு. வளருகைக்கு அவதியை யருளிச்செய்யு மிடத்தில் வத்த்ய

---

(க) சிறி-திரு-ருo. (உ) தி-வாய்-உ-அ-கூ. (ந) தி-மொ-உ-ந-அ.

யிறே, முன்பு தன்னளவில்நாஸ்திக்யத்தாலே அவன்பண்ணினப்ராதிகூல்யமெல்லாம் பொறுத்துப் போந்தவன், இப்போது அவன் புடைத்த அவ்விடந்தன்னிலே அப்பொழுதே அவன் வியத்தோன்றிற்றும். இத்தால் "அங்கு" என்கையாலே தேசாந்தரவ்யாவ்ருத்தியும், "அப்பொழுது" என்கையாலே காலாந்தரவ்யாவ்ருத்தியும், "அவன்வீய" என்கையாலே தேஹாந்தரவ்யாவ்ருத்தியும் தோற்றினப்போலே, "அவன்தட்டஆங்கே" என்றபோதே அவையெல்லாம் தோற்றித்திறே. திவ்யாயுதங்களையும் நிறுத்தித்தோன்றினப்ரகாசத்தாலேயிறே "வாளுகிர்" என்கிறது.

(உளந்தொட்டு) அவனுடைய ஹ்ருதய பரீக்ஷைசெய்து. இவன் நலிவு ப்ரஹ்லாதனுக்குத் தட்டாமையாலே செருக்குவாடி அநுகூலிக்கவுமாம். "இனியாகிலும் ஒரு அஞ்ஜலி பண்ணாய்" என்று அவன்உபதேசிக்கையாலே கீழ்நாளையஅபராதத்தை நினைத்துஅநுத

தூணில் அவன் அடித்த விடந்தன்னிலே. (வளர்ந்திட்டு) (க) "பரியவிரணியன்" என்னும்படி பருத்துவளர்ந்த வடிவை யுடையனவன் கீழ்ப்படும்படியாகத்தான் வளர்ந்து. (வாளுகிர்ச்சிங்கவுருவாய்) அஸ்த்ர சஸ்த்ரங்களில் ஒன்றாலும் படக்கடவனல்லனாகவும், தேவாதி சதுர்வித ஜாதியிலுள்ளவற்றின் ஒன்றின் கையில் அகப்படக்கடவனல்லனாகவும், ப்ரஹ்ம ருத்ராதிகள் கொடுத்த வரத்துக்கு விரோதம் வாராதபடி, ஒளியையுடைத்தான உகிர்களையுடைய நரஸிம்ஹரூபியாய்.

(உளம்தொட்டு) "எங்குமுளன்" என்று ப்ரஹ்லாதன் சொன்னபடியே, தான் "இல்லை" என்று சொன்ன ஸ்தலந்தன்னிலே "உண்டு" என்னும்படியாகத் தோற்றுகையாலும், தான் கொண்டவரத்தில் ஒன்றிலும் அகப்படாத வடிவைக்கொண்டு

(ஸ்ரீ)னை ஹிரண்யனை அவதியாக வருளிச்செய்கிறார் (பரியவித்யாதி). வாளுகிர்ச் சிங்கவுருவாகைக்கு ஹேதுபூர்வகம் சப்தார்த்தமருளிச்செய்கிறார் (அஸ்த்ரேத்யாதி). "வாள்" என்றதினர்த்தம் (ஒளியையுடைத்தான) என்றது.

"உளம்" ஹ்ருதயம், "தொட்டு" பரீக்ஷைபண்ணி யென்று சப்தார்த்தமாய் கீழோடே ஸமபிவ்யாஹாரத்தால்வந்த அர்த்தங்களை, பீ(ஸ்ரீ)தியாலேஅநுகூலிக்கைக்கு ஹேதுக்களாக்கி, அர்த்தமருளிச் செய்கிறார் ( எங்குமித்யாதி ). "அபிஷேகமானது பொடிபடும்படியாகவும், கண்கள் பிதுங்கும்படியாகவும், வேதனைகள் பொறுமல் வாயலறும்படியாகவும், தலையைப்பிடித்து நெரித்து

(க) தி-மொ-௯-௪-௪.

பித்து அநுகூலிக்கவுமாம். "நாஸ்தி" என்ற விடத்தில் "அஸ்தி" என்னும்படி தோன்றுகையாலே அவன் வ்யாப்தியில் ஸத்பாவத்தை நினைத்து லஜ்ஜையாலே அநுகூலிக்கவுமாம். "உக்ரம்" "வீரம்" என்கிற கொடிய வடிவைக் காண்கையாலே பீ(ஃ)திமூலமாக அநுகூலிக்கவுமாம். தன்னுடைய ப்ரதிஜ்ஞாசக்தி குலைந்த பின்னும் ராவணன்-(க) "చచాలచాపఞ్చముమోచవీరః - சசாலசாபஞ்சமுமோசவீரஃ" என்றபின்னும் வெறுங்கை வீரனாய்ப் போக்குவரத்துச் செய்தானிறே; அதுவுமில்லாத அசக்தியாலே அநுகூலிக்கவுமாம். (உ) "வாய்தகர்த்து" என்றும், (ங) "உரத்தினில் கரத்தைவைத்து" என்றும் (ங) "உகிர்த்தலத்தை யூன்றினாய்" என்றும் பர்வக்ரமம் தோன்றுகையாலே வ்யஸநபரம்பரைகளாலே அநுகூலிக்கவுமாம். இன்னமும் "இப்புடைகளிலே இப்போது அநுகூலிக்குமோ" என்று பார்த்ததிறே. (இரணியனொண்மார்வகலம்) (ச) "பிறையெயிற்றினில்விழி" என்றநெருப்பையுமிழ, நெருப்பின் முகத்தில்பொன்போலே பொன்னுருகி நிறம் பெறுகையாலே "ஒண்மார்பு" என்கிறார். திருவுகிர்கள்சேரவிழுகைக்குஇடம்பொருகையாலே "அகலம்"

தோற்றுகையாலும் (ரு) "சிரம்பற்றி முடியிடியக் கண்பிதுங்க வாயலறத் தெழித்தான்" என்கிறபடியே ஓரொன்றே துஸ்ஸஹமாம்படி பண்ணின பீடாவிசேஷங்களாலும், பீ (ஃ) தியாலே நெஞ்சிளகி அநுகூலிக்கக்கூடுமோவென்று ஹ்ருதய பரீக்ஷைபண்ணி. (இரணியனொண்மார்வகலம்) ஹிரண்யனுடைய ஒள்ளியதாய் விஸ்த்ருதமான மார்வை. ஒண்மையாவது - நரஸிம்ஹத்தினுடைய கோபாக்நியாலும் தன்னுடைய உதரத்தில் பயாக்நியாலும் பிறந்த பரிதாபத்தாலே அக்நி முகத்தில் பொன்போலே உருகிப் பதம் செய்து ஒளிவிடுகை. இத்தால் - திருவுகிர்க்கு அநாயாஸேந கிழிக்கலாம்படியான படியைச்சொல்லுகிறது. "அகலம்" என்கையாலே- வரபலபுஜபலங்க

ப்ரஹ்லாதனுடைய விரோதிபோகப் பெற்றோம், என்னும் ப்ரீதியாலே ஆர்ப்பரவம் செய்தவன்" என்று சிரம்பற்றி யித்யாதி பாசுரத்துக்கர்த்தம். "இரணியன் ஒண்ணகல் மார்பு" என்றந்வயித்து அர்த்தம் (ஹிரண்யனித்யாதி). (பதம்செய்து)- பக்வமாய். (இத்தால்) என்றது-ஒண்மை யென்றத்தாலென்

(க) ரா-யு-ருகூ-கசo. (உ)பெரியதிரு-ஙரு. (ங) தி-ச-வி-உரு.
(ச) தி-மொ-உ-ங-அ, (ரு) ச-கூ-அ.

என்கிறது.(பிளந்திட்டகைகளால்)(௧)[பூங்கோதையாள்வெருவ]"இவன் முருட்டெலும்பிலே உறைக்குமாகில் என்வருகிறதோ" என்று வெருவும்படியிறே பிளந்திட்டது. இவர் பிளந்தபின்பும் திருவிரல்களில் உளைவுண்டாகில் தெரியுமென்றிறே-சப்பாணி கொட்டென்கிறதும். (பேய்முலையுண்டானே) இங்கு ஒருளைவு காணாமையாலே "பேய்முலையுண்டு பிழைத்தவனுக்கு ஒருளைவு வருமோ" என்று தேறுகிறார். (௯)

வ்வா.—பத்தாம்பாட்டு.— (அடைந்தித்யாதி) (அமரர்கள் மிடைந்தடைந்திட்டு) " சாபோபஹதரான இந்த்ராதிதேவர்கள் நெருங்கிவந்து "எங்களை ரக்ஷிக்கவேணும்" என்று ஆஶ்ரயித்தபடி

ளாலே மிடியறவளர்ந்த பரப்பாலே திருவுகிர்கட்கெல்லாம் இரைபோந்தபடியைச்சொல்லுகிறது. (பிளந்தித்யாதி) (௨) " உடலகமிருபிளவாக்கையில் நீளுகிர்ப்படையது வாய்த்தவனே" என்கிறபடியே, திருவுகிர்களாலே இரண்டு கூறாகப் பிளந்து பொகட்ட திருக்கைகளாலே சப்பாணி. (பேய்முலையித்யாதி) அவனைப்போலே ப்ராதிகூல்யம் தோற்ற நிற்கையுமன்றிக்கே, (௩) " தாயாய்வந்த பேய்" என்கிறபடியே வஞ்சகையாய்வந்த பூதனையுடைய முலையை ப்ராணஸஹிதமாக உண்டு முடித்தவனே! சப்பாணி. .... (௯)

மூ.—அடைந்திட்ட மரர்களாழ்கடல்தன்னை
மிடைந்திட்டு மந்தரம் மத்தாகநாட்டி
வடம்சுற்றி வாசுகிவன்கயிறாக [பாணி (௧௦)
கடைந்திட்டகைகளால்சப்பாணி கார்முகில்வண்ணனே! சப்

வ்யா.—பத்தாம்பாட்டு. (அடைந்தித்யாதி) துர்வாஸஶ்ஶாபோபஹதராய்,அத்தாலேநஷ்டைஶ்வர்யராய்,அஸுராக்ராந்தராய், றபடி. (மிடி) ஸங்கோசம். "வாளுகிர்" என்றத்தை பிளக்கைக்கு ஸாதநமாகத் திருவுள்ளம்பற்றி ப்ரமாண பூர்வகம் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (உடலகமித்யாதி). ஹிரண்யாஸுர நிரஸநாநந்தரம் பூதநாநிரஸநம் சொல்லுகையாலே, அவனிலும்வஞ்சகையாலே க்ரூரையென்று திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறார் (அவனையித்யாதி). ... ... ... ... ... (௯)

அரு.—பத்தாம்பாட்டு. (அடைந்தித்யாதி) "அமரர்கள் அடைந்திட்டு" என்றந்வயித்து கடலைக் கடைகைக்கும், அவர்கள் சரணமடைகைக்கும் ஹேதுக்களை அருளிச்செய்யாநின்றுகொண்டு ப்ரமாண பூர்வக மர்த்தமருளிச்செய்கிறார் (துர்வாஸேத்யாதி). இவர்கள்முன்பே அமரராகில் சரணம் புக

(௧) ௧-திருவ-௨௩. (௨) தி-மொ-௫-௩-௩. (௩) தி-மொ-௧-௫-௬.

யாலே அவர்களுக்காக அம்ருதமதநம் செய்வதாக, அத்யகாதமான க்ஷீராப்தியை ஓஷதிவிசேஷத்தாலே தத்ய (ద్ద్య) வஸ்த்தமாக்கி அதிலே மந்தரத்தை (க) "மலைஆமைமேல் வைத்து" என்கிறபடியே மத்தாக நாட்டி. (இட்டு) கடைவதாகஇட்டு. "நாட்டி" என்றது- கூர்மாகாரத்தினுடைய முதுகில் மலைசெல்லாதபடி பாலுறைவு தாங்குகையாலேயிறே இட்டு நாட்டவேண்டிற்று.

---

அமரத்வஸாபேக்ஷரான தேவர்கள் (உ) "శరణాన్త్వామనుప్రాప్తాస్సమస్తా దేవతాగణాః-சரணம்த்வாமநுப்ராப்தாஸ்ஸமஸ்தாதேவதாகணாஃ" என்கிறபடியே ரக்ஷித்தருளவேணுமென்று சரணம்புகுர. (அடைந்திட்டு) என்கிற வினையெச்சம் திரிந்து, அடைந்திட என்னும் பொருள் பெற்றுக் கிடக்கிறது. (ங) "நலங்கழல் வணங்கி" என்கிற விது திரிந்து, வணங்க வென்னும் பொருளாகிறப்போலே. (ஆழ்கடலித்யாதி) அத்யகா (ాగా) தமான க்ஷீராப்தியை நம்முடைய படுக்கையென்று பாராதே நெருக்கி. (மந்தரமித்யாதி) (ச) "మన్థానం మన్దరం కృత్వా - மந்தாநம் மந்தரம் க்ருத்வா" என்கிறபடியே மஹாசலமான மந்தரத்தைக் கடையும் மத்தாக நாட்டி.

---

ப்ரஸக்தியில்லையே யென்ன வருளிச்செய்கிறார் ( அமரத்வஸாபேக்ஷரான ) என்று. "இவ்வமரத்வஸாபேக்ஷதையிலேஅஸுராக்ராந்ததைஹேது, அதிலே கஷ்டைம்வர்யதை ஹேது, அதுக்கு ஶாபம் ஹேது" என்று திருவுள்ளம். "அடைந்திட்டு" என்று ல்யப்ப்ரத்யாந்தமான இச்சப்தம்(சரணம்புகுர) என்ற இவ்வர்த்தத்தைக் காட்டும்படி யெங்ஙனே யென்ன வருளிச்செய்கிறார் (அடைந்திட்டித்யாதி). (வினையெச்சம்) என்றது-க்ரியாஸங்கோசம். அவ்யயமென்றபடி. (திரிந்து) ப்ருக்ருதார்த்தாநுகுணமாக சிக்ஷிக்கப்பட்டு. இங்ஙன் பொருளாகவேண்டியது - "மிடைந்திட்ட மத்தாகநாட்டி வடம் சுற்றிக் கடைந்திட்ட" வென்று சொல்லப்பட்ட க்ரியைகளோடே "அடைந்திட்டு" என்கிற க்ரியை ஸமாநகர்த்ருகமல்லாமையாலே யென்றுஹ்ருதயம். இப்படி ல்யப்ப்ரத்யாந்தமானவிது திரிந்த விடமுண்டோ வென்ன வருளிச் செய்கிறார் (நலங்கழலித்யாதி). கடலென்றத்தாலே அகாதத்வம் தோற்றி யிருக்க "ஆழ்" என்று விசேஷித்ததுக்குத் தாத்பர்யம் (அத்யகாதமான) என்று. "தன்னை" என்று விசேஷித்ததின் தாத்பர்யம் (நம்முடைய வித்யாதி).

---

(க)ச-திரு-சக. (உ) வி-பு-க-கூ-சாரு. (ங) தி-வாய்-க-ங-அ. (ச)வி-பு-க-கூ-அச.

இப்படி ஊன்ற நாட்டின மந்தரத்திலே பெருந்தேர் நடத்தும் வடம்போலே யிருக்கிற வாஸுகியை வலிய உயிர்க்கயிறாகச்சுற்றி. (கடைந்திட்டகைகளால் சப்பாணி) (கார்முகில்வண்ணனே) லோகோபகாரமாக நீர்கொண்டெழுந்த காளமேகம்போலே யிருக்கிற திருமேனியையுடையவனே! .... .... .... .... .... (க0)

அவ.—நிகமத்தில் இத்திருமொழி கற்றார்க்குப் பலம் சொல்லித் தலைக்கட்டுகிறார்.

ஸ்வா.—பதினோராம்பாட்டு. (ஆட்கொள்ளவித்யாதி) ஆட்

---

(வடமித்யாதி) (க) "யோக்த்ரம் க்ருத்வா ச வாஸுகிம் - யோக்த்ரம் க்ருத்வாச வாஸுகிம்" என்கிறபடியே- வாஸுகியாகிற வலிய கயிற்றை அதிலே கடைகயிறாகச்சுற்றி. (கடைந்திட்டவித்யாதி) தேவர்களையும் அஸுரர்களையும் முந்துறக் கடையவிட்டு, அவர்கள் இளைத்துக் கைவாங்கினவாறே (உ) "அலைகடல் கடைந்தவப்பன்" என்கிறபடியே அம்ருதம் கிளருந்தனையும் நின்று கடைந்தருளின கைகளாலே சப்பாணி. (கார்முகிலித்யாதி) ஆஸ்ரிதருடைய அபேக்ஷித ஸம்விதாநம் பண்ணின ஹர்ஷத்தாலே காளமேகம்போலே குளிர்ந்து புகர்பெற்ற வடிவையுடையனாய் நின்றவனே! சப்பாணி. (க0)

அவ.—பதினோராம்பாட்டு. நிகமத்தில், இத்திருமொழி கற்றார்க்குப் பலம் சொல்லித்தலைக்கட்டுகிறார்.

மூ.—ஆட்கொள்ளத்தோன்றிய வாயர்தம்கோவினை
நாட்கமழ்பூம்பொழில் வில்லிபுத்தூர்ப்பட்டன்
வேட்கையால்சொன்ன சப்பாணியீரைந்தும்
வேட்கையினால் சொல்லுவார் வினைபோமே. (கக)

வ்யா.— (ஆட்கொள்ளவித்யாதி) (ஆட்கொள்ளத் தோன்

---

"வாசுகிவன்கயிறு வடமாகச்சுற்றி" என்று அந்வயித்து ஸப்ரமாணமாகவர்த்தமருளிச்செய்கிறார் (யோக்த்ரமித்யாதி). (யோக்த்ரம்) கயிறு. கடைவார்கள் தேவாஸுரர்களன்றோ? இவன் கடைந்தானோ வென்ன வருளிச்செய்கிறார் (தேவர்களையுமித்யாதி). "கடைந்திட்ட" என்ற வநந்தரம் "கார்முகில் வண்ணன்" என்றதுக்குத் தாத்பர்யம் (ஆஸ்ரிதரித்யாதி). இத்தால் சப்பாணி கொட்டுகைக்கு இவ்வபதாநம் ஹேதுவென்று திருவுள்ளம். (க0)

அரு.—பதினோராம்பாட்டு.(ஆட்கொள்ளவித்யாதி) இன்னாரை ஆட்கொ

---

(க) வி-பு-க-கூ-அச. (உ) தி-வாய்-அ-க-க.

கொள்வானுகவிறே அடிமைக்கிசையாத மண்ணின் பாரங்கள் வர்த்திக்கிற வடமதுரையைவிட்டுத் திருவாய்ப்பாடியிலே அவதரித்ததும். "இங்குதான் அடிமைக்கிசைந்தாருண்டோ" என்னில் (க) "என்னையுமெங்கள் குடி முழுதாட்கொண்டமன்னன்" என்றார்களே. அர்ஜுநனையும் (உ) "కరిష్యే వచనంతవ - கரிஷ்யே வசநம்தவ" என்ற பின்பு "க்ருஷ்ணதாஸன்" என்றிறே உடையவர் அருளிச்செய்வது. (௩) "భావోనాన్యత్రగచ్ఛతి - பாவோநாந்யத்ர கச்சதி" என்றபின்பிறே "ராமதாஸன்" என்றதும். சொன்னது செய்வேனென்றவனுக்கும், செய்யேனென்றவனுக்கும் தாஸத்வம் குணபரமாக உண்டாய்த்திறே. இவர்க்கு ராமகுணம் ஸாத்மியாதிருந்தது ராமபாக்யத்தாலேயிறே. "நாந்யத்ர" என்னுதே கூடப்போருவேனென்றாகில் திருவுள்ளத்தை வ்யாகுலிப்பித்தாராவரிறே. அடிமை செய்திறே அடிமை கொள்வதும். (ச) * தமக்கடிமை வேண்டுவார் தாமோதரனாரானகையாலே. அடிமை புக்கவர்களும் (ரு)"மாயனுரை கிடக்கு முள்ளத்தெனக்கு" என்றார்களிறே. (ஆயர்தங்கோ

---

றிய) ஸர்வரையும் அடிமைகொள்வதாக வந்து ஆவிர்ப்ப (ூ) வித்த. அவதார ப்ரயோஜநம் - லீலா விபூதியிலுள்ள சேதநரைத் திருத்தி அடிமை கொள்ளுகையென்கை. "பிறந்த" என்னுதே, (தோன்றிய) என்றது - (௬) "దేవకీపూర్వసన్ధ్యాయామావిర్భూతం - தேவகீ பூர்வஸந்த்யாயாமாவிர்ப்பூதம்" என்கிறபடியே கர்ப்பவாஸதோஷமற வந்தவதரித்தமை தோற்றுகைக்காக. (ஆயர்தம்

---

ள்ள வென்னுதே நிருபபதமாகச் சொன்னதுக் கநுகுணமாக சப்தார்த்தமருளிச் செய்கிறார் (ஸர்வரையுமித்யாதி). அவதாரத்துக்கு ப்ரயோஜநம் ஸாது பரித்ராணுதித்ரயமாயிருக்க அடிமை கொள்ளுகை ப்ரயோஜநமோவென்னவருளிச்செய்கிறார் (அவதாரேத்யாதி). "தோன்றிய ஆயர்தம் கோ" என்றத்தால் திருவாய்ப்பாடியிலே யென்று தோன்றுகிறது. இப்படி சொல்லக்கூடுமோ வென்ன வருளிச்செய்கிறார் (ஆவிர்ப்ப வித்தஇத்யாதி). (எ) "பேணிச் சீருடைப் பிள்ளை பிறந்தினில்" என்ற விடத்திற்போலே இங்கும் "பிறந்தது இங்கே" என்று சொல்லலாமென்றுகருத்து. அன்றிக்கே "ஆட்கொள்ளத் தோன்றிய ஆயர்கோ" என்னுமல் "ஆயர்தம் கோ" என்பானென்னென்

---

(க) உ-ரு-க. (உ) கீ-கஅ-எ௩. (௩) ரா-உ. (ச) பெரியதிருவ-௩உ.
(ரு) ச-திருவ-ரு௦. (௬) வி-பு-ரு-௩-உ. (எ) க-உ-௩.

வினை) ஆயர்க்கு நிர்வாஹகனானவனை. (நாளித்யாதி) நாள்பூக்கள் கமழும்படியான சோலையாலே சூழப்பட்ட ஸ்ரீ வில்லிபுத்தூர்க்கு நிர்வாஹகரான ஆழ்வார். (க) "अकालफलिनो वृक्षाः- அகாலபலிநோ வ்ருக்ஷா:" என்கிறபடியேபழம்பூ நாற்றம்தோன்றாமல்செல்லுமிறே.

(வேட்கையால் சொன்ன) இவர் மிஞ்சின விருப்பத்தாலே அருளிச்செய்த ஆகிஞ்சந்யப்ரகாசகமான. (சப்பாணி ஈரைந்தும் வேட்கையினால் சொல்லுவார் வினை போமே) இவருடைய பா(भ)வபந்த(न्ध)மில்லையேயாகிலும் இவரபி(भि)மாநத்திலே ஒதுங்கி இவரருளிச்செய்த சப்தமாத்ரத்தையே விருப்பத்தோடே சொல்லுவார்க்கு, "இவரைப்போலே மங்களாசாஸநம் பண்ணப் பெற்றிலோம்" என்கிற வினைபோம். .... .... .... .... .... (கக)

பிள்ளை திருவடிகளே சரணம்.

——(*)——

கோவினை) ஆவிர்ப்பவித்தது ஸ்ரீ மதுரையிலேயாகிலும், அது ப்ரகாசித்ததும் ப்ரயோஜநப்பட்டதும் திருவாய்ப்பாடியிலேயிறே. தான் தாழ நின்று ஏவிற்றுச்செய்து, தன்நீர்மையாலே எல்லாரையும் வசீகரித்து ஆளாக்கிக்கொண்டு ஸர்வகோ (गो) ப நிர்வாஹகனானவனை. (நாட்கமழ்த்யாதி) ஸர்வகாலத்திலும் கமழாநின்றுள்ள பூம்பொழில்களையுடைய ஸ்ரீ வில்லிபுத்தூருக்கு நிர்வாஹகரான பெரியாழ்வார்.

(வேட்கையித்யாதி) அவதாரசேஷ்டிதாநுபவத்தில் ஆசையாலே அருளிச்செய்தசப்பாணிவிஷயமானபத்துப்பாட்டையும் ஆஸாபூர்வகமாகச்சொல்லுமவர்களின் அகிலபாபங்களும்தன்னடையேபோம்.

பெரியஜீயர் திருவடிகளேசரணம்.

பெரியாழ்வார் திருமொழி முதற்பத்து ஆறாந்திருமொழி முற்றிற்று.



ன வருளிச் செய்கிறார் (ஆவிர்ப்பவித்தித்யாதி) என்றுமாம். திருவாய்ப்பாடியில் ப்ரயோஜநப்பட்ட தென்னுநின்றீர்; அவர்களுக்கும்இவனேஇழிதொழில் செய்துகொண்டிருக்கஇவன்ஆள்கொண்டானேயென்ன, இத்தைப்பரிஹரியாநின்றுகொண்டு ஸப்தார்த்த மருளிச் செய்கிறார் (தானித்யாதி). "கமழ்" என்கிற வர்த்தமாநார்த்தாநுகுணமாக "நாள்" என்றத்தை நாள்தோறுமென்றாக்கி அர்த்தம் (ஸர்வகாலமும்) என்றது.

(அருளிச்செய்த)என்றதுஆயர்தம்கோவினைக்குறித்தருளிச்செய்தவென்றபடி. வினையைகர்த்தாவாகச்சொல்லுகையாலே(தன்னடையே)என்றதுபலிக்கிறது.

ஜீயர் திருவடிகளே சரணம்.

—ooೋoo—

(க) ரா-யு-கஉ௭-கஅ.

ஸ்வா.—துடர் சங்கிலிப்ரவேசம். கீழே சப்பாணி முகத்தாலே உபாயோபேய பா(ஓ)வத்தில் ஆகிஞ்சந்யத்தை அவனைக்கொண்டு வெளியிட்டார். இனி "தளர்நடை" என்கிற வ்யாஜத்தாலே அநுகூலப்ரீதியும், ப்ரதிகூலநிரஸநமும் இவ்விரண்டும் அதிகாராநுகுணமாக நடக்கவே ஸித்திக்கு மென்னுமிடத்தை அவனைக்கொண்டு வெளியிடுகிறார். அவனுடைய ஆசாரம், ப(ப)க்தி மூலமாகவும் பீதி மூலமாகவும் அவகாஹநஹேதுவாயிருக்குமிறே - ப்ரமாணாநுகுணமாக ஏதேனுமோர் அதிகாரிக்கும். .... .... .... .... *

அவ.—முதற்பாட்டு. ஒரு மத்தகஜத்தை இவனுடைய தளர் நடைக்கு உபமாநமாக வருளிச்செய்கிறார்.

ஸ்வா.— (துடரித்யாதி). மத்தகஜம் ஸ்தம்ப(ம்ப)த்தை முறித்து சங்கிலிகைத்தொடரோடே இழுத்துக்கொண்டு முதுகில் கிடக்

---

ஆழ்வார் திருவடிகளேசரணம்.

## முதற்பத்து ஏழாந்திருமொழி துடர்சங்கிலிகை ப்ரவேசம்.

அவ.—கீழ்த்திருமொழியிலே - சப்பாணி கொட்டுகையாகிற அவனுடைய பால சேஷ்டிதத்தை, தத்காலத்திலே யசோதைப் பிராட்டி யநுபவித்தாப்போலே, பிற்பாடராயிருக்கிற தாமும்அதில் ஆதராதிசயத்தாலே அவளுடைய பா (ஓ) வயுக்தராய்க்கொண்டு பேசி யநுபவித்தாராய் நின்றார்; அவன் தளர் நடை நடக்கையாகிற சேஷ்டிதத்தைத்தன்னுடைய ஸ்நேஹாநுகுணமாக அவளநுபவிக்க ஆசைப்பட்டு அநுபவித்துப் பேசினாப்போலே, தாமும் தத்பா(ஓ) வயுக்தராய்க்கொண்டு அந்த சேஷ்டித ரஸத்தைத் தத்காலம் போலே அநுபவித்து இனியராகிறாரிதில். *

மூ.—

துடர்சங்கிலிகைசலார்பிலாரென்னத் தூங்குபொன்மணியொலிப்பப்
படுமும்மதப்புனல்சோர வாரணம்பைய நின்றூர்வதுபோல்
உடன்கூடிக் கிண்கிணியாரவாரிப்ப வுடைமணி பறைகறங்கத்
தடந்தாளிணைகொண்டு சார்ங்கபாணி தளர்நடைநடவானோ. (க)

வ்யா.—முதற்பாட்டு. (துடரித்யாதி) மதாதிசயத்தாலே கம்பத்தை முறித்துக் காலில் துடரை இழுத்துக்கொண்டு நடக்

---

அரு.—முதற்பாட்டு. (துடரித்யாதி) "மும்மதப்புனல்சோர" என்கிற பதத்தைக்கடாக்ஷித்து சங்கிலிகை சப்திக்கைக்கு ஹேது அருளிச்செய்யாநின்றுகொண்டு சப்தார்த்தமருளிச் செய்கிறார் (மதாதிசயத்தாலேயித்யாதி).

கிற பொற்கயிற்றில் தூங்குகிற மணி சப்திக்க. கயிறு-பொன்னூண். மும்மதத்தாலுண்டான ஜலம் அருவி போலே சோர. (மும்மதம்) இரண்டு கர்ணங்களிலும் தலையிலும் பாய்கிற ஜலம். (வாரணமித்யாதி) அந்த ஆனையானது மத விகாரத்தாலே அவசமாக மெள்ள நடந்தாப்போலே.

(உடனித்யாதி) உடைமணியுடன் கூடிக்கிண்கிணியாரவாரிப்ப-திருவரையில் நின்றும் நழுவின சதங்கைவடம் திருவடிகளிலே

---

கையாலே காலில் கிடக்கிற சங்கிலிகைத் துடரானது சலார் பிலா ரென்று சப்திக்க. (துடர்) என்று - விலங்கு. ஆனைவிலங்கு - சங்கிலிகையாயிறே யிருப்பது. "சலார்பிலார்" என்கிறது - சப்தாநுகாரம். (தூங்கித்யாதி) முதுகில் கட்டின பொன்கயிற்றில் தூங்குகிற மணியானது த்வநிக்க. பொன்மணி யென்கிற விடத்தில், "பொன்" என்கிறவித்தால்-பொன்கயிற்றைச் சொல்லுகிறது. (படுவித்யாதி) உண்டாகப்பட்ட மூன்று வகையான மதஜலமும்அருவி குதித்தாப்போலே வடிய. மும்மதப்புனலாவது - மதத்தாலே கபோலத்வயமும், மேட்ர(ஞ்)மும்,மஸ்தகமுமாகிற ஸ்தாந த்ரயத்தில் நின்றும் வடிகிற ஜலம். (வாரணமித்யாதி) ஆனையானது அந்த மதபாரவஶ்யத்தாலே அலஸமாய்க்கொண்டு மெள்ள நடக்குமாபோலே.

(உடனித்யாதி).(க)"சேவடிக்கிண்கிணி" என்கிறபடியே திருவடிகளில்சாத்தின சதங்கைகளானவை தன்னிலேகூடி சப்திக்க; அன்றிக்கே, திருவரையிற்சாத்தின சதங்கைவடமானது நழுவி விழுந்து திருவடிகளோடே சேர்ந்து இழுப்புண்டு வருகையாலே அதிலுண்டான சதங்கைகள் தன்னிலேகூடி சப்திக்க வென்னவுமாம். (உடையித்யாதி) திருவரையில்கட்டின மணியானது பறைபோலே

---

"பொன்னூணமணி" என்றால் த்வநியாதென்று திருவுள்ளம்பற்றி அர்த்தமருளிச்செய்கிறார் (முதுகிலித்யாதி). (தூங்குகிற) என்றது - தொங்காநிற்கிற வென்றபடி. "பொன்" என்றால் கயிற்றைச்சொல்லுமோவென்ன, லக்ஷணயா சொல்லுமென்கிறார் (பொன்மணியித்யாதி).

"கிண்கிணியுடன் கூடி ஆரவாரிப்ப" என்றந்வயித்து த்ருஷ்டாந்தாநுரூப்யத்துக்காக "கிண்கிணி" என்றதை-திருவடிகளில்சதங்கையாக்கி ப்ரமாண பூர்வகமர்த்தமருளிச் செய்கிறார் (சேவடியித்யாதி). சங்கிலிகையை இழுத்துக் கொடுவருமாகாரத்தாலும் த்ருஷ்டாந்தாநுரூப்யம் ஸித்திக்குமென்று யோஜநாந்தரம் (அன்றிக்கேயித்யாதி). (பறை) வாத்யவிசேஷம். "கறங்க" என்

---

(க) க-ரு-ச.

விழுந்து இழுப்புண்டு மிகவும் சப்திக்க. புகுமதமும் உகுமதமுமா யிருக்குமிறே இங்கும். (தடயித்யாதி) நடைபொறுக்கும்படி சிக்கென்றிருக்கையாலே தடந்தாளென்கிறார். தன்னிலொத்து உடமாக ரஹிதமாயிருக்கிற திருவடிகளாலே ஸ்வவசமாகவும் அவசமாகவும் நடக்கக் காணவேணுமென்று ப்ரார்த்திக்கிறார். (சார்ங்கபாணி) அவதாரரஹஸ்ய மறியுமவராகையாலே சார்ங்கபாணியைப் போலே இவனும் விரோதிநிரஸந ஸமர்த்தனுகவேணுமென்று ப்ரார்த்திக்கிறார். தளர்நடை நடவானோ.? .... .... .... (க)

ஸ்வா.—இரண்டாம்பாட்டு. (செக்கரித்யாதி) வ்ருக்ஷாக்ரமும் சிவக்கும்படி தோன்றின செக்கரிடையிலே சிறுபிறைநுணிக்கொம்பு

---

சப்திக்க. (தடந்தாளித்யாதி) பருவத்துக்கீடாய் விகாஸயுக்தமாய் பரஸ்பரஸத்ருசமாயிருக்கிற திருவடிகளைக்கொண்டு. (சார்ங்கபாணி) ஸ்ரீ சார்ங்கத்தைத் திருக்கையிலே யுடையவன். இது ஈஶ்வரத்வ சிஹ்நங்களுக்கெல்லாம் உபலக்ஷணம். அவதரிக்கிறபோதே ஈஶ்வரத்வ சிஹ்நங்கள் தோன்றும்படியாகவிறே வந்தவதரித்தது. (தளர்நடை நடவானோ) தளர் நடையாவது - திருவடிகள் ஊன்றி நடக்கும் பருவமன்றிக்கே நடக்கிற தசையாகையாலே தள்ளம்பாறி நடக்கும் நடை. .... .... .... .... .... .... (க)

மூ.—செக்கரிடைநுனிக்கொம்பில்தோன்றும்சிறுபிறைமுளைப்போல்
நக்கசெந்துவர்வாய்த்திண்ணைமீதே நளிர்வெண்பல்முளையிலக
அக்குவடமுடுத்தாமைத்தாலி பூண்டவநந்தசயநன்
தக்கமாமணிவண்ணன்வாசுதேவன்தளர்நடைநடவானோ.(உ)

வ்யா.—இரண்டாம்பாட்டு. (செக்கரித்யாதி) செக்கர் வானத்தினிடையிலே,சாகாக்ர(ஞு ஷு ்ஃ)த்திலே தோன்றும்படி உந்நேயமான

---

றதினர்த்தம் (சப்திக்க) என்றது. "தடம்- இணைத்தாள்" என்றந்வயித்து தளர் நடைநடக்கும் பருவத்துக்கு அநுகுணமான விஸ்தாரம் சொல்லுகிறதென்றுவிவக்ஷித்து வாக்யார்த்தமருளிச்செய்கிறார் (பருவத்துக்கித்யாதி). "சார்ங்கம்" என்று ஒன்றையே சொல்லுகைக்கு நியாமகமில்லாமையாலே அருளிச்செய்கிறார் (இதுவித்யாதி). (தள்ளம்பாறுகை)-தவறுகை. ... ... (க)

அரு.—இரண்டாம்பாட்டு. (செக்கரித்யாதி) "செக்கர்" - செம்மானம்; இத்தை அருளிச்செய்கிறார் (செக்கர்வானமென்று). "நக்க"என்றது-ஸ்மிதம்

அங்குரித்துத் தோன்றினாற்போலே யென்னுதல்; செக்கராலே சிவந்த வ்ருக்ஷாக்ரத்திலே தோன்றின சிறு பிறை யென்னுதல். (நக்கவித்யாதி) ஸ்மிதம் செய்யும்போது திருவதரத்துக்கு மேலே அங்குரித்துத் தோன்றின ஒரு திருமுத்து மிகவும்ப்ரகாசிக்க. (நனி (ருசை)-ஸ்நிக்த்த(ஸ்)-மாக.

(அக்கித்யாதி) வளைமணிவடமென்னுதல்; வெள்ளிமணிவடமென் னுதல். (அக்கு)-வெள்ளை. இத்தைத் திருவரையிலேசாத்தி. (ஆமைத் தாலி) திருக்கழுத்திலே ஜாத்யுசிதமாக சாத்தின ஆபரணம். (அந ந்தசயநன்) *உரகமெல்லணையானிறே. (தக்க மாமணிவண்ணன்) மிக்க ப்ரகாசத்தையுடைய நீலரத்நம் தகுதியாம்படியான நிறத்தை யுடையவன். உபமாநோபமேயங்கள் துல்யவிகல்பமாய்த் தென்கி றது. (வாசுதேவன்) வஸுதேவபுத்ரன். வாஸுதேவனென்னும மொழிய [సర్వం వసతీతి - వాసుదేవః- ஸர்வம் வஸதீதி - வாஸுதேவஃ] என்னமாட்டாரிப்போதிவர்; இதுதானிறே அதுதானும். .... (௨)

பாலசந்த்ராங்குரம்போலே. (நக்கவித்யாதி) ஸ்மிதம் செய்கை யாலே மிகவும் சிவந்திருந்துள்ள திருவதரமாகிற உயர்ந்த நிலத்தின் மேலே குளிர்ந்து வெளுத்திருக்கிற திருமுத்தின் அங்குரத்தினு டைய தேஜஸ்ஸானது ப்ரகாசிக்க.

(அக்குவடமுடுத்து) சங்குமணி வடத்தைத் திருவரையில் சாத்தி. (ஆமைத்தாலிபூண்ட) கூர்மாகாரமான தாலியாகிற ஆப ரண விசேஷத்தைத் திருக்கழுத்திலே சாத்தியிருக்கிற. (அநந்தசய நன்) அவதாரத்தினுடைய மூலத்தைநினைத்துச்சொல்லுகிறது. (க) "నాగపర్యంక ముత్సృజ్య హ్యాగతః - நாகபர்யங்க முத்ஸ்ருஜ்ய ஹ்யாகதஃ" என்னக்கடவதிறே. (தக்கமாமணி வண்ணன்) தகுதியான நீலரத் நம்போன்ற திருநிறத்தையுடையவன். (வாசுதேவனித்யாதி) ஸ்ரீ வஸுதேவர் திருமகன், தளர்நடை நடவானோ. .... .... (௨)

மூ.—மின்னுக்கொடியுமோர் வெண்டிங்களும் சூழ்பரிவேடமுமாய்ப்
பின்னல்துலங்குமரசிலையும் பீதகச்சிற்றுடையொடும் [யொடும்
மின்னில்பொலிந்ததோர் கார்முகில்போலக்கழுத்தினிற்காறை
தன்னில்பொலிந்த விருடீகேசன் தளர்நடைநடவானோ. (௩)

பண்ண வென்றபடி. "செம்" என்றும் "துவர்" என்று மிருக்கையாலே (மிகவும் சிவந்து) என்றது. "திண்ணை" என்றதினர்த்தம் (உயர்ந்த நிலத் தின் மேலே) என்றது. ... ... ... ... ... ... (௨)

(க) ஹரிவ-விஷ்ணுப-ருரு-ருஉ.

அவ,—மூன்றும்பாட்டு. ஒரு பரிவேஷ சந்த்ரன், ஒரு மேகம், இவை உபமாநமாக வருளிச்செய்கிறார்.

ஸ்வா.—(மின்னித்யாதி) மின்கொடியோடே சேர்ந்த அத்வி தீய சந்த்ரனும். அத்தைச் சூழ்ந்த பரிவேஷமும் போலே திருவரை யிலே சாத்தின பொன்னூணும், அதிலே கோவைப்பட்டு ப்ரகாசியா நின்ற வெள்ளி அரசிலைப்பணியும், அவை கீழே தோன்ற அடுக்க மேலேசாத்தினபொன்னின் சிற்றுடையோடுங்கூட, தன்னைச்சூழ்ந்த மின்னாலே ப்ரகாசிக்கப்பட்ட கரியமேகம்போலே, சாத்தின திருக் கண்டங்காறையாலே ப்ரகாசிக்கப்பட்ட திருக்கழுத்தோடே. (தன் னில் பொலிந்த) முன்பு சொன்ன உபமாநங்களாலே ஸௌந்தர்யம் பொலிகையன்றிக்கே (க) "தானே தனக்குமவன்" என்கிறபடியே தன்னிலே பொலிந்த ஸௌந்தர்யத்தையுடையரான (இருடீகேசன்)

வ்யா.—மூன்றும்பாட்டு. (மின்னித்யாதி) மின்கொடியும் அத் தோடு சேர்ந்ததோர் அகளங்க சந்த்ரமணடலமும் அத்தைச்சூழ்ந்த பரிவேஷமும்போலே. (பின்னலித்யாதி) திருவரையில் சாத்தின பொற்பின்னலும், அதிலேகோவைப்பட்டு ப்ரகாசிக்கிற வெள்ளி அரசிலைப்பணியும், இவற்றுக்குமேலேசாத்தினபொன்னின்சிற்றுடை யுமாகிற இவற்றோடும். (மின்னிலித்யாதி) மின்னாலே விளங்கப்பட்ட தொரு காளமேகம்போலே திருக் கழுத்தில் சாத்தின காறையோ டும். (தன்னிலித்யாதி) இவ்வொப்பனைகள் மிகையாம்படி தன்னழ

அரு. — மூன்றும்பாட்டு. (மின்னித்யாதி) ஸமபிவ்யாஹார பலிதம் (அத்தோடு சேர்ந்து) என்றது. திங்களானபோதே வெளுத்திருக்கை ஸித்த மென்று "வெண்" என்றதுக்கு அர்த்த மருளிச் செய்கிறார் (அகளங்கம்) என்று. "பின்னலில்" என்றவிடத்தில் "இல்" குறைந்து "பின்னல்" என்று கிடக்கிறதாகத் திருவுள்ளம்பற்றி அர்த்தமருளிச் செய்கிறார் (திருவரையிலித் யாதி). பின்னலுக்கு த்ருஷ்டாந்தமான மின்னுக்கநுகுணமாக (பொற்பின்ன லும்என்றது. "மின்னில்" என்ற ஸப்தமியை த்ருதீயையாக்கி "பொலிந்த" என்றத்தை லக்ஷணயா காந்த்யாதிக்யமென்று விவக்ஷித்தர்த்தம் (மின்னாலே யித்யாதி). கீழெல்லாம் ஆபரணசோபையை யருளிச்செய்து "தன்னில் பொலிந்த" என்கையாலே பலிதார்த்த மருளிச் செய்கிறார் (இவ்வொப்பனை யித்யாதி). ... ... ... ... ... ... ... ... (௩)

(க) ௩-திருவ-௩அ.

பொலிவாலே இந்த்ரியங்களைஅபஹரிக்கவும், தன்னாலே இந்த்ரியங்களை நியமிக்கவும் வல்லவன். தன்னில், தன்னுடைய ஸௌந்தர்யத்தாலே திருவாபரணங்களுக்குப் பொலிவுகொடுத்தவனென்னுமாம். அன்றிக்கே, (தன்னில்பொலிந்த)தன்கோயிலானது (க)"முகில்வண்ணவானம்" என்கிறபோலே தன்னுடைய ஸௌந்தர்யச்சாயையாலே நிறைந்த வென்னுமாம். .... .... .... .... (ரு)

அவ.—நாலாம்பாட்டு. இந்நடை இவனை உகவாத சத்ருக்கள் தலைமேலே நடக்குமோதானென்கிறார்.

வ்யா.—(கன்னலித்யாதி) கருப்பஞ்சாற்றுக்குடம் திறந்த இல்லியூடே ஊறிப்பொசிந்து பாயுமாபோலே. (கணகண சிறித்து வந்து) கணகணவென்றது-சிரிப்பை அநுகரித்ததாதல்; கணகணப்பென்று-உஷ்ணத்துக்குப்பேராய், வெச்சாப்புத் தோன்றச் சிரித்தானென்னுதல். (உவந்து) ப்ரியப்பட்டு. (முன்வந்துநின்று) முன்னே வந்துநின்று. (முத்தம்தரும்) திருப்பவளத்தை உபகரிக்கும். (என்

காலே ஸம்ருத்தனாயிருப்பானாய் அவ்வழகாலே கண்டவர்களுடைய இந்த்ரியங்களைத் தன்வச மாக்கிக்கொள்ளுமவன் தளர்நடை நடவானோ? .... .... .... .... .... .... .... (ரு)

மூ.—

கன்னற்குடம்திறந்தா லொத்தூறிக் கணகணசிரித்துவந்து
முன்வந்துநின்று முத்தந்தருமென் முகில்வண்ணன் திருமார்வன்
தன்னைப்பெற்றேற்குத் தன்வாயமுதம் தந்தென்னைத் தளிர்ப்பிக்கின்றான்
தன்னெற்றுமாற்றலர் தலைகள்மீதே தளர்நடைநடைவானோ. (ச)

வ்யா.—நாலாம்பாட்டு. (கன்னலித்யாதி) கருப்பஞ்சாற்றுக்குடம் இல்லி திறந்தால் பொசிந்து புறப்படுமாபோலே, திருப்பவளத்தில் ஜலமானது ஊறிவடிய, கணகணவெனச் சிரித்து ப்ரீதனாய்க்கொண்டு. (கணகண) என்றது - விட்டுச்சிரிக்கிறபோதை சப்தாநுகாரம். (முன்னித்யாதி) முன்னேவந்து நின்று தன்னுடைய அத(ர)ராஸ்வாதத்தைத் தாராநிற்கும். (முத்தம்) - அதரம். (என்னித்

அரு.—நாலாம்பாட்டு. (கன்னலித்யாதி) திருப்பவளத்தில் தீர்த்தம் ஊறிவருகைக் கநுகுணமாக "கன்னல்" என்றத்தை தத்காரணமான கருப்பஞ்சாறாக வர்த்தமருளிச் செய்கிறார் (கருப்ப மித்யாதி). (இல்லி) என்றது-சில்லியென்றபடி.

(க) தி-வாய்-எ-உ-கக.

முகில்வண்ணன்) நான் என்னுடையவனென்றபிமானிக்கும்படி எனக்கு வசமாய், கார்முகில்போன்ற திருநிறத்தையுடையவன். எனக்கு வசமாகைக்கடி ✻ அலர்மேல் மங்கையுறைமார்பனாகையிறே.

(தன்னைப்பெற்றேர்க்கு) தன்னைப் புத்ரனாகப் பெற்ற பா (ஞ) க்யத்தை யுடைய எனக்கு. (தன்வாயமுதம்தந்து) "முன்பேமுத்தம் தரும்" என்றும், இப்போது "வாயமுதம்தந்து" என்று மருளிச் செய்கையாலே, முற்பாடு "முத்தம் தந்தருளும்" என்றுப்ரார்த்தனையாய், அது இப்போதுஸித்தித்த தென்றும் தோன்றுகிறது. (என்னைத்தளிர்ப்பிக்கின்றான்) இவ்வாயமுதம்விளை நீராகவிறே, இவருடையஸத்தைவர்த்தி(க்)ப்பது; ஆகையிறே "தளிர்ப்பிக்கின்றான்" என்றது. ( தன்னெற்றியித்யாதி ). 'தனக்கெதிரேவந்து சத்ருக்களாய் நிற்கிறவர்களுடைய தலைகள்மேலே தளர்நடை நடவானோ வென்று ப்ரார்த்திக்கிறாராதல்; நிர்ணயிக்கிறாராதல்; பயப்படுகிறாராதல். அன்றிக்கே - (க) "ஸ்ஜ்ஞ் ம் ஊஷ்ம்- வஞ்சாதபாஷ்பஃ". (ச)

யாதி) எனக்கு ப(வ்)வ்யனாய் காளமேகம்போன்ற வடிவையுடையனாய், அந்த பவ்யதைக்கு ஊற்றுவாயான லக்ஷ்மீஸம்பந்தத்தை யுடையவன்.

(தன்னையித்யாதி) தன்னைப் பிள்ளையாகப்பெற்ற பாக்யத்தை யுடைய வெனக்குத் தன்னுடைய வாக (X) ம்ருதத்தைத் தந்து என்னை தழைப்பியா நின்றான். இங்கே "வாயமுதம் தந்து - தளிர்ப்பிக்கின்றான்" என்று - வர்த்தமானமாகச் சொல்லுகையாலே, முன்பு "முத்தம்தரும்" என்றது - எப்போதும் தன்விஷயத்தில் அவன் செய்துபோரும் ஸ்வபா (ஞ) வ கத (ந) நம் பண்ணினபடி. (தன்னெற்று இத்யாதி) தன்னோடு எதிர்ந்த சத்ருக்களானவர்களுடைய தலைகள்மேலே தளர்நடை நடவானோ. .... .... .... (ச)

"தளிர்ப்பிக்கின்றான்" என்றதினர்த்தம் (தழைப்பியாநின்றான்) என்றபடி. அதாவது - ஸந்தோஷத்தாலே என்னுடம்பு பூரிக்கப்பண்ணினானென்றபடி. "முத்தம்தரும்" என்றதுக்கும் "வாயமுதம் தந்து" என்றதுக்கும் தோன்றுகிற பௌநருக்த்யத்தைப்பரிஹரிக்கிறார்(இங்கேயித்யாதி). இத்தால்- முத்தம் தருகை ஸ்வபாவம்; தருகையாலே " வாயமுதம் தந்தான் " என்று, அதுக்கு அத்தை ஹேதுவாகச்சொல்லிற்றாய்த்து. "எற்று" என்றதினர்த்தம் (எதிர்ந்த) என்றது. ... ... ... ... ... ... ... (ச)

(க) ரா-கிஷ்-உச-உச.

அவ.—அஞ்சாம்பாட்டு. ஒருமலைக்குட்டனை ஒருமலைக்குட்டன் தொடர்ந்தோடுமாபோலே க்ருஷ்ணன் நம்பிமூத்தபிரானைத் தொடர்ந்தோடுகிற ப்ரகாரத்தை அநுபவிக்கிறார்.

வ்யா.—(முன்னலித்யாதி) கருமலைக்குட்டனுக்குமுன்னே நன்றாய் அத்விதியமாய் பெரிதான வெள்ளிமலைக்குட்டன் - மலை ஈன்ற குட்டியானது தன்செருக்காலே திடுதிடெனவிரைந்தோட. (பின்) அக்குட்டியின் பின்னே. (தொடர்ந்து ஒரு கருமலையித்யாதி) அஞ்ஜநகிரி ஈன்ற குட்டி தன்செருக்காலே அத்தைத் தொடர்ந்தோடுவது போலே.

(பன்னியித்யாதி) லோகத்திலுள்ளார் சாஸ்த்ரங்களையும்ஸ்தோத்ரங்களையும் ஆசார்யமுகத்தாலே ஆராய்ந்து இடைவிடாதேஸ்துதித்

---

மூ.— [தோட]

முன்னலோர்வெள்ளிப்பெருமலைக்குட்டன் மொடுமொடுவிரைந்
பின்னைத்தொடர்ந்தோர்கருமலைக்குட்டான்பெயர்ந்தடியிடுவதுபோல்
பன்னியுலகம் பரவியோவாப் புகழ்ப் பலதேவனென்னும்
தன்னம்பியோடப் பின்கூடச்செல்வான் தளர்நடைநடவானோ. (ரு)

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (முன்னலித்யாதி) முன்னேவிலக்ஷணமாய் அத்விதியமாய்ப் பெரிதாயிருந்துள்ள வெள்ளிமலையீன்ற குட்டியானது தன் செருக்காலே திடுதிடென விரைந்தோட. (பின்னையித்யாதி) அந்தக்குட்டியின் பின்னே தன்செருக்காலே அத்தைப் பிடிக்கைக்காகத் தொடர்ந்து, அஞ்ஜநகிரி யீன்றதொருகுட்டி, தன் மைமுவாநுகுணமாகக் காலுக்குக்கால் பேர்ந்தடியிட்டுச்செல்லுமா போலே.

(பன்னியித்யாதி) லோகமெல்லாம்கூடி, தங்கள் ஜ்ஞாநசக்திகளுள்ள வளவெல்லாம்கொண்டு ஆராய்ந்து ஸ்துதித்தாலும் முடிவு

---

அரு.—அஞ்சாம்பாட்டு. (முன்னலித்யாதி) "நல்" என்றதுக்கர்த்தம் (விலக்ஷணமாய்) என்றது. "பெருமலைபோன்ற குட்டன்" என்று சொல்லக்கூடாமையால், மலையீன்ற குட்டியானதென்கிறார் (பெரிதாயித்யாதியால்). "பின்னை" என்றதுக்கு - பிற்பாடென்றர்த்த மல்லாமல், த்விதீயாந்தமாகப் பின்பு தேசத்தை யென்று திருவுள்ளம்பற்றி தாத்பர்யார்த்த மருளிச்செய்கிறார் (அந்தவித்யாதி). (காலுக்குக் கால்) என்றது - அடிக்கடியென்றபடி.

"உலகம் பன்னிப்-பரவி" என்றந்வயித்து வாக்யார்த்தமருளிச் செய்கிறார் (லோகமித்யாதி). ... ... ... ... ... ... ... (ரு)

துப் போரும்படியான புகழையுடையனாய், தனக்கு அக்ரஜனை நம்பிமூத்தபிரான் வெள்ளிமலைக்குட்டிபோலேசெருக்காலேமுன்னே ஓட, பின்னே அவனைப்பிடிக்க வேணுமென்றோடிச் செல்வான் தளர்நடை நடவானோ. .... .... .... .... .... .... (ரு)

அவ.—ஆறும்பாட்டு. நடந்தவிடத்தில் லாஞ்ச (ஜ) ஸைதோன்ற நடந்தருளவேணுமென்று ப்ரார்த்திக்கிறார்.

ஸ்வா.—(ஒருகாலிலித்யாதி) ஒருகாலில் உள்ளடி பொறித்தமைந்த சங்கு, ஒருகாலில் உள்ளடி பொறித்தமைந்த சக்கரம்-அத்வி தீயமான திருவடியில் அகவாயிலேசாத்தினாப்போலே, (க) "அடிதாறு" என்கிறபடியே ரேகாரூபேண ப்ரகாசிக்கும்படி அமர்ந்த திருவாழியாழ்வான், இப்படியிருக்கிற மற்றைத் திருவடிகளில் ஸ்ரீபாஞ்சஜந்யாழ்வானும். (இருகாலும்) கீழே "ஒருகால் ஒருகால்" என்று வைத்து "இருகால்" என்னும்போது, கீழ் உபமாநராஹித்யம் சொல்லிற்றாய், இப்போது ஒன்றுக்கொன்றுஒப்பானபடிசொல்லிற்றுமித்தனை. இரண்டு திருவடிகளையுங்கொண்டு நடந்தருளும்போது நடந்தவிடம். (அங்கங்கெழுதினாப்போல்) தூலிகையாலெழுதினாப்

---

காணவொண்ணாத புகழையுடையனாய் பலதேவனென்னும் பேரையுடையனான தன்னுடைய தமையனானவன்செருக்கிமுன்னே ஓட, அவன்பின்னே அவனைக் கூடவேணுமென்று தன் சைசவாநுகுணமாக த்வரித்து நடக்குமவன் தளர்நடை நடவானோ. .... (ரு)

மூ.—

ஒருகாலில் சங்கொருகாலிற்சக்கர முள்ளடிபொறித்தமைந்த
இருகாலுங்கொண் டங்கங்கெழுதினாப்போ லிலச்சினைபடநடந்து
பெருகாநின்ற வின்பவெள்ளத்தின்மேல் பின்னையும் பெய்துபெய்து
கருகார்க்கடல்வண்ணன் காமர்தாதை தளர்நடை நடவானோ. (சு)

வ்யா.—ஆறும்பாட்டு. (ஒருகாலிலித்யாதி) ஒரு திருவடிகளிலே ஸ்ரீ பாஞ்சஜந்யமும் ஒரு திருவடிகளிலே திருவாழியாழ்வானுமாக உள்ளடிகளிலே ரேகாரூபேண பொறித்துச் சமைந்த இரண்டு திருவடிகளையுங்கொண்டு. (அங்கங்கித்யாதி) அடியிட்ட அவ்வவஸ்தலங்களிலே தூலிகைகொண்டு எழுதினாப்போலே அடையா

---

அரு.—ஆறும்பாட்டு. (ஒருகாலிலித்யாதி)(பொறித்துச்சமைந்த) என்றதுஸித்தமாயிருக்கிற வென்றபடி. (தூலிகை) சித்ரசலாகை. கீழைக்கடா

(க) பெரியதிருவ-கூக.

போலே லாஞ்ச (ஆ) நைநோன்றக்கண்டு இன்பவெள்ளம் பெருக வேணும். நம்பெருமாள் கோடைத் திருநாளுலாவியருளினவெளியில் அழகியதான லாஞ்சனைகண்டு நம்முதலிகளுக்கும் இன்பவெள்ளம் பெருகாநின்றதிறே. (பின்னையும்பெய்துபெய்து) இன்பவெள்ளம் பின்னையும் மேல்மேலுமுண்டாம்படி.

(கருகாரித்யாதி) (கருகார்) நீர்கொண்டெழுந்த காளமேகம் போலேயும் கடல்போலேயுமிருக்கிற திருமேனியையுடையவன். "கருகார்க்கடல் வண்ணன்" என்கிறது - "கார்க்கடல்வண்ணன்" என்னுமாபோலே. "கருமை" பெருமையுமாம். (காமர்தாதை) அவனுக்கு ஸௌந்தர்யமும் மார்த்தவமும் சிக்கஜத்வமுமுண்டாய்த்து- இவன் வயிற்றில் பிறப்பாலேயிறே. (க) *காமனைப்

ளம் படும்படி நடந்து. (பெருகாவித்யாதி) இந்த நடையழகையும் வடிவழகையும்கண்டு மேன்மேலனப் பெருகாநின்ற ஆநந்த ஸாகரத்துக்குமேலே பின்னையும் உத்தரோத்தரம் ஆநந்தத்தையுண்டாக்கி.

(கருகாரித்யாதி) இருண்டு குளிர்ந்திருக்கிற கடல்போன்ற திருநிறத்தையுடையவன். (கருமை) இருட்சி· (கார்) குளிர்த்தி. அன்றிக்கே, "கருமை" பெருமையாய், "கார்" இருட்சியாகவுமாம். அன்றிக்கே, "கார்" என்று- மேகமாய், காளமேகம்போலேயும் கடல்போலேயுமிருக்கிற திருநிறத்தை யுடையவ னென்னவுமாம். (காமர்தாதை) அழகாலே நாட்டை வெருட்டித் திரிகிற காமனுக்கு உத்பாதகனானவன். (க) * காமனைப்பயந்த காளையிறே.

க்ஷித்து "பெருகாநின்ற" என்றவர்த்தமாநார்த்த மருளிச் செய்கிறார் (இந்தவித்யாதி). "வெள்ளம்" என்றபதார்த்தம் (ஸாகரம்) என்றது. இலச்சினைப்பட நடக்கையாலே வந்த ஆநந்தத்தைச் சொல்லி இதுக்கு மேல் தவறி நடக்கையால்வந்த ஆநந்தத்தைச்சொல்லுகிறார் (பின்னையுமித்யாதி). ஆநந்தத்தையுண்டாக்கிக் கொண்டு தளர்நடைநடவானோ வென்று கருத்து.

"கரு" "கார்" என்கிற பதங்களைக்கடலுக்கு விசேஷணமாக்கி அர்த்தத்வய மருளிச் செய்கிறார் (இருண்டித்யாதி). "கரு" என்கிறதை - காருக்கு விசேஷணமாக்கி மூன்றுமர்த்தம் (அன்றிக்கே யித்யாதி). [काम्यते सर्वैरिति - कामः- காம்யதே ஸர்வைரிதி-காமஃ] என்று திருவுள்ளம்பற்றி அர்த்தமருளிச் செய்கிறார் (அழகாலேயித்யாதி). (வெருட்டி) மிரட்டி. இத்தால்

(க) தி-வாய்-கூ-அ-அ.

பயந்த காளையிறே. காமனைப்பயந்த பின்பும் கீழ்நோக்கிப் பிராயம் புகாநின்றானிறே. காமர்தாதை பின்னையும் பெய்து பெய்து தளர் நடை நடவானோ. .... .... .... .... .... .... (சா)

அவ.—ஏழாம்பாட்டு. உடைமணி கணகணவென்கிற ஓசை யோடே தளர்நடை நடக்க வேணுமென்கிறார்.

ஸ்வா.—(படரித்யாதி) சேற்றுவாய்ப்பாலே படராநின்ற தாமரைஇலையிணையப் பூத்த அந்தத்தாமரை கட்டவிழ மது ஊறித் துளிக்குமாபோலே. (பனி) குளிர்ச்சி. (இடங்கொண்ட செவ்வாய்)

(க) "ப்ரஸவாந்தஞ்ச யௌவநம்" என்னும் படியன்றிக்கே, காமனைப் பயந்தபின்பு கீழ்நோக்கிப் பிராயம்புகு மாய்த்து.

"காமர்தாதை இன்ப வெள்ளத்தின்மேல் பின்னையும் பெய்து பெய்து - தளர்நடை நடவானோ" என்று அந்வயம். (சா)

மூ.—படர்பங்கயமலர்வாய் நெகிழப் பனிபடுசிறுதுளி போல்
இடங்கொண்டசெவ்வாயூறி யூறி யிற்றிற்று வீழநின்று
கடுஞ்சேக்கழுத்தின்மணிக்குரல்போ லுடைமணிகணகணெனத்
தடந்தாளிணைகொண்டுசார்ங்கபாணிதளர்நடைநடவானோ(எ)

வ்யா.—ஏழாம்பாட்டு. (படரித்யாதி) பெருத்திருந்துள்ள தாமரைப்பூவானது முகுளிதமாயிருக்கையன்றிக்கே, வாய்நெகிழ்ந்த வளவிலே, குளிர்த்தியையுடைத்தான அகவாயில் மதுவானது

நாட்டில் அழகாயிருக்கு மவர்களைத் தோற்பிக்கும்படி அழகானவனென்று சொல்லிற்றாய்த்து. எடுத்தப்ரமாணத்துக்கர்த்தம் (ப்ரஸவாந்தமித்யாதி). (ப்ரஸவாந்தம்) என்றது-ஸ்த்ரீஜநங்களுக்கே யாகிலும், அவர்களைப்போலே புருஷர்களுக்கும் யௌவநம் கழியும், என்று வசநத்துக்குத் தாத்பர்யமாய், அப்படி இவனுக்கன்றென்று கருத்து. ... ... ... ... ...(சா)

அரு.—ஏழாம்பாட்டு. (படரித்யாதி) "படர்" என்றதினர்த்தம் (பெருத்திருந்துள்ள) என்று. "நெகிழ" என்றத்தால் தீரக்கழிய அலருகையும், கேவலம் முகுளாவஸ்த்தையும் சொல்லக்கூடாமையா லருளிச் செய்கிறார் (முகுளிதமாயித்யாதி). "பனி படு" என்றதினர்த்தம் (குளிர்த்தியையுடைத்தான) என்று. "படு" என்றவநந்தரம் "மது" என்றத்தை அத்யா(ஹ்ரு) ஹரித்து பலிதார்த்தத்தை அருளிச்செய்கிறார் (அகவாயில் மதுவானது) என்

இடங்கொள்ளகையானது - வாயிலொரு புடைக்குள்ளேயிறே வைய மேழுங்கண்டது. (க) *உலகமுண்ட பெருவாயனிறே. இடமுடைத் தாய் சிவந்த திருப்பவளத்திலே வாக(X)ம்ருதம் ஊறியூறி இற்றிற்று விழ நின்று. (கடுஞ்சேக்கழுத்தித்யாதி) கடிய சேவின் கழுத்தில் கட்டின மணிகள் கணகணவென்று சப்திக்குமாபோலே. கணகணப் பாவது-கணார் கணார் என்கை. (உடைமணி) திருவரையில் சாத்தின மணி. (தடந்தாளிணைகொண்டு) அழகியதாய் உறைத்ததிருவடி களைக்கொண்டு. (சார்ங்கபாணி) ஓரவதாரத்திலுண்டானவற்றை எல்லா அவதாரங்களிலும் கொள்ளலாமிறே. .... .... .... (எ)

வ்யா.-எட்டாம்பாட்டு. (பக்கமித்யாதி) கரும்சிறுப்பாறைபக்கம் மீதே அருவிகள் பகர்ந்தனைய-கருமையுடைய சிறிதாயிருக்கிற மலை

சிறுகத்துளித்து விழுமாபோலே. (இடங்கொண்ட வித்யாதி) இட முடைத்தாய்ச் சிவந்திருந்துள்ள திருப்பவளத்தில் ஜலமானது நிரந் தரமாக ஊறி முறிந்து விழும்படி நின்று. (கடுஞ்சேக்கழுத்தித் யாதி) கடிதான சேவின்கழுத்தில் கட்டின மணியினுடைய த்வநி போலே, திருவரையில் கட்டின மணியானது கணகணவென்று சப் திக்கும்படி. (தடந்தாளித்யாதி) ஸவிகாஸமாய் பரஸ்பர ஸத்ருச மான திருவடிகளைக்கொண்டு சார்ங்கபாணியானவன் தளர்நடை நடவானோ. .... .... .... .... .... .... .... *(எ)

மூ.—பக்கம்கருஞ்சிறுப்பாறைமீதே யருவிகள் பகர்ந்தனைய
அக்குவடமிழிந்தேறித்தாழ அணியல்குல்புடைபெயர
மக்களுலகினில்பெய்தறியா மணிக்குழவியுருவின்
தக்கமாமணிவண்ணன்வாசுதேவன்தளர்நடைநடவானோ.(அ)

வ்யா.—எட்டாம்பாட்டு. (பக்கமித்யாதி) கருத்த நிறத்தை யுடைத்தாய்ச் சிறுத்திருந்துள்ளமலையினுடைய பார்ஶ்வத்திலேநிம்

று. "சிறு" "துளி" என்ற விரண்டும் கடைக்குறைத்தலென் றர்த்த மருளிச் செய்கிறார் (சிறுகத்துளித்து) என்று. தார்ஷ்டாந்திகத்தில் "வீழ" என்றத்தை இங்கு மநுஷங்கித்தருளிச் செய்கிறார் (விழுமாபோலே) என்று. "வாய்" என்றது-வாய்ஜலத்தை லக்ஷணயா சொல்லுகிறது. ... ... (எ)

அநு.—எட்டாம்பாட்டு. (பக்கமித்யாதி) "கரும் சிறுப்பாறை பக்கம் மீதே" என்றந்வயித் தர்த்தமருளிச்செய்கிறார் (கருத்தவித்யாதி). தார்ஷ் டாந்திகத்தில் "அக்குவடமிழிந்தேறித்தாழ" என்றதுக் கநுகுணமாக "அரு

(க) தி-வாய்-கூ-கo-க.

யின்மேல் பார்ஶ்வத்திலே அருவிகள் நிம்நோந்நதமாகச் சூழ்ந்தாப்போலே. (பகர்) ஒளி. (அக்குவடம்) திருவரையில் சாத்திய வளை மணிவடம் - வெள்ளிமணிவடம். (ஏறித்தாழ) நிம்நோந்நதமாக. (அணியல்குல்புடைபெயர) அழகிய திருமருங்கிலசைந்து புடைபெயர. (மக்களித்யாதி) லோகத்தில் மநுஷ்யர் பெற்றறியாத அழகியகுழவியுருவிலே. (தக்கமா மணிவண்ணன்) மாமணி தக்கவண்ணன்-மஹத்தான நீலரத்ந நிறத்தை யுடையவன். (வாசுதேவன்) அவருமிப்படி வளர்ந்தார்போலேகாணும். (க) *ஆத்மா வை புத்ரநாமாஸி-ஆத்மாவை புத்ரநாமாஸியிறே.

"மாமணிதக்கவண்ணன் வாசுதேவன் - உலகினில் மக்களைப் பெய்தறியா மணிக்குழவியுருவில் - கரும் சிறுப்பாறை பக்கம் மீதே அருவிகள் பகர்ந்தனைய அக்குவடமிழிந்தேறித்தாழ அணியல்குல் புடைபெயர - தளர்நடை நடவானோ" என்றந்வயம். .... (அ)

அவ.—ஒன்பதாம்பாட்டு. ஸ்வைர ஸஞ்சாரம் பண்ணித் திரிவதொரு ஆனைக்கன்றுபோலே பெருமதிப்புத்தோன்ற வரவேணுமென்கிறார்.

---

நோந்நதமான அருவிகள் ஒளிவிடுமாபோலே. (பகர்) ஒளி. (அக்கு இத்யாதி) திருவரையில்சாத்தின வளைமணிவடமானது தாழ்ந்தும் உயர்ந்தும் நாலும்படியாக. (அணியித்யாதி) அழகிய நிதம்ப ப்ரதேசமானது பார்ஶ்வங்களிலே அசைய. (மக்களித்யாதி) லோகத்தில் மநுஷ்யர் பெற்றறியாத அழகிய குழவிவடிவையுடைய. (தக்கவித்யாதி) தகுதியான நீலரத்நம்போன்ற நிறத்தையுடையனான ஶ்ரீவஸுதேவர் திருமகன், தளர்நடை நடவானோ. .... .... (அ)

---

வி" என்றதுக்குத் தாத்பர்ய மருளிச் செய்கிறார் (நிம்நோந்நதேத்யாதி). "அனைய" என்றதினர்த்தம் (போலே) என்றது. (வளை) என்றது-சங்குவளையென்றபடி. "இழிந்து" என்றும் "தாழ" என்றும் பர்யாயமாகையால் தாழவென்றதுக் கர்த்தமருளிச் செய்கிறார் (நாலும்படியாக) என்று. "புடை பெயர" என்றதினர்த்தம் (பார்ஶ்வங்களிலே அசைய) என்று. "உலகினில் மக்கள் பெய்தறியா" என்றந்வயித்து மக்களென்று மநுஷ்ய பரமாக வர்த்தமருளிச் செய்கிறார் (லோகத்திலித்யாதி). மணிபதார்த்தம் (அழகிய) என்றது. "உருவில்" என்றஸப்தமி வடிவையுடையவனென்று ப்ரதமையாகக்கடவது. தமிழில் ஒரு விபக்தி எல்லாவிபக்தியிலும் கூட்டலாயிருக்கும். ... (அ)

---

க) மந்த்ரப்ரஶ்நம்-சௌளகண்டம்.

ஸ்வா.—(வெண்புழுதியித்யாதி) தூயபுழுதியை மேலே ஏறிட்டுக்கொண்டு கையாலே அளைந்தும் வருவதாய் கரிதாயிருக்கிற இளவானைக்கன்று போலே. (தெண்ணித்யாதி) தெள்ளியபுழுதியை அளைந்து ஏறட்டிக்கொண்டு. (திரிவிக்கிரமன்) வாமநாவதாரத்தை த்ரிவிக்ரமனாகக் கண்டாப்போலே குணஸாம்யத்தாலே இதுவுமது வாகவிறே இவர்காண்பது. (சிறுபுகர்படவியர்த்து) திருமேனியில் புழுதிக்கூடவே திருமேனி நிறம்புகர்த்து வேர்ப்பொடே தோன்ற (ஒண்போதித்யாதி) கமலவொண்போதலர்ந்தாப்போலே யிருக்

மூ.—

வெண்புழுதிமேல்பெய்துகொண்டளைந்ததோர்வேழத்தின் கருங்கன்றுபோல்
தெண்புழுதியாடித்திரிவிக்கிரமன் சிறுபுகர்படவியர்த்து
ஒண்போதலர்கமலச்சிறுக்காலுறைத்தொன்றும்நோவாமே
தண்போதுகொண்ட தவிசின்மீதே தளர்நடைநடவானோ. (கூ)

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (வெண்புழுதியித்யாதி) வெளுத்த புழுதியை மேலே ஏறிட்டுக்கொண்டு அளைந்ததொரு கரிய ஆனைக் கன்றுபோலே. (தெண்ணித்யாதி) தெள்ளிய புழுதியைத் திருமேனியிலே ஏறிட்டுக்கொண்டு. (திரிவிக்கிரமன்) ஆஸ்ரிதனை இந்த்ரன பேக்ஷிதம் செய்கைக்காகத் திருவடிகளின் மார்த்தவம்பாராதே லோகத்தை அளந்தவன். (சிறுபுகர்பட வியர்த்து) ஏறட்டுக் கொண்ட புழுதி ஸ்வேதபிந்துக்களாலே நனைந்தவிடங்களிலே திருமேனி சிறிது புகர்த்துத்தோன்றும்படி வியர்த்து. (ஒண்போதித்

அரு,—ஒன்பதாம்பாட்டு. (வெண்புழிதியித்யாதி) யதாஸ்ருதத்தில் "அளைந்ததோர்" என்னுமளவும்வேழத்துக்கும், "கருமை" என்றது கன்றுக்கும்விசேஷணங்களாகத்தோன்றுகையாலே, தார்ஷ்டாந்திகத்தில் ஆநுரூப்யம் ஸித்தியாமையாலே, எல்லாம் கன்றுக்கே விசேஷணமாக வேண்டி, கருமையையும் கீழோடேசேர்த்து அர்த்தமருளிச்செய்கிறார் (வெளுத்தவித்யாதி). "தெண்" என்று தெளிவாய், அத்தாலே வெண்மையைச் சொல்லுகிறதென்று திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறார் (தெள்ளியவித்யாதி). "வெண்புழுதி" என்று த்ருஷ்டாந்தத்திலிருக்கையாலும், மேலே "புகர்பட" என்று பரபா(ஃ)கம் தோன்றச்சொல்லுகையாலும் இங்ஙன் கொள்ளவேணும். கோவிந்தனென்னாதே "திரிவிக்கிரமன்" என்றதுக்கு ஹார்த்தாபிப்ராயமருளிச் செய்கிறார் (ஆஸ்ரிதனைவித்யாதி). ஆஸ்ரிதனுக்காக காடுமேட்டையுமளந்து

கிற சிறியதிருவடிகள் மிதித்தவிடத்தே உறைத்து நோவாமே. (க) * மற்றை நிலமகள் பிடிக்கும் மெல்லடியிறே. (தண்போதித்யாதி) குளிர்ந்த பூக்களாலே அலங்கரித்த திருப்பள்ளிமெத்தை மேலே. (தவிசு) படுக்கை. .... .... .... .... .... .... (கூ)

அவ.—பத்தாம்பாட்டு. ஸமுத்ரமத்யேதோன்றின பூர்ண சந்த்ரனைப்போலே ஒப்பனையோடே நடக்கவேணுமென்கிறார்.

ஸ்வா.— (திரையித்யாதி) திரைக்கிளப்பத்தையுடைய ஸமுத்ர மத்யே சலித்துத்தோன்றின பூர்ணசந்த்ரனைப்போலே. (திருநீரித்யாதி) சந்த்ரனிலும் நீர்மையையுடைத்தாய் அழகிதான திருமுக

யாதி) அழகியதாய்த் தனக்கடைத்தகாலத்திலே அலர்ந்ததாமரைப் பூப்போலேயிருக்கிற சிறியதான திருவடிகள் மிதித்த விடத்திலே ஒன்றுறைத்து நோவாதபடியாக. (தண்ணித்யாதி) குளிர்ந்தபூக் களையுடைத்தான மெத்தைமேலே தளர்நடை நடவாளே. (தவிசு) மெத்தை. .... .... .... .... .... .... .... (கூ)

மூ.—திரைநீர்ச்சந்திரமண்டலம்போல் செங்கண்மால்கேசவன்தன்
திருநீர்முகத்துத்துலங்குசுட்டி திகழ்ந்தெங்கும்புடைபெயரப்
பெருநீர்த்திரையெழு கங்கையிலும் பெரியதோர்தீர்த்தபலம்
தருநீர்ச்சிறுச்சண்ணந்துள்ளஞ் சோரத்தளர்நடைநடவானோ

வ்யா.—பத்தாம்பாட்டு. (திரைநீரித்யாதி) திரைக்கிளப்பத்தை யுடைய ஸமுத்ர மத்யத்திலே சலித்துத்தோற்றுகிற சந்த்ரமண்டலம்போலே. (செங்கண்மாலித்யாதி). சிவந்ததிருக்கண்களையும் அதுக்குப் பரபாக(ஞு)மான கறுத்த நிறத்தையுமுடையனாய் ப்ர

திருவடிகளூறுத்தும்படி நடந்தவன். அப்படியன்றிக்கே திருவடிகளின் மார்த் தவானுகுணமாக மெத்தைமேலே நடக்கவேணுமென்று பரிவுதோற்ற "திரிவிக்கிரமன்" என்கிறானென்று திருவுள்ளம். "எறட்டுக்கொண்டவித்யாதிக்கு- திருமேனியில் சிறிது ப்ரதேசமானது புழுதிநனைந்த விடங்களிலே புகர்த்துத் தோற்றும்படி" என்று அந்வயம் கண்டுகொள்வது. (அழகியதாய்) என்றது தாமரைக்கு விசேஷணம். ... ... ... ... ... ... (கூ)

அரு.—பத்தாம்பாட்டு. (திரைநீரித்யாதி) "நீர்" என்று ஸமுத்ரமாய் அத்தாலே திரை அர்த்தஸித்தமாயிருக்க விசேஷித்ததுக்கு பா(ஞு)வம் (திரைக்கிளப்பத்தையித்யாதி). இத்தால் சந்த்ர மண்டலத்துக்கு சாஞ்சல்யம் ஸ்பஷ்டமாகத் தோற்றுமென்று கருத்து. ஸமபிவ்யாஹாரபலிதம் (அதுக்கு

* ) தி-வாய்-கூ-உ-கo.

மண்டலத்திலே ப்ரதிபிம்பிக்கிற திருக்குழல் சுட்டியானது புடை பெயர்ந்தெங்கும் ப்ரகாசிக்க. (பெருநிர்த்யாதி) தீர்த்தங்களில் ப்ரஸித்தமாய், ப்ரவாஹஜலம் மாறாமல் எப்போதும் அலையெறியக் கடவதாயிருக்கிற கங்கையிலும் ப்ரஸித்தமாய், உபமாநரஹிதமாய், ஸகலப்ரமாணவேத்யமாய், சேஷத்வ பாரதந்த்ர்யங்களோடேகூடி ரக்ஷ்யரக்ஷகபா(வ)வத்தைமாறாடி மங்களாஶாஸநபர்யந்தமானபலத்தைத்தரும் சிறுச்சணணநீர் துள்ளம் சோர. கங்கையிலும் பெரிய தென்றது - ப்ரபஞ்சாவலம்பஹேதுவாக. .... .... .... (கo)

அவ.—பதினோராம்பாட்டு. நிகமத்தில், இத்திருமொழி கற்றார்க்குப் பலம் சொல்லித் தலைக்கட்டுகிறார்.

---

ஶஸ்தகேசனாயிருக்கிறவன். (மால்)கரியவன். (தன்னித்யாதி)தன்னுடைய, அழகியதாய் நீர்மையையுடைத்தான திருமுக மண்டலத்தில் விளங்குகிற சுட்டியானது, எங்குமொக்க ப்ரகாசித்து இடம் வலங் கொண்டசைய. (பெருநிர்த்யாதி) தீர்த்தங்களில் ப்ரஸித்தமாய், ப்ரவாஹஜலம் மாறாமல் அலையெறிகிற கங்கையிலுங்காட்டில் பெரியதாய், அத்விதீயமானதீர்த்தபலத்தைத்தரும் ஜலத்தையுடைத்தான சிறுச்சண்ணமானது துளிக்கத்துளிக்கத்தளர்நடைநடவானோ. (கo)

அவ.— பதினோராம்பாட்டு. நிகமத்தில், இத்திருமொழிகற்றார்க்குப் பலம் சொல்லித் தலைக்கட்டுகிறார்.

மூ.—ஆயர்குலத்தினில்வந்துதோன்றிய வஞ்சநவண்ணன்றன்னைத்
தாயர்மகிழவொன்னார் தளரத்தளர்நடைநடந்ததனை
வேயர்புகழ்விட்டுசித்தன்சீரால் விரித்தனவுரைக்கவல்லார்
மாயன்மணிவண்ணன்றாள்பணியும்மக்களைப்பெறுவர்களே.கக.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.

---

ப்பரபாகமான) என்றது. "திரு" என்ற பதார்த்தம் (அழகியதாய்) என்றது. (நீர்மை) ப்ரஸங்கதை. "துலங்கு" பதார்த்தம் (விளங்குகிற) என்றது. "எங்கும் திகழ்ந்து புடைபெயர" என்றந்வயித்தர்த்தம் (எங்குமொக்கவித்யாதி). "திரையெழு" என்கிற வர்த்தமாநார்த்தம் (மாறாமல் அலையெறிகிற) என்றது). (கங்கையிலுங் காட்டில்) என்றதுக்கு, (பலத்தைத்தரும்) என்றத் தோடந்வயம். "துள்ளம்"-துளி. "சோர-" ஸ்ரவிக்க; இத்தால்பலிதம் (துளிக்கத்துளிக்க) என்றது. ... ... ... ... ... ... (கo)

ஸ்வா.—(ஆயரித்யாதி)ராஜகுலத்தில்ஆவிர்ப்பவித்தது-ஸாக்ஷாத்காரபரரும் ப்ராமாணிகரும் அறியுமத்தனையிறே. ஆயர்குலத்திலே தோன்றியதிறே - ஜ்ஞாஉஜ்ஞவிபாக(ஞ)மற எல்லாருமறிந்தது. இப்படி (தோன்றிய அஞ்ஜநவண்ணன் தன்னை). (தாயரித்யாதி) தாய்மாரான அநுகூலஜநங்களும், இவர் தாமும் மகிழ. இவனைக் காண உகவாதவளவேயன்றிக்கே, நடக்கக்கற்றானென்று கேட்ட போதே வயிறெரி கொளுந்திவந்து பூதநாசகடயமளார்ஜுநங்களாகிற இவர்களை வரவிட, இவர்கள் முடிந்தமைகேட்டு, (க) "கஞ்சன் வயிற்றில் நெருப்பு" என்னும்படி "அழன்ற சத்ருக்களும் ஒன்றில் அவனை ஜயிக்கப் பெறுகிறிலோம்; அவனை ஜயிப்பதாக வீரவாதம் பண்ணிப்போனவர்களை மீண்டுவரக் காண்கிறிலோம்; பிறப்பதற்கு முன்னே பிடித்தும் உருவிய வாளோடே நில்லாநின்றோம் ; இனி ஒருபோக்கடியுமில்லை; இனி ஸாது மந்த்ரியான அக்ரூரனை அழைத்தாகிலும் உறவுசெய்து பார்ப்போம்" என்று அக்ரூரனை அழைத்து, அவர் சொன்னவார்த்தையாலும்மிகவும் தளர்த்தியாமித்தனையிறே. ப்ரதிகூலித்தார்க்கும் இருந்துதளருவதிற்காட்டில் சாகவமையுமென்றாலும், சாவு அரிதாயிருக்குமிறே. அநுகூலித்தாரும் மங்களாஶாஸநரூபேண "இவனுக்கென் வருகிறதோ" என்று க்லேசித்தாலும், க்லேசிக்கை அரிதாய் மகிழ்ச்சியோடே தலைக்கட்டுமிறே.

வ்யா.—(ஆயரித்யாதி) கோ(ப)பகுலத்திலேவந்துஆவிர்ப்பவித்த. ராஜகுலத்தில் ஆவிர்ப்பவித்தமை அடியறிவாரறியுமித்தனையிறே; இதிறே எல்லாரும் அறிந்தது. (அஞ்சனவண்ணன்தன்னை.) கண்டவர் கண்குளிரும்படி அஞ்ஜநம் போலே யிருக்கிற திருநிறத்தையுடையவனை. (தாயரித்யாதி) பெற்றதாயான யசோதையும் அவளோபாதி ஸ்நேஹிகளானவர்களும் ப்ரீதராம்படியாகவும், தொட்டில் பருவத்திலே பூதநாசகடாதிகள் நிரஸ்தரானமையை யறிந்த கம்ஸாதிகளான சத்ருக்கள், தலையெடுத்து நடக்க வல்லனானமைகண்டு

அரு.—பதினோராம்பாட்டு. (ஆயரித்யாதி) யதுகுலத்தில் பிறந்தவனை, "ஆயர்குலத்தினில் தோன்றிய" என்னக்கூடுமோவென்ன வருளிச்செய்கிறார் (ராஜகுலத்திலித்யாதி). பஹுவசநத்தைக் கடாக்ஷித்து (பெற்றதாயானவித்யாதி). "ஒன்னார்" - சத்ருக்கள்.

(க) திருப்பாவை-உரு.

அவனுகப்பிக்கையாலே. (தளர்நடைநடந்ததனை) அவன் இப்படி நடந்த ப்ரகாரத்தை.

(வேயரித்யாதி) "வேயர்" என்று பட்டர்பிரானுகையாலே குடிப்பேரும் சொல்லவேணுமிறே; அன்றிக்கே "வேயர்" என்று ப்ராஹ்மணருக்குஸந்த்யாவந்தநம்விசேஷண நிரூபகமாமாபோலே, இடையர்க்கும் "குழல் கோவலர்" என்று நிரூபகமாகையாலும், இவர்தாம் கோ(ஸ்)ப ஜந்மத்தை ஆஸ்த்தாநம் செய்கையாலும், அவன் றானும் ராஜகுலத்திலும் ஆயர்குலத்திலும்ஆவிர்ப்பவித்தாப்போலே யிறே, இவரும் இரண்டு குலத்திலும் ஆவிர்ப்பவித்து மிக்கபுகழையு முடையரானபடி. (விட்டுசித்தன்) இவர் "வாஸுதேவன்" என்றுப் போலேயிறே "விஷ்ணுசித்தன்" என்றபடியும். அன்றாகில் வஸ்துநிர் தேசமும் ஆஸ்ரயணீயத்வமும் கூடாதிறே. வ்யாபகமந்த்ரங்களுக் கும் ப்ரணவ நமஸ்ஸுக்களொடொழிய வ்யதிரேகத்தால் ஸத்திதி யில்லையிறே. (சீரால் விரித்தன) சீரால்விரிக்கையாவது - குணாஸ்ரய தர்ஸநமும், குணப்ரகாஸ ஹேதுவும், குணப்ரகாச ப்ரயோஜநமு மிறே. (உரைக்கவல்லார்) இவர் விரித்தப்ரகாரம் அறியாதிருந்தார் களேயாகிலும், இவர் அபிமாநத்திலே ஒதுங்கி இவர் அருளிச்செய்த சப்தமாத்ரத்தையே அநுஸந்திக்குமவர்களும். (மாயன் மணிவண் ணன் தாள்பணியும்) * ஆஸ்சர்யமான கல்யாண குணங்களையும், ஆத்மகுண நாநாத்வத்தையும், நீலரத்நம்போன்ற வடிவழகையுமு

---

"என் செய்யப்புகுகிறோம்" என்று பீ(ம்)தராய் அவஸந்நராம்படி யாகவும் தளர்நடை நடந்த ப்ரகாரத்தை.

(வேயரித்யாதி) (க) * வேயர்தங்கள் குலத்துதித்தவராகை யாலே, அக்குடியிலுள்ளாரெல்லாரும் தம்முடைய வைபவத்தைச் சொல்லிப் புகழும்படியான பெரியாழ்வார். (சீராலித்யாதி) சீர்மை யோடே விஸ்தரித்துச்சொன்னவிவற்றை ஏதேனு மொருபடி சொல்லவல்லவர்கள். (மாயனித்யாதி). ஆஸ்சர்யமான குணங்களை யுடையனாய், நீலரத்நம்போன்ற வடிவையுடையனானவனுடைய திரு

---

அவர்கள் தளருகைக்கு ஹேதுவைச் சொல்லாநின்றுகொண்டு தாத்பர்ய மருளிச்செய்கிறார் (சீர்மையோடித்யாதி). ... ... ... ... (கo)

ஜீயர்திருவடிகளே சரணம்.

---

(க) ரு-ச-கக.

டையவன் திருவடிகளிலே பணியும். "பணியும்" என்ற வர்த்தமா நம் உத்தமனில் வர்த்தமாநமாதல், உத்தரவாக்யத்தில்ப்ரார்த்தனை யாதலிறே. (மக்களைப்பெறுவர்களே) புத்ரர்களைப் பெறுவர்கள். அவர்களாகிறார்-சிஷ்யவத்புத்ரர்களாதல்; தாஸவத்புத்ரர்களாதல்; சிஷ்யதாஸர்களாதல். இதுதான் - சப்தோச்சாரண மாத்ரத்திலே கூடுமோவென்னில்; இவரபிமாநத்திலே ஒதுங்கி இவரருளிச்செய்ததைஓதி, ஓதுவித்துப்போருமவர்களுக்குக்கூடும். எங்ஙனேயென்னில்,இவர்களாலே திருந்தின சிஷ்யர்களுடைய நினைவாலே; (க)"ஷ்ட்ரூஷ- சுகதாதம்" (உ)"இவனைப்பெற்றவயிறுடையாள்" (ங)"நந்தன்பெற்றனன்". கூரத்தாழ்வார்நங்கையார் திருவடிசார்ந்தவாறே பின்புஆவர்த்திப்பதாக அறுதியிட்டது கூடுகிறவளவில்தம்முடைய புத்ரரான ஆழ்வானுடைய ஸ்ரீவைஷ்ணவத்வத்தைக் கண்டு இதினுடைய எடுப்பிருந்தமைகண்டோமுக்கு ஆழ்வானுக்கு அந்ய சேஷத்வம் வரவொண்ணாது என்று ஆவர்த்திக்கை தவிர்ந்தாரிறே. அன்றிக்கே ஸாபிப்ராயமாக வல்லார்க்குச் சொல்ல வேண்டாதிறே.

பிள்ளைதிருவடிகளே சரணம்.

ஸ்வா.—பொன்னியல்ப்ரவேசம்.—கீழே இவருடைய அபிமாநத்திலே ஒதுங்கி அதிகாரியானவன் நல்வழிநடக்கவே அநுகூலப்ரீதி

---

வடிகளிலே ஸ்வசேஷத்வாநுரூபமான வ்ருத்தி விசேஷத்தைப்பண்ணும் ஸத்புத்ரர்களைப் பெறுவர். "மக்கள்" என்று-அவிசேஷமாகச் சொல்லுகையாலே வித்யையாலும் ஜந்மத்தாலும்வரும் உபய வித புத்ரர்களையும் சொல்லுகிறது. .... .... .... (கக)

பெரியஜீயர் திருவடிகளேசரணம்.

பெரியாழ்வார் திருமொழி முதற்பத்து ஏழாந்திருமொழி முற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளேசரணம்.

## முதற்பத்து எட்டாந்திருமொழி பொன்னியல் ப்ரவேசம்.

——(*)——

அவ.—அவன் தளர்நடையாகிற பாலசேஷ்டிதத்தினுடைய ரஸத்தை, பெற்ற தாயாரான யசோதைப்பிராட்டி தத்காலத்தில்

---

அரு.-பொன்னியல் ப்ரவேசம்.-(சேஷ்டிதத்தினுடையரஸத்தை) என்றது-

---

(க) (உ) உ-உ-சு. (ங) பெரு-தி-எ-ங.

யும், ப்ரதிகூலநிரஸநமும் ஸித்திக்குமென்றார். ப்ரதிகூல நிரஸநந் தான்-தேஜோவதமும், ப்ராணவதமுமாயிறேயிருப்பது. ஸாக்ஷாத் ப்ரதிகூலமாவது - தேஹேந்த்ரியங்களும் தானுமிறே. தேஹேந்த்ரியங்களை தேஜோவதம் பண்ணுகையாவது - அதிகாராநுகுணமாக நியமித்து சிறைப்படுத்தி நியாம்யமாக்குகை. நிரஸிக்கையாவது- எம்பாரைப்போலேயிறே. தானே தனக்கும் சத்ருவுமாயிருக்குமிறே. கர்மத்தாலன்றிக்கே,காலத்தாலன்றிக்கே, தேசத்தாலன்றிக்கே, இந்த்ரியங்களாலன்றிக்கே "நானேசெய்தேன்" என்றானிறே. இனிமேல் "அச்சோ"என்கிறவ்யாஜத்தாலே அயோக(X)வ்யவச்சேதமும், அப்ரதிஷேதம்முதலான ஆத்மகுணங்களுண்டாகிலிறே அவனைக்கூடலாவதென்னுமர்த்தத்தை வெளியிடுக்கிறார்.

---

அவனைக்குறித்து அநுபவித்தாப்போலே, பிற்காலமாயிருக்கச் செய்தேயும் மயர்வற மதிநல மருளப்பெற்றவராகையாலேதத்காலம் போலே ப்ரகாசித்து, தாமும் அந்த ரஸத்தை அநுபவித்தாராய் நின்றார் கீழ்; இனிமேல் அவனுடைய சைசவாநுகுணமாகஓடிவந்து தன்னை அணைத்துக்கொள்ளும்படியை, யசோதைப்பிராட்டி அநுபவிக்கவாசைப்பட்டு, அதுதன்னை அவனைக்குறித்தபேக்ஷித்து, அவன் வந்து தன்னை அணைக்கையாகிற ரஸத்தை அவள் அநுபவித்த ப்ரகாரத்தை, அப்படியே தாமும் அநுபவித்து ஹ்ருஷ்டராகிறார். "அச்சோ" என்று - அவன் வந்து அணைத்துக் கொள்ளுகையை அபேக்ஷிக்கையும், அந்த சேஷ்டிதரஸத்தை அநுபவிக்கையுமே அவளோடுஇவர்க்குஸாம்யம். *மயர்வறமதிநலம்பெற்று, பரத்வாதிகளையெல்லாம் தெளியக்கண்டவராகையாலே அவதாராந்தர சேஷ்டிதங்களையும் இவ்வவதாரந்தன்னில் உத்தரகாலத்திலுள்ள சேஷ்டிதங்களையும் தர்மைக்யத்தாலே வஸ்துவிசேஷணமாக்கிக் கொண்டு அவனைப்புகழ்ந்து, அந்த பாலசேஷ்டித ரஸத்தை அநுபவித்தவிது இவர்க்கு விசேஷம். .... .... .... .... .... .... *

---

அதினுடைய வழகையென்றபடி. (அநுபவித்தாப்போலே) என்றவநந்தரம் "இவர்பால்யசேஷ்டிதத்தை அநுபவிக்கும் காலம்" என்றுசேஷம். (ப்ரகாசித்து) என்றது - ப்ரகாசிக்கவென்றபடி. (அணைக்கையாகிற ரஸத்தை) என்றது - அணைக்கையிலுண்டான வழகையென்றபடி. இங்கு தர்மிதர்மங்களுக்கு அபேதநிர்தேசம் ஔபசாரிகம். (வஸ்து) என்றது-தத்காலாநுபாவ்யமான க்ருஷ்ணனாகிற பரவஸ்து வென்றபடி. ... ... ... ... ... *

அவ.—முதற்பாட்டு. மின்னோடே ஒருமேகம் வந்தாப்போலே வந்து என்னோடே அணையவேணுமென்கிறார்.

ஸ்வா—(பொன்னியலித்யாதி) பொன்வடத்திலே கோவைப் பட்டு, ஓசையையுடைத்தானகிண்கிணியைத்திருவரையிலேபின்னே சாத்தி, திருச்சுட்டியை முன்னேசாத்தி. (தன்னியலித்யாதி) தன்

---

மூ.—பொன்னியற்கிண்கிணி சுட்டிப்புறங்கட்டித்
தன்னியலோசை சலன்சலனென்றிட
மின்னியல்மேகம் விரைந்தெதிர்வந்தாப்போல் [வச்சோ.
என்னிடைக்கோட்டரா வச்சோவச்சோ எம்பெருமான் வாராவச்சோ

வ்யா.—முதற்பாட்டு. (பொன்னியல்கிண்கிணி) பொன்னாலே இயலப்பட்டகிண்கிணி. அழகுக்குடலாக மேலேபொன்தோய்த்துச் சமைத்த கிண்கிணியென்றபடி. பொன்னே உபாதானமாகச் சமை த்ததென்னில் த்வநிக்கக்கூடாதிறே. அன்றிக்கே,பொன்வடத்திலே கோவைப்பட்ட கிண்கிணியென்னவுமாம். மேலே "சலன்சலனென் றிட" என்கையாலே, கிண்கிணியென்றவிது-திருவரையில் சாத்தும் கிண்கிணியையும், சேவடிக்கிண்கிணியையும் சொல்லுகிறது. (சுட்டி) லலாடபூஷணம். இவற்றை, "புறங்கட்டி" என்றது-புறமென்று- இடமாய், அவற்றுக்கு அடைத்த ஸ்த்தலங்களிலே கட்டி என்ற படி. "கண்கால்புறமகம்" என்கையாலே, புறமென்றசப்தம்-இடத் துக்கு வாசகமிறே. (தன்னியலித்யாதி). திருவரையில் கிண்கிணியி னுடையவும் திருவடிகளில் சதங்கைகளினுடையவும், தனக்குஇயல்

---

அரு.—முதற்பாட்டு. (பொன்னியலித்யாதி) (இயலப்பட்ட) என்றது - சமைக்கப்பட்ட வென்றபடி. (பொன்தோய்த்து) என்றது - பொன்னைப்பூசி யென்றபடி. "பொன்" என்றுபொன்ஸூத்ரமாய் அதிலே இயலப்படுகை-கூடு கையாய் அர்த்தாந்தரம் (அன்றிக்கேயித்யாதி). "உடைமணிகணகணென" என்று சொல்லாதே, க்ஷுத்ரக (கு) ண்டிகைகளுடைய சப்தாநுகாரமான "சலன் சலன்" என்கிற சப்தம் ப்ரயோகிக்கையாலே, அவிசேஷேண எல்லா வற்றையுமருளிச்செய்கிறார் (மேலேயித்யாதி). "புறம்" என்று இடத்தைக் காட்டுமோவென்ன நியாமகமருளிச் செய்கிறார் (கண்ணித்யாதி). "தன்" என்று ஏகவசநமாகவெடுத்தது-பாட்டில் "கிண்கிணி" என்று ஜாத்யேகவசந மாயிருக்கையாலே. (இயல்வான) - ஸ்வாபாவிகமான வென்றபடி.

ளிஷ்டத்திலே விளையாடாநின்றால் கிண்கிணி முதலான ஆபரணம் த்வநிக்குமிறே. (சலன் சலன்) - அநுகாரத்வநி.

(மின்னியலித்யாதி) மின்னோடேகூடி ஒருமேகம் கால்படைத்து கடுகநடையிட்டுக் கொடுவருமாபோலே, திருவாபரணப்ரகாசமும் திருமேனியில் ப்ரகாசமும் தோன்ற. (என்னிடையித்யாதி) உனக்குப்ரார்த்தநீயமான என்னிடையிலிருப்புக்கு, எனக்குப்ரார்த்தநீயமான உன்னுடைய ஓட்டத்தைத்தாரா; நானெடுத்தணைக்கும்படி கூடவேணும். இவருடைய ஹஸ்தமுத்ரை பரமபக்தி பர்யந்தமானாலும், அவனுக்குவேண்டுவது அப்ரதிஷேதமிறே. (எம்பெருமான்வாரா) என்றது - ஸ்வாமியாய், மஹோபகாரகனாய்,

---

வானத்வநி சலன் சலனென்று த்வநிக்க. "சலன்சலன்" என்கிறவிது அநுகாரசப்தம்.

(மின்னியலித்யாதி). மின்னைஇயல்வாக வுடைத்தான மேகமானது கால்படைத்துக் கடுநடையிட்டுக்கொண்டு எதிரே வருமாபோலே. கீழ்-"கிண்கிணி சுட்டி" என்றவை, (க)"செங்கமலக்கழல்" என்கிறபாட்டிற் சொன்ன ஸர்வாபரணங்களுக்கு முபலக்ஷணமாய், திருமேனிக்குப் பரபாக(ஓஒ)மான அவ்வாபரண தேஜஸ்ஸோடே கூட நடந்துவரவேணுமென்னு மபேக்ஷையைப்பற்ற இந்த த்ருஷ்டாந்தமருளிச்செய்தது. (என்னிடைக்கித்யாதி). என்னுடைய ஒக்கலையிலிருப்புக்காசைப்பட்டு ஓடிவந்து என்னை அணைத்துக்கொள்ள வேணும். இருகால் சொல்லுகிறது - அதில் ஆதராதிசயத்தாலே. (எம்பெருமானித்யாதி) முன்சொன்னவிடத்தில் அல்பம் விளம்பிக்கையாலே, என்னுடைய நாதனே வாரா அச்சோவச்சோ வென்

---

(மின்னைஇயல்வாக) என்றது - மின்னைஸ்வபாவமாக; அதாவது - நிலைநின்றதாக வென்றபடி. (கால்படைத்து) என்றது - ஓடிவருகைக்கு ஹேதுவாக காலையுண்டாக்கிக்கொண்டென்றபடி. இவைஇரண்டாலும் அபூ (ஹுூ) தோபமை சொல்லிற்றாய்த்து. பொன்பூசின கிண்கிணிப்புகர், மின்புகர் நேர் நில்லாமையாலும், சுட்டி சிறியபூஷணமாகையாலும், ஸகலாபரணங்களுமுண்டாயிருக்கையாலும் சொன்னவை உபலக்ஷணமென்கிறார் (கீழித்யாதி). "ஓட்டரா" என்றதினர்த்தம் (ஓடிவந்து) என்றது. "வாரா" என்றது - வந்தென்றவர்த்தத்தைச் சொல்லுமாபோலே யிருக்கிறது. ... ... (க)

---

(க) க-ரு-கo.

"எப்போதோ அழைப்பார்" என்று பார்த்துநின்று வருகிறவனை, "வாரா" என்றது - தம்முடைய ஆற்றாமையாமித்தனையிறே. (அச்சோவச்சோ) என்றது-சிறுபிள்ளைகளோடே ஸம்ஶ்லேஷஸாபேக்ஷராயிருப்பார் உகந்துசொல்லும் பாசுரமிறே. .... .... .... (க)

அவ.—இரண்டாம்பாட்டு. திருக்குழல் திருமுகத்தேகவியும் படிகடுநடையிட்டு வரவேணுமென்கிறார்.

ஸ்வா.—(செங்கமலமித்யாதி). தன்நிலத்திலே யலர்ந்த செவ்வித்தாமரையிலேவண்டுகள்மொய்த்தாப்போலே. (பங்கிகளித்யாதி) சுருண்ட வண்டொத்த திருக்குழல்கள் வந்து உன் திருப்பவளத்திலே மொய்க்கும்படியாக. (சங்கித்யாதி) மங்களாசாஸநபரரான ஸ்ரீ பஞ்சாயுதாழ்வார்களைத் தரிக்கிற அழகிய திருக்கைகளாலே வந்து தழுவாநிற்கச் செய்தேயிறே அபிநிவேசத்தின் மிகுதியாலே "ஆரத்தழுவாய்" என்கிறது. இவர்க்கும் இவனோட்டை ஸ்பர்சம் தான் யுவதிகளை அபிமதபுருஷர்கள் ஸ்தநபரிரம்பணம் செய்தால்

கிறது. அச்சோவென்றது - அணைத்துக் கொள்ளென்றபடி. (க)

மூ.—செங்கமலப்பூவில் தேனுண்ணும்வண்டேபோல்
பங்கிகள்வந்துன் பவளவாய்மொய்ப்பச்
சங்குவில்வாள்தண்டு சக்கரமேந்திய
அங்கைகளாலேவந்தச்சோவச்சோ வாரத்தழுவாய்வந்தச்சோவச்சோ. (உ)

வ்யா.—இரண்டாம்பாட்டு. (செங்கமலமித்யாதி) செந்தாமரைப் பூவிலே மதுபாநம்பண்ணுகிற வண்டுகள்போலே. (பங்கிகளித்யாதி) சுருண்ட திருக்குழல்கள்வந்து உன் திருப்பவளத்தை மொய்க்கும்படியாக. (சங்கித்யாதி) ஆஶ்ரிதவிரோதி நிரஸநத்துக்கும், அழகுக்கும் உடலாய், உனக்கும் பரிகையேயாத்ரையாயிருக்கும் ஶ்ரீபஞ்சாயுதங்களைப் பூவேந்தினாப்போலே தரித்துக்கொண்டிருக்குமவையாய், அவைதானும் மிகையாம்படி வெறும்புறத்திலே ஆலத்திவழி

அரு.—இரண்டாம்பாட்டு. வண்டுகளுடைய ஸாதருஶ்யம்தோன்ற வருளிச்செய்கிறார். (சுருண்ட) என்று. "பங்கிகள்" என்றதினர்த்தம் (குழல்கள்) என்றது. "அங்கைகளாலே - ஆரத்தழுவ வா" என்னவமைந்திருக்க ஆழ்வார்களோட்டைச் சேர்த்தியருளிச்செய்ததுக்கு மூன்றுவகையாகக் கருத்தருளிச் செய்கிறார் (ஆஶ்ரிதேத்யாதி). "அம்" என்றது - ஸ்வாபாவிகமான அழகைச் சொல்லுகிறதென்கிறார் (அவைதானுமித்யாதி). "ஆரத்தழுவவா"

அவர்கள் அந்த போகாதிசயத்தாலே சொல்லும்பாசுரம்போலே யிருக்கிறது காணும். .... .... .... .... .... (உ)

அவ.—மூன்றாம்பாட்டு. அரைகுலையத் தலைகுலைய ஓடிவர வேணுமென்றார்கீழ்; இதில் திருமேனி அலையாமல் வரவேணுமென்கிறார்.

ஸ்வா.—(பஞ்சவரித்யாதி) அவனுக்கு ப்ரார்த்தநீயமிறே இதுதான். (க) "முன்னோர்தூது வானரத்தின் வாயில் மொழிந்து - அவனே - இன்னார் தூதனென நின்றான்" என்றிறே ஜீயர்க்கு பட்டர் அருளிச்செய்தது. பாண்டவர்கள் தூதனாய்; துர்யோதநாதிகள் பக்கலிலே சென்று "இவர்களையும் ஸமாதாநம் செய்யலாமோ"

---

க்க வேண்டும்படியான அழகையுடைய திருக்கைகளாலே வந்து அணைத்துக்கொள்ளவேணும். (ஆரவித்யாதி) அபர்யாப்தமாக வன்றிக்கே, பரிபூர்ணமாக அணைத்துக் கொள்ளவேணும். .... ....(உ)

மூ.—பஞ்சவர்தூதனாய்ப் பாரதம்கைசெய்து
நஞ்சுமிழ்நாகம்கிடந்த நற்பொய்கைபுக்கு
அஞ்சப்பணத்தின்மேல் பாய்ந்திட்டருள்செய்த [வச்சோ.
அஞ்ஜநவண்ணனேயச்சோவச்சோ ஆயர்பெருமானேயச்சோ.

வ்யா.—மூன்றாம்பாட்டு. (பஞ்சவரித்யாதி) துர்யோதநாதிகளாலே நெருக்குண்டு, ராஜ்யாதிகளை இழந்து; உன்னையொழிய வேறொரு துணையின்றிக்கே நின்ற பாண்டவர்கள் ஐவர்க்கும் பரதந்த்ரனாய்க்கொண்டு தூதக்ருத்யத்திலே அதிகரித்து, துர்யோதநாதிகள் பக்கலிலே சென்று அவர்களையும் இவர்களையும்சேர்க்கப்பார்த்த

---

என்றதுக்கு வ்யாவர்த்த்யபூர்வகமாக அர்த்தமருளிச் செய்கிறார் (அபர்யாப்தேத்யாதி). முதலச்சோவச்சோவென்றது - ஆதராதிசயத்தாலே. அதிலும் விஞ்சின ஆதராதிசயத்தாலே ஆரத்தழுவவேணுமென்றது. இதுக்குமேல் அல்பம் விளம்பிக்கையாலே, "வந்தச்சோவச்சோ" என்றதென்றுகண்டு கொள்வது. இவ்வாழ்வார்க்கு இவனோட்டை ஸ்பர்ஶம் அபிமதவிஷயஸ்பர்ஶம்போலே இனிதாயிருக்கிறதிறே. ... ... ... ... ... (உ)

அரு.—மூன்றாம்பாட்டு. (பஞ்சவரித்யாதி) பாண்டவர்கள் அஞ்சுபேரேயாகைக்கும், இவர்களுக்கு க்ருஷ்ணன் தூதனாகைக்கும் ஹேதுக்களை யருளிச்செய்து கொண்டர்த்தமருளிச் செய்கிறார் (துர்யோதநேத்யாதி, சொல்லிப்

---

(க) தி-மொ- உ-உ-௩.

என்று மத்யஸ்தபுத்தியாலே பார்த்தவளவில் அவர்கள்நெஞ்சில் ஈரப்பாடு காணுமையாலே பாரதயுத்தம் கையும் அணியும் வகுத்துச் செய்யவேண்டிற்று. (நஞ்சித்யாதி) நல் பொய்கைபுக்கு-கிடந்த - நஞ்சுமிழ்நாகம் - அஞ்சப்பணத்தின்மேல்-பாய்ந்திட்டு. முன்பு அம்ருதஜலமான பொய்கையிறே சலங்கலந்த பொய்கையாயிற்று.

(அஞ்சப்பணத்தின்மேல்) அநுகூல ஜநங்களான திருவாய்ப்பாடியிலுள்ளாரும், மற்றுமுண்டான ஸாக்ஷாத்காரபரரும், அதீத காலத்துக்கும் உத்தரகாலத்திலே வயிறு மறுகும்இவர்தாமும் அஞ்

---

விடத்தில்,அவர்கள்இசையாமையாலே,"ஆனால்யுத்தத்தைப்பண்ணி ஜயித்தவர்கள் ஒருவர் ராஜ்யத்தை ஆளுங்கோள்" என்று சொல்லிப்போந்து, பின்பு பாண்டவர்களுக்காய் நின்று பாரதயுத்தத்திலே கையும் அணியும் வகுத்து யுத்தத்தைநடத்தி. (நஞ்சித்யாதி) விஷத்தையுமிழாநின்ற காளியனென்கிற ஸர்ப்பம் கிடந்தகொடிய பொய்கையிலே அத்தை மதியாமல் சென்றுபுக்கு. "நற்பொய்கை" என்றது - விபரீதலக்ஷணையாய், காளியவிஷதூஷித மாகையாலே க்ரூரமான பொய்கை யென்றபடி.

( அஞ்சவித்யாதி ). (க) "ஆய்ச்சிமார்களு மாயருமஞ்சிட" என்கிறபடியே இந்த வ்ருத்தாந்தத்தைக்கேட்ட அநுகூல ஜநங்களெல்லாரும் "என்னாகப்புகுகிறதோ" என்று பயப்படும்படியாக (உ) "ஐந்தலைய பைந்நாகத்தலைப் பாய்ந்தவனே" என்கிறபடியே அந்

---

போந்தென்னுமளவும்). "பஞ்சவர்தூதனாய்" என்றத்தைக் கடாக்ஷித்து சப்தார்த்தம் காட்டுகிறார் (பின்பித்யாதி). (கையும் அணியும்) என்றது - முன் வ்யூஹத்தையும் பின்வ்யூஹத்தையும், சொல்லுகிறது. வ்யூஹமாவது-ஸேநாநிவேசம். "கைசெய்து" என்றதின் பலிதார்த்தம் (யுத்தத்தை நடத்தி) என்றது. "நல்" என்றது - கொடுமையைச் சொல்லுமோவென்ன வருளிச் செய்கிறார் (நற்பொய்கையித்யாதி).

"அஞ்ச" என்றதுக்கு இரண்டர்த்தம் ; அநுகூலரஞ்சவென்றும், ப்ரதிகூலனான காளியனஞ்சவென்றும். அதில் முந்தினதை ப்ரமாண பூர்வகமருளிச்செய்கிறார் (ஆய்ச்சிமாரித்யாதி). "பணத்தின்மேல் பாய்ந்திட்டு" என்றதுக்கு ப்ரமாண பூர்வகமாக வர்த்தமருளிச்செய்கிறார் ( ஐந்தலையவித்யாதி )

---

(க) நா-தி-௬-௯. (உ) தி-பல்-௧0.

சமென்னுதல்; அன்றிக்கே, காளியன்றான் ப்ராணரக்ஷணத்துக்காக அஞ்சமென்னுதல். (பணத்தின்மேல்)அதினுடையபணத்தின்மேலே. (பாய்ந்திட்டருள்செய்த) அவன் சரணம்புக்கவாறேஅருள்செய்தது தம்பேறாக நினைக்கிறார். (அஞ்சனவண்ணனே) அஞ்சினாரை ரக்ஷிக்கப்பெற்றோமென்று அஞ்ஜநவண்ணமேனி புகர்பெற்றுச் செல்லுகையாலே "அஞ்சநவண்ணனே" என்கிறார். (ஆயர்பெருமானே) அஞ்சினார்க்கும் அஞ்சாதார்க்கும் நிர்வாஹகனாய் ரக்ஷித்தவனே யென்கிறார். .... .... .... .... .... .... .... (௩.)

---

தக்காளியனுடைய பணங்களின்மேலே சென்று குதித்து ந்ருத்தம் செய்துஅவனை இளைப்பித்து, (க)"க்ருபாமாத்ர மநோவ்ருத்திஃப்ரஸீத மே- க்ருபாமாத்ர மநோவ்ருத்திஃப்ரஸீதமே" என்று தன்னுடையப்ராணரக்ஷணத்துக்காக அவன் சரணம்புகுந்த பின்பு அவன் பக்கலிலே அருளைப்பண்ணின. "அஞ்சப்பணத்தின்மேல் பாய்ந்திட்டு" என்றது- காளியன்றான் அஞ்சும்படியாக அவன் பணத்தின்மேலேபாய்ந்தென்னவுமாம். ( அஞ்சநவண்ணனே ) சரணாகதரக்ஷணம் பண்ணுகையாலே அஞ்ஜநம்போலே குளிர்ந்து புகர்பெற்ற திருமேனியையுடையவனேஅச்சோவச்சோ. (ஆயர்பெருமானே) அமரர் பெருமானை மேன்மைக்கு எதிர்தட்டாக ஆயர்பெருமானை நீர்மையையுடையவனே அச்சோவச்சோ. .... .... .... .... (௩.)

மூ.—நாறிய சாந்தம் நமக்கிறைநல்கென்னத்
தேறியவளும் திருவுடம்பில்பூச
ஊறிய கூனினை யுள்ளே யொடுங்கவன் [வச்சோ.
றேறவுருவினையச்சோவச்சோ எம்பெருமான்! வாரா வச்சோ

---

(உ) "ஸஹஸ்ரஶீர்ஷ்ண:- சஹஸ்ரசீர்ஷ்ண:" என்றுபணங்களநேகங்களென்றுசொல்லியிருக்கையாலே "பணத்தின்மேல்" என்ற ஏகவசநம் ஸமஷ்டிவாசகமென்று திருவுள்ளம்பற்றி (பணங்களின்மேலே) என்றது. ஆகையாலே "ஜந்தலைய" என்ற பாசுரத்திலுமுபலக்ஷணமென்று திருவுள்ளம். "அருள்செய்த" என்றதுக்குப்ரமாணபூர்வகமாக ஹேதுவைக்காட்டிக் கொண்டர்த்தம் (க்ருபாமாத்ரேத்யாதி). அஞ்சவென்றதினிரண்டாமர்த்தம் (அஞ்சவித்யாதி). "அருள்செய்த" என்றத்தைக் கடாக்ஷித்தர்த்தமருளிச் செய்கிறார் (சரணாகதேத்யாதி). ... ... ... ... ... ... ... ... (௩.)

---

(க) வி-பு-ரு-எ-எ௦.

அவ.—நாலாம்பாட்டு. கூனிசாத்தினசாந்தின் நாற்றத்தோடே வரவேணுமென்கிறார்.

ஸ்வா.—(நாறியவித்யாதி) கூனியைச்"சாந்துதா"என்னஅவள் மட்டமான சாந்துகளைக் காட்ட; இவை ஆகாதென்றுநீக்கி, "குளு

வ்யா.—நாலாம்பாட்டு. (நாறியவித்யாதி) ஈரங்கொல்லியைக் கொன்று பரியட்டங்கள் சாத்தி ஸ்ரீ மதுரையிலே போய்ப்புகுந்த வளவிலே, கம்ஸனுக்குச்சாந்திட்டுப்போரும் கூனி, சாந்துகொண்டு போகா நிற்கச்செய்தே வழியிலேகண்டு, "அண்ணர்க்கும் நமக்கும் பூசலாம்படி சாந்திட வல்லையோ" என்ன; அபேக்ஷித்தது மறுக்க மாட்டாமையாலும் "வெண்ணெய் நாற்றத்திலே பழகின இவர்கள் சாந்தின் வாசியறிவார்களோ"என்னுமத்தாலும், மட்டமானசாந்து களைக்காட்ட; (க) "ஸுகந்த⁴மேதத் - ஸுகந்தமேதத்" இத்யாதிப்படியே அவற்றுக்கெல்லாம் ஒரு குறைசொல்லிக்கழித்து, (க) "ஆவயோர்கா³ த்ரஸத்³ருஶம் தீ³யதாமநுலேபநம்-ஆவயோர்காத்ர ஸத்ருசம் தீயதாமநுலே

அரு.—நாலாம்பாட்டு. (நாறியவித்யாதி) (உ) "ஏவம் விகத்த²மாநஸ்ய குபிதோ தே³வகீஸுத:। ரஜகஸ்ய கராக்³ரேண ஶிர: காயாத³பாதயத் - எவம் விகத்தமாநஸ்ய குபிதோ தேவகீஸுத:। ரஜகஸ்ய கராக்ரேண ஶிர:காயாதபாதயத்" என்கிற ப்ரமாணத்தைக் கடாக்ஷித்து (ஈரங்கொல்லியைக்கொன்று) என்றது. (ங) "வஸித்வாத² ப்ரியே வஸ்த்ரே க்ருஷ்ண: ஸங்கர்ஷணஸ்ததா² - வஸித்வாதம்ப்ரியே வஸ்த்ரேக்ருஷ்ணஸ்ஸங்கர்ஷணஸ்ததா" என்கிறத்தைப்பற்ற (பரியட்டங்கள்சாத்தி) என்றது. [வஸித்வா]-சாத்தி. (ச) "அத² ப்ரஜந்ராஜபதே²ந மாத⁴வஸ்ஸ்த்ரியம் க்³ருஹீதாங்கவிலேபபா⁴ஜநாம்। ஆலோக்ய குப்³ஜாம் யுவதீம் வராநநாம் பப்ரச்ச²யாந்தீம் ப்ரஹஸந்ப்ரஸந்நத:² - அதவ்ரஜந்ராஜபதேநமாதவஸ்ஸ்த்ரியம் க்ருஹீதாங்கவிலேபபாஜநாம், ஆலோக்ய குப்ஜாம்யுவதீம் வராநநாம் பப்ரச்சயாந்தீம் ப்ரஹஸந்ப்ரஸந்நத:" என்கிறதை யுட்கொண்டருளிச்செய்கிறார் (ஸ்ரீமதுரையித்யாதி). "சாந்தம்நல்கு" என்னவமைந்திருக்க "நாறிய" என்று விசேஷிக்கைக்கு, அவள் வேறே ஏதேனுமொரு சாந்தைக் கொடுத்தாளோவென்ன, அத்தை ஹேதுபூர்வகமாக வருளிச்செய்துகொண்டு விசேஷித்ததுக்குத் தாத்பர்ய மருளிச் செய்கிறார் (அபேக்ஷித்ததித்யாதி). "இறை" என்றதினர்த்தம்

(க) வி-பு-ரு-உ0-சு.
(உ) பாக-கO-சக-ஙஎ.
(ங) பாக-கO-சக-ஙகூ.
(ச) பாக-கO-சஉ-க.

ந்து நாறிய சாந்திலே ஓரல்பம்தர" என்றபேக்ஷிக்க; அவளும் பிள்ளைகளை "சாந்தில் வாசியறிந்தபடியென்" என்று கொண்டாடி தேறிக்கொடுக்க. தேறிக்கொடுக்கையாவது-கம்ஸனால் வரும் நலிவுக்கஞ்சாமல் ஸ்நேஹத்தோடே கொடுக்க, வாங்கித்தாம் சாத்திக் கொள்ளுதல்; அவள் தான்திருமேனியை பா (ஞா) வபந்தத்தோடே தொட்டுச் சாத்தினளென்னுதல். பூசக்கொடுத்தாளென்னுதல். இப்படி சாத்தினவளவில்;

(ஊறியவித்யாதி) இவள் முதுகிலே வேர்விழுந்ததோ" என்

---

பநம்" என்று "அண்ணருடம்புக்கும் நம்முடம்புக்கும் அநுரூபமான பரிமளத்தையுடைய சாந்திலே அல்பம்தரவேணும்" என்று அபேக்ஷிக்க; சாந்தை, தரமிட்டுக்கழித்தபடியையும் அபேக்ஷித்த சீர்மையையும் வடிவழகையும் கண்டு ஹ்ருஷ்டையாய் "கம்ஸனுக்குக் கொடுபோகிறவித்தை இவர்களுக்குக கொடுத்தால் அவன் தண்டிக்கில்செய்வதென்" என்று அஞ்சாதே நெஞ்சம்தேறி அவளும் உத்தமமான சாந்தை யெடுத்துத் திருமேனியிலேசாத்த.

(ஊறியவித்யாதி) அநந்யப்ரயோஜநமாக அவள் கிஞ்சித்கரிக்கையாலுண்டான ப்ரீதியாலே "இவள் முதுகில் கூனை நிமிர்த்துவிடக்கடவோம்" என்று திருவுள்ளம்பற்றி அவள்முதுகிலே வேர்விழுந்ததோ" என்னும்படி உறைத்துப் புறப்பட்டு கிடக்கிற கூனை அவள் சரீரத்தினுள்ளே ஒடுங்கும்படியாக அக்காலத்திலே

---

(அல்பம்) என்றது. இவனபேக்ஷித்த மாத்ரத்திலே இவள்திருவுடம்பில் பூசக்கூடுமோ? ராஜதண்டநபீதியில்லையோவென்ன, ஹர்ஷாதிசயத்தாலே அஞ்சாதே சாத்தினளென்று விவக்ஷித்து, அந்த ஹர்ஷத்துக்கும் "நாறிய இறை நல்கு நமக்கு" என்கிற பதங்களைக்கடாக்ஷித்து ஹேதுக்களை அருளிச்செய்து கொண்டு, தேறியித்யாதிக் கர்த்தமருளிச்செய்கிறார் (சாந்தைத்தரமிட்டு இத்யாதி).

(க) "ప్రసన్నో భగవాన్ కుబ్జాం త్రివక్రాం రుచిరాననామ్। ఋజ్వీంకర్తుంమనశ్చక్రే దర్శయన్దర్శనేఫలమ్ - ப்ரஸந்நோ பகவாந் குப்ஜாம் த்ரிவக்ராம்ருசிராநநாம் । ருஜ்வீம்கர்த்தும் மநஶ்சக்ரே தர்ஶயந்தர்ஶநேபலம்" என்கிறத்தையுட் கொண்டருளிச் செய்கிறார் (அநந்யப்ரயோஜநேத்யாதி). "ஊறிய" என்றதுக் கர்த்தம் ( அவள்முதுகிலேயித்யாதி ). (நிமிர்த்து திருக்கையாலே) என்ற

---

(க) பாக-கo-சஉ-கூ.

னும்படி தரித்துப் புறப்பட்டகூனிஜ. (உள்ளேயொடுங்க) உள்ளே ஒடுக்கும்படியாகவிறே ஏறவுருவிற்று. இப்படி அவன் நிமிர்த்துக் காட்டிற்று எல்லாரும் நம்மையே அநுவர்த்தித்து தந்தாமுடைய வக்ர புத்தியைத் தவிர்த்துக் கொள்ளுங்கோளென்ற தாயிற்று. (அன்று) அநுவர்த்தித்த வப்போதே யென்றபடி. (எம்பெருமான் வாராய்) எங்கள் குலத்துக்கு ஸ்வாமியுமாய் உபகாரகனுமான வனே. .... .... .... .... .... .... .... (ச)

அவ.— அஞ்சாம்பாட்டு. திருக்கையில் திருவாழியோடே வரவேணுமென்கிறார்.

ஸ்வா.—(கழலித்யாதி) க்ருஷ்ணன் "ஶ்ரீதூதெழுந்தருளிவருகிறான்" என்றுகேட்ட வளவிலே வீரக்கழலிட்டு ஸமர்த்தராயிருக்கும் ராஜாக்கள் பலரும்சூழ, அபிஷேகம் முதலான ஆபரணங்க

---

நிமிர்த்து, திருக்கைகளாலே யுருவினவனே! அச்சோவச்சோ; எங்கள் குலத்துக்கு ஸ்வாமியானவனே வாராவச்சோவச்சோ. .... (ச)

மூ.—கழல்மன்னர் சூழக் கதிர்போல்விளங்கி
எழலுற்றுமீண்டே யிருந்துன்னைநோக்கும்
சுழலைபெரிதுடைத் துச்சோதநஜை [வச்சோ.
அழலவிழித்தானேயச்சோவச்சோ ஆழியங்கையனே யச்சோ

வ்யா.—ஐந்தாம்பாட்டு. (கழலித்யாதி) பாண்டவர்களுக்காக ஶ்ரீதூதெழுந்தருளுகிற விசேஷத்தைக்கேட்டு, வீரக்கழலிட்டுஸமர்த்தராயிருக்கும் ராஜாக்கள் பலரும் சூழ ஸேவித்திருக்க, தான் ஸிம்ஹாஸநஸ்த்தனைக்கொண்டு அபிஷேகாத்யாபரண தேஜஸ்ஸா

---

விடத்தில் (க) "పద్భ్యామాక్రమ్య ప్రపదేద్వ్యజ్ఞుళ్యుత్తానపాణినా। ప్రగృహ్యచు బుకేధ్యాత్మముదనీనమదచ్యుతః - பத்ப்யாமாக்ரம்ய ப்ரபதேத்வ்யங்குள்யுத்தாந பாணிநா। ப்ரக்ருஹ்யசுபுகேத்த்யாத்மமுதநீந மதச்யுத:" என்கிறதநு ஸந்தேயம். ... ... ... ... ... ... ... (ச)

அரு.—அஞ்சாம்பாட்டு. (கழலித்யாதி) யுத்தகாலமன்றியிலேயிருக்க கழல்மன்னர் சூழ்கைக்கு ஹேதுவை யருளிச்செய்கிறார் (பாண்டவர்களுக்காக

---

(க) பாக-கo-சஉ-எ.

ளோடே ஆதித்யனைப்போலே விளங்காநின்றுகொண்டு ஸிம்ஹாஸ நத்திலேயிருந்து, "க்ருஷ்ணன்வந்தால் ஒருவர் எழுந்திருத்தல், குஶல ப்ரஶ்நம்செய்தல் தவிருங்கோள்" என்று நியமித்துப் பொய்யாஸநமிட்டு துர்யோதநனிருந்தவளவிலே, க்ருஷ்ணன் எழுந்தருள, இருந்த ராஜாக்களடங்க (க) "അവശാഃ പ്രതിപേദിരേ- அவசாः ப்ரதிபேதிரே" என்றெழுந்திருந்து அஞ்ஜலிவந்தநாதிகளைச்செய்து க்ருஷ்ணனெழுந்தருளியிருந்தவளவில் அவர்களுமிருக்கக் காண்கையாலும், அதிகுபிதசலிதஹ்ருதனாய்க்கொண்டு "முன்பு செய்து வைத்த சூழ்ச்சிகளுக்கு காலம்இது" என்று இங்கிதங்களாலே தான் நிறுத்திவைத்த மல்லரைநியோகிக்க.

க்ருஷ்ணனும் இங்கிதஜ்ஞனாகையாலே தன்னையும் அழலநோக்கின துர்யோதநனை அவன் செய்த சூழ்ச்சி அவன்றனக்கேயாம்படி

---

லும் ப்ரதாபத்தாலும் ஆதித்யனைப்போல்விளங்கி, "க்ருஷ்ணன் வந்தால் ஒருவரும் எழுந்திருத்தல், குசலப்ரஶ்நம் பண்ணுதல் செய்யாதே கொள்ளுங்கோள்" என்று நியமித்து, பொய்யாஸநமிட்டு வைத்திருக்கிறவளவிலே, எழுந்தருளிச்சென்று புகுந்தபோது, இருந்த ராஜாக்களெல்லாரும் (க) "അവശാഃ പ്രതിപേദിരേ- அவசாः ப்ரதிபேதிரே" என்கிறபடியே எழுந்திருப்பார் அநுவர்த்திப்பாராக, தானும் துடைநடுங்கி எழுந்திருக்க உத்யோகித்து, மீண்டும் கருவுதலாலே தெரியாதபடியிருந்து.

(உன்னையித்யாதி) பொய்யாஸநம் முதலாக முன்பு பண்ணிவைத்த சூழ்ச்சிகளாலே நலிவதாகக்கோலி உன்னைப்பார்த்த துர்யோதநனை,உன்அகவாயில் சீற்றமெல்லாம் பார்க்கிற பார்வையிலே தோற்றும்படி அத்யுஷ்ணமாகப் பார்த்தவனே யச்சோவச்சோ.

---

வித்யாதி). மன்னர் சூழ்ந்திருக்கிற வளவில் கதிர்போலே விளங்குகைக்கு ஹேதுவையருளிச்செய்கிறார் (ஸிம்ஹாஸநஸ்த்தேத்யாதி). எழலுறுகை - எழுந்திருக்க உத்யோகிக்கையாய், இதுக்கும் மீண்டிருக்கைக்கும் ஹேதுவையருளிச்செய்கிறார் (க்ருஷ்ணனித்யாதி).

"சுழலை"என்ற பதத்தைக் கடாக்ஷித்து (பொய்யாஸநம்) என்றது. "பெரிதான சுழலையுடையனாய், உன்னைநோக்கும்" என்றந்வயித்துத் தாத்பர்யமருளிச் செய்கிறார் (பொய்யாஸநம் முதலாக வித்யாதி). "சுழலை"- (சூழ்ச்சி); அதாவது - க்ருத்ரிமம். ... ... ... ... ....(ரு)

---

(க) பார.

அழலவிழித்தானே யென்கிறார். (ஆழியங்கையனே) † அப்போது திருக்கையில் திருவாழியிலழற்றி தண்ணீராம்படி திருக்கண்களாலே அழலவிழித்தானேயென்கிறார்; "துச்சோதநன்" என்கையாலேஅவன் நெஞ்சு ஒருவராலும்சோதிக்க வரியதென்கிறார். .... (ரு)

ஸ்வா.—ஆறும்பாட்டு. (போரித்யாதி) பாண்டவர்களுடைய ஏழுஅக்ஷோஹிணிகளையும் அஞ்சுராஜாக்களையும்கொண்டுபதினொரு அக்ஷோஹிணியையும் நூறுராஜாக்களையும் கர்ணபீஷ்மத்ரோணாதிகளையும் ஸமமாக்கிப் பொருவதாக அத்யவஸிக்கையாலே; அவர்களுடைய ப்ராதிகூல்யமும் இவர்களுடைய ஆநுகூல்யமாத்ரமன்(ஆழியங்கையனித்யாதி) திருவாழியை அழகிய திருக்கையிலேயுடையவனே அச்சோவச்சோ. .... .... .... .... (ரு)

மூ.—போரொக்கப்பண்ணியிப் பூமிப்பொறைதீர்ப்பான்
தேரொக்கவூர்ந்தாய்! செழுந்தார்விசயற்காய்க்
காரொக்குமேனிக் கரும்பெருங்கண்ணனே [வச்சோ.
ஆரத்தழுவாய்வந்தச்சோவச்சோ ஆயர்கள்போரேறேயச்சோ

வ்யா.—ஆறும்பாட்டு. (போரித்யாதி)பதினொருஅக்ஷோஹிணி பரிகரமும் நூறு ராஜாக்களும் பீஷ்மத்ரோணாதிகளுமான அத்திரளோடு ஸமமாக ஏழக்ஷோஹிணி பரிகரத்தையும், பாண்டவர்கள் ஐவரையுங்கொண்டு யுத்தம் பண்ணி யென்னுதல்; "பாண்டவர்களுக்கு ஓர்கோல்குத்து நிலமும் கொடோம்" என்று வெட்டிதாக வார்த்தை சொன்னபின்பு துர்யோதநாதிகளை யுத்தத்திலேபொருந்

அரு.—ஆறும்பாட்டு. (போரித்யாதி) "ஒக்கப்போர்பண்ணி" என்றந்வயித்து "ஒக்க" என்றது-ஸமமாக வென்றபடியாய், விஷமமாயிருந்தாலன்றோ இப்படி விசேஷிக்கவேணுமென்ன வருளிச்செய்கிறார் (பதினோரித்யாதி). போரிலே ஒக்கப் பொருந்தப்பண்ணி யென்று விவக்ஷித்து அர்த்தாந்தரம் (பாண்டவர்களித்யாதி). (கோல் குத்துநிலம்) இது ஸூச்யக்ரத்துக்கு முபலக்ஷணம். (க) "యావద్ధి సూచ్యాస్తీక్ష్ణాయా భిన్ద్యాదగ్రం జనార్ధనతావదప్య పరిత్యాజ్యం భ్రమతః పాణ్డవాన్ప్రతి - யாவத்தி ஸூச்யாஸ்தீக்ஷ்ணயா பிந்த்யாதக்ரம் ஜநார்தந। தாவதப்யபரித்யாஜ்யம் ப்ரமத: பாண்டவாந்ப்ரதி" என்றது அநுஸந்தேயம். (வெட்டிதாக) கடிநமாக. உக்தார்த்தத்துக்கு ப்ர

† (பா) திருக்கண்களாலே அழலவிழித்து விரோதிகளை நிரஸிக்கையாலே திருவாழி அழகுக்குத் தரித்தவித்தனை. (க) பார-உத்யோ.

று இதுக்கு ஹேது; பூபாரநிரஸநம் ஒன்றுமே ஹேதுவென்கிறார். (க)"மண்ணின்பாரம் நீக்குதற்கேவட மதுரைப்பிறந்தான்" என்றும், பூமிதேவி (உ) "[Grantha] - நபாரம் ஸப்தஸாகராஃ" என்று "கடல்களும் மலைகளும் எனக்கு ஒருபாரமன்று; சரணப்ரதாநம் முதலாக அவன் செய்த உபகாரபரம்பரைகளைப் பாராதே அஹம் மமதைகளாலே க்ருதக்நரா யிருப்பாரைச் சுமவேன்" என் கையாலே அந்தக்ருதக்நரை "மண்ணின் பாரம்" என்கிறது. அந்தபா(ஈ)ரம் நீக்குதற்கு அவர்களுடைய அநேகம் தேர்களுக்கும் துல்யமாகத் தன்னுடைய தேரை ஊருகையாலே உபயஸேனையும் முடிந்ததிறே. (செழுந்தாரித்யாதி) மதுமாறுத கொங்கும் வாகையும் அவன் தோளிலேயிட்டு ஜயத்தை அவனதாக்கித் தான் அவன் பரிகரமாயிறே முடித்தது.

---

தும்படியாகப் பண்ணியென்னுதல். (இப்பூமிப் பொறைதீர்ப்பான்) இதுதான் செய்தது, அதார்மிகராய் ஆஸுரப்ரக்ருதிகளாயிருப்பா ரெல்லாரையும் யுத்தபூமியிலேகொன்று, இந்தபூமியினுடையபா(ஈ) ரத்தைப் போக்குகைக்காக வாய்த்து. (க) "மண்ணின் பாரம் நீக்குதற்கே வடமதுரைப் பிறந்தான்" என்கையாலே அவதார ப்ரயோஜநமும் இதுவேயிறே. (தேரித்யாதி) யுத்தத்துக்கும்விஜயத்துக்கும் தகுதியாகச்சூடும் தும்பை, வாகைகளுமான அழகிய மாலையையுடைய அர்ஜுநனுக்கு (ங) "[Grantha]-யஸ்யமந்த்ரீச கோப்தாச" இத்யாதிப்படியே ஸர்வருமாய்நின்று, ப்ரதிபக்ஷபூதரானவர்களுடைய அநேகம் தேருக்கு ஸமமாக அவனுடைய தேரை நடத்தினவனே! "ஆயுதமெடுக்க வொண்ணாது" என்கையாலே ஸாரத்யத்திலே அதி(ஃ)கரித்து, தேர்க்காலாலே ப்ரதிபக்ஷஸேனையைத்துகளாக்கினாய்த்து. (ச) "கொல்லாமாக்கோல்" இத்யாதிப்ப

---

மாணம் (மண்ணினித்யாதி). "செழுந்தார் விசயர்க்காய் ஒக்கத்தேரூர்ந்தாய்" என்றந்வயித் தர்த்தமருளிச் செய்கிறார் (யுத்தத்துக்குமித்யாதி). "செழும்" என்றதினர்த்தம் - (அழகிய) என்றது. "ஆய" என்றதுக்கர்த்தம் (யஸ்யமந்த்ரீ சேத்யாதி). பூபாரம் தேரையூர்ந்தால் தீருமோ? ஆயுதத்தாலே யுத்தம்பண்ணினலன்றோ தீரவேணுமென்னவருளிச்செய்கிறார் (ஆயுதமித்யாதி). (தேர்க்கால்) ரதசக்ரம். அர்ஜுநனன்றோ யுத்தம் பண்ணி நிரஸித்தான்; ஸாரதியோ நிரஸத்ததென்ன; இதுக்குப்ரமாணம் (கொல்லா

---

(க) தி-வாய்-கூ-க-கo. (உ) (ங) பார. (ச) தி-வாய்-ங-உ-ங.

(காரித்யாதி) அர்ஜுநன் தலையிலே வெற்றி ஏறிட்டபின்பு திருமேனி கருமுகில்போலே புகர்பெற்றபடி. தம்மைக்காண்கை யாலே திருக்கண்களில் பிறந்தவிகாஸத்தைக்கண்டு மிகவும் பெருங் கண்ணனே என்கிறார். (ஆரத்தழுவாய்வந்து) என்னுடைய அபி நிவேசமெல்லாம் நிறையும்படி தழுவவேணும். (ஆயர்கள்போரேறே) ஆயர்க்கு ஸிம்ஹபுங்கவம்போலே யிருக்கிற மேனாணிப்புத்தோன்ற வரவேணுமென்கிறார். .... .... .... .... .... (சு)

அவ.— ஏழாம்பாட்டு. மஹாபலியஜ்ஞவாடத்திலே சென்ற வாமநவேஷத்தோடே திவ்யாயுதங்களையும் தரித்துக்கொண்டு வர வேணுமென்கிறார்.

ஸ்வா.— (மிக்கவித்யாதி) ஔதார்யத்தாலே மிகவும் பெரிய

டியேஸாரத்யம் பண்ணின ஸாமர்த்யத்தாலேயிறே பூபாரநிரஸநம் பண்ணிற்று.

(காரொக்குமித்யாதி) வர்ஷுகவலாஹகம்போலே யிருக்கிற திருமேனியை யுடையனாய், * கரியவாகிப் புடைபரந்திருக்கிறதிருக் க்கண்களையுடையனாயிருக்கிறவனே! இத்தால்-பூபாரத்தைப் போக்கு கையாலும், ஆஶ்ரிதனை அர்ஜுநனை விஜயியாக்குகையாலு முண் டான ஹர்ஷம் வடிவிலும் கண்ணிலும் தோற்றும்படி நின்ற நிலை யைச் சொல்லுகிறது. (ஆரவித்யாதி) என்னுடைய அபிநிவேசம் தீரும்படி வந்து பூர்ணமாக அணைத்தருளவேணும். (ஆயர்களித் யாதி) கோ(ஙீ)பர்க்கு ப (ஂ) வ்யனாய், அத்தாலே யுத்தோங்முக மான ருஷபம்போலே செருக்கியிருக்கிறவனே அச்சோவச்சோ. (சு)

மூ.—மிக்கபெரும்புகழ் மாவலிவேள்வியில்
தக்கதிதன்றென்று தானம்விலக்கிய
சுக்கிரன்கண்ணைத் துரும்பால்கிளறிய [சோ.
சக்கரக்கையனேயச்சோவச்சோ சங்கமிடத்தானேயச்சோவச்

வ்யா.—ஏழாம்பாட்டு. (மிக்கவித்யாதி) ஔதார்யத்தாலே

வித்யாதி). அர்ஜுநனும் இவனுக்கு உபகரணமாத்ரமென்று கருத்து.

"தேரொக்கவூர்ந்தாய் - காரொக்குமேனி கரும்பெருங் கண்ணனே" என்றஸம்பிவ்யாஹாரபலிதம் (இத்தாலித்யாதி). ... ... ... (சு)

அரு.—ஏழாம்பாட்டு. (மிக்கவித்யாதி). மேலேதாநமென்றிருக்கையாலே தத்குணமாக "மிக்கபெரும்புகழ்" என்றதுக்கர்த்தம் (ஔதார்யத்தாலுமித்

புகழையுடையனுனமஹாபலியஜ்ஞத்திலே இந்த்ரனுக்காகவாமநவேஷத்தைக்கொண்டுசென்று(க) "கொள்வன் நான் மாவலிமூவடிதா" என்றருளிச்செய்தவார்த்தை அநந்வயமாய் தோற்றுகையாலேசிஷ்யனுக்கும் ஆசார்யனுக்கும் ப்ரியாப்ரியம் தோன்றி நிரூபித்த வளவிலும், முக்த்த(ஜ)ஜல்பத்தாலும் (உ) 'புலன்கொள்மாணுய்" என்கிற வடிவழகாலும் சித்தாபஹாரம்பிறக்க, ஆசார்யனும் இத்தைக்கண்டு "இவனுடைய அர்த்தித்வமும் உன்னுடைய ஔதார்ய ப்ரீதியாலே நீ கொடுக்கிறதுவும் தகுதியன்று காண்" என்ன; "ஔதார்யத்துக்கும் தகாததுண்டோ" வென்ன; "இது தக்கதன்று" என்று தாநத்தை நிஷேதித்து நியமிக்கவும், அவன் நியாம்யனுகாமல் உதகம் செய்யப்புகுந்தவாறே, இவன் கையில் உதகம்விழாதபடி உதகபாத்ரத்வாரத்தைத்தகைய "இதுக்கடியென்" என்று திருக்கையில் திருப்பவித்ராக்ரத்தாலே த்வாரசோதனை பண்ண, இவன் தாநத்

---

மிகவும் பெரிய புகழையுடையனை மஹாபலி யஜ்ஞவாடத்திலே இந்த்ரனுக்காக வாமநவேஷத்தைக்கொண்டு சென்று (க) "கொள்வன் நான் மாவலி மூவடி தா" என்ன; (உ) "புலன்கொள்மாணுய்" என்கிறபடியே ஸர்வேந்த்ரியாபஹாரக்ஷமமான இவனுடைய அழகாலும், அநந்விதமாகச்சொன்ன முக்த்தோ(ஸூக்)க்தியாலும் மஹாபலி அபஹ்ருதசித்தனுய், இவனபேக்ஷித்தது கொடுப்பதாக உத்யோகிக்கிறவளவிலே, குருவான சுக்ரன் இவன் வடிவும், வரத்தும், சொன்ன வார்த்தையும் அதிமாநுஷமா யிருக்கையாலே நிரூபித்து, "இவன் ஸர்வேஶ்வரன், தேவகார்யம் செய்யவந்தான், உன் ஸர்வஸ்வத்தையும் அபஹரிக்கவந்தான்; ஆனபின்பு, நீ தாநம் பண்ணுகிறது தகுதியன்று" என்று தாநத்தை நிரோதிக்க; அவன் அது கேளாதே உதகம்பண்ணப் புகுந்தவளவிலே, உதகபாத்ர த்வாரத்திலே சுக்ரன் ப்ரவேசித்து உதகம் விழாதபடி தகைய; அந்த த்வார சோதநம் பண்ணுவாரைப்போலே திருக்கையில் திருப் பவித்ரத்தி

---

யாதி). "தக்கது இதுஅன்று" என்றதுக்கநுகுணமாக உபோத்க்காதம் (இந்த்ரனுக்காக வித்யாதி, அபஹரிக்க வந்தானென்னுமளவும்). "இதுதக்கது அன்று" என்றந்வயித்து சப்தார்த்தம் (ஆனபின்பித்யாதி). துரும்பால் கிளறின ப்ரகாரத்தை ப்ரமாணப்ரஸித்த்யநுகுணமாக வருளிச்செய்கிறுர் (அவ

---

(க) தி-வாய்-ஈ-அ-க. (உ) தி-வாய்-க-அ-ரு.

ஸ்வா.—பத்தாம்பாட்டு. (ஆய்ச்சியித்யாதி)வேய்த்தடந்தோளி யானவாய்ச்சி. "ஆழிப்பிரான் - புறம்புல்குவான்" என்று அவன் புறம்புல்கிய சொல்லை. (விட்டுசித்தன்) அவள் சொல்லியசொல்லை அவள் சொன்னவன்று கூடநின்றாப்போலே தாமும் "புல்குவான்" என்றுப்ரார்த்தித்து. அவன்கடாக்ஷத்துக்கு விஷயமாய் தாமும்பெற்று மகிழ்ந்த ப்ரகாரத்தை. விட்டுசித்தன் பரோபகாரமாகவுபகரித்த தமிழிவை ஈரைந்தும் வல்லார் வாய்த்தமக்களையும் நன்மக்களையும்பெற்று, அவர்கள் மங்களாசாஸநம்பண்ணக்கண்டுமகிழ்வரென்கிறார். "விஷ்ணுசித்தன்" என்றது-*அரவத்தமளிப்படியே. (வல்லவர்) என்றது-ஸாபிப்ராயமாகவென்றபடி. "வாய்த்தமக்கள்" என்றது-புத்ரர்களை. "நன்மக்கள்" என்றது-சிஷ்யர்களை. ப்ரத்யயத்

மூ.—ஆய்ச்சியன்றாழிப்பிரான் புறம்புல்கிய
வேய்த்தடந்தோளிசொல் விட்டுசித்தன்மகிழ்ந்து
ஈத்ததமிழிவை யீரைந்தும்வல்லவர்
வாய்த்தநன்மக்களைப் பெற்றுமகிழ்வரே. (க0)

வ்யா.—(ஆய்ச்சியித்யாதி) வேய்த்தடந்தோளி-ஆய்ச்சி. பசுமைக்கும் சுற்றுடைமைக்கும் செவ்வைக்கும் வேய்போலேயாய்ப் பெருத்திருந்துள்ளதோள்களையுடையளானயசோதைப்பிராட்டி. (அன்றித்யாதி). அக்காலத்திலே கையிலே திருவாழியையுடைய ஸர்வேஶ்வரன் அவதாரத்தின் மெய்ப்பாட்டால் வந்த சைசவாநுகுணமாகத் தன்னைப்புறம்புல்கின ப்ரகாரங்களைச் சொன்ன சொல்லை. (விட்டுசித்தனித்யாதி). பெரியாழ்வார் தத்காலம்போலே அநுபவித்து ப்ரீதராய்,அதுதன்னைஎல்லாருமறியும்படி உபகரித்ததாய்,ஸர்வாதிகாரமானத்ராவிடமாயிருக்கிற இவை பத்துப்பாட்டையும் ஸாபிப்ராயமாகவல்லவர்கள். (வாய்த்தவித்யாதி). ஸர்வேஶ்வரனுக்கு மங்களா

அரு.—பத்தாம்பாட்டு. (ஆய்ச்சியித்யாதி) (சுற்றுடைமை) - வர்த்துளதை. "தடம்" என்றதினர்த்தம் (பெருத்திருந்துள்ள)என்றது. "புறம்புல்கிய ப்ரஜையைச் சொன்ன சொல்" என்று அத்த்யாஹரித்தந்வயித்தர்த்தமருளிச்செய்கிறார் (தன்னையித்யாதி). "ஈத்த" என்றதினர்த்தம் (அது தன்னையித்யாதி). (அதுதன்னை) என்றது - யசோதை சொல்லை யென்றபடி. "மகிழ்ந்து சொல்ல வல்லவர்கள்" என்று கூட்டியருளிச்செய்கிறார் (ஸாபிப்ராயமாகவித்யாதி).

(க0)

திலே சிஷ்யர்களுக்கு ப்ராப்தியுண்டானவோபாதி, ப்ரக்ருதியிலே புத்ரர்களுக்கும் ப்ராப்தியுண்டிறே.(க)"[illegible]-புத்ராந்ஸந்த்யஜ்ய" என்றது - காரணகார்யபாவ ஸம்பந்தத்தாலேயிறே. அது தானறிந்த மாத்ரமிறே. இங்கு கார்யகாரண பாவஸம்பந்தமாகையாலே உபாதேயமாமிறே. தா (ஸ) த்வர்த்தத்தால் வந்தரக்ஷ்யத்வம் சதுர்த்திதோற்றிறைலிறே தோற்றுவது. (க0)

பிள்ளை திருவடிகளே சரணம்.

---

சாஸநம் பண்ணுகைக்கீடாக வாய்த்த விலக்ஷணரான சிஷ்யபுத்ரர்களை லபித்து, அத்தால்வந்த ஆநந்தத்தை யுடையராவர். .... (க0)

பெரியஜீயர் திருவடிகளே சரணம்.

# பெரியாழ்வார் திருமொழி

## முதற்பத்து,

### முற்றிற்று.



ஆழ்வார் திருவடிகளேசரணம்.

# பெரியாழ்வார் திருமொழி

## இரண்டாம்பத்து முதல்திருமொழி

மெச்சூது ப்ரவேசம்.



மெச்சூதுப்ரவேசம்.—ஆழ்வார்களிலே சிலர் தாங்களும் யுவதிகளாய், பிராட்டிமாரவஸ்த்தையையும்பாவித்து அவனையும் பஞ்சவிம்ஶதிவார்ஷிகனை யுவாகுமாரனாக பாவித்தால் பிறக்கக்கடவ ஸர்வாங்க ஸம்ஶ்லேஷத்தை, தம்மைமாதாவாக பாவித்து அவனுடைய நீர்மையைஅவரு ...வுத்தாலே அவனைத் தமக்குப்புத்ரனாக்கி, அவனுடையபே ...யைகுணபாவமாக்கி, அவனுடையஅவதாரத்தில் மெய்ப்பாடுதோன்ற நின்ற சைஶவாவஸ்த்தையை யசோதைப்பிராட்டி முதலானார் அநுபவித்தப்ரகாரங்களை வ்யாஜமாக்கி * வண்ணமாடம் துடங்கி அநுபவித்துக்கொண்டுபோந்து, "அச்சோ" என்றும், "புறம்புல்குவான்" என்று மிரண்டு திருமொழியாலும் ஸர்வாங்க ஸம்ஶ்லேஷத்தைப் பெற்றாராய் நின்றார்கீழ். இதில் அவன் திருவாய்ப்பாடியிலுள்ளாரோடே அப்பூச்சி காட்டி விளை

அவ;—கீழிரண்டு திருமொழியிலும் - "அச்சோ" என்றும், 'புறம்புல்குவான்"என்றும்அவன், ஶைஶவாநுகுணமாக ஓடிவந்து மேல்விழுந்து முன்னும் பின்னுமணைக்கும் ரஸத்தை, தானநுபவிக்க வாசைப்பட்டு அவனைக்குறித்து ப்ரார்த்தித்து அவன் அப்படி செய்ய யசோதைப்பிராட்டி அநுபவித்தாப்போலே, அந்த சேஷ்டிதங்களினுடைய ரஸத்தை அநுபவிக்க வாசைப்பட்டு, தாமும் அப்படி ப்ரார்த்தித்து தத்காலம்போலே அநுபவித்து இனியரானார்; சிறுப்பிள்ளைகள் அப்பூச்சிகா..டி விளையாடுமத்தையும் அவதாரத்தின் மெய்ப்பாடுதோற்ற அவன்ஆசரித்தத்தை, தத்காலத்திலுள்ளா

அரு.—மெச்சூதுப்ரவேசம். கீழிரண்டு திருமொழியிலும், முன்னேயணைக்கை, பின்னே யணைக்கையாகிற அவாந்தரார்த்த பேத (த்வ)முண்டானாலும் அணைக்கையாகிற ரஸம் ஒன்றாகையாலே அவற்றை ஒரு பேடிகையாக்கிக்கொண்டு, வர்த்திஷ்யட ..ணஸங்கத்யர்த்தம் வ்ருத்தகீர்த்தநம் செய்தருளுகிறார் (கீழித்யாதி). (த.. காலத்திலுள்ளார்)என்று ஸாமாந்யமாக வருளிச்செய்கையாலே- யசோதை (மு)தலான நந்தவ்ரஜத்திலுள்ளா ரெல்லாருமென்றபடி

யாடி ரஸிப்பித்த நிஷ்ப்ரயோஜநவ்யாபாரத்தைத் தமக்கும் அவன் காட்டக்கண்டு அநுபவித்தாரென்னுதல்; அன்றிக்கே(க)"பண்டவன் செய்த கிரீடை" என்கிறபடியே அக்காலத்திலே தாமும் ஒக்கநின்று கண்டாப்போலே அநுஸந்தித்தாரென்னுதல்.

ஸ்வா;—முதற்பாட்டு. (மெச்சூதித்யாதி) "ஆஶ்ரிதபரதந்த்ரன்" "பாண்டவபக்ஷபாதி" என்று இரண்டு திறத்திலுள்ளாரும் விஶ்வஸிக்கும் படியாக முன்னேதெளிவித்து ஊதுகிற ஶ்ரீபாஞ்சஜந்யத்துக்கு இடத்திருக்கையை நிரூபகமாக்கினவன். திருக்கைக்கு ஶ்ரீபாஞ்சஜந்யம் நிரூபகமாகையன்றிக்கே, திருக்கை நிரூபகமாகையால் விஶேஷண நிரூபகம் குணபரமாகையாலே மாறியருளிச் செய்யவு

ரநுபவித்து ஹ்ருஷ்டராய்ப் பேசு... பிற்காலமாயிருக்கச் செய்தேயும் தத்காலம்போலே தாமும் அநுபவித்துப்பேசிஹ்ருஷ்டராகிறாரித்திருமொழியில்.

மூ.—மெச்சூதுசங்கமிடத்தான் நல்வேயூதி
பொய்ச்சூதில்தோற்ற பொறையுடைமன்னர்க்காய்ப்
பத்தூர்பெறாதன்று பாரதம்கைசெய்த [ன்.
அத்தூதனப்பூச்சிகாட்டுகின்றானம்மனேயப்பூச்சிகாட்டுகின்றா

வ்யா;—முதற்பாட்டு. (மெச்சூது சங்கமிடத்தான்) "ஆஶ்ரிதபரதந்த்ரன்" "பாண்டவபக்ஷபாதி" என்று எல்லாரும் மெச்சும்படியாக ஊதுகிற ஸ்ரீ பாஞ்சஜந்யத்தை இடத்திருக்கையிலேயுடையவன். "மெச்ச" என்கிறவிது, "மெச்சு" என்று கடைக்குறைத்தலாய்க் கிடக்கிறது. மெச்ச ஊதுகிறவென்றபடி. மெச்சுதல்-கொண்டாட்டம். ஸ்ரீ பாஞ்சஜந்ய த்வநிதான் ப்ரதிகூலர் மண்ணுண்ணும்படியும், அநுகூலர்வாழும்படியுமாயிறே யிருப்பது. (உ) "యస్యనాదేన దైత్యానాం బలహానిరజాయత । దేవానాంవవృధే తేజః ప్రసాదశ్చైవ యోగినామ్." யஸ்ய நாதேந தைத்யாநாம் பலஹாநிரஜாயத, தேவாநாம்வவ்ருதே தேஜ: ப்ரஸாதஶ்சைவ யோகிநாம்." என்கிறபடியே. (நல்வேயூதி)

அரு;—முதற்பாட்டு. (மெச்சூதித்யாதி). பாஞ்ஜந்யத்வநியைக் கேட்டவாறே கொண்டாடும்படி எங்ஙனே யென்ன வருளுகிறார் (ஶ்ரீபாஞ்சஜந்யேத்யாதி). இதுக்கு ப்ரமாணம் (யஸ்யேத்யாதி). (என்கிறபடியே) என், துக்கு,(வாழும்படியுமாயிறே இருப்பது)என்றத்தோடந்வயம். க்ருஷ்ணனுக்

(க) (உ) வி-பு-ரு-உக-உக.

மாமிறே. (நல்வேயூதி) ப்ராஹ்மணர்க்கு ஶிகாயஜ்ஞோபவீதாதிகளும் ஸந்த்யாவந்தநாதிகளும் விசேஷண நிரூபகமாமாபோலே, கோபகுலத்துக்கும் குழலும் குழலூதுகையும் நிரூபகமாயிறேயிருப்பது. ஸ்வரூபநிரூபகத்திலும் விசேஷண நிரூபகம் ப்ரதாநமாகையாலே "நல்வேய்" என்கிறார்.

(பொய்ச்சூதிலித்யாதி). சூதுபோருகை லீலாரஸமாத்ரமன்றிக்கே, அதுவே வ்யாஜமாகக்கொண்டு துர்யோதநாதிகள் பராநர்த்த சிந்தனை செய்கையாலே "பொய்ச்சூது" என்கிறார். துர்யோத

இதிறே அவதாரத்துக்கநுகுணமான நிரூபகம். அநுகூலர் வாழும்படி நல்லகுழலை ஊதுமவன். குழலுக்கு நன்மையாவது -(க) "நன்னரம்புடைய தும்புருவோடு நாரதனும் தந்தம் வீணைமறந்து" (உ) "மரங்கள்நின்று மதுதாரைகள்பாயும்" இத்யாதிப்படியே தன்னுடைய த்வநியாலே சேதநாசேதந விபாகமற ஈடுபடுத்தவற்றாகை. ஸ்ரீ பாஞ்சஜந்யமும் திருக்குழலுமிரண்டும் இவ்வவதாரத்தில் கைதொடாணுயிறே யிருப்பது. பசுமேய்த்துத் திரியுங்காலத்திலும், (ங) "ஆநிரையினம் மீளக்குறித்தசங்கம்" என்றும், (ச) "கேயத்தீங்குழ லூதிற்றும் நிரைமேய்த்ததும்" என்றும் சொல்லக்கடவதிறே.

(பொய்ச்சூதில் தோற்ற) க்ருத்ரிமமானசூதிலே பராஜிதராய் ஸர்வஸ்வத்தையும் இழந்த. செவ்வையில் இவர்களை ஜயிக்கப்போகாதிறே; க்ருத்ரிமத்தாலேயிறே இவர்களை ஜயித்தது. (பொறையுடை

(௫) "ஶங்கசக்ரகதாபாணே- ஶங்கசக்ரகதாபாணே" என்கிறபடியே சங்கத்தையே நிரூபமாகச் சொல்லவமைந்திருக்க, "நல்வேயூதி" என்று, வேணுவையிட்டு நிரூபிக்கலாமோவென்ன வருளுகிறார் .(இதிறேயித்யாதி). சேதநரை ஈடுபடுத்துகைக்கு ப்ரமாணம் (நன்னரம்புடையவித்யாதி). (நன்னரம்பு)-நல்லநரம்புகளையுடைத்தானவீணை யென்றபடி. அசேதநங்களை ஈடுபடுத்துகைக்கு ப்ரமாணம் (மரங்களித்யாதி). (கைதொடாணுய்) -கைவிடாதேயென்றபடி, உக்தார்த்தத்தில் ப்ரமாணம் (பசுமேய்த்தித்யாதி).

"பத்தூர் பெறாதவன்று பாரதம் கைசெய்தவத்தூதன்" என்றபதத்தைக் டாக்ஷித்து அதுக்கநுகுணமாகத் "தோற்ற" என்றதுக்கர்த்தமருளுகிறார் (க்ரித்ரிமமான வித்யாதி). அட்டத்தில் தோற்ற மாத்ரமேயாகில் க்ருஷ்ணன் தூதுபோக வேண்டாவிறே. சூதிலே தோற்றால் இவர்களுக்குப் "பொறை

(க) பெரி-தி-ங-கூ-௫. (உ) பெரி-தி-ங-கூ-க0. (ங) பெரி-தி-ங-ஶ-ங, (ச) தி-வாய்-கூ-ஶ-உ. (௫) பார-ஸபா-கூகூ-சக.

நாதிகள் இவர்கள்ஸர்வஸ்வமும் அபஹரித்துக் கொண்டிருக்கச் செய்தேயும் இவர்கள்க்ஷமை ஒன்றும் அபஹரித்துக் கொள்ளமாட்டாதிருந்தது. தர்ம புத்ராதிகளுக்கு இத்தனையுமுடைமையாய்க் கிடக்கையாலே "பொறையுடைமன்னர்" என்று இவர்களுக்கு நிரூபகமாய்க்கிடக்கிறது. இதொழிந்த ஸர்வஸ்வமும் க்ருத்ரிமத்தாலே அபஹரித்துக் கொள்ளுமதொழிய, இந்தப்பொறையை இவர்கள் ப்ரார்த்தித்துக் கொடுத்தாலும் இந்தச் சரீரத்தோடு கைக்கொள்ள மாட்டார்களிறே அவர்கள்.

இந்தப்பொறைதான் இந்ததர்மபுத்ராதிகளுக்கு உடைமையாயிற்றதும் இவர்கள்அத்வேஷத்தோடேபோகையாலேயிறே. த்ருதராஷ்ட்ரன், இவர்கள் பக்கல் பொறையைப்பரீக்ஷிப்பானுக "தர்மபுத்ராதிகள் போகிற வளவில் விக்ருதராய்ப் போனார்களோ?" என்றுகேட்க, "ஹர்ஷத்தால் வந்தவிக்ருதியொழிய, அவர்கள் பக்கல் க்ரோதவிக்ருதிகண்டிலோம்" என்ன; "என்பிள்ளைகளிலும் ஒருவராகிலும் சேஷிக்கும்படியாக அழன்று வாய்விட்டுப் போய்த்திலனே மஹாபாபி" என்றானிறே. புறக்கண் கெட்டாப்போலே உட்கண்ணும் மறைந்தபடியாலே. துர்யோதநாதிகளுக்கு ராஜ்ய ப்ராப்தியில் தாயவிபாகத்தால் உடைமையான தேசமும், இவர்கள் பக்கல் அபஹரித்த தேசமும் அவர்கள் கொடுத்தாலும் இவர்கள் க்ருத்ரிமத் தோல்வி ந்யாயத்தாலே அநுவர்த்தித்தாலும் கொள்ளார்களிறே.இதுவென்,

மன்னர்க்காய்) அவர்கள் செய்தது க்ருத்ரிமமென்று அறிந்திருக்கச் செய்தேயும்,க்ரோதவிக்ருதியின்றிக்கே க்ஷமையையுடையராயிருந்த ராஜாக்களுக்காய். துர்யோநாதிகள், இவர்கள் ஸர்வஸ்வத்தையும் அபஹரிக்குமித்தனையல்லது, இவர்கள் க்ஷமையை அபஹரிக்கமாட்டார்களிறே. ஆகையாலே "பொறையுடைமன்னர்"என்று-பொறையை இவர்களுக்கு நிரூபகமாகச்சொல்லுகிறது. (மன்னர்க்காய்) (க) "[Telugu-script quotation] - யஸ்ய மந்த்ரீச கோப்தாச ஸுஹ்ருச்சைவஜநார்த்தநః" என்கிறபடியே அவர்களுக்குஸர்வவிதமான துணையும் தானேயாய்க்கொண்டு பரதந்த்ரனாய்.

யுடை" என்று சொல்ல ப்ரஸக்தியே தென்னவருளுகிறார் (அவர்களித்யாதி). "ஆய்"என்றதினர்த்தத்தை ஸப்ரமாண முபபாதிக்கிறார் (யஸ்யேத்யாதி).

(க) பார-ஆரண்ய.

அவரோடு விபாகித்து வர்த்திக்கைஅரிதென்று போனார்களானாலோ வென்னில்; அது கந்தர்வ பரிபவத்திலேகாணலாமிறே. ஆகையாலே உடைமை கண்டவிடத்தே எல்லாரும் சேர்வர்களிறே. உடைமை யாவதுபொறையிறே. அத்தாலேயிறே ஈஶ்வரன் தானும்சேர்ந்தது.

(பத்தூர்பெறுது) இவர்களுக்காக ஶ்ரீதூதெழுந்தருளி "எல்லார்க்கும் உள்ளார்க்குள்ள ப்ராப்திகள் அம்ஶித்து நீங்களும்உங்களுக்கு அம்ஶமானதும்கொண்டு ஜீவிக்கப்பார்க்கில் தீர்க்க ஜீவிகளாகலாம்" என்றருளிச் செய்தவளவில், அவர்கள் இசையாதபடியாலே "சிறிது குறைத்தாலும் கொடுத்துப் பொருந்தப் பாருங்கோள்; நான்அவர்களைப் பொருந்துகிறேன்" என்னவளவிலும் அவர்கள் இசையாமையாலே "ஆளுக்கு இரண்டூராக ஐவர்க்கும் பத்தூர் கொடுங்கோள்" என்ன; அவர்கள் அதுக்கும் இசையாமல் "வீரபோக்யையன்றோ வஸுந்தரை, ராஜாக்களுக்கு யுத்தமன்றோ கர்த்தவ்யம்" என்ன; "ஆனால் அந்ததர்மத்தைச் செய்யுங்கோள்" என்றிசைந்து போந்து இவர்களையும் இசைவித்து. (பாரதம் கைசெய்த)மஹாபாரதயுத்தத்திலே கையும் அணியும் வகுத்து ஸாரதியாய் நின்ற அத்தூதனென்னுதல். பத்தூர் பெறுதவத்தூத னென்னுதல்; தூதனாய் ஸமனாயிருக்கச் செய்தேயும் "தன்னுடைய ஆஶ்ரித பக்ஷபாதித்வம் அவர்

(பத்தூரித்யாதி) இவர்களுக்காக ஸ்ரீதூதெழுந்தருளி "பாண்டவர்களும் நீங்களும் விரோதித்திராதே உள்ளார்க்குள்ள அம்ஶங்களை விபஜித்துக்கொடுத்து, கூடிக்கலந்திருக்கில் தீர்க்கஜீவிகளாகலாம்" என்ன; அவர்கள், "நாங்கள் அதுசெய்யோம்" என்ன; "ஆனால், சிறிது குறையவாகிலும் கொடுங்கோள், அவர்களை நான்பொருத்துகிறேன்" என்ன; அதுக்கும் அவர்கள் இசையாமையாலே, "ஆனால், அவர்களைவர்க்கும் தலைக்கிரண்டூராகப் பத்தூர்தன்னைக் கொடுங்கோள்" என்ன; "இவையொன்றும் நாங்கள் செய்வதில்லை, வீரபோக்யையன்றோ வஸுந்தரை, யுத்தத்தைப்பண்ணி ஜயித்தவர்கள் ஜீவிக்குமித்தனை" என்ன; ஆனால், "அது தன்னைச்செய்யுங்கோள்" என்றுபோந்து, இத்தலையையும் யுத்தத்திலே பொருத்தி, அன்று பாரதயுத்தத்திலே கையுமணியும்வகுத்து, ஸாரதியாய்நின்று நடத்தின ஆஶ்ரிதபக்ஷபாதியான அந்தத்தூதனானவன். (அப்பூச்சி)

"பத்தூர்பெறுது" என்றதுக்குஉபோத்காதம் (இவர்களுக்காகவித்யாதி).

கள் நெஞ்சிலும் படவேணும்'' என்று (க) "ममप्राणाहिपाण्डवाः - மமப்ராணஹிபாண்டவா:'' என்று மேல்விளையும் கார்யம் ஏற்கவே அறிவித்த அத்தூதனென்னுதல். (அப்பூச்சி காட்டுகின்றான்) அந்த ஆஸ்ரித பக்ஷபாதம் தோற்ற வப்பூச்சி காட்டுகின்றானென்கிறார்.

இவ்விடத்தே உஞ்சப்பிள்ளை பாடாநிற்கத் திருவோலக்கத்திலே "அத்தூதன்" என்று-பெருமாளைக் காட்டுவது. "அப்பூச்சி" என்று கண்ணை இறுத்துக்கொண்டு வருவதாய் அபிநயிக்க, உடையவர்பின்னே ஸேவித்தெழுந்தருளியிருந்த எம்பார் திருக்கைகளை திருத்தோளோடே சேர்த்துக்காட்ட, அவரும் அப்படியே அபிநயித்துக்கொண்டுவர "இதுக்கடி-என்" என்றுவிசாரித்துஉடையவர் புரிந்து பார்த்து "ஸ்ரீ கோவிந்தப்பெருமாள்" இருந்தீரோ என்றருளிச் செய்தாரென்றருளிச் செய்வர். "அம்மனே அப்பூச்சி காட்டு

பயங்கரமாயுள்ளது. அதாவது-லோகத்தில் பாலரானவர்கள்எதிர்த்தலைக்கு பயங்கரமாகக் காட்டுவன சிலசேஷ்டிதங்கள்.

இவ்விடத்தில் விசேஷமுண்டு. அதேதென்னில், நீர்மையைக் கண்டு "நம்மிலேயொருவன்" என்றிருக்குமவர்கள் பயப்படும்படி ஈஸ்வரத்வ சிஹ்நங்களைக் காட்டுகை. இவ்விடத்தை, * உஞ்சப்பிள்ளை ஆடாநிற்க,திருவோலக்கத்திலே,"அத்தூதன்"என்று-பெருமாளைக்காட்டுவது, "அப்பூச்சி"என்று-கண்ணை இறுத்துக்கொண்டு வருவதாய் அபிநயிக்க; உடையவர்பின்னே ஸேவித்தெழுந்தருளியிருந்த எம்பார் - திருக்கைகளைத் திருத்தோள்களோடு சேர்த்துக் காட்ட, அவரும், அப்படியே அபிநயித்துக்கொண்டுவர, "இதுக்கடியென்" என்று விசாரித்துப்புரிந்து பார்த்தருளி, "ஸ்ரீ கோவிந்தப் பெருமாள்! இருந்தீரோ" என்று அருளிச்செய்தாரென்று ப்ரஸித்தமிறே. "அப்பூச்சி"என்கிறது-இரண்டு திருக்கையிலாழ்வார்களையும். "அம்மனே" என்கிறது-கண்டுபயப்பட்டுச் சொல்லுகிற வார்த்தை.

இப்பாட்டு "மெச்சூது சங்கமிடத்தான்" என்கையால், வலக்கையாழியும் ஸம்ருதமாகையாலே அத்தை அப்பூச்சி பதத்துக்குத் தாத்பர்யமென்று எம்பார் அருளிச்செய்தாரென்று நம்மாசார்யர்களுடைய ஸம்வாதத்தையருளிச்செய்கிறார் (இவ்விடத்திலேயித்யாதி). "இருந்தீரோ" என்றதுக்கு-அபிநயம் காட்டிக்கொண்டு நீர் இருந்தீரோ வென்று கருத்து.

(க) பார-உத்யோ.

கின்றான்'' என்று கை நெரித்திறே அவர்மீண்டு அபிநயித்தது. ''அப்பூச்சி'' என்றது இரண்டு திருக்கையில் ஆழ்வார்களையும். நீர்மையாலே வஸ்து நிர்தேசமாகால் மேன்மையை அப்பூச்சி என்னலாமிறே. (க) ''మాంవ్రజ- மாம்வ்ரஜ'' என்கிற மேன்மை போலன்றிறே. .... (க)

அவ;—இரண்டாம்பாட்டு. ''அதிகாரானுகுணமாக வார்த்தை சொல்லாதவன் அப்பூச்சி காட்டுகின்றான்'' என்கிறார்.

ஸ்வா;—(மலையித்யாதி) ''மஹத்தானபர்வதங்கள் சலித்தாலும் நம்முடையதோளுக்குச்சலநமுண்டோ'' என்றிருக்கிற ராஜாக்களும் யுத்தோந்முகரான பெரியதேராளிகளும், (மற்றும் பலர்) அதாழிய பரிகணிக்கவொண்ணாத ''ஆனை, குதிரை, காலாள்'' என்று சொல்லப்

மூ;—மலைபுரைதோள்மன்னவரும் மாரதரும்மற்றும்
பலர்குலைய நூற்றுவரும் பட்டழியப் பார்த்தன்
சிலைவளையத் திண்டேர்மேல்முன்னின்ற செங்கண் [றான்.
அலைவலைவந்தப்பூச்சிகாட்டுகின்றானம்மனேயப்பூச்சிகாட்டுகின்

வ்யா.—இரண்டாம்பாட்டு. (மலையித்யாதி) மலைபோலே ஒருவரால் சலிப்பிக்கவொண்ணாதபடி திண்ணிதான தோள்களையுடைய ராஜாக்களும். இத்தால்-அதி பலபராக்ரமராகையாலே ஒன்றுக்கும் அஞ்சாதவர்களென்கை. (மாரதரும்) பீஷ்ம த்ரோணாதிகளான மஹாரதரும். பீஷ்மர், த்ரோணாசார்யர், கர்ணன் என்கிற இவர்கள் ஓரொருவரே அதிரதராகையாலே ஓரெதிரிகளுக்கும் அஞ்சாதவர்களிறே. (மற்றும்பலர்) தனித்தனியே எண்ணி முடியாமை

அரு.—இரண்டாம்பாட்டு. (மலையித்யாதி). மலைக்கும் தோளுக்கு முண்டான ஸாத்ருஶ்யத்தை உபபாதித்துக்கொண்டு சப்தார்த்தம் (மலையித்யாதி). (க) '' ద్రవిణం తరస్సహో బలవీర్యాణి స్థేమశుష్మచ। శక్తిః పరాక్రమః ప్రాణః - த்ரவிணம் தரஸ்ஸஹோ பலவீர்யாணி ஸ்த்தேமசுஷ்மச। ஶக்தி꞉ பராக்ரம꞉ பாண꞉'' என்று-பலபராக்ரமசப்தங்கள் பர்யாயமாகப்படி(த்தி)தங்களாகிலும், இங்கு ''பலம்'' என்று-காயபலத்தையும், ''பராக்ரமம்'' என்று உத்ஸாஹாதி ரூபமான மநோபலத்தையும் சொல்லுகிறது. ''மாரதர்'' என்றது-(உ) ''ఆత్మానం సారథిం చాశ్వాన్ రక్షన్యుధ్యేత యో నరః। సమహారథసంజ్ఞస్స్యాత్ - ஆத்மாநம் ஸாரதிஞ்சாஶ்வாந் ரக்ஷந்யுத்த்யேதயோநர꞉। ஸமஹாரதஸம்ஜ்ஞஸ்ஸ்யாத்'' என்கிற மஹாரதரென்றபடி. (ஓரெதிரிகள்) என்றது-அத்விதீயரான சத்ருக்க

(க)

பட்ட பரிகரத்திலுள்ளவர்களும். (குலைய) நடுங்க - அவர் இவர் என்ருப்போலே சிலவ்யக்தி நிரூபணம் பண்ணலாமதொழிய நடுக்கமல்லார்க்கு மொத்துத் தோற்றுகையாலே ஒருசொல்லாலே "குலைய" என்கிருர். இந்த நடுக்கத்துக்கு ஹேது முன்பே மிகை விருதூதுவது, வீரக்கழலிடுவதானதிறே.

(நூற்றுவரித்யாதி). "பலர்குலைய" என்றதிலே இவர்களும் அந்தர்க்கதரிறே. ஆயிருக்கச்செய்தே இவர்களைப் பிரித்து "பட்ட

---

யாலே மற்றும் இவர்களோடொக்க விகல்பிக்கலாம்படி இருப்பாரநேகரென்கிருர். பதினோக்ஷா ஹிணியாலும் அதில் எத்தனைசூரருண்டாயிருக்கும்; ஆகையாலே ஸமுச்சயித்துச் சொல்லுமித்தனையிறே. (குலைய) "க்ருஷ்ணன் ஸாரத்யம் பண்ணுவதாக ஏறினான்" என்று கேட்டபோதே "நாம் இனி ஜீவிக்கை என்றொரு பொருளுண்டோ" என்று பீதராய் நடுங்கும்படியாக. கீழே, அவர் இவர் என்றுப்போலே விசேஷம் தோற்றச்சொல்லி, "குலைய" என்கையாலே - இந்நடுக்கத்தில் வந்தால் ஒருவர்க்கும் ஒருவிசேஷமுமில்லை யென்கை.

(நூற்றுவரும்பட்டழிய) கீழே - "மன்னவரும்" என்று-ராஜாக்களைச்சொல்லி யிருக்கச்செய்தே, இவர்களைப் பிரித்தெடுக்கையாலே- * கோப(கோ)பலீவர்த்தந்யாயத்தாலே அங்கு இவர்களை ஒழிந்தவர்களைச் சொல்லிற்றாகக்கடவது. பாண்டவர்களோடே யுத்தம்பண்ணி ஜயித்து பூமிப்பரப்படங்கலும் தாங்களே ஆளுவதாகக் கோலியிருந்த துர்யோதநாதிகள் நூற்றுவரும் பட்டழிய. (க) "[illegible] பூர்வ [illegible]-மயை வைதே நிஹதா: பூர்வமேவ" என்கிறபடியே

---

ளென்றபடி. எத்தனை சூரருண்டாயிருக்கும்) என்றது-அநேகம் பேருண்டாயிருக்கு மென்றபடி.

(கோ(கோ)பலீவர்தந்யாயத்தாலே) இத்யாதிக்குத்தாத்பர்யம் "[illegible]-காமாநய" என்றும், "[illegible] - பலீவர்தமாநய" என்றும் சொன்னால் "கோ" என்கிற ஸாமாந்ய ஶப்தம்-பலீவர்தத்தை யொழியக் காட்டினாற்போலே, இங்கும் "மன்னவர்" என்கிற ஸாமாந்யசப்தம் நூற்றுவரை யொழியக்காட்டுகிற தென்றபடி. பலீவர்த்தம் - வ்ருஷபம். கீழ்ச்சொன்னவர்களோடொரு சேர்த்தியாகச் சொல்லாமல், "நூற்றுவர்" என்று தனியே சொல்லுகைக்கு நியாமகமருளிச் செய்கிருர் (பாண்டவர்களித்யாதி) "நின்றோர்மேல் முன்னின்ற" என்றிருக்கையாலே யுத்தாத் பூர்வம் துர்யோதநாதிகள்

---

(க) கீ-கக-ருரு.

ழிய'' என்றது, அஹங்காராக்நி ப்ராசுர்யத்தாலே, மஹாவ்ருக்ஷங்களானவை பசுமைகுலைய வற்றிவரண்டு கோடரகதமான அக்நியாலே வெந்து விழுமாபோலேயிறே நூற்றுவரும் பட்டழிந்தபடி.

(பார்த்தனித்யாதி) இதுபோலேயோ அவன் சிலைவளையப்பட்ட பாடு. (க) ''“విసృజ్య సశరం చాపం-விஸ்ருஜ்யஸஶரம் சாபம்'' என்றவனை (உ) కరిష్యే వచనం తవ - கரிஷ்யேவசநம்தவ'' என்னப்பண்ணின அருமை; அதாவது-பெரிய வ்யவஸாயத்தோடே யுத்தோந்முக

க்ருஷ்ணன் அழியச்செய்வதாக ஸங்கல்பித்த போதே நின்று † வற்றின மரம்போலே பட்டு, பின்னை உருவழிந்துபோம்படியாக.

(பார்த்தன்சிலைவளைய) அர்ஜுநன்கையில் காண்டீவம் வளைய. அதாவது - அதிரத மஹாரதரான பீஷ்மாதிகளை மதியாதே, அர்ஜுநன் எதிர்த்துநின்று வில்வலித்து யுத்தம்பண்ண வல்லனாய்த்து இவனுடைய ஸஹாயபலத்தாலென்கை. (திண்டேர்மேல் முன்னின்ற) மஹாரதரான பீஷ்மாதிகள்விட்ட ஆக்நேயாஸ்த்ராதிகளாலே தக்த(்)மாய் விழாமல் தன் திருவடிகளின் ஸம்பந்தத்தாலே திண்மையை யுடைத்தாய் நின்றதேரின்மேலே, (ந) “ఉరసా ధారయామాస పార్థం సంఛాద్య మాధవః-உரஸா தாரயாமாஸ பார்த்தம் ஸஞ்சாத்ய மாதவः'' என்கிறபடியே அர்ஜுநனால் பொறுக்க வொண்ணாத அஸ்த்ரஶஸ்த்ரங்கள் வந்தாலும் தன்மேலே ஏற்றுக்கொள்ளும்படி ஸாரதியாய் முன்னின்ற.

(செங்கணலைவலை) தான் ஸாரத்யம் பண்ணின ஸாமர்த்யத்

---

பட்டழியக்கூடுமோவென்ன (மையைவேத்யாதி). (வற்றின மரம்போலே) என்றது - நீர் வற்றின மரம்போலே என்றபடி.

இவன் தேர்மேல் நில்லாவிடில் காண்டீவம் வளையாதோ வென்ன வருளுகிறார் (அதாவது அதிரதேத்யாதி). (வலித்து) இழுத்து; நாணை ஏறிட்டென்றபடி. திண்மைக்கர்த்தம் (மஹாரதேத்யாதி). ''வீழாமல்-நின்ற'' என்றந்வயம். ''முன்நின்ற'' என்றதுக்கு ப்ரயோஜநம் (உரஸேத்யாதி).

இவையெல்லாம் கடாக்ஷித்துக் கொண்டு ‘செங்கணலைவலை'' என்றதுக்குத்

---

(க) கீ-க-சஎ. (உ) கீ-கஅ-எந. (ந) பார-த்ரோண-உகூ-கஅ.

† (பா) வேரற்றமரம்.

ளுய்த் தேரிலேஏறினவன், யுத்தோந்முகரான பந்துக்களை ரக்ஷிக்கை தர்மமென்றும், வைதமானத்தை அதர்மமென்றும் ஸ்நேஹ காருண்யவதபீதிகளாலே (க) " కింనో రాజ్యేన గోవింద కింభోగైర్జీవితేనవా - கிந்நோராஜ்யேந கோவிந்த கிம்போகைர்ஜீவிதேநவா" என்று இவன் நிற்கையாலும், அவள்"விரித்தகுழல்முடியேன்" என்று,தனக்கு ஸரணாகதி திருநாமப்ரபாவ மாத்ரத்தாலே பலித்தகர்வத்தாலே "நாம் நினைத்ததெல்லாம் பலிக்கும்" என்று ப்ரதிஜ்ஞை பண்ணி நின்றாள்; "இனி இவனைத்தெளிவித்துச் சிலையைவளைத்து மயிரை முடிப்பிக்க வேணும்" என்று திருவுள்ளம்பற்றியருளி, இவனுக்குச் சில அர்த்த

தாலே ப்ரதிபக்ஷத்தைவென்று அந்த விஜயத்தைஅர்ஜுநன் மேலே ஏறிட்டு அவன்பக்கல் வாத்ஸல்யம்தோற்றக் கடாக்ஷித்து நின்று, அவன்விஜயம் தோற்றப் பலவற்றையும் சொல்லிப் புகழுமவன். (உ) "அவாக்யநாதர:-அவாக்யநாதர:" என்றிருக்கக்கடவவன் அதடைய அழிந்து கலகலென ஏத்தாநிற்குமாயிற்று. (ங) " புகழ்ந்தாய் சினப்போர்ச் சுவேதனைச் சேநாபதியாய் மனப்போர் முடிக்கும் வகை" என்கிறபடியே. அதவா, " பார்த்தன் சிலைவளையத்திண்டேர்மேல் முன்னின்ற செங்கணலைவலை" என்கையாலே- (ச) *அஸ்த்தாநஸ்நேஹகாருண்ய தர்மாதர்மதியா குலனாய், (க) న కాంక్షే విజయం కృష్ణ- நகாங்க்ஷே விஜயம் க்ருஷ்ண" இத்யாதிப்படியே "விஜயமும் வேண்டா, ராஜ்யாதிகளும் வேண்டா" என்று உபேக்ஷித்து

தாத்பர்யம் (தானித்யாதி). (அவன் விஜயம்) என்றது-அர்ஜுநன் விஜயமென்றபடி. "அலைவலை" - பஹுஜல்பாகன், இத்தைத் திருவுள்ளம் பற்றி வ்யாவர்த்த்யபூர்வகம் தாத்பர்யம் (அவாகீத்யாதி). "புகழ்ந்தாய்"இத்யாதி பாசுரத்துக்கர்த்தம்-உன் திருவுள்ளத்தில் கிடந்தபடியே பாரதயுத்தம் தலைக்கட்டுகைக்காக ஆண்பிள்ளையான அர்ஜுநன் நினைக்க, அவன் மிடுக்கனாய் யுத்தம் பண்ணும்படி புகழ்ந்தாய்; அப்படியன்றோ உன்படி என்கிறோரென்று. குலைகைக்கும்,பட்டழிகைக்கும், சிலைவளைக்கைக்கும்-தேர்முன்னின்றத்தை ஹேதுவாகவும், யுத்தார்த்தமாகப்புகழ்கை அலைவலைத்தனமாகவும் தாத்பர்யமருளிச்செய்து, இனி குலைகை முதலானவற்றுக்கு கீதோபதேசமாகிற அலைவலைத்தனத்தையே ஹேதுவாக்கித் தாத்பர்யாந்தரம் (அதவேத்யாதி). ப்ரகரணாநுகுணமாக*பார்த்தன் பதத்துக்குத்தாத்பர்யமருளுகிறார் (அஸ்த்தாநேத்யாதி).

(க) கீ-க-கூஉ. (உ) சாந்தோ-கூ-கச-ச. (ங) ச-திருவ உச. (ச) கீ ஸங்க்ரஹ

## ஸ்வாபதேசம்.

விசேஷங்களை உபதேசிக்கக் கோலி "தர்மத்தை அதர்மமென்ற ப்ர மம் மீளாமையாலே, அதர்மத்தை தர்மமென்றால் அத்தை தர்மமெ ன்று கைக்கொள்ளுமாகில், இவன் அதர்மமென்று நீக்கின தர்மத்தை இவனிசைந்த தர்மத்துக்கு யோக்யதா பாதகமாக்குவிப்போம்" என்று பார்த்தவளவிலும் அது கூட்ட இவன் இசையாமையாலும், அதொழிய இது தர்மமாகமாட்டாமையாலும் வெறுத்தருளி "இனி அதிகுஹ்ய ரஹஸ்ய மொழியச் சொல்லலாவதில்லை" என்று திருவுள்ளம்பற்றி யருளி "தர்மங்களெல்லாவற்றையும் ஒன்றொழியாமல் விடு" என் கையாலே "அலைவலை" என்கிறார்.

இவன் கைவிட்ட தர்மம் கூடாதபோது தான் இது தர்மமெ ன்ன இசைந்தானோவென்னில்; இசைந்தான். இசைந்த ப்ரகாரந்தா னென்னென்னில்; இது தர்மம்; துஷ்கரத்வாதி தோஷதர்சநத்தா லும், கீழே பாரதந்த்ர்யத்தைக் கேட்கையாலே அந்த பாரதந்த்ர்ய ஸ்வரூபத்துக்கு விரோதமாய்த்தோற்றுகையாலும் "என்னால் செய் யப்போகாது; மற்றொரு கதி அறிகிலேன்" என்று இவன்சோகித்த பின்பு இவன் சோகநிவ்ருத்த்யர்த்தமாக த்யஜிக்கச் சொல்லும்போ தும், இது அசக்தியோகத்யாகமாம் போதும் அவனுடைய ப்ரமத் தாலே தர்ம சப்த வாச்யமாமித்தனை.

இவற்றினுடைய துஷ்கரத்வாதி தோஷதர்சநம் பண்ணிவன் ப்ரமித்தானோ வென்னில்? இதுக்கு யோக்யதா பாதக தர்மத்தைக் கூட்டப் பெறாமையாலும் ப்ரமித்தான். சக்த்யநுகுணமாகச் செய் யவுமாய், தேஹதர்மமாத்ர விஹிதமுமாய்த்தான் செய்யக் கடவோ மென்று உபக்ரமித்து ஒருப்பட்டதுமாய், முன்பு ஊர்வசிமுதலானு ரளவிலும் தவறாமல் செய்து போந்ததுமாய், (க) "ஶ்ரேயாந் ஸ்வதர்மோ விகுண:" – ஶ்ரேயாந்ஸ்வதர்மோ விகுண:" என்று கீதோபநிஷதா சார்ய வசநமாத்ரத்தாலும், செய்யவேண்டுவதான ஸ்வதர்மத்தை பந்துக்கள் பக்கல் ஸ்நேஹாதிகளால் ப்ரமித்துத்தானே விடுகையால், இதுவும் அசக்தியோகத்யாகத்திலும் தர்மசப்த வாச்யமாகக்கூடா மையாலும், இனி ஒரு திவ்ய தேசவாஸம், திருநாம ஸங்கீர்த்தநம், தீபமாலாதிகளில் இவனுக்கு அந்வயமில்லாமையாலும், (உ) "ஸர்வத ர்மாந்பரித்யஜ்ய – ஸர்வதர்மாந்பரித்யஜ்ய" என்ற ப்ரகாரந்தான் எங்

(க) கீ-௩-௩௫. (உ) கீ-௧௮-௬௬.

ஸ்வாபதேசம்.

நனே யென்று நிரூபிக்க வேண்டி வருமிறே. தன் ஸௌந்தர்யாதிகளாலே அலைவலைமை தவிர்த்தவன்-இவனுடைய அலைவலைமை தவிர்க்க வேண்டியிறே அலைவலையானன். இவனுக்காக இவ்வர்த்தமெல்லாம் வெளியிடவேணுமோ எருக்கிலைக்காக, என்று அலைவலை என்கிறார்.

இங்ஙன் வெளியிட்டானகில் அவள் ப்ரதிஜ்ஞை நோக்கும்படி என்? இவன் வில்வளையும்படி யென்னென்னில்; இவன் பின்பு சொன்னத்தை முன்பே செய்தானகில் ப்ரதிஜ்ஞையும் தலைக்கட்டி வில்லும் வளையுமிறே. பின்புதானும் (க) "ப்ராமயந் - ப்ராமயந்" என்றபோதே செய்து முடித்தானகில் "ஸர்வதர்மாந் - ஸர்வதர்மாந்" என்ன வேண்டாவிறே. இவை எல்லாத்தாலும் இவள் ப்ரதிஜ்ஞை தலைக்கட்டலாயிருக்க, "ஸர்வதர்மாந்பரித்யஜ்ய - ஸர்வதர்மாந் பரித்யஜ்ய" என்று லோகஶாஸ்த்ரமாக உபகரிக்கிலும் அவள் ஸங்கல்பம் வ்யாஜமாத்ரமோபாதி, இவன் பக்கலிலும் ஒன்றைக்கண்டு வ்யாஜமாத்ரமாக்கிக் கொள்ளவேணுமிறே.

அதுதான் இவனுக்குண்டோ வென்னில் (உ) [கார்பண்யதோஷோபஹதஸ்வபாவ: - கார்ப்பண்ய தோஷோபஹதஸ்வபாவ:] என்றும், [தர்மஸம்மூடசேதா: - தர்மஸம்மூடசேதா:] என்றும் சொன்னபோதே "தர்மாதர்மங்களறிந்திலேன்" என்று அநுதபித்து, [ப்ருச்சாமி-ப்ருச்சாமி] என்றபேக்ஷித்து, [யச்ச்ரேயஸ்ஸ்யாந்நிஶ்சிதம்ப்ரூஹி - யச்ச்ரேயஸ்ஸ்யாந் நிஶ்சிதம்ப்ரூஹி] என்று-உனக்கு நான் சிஷ்யன், நியாமயன், ப்ரபந்நன் என்று தன் அதிகாரத்தைச்சொல்லி "நிஶ்சிதம்ப்ரூஹி" என்றபோதே ப்ராப்தமான அர்த்தவ்யாஜமும் தோன்றுமிறே. இவன் தானும் சக்தியோக தர்மத்தை அசக்தியோகத்தாலன்றே விட்டதும். நடுவுபரந்ததெல்லாம் இவன் சொன்னது ஸத்யமோ †- என்று இவன் நெஞ்சை சோதிக்கைக்காகவிறே. ஆகையால் ஈஶ்வரன் அலைவலையல்லவாயிருக்க, இவர் அவனை அலைவலை என்னும் போது தம்முடைய அபிப்ராயத்தாலருளிச் செய்தாரா மித்தனையிறே.

இவரபிப்ராயம் தானென்னென்னில் (க) "வாழாள்" என்றும், "கூழாள்" என்றும வகையிட்டு பகவச்சரணார்த்திகள், கைவல்யார்த்திகள் என்று பாராதே இவர்களை இசைவித்துத் தம்மோடே கூட

(க)கீ-கஅ-கூக, (உ)கீ-உ-எ.(ங)தி-பல்லா-ங. †இங்கேஒருபதம் இருக்கவேணும்.

மங்களாசாஸநபரராக்கி ப்ராப்தி தசையிலும் (க) "சூழ்ந்திருந்தேத்துவர் பல்லாண்டே" என்று இதுவே யாத்ரையாக்கி * வேதப் பயன்கொள்ளவல்லவர்க்கு இது அலைவலைத்தனமாய்த் தோற்றுதிராநிறே. (உ) "தாம்பணித்த மெய்ம்மைப் பெருவார்த்தை விட்டுசித்தர் கேட்டிருப்பர்" என்று "அவர்நாக்கு வளைத்திருப்பார், இப்போது என்னளவில் பண்ணுகிற தீம்பு திருச்செவி சாத்தில்" என்று ஆண்டாளு மருளிச்செய்தாளிறே.

பிராட்டியும் (ரு) "𑌸𑍍𑌤𑍍𑌰𑌿𑌯𑌂𑌪𑍁𑌰𑍁𑌷𑌵𑌿𑌗𑍍𑌰𑌹𑌮𑍍 - ஸ்த்ரியம் புருஷ விக்ரஹம்" என்று எங்கள் ஐயர் கேட்கில் "பெண்ணுக்குப் பெண்ணைக் கொடுத்தோம்" என்று என்னை நிறுத்திப்போகில் போர வெறுத்துச் சொல்லுவர். அது என்னால் கேட்கப்போகாதென்று கிடீர் எனக்கு க்லேசம்" என்றாளிறே. "நீர்நிறுத்திப் போனால் நிற்கும்பாபம் எனக்குமில்லை, நீர்தாமும் நிறுத்திப்போகிறவருமல்ல; ஆயிருக்க இந்த நெஞ்சொழிந்த பலவார்த்தை சொல்லி அலைவலையாக வேணுமோ" என்றாளிறே. குறும்பறுத்த நம்பியும் "திருவேங்கடமுடையானுகிற அலவலை வெளியிட்டானே" என்றானிறே.

"த்யஜ, வ்ரஜ, மாஶுச:" என்னக்கேட்டு, அவனும் (ச) "𑌸𑍍𑌥𑌿𑌤𑍋𑌽𑌸𑍍𑌮𑌿𑌗𑌤𑌸𑌨𑍍𑌦𑍇𑌹𑌃𑌕𑌰𑌿𑌷𑍍𑌯𑍇𑌵𑌚𑌨𑌂𑌤𑌵 - ஸ்த்திதோஸ்மி கதஸந்தேஹ: கரிஷ்யேவசநம்தவ" என்ற பின்பிறே-நூற்றுவரும் பட்டழியப் பார்த்தன்சிலைவளைந்ததும். ரதிக்குத் திண்மைகுலைந்து (ரு) "𑌵𑌿𑌸𑍃𑌜𑍍𑌯𑌸𑌶𑌰𑌂𑌚𑌾𑌪𑌂-விஸ்ருஜ்யஸஶரம்சாபம்" என்று * ஶோகஸம்விக்நமாநஸனனவளவிலும் "𑌰𑌥𑍋𑌪𑌸𑍍𑌥𑌉𑌪𑌾𑌵𑌿𑌶𑌤𑍍 - ரதோபஸ்த்த உபாவிசத்" என்று

"𑌰𑌥𑍋𑌪𑌸𑍍𑌥𑌉𑌪𑌾𑌵𑌿𑌶𑌤𑍍 -ரதோபஸ்ஸத உபாவிஶத்" (ரு) "𑌵𑌿𑌸𑍃𑌜𑍍𑌯 𑌸𑌶𑌰𑌂 𑌚𑌾𑌪𑌂 𑌶𑍋𑌕𑌸𑌂𑌵𑌿𑌗𑍍𑌨𑌮𑌾𑌨𑌸𑌃 - விஸ்ருஜ்ய ஸசரஞ்சாபம் சோகஸம்விக்நமாநஸ:." என்கிறபடியே ஶோகத்தாலே வெருவின மநஸ்ஸையுடையனாய் வில்லையும் பொகட்டு யுத்தாந்நிவ்ருத்தனாய்த் தேர்த்தட்டிலேயிருந்த அர்ஜுநன் தெளிந்து (ச) "𑌕𑌰𑌿𑌷𑍍𑌯𑍇𑌵𑌚𑌨𑌂𑌤𑌵 - கரிஷ்யேவசநம்தவ" என்றெழுந்திருந்து வில்லெடுத்துயுத்தம்பண்ணும்படியாக, ப்ரக்ருத்யாத்ம விவேகம்தொடங்கி பரமரஹஸ்யமான ப்ரபத்திபர்யந்தமாக

"சிலைவளைய" என்றதுக்குத் தாத்பர்யம் (தெளிந்தித்யாதி). அலைவலை பத தாத்பர்யம் (ப்ரக்ருத்யாத்மேத்யாதி).

(க) தி-பல்லா-கஉ. (உ) நா-தி-கக-க0. (ரு) ரா-ரு0-ரு. (ச) கீ-கஅ-எரு. (ரு) கீ-க-சஎ.

இவனிருக்கும்படி, ரதம் திண்மை குலையாதிருந்ததிறே-இவர் தேர் மேல் முன்நிற்கையாலே. மேல் நின்ற பார்த்தனுக்கு முன்பே தாழ நின்று (க)"ஸர்வஸம்ப்ரமிஜ்ரா:-உரஸாப்ரதிஜக்ராஹ" என்று மார்பிலே அம்பேற்ற அலவலை வந்து அப்பூச்சி காட்டுகின்றானென்கிறார். (செங் கண்) பலகாலும் "அர்ஜுநன் தேரில் நின்றும் குதித்து ஓடிப்போகி றானோ" என்று பார்த்துச் சிவந்த தென்னுதல்; சத்ருக்களளவிலே சீறிச் சிவந்ததென்னுதல்; ஸ்வாபாவிகமான ஐஸ்வர்ய ஸூசகமான சிவப்பென்னுதல். .... .... .... .... .... .... (உ)

---

உபதேசித்த அலவலைத்தனத்தைச் சொல்லவுமாம்.

"அலவலை" என்பது-அர்த்த கௌரவமும் அதிகாரிகுணாகுண மும் பாராதே தன்நெஞ்சில் ப்ரதிபந்நமானவற்றைச் சொல்லுமவ னிறே; அது இங்குமுண்டாகையாலே இவனையும் அலவலை யென்ன லாமிறே. இப்படி-தான் அருளிச்செய்தது- சரணாகதையானவள் குழல் முடிப்பிக்கைக்காகவிறே. (வந்தித்யாதி) இப்படி பலர் குலையவும் பட்டழியவும் சிலைவளையவும் தேர்முன்னின்று ஸாரத்யம்பண்ணின, ஆஸ்ரித விரோதிநிரஸநம் ஆஸ்ரித பாரதந்த்ர்யம் முதலான ஸ்வபா வங்களையுடையவன் வந்து அப்பூச்சிகாட்டுகின்றான். (அம்மனே) பூர்வவத்.

மூ;—காயுநீர்புக்குக் கடம்பேறிக் காளியன்
தீயபணத்தில் சிலம்பார்க்கப் பாய்ந்தாடி
வேயின்குழலூதி வித்தகனாய்நின்ற
ஆயன்வந்தப்பூச்சிகாட்டுகின்றா னம்மனேயப்பூச்சிகாட்டுகின் [றான்.

வ்யா.—மூன்றாம்பாட்டு. (காயுநீரித்யாதி) (காயுநீர் புக்கு)

---

ப்ரபத்த்யுபதேசம் பண்ணினவனை "அலவலை" என்னக் கூடுமோ வென்ன வருளுகிறார் (அலவலை என்பதித்யாதி). இப்படி அதிகாரி வேஷா திகளைப் பாராமல் சொல்லுகைக் கடியே தென்ன வருளுகிறார் (அப்படியித் யாதி). ப்ரதமயோஜநாபிப்ராயேண பாட்டில் ப்ரமேயத்தை உபந்யஸித்து, அத்தால் பலித்த கல்யாண குணங்களை அப்பூச்சி காட்டுகைக்கு ஹேதுவாக வேண்டியருளுகிறார் (இப்படி பலரித்யாதி). ஸாரத்யம் பண்ணினவனாய், ஆகையாலே "ஆஸ்ரிதேத்யாதி" என்று கூட்டிக்கொள்வது. இஸ்ஸ்வபா வங்களை யுடையவன் ஆஸ்ரிதரை ஸந்தோஷிப்பிக்கு மவனாகையாலே அப் பூச்சி காட்டுகிறானென்று கருத்து. ... ... ... ... (உ)

---

(க) பார.

அவ;—மூன்றாம்பாட்டு. ஆயர்குலத்துக்குக் காரணனானவன் வந்து அப்பூச்சி காட்டுகின்றா னென்கிறார்.

ஸ்வா.—( காயுநீரித்யாதி ) காளியன் - புக்கு - காயுநீர்கடம் பேறி. முன்பு அம்ருதஜலமாயிறே அந்த மடுதானிருப்பது. காளியன் பீ(ஷ்)திமூலமாகவந்து புகுந்தபின்பிறே (க)“சலம்கலந்த பொய்கை” என்னும்படி காயுநீராயிற்று.

பண்டு நீர்க்கடம்பாய் குளிர்ந்து நின்ற பாதபம்பட்டது விஷஜலத்தாலேயிறே. “ஆனால் அது இவனேறப்பொறுத்தபடி என்?”

---

அருகணைந்த வ்ருக்ஷங்கள் பக்ஷிகளுட்பட பட்டுவிழும்படி காளியன் விஷாக்நியாலே தப்தமாய் நின்று கொதிக்கிற மடுவின் ஜலத்திலே மதியாமல் சென்றுபுக்கு. (உ) “கடுவிடமுடைய காளியன் தடத்தைக்கலக்கி” என்கிறபடியே அந்தத்தடாகத்தைக்கலக்கி, காளியன் க்ருத்த (க்ருத்த) னாய்த் தலையெடுத்தெழுந்திருக்கும்படி பண்ணி.

(கடம்பேறி) அந்த விஷாக்நியாலே அருகே பட்டு நிற்கிற தொருகடம்பை, தன் கடாக்ஷத்தாலே * பச்சிலைப் பூங்கடம்பாக்கி,

---

அரு.—மூன்றாம்பாட்டு. (காயுநீரித்யாதி) (௩)“కాలింద్యాం కాలియస్యా సీద్ధ్రదః కశ్చిద్విషాగ్నినా । శ్రప్యమాణపయా యస్మిన్ పతన్త్యుపరిగాః ఖగాః ॥ విప్రుష్మతా విషదోర్మిమారుతేనాభిమర్శితాః । మ్రియన్తే తీరగా యస్య ప్రాణినః స్థిర జఙ్గమాః - காளிந்த்யாம் காளியஸ்யாஸீத்த்ரத: கஶ்சித்விஷாக்நிநா । ஶ்ரப்யமாணபயாயஸமிந்பதந்த்யுபரிகா:ககா: । விப்ருஷ்மதா விஷாதோர்மிமாருதேநாபிமர்ஶிதா: । ம்ரியந்தே தீரகா யஸ்யப்ராணிநஸ் ஸ்திரஜங்கமா:” என்கிற ஶ்ரீபாகவத வசநங்களை உட்கொண்டு அர்த்தமருளுகிறார் (அருகணைந்த வித்யாதி). பாய்ந்தாடுகைக்கு - “காயுநீர்புக்கு” என்கிறது ஹேதுவாகவேண்டி, அநந்தரசேஷ்டிதத்தை ஸப்ரமாணமாக வருளுகிறார் (கடுவிடமித்யாதி).

(௪) “తదేతం నాతి దూరస్థం కదమ్బమురుశాఖినమ్। అధిరుహ్య పతిష్యామి హ్రదే స్మిన్ననిలాశినః॥ ఇత్థం విచిన్త్య బధ్వా చ గాఢం పరికరం తతః॥ నిపపాత హ్రదే తత్ర- ததேதந்நாதிதூரஸ்த்தம் கதம்பமுருசாகிநம் । அதிருஹ்ய பதிஷ்யாமிஹ்ரதேஉஸ்மிந் நிலாஶிந: । இத்தம் விசிந்த்ய பத்த்வாச காடம் பரிகரம்தத: । நிபபாதஹ்ருதேதத்ர” என்கிற ஶ்ரீவிஷ்ணு புராணத்தையும், (௫) “பச்சிலை பூங்கடம்பேறி விசைகொண்டு பாய்ந்து புக்கு” என்கிற திருமங்கை மன்னன் பாசுரத்தையும் திருவுள்ளம்பற்றியருளுகிறார் (அந்த விஷாக்நியாலே யித்யா

---

(க) தி-ச-வி-௨௬. (உ) தி-மொ-௪-௩௦-௩. (௩) பாக-௧௦-௧௬-௪.
(௪) வி-பு-௫-௭-௩௰. (௫) தி-மொ-௧௦-௭-௧௨.

என்று நஞ்ஜீயர்கேட்க, "ஏறுகிறவன் பார்த்து ஏறுகையாலே விஷத்தால் வந்ததோஷம் அவன் பார்வையாலே தீர்ந்து ப்ராணன் பெற்றுப் பச்சிலைப்பூக்கடம்பாயிற்று". என்று பட்டரருளிச்செய்தார். நெறுஞ்சியைப் புல்லாக்கினவன் கடாக்ஷத்துக்குக் கூடாததில்லையிறே.

அன்றிக்கே நம்பிள்ளை அருளிச்செய்தாராக ஆச்சான்பிள்ளை அருளிச்செய்யும்படி. "வெந்துபோன உத்தரைதன்சிறுவனையும் உய்யக்கொண்ட திருவடிகளிறே; அந்தத்திருவடிகளாலே மிதித்தேறினால் பச்சிலைப்பூம் கடம்பாகாதோ?" என்று. திருவடிகளாலே கல்லைப்பெண்ணாக்கினுனென்றதும் ஓராஸ்சர்யமோ இதுக்கு. அந்தக் கடம்பிலே ஏறி அந்த விஷத்துக்கு ஆஸ்ரயமாய்த் தீயதான பணத்தின்மேலேயிறே சிலம்பார்க்கப்பாய்ந்து ஸஸம்ப்ரமந்ருத்தம் செய்தது. அந்தந்ருத்தம்தான் பரதஸாஸ்த்ரத்துக்கு ஹேதுவென்னலாமிறே.

(வேயித்யாதி) கரையிலே ஏறி இனிதானவேயின் குழலூத,

---

அதின்மேலே ஏறி. (காளியனித்யாதி) காளியனுடைய - விஷாஸ்ரயமாகையாலே க்ரூரமான பணத்திலே திருவடிகளில் திருச்சிலம்பு த்வநிக்கும்படி சென்று குதித்து, அவன் பணங்கள் நெரிந்து வாய்களாலே ரக்தம் சொரியும்படி இளைத்துச்சரணம் புகுருமளவும் அதின் மேலே நின்று ந்ருத்தம் செய்து.

(வேயித்யாதி) இந்த வ்ருத்தாந்தத்தைக் கண்டும் கேட்டும் "என்னாகப்புகுகிறதோ?" என்று தரைப்பட்டுக் கிடந்து ஈடுபடுகிற

---

தி). இவ்வசநத்தில் "நாதிதூரஸ்த்தம்" என்கையாலே பட்டுக்கிடந்தபடியும், 'உருசாகிநம்'' என்று விசேஷித்து "விசிந்த்ய" என்கையாலே க்ருஷ்ணன் கடாக்ஷத்தால் பச்சை பட்டபடியும் கொள்ளவேணுமென்று தாத்பர்யம். "ததஃ" என்றது-வ்ருக்ஷாக்நிபபாத என்றபடி. இந்தப்ரமாணங்களில் சொல்லுகிறபடியே "கடம்பேறிக்காயுநீர்புக்கு" என்றந்வயித்துக்கொள்வதென்று திருவுள்ளம். "பாய்ந்து" என்று மளவுக்கு மர்த்தம் (காளியனித்யாதி). ஸ்ரீ பூணுமபிவத்ஸலனுகையாலே நசிப்பித்தென்று சொல்லாமல் "ஆடி" என்றதுக்குத் தாத்பர்ய மருளுகிறார் (அவன் பணங்களித்யாதி),

காயுநீர்புக்கி த்யாதியைக் கடாக்ஷித்துக் "குழலூதி" என்றதுக்குத்தாத்பர்ய மருளுகிறார். ( இந்தவித்யாதி ). அதிமாநுஷ சேஷ்டிதம் செய்திருக்க

அந்தத்வநியில் தெளிவுகண்டிறே "அந்தக்காளியனுக்குப்பிழைத்தான்'' என்று, ஆச்சிமாராயர்கள் தெளிந்தவளவே யன்றிக்கே, இவரேயிறே தெளிந்தாரும். இன்னமும் "இவனிறே''என்று வயிறு மறுகினாரும். (வித்தகனாய் நின்ற) ஆயர்குலத்துக்குக் காரணபூதனென்னுதல்; பசுக்களும் கன்றுகளும் இடையரும் இடைச்சிகளும் பயங்கெட்டுத் தங்களிஷ்டத்திலே தண்ணீர் குடிக்கலாம்படி காளியனை ஓட்டிவிட்ட ஸாமர்த்த்யத்தை யுடையவனென்னுதல். (ஆயன்) எல்லாம்செய்தாலும் ஜாத்யுசிதமான இடைத்தனத்தில் குலையாமையாலேயிறே வ்யக்திப்பேர் கிடக்க, ஜாதிப்பேர் அருளிச்செய்தது. அன்றிக்கே, குழலூதின வாயனென்னவுமாம். (ஙு)

அவ.—நாலாம்பாட்டு. (இருட்டித்யாதி) தீம்பனானவன் வந்து அப்பூச்சி காட்டுகின்றானென்கிறார்.

ஸ்வா;—அவன்தான் பிறக்கப் புகுகிறானென்று ஏற்கவே உருவினவாளும் கையுமாய் நிற்கிறவிரோதிகள் கண்ணில் தோற்றாமைக்

---

இவ்வநுகூல ஜநங்கள் தலையெடுத்து ப்ரீதராய் வாழும்படி திருக்கையில் வேயின் குழலையூதி, இவ்வதிமாநுஷ சேஷ்டிதத்தாலே விஸ்மயநீயனாய் நின்ற. (ஆயன்) எல்லாம்செய்தாலும் ஜாத்யுசிதமான இடைத்தனத்தில் கு(றை)லையாதவன். வந்து அப்பூச்சிகாட்டுகின்றான். .... .... .... .... .... .... .... (ஙு)

மூ.—இருட்டில்பிறந்துபோ யேழைவல்லாயர்
மருட்டைத்தவிர்ப்பித்து வன்கஞ்சன்மாளப்
புரட்டியந்நாளெங்கள் பூம்பட்டுக்கொண்ட [கின்றான்.
அரட்டன்வந்தப்பூச்சிகாட்டுகின்றா னம்மனேயப்பூச்சிகாட்டு

வ்யா.—நாலாம்பாட்டு. (இருட்டில்பிறந்து) (க) "அர்த்தராத்ரே(உ)கிலா தாரே ஜாயமாநே ஜநார்த்தநே-அர்த்தராத்ரே^உகிலாதாரே ஜாயமாநே ஜநார்த்தநே'' என்கிறபடியே கம்ஸன் முதலானதுஷ்ப்ரக்ருதிகள் கண்ப

---

"ஆயன்'' என்னப்போமோ வென்ன வருளுகிறார் (எல்லாமித்யாதி). (ஙு)

அரு;—நாலாம்பாட்டு. (இருட்டித்யாதி) "இருட்டில்'' என்று சொல்லுகிறதென்! பிறந்தென்றால் அது போராதோவென்ன ப்ரமாணமருளிச்செய்யா நின்று கொண்டு தாத்பர்யமருளிச்செய்கிறார் (அர்த்தேத்யாதி). கண்

---

(க) வி-பு-ரு-ஙு-எ.

காகவிறே இருட்டிலே திருவவதரித்தது. இருட்டிலேயாகிலும் தாய் முலைப்பாலைக் குடித்துக்கிடக்கலாமிறே; இதுக்கு விரோதிப் பார்களென்றிறே வழியில் மருக்யமும் பாராமல் இருட்டிலே திருவாய்ப்பாடியேற எழுந்தருள வேண்டிற்று. (பிறந்துபோய்) திருவவதரித்தெழுந்தருளி.

(வல்லாயர் ஏழைமருட்டைத் தவிர்பித்து) (வல்லாயர்) ஆயர்க்கு வலிமையாவது-அறிவு கேட்டில்வலியராகையிறே. புதுமழைத் தண்ணீரையும், குடிலையில் சோற்றையும் ஜீவித்து இடையர் கோலாடி விளையாடும்போதுகளிலே "நாம் இத்தனை பேருண்டா

டாதபடி அருகுநின்றுருக்ருத் தெரியாத விருளிலே வந்தவதரித்து. "எப்போது பிறப்பது" என்று ஹிம்ஸிக்கைக்காக உருவின வாளை உறையிலிடாம லிருக்கிறவன், கண்ணால் கண்டால் விடானிறே. (க) "ஜாநாத்மாவதாரஸ்தே கம்ஸோயம் திதிஜந்மஜஃ- ஜாநாதுமாவதாரந்தே கம்ஸோயம் திதிஜந்மஜஃ" என்றுளிறே தேவகிப்பிராட்டி. (போய்) (உ) "வீங்கிருள்வாய்-அன்றன்னை புலம்பப்போய்" என்கிறபடியே அந்தச் செறிந்த இருளிலே பெற்ற தாயானவள் விரஹகாதரதையாலே காலைக்கட்டிக் கொண்டுகிடந்து கதறுநிற்கத் திருவாய்ப்பாடியிலே போய்.

(ஏழைவல்லாயர் மருட்டைத்தவிர்ப்பித்து) தன்பக்கல் சபலராய், (ங) "க்ருஷ்ணாஶ்ரயா: க்ருஷ்ணபலா: - க்ருஷ்ணாஶ்ரயாஃ க்ருஷ்ணபலாஃ." என்கிறபடியே தன்னைப்பற்றி யிருக்கும் பலத்தையுடையரான

டால் தான் வருங்குற்றமேதென்ன வருளுகிறார் (எப்போதித்யாதி). துஷ்ப்ரக்ருதிகள் கண்படக் கூடாது, கண்டால் பாதிப்பரென்னுமதுக்கு ப்ரமாணம் (ஜாநாத்வித்யாதி). திதிஜந்மஜனாகையாலே பாதிப்பனென்று கருத்து. "இருட்டில் பிறந்து, மருட்டைத்தவிர்ப்பித்து" இத்யாதிபதங்களை "அரட்டன்" என்றுசொல்லப்பட்ட தீம்புக்கும், மிடுக்குக்கும் ஹேதுவைச் சொல்லுகிறதாகத்தோன்றுகையால் "போய்" என்றதினர்த்தமும் ஹேதுவாக வேண்டிப் பாசுரத்தின்படியே அர்த்தமருளிச்செய்கிறார் (வீங்கிருள் வாயித்யாதி).

"ஏழை" என்றதுக்கு அந்யவிஷயத்தில் சா(ஞா)பல்யமர்த்தமாகில், மருட்டைத் தவிர்ப்பிக்கையிலே ஹேதுவாகமாட்டாதென்றர்த்த மருளுகிறார் (தன்பக்கலித்யாதி), இடையர்க்கு ப(ப)லம் சொல்லக்கூடாமையால் அருளுகிறார் (க்ருஷ்ணாஶ்ரயா இத்யாதி). பாண்டவர்களைப்போலே இவரும் க்ருஷ்ண பல

(க) வி-பு-ரு-ங-கங. (உ) தி-வாய்-கூ-ச-ரு. (ங) பார-த்ரோ-கஅங-உச.

யிருக்க நம்முடையகையிலே இந்தப் பசுமேய்க்கிற கோல்களிருக்க கம்ஸனுக்கு நாம் திறை இடுகையாவதென்? இந்தக்கோல்களாலே கம்ஸனையும் சாகவடித்து இழுத்துப் போகடக்கடவோம்" என்று இவர்கள் ஸம்ப்ரதித்தவளவிலே, "நீங்களெல்லாரும் வேணுமோ? நானொருவனுமே அவனைச் சாகஅடித்திழுத்துப் போடேனோ" என்று இவனெழுந்திருந்தவளவிலே, ஆயர் பலரும் எழுந்திருக்க "நீங்கள் இங்ஙனே சொல்லிச்செய்ய வல்லாரைப்போலே மருட்டா தொழியுங்கோள்" என்று அவர்களையும்நீக்கி "அண்ணரும் நானும் அமையும்" என்று ஸ்ரீமதுரைக்குப் போவதாக ஒருப்பட்டவள விலே;

அக்ரூரன் "எழுந்தருளவேணும்" என்று தேரும்கொண்டு உறவு பேசிவர, அவனுடன் எழுந்தருளுகிற வளவிலே, வல்லாயர் ஏழைகளாய், இவனுடன் மருவின பெண்களெல்லாரும் திரண்டு வந்து(க)"అక్రూరః క్రూరహృదయః-அக்ரூரக்ரூரஹ்ருதய:" என்று இவ ரை நிஷேதித்துத்தேரைத்தகைந்து "நீங்கள்போகில் நாங்கள் இத்த னைபேரும் இப்போதே முடிவோம்" என்ன;"மாற்று வாயாகில் இப் படி சொல்லுகிறதொழிய நீங்கள் நினைத்தபோது முடியலாயிருக் குமோ? முடிகிறோமென்றுஎன்னைமருட்டாதே கொள்ளுங்கோள்." என்று இவர்களுடைய மருட்டையும் நம்பிமூத்தபிரானைக்கொண்டு தவிர்ப்பித்தானிறே. அவர்களுடைய ஸ்நேஹத்தையிறே மருட் டென்றது.

---

கோபரானவர்கள் செருக்காலே தாங்கள் கம்ஸனை அழிக்கவல்லா ரைப்போலேசொல்லும் ப்ரா(ஞ)மகோக்திகளை, "நீங்களெல்லாரும் வேணுமோ, நானே செய்கிறேன்" என்றாப்போலே சொல்லும் தன் னுடைய உக்திவிசேஷங்களாலே தவிரும்படி பண்ணி.

(வன்கஞ்சன் மாளப்புரட்டி) நான் செய்கிறேனென்றது உக்தி மாத்ரமாய்ப் போகாமே கம்ஸ ப்ரேரிதனாய், தன்னை அழைத்துக் கொண்டு போகவந்த அக்ரூரனுடனே ஸ்ரீ மதுரையிலே யெழுந்த

---

ரென்று திருவுள்ளம். "வன்கஞ்சன்மாள" என்றதைக் கடாக்ஷித்து ஹேது பூர்வகம் மருளை விவரிக்கிறார் (செருக்காலே யித்யாதி). தவிர்ப்பித்த ப்ரகா ரத்தை யருளுகிறார் (நீங்களித்யாதி),

வன்மையை உபபாதிக்கிறார் (நான் செய்கிறேனென்றதித்யாதி). புரட்

---

(க) வி-பு-ரு-கஅ-௩௦.

அத்தைத் தவிர்த்த ப்ரகாரந்தானேதென்னில்; நாங்கள் போய் மாமடியோடே உறவுசெய்து மீண்டு வருகிறோமென்ன; "அது கூடுமோ? நகரஸ்த்ரீகளைக்கண்டால், கொச்சைகளாயிருக்கிற வெங்களை நினைத்து நீங்கள் வரக்கூடுமோ" என்று அவர்கள் சோகிக்க, அவர்களளவிலே க்ருஷ்ணனுக்குக்ருபை பிறக்கக்கூடும் என்று இவர்கள் மருட்டிலே முடியமுடிய அகப்படாதே அவர்கள் ஆசை அறும்படியாக "நாம் தாம் ராஜபுத்ரர்களன்றோ? நமக்கு அவர்களோடே பரிய உறவாய்க்கிடந்ததோ? போரீர்" என்று கொண்டு போயன்றோ மதுரையிலேபுக்கு அவன் செய்தவஞ்சனைகளைக் காண்கையாலே அவற்றையும் முடித்து, அவன்தானிருந்த உயரத்திலே பாய்ந்து அவனைத் தலை கீழாகப்புரட்டித்தள்ளி, அவன்மேலே குதித்தவளவிலும் "வன்சஞ்சன்" என்னும்படி ப்ராணன் போகாமையாலே, மீண்டும் புரட்டிக்குஞ்சி பிடித்துமாளும்படி அடித்துப்பொகட்டானென்கிறார்.

அதுக்குப்பின்னை பூம்பட்டுக்கொண்டதென்னில்? விரோதி

ருளி, உத்ஸவத்துக்கென்றழைத்துவிட்டு, வழியிலேநலியும்படியாக தன் குவலயாபீடத்தையும் மல்லரையும் நிறுத்தி, (க) "తుఙ్గమఞ్చే వ్యవస్థితః- துங்கமஞ்சேவ்யவஸ்த்திதః" என்கிறபடியே, தான் உயர்ந்த நிலத்திலேயேறிப் பார்த்துக்கொண்டிருந்த வன்னெஞ்சனை கம்ஸன் முடியும்படியாக, அவன் வழியில் நிறுத்தின விரோதிகளை நிரஸித்துக்கொண்டு சென்று அவனிருக்கிற மஞ்சஸ்த்தலத்திலே எழப்பாய்ந்து, (உ) "కేశేష్వాకృష్య విగళత్కిరీటమవనీతలే సకంసం పాతయామాస తస్యోపరి పపాత చ - கேசேஷ்வா க்ருஷ்ய விகளத் கிரீட மவநீதலே - ஸகம்ஸம் பாதயாமாஸ தஸ்யோபரி பபாதச." என்கிறபடியே அபிஷேகத்தைத் தட்டிப்பொகட்டு, மயிரைப் பிடித்திழுத்து, கீழேபூமியிலே விழத்தள்ளி, அவன்மேலே குதித்து, (ங) "கஞ்சன் குஞ்சி பிடித்தடித்த" என்கிறபடியே மயிரைத் தூக்கிப்பிடித்து, நிலத்திலே இட்டுப் புரட்டி. (அங்நாளித்யாதி) பனிநீராட்டின வங்நாளிலே எங்களுடைய அழகிய பட்டுக்களை வாரிக்கொண்டதீம்பனை

டின ப்ரகாரம் சொல்லுகைக்காக தத்பூர்வ வ்ருத்தாந்தங்களைச் சேர்த்தருளுகிறார் (அவன்வழியிலித்யாதி). ... ... ... ... ... (ச)

(க) வி-பு-ரு-உ0-உக. (உ) வி-பு-ரு-உ0-அக. (ங) தி-மொ-ங-க0-ங

போனபின்பிறே இவர்கண்டநுபவிக்க வல்லராவது. "எங்கள்பூம்பட்டுக்கொண்ட அரட்டன்" என்று பெண்கள் சொல்லுகையாலே அவர்களிலே தாமும் ஒருவராய் அநுபவிக்கவும் கூடுமிறே. நம்பி மூத்தபிரான் இல்லாதபோதுகளிலே "இந்த அடிக்கழிவுக்கே ஒண்ணாது" என்று நியமிக்கைக்காகத் தாமும் அங்கேசென்று அவர்கள் "எங்களது" என்ன; இவன் "உங்களது அன்று" என்ன; அவர்கள் "எங்களது"என்றவார்த்தையை அநுகரித்துத் தாமும் எங்களதென்றுவாங்கி அவர்கள் கையிலே கொடுத்து அடிக்கழிவு பரிஹரிக்கலாமிறே.

ஆனால் இவர்அவர்கள் திரளிலேசென்றால் அவர்கள் குத்ஸியார்களோ? நம்பி மூத்தப்பிரானைப் பொறுத்தார்களாகிலும் இவரைப் பொறுப்பார்களோ வென்னில்; பொறுப்பார்கள். ஸ்ரீவேத வ்யாஸ பகவானைக்கண்டு நீரிலே குதித்தபெண்கள் ஸ்ரீசுகப்ரஹ்மருஷியைக் கண்டபின்பு கரையிலே ஏறித் தங்களைப் பேணாமல் எதிராநின்றார்களிறே. அந்தருஷியும் இவரும் க்ருஷ்ணக்ரீடையிறே கொண்டாடுவது. அவ்வளவல்லவிறே இவருடைய அவகாஹநம். சேற்றுக்கும் புழுதிக்கும்பூர்வபாவியில் வாங்கியதியுங்கூட அறியாதவரிறே இவர்.

அன்றிக்கே "எங்கள் பூம்பட்டு" என்று தாமும் அவர்களிலே ஒருவராய் நின்று அவன் † கன்றாமைநோக்கி அவனை உளனாக்கிப் பரியவேண்டி அவன் க்ரீடையிலே ஒருப்பட்டு "எங்கள் பூம்பட்டு" என்கிறாராகவுமாம். அவனோடே எல்லாமுறைமையும் உண்டிறே இவர்க்கும். (க) "சென்றால் குடையாம்" (உ)"யதாயதா ஹி கௌஸல்யா— யதாயதாஹிகௌஸல்யா" (௩) "தாஸ ஸ்ஸகா-தாஸஸ்ஸகா"இத்யாதி-நின்ற நின்றநிலைகளிலே பரிகையிறே உள்ளது. அரட்டு-தீம்பாதல், ப(ब)லமாதல். "அந்நாள் அவனை மாளப்புரட்டி, இந்நாள் எங்கள் பூம்பட்டுக்கொண்டவரட்டன்" என்று, அவர்கள் "எங்கள்" என்ற பாசுரமும் தம்பேறாகையாலே அநுகரிக்கிறார்; ✱ யுகேயுகே ஸம்பவாமிப்படியேயாகவுமாம். .... .... .... .... .... (ச)

---

வன். (அரட்டு) தீம்பு; மிடுக்காகவுமாம். வந்தப் பூச்சிக்காட்டுகிறான். .... .... .... .... .... .... .... (ச)

---

(க) க-திருவ-௫௩.(உ) ரா-அ-கஉ-சுஅ. (௩)ஸ்தோ-ர-சக. †(பா) குன்றாமை.

அவ;—அஞ்சாம்பாட்டு. (சேப்பூண்டித்யாதி) மாதாவாலே கட்டுண்டவன் அப்பூச்சி காட்டுகின்றானென்கிறார்.

ஸ்வா;—கொடிச்சேக்களைப் பூட்டினாலும் சேக்களால் சலிப்பிக்கவொண்ணாத சாட்டின்கீழேயிறே பிள்ளையை வளர்த்திப் போச்சுது. பிள்ளைபிறந்த முஹூர்த்த விசேஷந்தான் ப்ரதிகூலித்துக் கிட்டினால் முடியும் வேளையாகையாலே கட்டுக்குலைந்து (ஷிந்நபிந்ந) சிந்திபிந்தியாய்ப் போயிற்றிறே. சலிப்பிக்கவொண்ணாத மாத்ரமேயன்றிக்கே நிலைமரத்திலே சேர்ந்தாப்போலேயிருக்கிற பெரியசாடு, * தளிர்புரையும் திருவடிகளை முலைவரவு தாழ்த்துச்சீறி நிமிர்த்த வளவிலே சிந்திபிந்தியாய்ப் போயிற்றிறே.

(திருடியித்யாதி) "ஊரில் நெய்களவு போகாநின்றது" என்று பலரும்வந்து யசோதைக்குமுறைப்பட்டபடியாலே "இப்பிள்ளையையோ நீங்கள் இதெல்லாம் சொல்லுகிறது, நீங்கள் கண்டிகோளாகில்

மூ;—சேப்பூண்டசாடுசிதறித் திருடிநெய்க்
காப்பூண்டு நந்தன்மனைவி கடைதாம்பால்
சோப்பூண்டுதுள்ளித் துடிக்கத்துடிக்கவன் [கின்றான்.
றாப்பூண்டானப்பூச்சிகாட்டுகின்றா னம்மனேயப்பூச்சிகாட்டு

வ்யா.—அஞ்சாப்பாட்டு. (சேப்பூண்டித்யாதி) (க) "வன்பாரசகடம்" என்கிறபடியே எருதுகள் பூண்டுவலிக்கப்பட்ட அதிபாரமான சகடம் அஸுராவேசத்தாலே நலிவதாக ஊர்ந்து மேலிட்டுவர, இவன்முலைவரவு தாழ்த்துச்சீறிநிமிர்த்த திருவடிகளாலே அத்தை உருக்குலையும்படி உதைத்து. (திருடியித்யாதி) நெய்க்காசைப்பட்டுக்களவுகண்டு த்ரவ்யமுடையவர்கள் கையிலே அகப்பட்டுக்கட்டுண்டு.

---

அரு.—அஞ்சாம்பாட்டு. (சேஇத்யாதி) சேக்களைப் பூண்கைக்கு ப்ரமாண பூர்வகமாக ஹேதுவை யருளிச் செய்துகொண்டு சப்தார்த்தம் (வன்பாரவித்யாதி). (வலிக்கப்பட்ட) இழுக்கப்பட்ட. "சிதறி" என்றதுக்கு-குலையும்படி உதைத்தென்றருளிச் செய்வதற்கு ஹேதுவை யருளிச்செய்கிறார் (அஸுரேத்யாதி).

"நெய்க்காசைப்பட்டுத் திருடி ஆப்புண்டு" என்றத்த்யாஹார பூர்வகமந்வயந்திருவுள்ளம்பற்றியர்த்தமருளுகிறார்(நெய்க்கித்யாதி).மேலேயசோதையாலே கட்டுண்டபடி சொல்லுகையாலே (த்ரவ்யமுடையவர்கள்கையிலே) என்றது.

---

(க) பெரி-தி-௩-க-உ.

இவன் கழுத்திலே கட்டிக்கொண்டு வாருங்கோள்" என்று இவள் போர வெறுத்து, "நீங்களுமெல்லாம் இவனையொக்கும் பிள்ளைகளைப்பெற்று வளர்க்கிறிகோளிறே" என்று இவள் சொன்ன வார்த்தையைக்கேட்டுப்போய் ஒற்றியிருந்து, இவன்நெய்க்காசைப் பட்டுக் களவிலே வந்தமுதுசெய்கிறவளவிலே கண்டுபிடித்து, இவர்கள் இடைச்சிகளாகையாலே யசோதை சொல்லிவிட்ட வார்த்தையின் கருத்தறியாமல், ராஜபுத்ரனென்னும் மதியாமல், இவனைப் பாத்ரத்தோடேகட்டி "கள்ளனைக்கண்டோம்" என்று ஊரிலே வார்த்தையாக்கி, இவனாலே புண்பட்ட பெண்கள் பண்ணின பாக்யத்தாலே "இவன் முகத்திலே விழிக்கப்பெற்றோம்" என்னும்படி தெருவிலே கொண்டுவந்து யசோதைக்குக் காட்டினவளவிலும் இவள் இவர்கள்முன்னே இவனை ஒரு கடைத்தாம்பை எடுத்து "நந்தன் மனைவி, பிள்ளைவளர்த்தபடிஎன்" என்று கோபியா துள்ளித் துடிக்கத்துடிக்க அவர்கள்காணவடித்து, உரலோடேகட்டி

(நந்தன்மனைவி யித்யாதி) "என் பிள்ளையைக் களவேற்றாதே, உண்டாகில் கெண்டியோடே கண்டுபிடித்துக் கட்டிக்கொண்டு வாருங்கோள்"என்றுமுன்பேசொல்லிவைக்கையாலே, தாயாரான தன்முன்னே அவர்கள் கட்டோடே கொண்டுவர, நந்தன்மனைவி, பிள்ளை பெற்று வளர்த்தபடி அழகிதாயிருந்தது" என்று தன்னைத்தானே மோதிக்கொண்டு, அவர்கள் முன்னே தன்னழற்றியெல்லாம் தோற்றும்படி, கடைகயிற்றாலே அடிக்கையாலே துள்ளித் துடிக்கத் துடிக்க அடியுண்டு. (அன்றித்யாதி). அடித்தவளவன்றிக்கே, ஓரிடத்தில் போகாதபடி அவள் பிடித்துக்கட்ட, அப்

ப்ரதாநனான நந்தனுடையபிள்ளையை ஊரார் கட்டிக்கொண்டு வரக்கூடுமோ வென்கிற சங்கையைப் பரிஹரியாநின்றுகொண்டு, யசோதை அடிக்கைக்கு ஹேதுவை யருளிச்செய்கிறார் (என்பிள்ளையித்யாதி). அவர்களே கட்டிக் கொண்டு வந்திருக்கத்தானும் அடிக்கவேணுமோவென்ன வருளுகிறார் (நந்தனித்யாதி). "மனைவி" க்ருஹிணி. யசோதை என்னாதே "நந்தன்மனைவி" என்றதால் சலிப்பு பலிதமென்று திருவுள்ளம். "நந்தன் மனைவியினுடைய கடைகிற தாம்பால் துள்ளித் துடிக்கத் துடிக்க சோப்பூண்டு" என்றந்வயம் கண்டுகொள்வது. "அன்று" என்றதுக்கநுகுணமாக "இன்று" என்றுஅத்

மூ.—செப்பிளமென்முலைத் தேவகிநங்கைக்குச்
சொப்படத்தோன்றித் தொறுப்பாடியோம்வைத்த
துப்பமும்பாலும் தயிரும்விழுங்கிய [றான்.
அப்பன்வந்தப்பூச்சிகாட்டுகின்றானம்மனேயப்பூச்சிகாட்டுகின்

"உங்கள் தமப்பனார் காணும்படி, அவர் வருமளவும்பதையாமலிரு" என்ன, இருந்தவன் அங்கேஇராமல் இங்கேயிருந்து அப்பூச்சிகாட்டு கின்றான். ஆப்பூண்கை-கட்டுண்கை. "நெய் திருடினதுக்கு ஆப் பூண்டு"என்று பதாந்வயம். .... .... .... (௫)

அவ;—ஆறும்பாட்டு. (செப்பித்யாதி) ஸர்வரக்ஷகனானவன் வந்தப்பூச்சி காட்டுகின்றானென்கிறார்.

ஸ்வா;—இப்போது இவள் முலையைவர்ணிக்கிறது அவன் அமுது செய்தமுலையாகையாலே. "செப்பு"என்று-உபமாநமாக்கிமுதுமுலைப்பாலில் வீர்யமில்லாமையாலே பிள்ளைக்கு தாரகாதிகளாகவேணு மென்று "இளமுலை" என்கிறார். அவன் முலைபிடித்தமுது செய்த போது நைந்து குழைந்திருக்கையாலே "மென்முலை" என்கிறார். (தேவகிநங்கைக்கு) (க) "ஒழுகுபேரெழில்"என்று முலைகொடுக்கப் பெறாமல்இழவுபடா நிற்கச்செய்தேயும் (உ) "எல்லாம்தெய்வநங்கை யசோதை பெற்றாளே" என்று, அவள்பேறு தன்பேறாக அநுஸந் திக்கவல்ல குணபூர்த்தியாலே "தேவகிநங்கை"என்கிறாராதல்;

போது கட்டுண்டிருந்தவன் இன்று அப்பூச்சிக் காட்டுகின்றான். "சோப்புண்டு, ஆப்புண்டு" என்கிறவிவை நீட்டிச் சொல்லிக்கிடக் கிறது. .... .... .... .... .... (௫)

வ்யா.—ஆறும்பாட்டு. (செப்பித்யாதி) செப்புப்போலே யிருக்கிற ஸந்நிவேஶத்தையுடைத்தாய், இளகிப்பதித்து ம்ருது வாயிருக்கிற முலைகளை யுடையளாய், ஆத்மகுணபூர்ணையான தேவ கிப்பிராட்டிக்கு. இப்போது இவளுடையமுலைகளைவர்ணிக்கிறது-க்ருஷ்ணன் பிடித்து அமுதுசெய்கைக்கு யோக்யமான முலைகளை

த்யாஹரித்தருளுகிறார் (இன்றப்பூச்சியித்யாதி). "சோப்பு"-அடி. "ஆப்பு" ப(ப)ந்தம். 'ஊண்டு'' என்று - உகாரம் நீட்டிக்கிடக்கிறதென்றபடி. (௫)

அரு.—ஆறும்பாட்டு. (செப்பிளவித்யாதி) "செப்பிளமென்முலைநங்கை யான தேவகி" என்றந்வயித்து அர்த்தம் (செப்புப்போலேயித்யாதி).நாயிகா நாயகப்ரகரணமல்லாமையாலே "செப்பிளமென்முலை" என்றதுக்கு ப்ரயோஜநமென்னென்ன வருளுகிறார் (இப்போதித்யாதி). ஆனால் அவள் முலை

(க) பெரு-தி-எ-எ. (உ) பெரு-எ-௫.

“தேவகிநங்கைக்குச் சொப்படத்தோன்றி” என்கையாலே - அவன் அவதரிக்கிறபோது ஸர்வஸ்மாத்பரத்வம்தோன்ற நாலு திருத்தோள்களோடும் திவ்யாயுதங்களோடும் அவதரிக்கக்கண்டு, “நாயன்தே! நாங்கள் கம்ஸன் கோபுரநிழல்கீழே இருக்கிறோம்” ‘பூஸுரர்ருஷிகள், தேவர்கள்’ என்கிறசப்தமும் கூடப்பொறுதவன் உம்மைஇப்படிக்காணில்விடான் அறுவரிலும்எழுவராவரிலும்காட்டில் ‘எப்போதோ’ என்று கறுவிப்பார்த்துக்கொண்டிருக்கிறான். இந்தவடிவையும் உபஸம்ஹரித்து, ப்ராப்தமான குழந்தை வடிவையும்,என்னருகுகிடவாமல் ஏதேனுமொருப்ரகாரங்களிலேமறைத்தருளவேணும்” என்று இவள்ப்ரார்த்தித்த படியாலே, இத்தையும் பிறந்தாளையும் விகல்பித்து மறைத்ததை தம்பேறாக்கி மங்களாசாஸநத்திலே கூட்டிக்கொண்டு “நங்கை” என்கிறாராதல்.

(சொப்பட) நன்றாக. தன்படிகளொன்றும் நழுவாமல் தோன்றி என்றபடி. (க)“ஆதியஞ்சோதியுருவை”-மாத்ருவசந பரிபாலநார்த்தமாகவிறே மறைத்துப் போந்ததும்.

---

ன்று தோற்றுகைக்காக. கம்ஸபீதியாலே அவனை ஸ்தலாந்தரத்திலே போகவிட்டவித்தனையிறே உள்ளது. (நங்கை) என்கிறது மேல் விளைவதறியவல்லஅறிவும்,பிள்ளையை அவஸ்த்தாநுகுணமாக நோக்கவல்ல ப்ரேமமும், பரஸம்ருத்திபரதையும் முதலான குணங்களை யுடையவளாகையாலே.

(சொப்படத்தோன்றி) நன்றாகத்தோன்றி. அதாவது-“ஸர்வேஶ்வரனைப் பிள்ளையாகப்பெறவேணும்” என்றுநோன்பு நோற்றதுக்கீடாக, (உ) “ జాతోఽసి దేవదేవేశ శఙ్ఖచక్రగదాధర - ஜாதோஸிதேவதேவேஶசங்சசக்ரகதாதர”என்கிறபடியேஸர்வேஶ்வரத்வசிஹ்நங்களான திவ்யாயுதங்களோடேவந்து பிறந்து. (௩)“సఫలం దేవి సఞ్జాతం

---

யை க்ருஷ்ணனுண்டாளோ?இல்லையே; யோக்யமானபடிஎன்னென்னவருளுகிறார் (கம்ஸேத்யாதி). * நங்கை சப்தவிவக்ஷிதமான குணங்களேதென்ன வருளுகிறார் (நங்கையித்யாதி).

(ஈடாக) என்றதுக்கு, (அவளுடைய அபேக்ஷித ஸம்விதாநம் பண்ணுகை) என்றத்தோடந்வயம். (ஸபலம்தேவி) என்றதுக்கு - பூர்வார்த்தம் “స్తుతోఽహం యత్త్వయా పూర్వం పుత్రార్థిన్యా తదద్య తే-ஸ்துதோஹம் யத்த்வயா பூர்வம் புத்ரார்த்திந்யாததத்யதே” என்று. (கர்ப்பவாஸாதி தோஷமற)

---

(க) தி-வாய்-௩-௫-௫. (உ) வி-பு-௫-௩-௧௦.(௩) வி-பு-௫-௩-௧௪.

(தொறுப்பாடி) தொறு - பசு, தொறுவர் - இடையரும், இடைச்சிகளும். பாடி- அவர்களூர். "தொறுப்பாடியோம்" என்றது - நாங்கள் என்றபடி. நெய்யும்பாலும் தயிரும் விழுங்கிய அப்பன் - உபகாரகன். "இப்படிவிழுங்கி வாழ்வித்தவன்" என்று க்ஷேபமாகவுமாம். .... .... .... .... (சு)

அவ;—ஏழாம்பாட்டு. கோளரியான மிடுக்குத்தோன்ற அப்பூச்சி காட்டுகின்றானென்கிறார்.

---

ஜாதோ௨ஹம் யத்தவோதராத் - ஸபலம்தேவி ஸஞ்ஜாதம் ஜாதோஹம் யத்தவோதராத்" என்று அவளுடைய அபேக்ஷிதஸம்விதாநம் பண்ணுகை. "பிறந்து" என்னுதே "தோன்றி" என்றது, (க) "தேவகீ பூர்வஸந்த்யாயாமாவிர்ப்பூதம் - தேவகீ பூர்வஸந்த்யாயா மாவிர்ப்பூதம்" என்கிறபடியே கர்ப்பவாஸாதிதோஷமற ஆவிர்ப்பவித்தமையைப் பற்ற. (உ) "நைஷ கர்ப்பத்வமாபேதே நயோந்யாமவஸத்ப்ரபு: - நைஷகர்ப்பத்வமாபேதே நயோந்யா மவஸத்ப்ரபு:" என்னக்கடவதிறே.

(தொறுப்பாடியோம்) (தொறு) பசு. தொறுவர் - ஆயர். (தொறுப்பாடியோம்) என்றது - ஆய்ப்பாடியிலுள்ளோமான நாங்களென்றபடி. (வைத்த) சேமித்துவைத்த. (துப்பமித்யாதி). துப்பம் - நெய். நெய்யையும் பாலையும் தயிரையும்அமுதுசெய்த. எல்லாவற்றையும்சொல்லி, "விழுங்கின" என்கையாலே "துப்பமும் பாலும்" என்கிற விடத்தில், துஞ்சிய நெய்யும், காய்ந்த பாலும் விவக்ஷிதம். அன்றிக்கே, "விழுங்கிய" என்கிறவிது- அமுதுசெய்கிறதுக்குப் பர்யாயமான சொல்லாய், த்ரவ்யாநுகுணமாகக்கொள்ளவுமாம். (அப்பன்) உபகாரகன். இவ்வோத்ரவ்யங்களை விரும்பி அமுதுசெய்த உபகாரந்தன்னைச் சொல்லுகிறது. (வந்தப்பூச்சி காட்டுகின்றான்). .... .... .... .... .... (சு)

---

என்றதுக்கு ஸப்ததஃ ஸ்பஷ்டமான ப்ரமாணமருளுகிறார் (நைஷஇத்யாதி).

"தொறு" என்றுலக்ஷணயாஆயரைச்சொல்லிற்றென்று, முக்யார்த்த கதநமுகேந சப்தார்த்தமருளுகிறார் (தொறுவித்யாதி). (துஞ்சிய நெய்) கஸீபூதமான நெய். (காய்ந்தபால்) திரட்டுப்பால். ... ... (சு)

---

(க) வி-பு-ரு-ரு-உ.   (உ) பார-ஸபா-சுஉ-ரு.

ஏழ்.—தத்துக்கொண்டாள்கொலோ தானேபெற்றாள்கொலோ
சித்தமனையாளசோதை யிளஞ்சிங்கம்
கொத்தார்கருங்குழற் கோபாலகோளரி   [கின்றான்.
அத்தன்வந்தப்பூச்சிகாட்டுகின்றா னம்மனே யப்பூச்சிகாட்டு

ஸ்வா;—(தத்தித்யாதி). "அசோதை இளஞ்சிங்கம்" என்ன, இவள் த(த்)த்தஸ்வீகாரம் செய்யக்கண்டிலோம்; (தானே பெற்றாள் கொலோ) இவள் பெறுகிறபோது இவளைப்பார்த்துப் பேணிக் கொண்டிருந்த நாமெல்லாம் இவள் பெறக்கண்டிலோம். அயர்த் துறங்கிவிட்டோம். இவள்தான் "நான் பெற்றேன்" என்று சொல்

வ்யா.—ஏழாம்பாட்டு. (தத்தித்யாதி) த(த்)த்த புத்ர னாக வளர்த்துக்கொண்டாளோ: அன்றியே, தானே மெய் நொந்து பெற்றாளோ?. அதாவது- "அசோதையிளஞ்சிங்கம்"என்ன; இவள் த(த்)த்தஸ்வீகாரம் செய்யக்கண்டிலோம்; இவள் பெறுகிறபோது இவளைப்பார்த்துப் பேணிக்கொண்டிருந்த நாமெல்லாம், இவள் பெறக்கண்டிலோம்;அயர்த்துறங்கிவிட்டோமே; இவள்தான்"நான் பெற்றேன்" என்று சொல்லக்கேட்டோமித்தனையிறே. (க)"దదర్శచ ప్రబుద్ధా సా యశోదా జాతమాత్మజమ్- ததர்ஶச ப்ரபுத்தாஸாயசோதா

அரு.—ஏழாம்பாட்டு (தத்தித்யாதி) பந்துக்கள் அறியாமல் தத்துக் கொள்ளுகையும் பெறுகையும் கூடாமையாலே, இவர்கள் இப்படி ஸம்ஶ யிக்கக்கூடுமோவென்ன அத்தை உபபாதிக்கிறார் (அதாவதித்யாதி). (இளம் சிங்கமென்ன) என்றது - இளம் சிங்கமென்கைக்கென்றபடி. த(த்)த்த ஸ்வீகாரம் காணாமைக்கும் பெறக்காணாமைக்கும் ஹேதுவை யருளிச்செய்கி றார் (அயர்த்துறங்கி விட்டோம்) என்று. (அயர்த்து) பேணிக்கொண்டிருக் கை தவிர்ந்து. நீங்கள் இவ்விரண்டும் அறிந்திலிகோளாகில் "அசோதை யிளம்சிங்கம்" என்கைக்கு அடியேதென்ன வருளுகிறார் (இவளித்யாதி). (கேட்டோமித்தனையிறே) என்றவநந்தரம், " என்று தாங்கள் உறங்குகை யாலே ஸம்ஶயிக்கிறார்களென்றபடி" என்று கூட்டுவது. யசோதை "பெற் றோம்" என்றால், அத்தைக்கொண்டே நிஶ்சயிக்கலாகாதோவென்ன, அவ ளும் மோஹிக்கையாலே மெய்க்கொள்ளப்போகாதென்று திருவுள்ளம்பற்றி, அதுக்கு ப்ரமாணத்தையும் காட்டிக்கொண்டு, அந்த ப்ரமாணார்த்தத்தையு மருளிச்செய்கிறார் (ததர்ஶேத்யாதி). தத்துக்கொண்டதும்-தானே பெற்ற

(க) வி-பு-டு-ங-உஉ.

லக்கேட்டோமித்தனையிறே. தத்தஸ்வீகாரம் முன்னாகவும் ஔர ஸம்பின்னாகவும் இவர்கள்சொன்ன வடைவை * வேதப்பயன் கொள்ளவல்ல இவர் அங்கீகரிக்கையாலும், ஔரஸம்முன்னை வடைவே தர்மஶாஸ்த்ராதி ப்ரவர்த்தகர் அங்கீகரிக்கையாலும் இரண்டும் உத்தேஶ்யமாக வேண்டிவரிலும், அது இதிலே சேருமத் தனைபோக்கி, இது அதில் சேர்க்கை போர அரிதிறே.

அரிதானபடி யென்னென்னில்; அவர்கள்இத்தை முஹூர்த்த விசேஷதோஷத்தாலே அந்யபரமாக்குகையாலும், இதில் அத் தோஷங்கள் ஒன்றுமில்லாமையாலும், பித்ராதிகளால் வந்த தோஷ மொழிய கர்பாதாநத்தில் கேவல மோஹஜாதத்வபரிஹாரம் ஔர ஸனுக்கும் வேண்டுகையாலும், ஸங்கரஜாதத்வாதிள் தரிக்க வேண்டுகையாலும், உக்த லக்ஷணத்திலே இவை பரிஹரியாத போது இந்த மாதாபிதாக்களுக்கும் இந்த வாஸனையாலே அநா சார துராசாரங்கள்மேலும் ப்ரவ்ருத்தமாகாமல் அநுதபித்து ப்ராயஶ்சித்தம் பண்ணவேண்டுகையாலும், அல்லாதபோது அநு

ஜாதமாத்மஜம்'' என்கிறபடியே, அவளும் பெற்று மோஹித் துக்கிடந்து உணர்ந்த பின்பிறே இவனைக்கண்டது. இப்படிதான் சொல்லுகிறது அதிலோகமான இவனுடைய ரூபகுணசேஷ்டி தங்களைக்கண்டால், "இவள்பிள்ளை'' என்று சொல்லப்போகாதபடி யிருக்கையாலே. அவள்தானும், (க)"இம்மாயம் வல்ல பிள்ளைநம்பி யுன்னை யென்மகனே யென்பர்நின்றார் '' என்று-இவனுடைய அதி மாநுஷ சேஷ்டிதங்களைக்கண்டால், நீ என்னுடைய பிள்ளையாகக் கூடாது, நடுநின்றவர்கள் உன்னை என்னுடைய பிள்ளை என்றே சொல்லாநின்றார்கள் என்னும்படியாயிறே யிருப்பது.

தும் தாங்கள்காணவிட்டால், அசோதைவார்த்தையையும் மேல்கொள்ளாதே ஸம்ஶயிக்கைக்கு நிதாநமென்னென்கிற சங்கையிலே அருளிச்செய்கிறார் ( இப்படிதானித்யாதி ). இப்படி அதிமாநுஷ சேஷ்டிதத்தைக்கண்டு ஸம் ஶயித்தவர்களுண்டோவென்ன வருளுகிறார்(அவள் தானுமித்யாதி). "தாய்க்கே இப்படியானால் இவர்களுக்குச் சொல்ல வேண்டாவிறே'' என்று இவ் வாக்யத்துக்குத் தாத்பர்யம். எடுத்த பாசுரத்துக்கர்த்தம் ( இவனுடைய வித்யாதி).

(க) பெரி-தி-௩-க-௩.

மூ.—அப்பங்கலந்த சிற்றுண்டி யக்காரம் பாலில்கலந்து
சொப்படநான் சுட்டுவைத்தேன் தின்னலுறுதியேல்நம்பி!
செப்பிள மென்முலையார்கள் சிறுபுறம்பேசிச் சிரிப்பர்
சொப்பட நீராடவேண்டும் சோத்தம்பிரானிங்கேவாராய்.

---

மணிதமான சாந்தும், உன்நிறம்போலே யிருக்கிற அஞ்ஜநமும் மற்றும் வேண்டு முபகரணங்களும் கொண்டுவந்து வைத்தேன். இவையெல்லாம் மிகையாம்படியான வடிவழகை யுடையவனே! நீராடவாராய். .... .... .... .... .... (௪)

வ்யா;—அஞ்சாம்பாட்டு. (அப்பமித்யாதி) நான் சிற்றுண்டியோடே சொப்பட வப்பம் சுட்டுப்பாலில் அக்காரம் கலந்துவை

---

ஆறிக்குளிர்ந்து மணத்திருக்கிற சாந்தும், உன்னுடைய திருக்கண்களுக்குச் சாத்துகைக்கீடான அஞ்ஜநமும் கொண்டு வந்து வைத்தேன். (அழகனே நீராடவாராய்) இவையெல்லாம் மிகையாம்படியான வழகையுடையவனே! உன்னழகு தோன்றும்படி திருமஞ்ஜநம் செய்ய வரவேணும். .... .... .... (௪)

வ்யா.—ஐந்தாம்பாட்டு. (அப்பமித்யாதி) அப்பத்தையும் அத்தோடே சேர்ந்த சிற்றுண்டியாகிற அபூப விசேஷத்தையும். (அக்காரம் பாலில்கலந்து) மாவிலே கருப்புக் கட்டியையிட்டுப்

---

சொல்லுகிறது. இத்தை "பார்ஷிங்கம்" என்று சொல்வர்கள்; இங்கே செங்கழுநீர் பூவாலே செய்ததென்று கருத்து. "நாறு" என்றது - குளிர்த்திக்கு முபலக்ஷணமாய், (க) "குங்குமமப்பிக்குளிர் சாந்தம் மட்டித்து" என்ற பாசுரத்தை உட்கொண்டருளிச்செய்கிறார் (ஆறியித்யாதி). "ஆறி" என்றது-சந்தநம் சேர்க்கும்போதுண்டானவெதுப்பு ஆற என்றபடி. (உன்னழகு தோன்றும்படி) என்றது வந்தேறியான புழுதி முதலானவை போய் ஸ்வாபாவிகமான உன்னழகு தோன்றும்படி யென்கை. ... ... (௪)

அரு;-அஞ்சாம்பாட்டு. (அப்பமித்யாதி) "அக்காரம் பாலில்கலந்து அப்பம் கலந்த சிற்றுண்டி சொப்பட நான் சுட்டுவைத்தேன்" என்றந்வயம் திருவுள்ளம்பற்றி, யதாக்ரமமாகச்சப்தார்த்தமருளுகிறார் (அப்பத்தையுமித்யாதி). "அப்பத்தையும் சிற்றுண்டியையும் சுட்டுவைத்தேன்" என்றபோது மாவில்லாமல் கூடாமையாலே, (மாவிலே) என்றது அர்த்தஸித்தம். (கருப்புக்கட்டி)

---

(க) நா-தி-கூ-௧0.

த்தேன். (சொப்பட) நன்றாக. (தின்னலுறுதியேல்) அமுதுசெ ய்யவேணுமென்று அதிலே உற்றிருந்தாயாகில். உறுதல் - விரும் புதல். நம்பீ - பூர்ணனே!

செப்பிளமென் முலையார்கள் சிறுபுறம் பேசிச் சிரிக்கையால் வந்த பூர்த்தியையுடையவனே! (சிறுபுறம்) ஸ்நேஹாதிசயத்தால் தோற்றின புன்மைகளைச் சொல்லுகை. (சொப்பட நீராடவேண் டும்) எல்லாத்தாலும் நன்றாக நீராடவேணும். (சோத்தம்பிரான்) பிரானே! உன்னை ஸ்தோத்ரம் செய்கிறேன். .... .... (ரு)

---

பாலை வார்த்துப் பிசைந்து. (சொப்படவித்யாதி) நன்றாக நான் சுட்டுவைத்தேன். (சொப்பட) நன்றாக. (தின்னலுறுதியேல் நம்பி) பிள்ளைத்தனத்தில் பூர்த்தியை யுடையவனே! அமுதுசெய்யவேணு மென்றுஅதிலே உற்றிருந்தாயாகில், நீராடவேண்டுமென்றுமேலே அந்வயம்.

(செப்பிளமென் முலையார்கள்) செப்புப்போலே யிருக்கிற ஸந் நிவேசத்தையுடைத்தாய் இளையதாய் ம்ருதுவாயிருக்கிற முலையை யுடையவர்கள். (சிறுபுறம் பேசிச்சிரிப்பர்) நீ நீராடாமலிருக்கிற வடிவைக்கண்டால் தோற்றின புன்மைகளைக் காணாதவிடங்களிலே சொல்லிச் சிரியாநிற்பர்கள். சிறுமை-புன்மை. புறம்பேசுகையா வது-காணாதவிடத்தே சொல்லுகை. (சொப்பட நீராடவேண்டும்) அதுக்கிடம்அறும்படியாகவும் நன்றாகநீராடவேணுமென்ன; அவ்வள விலும் அவன்வாராமையாலே, (சோத்தம்பிரானிங்கேவாராய்) பிரானே! உன்னைத்தொழுகிறேன், நீ இங்கே வாராயென்றுஅழைக் கிறாள். .... .... .... .... (ரு)

---

வெல்லம். (பிள்ளைத்தனத்தில்) சிறுபிள்ளைத்தனத்தில். அதாவது - "அப் பம்தா," "அம்மம்தா" என்று தாய்மாரைக்கேட்டுக்கொண்டேயிருக்கை. (உற்றிருந்தாயாகில்)மிகவுமாசையுண்டாயிருந்தாயாகில். "நீராடவேண்டும்" என்கிற க்ரியையை அங்கே அநுஷங்கித்துக்கொள்வதென்று திருவுள்ளம் பற்றி அந்வயம் காட்டுகிறார் (நீராடவேண்டுமித்யாதி). நீராடாதே போனால் நான் தருகிறதில்லை யென்று கருத்து.

(தோற்றின புன்மைகளை) என்றது - திருமேனியில் காணப்படுகிற புழு திமுதலான பொல்லாங்குகளை என்றபடி. "சிரிப்பர்" என்றவநந்தரம், "அதுக்கு இடமறும்படியாகவும்" என்றத்யாஹரித்து அர்த்தமருளுகிறார் (அதுக்கித்யாதி).

மூ.—எண்ணெய்க்குடத்தையுருட்டி யிளம்பிள்ளை கிள்ளியெழுப்பிக்
கண்ணைப்புரட்டி விழித்துக் கழகண்டு செய்யும்பிரானே!
உண்ணக்கனிகள்தருவ னொலிகடலோத நீர்போலே
வண்ணமழகியநம்பீ மஞ்சனமாட நீ வாராய். (கூ)

ஸ்வா;-ஆரும்பாட்டு. (எண்ணெயித்யாதி) க்ருஹத்திலுள்ளா ரெல்லாரும் அந்யபரராம்படியாக, எண்ணெய்க்குடத்தை யுருட்டி உறங்குகிற சிறுப்பிள்ளையைக் கிள்ளியெழுப்பி. (கண்ணைப் புரட்டி விழித்து) சிறு பிள்ளைகள் "பூச்சி" என்று பயப்படும்படியாகக் கண்ணை மாறவிழித்து; இந்த ஆரவாரத்திலே தனக்கு வேண்டிற்றுச் செய்யலாமிறே. இதுவே யாத்ரையாக நடத்தவல்ல ஸாமர்த்த்யத்தையுடைய தீம்பனே!

வ்யா.—ஆரும்பாட்டு. (எண்ணெயித்யாதி) அகத்திலுள்ளா ரெல்லாரும் அந்யபரராம்படியாக எண்ணெய்க்குடத்தை யுருட்டி. அத்தை இறைப்பார் வழிப்பாராய்க்கொண்டு வ்யாகுலப்படாநிற்கச் செய்தே; (இளம்பிள்ளை கிள்ளியெழுப்பி) அத்தைவிட்டிங்கே யோடிவரவேண்டும்படி-கிடந்துறங்குகிற சிறுப்பிள்ளையைத் தேளெறிந்தாப்போலே வீரிட்டுக்கூப்பிடும்படியாகக் கிள்ளியெழுப்பி. (கண்ணைப்புரட்டி விழித்து) அருகுநின்றவர்கள் முகத்திலே "அப்பூச்சி" என்று கண்ணினிமையை அகவாய் புறவாயாகப் புரட்டி விழித்து. (கழகண்டு செய்யும் பிரானே) இப்படி துஸ்

அரு;—ஆரும்பாட்டு. (எண்ணெயித்யாதி) எண்ணெய்க்குடத்தை உருட்டுகைக்கு ப்ரயோஜநம், தாய் முதலானார் பிள்ளைகளருகிருந்தால் கிள்ளியெழுப்பக்கூடாமையால், அவர்களெல்லாரும் அந்யபரராகை யென்று திருவுள்ளம்பற்றித் தாத்பர்யமருளுகிறார் (அகத்திலித்யாதி). அந்யபாத்ரதையை உபபாதித்துக்கொண்டு மேல்பதத்துக்கு ஸங்கதியைக் காட்டுகிறார் (அத்தையித்யாதி). கிள்ளியெழுப்பினது மிகவும் தீம்பான ப்ரகாரத்தை ஸத்ருஷ்டாந்தமாக உபபாதிக்கிறார் (அத்தைவிட்டித்யாதி). (தேளெறிந்தாப்போலே) என்றது-தேள்கொட்டினாப்போலே யென்றபடி. (அகவாய்ப் புறவாயாகப் புரட்டி) என்றது-உள்ளிமையை வெளியிலே தெரியும்படி பண்ணியென்கை. "பிரான்" என்றது-ஸ்வாமி வாசகமாய், "ஸ்வதந்த்ரனே" என்று ப்ரகரணாநுகுணமாக வர்த்தம் திருவுள்ளம்பற்றி, "கழகண்டு" என்றதுக் கர்த்தமருளுகிறார் (இப்படியித்யாதி). இப்படி இவன் தீம்புகளைச் சொல்லி ஸம்

மூ.—

கறந்தநற்பாலுந்தயிரும் கடைந்துறிமேல் வைத்தவெண்ணெய்
பிறந்ததுவே முதலாகப் பெற்றறியே னெம்பிரானே!
சிறந்தநற்றா யலர்தூற்று மென்பதனால் பிறர்முன்னே
மறந்து முரையாடமாட்டேன் மஞ்சனமாட நீ வாராய். (௭)

---

(உண்ணக்கனிகள் தருவன்) நீவிரும்பி அமுது செய்யும்படி நாவல்பழம் முதலான பழங்கள் தருவன். (ஒலிகடலோதநீர்போலே வண்ணமழகிய நம்பீ) உன் திருமேனி தோன்றுவது நீராடினால் காண். .... .... .... .... .... .... .... (சா)

ஸ்வா;—ஏழாம்பாட்டு. (கறந்தவித்யாதி) கறவாத பாலில்லை யிறே; என்-கையாலே நானே ஆயாஸித்துக்கறந்த நன்றானபாலும்.

---

ஸஹமான தீம்புகளைச் செய்யும் ஸ்வதந்த்ரனானவனே! ஒருத்தர் கையிலும் அடங்காதானா யிரானின்றாயே; ஆனாலும், நான் இப்போது சொல்லிற்றுச் செய்யவேணுங்காணென்று கருத்து.

(உண்ணக்கனிகள் தருவன்) நீ விரும்பி யமுது செய்யும்படி நாவல்பழம் முதலான பழங்களைத்தருவேன். (ஒலிகடலித்யாதி) கோஷிக்கிறகடலின் திரைக்கிளப்பத்தை யுடைத்தான ஜலம்போலே திருமேனியின் நிறமழகிய நம்பீ!. (மஞ்சனமாட நீ வாராய்) உன் திருமேனியில் அழகு தோன்றும்படி திருமஞ்சனமாட நீ வரவேணும். .... .... .... .... .... .... (சா)

வ்யா;—ஏழாம்பாட்டு. (கறந்தவித்யாதி) ப்ராப்தகாலங்களிலே கறந்தநல்லபாலும்; பாலுக்கு நன்மையாவது-நாழியும் உழக்கு

---

போதித்தால், “மஞ்சனமாடவாராய்” என்று அழைக்கக்கூடாதென்றதுக்கு அநுகுணமாகக் கருத்தருளுகிறார் (ஒருத்தரித்யாதி). தாயானவள் இப்படி ஸம்போதிக்கையாலே நான் இப்படி சொன்னத்தைச் செய்யவேணுமென்று பலிக்கிறதென்று திருவுள்ளம்.

“ஓத” என்றதினர்த்தம் (திரைக்கிளப்பம்) என்றது. (ஜலம் போலே) என்றது - ஜலத்தில் நிறம்போலே யென்றபடி. ... ... (சூ)

அரு;—ஏழாம்பாட்டு. (கறந்தவித்யாதி) பாலானபோதே கறக்கை ஸித்தமாயிருக்க, “கறந்து” என்று விசேஷித்ததுக்குத் தாத்பர்யமருளுகிறார் (ப்ராப்தேத்யாதி). இத்தால் ரஸாதிசயமுண்டென்று திருவுள்ளம். ரஸாதிசயம் சொல்லியிருக்க, இனி நன்மையாவதென்னென்ன வருளுகிறார் (நன்மையாவதித்யாதி). (நாழியும்) என்றது-நாழிப்பாலுமென்றபடி. “நாழி

நன்மையாவது-நாழியும் உழக்கு நெய் போருகை. (தயிரும்) அந்தப்பாலிலே உறைத்த தயிரும்; அது கடைந்து உறியிலே வைத்த வெண்ணெயும். நீ பிறந்தநாள் முதலாக நான்பெற்றறியேன்; பெறுகையாவது-நான் தர நீ அமுது செய்து ப்ரஸங்நனுவிறே நான் பெற்றதாவது. (எம்பிரானே) நீ கழநண்டாலே ஜீவிக்கும்போது அது இருவர்க்கும் பேறன்றே.

(சிறந்தவித்யாதி) "சிறந்ததாய்" என்றும், "நல்தாய்" என்றும் இரண்டிறே ராஜபுத்ரர்களுக்கு. நல்தாய்-பெற்றவள்; சிறந்ததாய்-வளர்த்தவள். இரண்டும் தானேயிறே. இவள் பிள்ளையை, "ஒளி மழுங்கும்" என்று பயப்பட்டு வளாப்பார் கையிலும் காட்டிக் கொடாளே, ஸ்நேஹாதிசயத்தாலே; இரண்டாகிலிறே, ஒருவர்க்கொருவர் பிள்ளை குணஹாநிகள் சொல்லி அலர் தூற்றுவது; இரண்டும் தானேயாகையாலே மாட்டேனென்கிறாள். (பிறர் முன்

---

நெய்போருகை. (தயிரும) அந்தப்பாலிலே யுறைத்த தயிரும். (கடைந்துறிமேல் வைத்தவெண்ணெய்) அப்படி யிருந்துள்ள தயிரைக்கடைந்து தாழியிலே சேர்த்து உறிமேலே வைத்த வெண்ணெயும். (பிறந்தித்யாதி) நீபிறந்தவன்று தொடங்கி, என்நாயனே! இவை நான் பெற்றறியேன்.

(சிறந்தவித்யாதி) † குற்றமுண்டானாலும் மறைக்கக்கடவ மிகவும் ஸ்நேஹியான தாயானவள் தான் பழிதூற்று நின்றுளென்று

---

யும்" என்ற ச(ஞ)காரத்தால்-லோகத்தில் நாழிப்பால் உழக்கு நெய்யாகை அரிதென்று திருவுள்ளம். பிள்ளை அமுதுசெய்தத்தை "பெற்றறியேன்" என்று க்லேசிக்கைக்கநுகுணமாக "நல்லபாலும்" என்ற ஸந்நிதியைக் கடாக்ஷித்துத் தாத்பர்யமருளுகிறார் (அந்தவித்யாதி). (பாலிலே உறைத்ததயிர்) என்றது-பாலிலேஉண்டாய், க(ஞ)நீபூதமான தயிரென்றபடி. "எம்பிரானே நீவாராய்" என்றநவபம் சொல்லலாயிருக்கச் செய்தேயும், "பெற்றறியேன்" என்றத்தைக் குற்றமாகக் கொள்ளாமைக்காக, "பிறந்ததுவே முதலாக எம்பெருமானே! கறந்த வித்யாதியைப் பெற்றறியேன்" என்றநவயித்தருளுகிறார் (நீயித்யாதி). இப்படி ஸ்துதி பூர்வகமாகச் சொன்னல் குற்றமாகக்கொள்ளானென்று திருவுள்ளம்.

"சிறந்த" என்று மிகுதியாய், "நல்" என்று - ஸ்நேஹமாய், "பெற்றறியேன்" என்றத்தையும் கடாக்ஷித்து அர்த்தமருளுகிறார் (குற்றமுண்டா

---

† (பா) சீற்றம்.

மூ;—கன்றினை வாலோலைகட்டிக் கனிகளுதிரவெறிந்து [ய்போலும்
பின்றொடர்ந்தோடியோர்பாம்பைப்பிடித்துக் கொண்டாட்டினா
நின்திறத்தேனல்லேன் நம்பீ! நீ பிறந்த திருநன்னாள்
நன்று நீ நீராடவேண்டும் நாரணாவோடாதேவாராய்

னை மறந்து முறையாட மாட்டேன்) பிறராகிறார் - உன்னுடைய
தோஷகுணஹாநிகளாலே காலக்ஷேபம் பண்ணுகிற மாத்ரமேயன்
றிக்கே, குணத்திலேயும் தோஷாரோபணம் செய்யவல்ல சிசுபாலாதி
களுமுண்டிறே லோகத்திலே; இவை மறந்து முறையாட மாட்
டேன். அபுத்தி பூர்வகமாகவும் வாய்விடமாட்டேன். .... (எ)

ஸ்வா;—எட்டாம்பாட்டு. (கன்றினையித்யாதி) சிலகன்றுக
ளின் வாலிலே ஓலையைக்கட்டி வெருட்டித்துள்ளுதல் பார்த்து,
சில கன்றுகளையெடுத்து விளங்கனியுதிர வெறிந்து, அதன் பின்னே
அத்விதீயமான காளியன்படத்திலே ஓடிச்சென்று குதித்துப்பிடித்

லோகம் சொல்லுமதைப்பற்ற அந்யருடைய முன்பு அபுத்திபூர்வ
கமாயும் வாய்விடமாட்டேன். (மஞ்சனமாட நீ வாராய்) இப்படி
உனக்கு ஸ்நேஹியானவெனக்குப்ரியமாக நீமஞ்சனமாடவரவேணும்.

வ்யா;—எட்டாம்பாட்டு. (கன்றினையித்யாதி கன்றுகள்மே
ய்க்கப்போனவிடத்தே வெருண்டு துள்ளியோடுமது காண்கைக்
காக ஒருகன்றின் வாலிலே ஓலையைக்கட்டி, உன்னை நலிகைக்காகக்
கன்றுகளின் நடுவே கலசிவந்து நின்றதோர் ஆஸுரமான கன்
றைக்குணிலாகக் கொண்டு, ஆஸுரமான விளாவினுடைய பழங்க
ள் உதிரவெறிந்து. (பின்னித்யாதி) அதுக்குப் பின்பாக வோடிச்

னாடுமித்யாதி). பாட்டெல்லாம் "மஞ்சனமாடவாராய்" என்கைக்கு
ஹேதுவைச்சொல்லுமென்னுமத்தை தர்ஶிப்பிக்கிறார் (இப்படியித்யாதி).(எ)

அரு;—எட்டாம்பாட்டு. (கன்றினையித்யாதி; வாலிலேஓலைகட்டுகைக்கு
ப்ரயோஜந பூர்வகம் சப்தார்த்தமருளுகிறார் ( கன்றுகளித்யாதி ). "கன்று
குணிலா" என்ற பாசுரத்தை உட்கொண்டு, "கன்று குணிலாக" என்றதை
இங்கேஅத்யாஹரித்து, "கனிகளுதிரவெறிந்து" என்றதுக்குச்சப்தார்த்தமரு
ளுகிறார் (உன்னையித்யாதி. "குணில்" என்றது - எறிகைக்கு ஸாதநமான
தடி கல் முதலானவற்றைச் சொல்லுகிறது. பின் தொடருகையன்றிக்கே,
ஓடுகைக்கு வேறில்லாமையால், "ஓடித்தொடர்ந்து" என்றந்வயித்து அர்த்த
மருளுகிறார் (அதுக்கித்யாதி). (அதுக்கு) பாம்புக்கு. "ஆட்டினாய்போலும்"

துக்கொண்டாட்டினையோ தான். அநுகூலரை வெருட்டியும், ப்ரதி கூலரை நிரஸித்தும், ப்ரதிகூல பயத்தாலே ஒதுங்கினரைத்துறத்தி ஓட்டிவிட்டும் செய்தாயோ தான். நீஇப்போது செய்கிற தீம்பால், அவையும் செய்தாயாக நான் கேட்டவையும் கூடுமிறே.

(நின்திறத்தேனல்லேன் நம்பி) உன்படிகள் எனக்குத் தெரிந் திருக்கிறதில்லை; அதுகிடக்கிடு. (நீபிறந்ததிருநன்னாள்) திரு-ஔப சாரிகம். அன்றிக்கே-திருநக்ஷத்ரமென்னவுமாம். நீ பிறவாதநா ளிறே பொல்லாதநாள். (நன்னாள்) மாதாபிதாக்களுக்கும் பந்துக்க ளுக்கும் லோகத்துக்கும் பொருந்தின நாளாகையாலே நன்னாளெ ன்கிறது. பொருந்தாத நாளிலே பிறந்தாருமுண்டிறே; உனக்குத் தானும் நன்றான நாளிறே. (நீ நீராடவேண்டும்) ஒருநாளும் நீரா

---

சென்று, ஒரு பாம்பைப் பிடித்துக்கொண்டு ஆட்டினையோதான். நீ இப்போது செய்கிற தீம்பால் அவையும் செய்தாயாக நான் கேட் டதுவுங்கூடுமிறே. "துடர்ந்து" என்றது-க($\times$)திவாசியாய், சென் றென்றபடி.

(நின்னித்யாதி) உன்படிகளெனக்கொன்றும் தெரிகிறதில்லை; அதுகிடக்கிடு. (நீ பிறந்த திருநன்னாள்) நீஅவதரித்தவிலக்ஷணமான திருநக்ஷத்ரங்காணின்று. (நன்று நீ நீராடவேண்டும்) நன்றாக நீ திருமஞ்சநம் செய்யவேணும். ஒரு நாளும் நீராடாதாரும் பிறந்த நாளில் நீராடாதாரில்லையிறே. (நாரணாவோடாதே வாராய்) ஸர்

---

என்றதினர்த்தம் (ஆட்டினையோதான்) என்றது; ஆட்டினையே என்றபடி. அதெங்ஙனேயென்ன வருளுகிறார் (நீ இப்போதித்யாதி). துடர்ச்சியே பின் போகையைச் சொல்லுகையால், "பின் துடர்ந்து" என்றால் பௌநருக்த்யம் வருமே என்ற சங்கையைப் பரிஹரிக்கிறார் (துடர்ந்தித்யாதி).

"நம்பீ" என்றதுக்கு - இந்தத்தீம்புகளால் பரிபூர்ணனே என்றர்த்தம் விவக்ஷித்து, அத்தை ஹேதுவாகத் திருவுள்ளம்பற்றி, "நின்திறத்தேனல் லேன்" என்றதுக்கு-உன்ப்ரகார விஷயகஜ்ஞாநமுடையவளல்லேன்" என்று லக்ஷணயா அர்த்தமருளுகிறார் (உன்படிகளித்யாதி)."நீபிறந்த நல்திருநாள்" என்றநவயித்து, "நீ பிறந்ததிருவோணம்" என்றத்தைக்கடாக்ஷித்து, "நாள்-திநம்" என்னாமல், நக்ஷத்ரமென்கிறார் (நீ யித்யாதி). திருமஞ்சநம் செய்கை யில் ஆவஶ்யகதை தோன்றுகையால், அதுக்கு ஹேதுவை அருளிச்செய்கிறார் (ஒருநாளுமித்யாதி). "நாரணா" என்றதுக்குத்தானும் நாரபதார்த்தமாகை

மூ.—பூணித்தொழுவினிற்புக்குப் புழுதியளைந்த பொன்மேனி
காணப்பெரிது முகப்ப ஞகிலுங்கண்டார் பழிப்பர்
நாணித்தனையுமிலாதாய்! நப்பின்னை காணிற்சிரிக்கும்
மாணிக்கமே! என்மணியே! மஞ்சனமாட நீவாராய். (கூ)

---

டாதாரும் தந்தாம் பிறந்தநாளில் நீராடாதாரில்லையிறே. (நாரணு)
ஸாதாரண பரிபாலநமும் வேணுங்காண். .... .... (அ)

ஸ்வா;—ஒன்பதாம்பாட்டு. (பூணியித்யாதி) நல்ல பசுக்கள் அடைத்துப்பூட்டித் திறந்துவிடும் தொழுவத்திலே புக்கு. (புழுதியளைந்த பொன்மேனி காணப்பெரிது முகப்பன்) அதாவது - நீராட்டிக்காண்பதிலும்முக்த(ஃ)பாவந்தோன்றுகையாலே,மிகவும்ப்ரிய

---

வாத்மாக்களோடும் ஒழிக்கவொழியாத ஸம்பந்தத்தையுடையவனே! என்னுடைய சொல்லை மறுத்து ஓடலாகாதுகாண், வாராய்.

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (பூணியித்யாதி) பசுக்களடைத்துத் திறந்துவிடும் தொழுவிலே புக்கு. ஜாத்யுசிதமாகத் தொழுக்களிலே புகுந்து விளையாடா நிற்குமிறே. (புழுதியளைந்த பொன்மேனி) பால்யாநுகுணமாகப் புழுதியை யிருந்தளைகையாலே, அது திருமேனியெங்கும் வ்யாப்தமாறும் பொன்னுக்குப் புழுதியேறினுப்போலே யிருக்கும்படியைப் பற்றச்சொல்லுகிறது. (காணப்பெரிதுமுகப்பன்) நீராட்டிக்காண்பதிலும் முக்த(ஃ) பாவம்

---

யாலே, தன்னோட்டை ஸம்பந்தத்தாலே தான் நீராடவேணுமென்று இத்தை ஸஹேதுகமாக வருளுகிறுர் (ஸர்வேத்யாதி). ... .. (அ)

அரு;—ஒன்பதாம்பாட்டு. (பூணியித்யாதி) "பூணி" என்று-பசுக்களாய், "தொழு" என்று - கோ(ஃ)ஷ்ட்டமாய், அந்தப்பசுக்களிருக்கும்போது புக்குப்புழுதியளையக் கூடாமையால், அதுக்கநுகுணயாக வர்த்தமருளுகிறுர் (பசுக்களித்யாதி). வீதியிலே விளையாடலாயிருக்க, தொழத்தில் ப்ரவேசிப்பானென் னென்னவருளுகிறுர் (ஜாத்யுசிதமாகவித்யாதி). புழுதியேறின திருமேனியை, "பொன்மேனி" என்று அழகுதோற்றச்சொல்லப்போமோவென்னவருளுகிறுர் (பால்யேத்யாதி).(க) "𑌰𑌮𑍍𑌯𑌾𑌣𑌾𑌂 𑌵𑌿𑌕𑍃𑌤𑌿𑌰𑌪𑌿 𑌶𑍍𑌰𑌿𑌯𑌂 𑌤𑌨𑍋-" ரம்யாணும் விக்ருதிரபி ஶ்ரியம் தநோதி" என்ற நின்றதென்று கருத்து. காணும்போது உகப்பில் பெருமை - எத்தைக் காட்டிலுமென்ன, அந்த அவதியைக் காட்டாநின்றுகொண்டு ஹேதுபூர்வகமர்த்த மருளுகிறுர் (நீராட்டியித்யாதி).(முக்த (ஃ) பாவம்)என்றது-ஸௌந்தரத்வமாதல்; மூடத்வமாதல்.

ப்படுவன். (ஆகிலும் கண்டார் பழிப்பர்) உன்னைக்கண்டார் "ஒருத்
திபிள்ளை பெற்றுவளர்த்தபடியென்?" என்று ஏசுவர்கள்.

(நாணித்தனையு மில்லாதாய் நப்பின்னை காணில் சிரிக்கும்)
மைத்துன்மையாலே உன்னைக்காணில் நப்பின்னை சிரிக்கும். "காணில்"
என்றது - "அவள் காண்பதுக்கு முன்னே வந்து கொள்ளாய்,
வந்துகொள்ளாய்" என்ன; வாராதே, "எனக்கு அது தானல்லோ வே
ண்டுவது" என்ன; (நாணித்தனையு மிலாதாய்) என்ன நிர்லஜ்ஜனோ
நீ. (இத்தனை) அல்பமென்றபடி. (மாணிக்கமே) மாணிக்கம்போலே
விரும்பப்பட்டவனே? என்னு; அது போராமையாலே "என் மணி
யே" என்கிறாளாதல்; அன்றிக்கே; மாணிக்கத்திலும் முத்திலும் ஏறின

---

தோற்றுகையாலே, இப்படி யிருக்கிற உன் திருமேனியைக் காண்
கைக்குமிகவும் விரும்பியிருப்பன். (ஆகிலும் கண்டார் பழிப்பர்)
நான் உகந்திருந்தாலும் உன்னைக்கண்டவர்கள் "ஒருத்தி பிள்ளை
பெற்று வளர்த்தபடியென்!" என்று ஏசுவர்கள்.

(நாணித்தனையுமிலாதாய்) ஏகதேசமும் லஜ்ஜையில்லாதவ
னே! (நப்பின்னை காணிற் சிரிக்கும்) நீ புழுதியும் உடம்புமாயிருக்கி
றபடியை நப்பின்னை காணுமாகில் மைத்துனமையாலே சிரிக்கும்.
நாட்டார் பழிக்கு அஞ்சுகிறமாத்ரமோ, நப்பின்னை சிரிப்புக்கு லஜ்
ஜிக்கவேண்டாவோ? நீ அது செய்யாதொழிகிறது - நிர்லஜ்ஜனு
கையாலிறேயென்று கருத்து. (மாணிக்கமே யென்மணியே) வடி
வழகுக்கு ஒன்றும் உபமானமாவதொன்றில்லாமையாலே, அங்குமிங்
கும் கதிர்பொருக்குகின்றாள். மாணிக்கம்போலேயும் மரகதம்போ

---

பிள்ளைகள் புழுதியளைகை ஸ்வாபாவிகமாகையாலே க்ருஷ்ணனைப் பழிப்பரெ
ன்று சொல்லக்கூடாதென்று திருவுள்ளம்பற்றி, "என்னைப்பழிப்பர்" என்று
அத்யாஹாரமுட்கொண்டு அர்த்தமருளுகிறார் (நாணித்யாதி). (ஏசுவர்கள்)
என்றதுக்கு "முன்பென்னை" என்றுசேஷம்.

திருமஞ்சனமாட வருகைக்கு "என்னைப்பழிப்பர்" என்றது-அப்ரதான
மாய், "நப்பின்னை சிரிக்கும்" என்கைப்ரதாநஹேதுவென்னுமத்தைக்காட்டா
நின்றுகொண்டு, "நாணித்தனையுமிலாதாய் நப்பின்னைகாணில் சிரிக்கும்"
என்கிற ஸம்வ்யாஹாரத்துக்குத் தாத்பர்யமருளுகிறார் (நாணித்யாதி).

"இத்தனையும் நாணிலாதாய்" என்றந்வயித்தர்த்தம் (ஏகதேசமுமித்
யாதி). (லஜ்ஜிக்கவேண்டாவோ) என்றது- (லஜ்ஜித்துநீராடவேண்டாவோ
வென்றபடி.

மூ.—கார்மலிமேனிநிறத்துக் கண்ணபிரானையுகந்து
வார்மலிகொங்கை யசோதை மஞ்சனமாட்டியவாற்றைப்
பார்மலிதொல் புதுவைக்கோன்பட்டர்பிரான்சொன்னபாடல்
சீர்மலிசெந்தமிழ் வல்லார் தீவினையாதுமிலரே. (௧௦)

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.

அழுக்கு ஒழிந்தப்ரகாசம்போலே நீராட்டித்திருமேனி காணவேணுங்காணென்னுதல்; (மாணிக்கம்) கருமாணிக்கம். அன்றிக்கே, மாணிக்கமேய்ந்த மரகதமணிபோலே யிருக்கிறவனே யென்னுமாம். ஏய்தல் - ப்ரதிபிம்பம்.

அவ;—நிகமத்தில் இத்திருமொழிகற்றார்க்குப் பலம் சொல்லித் தலைக்கட்டுகிறார்.

வ்யா;—(காரித்யாதி) நீர்கொண்டெழுந்த காளமேகத்தின் ப்ரகாசத்தையுடைய திருமேனியையுடையனுமாய், ஸுலபனுமாய், உபகாரகனுமானவனை, மிகவுமுகந்து. (வார்மலிகொங்கையசோதை) கச்சுவிரியும்படி விம்முகிற முலையையுடைய யசோதை, கடாரலேயுமிருக்கிற வடிவழகை யுடையவனே யென்கை. (மஞ்சனமாடநீ வாராய்)இப்படியிருக்கிற உன் திருமேனியில் வந்தேறியான அழுக்குக் கழிந்து விளங்கும்படி திருமஞ்சனமாட வரவேணும். (௯)

அவ;—நிகமத்தில் - இத்திருமொழி கற்றார்க்குப்பலம் சொல்லித் தலைக்கட்டுகிறார்.

வ்யா.—(கார்மலிமேனிநிறத்து) நீர்கொண்டெழுந்த காளமேகத்திற்காட்டில் மிகுத்திருந்துள்ள திருமேனிநிறத்தையுடைய. (கண்ணபிரானையுகந்து) ஆஶ்ரிதர்க்கு ஸுலபனுமாய் உபகாரகனுமானவனை ஆதரித்துக்கொண்டு. (வார்மலியித்யாதி) கச்சிலடங்காமல் விம்மும்படியான முலையையுடைய யசோதைப்பிராட்டி

அரு.—பத்தாம்பாட்டு. (கார்மலியித்யாதி) க்ருஷ்ணன் திருமேனிநிறத்துக்கு மேகத்தின்நிறம் ஸத்ருஶமாகவேண்டி, கறுப்பையும், மேகத்தின் நிறத்திற்காட்டிலும் திருமேனி நிறத்துக்கு மலிவுசொல்லுகையாலே, மேகத்தில் நிறத்தினுதிக்கயமும் தோன்ற விசேஷித்தர்த்தமருளுகிறார் (நீர்கொண்டித்யாதி). (மேகத்தில் காட்டில்) என்றது - மேகநிறத்திற் காட்டிலென்றபடி. "எம்" என்ற பஹுவசநத்துக்கர்த்தம் (ஆஶ்ரிதர்க்கு) என்றது. (விம்மும்படியான) விஞ்சும்படியான. ஶ்ரீவில்லிபுத்தூர் பூமியிலேகதேசமாகை

நீராட்டின ப்ராகாரத்தை. (க) "[illegible]- நவாரி ஞாநத்த்யதிசாரீந்தராத்மா" என்கிற ந்யாயத்திலேயிறே இவர் திருமஞ்சனமாட்டுவது. *ஞானநீர் கொண்டிறே இவராட்டுவது; அந்த ஞானமாவது - மங்களாசாஸந பர்யந்தமான பக்திரூபாபந்நஜ்ஞாநமிறே. (பாரித்பாதி) ப்ரஹ்மலோகத்தளவன்றிக்கே, த்ரிபாத்விபூதியிலும் அடங்காமல் அதுக்குமவ்வருகான திருமாளிகையிலேயிறே இவர் புகழ் நிலைபெறுவது. தொன்மையாவது-இப்புகழ் அநாதிஸித்தமென்கை. "புதுவை" என்றது - ஸ்ரீவில்லிபுத்தூரையிறே. புத்தூர் புதுவையாமிறே. இப்படிப்பட்ட திருப்புதுவைக்கு நிர்வாஹகரான ஆழ்வார் அருளிச்செய்த.

(சீர்மலிசெந்தமிழ்பாட வல்லார்) "எழுத்து, சொல், பொருள், யாப்பு, அலங்காரம், சீர், தளை" என்றாப்போலே சொல்லுகிறலக்ஷணங்களுக்கு லக்ஷ்யமாயென்னுதல்; அவனுடைய குணவிசேஷங்களுக்கு மங்களாசாஸநம்பண்ணினசெந்தமிழென்னுதல். (செந்தமிழ்) ஆர்ஜவமானதமிழ்; அதாவது-நடைவிளங்குகை. அதுதானவது-அகாத(ஈ) ஜலாந்தர்கதமானரத்நம் அத்யாஸந்நமாம்படி தோன்றுமாபோலேயிறே, ஸம்ஸாரஸாகரமத்யே தேவகீபுத்ரரத்நம்தோன்

---

மஞ்சநமாட்டின ப்ரகாரத்தை. (பார்மலியித்யாதி) பூமியிலடங்காத ஏற்றத்தையுடைத்தாய்ப் பழையதாயிருந்துள்ள திருப்புதுவைக்கு நிர்வாஹகரான பெரியாழ்வாரருளிச்செய்த.

(சீர்மலி செந்தமிழ்வல்லார்) சீர்மலிகையாவது - சப்தலக்ஷணங்களில் குறைவற்றிருக்கையாலே அழகுமிக்கிருக்கை. அன்றிக்கே, பகவத்குணங்களால் நிறைந்திருக்கிறவென்னுதல். (செந்தமிழ்) ஆர்ஜவயுக்தமானதமிழ். அதாவது-சப்தத்தினுடைய †ப்ரஸந்நதையாலே உள்ளில் கிடக்கிற அர்த்தம் தானே ப்ரகாசிக்கும்படி

---

யாலே, "பார்மலி" என்று - பூமியிலடங்காமை சொல்லக்கூடாமையால், ஏற்றத்தையிட்டருளுகிறார் (பூமியிலித்யாதி).

பாடல்பதத்தை இங்கே அந்வயித்து ப்ரதீகக்ரஹணம் செய்கிறார் (சீரித்யாதி). ஆர்ஜவமாவது - கரணத்ரயைகரூப்யமாய், அதுண்டான விடத்தில் ஹ்ருதயம் ப்ரஸந்நமாயிருக்குமாகையாலே, அத்தை எடுத்துக்காட்டுகிறார் (அதாவதித்யாதி). ... ... ... ... ... (க௦)

ஜீயர் திருவடிகளே சரணம்.

---

† (பா) ஸந்நிதியாலே.

றும்படி. (வல்லார்) ஸாபிப்ராயமாக வல்லாரென்றபடி. (தீவினையாதுமிலரே) த்ரிவிதப்ரவ்ருத்தியாலும் தீதானவினைகளொன்றுமில்லை. அதாவது - ஐஶ்வர்யகைவல்யாதிகள், தத்தத்ஸாதநங்கள், ஸ்வரூபாநுரூபமான கைங்கர்யங்கள், விஷயாநுரூபமான கைங்கர்யங்கள், இவையெல்லாம்தீவினையாகவிறே "தேய்த்துக்கிடக்க நானொட்டேன்" என்கிற விவர் நினைத்திருப்பது. .... .... (௧௦)

பிள்ளைதிருவடிகளே சரணம்.

---

# இரண்டாம் பத்து அஞ்சாம் திருமொழி,
# பின்னை மணாளன் ப்ரவேசம்.

ஸ்வா;— கீழே "மஞ்சனமாட்டியவாற்றை" என்று திருமஞ்ஜனம் செய்தாராய் நின்றார். (உ) "கலையும் கரியும் பரிமாவும்திரியும் கானம் கடந்துபோய்" என்கையாலே (௩) "[Grantha text] - அயோத்யாமடவீம் வித்தி" என்கிற வர்த்தம் தோன்றில் த்யாஜ்ய

---

யிருக்கை. (பாடல்) பாட்டுக்களை. (வல்லார்) இவற்றைஸாபிப்ராயமாகவல்லவர்கள். (தீவினையாதுமிலரே) தீவினையொன்றுமில்லாதவராவர். அவர்களுக்கு ஒரு துஷ்கர்மங்களுமில்லை யென்கை. (௧௦)

பெரியஜீயர் திருவடிகளே சரணம்.

---

## பெரியாழ்வார்திருமொழி இரண்டாம்பத்து
## நாலாந் திருமொழி முற்றிற்று.

---

அவ.—(க)"எல்லாம் தெய்வநங்கை யசோதை பெற்றாளே" என்கிறபடியே அவதார ஸமயமே தொடங்கி இவ்வவதார சேஷ்டிதரஸமெல்லாம் தானே முற்றூட்டாக வநுபவித்த யசோதைப்பிராட்டி, அவனுடைய அவதாரத்தின் மெய்ப்பாட்டால் வந்த பால்யாநுகுணமாக, அவனை "மஞ்சனமாடவாராய்" என்று

---

ஸ்ரீமதே ராமாநுஜாய நம꞉.

அரு;—பின்னைமணாளன்ப்ரவேசம்,—கீழ்த்திருமொழிக்கும்இத்திருமொழிக்கும் ஸங்கதி யருளிச்செய்வதாக ஆழ்வாருடைய வநுபவம் யசோதைப்பிராட்டியநுபவம் போன்ற தென்னக்கோலி, அவளுடைய அநுபவாதிசயத்தை ப்ரமாணபூர்வகமருளுகிறார் (எல்லாமித்யாதி). (எல்லாம்)என்றது - அவதார சேஷ்டிதரஸமெல்லாமென்றபடி. (தெய்வநங்கை) - தெய்வப்பிறப்பு

---

(க) பெரு-தி-எ-ரு. (உ) தி-மொ-க-ரு-க. (௩) ரா-அ-௪0-ரு.

தயாஜ்ஞாதவ்யமாவது-கலையும் கரியும் பரிமாவும் திரியும்கானமிறே. இத்தை நினைத்திறே (க) "ஸ்ரீத்ரபாவேந - மித்ரபாவேந" என்றும், "ஸத்யஜேயம் - ஸத்யஜேயம்" என்றும், (க) "ஸதாம் - ஸதாம்" என்றுமருளிச்செய்தது. ஆகையால் அங்கு மித்ரபாவம் கண்டு கால் தாழ்கிறான்று. சிலர் இவ்வூரை த்யஜிக்கவேணுமென்ன; எங்ஙனே விடுவதென்று தளும்புகிறான்று; அவர்கள் விடவேணுமென்று நிர்ணயிக்க,விடில் ஸத்துக்கள் கர்ஹிப்பர். அவர்கள் கர்ஹியாமல் என்னை விடுகையன்றோவுள்ள தென்றால், இந்தவார்த்தையில் கருத்தறிந்து இசைகைக்கு ஒரு திருவடி மஹாராஜர் முதலானாரும் இங்கில்லை. ஆகையாலே காடுத்யாஜ்யமும் கடல்கரையும் கான வெண்கு முதலானாரும் உபாதேயமாகத் திருவுள்ளம்பற்றியிறே, (உ) "ஸக்ருதேவ - ஏதத்வ்ரதம்மம-ஸக்ருதேவ-ஏதத்வ்ரதம்மம" என்று வெளியிட்டதும்.

---

அர்த்தித்து, அவன் அதுக்கிசையாமையாலே அநேக ப்ரகாரேண அநுஸரித்து உடன்படுத்தி மஞ்சனமாட்டித் தலைக்கட்டின வநந்தரம், அவனுக்குத் திருக்குழல்வாருவதாக உத்யோகித்து அவன் † மிறுங்கியோடாமல் இசைந்து நிற்கைக்காக, லோகத்தில் சிறுப்பிள்ளைகளைக் குழல்வாருவார், அவர்களை வசப்படுத்துகைக்காக மருட்டிச் சொல்லுமாபோலே, இவனுடைய பால்யாநுகுணமாக "அக்காக்காய்குழல்வாரவா" என்று பலகாலும் அவன் செவிகேட்கச் சொல்லிச் சீராட்டிக்கொண்டிருந்து திருக்குழல்வாரின ப்ரகாரத்தையும் தாமநுபவிக்க வாசைப்பட்டு, பாவநாப்ரகர்ஷத்தாலே ததவஸ்தாபந்நராய்க்கொண்டு, தத்காலம்போலே தாமும் அவனைக் குறித்து அப்பாசுரங்களைச்சொல்லி, அவனைத்திருக்குழல் வாருகையாகிற ரஸத்தை யநுபவிக்கிறார் இத்திருமொழியில். .... .... *

---

ப்போலே பாக்யபூர்ணை. (மிறுங்கி) கடினப்பட்டு. அதாவது - ப்ரதிகூலித்தென்றபடி. (மருட்டி) மருளுண்டாம்படி பண்ணி. (செவிகேட்கச்சொல்லி) என்றவிடத்தில், "அக்காக்கை வந்து தனக்குக் குழல்வாருமென்று நெஞ்சில் படும்படி" "என்று கருத்து. திருமஞ்சனமாட்டின ரஸத்தை அநுபவித்தவநந்தரம், திருக்குழல் வாருகையை அநுபவிக்கிறாரென்று ஸங்கதிசொல்லிற்றாயிற்று. ... ... ... ... ... ... ... *

---

† (பா) பிணங்கி. (க) ரா-யு-கஅ-௩. (உ) ரா-யு-கஅ-௩௩.

ஸ்வா.—இவ்வளவேயோ? பக்ஷிஜாதங்களைப் பலவிடங்களிலும் ஆழ்வார்கள் ஆசார்யதுல்யராக்கி ஸம்ஶயமும் தோன்ற தூதுவிடவும் கண்டோமிறே. (க)"திருத்தாய்" "கரையாய்" "சொல்லாய்" என்று, த்ரிகாலஜ்ஞர் பலரும் உளராயிருக்க, ஹிதவசநஸாபேக்ஷராய்க் கேட்டதும் இவற்றையிறே. இவற்றில் வைத்துக் கொண்டு "பிள்ளாய்" என்றது இத்தையிறே. ஸ்வதஸ்ஸர்வஜ்ஞனான ஈஶ்வரனும் * மயர்வற மதிநலம்பெற்ற வாழ்வார்களும் அறிவார்களையும் அறிந்தார்களையும் அறியார்களாக நினைத்து, அறிவிக்கைக்காகவிறே இவற்றினுடையஸத்திதிகமநஶயநாதிகளை அபேக்ஷிக்கிறதும்; இவ்வளவும்யோக்யமில்லாதகூடலைஅவன் திருவுள்ளத்தில் கருத்தறியமுன்னில்லையாக்கி அபேக்ஷித்ததும்; கூடல்கூடாமையாலே கர்ஹித்ததும். அந்த ஸ்வதஸ்ஸர்வஜ்ஞனானவவன்தான் திரியும்கானம் கடந்து தன் திருவுள்ளக்கருத்தை அறிவித்தால் பொறுப்பார்க்கருளி செய்தது அறியாமையாலன்றே.

காக்கையால் சொல்லுகிறது - முக்குணத்திரண்ட கற்றுதவளவன்றிக்கே, இரண்டிலே நெஞ்சுபொருந்தும்படி நின்றநீசரானவர்களைக் குறித்து. நீ (உ) "எத்திறத்துமுய்வதோருபாயமில்லை - மாலை வாழ்த்தி வாழ்மினோ?" என்று மங்களாசாஸநத்துக்கு ஆளாக உபதேசித்தாப்போலே, இவரும் தமோ குணப்ரசுரராயும் ரஜோகுணப்ரசுரராயு மிருக்கிறவர்களை, "காக்கை" என்கிற வ்யாஜத்தாலே ப்ரபத்தியில் க்ரியாபதத்துக்கு முற்பாடன் அவனுடைய ப்ரகாரத்தை யுணர்த்தி மங்களாசாஸநத்திலே சேர்ப்பதாக வந்து குழல் வாராயென்கிறார்.

இந்த குணத்வயம் இதின் பக்கல் கண்டபடி யென்னென்னில்; அப(ஃ)க்ஷ்யபக்ஷணங்கள், நிஷித்தங்கள் அத்யந்தநிஷித்தங்கள்பக்ஷிக்கையாலும், பிண்டத்திரளையும் பேய்க்கிட்ட நீர்ச்சோறும் ஸ்நாநம் செய்து ஜீவிக்கையாலும். * பித்ர்யமான தர்மங்களிலே சில பிண்டவிசேஷங்களையும் பிசாசாராதனை முதலான பிண்டங்கள் தண்ணீர்கள் முதலானவற்றை பூதயஜ்ஞமாத்ரமே யன்றிக்கே வரித்து இதுக்கே இடவேணுமென்னும் நிர்பந்தமுண்டாகையாலும், இனம்சேர்ந்து ஜீவிக்கு மபிமாந விஶேஷங்களாலும், ஸ்வபுத்ரர்களோடே பர

(க) தி-மொ-௧௦-௧௦-௧. (உ) தி-ச-வி-௬௮.

ஸ்வா.—
புத்ரர்களையும் ஸ்வீகரித்து வளர்த்துப் பரிணமித்தவாறே துல்யவிகல்ப விசேஷ ரூபஸித்தியும் பாராமல், வ்யவஸ்த்திதமான வாக்வ்யவஹார மாதுர்யஸித்திகண்டு அங்கீகரியாத வளவேயன்றிக்கே, கர்ப்பதோஷ நிரூபணம்செய்து நீக்குகிற அஸஹமானத்வத்தாலும் தன்னினமொழியமற்றோரினம் கூடிஜீவியாமையாலும், கண்டக ப்ரபத்தியாலே ப்ராணன் பெற்றோமென்று கர்வித்து, அஸ்த்ரமே ஒரு கண்ணழிவுசெய்ததறியாமையாலும். (க)"மித்ரமௌபயிகம் கர்த்தும்-மித்ரமௌபயிகம் கர்த்தும்" என்றும், (உ)"பாபாநாம்வா ஶுபாநாம்வா-பாபாநாம்வா சுபாநாம்வா" என்றும் ப்ரதிகூலனையும் அநுகூலாக்ரேஸரனையும் வாசியறத்திருத்தப்பார்த்துத் திருத்துமவனுண்டாயிருக்க, இவள் திறத்திலும் தப்பினபிழை உணராமல் ஜ்யேஷ்டாதேவிக்குக்கொடியாய்ப் ப்ராணனை நோக்கித் திரிகையாலும், இவற்றாலே மடியகத்துச் செல்வம் பார்த்திருக்கும் குணத்வய நிஷ்டர்படி சொல்லலாமிறே.

இனி லோகத்தில் பிள்ளைகளை அழுகை மருட்டுகைக்காக, "அக்காக்காய், சுக்குருவி, சந்திராவா" என்றாப்போலே சொல்லுகிற லோகோக்தி வ்யாஜத்தாலே சொல்லுகிற யசோதை பாசுரத்தை உட்கொண்டு குணத்வய ப்ரசுரர் முதலாகவெல்லாரையும் "அவன் முற்பட்டு உங்களைச்செய்த ப்ரபத்தியால்வந்த தோஷத்தை உணர்ந்து நீக்குங்கோள்" என்று குழலை வ்யாஜமாக்கி மங்களாசாஸநத்திலே மூட்டுகிறார். இப்படிப்பட்ட அஜ்ஞரை முதலாக விஷயீகரிப்பானென்னென்னில்; "அஜ்ஞனை விஷயப்ரவணனைத் திருத்திமேல் கொண்டு போகலாம்; ஜ்ஞாநலவதுர்விதக்தனை அஹங்காரக்ரஸ்தனைப்போலே ஜ்ஞாநவானை விஷயப்ரவணனையும் திருத்தவொண்ணாது" என்று பிள்ளைலோகாசார்யரருளிச் செய்கையாலும், இவர்களைமுற்பட விஷயீகரித்தாரென்னவேணும். இனி, அஜ்ஞாந பூர்த்தியுள்ளது தமோகுண ப்ரசுரரும் ரஜோகுண ப்ரசுரருமாயிருக்கிறவர்களுக்கிறே.

இவர் (௩)"கூழாள்" என்றது-ஆரையென்னில்; அந்யசேஷபூதரை. அந்யரான சேஷிகளில்லாமையாலும், அந்யசேஷத்வவிதி யில்லா

(க) ரா-ஸு-உக-கக. (உ) ராயு-ககசு-சச. (௩) தி-பல்லா-௩.

ல்வா.
மையாலும், இவர் "எங்கள் ; குழுவினில் புகுதலொட்டோம்" என்று ஓரிடத்திலுங்கூட்டாமையாலும், ராஜதாரப்ராவண்யவிசேஷ தம்போலே இது கூட்டிக்கழிக்கவும் பற்றாது. "வாழாள்" என்றது "ஆள்" என்றும், "வாழாள்" என்றும், "நின்றீர்"என்றும் மூன்று படியாயிருக்கும். "ஆள்" என்றது-ஐஸ்வர்யத்தை அவன் பக்கலிலே பெறவேணுமென்று அபேக்ஷிக்குமவர்களை. "வாழாள்" என்றது-ஆத்மாநுபவஸாபேக்ஷரை. "நின்றீர்" என்றது, பக்திப்ரபத்திகளை உபாயமாக்காமல் அவன்றன்னையே உபாயமாக்கி நிலைநின்றவர்களை. இவை மூன்றும்த்வயத்தில் பூர்வவாக்யத்திலே காணலாம். ஒன்றே நிலைநிற்பது. "வந்து கொண்மின்" என்றது-எத்தைக் குறித்தென்னில் ; உத்தரவாக்யத்தில் * ஆயபதத்தில் வெளிற்றை நமஸ்ஸிலே கழித்து, கழியாத ஹிதரூபமங்களாசாஸந கைங்கர்யத்தைக் குறித்து ; இவ்வாட்படும் ப்ரகாரங்கள் காணலாவது - வ்யுத்பத்தி ப்ரதாநமான ப்ரதம ரஹஸ்யத்திலேயிறே.

இவையெல்லாம் ஏற்கவே உண்டாக்குவதாகவிறே (க) "எதிர்சூழல்" (உ) "தனியேன் வாழ்முதல்" (௩) "அந்நாள் நீதந்த" என்றவை முதலாகச் சில ஸுக்ருத விசேஷங்களைக் கற்பித்து, அத்வேஷாபி முக்க்யங்களை உண்டாக்கி, வருணஸுக்ரீவாதிகளைச் சரணம்புக்கும், அஸாதாரணக்ரேஸரரை முன்னிட்டு உறவு கொண்டும், அவன் பண்ணினப்ரபத்தி விசேஷங்களைக்கைம்முதலாக்கி அந்த ப்ரபந்நனைத்தான் தாழ்ந்தார்க்கும் தாழ்ந்தவனாக்கி, காகாநிலயந்யாயத்தாலே "அக்காக்கை" என்று கீழ்ச்சொன்ன காகங்களை நிஷேதித்து, அன்னத்தின் பக்கலிலே ஸாரஜ்ஞதையும், கிளியின் பக்கலிலே பூர்வாசார்ய வசநமும், நாயின் பக்கலிலே க்ருதஜ்ஞதையும், இவைமுதலான ஆத்மகுணங்கள் கொண்டாப்போலே, காகத்தின் பக்கலிலேயும் சில குணவிசேஷங்களைக் கற்பித்து, யசோதை தாழவிழிந்து, அவனை; "குழல்வார" என்றவ்யாஜத்தாலே தேவதத்த கல்பனைப் போலே ஒன்றைக் கல்பித்து ஸர்வஜ்ஞராக்கி, அத்யந்தம் தமோகுணப்ரசுரரையும் ப்ரபந்நராக்கி, மங்களாசாஸநத்திலே சேர்ப்பதாக வவன் பண்ணினப்ரபத்தியில் விஷயதோஷங்களைக் கழித்து,

(க) தி-வாய்-உ-எ-சு. (உ) தி-வாய்-உ-௩-ரு. (௩) தி-வாய்-௩-உ-க.

மூ.—பின்னைமணாளனைப் பேரில்கிடந்தானை
முன்னையமரர் முதல்தனி வித்தினை
என்னையுமெங்கள் குடிமுழுதாட்கொண்ட [வாராயக்காக்காய்.
மன்னனைவந்து குழல்வாரா யக்காக்காய் மாதவன்றன்குழல்

---

அவன் திருவுள்ளத்திலே சேர்க்கையே ப்ரயோஜநமாகக்குழல்வாரா யென்கிறார்.

கீழ் திருமஞ்சனவ்யாஜத்தாலே மோக்ஷோபாயம் அவனாக வரித்திருக்கிறப்ரபத்தி நிஷ்டராலும், அநந்யஸாதநபரராய், அநந்ய ப்ரயோஜநபரராய் அவனை மோக்ஷப்ரதனாக நினைத்திருக்கு மவர் களாலும் வந்த அழுக்குப்போக விவேக ஜலத்தாலே திருமஞ்சனம் செய்தாராய் நின்றார். இனிஇதில்(க)ப்ராமயந்-"ப்ராமயந்" "என்றும் (உ) "யதாநியுக்தோஸ்மி ததா கரோமி-யதாநியுக்தோஸ்மிததாகரோமி" என்றும், (௩) "தேநவிநா த்ருணாக்ரமபி ந சலதி-தேநவிநாத்ருணாக்ரமபிநசலதி" என்றும்! (௪) "கரவம் - அகரவம்-கரவம், அகரவம்" என்றும் சொல் லுகிறப்ரமாணங்களின் கருத்தறியாத வளவேயன்றிக்கே (ரு) "நலி வன்னின்னும் மண்ணுகின்றாய்"? (௬)"ஆற்றங்கரை வாழ்மரம் போல அஞ்சுகின்றேன்" (எ) "ஆறுசமயம்புகைத்தான்" (அ) "மாட்டாத பலசமயமதி கொடுத்தாய்" என்றாப்போலே ஆழ்வார்களருளிச் செய்த பாசுரங்களிலும் ஸம்ப்ரதாய மில்லாதாரும் "ஸகலப்ரவ்ருத் திகளையும் ஸதாகாலமும் அவனே ப்ரேரகாதிகளாலே செய்விக்கி றான்" என்று தோஷத்தை அவன் தலையிலே யேறிட்டு வ்யவஹரித் துப்போருகிற குணத்வயாதிக ரெல்லாரையும் காகஸமராக்கி, ஸம் போதித்து அழைத்து, "அவனுடைய ஸ்த்தித்தி கமந ஶயநாதிகளில் தோஷமில்லை; நீங்கள் அவன்தலைமேல் ஏறிட்ட தோஷங்களை நிபுணாசார்ய ஸேவையாலே எல்லாமுன்மேலன்றிப் போகாதென்று நீங்க ளேறிட்ட பொல்லாங்குகளை நீக்கப் பாருங்கோள்" என்று யசோதை அழுகைமருட்டுகைக்கு காக்கையை அழைத்து "குழல் வார" என்றுபாசுரத்தாலே அருளிச்செய்கிறார்.

ஸ்வா;—முதற்பாட்டு; — (பின்னையித்யாதி) ப்ரபத்திக்குப்

---

வ்யா.—முதற்பாட்டு, (பின்னைமணாளனை) நப்பின்னைப் பிரா

---

(க) கீ-கஅ-௬க. (உ) (௩)
(௪) தை-ஆ. (ரு) தி-வாய்-எ-க-க. (௬) தி-மொ-கக-அ-க.
(எ) ச-திருவ-௩அ. (அ) தி-வாய்-௩-க-௪.

புருஷகாரம்முன்னாகவேணுமிறே. (க) "பின்னைநெடும்பணைத்தோள் மகிழ்பீடுடை" என்னக்கடவதிறே. "ஶ்ரியஃபதி" என்னுமாபோலே, (பேரில் கிடந்தானை) அவள் கற்பனையிறே திருப்பேரிலே கண்வளர்ந்தருளுகிறது.

(முன்னையமரர் முதல்தனிவித்தினை) அமரர்க்குமுன்னை, நித்யஸூரிகளுக்குமுன்னோடிக் காரியம்பார்க்குமவனை. "பின்னைமணாளனை" ட்டிக்கு வல்லபனானவனை. இவ்வவதாரத்துக்கு ப்ரதாநமஹிஷி இவளிறே. மேன்மைக்கு ஶ்ரியஃபதியென்னுமாபோலேயிறே, நீர்மைக்கு இவளுக்கு வல்லபனென்கிறதும். (பேரில் கிடந்தானை) அதுக்குமேலே ஒரு நீர்மையிறேயிது. அவதார ஸௌலப்யம் போலன்றிறே அர்ச்சாவதார ஸௌலப்யம். (உ) "கொம்பனார் பின்னை கோலங்கூடுதற்கேறு கொன்றான்-தென் திருப்பேருள்மேவு மெம்பிரான்" என்கையாலே-பின்னை மணாளனானதுக்கும் பேரில் கிடந்ததுக்கும் ஒரு சேர்த்தியுண்டிறே; நப்பின்னைப் பிராட்டியைத் திருமணம் புணர்ந்து, பின்பு அவளோடேகூட வந்து கண்வளர்ந்தருளிற்றுத் திருப்பேரிலேபோலே காணும்.

(முன்னையமரரித்யாதி) கீழ்ச்சொன்ன நீர்மைக்கெதிர்த்தட்டான மேன்மையைச் சொல்லுகிறது. (௩) "யத்ர பூர்வே ஸாத்யாஸ்ஸந்தி

அரு.—முதற்பாட்டு. (பின்னையித்யாதி) மற்றைப்பிராட்டிமாரிருக்க, இவளை நிரூபகமாக வெடுத்ததுக்குத் தாத்பர்யமருளுகிறார் (இவ்வவதாரத்துக்கித்யாதி). "இடைக்குலத்தில்பிறந்தவளாகை- நீர்மைக்குப்ரகாஶகம்" என்று, (ப்ரதாநமஹிஷி) என்கிறாரென்று கொள்வது. இப்ப்ராதாந்யம்தன்னை உபபாதிக்கிறார் (மேன்மைக்கித்யாதி). (அதுக்கு மேலே) என்றது - பின்னை மணாளனானது நீர்மைக்கு மேலேயென்றபடி. "பின்னை மணாளனை" என்றவநந்தரம், "பேரில் கிடந்தானை" என்கைக்கு நியாமகமேதென்னவருளுகிறார் (கொம்பனாரித்யாதி). இச்சேர்த்திக்குத் தாத்பர்யமருளுகிறார் (நப்பின்னையித்யாதி). நப்பின்னையோட்டை ஸம்ஶ்லேஷத்துக்குஏகாந்தமான தேசமென்று கருத்தென்று திருவுள்ளம்.

(கீழ்ச்சொன்ன நீர்மை) என்றது-அர்ச்சாவதார ஸௌலப்யம். இந்த ஸௌலப்யம் குணமாகைக்காக பரத்வத்தைச் சொல்லுகிறானென்று கருத்து. கீழ் தாத்பர்யத்தை யருளிச்செய்து, ப்ரமாணபூர்வகம் சப்தார்த்தமருளிச்செய்கிறார் (யத்ரேத்யாதி). "முதல்" என்றதினர்த்தம் (சேஷித்வேநப்ரதாநனு

(க) தி-வாய்-க-எ-அ. (உ) தி-மொ-ரு-கூ-அ. (௩) புருஷஸூக்தம்

ன்'' என்றால் முன்னையமரர்வரக்கடவது, இதுதானிறே இவர்க்கு, தோள்வலியும் ஆள்வலியும். (முதல்தனிவித்தினை, இந்த விபூதிக்கு த்ரிவிதகாரணமுமானவனை. (என்னையுமெங்கள் குடிமுழுதாட்கொண்ட) *ஏழாட்காலும் பழிப்பற்ற வெங்கள் குடிமுழுதும். குடிக்குப் பழிப்பாவது-ப்ரதமாக்ஷரத்திலே த்ரிவிதஸம்பந்தத்தையும் மாறாடி ஸகல சாஸ்த்ரங்களையும் சேர்த்து ஏவிதரூப கைங்கர்யமான மங்களாசாஸநம் செய்யமாட்டாதிருக்கை. இப்படிப்பழிப்பற்றிருக்கிற வெங்கள் குடிமுழுதும், அக்குடியிலே பிறந்திருக்கிற வென்னையுமடிமைகொண்ட. (மன்னனை) நிலையையுடையவனை. "ஆளுமாளார்'' என்கிற எங்கள் குடிமுழுதும் என்னையுமாண்டு கொண்டு போரவல்லவனென்று "மன்னன்'' என்கிறார். (வந்து குழல்வாராய்) நீராட்டிவிட்டால் குழல்வாரவும் ப்ராப்தமிறே. "அவன் நப்பின்னையையும், முன்னையமரரையும் முன்னிட்டுப்ரபத்தி பண்ணிற்று, இவனுக்கு மங்களாசாஸநருசியை விளைக்கைக்கிறே'' என்றறிந்து தத்ததபிமதஸாதநங்களில் கூட்டின ப்ரபத்திச் செடியை நீக்கி குழல்வாராய். (அக்காக்காய்) காக்கைவ்யாஜம். தா(ஃ) த்வர்த்ததால் வந்தரக்ஷணதர்மத்தை காக்கைஎன்று சேதந ஸமாதியாலே ஸம்போதிக்கிறாரென்னுதல். காரணத்வம் சேஷித்வநிபந்தநமேயாகிலும் ரக்ஷணத்திலேயிறே ஊற்றம். ஆகையால் அகார சப்தவாச்யத்தை கௌரவவஸ்து நிர்தேசத்திலேயாக்கி "அக்காக்காய்'' என்கிறாராகவுமாம்.

---

வா:-யத்ரபூர்வே ஸாத்யாஸ்ஸந்தி தேவா:." என்கிறபடியே பகவதநுபவத்துக்கு முற்பாடரான நித்யஸூரிகளுக்கு சேஷித்வேநப்ரதாநனாய், அவர்களுடைய ஸத்தாதிகளுக்கும் தா(ரு)ரகாதிகளுக்கும் தானே ஹேதுவானவனை. (என்னையுமித்யாதி) தனக்குப்பரிந்தன்றி உளேனாகாதவென்னையும் *ஏழாட்காலும் பழிப்பில்லாத எங்கள் குடியிலுள்ளாரெல்லாரையும் ஸ்வரூபாநுரூபமான வடிமையைக்கொண்ட. (மன்னனை) ராஜாவானவனை. (வந்துகுழல்வாராயக்காக்காய்) இது சிறுப்பிள்ளைகளைக் குழல்வாருவார் சீராட்டாய்) என்றது. (தாரகாதிகள்) என்றது - தாரகபோஷக போக்யங்கள். அதாவது கைங்கர்யமென்றபடி. "தனி'' என்றதினர்த்தம்-தானே யென்றவத(ா)ரித்தது. "முன்னையமரர்'' இத்யாதியால் பரத்வம்சொல்லியிருக்க, "மாதவன்''

மூ.-பேயின்முலையுண்ட பிள்ளையிவன் முன்னம்
மாயச்சகடு மருது மிறுத்தவன்
காயாமலர்வண்ணன்கண்ணன்கருங்குழல் [வாராயக்காக்காய்.
தூய்தாகவந்துகுழல்வாராயக்காக்காய் தூமணிவண்ணன்குழல்

"அவன் தலையில் சிடுக்குப்போனலாயிற்று உங்கள் தலையிலழுக்குப் போவது" என்றுகாகஸமரெல்லாரையும் அழைத்து அவன்குழலில் சிடுக்கையறுத்து சித்சித்ஈஸ்வர தத்வபாவங்களைப்பிரித்து, நெடுகப் பார்த்தறிந்து, அவன் தலையில் தோஷத்தையொழித்து உங்கள்தலையிலேவைத்துக் கொள்ளுங்கள். வந்து குழல்வாருங்கோளென்கிறார். (மாதவன் தன் குழல்வாராய்) பின்னைமணாளனைக்குஹேறு, மாதவனுகையிறே. ஆகையாலே நிர்துஷ்டனென்கிறார். அவன் நிர்தோஷனை வளவேயன்றுகாண்; ஸமஸ்தகல்யாணகுணத் மகன் காண். குணத்திலே தோஷதர்ஶநம் பண்ணுதேகொள்ளென்கிறார். (க) "ஸுக்ரீவம்நாதமிச்சதி - ஸுக்ரீவம்நாத மிச்சதி' எனகிற ப்ரபத்தியால் வந்த குறைதீருவதும், (உ) 'உன் தோழியும்பி யெம்பி' என்று அவன் ப்ரபத்திபண்ண, நீங்கள் குறைவாளராய் நின்றகுறை தீருவதும், 'பின்னைமணாளன்' என்று ப்ரபத்தி பண்ணினுல்" என்னும் கருத்தாலே, வந்து குழல்வாராயென்கிறார். .... (க)

ஸவா;—இரண்டாம்பாட்டு. (பேயித்யாதி) குணத்தில் தோஷதர்ஶநம் பண்ணிவந்த பேய்ச்சி பட்டதுபடாதே கொள்ளுங்கோகச் சொல்லும் பாசுரம். (மாதவனித்யாதி) நீர்மைக்குப் பின்னைமணாளனைப்போலே, மேன்மைக்கு ஸ்ரியபதியானவனுடைய குழல்வாராய் வந்தக்காக்காய். (க)

வ்யா;—இரண்டாம்பாட்டு. (பேயின்முலையுண்ட பிள்ளையிவன் முன்னம்)முன்னம் தாய் வடிவு கொண்டுவந்த பூதனையுடைய முலை என்று புநஃபரத்வம் சொன்னுல் புநருக்தமன்றோ வென்னவருளுகிறார் (நீர்மைக்கித்யாதி). அவ்விடத்தில் அப்பேரில் கிடக்கைக்கு ப்ரதிகோடித்வேந வும், இங்கு "பின்னைமணாளன்" என்கைக்கு ப்ரதிகோடித்வேநவு மருளிச்செய்தாரென்று திருவுள்ளம். ... ... ... ... ... (க)

அரு;—இரண்டாம்பாட்டு. (பேயித்யாதி). (முன்னம்) என்றதுக்கு, (இருந்துண்ட) என்றத்தோடந்வயம். "பிள்ளை" என்றதின் பலிதார்த்தம்

(க) ரா-கி-ச-கஅ. (உ) தி-மொ-௫-அ-க.

னென்கிறார். (பிள்ளையிவன்) பிள்ளைத்தனத்தில் புரையில்லாத வன். (முன்னம்மாயச் சகடும் மருது மிறுத்தவன்) அப்படிப்பட்ட க்ருத்ரிமத்தையுடைய ஶகடாஸுரனையும் யமளார்ஜுநங்களையும் நிரஸித்தவன்.

(காயாமலர் வண்ணன்) ஆத்ம குணங்கள் மிகையாம்படி அப்போதலர்ந்த செவ்விக்காயாமலர்போலேயாய், அநுகூலரை எழுத்திடுவித்துக் கொள்ளும் வடிவழகுடைத்தவன். (கண்ணன்) விரும்பனுலும் விடவொண்ணாத ஸௌலப்யத்தையுடையவன். (கருங்குழல்) குழலுக்கு ஒரு போலி காணமையாலே வெறும்புறத்திலே

---

யை-தாய்முலைபுண்ணு மாம்பாலே யிருந்துண்ட முக்த(*)னிவன். இவனுக்குப் பிள்ளைத்தனத்தில் புரையில்லையாகில் அவள் முடிந்தபடி யென்னென்னில்; ப்ரதிகூலித்துக்கிட்டினார் முடியக்கடவதான வஸ்துஸ்வபாவத்தாலே முடிந்த வித்தனை. (மாயச்சகடுமருது மிறுத்தவன்) அதுக்குப் பின்பு, கண்வளர்ந்தருளா நிற்கச்செய்தே அஸுர விஷ்டமாய் நலியவந்த க்ருத்ரிமமான சகடத்தையும், தவழ்ந்து போகா நிற்கச்செய்தே நடுவே நலிவதாக நின்ற யமளார்ஜுநங்களையும் காலாலும் துடைகளாலும் தள்ளி முறித்துப்பொகட்டவன்.

(காயாமலர்வண்ணன்) ஆத்மகுணங்கள் மிகையாம்படி அப்போதலர்ந்த செவ்விக்காயாம்பூப் போலே, அநுகூலரை † எழுத்திடுவித்துக் கொள்ளும் வடிவழகுடைத்தவன். (கண்ணன்) விரும்பனுலும் விடவொண்ணாத ஸௌலப்யத்தையுடையவன். (கருங்குழல்) குழலுக்கு ஒரு போலி காணமையாலே வெறும்புறத்திலே,

---

(முக்தன்) என்றது. (அதுக்குப் பின்பு) பூதநாநிரஸநத்துக்குப் பின்பு. (காலாலும்) இத்யாதியில்-காலால் சகடத்தை முறித்தானென்றும், துடைகளால் மருதுகளை முறித்தானென்றும் கண்டுகொள்வது.

காயாமலர் போலேயிருக்கிற வண்ணத்தை - வடிவையுடையவனென்று சப்தார்த்தத்தையும் தாத்பர்யார்த்தத்தையு மருளுகிறார் (ஆத்மகுணங்களித்யாதி). (மிகையாம்படி) என்றதுக்கு, (எழுத்திடுவித்துக் கொள்ளும்) என்றத்தோடந்வயம். (விட வொண்ணாத) என்றது - அநுகூலர்க்கு விட வொண்ணாத வென்றபடி. “இறுத்தவன்” என்னுமளவால் ப்ரதிகூலர் மண்ணுண்ணும்படியும், “கண்ணன்” என்னுமளவால் அநுகூலர்

---

† (பா) எழுதுவித்துக் கொள்ளும்படி.

மூ.—திண்ணக் கலத்தில் திரையுறிமேல் வைத்த
வெண்ணெய் விழுங்கி விரையவுறங்கிடும்
அண்ணலமரர்பெருமானையாயர்தம் [குழல்வாராயக்காக்காய்
கண்ணனைவந்து குழல்வாரா யக்காக்காய்கார்முகில்வண்ணன்

கருங்குழலென்கிறார். (தூய்தாக வந்து குழல்வாராயக்காக்காய்) அவன் குழலிலொரு அழுக்கில்லை; நீங்களறியாமையாலே உண்டாக நினைத்ததுவே யுள்ளது. (தூமணிவண்ணன்) காயாம்பூவுக்கு விவர்ணமுண்டானாலும், ஒருபடிப்பட்ட நீலரத்நம் போலே வடிவழகு படைத்தவனென்கிறார். (உ)

ஸ்வா;—மூன்றாம்பாட்டு. (திண்ணவித்யாதி) ஒருவரால் சலிப்பிக்கவொண்ணாதபடி மேல்மரத்திலே சொருகிக்கட்டி, கள்ளக் கயிறுருவி வைத்த. வைக்குமதொழிய வைத்தவர்களாலும்

கருங்குழலென்கிறார். (தூய்தாகவந்து குழல்வாராய்) நன்றாகவந்து குழல்வாராய். தூய்தாக வாருகையாவது-அலகலகாய்ச் செப்பம் கிடக்கும்படி வாருகை. (தூமணிவண்ணன்) பழிப்பற்ற நீலரத்நம் போலேயிருக்கிற வடிவையுடையவன். காயாம்பூப்போலே போது செய்யாதே ஒரு படிப்பட்டிருக்கும் நீலரத்நம் போன்ற வடிவழகை யுடையவனென்கை. .... .... .... .... .... (உ)

வ்யா;—மூன்றாம்பாட்டு. (திண்ணக்கலத்து) சிக்கென்ற கலத்திலே. கோல்களாலே மாறியடித்தாலும் ஈடுபடாத கலமென்கை. (திரையுறிமேல்வைத்த) பெரிய வுறிமேலே வைத்த. திரையுறியாவது-கயிற்றுப் பின்னலாகக்கொண்டு சமைத்த, பெரிய

வாழும்படியும் சொல்லிற்றாயிற்றென்றுதிருவுள்ளம். (செப்பம்கிடக்கும்) என்றது - அழகியதாயிருக்கு மென்றபடி. "காயாமலர் வண்ணன்" என்றத்தால் நைல்யம் சொல்லியிருக்கவும், "மணிவண்ணன்" என்றதுக்குத் தாத்பர்யமருளுகிறார் (காயாம்பூவித்யாதி). (போதுசெய்கை) மொட்டிக்கையும், விகஸிக்கையும். ... ... ... ... ... ... ... (உ)

அரு;—மூன்றாம்பாட்டு. (திண்ணவித்யாதி) (கோல்களாலே மாறியடித்தாலும்) என்றது - ஒரு கோலாலே அடித்து அத்தை விட்டுப்பின்னையும் ஒருகோலாலே அடித்து, இப்படி அநேகப்ரகாரேண வடித்தாலுமென்றபடி. (ஈடுபடாத) நோவுபடாத. அதாவது-சிதிலமாகாதவென்றபடி. "திரையுறிமேல் திண்ணக்கலத்தில் வைத்தவெண்ணெய்" என்றந்வயம் திருவுள்ளம்

வாங்கவொண்ணாதபடியாகவிறே வைத்தது. அன்றிக்கே - திரைக் கயிறுகள்சூழ நாற்றிக் கண்ணித்தெறித்த உறியென்னவுமாம். (வெண்ணெய்விழுங்கி) "வெண்ணெயானத்தைப் பாத்ரத்தை நீக்கி விழுங்கினன்" என்னுமையாலே வைத்தகுறியழியாதிருக்கச் செய்தே பதறி விழுங்குகையாலே வழிந்து சிதறிக்கிடக்கக் கண்டதத்தனையென்று தோற்றுகிறது.

(விரையனுறங்கிடுமண்ணல்) வெண்ணெய் விழுங்குகிறபோதில் பதற்றத்திலுங் காட்டில், பதறிஉறங்கப்புகுந்தால் அக்கண்ணுறங்குமோ? இவன் பதற்றத்துக்குக் கண்ணுறங்குமோ? குறுமிழிக் கொண்டு, வந்தார் போனார் நிழலாட்டம் கண்டோமென்று பார்த்திறே உறங்குவது. "இதுஎன்னபொய்யுறக்கம்தான்" என்று கண்டு கொள்வர்களிறே.

---

வ்யா. (வெண்ணெய் விழுங்கி) இப்படி சேமித்துவைத்த வெண்ணெயை வைத்தகுறியழியாமல் "தைவம் கொண்டதோ?" என்னும்படி விழுங்கி. (விரையனுறங்கிடும்) உடையவர்கள் காணுமதற்கு முன்னே கடுகப் போந்து, அறியாதவரைப் போலே கிடந்து உறங்கா நிற்கும். வெண்ணெய் விழுங்குகிற போதைப் பதற்றத்திலுங் காட்டில் பதறி உறங்கப்புக்கால் கண்ணுறங்குமோ? குறுவிழிக்கொண்டு, வந்தார் போனார் நிழலாட்டம் பார்த்துக்கொண்டு கிடக்கையாலே, "இதென்ன பொய்யுறக்கம்" என்று பிடித்துக் கொள்ளுமவர்களிறே.

---

பற்றித் தாத்பர்யார்த்தமருளுகிறார் (இப்படியித்யாதி). (சேமித்து) ரக்ஷித்து. "வேகவானாய்க்கொண்டு உறங்கியும்" என்று சப்தார்த்தம் திருவுளம்பற்றித் தாத்பர்யார்த்தமருளுகிறார் (உடையவர்களித்யாதி). (உடையவர்கள்) வெண்ணெயுடையவர்கள். (உறங்காநிற்கும்) என்றது - உறங்குமாபோலே நிற்குமென்றபடி. உறங்கவேணுமென்று ஓடிவந்தவன்-உறங்குமாபோலே யிருப்பானென்னென்ன வருளுகிறார் (வெண்ணெயித்யாதி). தன்னடையே கண்ணுறங்குமொழிய, இவனுக்கு வேண்டினபோது கண்ணுறங்குமோவென்று கருத்து. வெண்ணெய்விழுங்கி உறங்குமாபோலே யிருக்கையை, அவளறிந்தபடி யெங்ஙனே யென்ன வருளுகிறார் (குறுவிழியித்யாதி). (குறுவிழி) குறுகினமிழி. அரைமிழிக்கொள்ளுகை யென்றபடி. "திருடன்" என்று அவர்கள் பிடிக்கையால், இவளறிந்தாளென்று இவ்வாக்யத்துக்குத் தாத்பர்யம்.

மூ.—
பள்ளத்தில்மேயும் பறவையுருக்கொண்டு
கள்ளவசுரன் வருவானைத் தான்கண்டு
புள்ளிதுவென்றுபொதுக்கோவாய் கீண்டிட்ட [வாராய்க்காக்காய்.
பிள்ளையை வந்து குழல்வாராயக்காக்காய் பேய்முலையுண்டான்குழல்

(அண்ணல்) திருவாய்க் குலத்துக்குஸ்வாமியானவன். (அமரர் பெருமானை) பரமபதத்தில் ஸூரிகளுக்கு மவ்வருகாய் பெரியனாய், அவர்களை நிர்வஹிக்குமவன். நிர்வஹிப்பதுதான் அவர்களோடே கலந்து பரிமாறியிறே. (ஆயர்தம்கண்ணனை) திருவாய்ப்பாடிக்குரக்ஷகன்; ஸுலபன்; அவர்கள் கண்ணுக்கு விஷயமானவன். (கார்முகில்வண்ணன் குழல்வாராய்) நீர்கொண்டெழுந்த காளமேகம் போலே அவர்களுக்கு ஸகலதாபஹரனுமா யிருக்குமவன். திரையுறி-பெரிய உறி. .... .... .... (௩)

ஸ்வா;—நாலாம்பாட்டு. (பள்ளமித்யாதி) குணத்திலேதோஷதர்சநம் செய்து ப்ரச்சந்நரூபியுமாயிறே பகாஸுரன்தான்வந்தது.

(அண்ணல்) ஸ்வாமி. இந்த நவநீதசௌர்ய வ்ருத்தாந்தத்தாலே அநுகூலரானவர்களை யெழுதிக் கொள்ளுமவன். (அமரர் பெருமானை) * அயர்வறு மமரர்களதிபதியை. மேன்மைக்கு இதுக்கவ்வருகு சொல்லலாவதில்லையிறே. (ஆயர்தம்கண்ணனை) அம்மேன்மைக்கெதிர்த்தட்டான நீர்மை சொல்லுகிறது. இடக்கை வலக்கை யறியாத இடையர்க்கு நிர்வாஹகனானவனை. (கண்ணன்) அவர்களுக்குக் கண்ணானவனென்னவுமாம். (கார்முகில்வண்ணன்) வர்ஷுகவலாஹகம்போலே யிருக்கிற வடிவையுடையவன். இத்தால் - அநுபவிப்பார்க்கு ச்ரமஹரமான வடிவையுடையவனென்கை. குழல்வாராய். .... .... .... .... (௩)

திருடனென்று சொல்லி, ஸ்வாமி யென்பானென்னென்ன வருளுகிறார் (நவநீதேத்யாதி). "ஆயர்தம் கண்ணனை" என்று மேல் ஸௌலப்யம் சொல்லவேண்டுகையாலே, இப்பதத்தால் பரத்வம்சொல்ல வேண்டி, சப்தார்த்த மருளுகிறார் (அயர்வறுமித்யாதி). இத்தை உபபாதிக்கிறார் (மேன்மைக்கித்யாதி). இத்தால் நீர்மையைச் சொல்லும்படியைக் காட்டாநின்றுகொண்டு, சப்தார்த்தமருளுகிறார் (இடக்கையித்யாதி). "கார்"என்று வர்ஷாகாலமாய், அதில் மேகமென்று சப்தார்த்தம் திருவுள்ளம்பற்றி யருளுகிறார் (வர்ஷுகேத்யாதி). "கார்" என்று விசேஷித்ததுக்குத் தாத்பர்யம் (இத்தாலித்யாதி). ... ... ... ... ... ... ... ... (௩)

நீர்த்தாழ்வீலே ஆமிஷக்ராஹியாய் மேய்ந்து திரிகிற பெரும்கொக்குக் களோடே தானும் அவற்றிலே ஒன்றாய் ஆமிஷக்ராஹியாய்த் திரிந்தாலும் வேறுபாடு தோன்றுமிறே. தோன்றியிறே "கள்ளவசுரன்" என்றது. (வருவானை) தன்மேல் வருகிறவனை. (தான் கண்டு) அந்யபரனாய் இவன் கொலைவுபாடறியாதே விளையாடுகிற தான் கண்டு.

(புள்ளித்யாதி) என்பாக்யத்தாலே "இது†பொதுப்புள்" என்று, ✻தின்னவிரும்பாக்கன்றுபோலே உபயாகாரமானவேஷமாகக்கண்டு. 'பொது" என்றாலும் வேறுபாடு தோன்றும். இப்படி பொதுவாய்

வ்யா;—நான்காம்பாட்டு. (பள்ளத்திலித்யாத) நீர்த்தாழ்வுகளிலே இரையெடுத்துத் திரியாநிற்கும் பக (ஊ) மாகிறபக்ஷியின் வடிவைக்கொண்டு. (கள்ளவசுரன்) க்ருத்ரிமமான அஸுரன். தன்னுடைய ரூபத்தை மறைத்து பகரூபங்கொண்டுவந்தது - க்ருத்ரிமனுகையாலேயிறே. (வருவானைத்தான்கண்டு) இப்படி ப்ரச்ச(ந்ந)ந்நனாய்க்கொண்டு தன்னை நலிய வருகிறவனை, அந்யபரனாய்க் கன்று மேய்த்து நின்று விளையாடுகிற தான்கண்டு.

(புள்ளிதுவென்று) அஸுரனென்று இத்தைகப்பொருக்க நினையாதே, ஒருபக்ஷியென்று ஆபாஸமாக நினைத்து. (பொதுக்கோவாய் கீண்டிட்ட) தன்னை நலிவதாக அங்காந்து வருகிறவாயை, அதினு

அரு;—நாலாம்பாட்டு. (பள்ளத்திலித்யாதி). க்ருத்ரிமத்வத்தை உபபாதித்துக்கொண்டு இப்படி விசேஷித்ததுக்குத் தாத்பர்யமருளுகிறார் (தன்னுடைய வித்யாதி). "கள்ளவசுரன் பள்ளத்தில்மேயும் பறவையுருக்கொண்டுவர, இப்படி வருவானை" என்றத்யாஹரித்து அந்வயம் திருவுள்ளம்பற்றித் தாத்பர்யமருளுகிறார் (இப்படியித்யாதி). "கண்டு" என்றபோதே, "தான்" என்றது அர்த்தஸித்தமாயிருக்க, விசேஷித்து அதுக்குத்தாத்பர்யமருளுகிறார் (அந்யேத்யாதி).

"பறவையுருக்கொண்டு" என்று கீழேசொல்லியிருக்கையாலே, "புள்", என்றுநினைக்கையேப்ராப்தமாயிருக்க, "புள் இது" என்றதுக்கு வ்யாவர்த்ய பூர்வகமாகத் தாத்பர்யமருளுகிறார் (அஸுரனித்யாதி). (ஆபாஸமாக) என்றது க்ஷுத்ரமாகவென்றபடி. (க)"[illegible]- வ்யாதிதாஸ்யஃ" "என்கிறப்ரமாணத்தை உட்கொண்டு, அவயவாந்தரங்களிருக்க, "வாய்" என்று சொன்னதுக்குத் தாத்பர்யமருளுகிறார் (தன்னையித்யாதி). (இத்தனையும்) என்றது

(க) வி-பு-௫-௧௬-௪. †(பா)-புக.

வந்தவஸுரராஜன் வாயைக்கீண்டிட்ட. "பொதுக்கோ" என்றுஒரு சொல்லாய், பொதுக்கென-சடக்கெனவென்னவுமாம். (பிள்ளையை) பிள்ளைத்தனத்தில் புரையில்லாதவனை. அதாவது-சிறுப் பிள்ளைகள் ஏதேனுமொரு விவரம் கண்டால் விளைவதறியாமல் அதுக்குள்ளே கைநீட்டுமாபோலே, பகாஸுரன், ஜந்துக்கள் நடுங்கும்படி வாயை அங்காந்து கொண்டு வந்தவாறே கையைநீட்டினான். அபூர்வதர்ஶ நத்தாலே கைபூரித்து அத்தாலே பிளந்து விழக்கண்ட வித்தனை. ப்ரதிகூலித்துக்கிட்டினார் முடிந்து போம்படியான முஹூர்த்த விசேஷத்திலேயிறே பிள்ளைபிறந்தது. இல்லையாகில், "பிள்ளையைக் கொக்கு விழுங்கிற்று" என்னு மித்தனையிறே. அங்ஙனாகாமல் தன்னை நோக்கித் தந்தவுபகாரத்தாலே "குழல்வாராய்" என்கிறார். (பேய்முலையுண்டான) புள்ளீட்டுக்கும் பேயீட்டுக்கும் பிழைக்கப் பெற்றதெனகிறார். பிள்ளைகளுக்கு இரண்டும் வருவதாகச் சொல் லிப்போருவதொன்றுண்டிறே. .... .... .... (ச)

---

டைய நினைவுக்கிடமறும்படி சடக்கெனக் கிழித்துப் பொகட்ட. "பொதுக்கோ" என்கிறது- பொதுக்கெனவென்றபடி. அதாவது- சடக்கெனவென்கை. (பிள்ளையை) பிள்ளைத்தனத்தில் புரையில்லா தவனை. இத்தனையும் செய்யா நிற்கச்செய்தே இதுதானுமொரு விளையாட்டாயிருந்தபடி. (பேய்முலையுண்டான்) அவள் முலையுண் கிறவிடத்தில் பிள்ளைத்தனத்தில் புரையில்லாதாப்போலேயாய்த்து- இதுவும். .... .... .... .... .... .... (ச)

---

இப்படி துர்க்கடமான வ்யாபாரத்தையுமென்றபடி. (இதுதானும் ஒருவிளை யாட்டாயிருந்தபடி) என்றதாலே, நீயும் குழல்வாரி அநுகூலவ்ருத்தி பண்ணுவிடீல் ப்ரதிகூல கோடியிலேயாய், "புள்" என்றே உன்வாய் கீணு கையும ஒருவிளையாட்டாய் விடுமென்று தோற்றுகிறது. "அதுபிள்ளைத்தன த்தால் வந்த விளையாட்டாக வேணுமோ? அஸுரனென்றே வாயைக் கீண் டானென்னலாமே" என்ன; அதுக்குப் பரிஹாரமாக பேய்முலையுண்டா னென்றருளிச் செய்கிறரென்று திருவுள்ளம்பற்றித் தாத்பர்யமருளுகிறார் (அவளித்யாதி). ப்ரதிகூலித்துக்கிட்டினார் முடியக் கடவவஸ்துஸ்வ பாவ த்தாலே, பேய் முலையுண்கை முடிக்கைக்கு ஹேதுவாமாபோலே, வாய்கீ ணுகை யாகிற விவையும் அதுமுடியும்படியாயிற்று. ஆகையால் உன் விஷ யத்திலும் அப்படி வாராமைக்காகக் குழல்வாரவாவென்கிறு ரென்று திருவுள்ளம். ... ... ... ... ... ... ... (ச)

மூ.—கற்றினம்மேய்த்துக் கனிக்கொருகன்றினைப்
பற்றியெறிந்த பரமன்திருமுடி
உற்றனபேசி நீ யோடித்திரியாதே [குழல்வாராயக் காக்காய்.
அற்றைக்கும்வந்து குழல்வாராயக் காக்காய் ஆழியான்றன்

---

வ்யா;—அஞ்சாம்பாட்டு. (கற்றினமித்யாதி) வறட்டாக்களின் பின்போக வேண்டியிரான்போலே காணும். சற்றுக்களை மேய்த்து அவற்றின் வயிறு தடவிப்பார்த்தால் அவற்றின் வயிறு நிறைந்தாலிறே தன்வயிறு நிறைந்ததாவதும். இப்படி பூர்த்திபிறந்தவளவிலே மேய்கிற விளங்கன்றுகளைக்கண்டவாறே, இவற்றை விடா, அவற்றோடே விளையாடுவதாகச்சென்றவாறே "எப்போதோ வருவது" என்று அதுக்குள்ளேகன்றாகநின்றவஸுரர்களையும் பார்த்துவேறுபாடு தோன்றுகையாலே, முள்ளாலேமுள்ளைக்களைவாரைப்போலே, அஸுரமயமான கன்றுகளை யெடுத்து விளாவானவஸு

---

வ்யா;— ஐந்தாம்பாட்டு. (கற்றினம்மேய்த்து) கன்றுகளினுடைய திரளைமேய்த்து. பால்யத்தில் கன்றுகள் மேய்த்து, பின்பிறே பசுக்கள்மேய்ப்பது; ஆகையாலே இவனும் கன்றுகள்மேய்க்சத் தொடங்கினுனாய்த்து. (கனிக்கொருகன்றினைப் பற்றியெறிந்த) இப்படி கன்றுமேய்த்துத் திரியாநிற்கிறவிடத்திலே, தன்னை நலிகைக்காகக் கன்றான வடிவைக்கொண்டும் விளாவானவடிவைக்கொண்டும் வந்து † திரிகிறார் சிலவஸுரர்களைக்கண்டு. (க) விளங்கனிக்கிளங்கன்றுவிசிறி" என்கிறபடியே முள்ளாலேமுள்ளைக்களையுமாபோலே அஸுரமயமாய்வந்து நின்றவொருகன்றை, காலைப்பிடித்துத்தூக்கி யெடுத்து

---

அரு;—அஞ்சாம்பாட்டு. (கற்றினமித்யாதி) "பசுக்களை மேய்த்து" என்னாதே, "கன்றுமேய்த்து" என்பானென்னென்ன வருளுகிறார் (பால்யேத்யாதி). "ஒரு கன்றினைப்பற்றி கனிக்கெறிந்த" என்றந்வயம் திருவுள்ளம் பற்றி, ப்ரமாணப்ரஸித்தார்த்தங்களைஉட்கொண்டு தாத்பர்யமருளுகிறார் (இப்படியித்யாதி). இன்னும் பழம் வீழக்கல்லையெறிவாரொழிய, கன்று மேய்க்கிறவன் கன்றை யெறியக்கூடுமோ வென்ன வருளுகிறார் (தன்னையித்யாதி). (திரிகிறார்சில) திரிகிறானசில வென்றபடி. (களையுமாபோலே) வாங்குமாபோலே. (காலைப்பிடித்து) என்றவிடத்திலே, (௨) "గృహీత్వా ఉపరపాదాభ్యాం సహాలాఙ్గూల మచ్యుతః। భ్రామయిత్వా కపిత్థాగ్రే ప్రాహిణో ద్గతజీవితమ్ -

---

(க) தி-மொழி-அ-௯. (௨) பாக-௧0-௧௧-௩௨. †(பா) நின்ற.

ரர்கள் மேலேயெறிந்து நிரஸித்து ஜகத்துக்கு ஒருபரதேவதையை புண்டாக்கித் தந்தவுபகாரகனுடைய ஆதிராஜ்ய ஸூசகமான திரு முடிகாண்.

(நீ-உற்றன பேசியோடித்திரியாதே) ஒரு நிபுணாசார்ய ஸேவை செய்யாமல் ப்ரதீதிமாத்ரத்திலே ஒன்று போலே தோன்றக் கடவதுமாய் விவக்ஷாவசமுமான சப்தார்த்தங்களை விஸ்வஸித்து, ப்ரதிஜ்ஞை, உபபாதக நிகமநங்கள் சேரும் ப்ரகாரங்கள் பாராதே நெஞ்சில் தோன்றின வர்த்தங்களை விஸ்வஸித்து, இதுவே வேதார்த்தமென்று சொல்லி ஜகத்தை மோஹிப்பித்து ஸத்துக்களைக்கண்டால் முகம்மாறிப்போவது வருவதாய்த்திரியாதே. (அற்றைக்கும்வந்து) எற்றைக்கும் வந்திலையாகிலும், உபாயாந்தர நிஷ்டரால் வந்த தோஷம் போம்படி திருமஞ்சனம் செய்து நிற்கிறவற்றைக்காகிலும் வரவேணுங்காண். அற்றைக்கு வந்தால், அது தான் எற்றைக்கும் வந்து குழல்வாரிற்றாயிறே யிருப்பது. (ஆழியான் தன்குழல்வாராய்) *சீரானெரியும் திருநேமி, *கருதுமிடம்பொருது, கை நின்ற சக்கரத்தான் காண் அவன். (௫)

அந்த விளங்கனி உதிருகைக்காக எறிந்து, இரண்டையும் சேரமுடித்துப் பொகட்ட, (பரமன் திருமுடி) தன்னை நலியவந்த இவற்றின் கையில் தான்அகப்படாதே, அவற்றை நிரஸித்து ஜகத்துக்குப்பரம சேஷியான தன்னை நோக்கித்தந்த உபகாரகனுடைய திருமுடியை.

(உற்றனபேசி நீயோடித்திரியாதே)உன்னுடைய ஜாத்யுசிதமான வற்றைச் சொல்லிக்கொண்டு, ஓரிடத்திலே நிலையின்றிக்கே நீபறந்து திரியாதே. (அற்றைக்கும்வந்து குழல்வாராய்) நாள்தோறும் வந்து க்ருஹீத்வா z பரபாதாப்யாம் லாஹூலாங்கூலமச்யுத:। ப்ராமயித்வா கபித்தாக்ரே ப்ராஹிணோத்கதஜீவிதம்'' என்கிற வசநமநுஸந்தேயம். அக்காக்கை வந்து குழல்வாருகைக்கு ஜகதுபகாரகத்வத்தை ஹேதுவாகச் சொல்லுகிறரென்று திருவுள்ளம்பற்றி, அந்த உபகாரகத்வம் சீழ்பதஸமபிவ்யாஹார லப்யமான பரம சப்ததாத்பர்யமாகவருளுகிறர் ( தன்னைநலியவித்யாதி).

(ஜாத்யுசித மானவற்றைச் சொல்லிக்கொண்டு) என்றது-(க) ''காக்கை வாயிலும் கட்டுரைகொள்வர்'' என்கிறபடியே கண்டார்க்கு நன்மையை ஸூசிப்பித்துக்கொண்டென்றபடி. இத்தால் அந்யபரதையை விடவேணுமென்று கருத்து. நீவாராதே அவிதேயமாயிருக்கில், நிக்ரஹிக்கும்படி

(க) பெரி-தி-௫-௧-௧.

மூ.—கிழக்கில்குடிமன்னர் கேடிலாதாரை
அழிப்பான் நினைந்திட் டவ்வாழியதனால்
விழிக்குமளவிலே வேரறுத்தானைக் [குழல்வாராயக் காக்காய்.
குழற்கணியாகக் குழல்வாராயக் காக்காய் கோவிந்தன்றனை

ஸ்வா.—ஆறும்பாட்டு. (கிழக்கிலித்யாதி) ப்ராக்ஜ்யோதிஷவாஸிகளான நரகாஸுரன் துடக்கமானார்கள் - கேடிலாதாரை அழிப்பான் நினைத்திட்ட கிழக்கில் குடிமன்னர். (விழிக்குமளவிலே) அழிப்பதாகவறுதியிட்டு "அழிக்கைக்குக்காலம் இது" என்று நினைக்கிற வளவிலே. கேடிலாமையாவது - ப்ரஹ்மபாவனையிலே ஊற்றமாய், கர்மபாவனையிலே அநாதரம் பிறக்கை. இப்படி கேடிலாத இந்த்ராதிகளையும் ராஜகந்யகைகளையும் அழிப்பதாகக் கோலினவர்

திருக்குழல்வாராய். (ஆழியான்) திருவாழியையுடையவன். அவிதே(தீ)யரை நியமிக்கவல்ல பரிகரமுடையவனென்கை. (ரு)

வ்யா;—ஆறும்பாட்டு. (கிழக்கில் குடிமன்னர்) ப்ராக்ஜ்யோதிஷபுரவாஸிகளாய் நரகாஸுரப்ரப்ருதிகளான அஸுரராஜாக்களை, (கேடிலாதாரை) வரபல புஜபலங்களுண்டாகையாலே, "நமக்கொரு கேடில்லை" என்று நினைத்திருந்தவர்களை. (அழிப்பான் நினைந்திட்டு) ஆஶ்ரிதரான இந்த்ராதிகளை நலிகையாலே அழிக்கத் திருவுள்ளம்

பரிகரமுடையவனென்கிறாரென்று தாத்பர்ய மருளுகிறார் (அவிதேயரையித்யாதி). ... ... ... ... ... ... ... (ரு)

அரு;—ஆறும்பாட்டு. (கிழக்கிலித்யாதி) கிழக்கே குடியிருப்பை யுடையவர்களென்று சப்தார்த்தம் திருவுள்ளம்பற்றி ப்ரமாணப்ரஸித்தியை உட்கொண்டு, அவர்கள் இன்னாரென்றர்த்தமருளுகிறார் (ப்ராகித்யாதி). (க) "సభార్యో గరుడారూఢః ప్రాగ్జ్యోతిష పురంయయౌ - ஸபார்யோகருடாரூடঃப்ராக்ஜ்யோதிஷ புரம்யயௌ" என்றது அநுஸந்தேயம். "வேரறுத்தானை" என்றுமேலேயிருக்க, "கேடிலாதாரை" என்னக்கூடுமோ வென்ன; அவர்களபிஸந்தியைப்பற்றி யென்றருளுகிறார் (வரபலேத்யாதி). (௨) "దేవానాం దానవానాఞ్చ సామాన్యమధిదైవతమ్ - தேவாநாம் தாநவாநாஞ்ச ஸாமாந்யமதிதைவதம்" என்றிருக்க, இவர்களை அழிப்பானென்னென்ன வருளுகிறார் (ஆஶ்ரிதேத்யாதி). (நலிகையாலே) என்றவிடத்தில், (௩) "ఇన్ద్రేణహృతఛత్రేణ హృతకుణ్డలబన్ధునా। హృతామరాద్రిస్థానేన జ్ఞాపితోఽథామచేష్టితమ్ - இந்த்ரேணஹ்ருதசத்ரேணஹ்ருதகுண்டலபந்துநா ஹ்ருதாமராத்ரிஸ்த்தாநேநஜ்ஞாபிதோ,

(க) பாக-௧0-ருக-௩. (௨) க-ஜித. (௩) பாக-௧0-ருக-௨.

Xதேரமே - சித்ரகூடம் கதேராமே" என்கிறபடியே, பொலிவையு டைத்தாய், விளங்காநின்றுள்ள சித்ரகூடபர்வத பார்ஸ்வத்திலே, நாய்ச்சியாரும் தாமும் எழுந்தருளியிருக்கச்செய்தே ரஜோகுண

---

ஸ்சித்ரகூடோயம் கிரிராஜோபமோகிரி: யஸ்மிந்வஸதி காகுத்ஸ்த்த: குபேர இவநந்தநே" என்கிறபடியே திருவயோத்யையிலிருப்பிலுங் காட்டில் உகந்தெழுந்தருளியிருக்கும்படி, சோலைகளும் சுனைகளும் பாறைகளும் அருவிகளும் முதலானவற்றால் வந்த பொலிவையு டைத்தாய் விளங்காநின்றுள்ள சித்ரகூடபர்வத பார்ஸ்வத்திலே எழுந்தருளியிருக்கச் செய்தேயிறே, காகம் வந்து அபராதம் பண் ணிற்று.

பிராட்டியும் தாமுங்கூட ஜலக்ரீடை பண்ணின பின்பு, பெரு மாள் மடியிலே மூந்துறப் பிராட்டி கண்வளர்ந்து, அநந்தரம் (க) "பர்யாயேணப்ரஸுப்த:- பர்யாயேணப்ரஸுப்த:" என்கிறபடியே

---

என்று தொடங்கி, (அபராதம் பண்ணிற்று) என்னுமளவும். இத்தால் இப்படி பிராட்டியோடே ரஸித்துக்கொண்டிருக்கும் தேசத்திலே அபராதம் பண்ணு கையாலே, "க்ரூராபராதி" என்று கண்கொள்ளுகைக்கு ஹேது தோற்றுமெ ன்று திருவுள்ளம். எடுத்த ப்ரமாணத்துக்குத் தாத்பர்ய மருளுகிறார் (திருவ யோத்யையிலித்யாதி). "சித்ரகூடம்" என்றதைக்கடாக்ஷித்து பர்வத ஸ்வபாவாநு குணமாகப் பொலிவை விசேஷிக்கிறார் (சோலைகளுமித்யாதி). (பார்ஸ்வத்திலே) என்றது, (உ) "శైలస్యచిత్రకూటస్య పాదేపూర్వోత్తరేతదా - ஶைலஸ்யசித்ரகூடஸ்ய பாதேபூர்வோத்தரேததா" என்கிற ப்ரமாணத்தை ப்பற்ற. "பாதே" என்றது - பர்யந்தபர்வதத்தை.

"பெருமாளருகேயிருக்க, பிராட்டி விஷயத்தில் அபராதம் காகத்துக்கு ப்பண்ணக்கூடுமோ? அந்தக்காகத்தின் ஸ்வரூபம்தானேது? அபராதம்பண் ணநிமித்தந்தானேது? அந்த வபராதத்தின்படிதானேது; அபராதாநுகுண மாகத்தலையை அறுக்க ப்ராப்தமாயிருக்க, கண்ணோடே ச(ஞ்)ரிதார்த்தமாக்கக் காரணந்தானேது" என்கிற ஜிஜ்ஞாஸாப்ரஸ்நங்களை சமிப்பித்துக்கொண்டு, "உற்ற வடிவு" இத்யாதிக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார் (பிராட்டி) என்று தொடங்கி, (சுருங்கச்சொல்லுகிறது) என்னுமளவும். (௩) "విహృత్యసలిలేనాథ వాంకేసముపావిశమ్ - விஹ்ருத்யஸலிலக்லிந்நாதவாங்கேஸமுபாவிஶம்" என் றத்தைக்கடாக்ஷித்து (ஜலக்ரீடையித்யாதி). (கண்ணழிவு) என்று (ஸாஹம்)

(க) ரா-ஸு-௩அ-உக. (உ) ரா-ஸு-௩அ-கஉ. (௩) ரா-ஸு-௩அ-கச.

ப்ரசுரனை ஜயந்தன் விஹிதமான கர்மபலாநுஹங்காரத்தளவில் நில்லாமல் தாமஸராஜஸம் தலையெடுத்து, அத்தாலேவிஷயப்ராவண்யம் தலையெடுத்து, ஜந்ய ஜநகவிபாக(ஜ்ஞாந)ம் பாராமல் தேவசரீரத்திலும் காக சரீரத்தை உத்தேஶ்யமாக நினைத்தெடுத்துச்சிலதுஶ்சேஷ்டைகளைப்பண்ணுகையாலே, அத்தைக்கண்ட பெருமாள் இவனைநோக்கி மந்தகதியாக ஓரஸ்த்ரத்தைவிட, அது இவனுக்கு முன்னேயோட்டுக் கொடுத்துப்பின்னே செல்ல; (க)"𑌤𑍍𑌰𑍀𑌨𑍍 𑌲𑍋𑌕𑌾𑌨𑍍 𑌸𑌮𑍍𑌪𑌰𑌿𑌕𑍍𑌰𑌮𑍍𑌯 - த்ரீந் லோகாந்ஸம் ரிக்ரம்ய" என்கிறபடியே அனைத்துலகம் திரிந்தோடி, ஒதுங்கநிழலற்று ப்ராணஸாபேக்ஷனாய், "𑌤𑌮𑍇𑌵 𑌶𑌰𑌣𑌂 𑌗𑌤𑌃 - தமேவ ஶரணங்கத:" என்று கண்டகப்ரபத்தி செய்திருக்கச் செய்தேயும், "இவனுக்கு அபேக்ஷா மாத்ர ப்ரதாநமேயன்றோ வேண்டுவது"

பிராட்டி மடியிலே பெருமாள் கண்வளர்ந்தருளா நிற்கச்செய்தே, இந்த்ரபுத்ரனை ஜயந்தன், ஆஸுரப்ரக்ருதியாகையாலே தேவரூபத்தை மறைத்துக் காகரூபத்தைப் பரிக்ரஹித்துக்கொண்டு 'ஜநநி', என்றறியாதே, பிராட்டியுடைய வடிவழகைக்கண்டு, விபரீதபுத்தியாலே வந்து திருமேனியிலே புண்படுத்த, அத்தாலே பெருமாள் சீறியருளி, காகத்தைக்குறித்து ப்ரஹ்மாஸ்த்ரத்தை ப்ரயோகிக்க, அது புக்கவிடமெங்கும் தொடருகையாலே, ஓரிடத்திலும் போக்கற்று, (க)"𑌤𑌮𑍇𑌵 𑌶𑌰𑌣𑌂 𑌗𑌤𑌃-தமேவசரணங்கத:" என்கிறபடியே தன்னுடைய ப்ராணரக்ஷணார்த்தமாக வந்து சரணம்புக, அத்தாலே, ப்ரஹ்மாஸ்த்ரத்துக்கு ஒருகண்ணழிவைக்கற்பித்து, ப்ராணனோடே போகவிட்ட கதையைச்சுருங்கச்சொல்லுகிறது-(உற்றவடிவிலொரு கண்ணுங்கொண்ட) என்று. அதாவது-விபரீதபுத்தியடியாகப் பிரா

சாடு. ப்ரஹ்மாஸ்த்ரத்துக்கு ஒருஹாநியைக்கல்பித்தென்றபடி; "காகத்தின் கண்ணையழித்தான்" என்றது - ஸ்வபாவார்த்தம். "பிராட்டி" என்றும், "இரண்டு கண்ணில்" என்றும் அத்யாஹரித்துக்கொண்டு, "பிராட்டி வடிவிலுற்ற விரண்டு கண்ணில் ஒருகண்ணும் கொண்ட" என்று அந்வய முகேந ஶப்தார்த்தத்தை விவரிக்கிறார் (அதாவதித்யாதி). "வடிவிலுற்ற" என்று விசேஷிக்கையாலே, அவயவாந்தரங்களை விட்டுக் கண்ணைப் பறித்து விட்டாரென்று தோற்றுமென்று திருவுள்ளம்.

(க) ரா-ஸு-௩௮-௩௩.

என்று திருவுள்ளம்பற்றி, வடிவழகிலுற்ற விரண்டு கண்ணிலொரு கண்ணுங் கொண்டவக்கற்றைக் குழலன் கடியன்.

அந்த அஸ்த்ரந்தான் யதேஷ்டாஉமோக(ஷ)வர்வாஸ்த்ரமிறே. "[illegible]" என்றிறே திருநாமம். (க) "பொய்யர்க்கேபொய்யனாகும்" (உ) "கொடுங்கோளால் நிலங்கொண்ட". இரண்டுகண்ணும் விஷயாதர்ஶநம்செய்தால்இரண்டையு மழிக்க ப்ராப்தமாயிருக்க, ஒன்றைஅழியாதேயிருந்தது, (௩) "குழல்களிருந்தவா காணீரே" என்கிற கற்றைக் குழலனைக் காண்கைக் காகவிறே. (ச) "[illegible] குர்தண்டஃ ப்ரபந்நஸ்ய" என்கிறபடியே ப்ரபந்நனுக்கு லகுதண்டமே யுள்ளதிறே. கற்றை-செறிவு. அவன் கையிலே ராவணாதிகள் பட்ட தறிவுதியே; உன்னை மற்றைக்கண் கொள்ளாமே விரைந்து கோல்கொண்டுவா. கற்றைக் குழல்காணும்போது, ஒருகண் கொண்டு காண்கை போராதென்றிறே ஒன்றையும் இரண்டாக்கிற்று. ஒன்றிரண்டான கண்ணும் போகாமல் இனியாகிலும் ஆஜ்ஞாதிலங்கநம் செய்யாதே, அவனுடையவாஜ்ஞையை அவன்கையிலே கொடுக்கப்பாராய். "அவன் ப்ரபத்தி கண்டகமாயிராது" என்று காண் உன்னைக் குழல்வார அழைத்ததும். அந்தக் குழல்வாரின காக்கைக்கும் இந்தக்காக்

ட்டியுடைய வடிவிலே சென்று உற்ற இரண்டு கண்ணில் ஒரு கண்ணைப்பறித்து விட்டவனென்கை.

(அக்கற்றைக் குழலன் கடியன்) அப்படிப்பட்ட ஸ்வபாவனாய், செறிந்த திருக்குழலை யுடையனாயிருக்கிறவன்; குற்றத்துக்கீடாக தண்டிக்கும் க்ரூரன். (விரைந்தத்யாதி) ஆனபின்பு சொன்னது செய்யாமையாலே சிறி, உன்னை மற்றைக் கண்ணையும் பறியாதபடி

"உன்னைமற்றைக்கண் கொள்ளாமே விரைந்து கோல்கொண்டுவா" என்று அந்வயித்து,கீழ்ச்சொன்ன "கடியன்" என்றதைஹேதுவாக்கிக்கொண்டர்த்தமருளுகிறார் (ஆனபின்பித்யாதி), அந்தக்காகம் அந்தஃபுரத்ரோஹியாகையாலே தலையறுக்கப்ராப்தமாயிருக்க, கண்ணோடே போகின்றன். அவன் கோல்கொண்டு வாராத மாத்ரத்தைக் கொண்டு மற்றைக்கண்ணைக் கொள்வனோ? இப்படிநீசொல்லுகைக்கு ஹேதுவேதென்னுமாகாங்க்ஷையிலே, "நம்

(க) திருமாலை. (உ) தி-வாய்-ச-அ-௬. (௩) ௧-௨-௨).

மூ.—
மின்னிடைச் சீதைபொருட்டா விலங்கையர்
மன்னன் மணிமுடிபத்து முடன்வீழத்
தன்னிகரொன்றில்லாச் சிலைகால்வளைத்திட்ட [கோல்கொண்டுவா.
மின்னுமுடியற்கோர் கோல்கொண்டுவா வேலையடைத்தாற்கோர்

கைக்கும் வாசி "கள்ளர், பள்ளிகள்" என்னுமாபோலே. (மணிவண்ணநம்பிக்கோர்கோல் கொண்டுவா) நீலரத்நம் பொன்ற வழகையும் ஸ்வாதந்த்ர்யபூர்தியையு முடையவன்காண். .... (எ)

ஸ்வா;—எட்டாம்பாட்டு. (மின்னிடையித்யாதி) தன்னுடைய வரபல புஜபலங்களையும் மதிளையும் அகிழையுங்கண்டு கர்வத்தாலே செய்வதொன்றையுமறியாமல், மின்போலே இடையையுடையாக விரைந்து கோல்கொண்டுவா. (மணிவண்ணநம்பிக்கு) நீலரத்நம்போன்ற வடிவையுடையனாய், ஸ்வாதந்த்ர்யத்தால் பூர்ணனானவனுக்கு ஓர் கோல்கொண்டுவா. .... .... .... (எ)

வ்யா;—எட்டாம்பாட்டு. (மின்னித்யாதி). மின்னோடொத்த இடையையுடையளாகையாலே - விரஹஸஹையல்லாத ம்ருதுப்ரபி" என்கிறாரென்று திருவுள்ளம்பற்றி யருளுகிறார் (ஸ்வாதந்த்ர்யத்தாலித்யாதி. ஸ்வதந்த்ரனாகையாலே விஹிதாகரணத்தையும் குற்றமாகக் கொண்டு சிக்ஷிப்பனென்று கருத்து. ... ... ... ... ... (எ)

அரு;—எட்டாம்பாட்டு. (மின்னித்யாதி) (க)" ஸஹி தேவைர்உதீர்ணஸ்ய ராவணஸ்ய வதார்த்திபி: அர்த்திதோ மாநுஷே லோகே ஜஜ்ஞே விஷ்ணுஸ்ஸநாதந:" ஸஹிதேவைருதீர்ணஸ்யராவணஸ்யவதார்த்திபி: அர்த்திதோமாநுஷே லோகே ஜஜ்ஞே விஷ்ணுஸ்ஸநாதந:" என்று தேவர்களுக்காக ராவணவதம் பண்ணிற்றென்றிருக்க, "மின்னிடைச்சீதை பொருட்டா" என்று சொல்லக்கூடுமோ வென்கிற சங்கையிலே, இவள் ப்ரதாநஹேதுவென்று தோற்றுகைக்காகத் தாத்பர்யமருளுகிறார் (மின்னோடொத்தவித்யாதி). இத்தால் இப்படி துக்கமறியாதவளை துக்கப்படுத்தினனாகையாலே, தேவர்களிலும் இவளை அவன் வதத்துக்கு ப்ரதாந ஹேதுவென்று கருத்து. மின்னோடொத்த விடையையுடையவளென்றதாலே உத்தமையான ஸ்த்ரீக்கு லக்ஷணம் சொல்லுகிறதாகையால் அவர்கள் ம்ருதுப்ரக்ருதிகளாயிருப்பரென்று திருவுள்ளம். "ஸீதை" என்று லாங்கலபத்ததியாய், அதிலே பிறந்தவளாகையாலே ஸீதையென்று திருநாம

(க) ரா-அயோ-க-௬.

யளாய் கர்ப(?)க்லேச ரஹிதையாயிருக்கிறவளைப் பிரிகையாலே அதுவே ஹேதுவாக லங்கையிலுள்ள ராக்ஷஸர்க்கெல்லாம்நிர்வாஹகனுயிருக்கிற ராவணனுடைய, ரத்நாதிகளாலே அலங்க்ருதமாயிருக்கிற முடிகளைத்தாய் தலையற்றுவிழத்தொடுத்த வளவிலும் முடிவு காணாமையாலே பத்தும் சேர ஓரம்பாலே விழும்படி.

(தன் நிகரொன்றில்லாச்சிலை கால்வளைத்திட்ட) உபமாந ரஹிதமான வில்லை வளைத்து விஜயாபிஷேகம் செய்தவன் காண். (வேலை

---

க்ருதியாய்,அயோநிஜையாகையாலே-கர்ப்பவாஸ க்லேசமுமுட்படவறியாத பிராட்டிக்காக. (இலங்கையர் மன்னன்) இப்படியிருக்கிறவளைப் பிரித்துக்கொண்டு போய்ச் சிறைவைத்தவனுய், லங்கையிலுள்ளார்க் கெல்லாம் நிர்வாஹகனுயிருக்கிற ராவணனுடைய. (மணிமுடிபத்து முடன் வீழ) ரத்நாதிகளாலே அலங்க்ருதமான தலைகளை ஓரொன்ருக அறுத்தவிடத்தில், அவன்கொண்ட வரபலத்தாலே மீளவும் மீளவும் கிளருகையாலே, பத்தும் சேர வொருகாலேயற்று விழும்படியாக.

( தன்னிகரித்யாதி ) தனக்கு உபமாநமாவ தொன்றில்லாதபடியிருக்கும் திருவில்லை, கால்வளையும்படி பண்ணின. (வளைத்து இட்ட) வளைத்து எய்த வென்றபடி. (மின்னுமுடியற்கு) இப்படி ராவணவதம் பண்ணுகையாலே - விளங்கா நின்றுள்ள வீராபிஷேகத்தையுடையனுய் நின்றவனுக்கு, ( வேலையடைத்தாற்கு ) (க) "சுரிகுழல் கனிவாய்" இத்யாதிப்படியே வேலையடைத்ததும் பிராட்டிக்காகவிறே.

---

முடையவளாகையாலே, அத்தையுட்கொண்டு தாத்பர்யமருளுகிருர் (அயோநிஜையித்யாதி). பிராட்டிக்காக ராவணனை வதிப்பானென்னென்கிற சங்கையை நிவர்த்திப்பிக்கைக்காக, ப்ராமண ப்ரஸித்தியைப்பற்ற ஹேதுவைக் காட்டுகிருர் ( இப்படியித்யாதி). "மணி" என்று புஷ்பாதிகளுக்கும் உபலக்ஷணமாக்கி, (ரத்நாதிகள்) என்றது.

"மின்னிடைச்சீதை பொருட்டா" என்றத்தை, "வேலையடைத்தாற்கு" என்றவிடத்திலும் அந்வயித்து அத்தை ப்ரமாண பூர்வகமாக உபபாதிக்கிருர் (சுரிகுழலித்யாதி). (இத்யாதி) என்றதுக்கு, "சுரிகுழல் கனிவாய்

---

(க) தி-மொ-ரு-௭-௭.

௯.—
தென்னிலங்கைமன்னன் சிரந்தோள் துணிசெய்து
மின்னிலங்குபூண் விபீடணநம்பிக்கு
என்னிலங்கு நாமத்தளவு மரசென்ற [கோல்கொண்டுவா.
மின்னிலங்காரற்கோர் கோல்கொண்டுவா வேங்கடவாணற்கோர்

---

யடைத்தாற் கோர் கோல் கொண்டுவா ) வேலையடைத்ததும் - (க) "சாபமாநய" என்றிறே. .... .... .... (அ)

ஸ்வா; — ஒன்பதாம்பாட்டு. ( தென்னிலங்கையித்யாதி ) (உ)"மைத்ரபாவம்-மித்ரபாவம்" என்றமாத்ரத்தாலே "ராவணாநுஜன்" என்று பாராதே, (உ)"நத்யஜேயம் - நத்யஜேயம்" என்று ரக்ஷித்த வனுக்கு, கீழ் பிராட்டிபொருட்டாகச் செய்ததெல்லாமொன்று யிருந்ததோ வென்கிறார். *தென்னிலங்கை மன்னன் சிரந்தோள் துணி செய்து விடுவதற்கு முன்னேயிறே மின்னிலங்கும் பூண் விபீடண நம்பிக்கு. மிக்க தேஜஸ்ஸை யுடைத்தான வாபரணங்

---

வ்யா;—ஒன்பதாம்பாட்டு. (தென்னித்யாதி). துர்க்க(துர்க)த்ரயயுக்தமாகையாலே ஒருவரால அழிக்கவொண்ணாதபடி யிருக்கும், கட்டளைப் பட்ட லங்கைக்கு நிர்வாஹகனான ராவணனுடைய. "தென்" என்று-அழகாய், கட்டளைப்பட்டிருக்கையைச் சொல்லுகிறது. (சிரந்தோள் துணிசெய்து) தேவர்கள் கொடுத்த வரபலத்தாலே அழிவில்லையாக நினைத்திருந்த தலைகளையும் தோள்களையும் துணித்துப்பொகட்டு. (மின்னித்யாதி) ஒளிவிடாநின்றுள்ள ஆபரணத்தையுடைய ஸ்ரீவிபீஷணாழ்வானுக்கு. (ங)"அந்தரிக்ஷகத ஸ்ரீமாந் -

---

திருவினைப்பிரித்த கொடுமையில் கடுவிசையரக்கன்" என்று தொடங்கி, "அரிகுலம்பணி கொண்டலை கடலடைத்தான்" என்னுமளவும் திருவுள்ளம். (அ)

அரு;—ஒன்பதாம்பாட்டு. (தென்னித்யாதி) வீரனாயிருக்குமவனுடைய ஸ்தாநத்துக்கு அழகாவது ஒருவராலழிக்கக் கூடாமையென்று திருவுள்ளம் பற்றி, அத்தை ஹேதுபூர்வகமாக வருளுகிறார் (துர்கேத்யாதி). துர்கத்ரயமாவது - ஜலதுர்கம், கிரிதுர்கம், வநதுர்கமென்றபடி. "மன்னனைத் துணி செய்து" என்றால் போராதோ? "சிரந்தோள்" என்று விசேஷித்துச் சொன்னதுக்குக் கருத்தென்னென்னவருளுகிறார் (தேவர்களித்யாதி). பெருமாள் தம்முடைய திருநாமம் ப்ரகாசிக்குமளவும் ராஜ்யம் கொடுக்கை உறுப்பாக, நம்பி என்றதால் வந்த பூர்த்தியை விசேஷித்துக் காட்டுகிறார் (அந்தரிக்ஷத்யாதி).

---

(க) ரா-யு-உக-உஉ. (உ) ரா-யு-கஅ-ங. (ங) ரா-யு-கசு-கஎ.

களை யுடையவனான ராவணனுடைய வாழ்ந்ததெல்லாம் அநர்த்த மென்றிறே, அவனை "துர்வ்ருத்தன்" என்றுபோந்தபின், அந்தரிக்ஷ கனைய் நிற்கச்செய்தே "ஸ்ரீமான்" என்னும்படி பூர்ணனானவனுக்கு, "என்னிலங்கு நாமத்தளவுமரசு" என்று அபிஷேகம் செய்தபின்பிறே சிரந்தோள் துணிசெய்தது. (மின்னலங்காரற்கோர்கோல் கொண்டுவா) மின்போலே அதிப்ரகாசத்தை யுடைத்தான †திருவபிஷேகத்தை யுடையவனுக்கு. (ஆரம்) முக்தாஹாரம். அன்றிக்கே; "ராமதனுபாரணம் அவர்க்கு. விபீஷண குணபாரணம் இவர்க்கு" என்னவுமாம். (க) "ப⁴வாந்நாராயணோ தே³வ:- பவாந்நாராயணோதேவ:" என்றதை "என்நாமம்" என்னப்பெற்றேனென்று, (௨) "ஆத்மாநம் மாநுஷம் மந்யே ராமம் த³ஶரதா²த்மஜம் - ஆத்மாநம் மாநுஷம் மந்யே ராமம் தசரதாத்மஜம்" என்று "என்பேர் ராமன். எங்கள் தமப்பனார் பேர் தசரதன்; எனக்கு நிரூபகநாமம்தாசரதி" என்றதிறே - இலங்கு நாமம் (௩) "நந்தன் மைந்தனாக வாகும் நம்பி" என்னுமாபோலே. (௪) "விபீடணற்கு நல்லான்" என்றது "தாசரதி" என்றபடியிறே. "நாராயணம்" என்றது-சிறுப்பேர் போலேகாணும். அதுக்குப்பரிஹாரமாக "நம:" என்று ப்ரஹ்வீபவித்தாரிறே. (வேங்கடவாணற்கோர் கோல்கொண்டுவா) (௫) "இராமனாய் மிடைந்தவேழ்மரங்களு

அந்தரிக்ஷகதஸ்ஸ்ரீமாந்" என்கிறபடியே லங்கையைவிட்டு அந்தரிக்ஷகதனும்போதே, ராவணஸம்பந்தத்தால் வந்த அஸ்ரீகுடிபோய், ராமஸம்பந்தத்தால் வந்த ஸ்ரீயால் பூர்ணனுகையாலே "நம்பி" யென்கிறது.

(என்னிலங்கித்யாதி) என்னுடைய உஜ்ஜ்வலமான நாமம் இந்த லோகத்தில் எவ்வளவும் செல்லும், அவ்வளவும் உனக்கு ராஜ்யம் நடக்கக்கடவதென்று அருளிச்செய்த. (மின்னலங்காரற்கு) ஒளிவிடாநின்ற வொப்பனையை யுடையவனுக்கு. (அலங்காரம்) ஒப்பனை. அன்றிக்கே, "மின்னிலங்காரற்கு" என்று பாடமானபோது-மின்போலே விளங்காநின்றுள்ள ஹாரத்தை யுடையவனுக்கென்று பொருளாகக்கடவது. (வேங்கடவாணற்கு) (க) "மிடைந்தவேழ்

"மின்னிலங்கு ஆரம்" என்று பதவிபாகம்பண்ணி அர்த்தமருளுகிறார் (அன்றிக்கேயித்யாதி). ... ... ... ... ... ... (௯)

(க) ரா-யு-௧௨௦-௧௩. (௨) ரா-யு-௧௨௦-௧௧. (௩) தி-மொ-௨-௨-௪.
(௪) தி-மொ-௯-௮-௫. (௫) திருச்சந்தவி-௮௧. † (பா) திருவாபரண.

மூ;—அக்காக்காய்நம்பிக்குக் கோல்கொண்டுவாவென்று
மிக்காளுரைத்தசொல் வில்லிபுத்தூர்ப்பட்டன்
ஒக்கவுரைத்த தமிழ்பத்தும் வல்லவர்
மக்களைப்பெற்று மகிழ்வரிவ்வையத்தே. .... .... (௧௦)

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.

---

மடங்கவெய்து வேங்கடமடைந்தமால்'' என்கையாலே, *கானமும் வானரமும் வேடுமுடைவேங்கடவாணன்காண். நிரங்குஶ ஸ்வாதந்த்ர்யம் நேராக ஜீவிப்பது இங்கேகாண். இவனுஜ்ஜைநயைக் கொண்டுவா. .... .... .... .... .... .... (௯)

நிகமத்தில் இத்திருமொழி கற்றார்க்குப்பலம் சொல்லித் தலைக் கட்டுகிறார்.

ஸ்வா;—(அக்காக்காயித்யாதி) திருக்குழல் பேணினகாக்கைக் கும் இதுக்கும் வாசியென்னென்னில்; நீர்மையால்வந்த ப்ரபத்தி யும் மேன்மையால் வந்த நிரங்குஶ ஸ்வாதந்த்ர்யமும், ஒன்றாகத் தான் காக்கை என்னாதே ''அக்காக்காய்'' என்றது. அகாரசப்த வாச்யனுடைய ரக்ஷையென்றபடி. ''அ'' என்கிறவிது ப்ரதமாபி(ஷ)

---

மரங்களூ மடங்கவெய்து வேங்கடமடைந்தமால்'' என்கிறபடியே- அவ்வவதார குணமெல்லாம் இங்கே ப்ரகாசிக்கும்படி திருமலைக்கு நிர்வாஹகனா யிருக்கிறவனுக்கு. .... .... .... (௯)

அவ;—நிகமத்தில் இத்திருமொழி கற்றார்க்குப் பலம் சொல் லித் தலைக்கட்டுகிறார்.

வ்யா;—(அக்காக்காய் நம்பிக்குக் கோல்கொண்டுவாவென்று)கன் றுகள் மேய்க்கப்போம்படி கோல்தேடித்தாவென்று, அழுகிறவனை அழுகைமருட்டுகைக்காகச்சொன்னபாசுரமாய்த்து இது. கீழ், ''அக் காக்காய்குழல்வாரவா''என்று அழைத்தவேயாதியிறே- இங்கு''அக் காக்காய் கோல்கொண்டுவா'' என்றதும். (மிக்காளுரைத்தசொல்) இருவருமொக்க நோன்பு நோற்கச்செய்தே, இவனைப்பெற்ற மாத்ர

---

அரு;—பத்தாம்பாட்டு. (அக்காக்காயித்யாதி) காக்கை கோல்கொண்டு வருமோ, இப்படிச் சொல்லுகிறதென்னென்ன வருளுகிறார் (கன்று மேய்க்க வித்யாதி). (இருவருமொக்க) என்றது-தேவகியும் யஶோதையும் ஸத்ருஶ மாக வென்றபடி.

தாகமிறே. ரக்ஷைக்கு விஷயமானது ரக்ஷ்யமாகையாலே "அக்காக்காய்" என்று ஸம்போதிக்கிறார். (க) "விஜ்ஞாநம் யஜ்ஞம் தநுதே-விஜ்ஞாநம் யஜ்ஞம்தநுதே" என்று விஜ்ஞாந ஶப்தம் ஜ்ஞாதாவையும் ஆஶ்ரயத்தாலே காட்டி, அந்த ஜ்ஞாதாவினுடைய ஜ்ஞாநம் ஜ்ஞேயஸாபேக்ஷமாயிருக்கையாலேயஜ்ஞத்தையும்காட்டினாப்போலே, ரக்ஷணவாசியான சப்தம் ஆஶ்ரயத்வாரா ரக்ஷகனை அகாரசப்தவாச்யனையும் காட்டி, ரக்ஷகனுடைய ரக்ஷை-சேதநஸாபேக்ஷமாய் ரக்ஷ்யத்தைக் காட்டுகையாலே, அத்தை "காக்கை" என்று ஸம்போதிக்கிறார்.

மற்றும் "பூவை, கிளி, குயில், மயில், அன்னம், பல்லி, காக்கை" என்றாப்போலே இவற்றைப் பார்த்துச் சிலகார்யங்களைக் குறித்துப் பலவிடங்களிலும் அந்யாபதேஶமும் ஸ்வாபதேஶமும் கொண்டார்களிறே. "நம்பிக்குக் கோல்கொண்டுவா" என்றமர்மம், இந்தக்காகஸமராயிருப்பார் - அவனுடைய ஆஜ்ஞை நோக்காதபோது அவனுடைய ஸங்கல்ப நிபந்தநமான ஸ்வாதந்த்ர்யம் வரையிடுமென்றன்று; அவனுடைய ஸ்வாதந்த்ர்யத்தை நோக்கில்லது உங்களுக்கும் பிழைக்கலாம் விரகுகளில்லை. அவன் ஸ்வாதந்த்ர்யத்திலே ஊன்றின ஸங்கல்பத்தில் கொடுமையை நினைத்துத்தட்டுப்படாதே கொள்ளுங்கோள். "அது மழுங்காத ஸங்கல்பம்" என்றறிந்து, நீங்கள் அவன் ப்ரபத்தியை உணர்ந்து அவன் திருவடிகளிலே விழுந்து, '(உ) ஸக்ருதேவ ப்ரபந்நாய-தவாஸ்மீதி ச யாசதே' என்று அவன் ஸ்வாதந்த்ர்யத்தை நோக்கினால் "இவர்களாலே நாம் ஸ்வதந்த்ரரானோம்" என்று அவன் உகக்கக் கூடும், அத்தைக்கண்டு இறுமாவாதே மேலே மேலே போந்து மங்களாசாஸநத்திலே வாருங்கோள்; என்னோடே கூடுங்கோளென்கிறார்.

(அக்காக்காய் நம்பிக்குக்கோல் கொண்டுவா வென்று மிக்காளுரைத்த சொல்) அவள் அழகை மருட்டிச் சொன்ன ப்ரகாரத்தை

---

மேயாய், இவனுடைய பாலசேஷ்டிதங்களொன்று மநுபவிக்கப் பெறாமையாலே, (௩) "திருவிலேனொன்றும் பெற்றிலேன்" என்ற தேவகிப்பிராட்டியைப் போலன்றியே, (௩) "எல்லாம் தெய்வநங்கை யசோதை பெற்றாள்" என்னும்படி இவ்வவதாரத்திலுள்ள ரஸமெல்

---

(க) தை-ஆ. (உ) ஸ்ரீ-க௮-௭௩. (௩) பெரு-௩-௭-௫.

புத்ரத்வநிபந்தமான வபிமாந ஸ்நேஹமாக்கி ஸ்வரூபாநு ரூபமான மங்களாசாஸநத்தோடே சேரும்படி.

(வில்லிபுத்தூர் பட்டன்) ஒக்கவருளிச் செய்த விந்தத் தமிழ் பத்தும், ஸாபிப்ராயமாக வல்லவர்கள். (மக்களைப் பெற்று மகிழ் வரிவ்வையத்தே) மக்கள் என்பது-மநுஷ்யரை. அதாவது - சிஷ்ய புத்ரர்களை. மங்களாசாஸந பர்யந்தமான ப்ரபத்தி குலையாதவர் களைப் பெற்றுமகிழ்வர். மகிழ்ச்சிக்கு விஷயம் இவர்களிறே. (௧0)

பிள்ளை திருவடிகளே சரணம்.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# பெரியாழ்வார் திருமொழி
# இரண்டாம்பத்து ஏழாம் திருமொழி
## ஆநிரைமேய்க்க ப்ரவேசம்.

அவ;—பகவச்சரணார்த்திகளையும் கேவலரையும்ஐஶ்வர்யார்த்திகளையும் அழைத்து அவர்களிசைந்துவர, தம்மோடேலா மநுபவிக்கப்பெற்ற பாக்யாதிகையான யசோதைப் பிராட்டி சொன்ன சொல்லை.

(வில்லிபுத்தூர்ப் பட்ட னுக்கவுரைத்த தமிழ் பத்தும் வல்லவர்) ஸ்ரீ வில்லிபுத்தூருக்கு நிர்வாஹகரான பெரியாழ்வார் அவளுடைய பாவபந்தத்தை யுடையராய், அவள் சொன்னுப் போலே சொன்னதாய், ஸர்வாதிகாரமான த்ராவிடமாயிருந்துள்ள பத்துப் பாட்டையும் ஸாபிப்ராயமாக வல்லவர்கள். (மக்களித்யாதி) பகவ(ஜ்)த் ஜ்ஞாநப்ரேம பரிபூர்ணரான சிஷ்யபுத்ரர்களைப்பெற்று, அவர்களும் தாங்களுமாய்க்கொண்டு, இந்த ஸம்ஸார பூமியிலே ஆநந்திகளா யிருக்கப் பெறுவர். .... .... .... .... (௧0)

பெரியஜீயர் திருவடிகளேசரணம்.

## பெரியாழ்வார் திருமொழி இரண்டாம்பத்து ஆறுந் திருமொழி முற்றிற்று.

---

தமிழாயே யிருக்க, "தமிழ்" என்று விசேஷித்ததுக்குத் தாத்பர்யம் (ஸர்வாதிகாரமான) என்றது. (௧0)

ஜீயர் திருவடிகளே சரணம்.

கூட்டிக்கொண்டு மங்களாசாஸநம் பண்ணினார் திருப்பல்லாண்டி லே; அதில் "கூடுநாள்பட்டு நின்றீர்களை எங்கள் குழுவினில் புகுத லொட்டோம்" என்ற காகஸமாராஜரைக் குறித்து, அவனுடைய நீர்மையையும் மேன்மையையும் காட்டி அச்சமுறுத்தி மேலே மே லேகொண்டு போய் மங்களாசாஸநத்திலே மூட்டி, "ஒக்கவுரைத் து" என்னும்படி தம்மோடே கூட்டிக்கொண்டு தாமும்த்ருப்த ராய், இவைகற்றார்க்குப் பலம் சொல்லித் தலைக்கட்டினாராய் நின் றார்கீழ். இனி இதில் கீழ்த்திருமஞ்சனமும் செய்து திருக்குழலும் பேணினால் திருப்பளித்தாமம் சாத்தவேணுமிறே. அதாவது -

## ஆநிரை ப்ரவேசம்.

அவ;—தாயாரான யசோதைப்பிராட்டி, தான் அவனுக்குக்குழல் வாரினவநந்தரம், பூச்சூட்டுவதாகவிருக்கிறவளவிலே, அவன் கன்று கள் மேய்க்கப்போவதாகநினைத்து, "அவற்றை மறித்து மேய்க்கைக் கீடான கோல் தரவேணும்" என்றபேக்ஷிக்க, அது, தனக்கு அநி ஷ்டமானது கொண்டு, அவள் கொடாதொழிகையாலே, அவன் அழப்புக்கவாறே, அவனை அழுகைமருட்டுகைக்காக, "அக்காக்காய் கோல்கொண்டுவா" என்று பலகாலும் சொல்லி அவனழுகையை மாற்றி உகப்பிக்க பின்பு, அவனுக்குப் பூச்சூட்டுவதாகக் கோலி, செண்பகம் மல்லிகை செங்கழுநீர் இருவாட்சி தொடக்கமான, நிறத் தாலும் மணத்தாலும ஒன்றுபோலொன்றன்றிக்கே விலக்ஷணமா யிருக்கும் புஷ்பங்களை யுண்டாக்கி, அவற்றைத் தனித்தனியே சொல்லி, உனக்கு இன்ன இன்ன பூச்சூட்டும்படி வாவென்று அநு வர்த்தித்து அழைத்துப் பூச்சூட்டின ப்ரகாரத்தைத் தாமுமநு

அரு;—ஆநிரை மேய்க்க ப்ரவேசம்;—கன்றுகள் மேய்க்கப்போவதாக நி னைத்து "கோலதரவேணும்" என்று அவனழப்புக்கவாறே, "அக்காக்காய்கோல் கொண்டுவா" என்று அழுகையை மாற்றி உகப்பித்த வநந்தரம், பலவகைப் பட்ட பூக்களைச்சூட்டி அந்தவழகை அநுபவிக்கிறரென்று ஸங்கதியை அரு ளிச்செயவதாகத் திருவுள்ளம்பற்றி, யசோதை யினுடைய ப்ரகாரத்தை விவ ரித்து வ்ருத்தத்தை ஸூசிப்பித்துக்கொண்டு வர்திஷ்ய மாணத்தையும் காட்டுகிறார் (தாயாரானவித்யாதி). (உண்டாக்கி) என்றது-ஸம்பாதித்தென்ற படி. (தாமும்) என்றவநந்தரம் (அப்படியே) என்றுசேஷம். ... ...

மூ;—ஆநிரைமேய்க்க நீ போதி யருமருந் தாவதறியாய்
கானகமெல்லாந்திரிந்துன் கரியதிருமேனிவாடப்
பானையில்பாலைப்பருகிப் பற்றாதாரெல்லாஞ் சிரிப்பத்
தேனிலினியபிரானே! செண்பகப்பூச் சூட்டவாராய். (க)

---

ஸௌமநாக்நனை சிரஸாவஹிக்கையிறே. அவ்வர்த்தத்தை, யசோதைப் பிராட்டி "பூச்சூட்டவாராய்" என்றழைத்த பாசுரத்தை வ்யாஜமாக்கி அருளிச்செய்கிறார். ... ... ... *

ஸ்வா.—முதற்பாட்டு (ஆநிரையித்யாதி). உன்னையும் பாராதே, என்னையும் பாராதே, கையிலே காச்சைகந்தகோலைக் கொண்டு பசுமேய்க்கப் போகாநின்றாய். (அருமருந்தாவதறியாய்) பெறுதற்கரிய மருந்தாவதறிகிறாயில்லை; இவன் *ஆராவமுதமிறே. இது *கடல்படாவமுதிறே; ஆகையிறே அருமருந்தாயிற்று. (மருந்து) அம்ருதம். இம்மருந்துதான் ஸந்நிதி பண்ணின

---

பவிக்கவாசைப்பட்டு, தத்பாவயுக்தராய்க்கொண்டு அவனைக்குறித்து அவள்பேசினாப்போலேபேசி அந்தரஸத்யத்தை யநுபவிக்கிறார்-இத்திரு மொழியில். .... .... .... .... .... .... *

வ்யா;—முதற்பாட்டு. (ஆநிரைமேய்க்க நீ போதி) உன் வாசியறியாதே தனக்கு மேய்ச்சலுள்ள விடத்தே போகாநிற்கும் பசுநிரையை மேய்க்கைக்காக ஸௌகுமார்யனான நீ போகாநின்றாய். (அருமருந்தாவதறியாய்) நீ உன்னைப் பெறுதற்கு அரிய மருந்தாகவறிகிறிலை. இங்குள்ளார்க்கு *நோய்களறுக்கும் மருந்தாய், அங்குள்ளார்க்கு *போகமகிழ்ச்சிக்கு மருந்தாயிறே இவன்

---

அரு;—முதற்பாட்டு. (ஆநிரையித்யாதி) திருமேனிவாடும்படி கானக மெல்லாம் திரிகைக்கு ஹேதுவாக வேண்டிப் பசுக்களுடைய ஸ்வபாவத்தைத் திருவுள்ளம்பற்றி விசேஷிக்கிறார் (உன்வாசியித்யாதி). (வாசி) என்றது-ஸௌகுமார்யத்தை. "மருந்தாவது-நீயறியாய்" என்றால் ப்ரக்ருதோபயோக மில்லாமையால், அவனையேமருந்தாக விவக்ஷித்து அருளுகிறார் (நீயித்யாதி). (நீ) என்றவநந்தரம் "சேதநரெல்லாரும்" என்றும்சேஷம். "சேதநரெல்லாரும் உன்னைப் பெறுகைக்கு நீமருந்தாவதறியாய்" என்றந்வயம்; ஆக இப்படி நீ மருந்தானபடியை நீ அறியாமையாலே, "ஆநிரைமேய்க்கநீபோதி" என்கிறாளென்று ப்ரக்ருதோபயோகம் கண்டுகொள்வது என்று திருவுள்ளம், சேதநர்க்கெல்லாம் இவன் மருந்தோ வென்ன வருளுகிறார் (இங்குள்ளார்க்கு

போது போக்யமுமாய், நீங்கினபோது ஸத்தாநாய பரிஹாரமு மாமிறே. (கானகமெல்லாம் திரிந்து) பசுக்கள் பச்சைகண்ட விடமெங்கும் திரிந்து மேய்கையாலே, இவனுக்கும் வழியே போய் வழியே வருவதாயிராதே காட்டிலுண்டான விடமெங்கும் திரிகையாலே, பசுக்களுக்கும் ப்ரமஹரமான திருமேனி வாடுங் காண்.

(பானையில் பாலைப்பருகி) காயாப்பாலைப்பருகுகையாலே இவளுக்குவயிறுபிடியாய், பானையோடேபருகுகையாலே. உன்னையுக வாதார்-உன்பக்சல் நெஞ்சுபற்றாதார். உன்பக்கல் சிறிதுண்டான குணங்களும் ஹாஸ ஹேதுவாய்விடுமிறே அவர்களுக்கு. (தேனி

றுனிருப்பது. (கானகமெல்லாந்திரிந்து) காட்டிடமெங்கும்திரிந்து. பசுக்கள் பச்சை கண்டவிடமெங்கும் †புரிந்து மேய்கையாலே, உனக்கும் அவைபோன விடமெங்கும் திரிய வேணுமிறே. (உன் கரிய திருமேனிவாட) * கண்டவர்கள் கண்குளிரும்படியிருக் கும், உன்னுடைய ஶ்யாமளமான திருமேனியானது, காட்ட ழல் பொறுமையாலே வெக்கைதட்டின பூப்போலே வாடும் படியாக.

(பானையில்பாலைப்பருகி) கறந்தபானையோடேயிருக்கிற பச் சைப்பாலை, அந்தப் பாத்ரத்திலே யிருக்கச்செய்தே பருகி. (பற் றுதாரெல்லாம் சிரிப்ப) உன்னையுகவாதா ரெல்லாரும் "எங்கள் வீட்டில் கைப்பானையில் பாலைக் குடித்துப் போநதான்" என்று

யாதி). காட்டிட மெங்கும் திரியாதே நான் ஓரிடத்திலே யிருந்தாலோ வென்ன வென்கிற ஶங்கையிலே யருளுகிறார் (பசுக்களையித்யாதி). "கரியதி ருமேனி" என்றவிடத்தில் "வாட" என்றதுக் கறுகுணமாக குளிர்த்தி பலி தமென்னும் விவக்ஷித்துத்தாத்பர்யமருளுகிறார் (கண்டவர்களித்யாதி). (இரு க்கும் ) என்றது - திருமேனிக்கு விசேஷணம்.

"பாலைப்பருகி" என்னவமைந்திருக்க, "பானையில்" என்று விஶேஷித் ததுக்கு - சிரிக்கைக்கு ஹேதுவாகத்தாத்பர்யமருளுகிறார் (கறந்தவித்யாதி). கறந்த பாத்ரத்திலே பாலைப் பருகினல் அது சிரிக்கைக்கு ஹேதுஆவானேன் னென்ன (உன்னையித்யாதி). பற்று - ஸங்கம். அது இல்லாதார் - உகவாதா ரென்று கருத்து. (கைப்பானை) கறக்கிறபானை. இத்தால் போஜநாதிபாத்ர

† (பா) பரந்து.

லினியபிரானே) தேன்பாலைப்பருகிற்றே. தேனிலும் இனிதாயிருக்கிற வம்ருதம்பாலைப்பருகிற்றே? இவையிரண்டும் தன்னைத்தானே உபகரிக்கமாட்டாதே. தன்னைத்தானே உபகரிக்கும் தேனும் அம்ருதமும் போலேயிறே இவன் தன்னைத்தானே உபகரிக்கும்படி. (செண்பகப்பூச் சூட்டவாராய்) காலபுஷ்பம் செவ்வி குன்றுமல் சாத்தவாராய். இதுதான் ப்ரஸாவஹியாதபோது ஸௌமநஸ்யம் வாடும்காண்.

"தேனிலினியபிரானே- பற்றுதாரெல்லாம் சிரிப்பபானையில் பாலைப்பருகி, உன் கரியதிருமேனிவாடக் கானகமெல்லாம் திரிந்து,ஆநிரைமேய்க்கநீபோதி,அருமருந்தாவதறியாய்-செண்பகப் பூச்சூட்டவாராய்" என்றந்வயம். ... ... (க)

---

சிரிக்கும்படியாக, (தேனிலினியபிரானே) தேனிலுங் காட்டிலினியனான உபகாரகனானவனே! இத்தால் - அநுபவிப்பார்க்கு ஒருகாலும் த்ருப்தி பிறவாதே, மேன்மேலென அநுபவிக்க வேண்டும்படியிருப்பானாய், இப்படியிருக்கிற தன்னையுபகரிப்பானும் தானேயா யிருக்குமவ னென்கை. (செண்பகப்பூச்சூட்டவாராய்) காலபுஷ்பமானசெண்பகமானது செவ்விகுன்றுமல் சாத்தவாராய்.

"தேனிலினிய பிரானே - பற்றுதா ரெல்லாம் சிரிப்ப-பானையிற் பாலைப்பருகி - உன்கரிய திருமேனிவாட - கானகமெல்லாம் திரிந்து - ஆநிரைமேய்க்க நீபோதி - அருமருந்தாவ தறியாய் - செண்பகப் பூச்சூட்ட வாராய்" என்றந்வயம். ... ... (க)

---

வ்யவஸ்த்தை களில்லாத வனென்று சிரிப்பரென்று கருத்து. ப்ரக்ருதத்துக்குச் சேரத்தாத்பர்யார்த்தமருளுகிறார் (இத்தாலித்யாதி). இப்படி நிரதிசய போக்யனானவுன்னைத் தரும் உபகாரகனாகையாலே, நீ ஆநிரைமேய்க்கப்போகாதே, நான் பூச்சூட்டி அநுபவிக்கும்படி உன்னை உபகரிக்கவேணு மென்று கருத்தென்று திருவுள்ளம். "பூச்சூட்டவாராய்" என்று ப்ரார்த்திக்க வேணுமோ, ராகத்தாலே அவன் வாரானோ வென்ன; க்ருஷ்ணன் பூச்சூடுமதிலும் பசுமேய்க்கையிலே விருப்ப முண்டா மவனாகையாலே, "பசுமேய்த்த பின்பாகிறது" என்று அல்பம் விளம்பிக்க, பூவில் செவ்வியழியாமல் வாராயென்றுப்ரார்த்திக்கிறா ளென்கிறார் (காலேத்யாதி). (காலபுஷபம்) என்றது ப்ராதஃ காலபுஷ்ப மென்றபடி. ... ... ... ... ... (க)

மூ.—

கருவுடைமேகங்கள் கண்டாலுன்னைக் கண்டாலொக்குங் கண்கள்
உருவுடையாயுலகேழு முண்டாகவந்து பிறந்தாய்
திருவுடையாள்மணவாளா! திருவரங்கத்தே கிடந்தாய்
மருவிமணம் கமழ்கின்ற மல்லிகைப்பூச் சூட்டவாராய். (உ)

---

ஸ்வா;—இரண்டாம்பாட்டு. (கருவுடையித்யாதி) நீர்கொண்டெழுந்துகருகின மேகங்களைக்கண்டால் உன்னைக்கண்டாலொக்கும். உன்னைக்கண்டால் நீர்கொண்டெழுந்த மேகங்களொக்கும். (கண்களுருவுடையாய்) - (கண்களுடையாய்) (உருவுடையாய்) உபமாநரஹிதமான திருக்கண்களையும், அப்படிப்பட்ட ஸௌந்தர்யத்தையு முடையவனே! (உலகேழுமுண்டாக வந்து பிறந்தாய்) உன்னாலே ஸ்ருஜ்யமான லோகங்கள் ஸங்கல்பத்தி

---

வ்யா.— இரண்டாம்பாட்டு. (கருவித்யாதி). (கண்கள் - உன்னைக் கண்டால்-கருவுடைமேகங்கள் கண்டாலொக்கும்-உரு உடையாய்) கண்களானவை உன்னைப்பார்த்தால், நீர்கொண்டெழுந்த காளமேகங்களைக் கண்டாப்போலே குளிரும்படியான வடிவை யுடையவனே! அன்றிக்கே, நீர்கொண்டெழுந்த காளமேகங்களைக் கண்டால் உன்னைக் கண்டாப்போலே யிருக்கும். (கண்களுருவுடையாய்) அவ்வடிவழகு ஒருதட்டும் தானொரு தட்டுமாம்படியான கண்களினழகையுடையவனே யென்னவுமாம்.

---

அரு;— இரண்டாம்பாட்டு. (கருவித்யாதி) அந்வயித்ததுக் கநுகுணமாக வர்த்தமருளுகிறார் (கண்களானவையித்யாதி). "கரு" என்றது - கர்ப்பமாய், அத்தையுடைத்தான மேகங்களென்று ஶப்தார்த்தம் திருவுள்ளம் பற்றி யருளுகிறார் (நீர் கொண்டவித்யாதி). அன்றிக்கே "கரு" என்று - கறுப்பாய், கண்களுக்குக் குளிர்த்தியைச் சொல்லவேண்டி பலிதார்த்தம் (நீர் கொண்டித்யாதி) என்னவுமாம். (கண்களானவை) என்றதுக்கு - (குளிரும்படியான) என்றத்தோடந்வயம். அதுவேதானே அந்வயம் திருவுள்ளம் பற்றி யோஜநாந்தர மருளுகிறார் (அன்றிக்கே யித்யாதி). ஶ்லேஷபதத்தைக கடாக்ஷித்து தாத்பர்ய பூர்வகமாகச் சப்தார்த்த மருளுகிறார் (அவ்வடிவழகித்யாதி). இப்பக்ஷத்தில் "உரு" என்று அழகைச்சொல்லுகிறது. அவதாரத்துக்குமுன்பேயுண்டானத்தையும் "உண்டாக" என்னக்கூடுமோவென்

லே கிடந்து நசியாமல் ச (த்) ந்தாநு வர்த்திகளாய் உஜ்ஜீவிக்கும்படியாகவிறே வந்தவதரித்தது. (க) "[धर्मसंस्थापनार्थाय - தர்மஸம்ஸ்த்தாபநார்த்தாய] தர்மஸம்ஸ்த்தாபநம் செய்து ஸத்தையை நோக்குமவனும், தர்மசப்தவாச்யனாய் அவதரித்து ஸத்தாவர்த்தகனாய் மங்களாசாஸந பர்யந்தமாக ஆசார்ய முகத்தாலேயுமுண்டாக்குவானும் தானேயாகையாலே, "பிறந்தாய்" என்கிறார். இதுதன்னை - சிசுபாலாதிகள் †குறையாகவும் சொல்லுவர்களிறே. அவ்வளவேயோ? பௌண்ட்ரக வாஸுதேவனைப் போலே தந்தாமுடைய ஜந்மங்களையும், ஐஸ்வர்யாதிகளையும், தேவதாந்தரங்களையும் ஸர்வாதிகமாக நினைத்திருப்பாரையும் பொறுக்குமிறே இந்தபூமி.

(திருவுடையாள் மணவாளா) "பிறந்தாய்" என்கிறதுக்குஹேது சொல்லுகிறது. (உ) "कः श्रीः श्रियः - கஶ்ஶ்ரீஶ்ஶ்ரியः" (ங) "श्रियः श्रीः - ஶ்ரிய ஶ்ஶ்ரீः" (ச) "திருவுக்கும் திருவாகிய" (ரு) "சிந்தை தன்னுள் நீங்காதிருந்த திருவே" என்கிற திருவையுடையவளென்றபோதே "ஸாக்ஷால்லக்ஷ்மி" என்று தோன்றுமிறே. அவன் இவளுடைமையாலல், போகோ(भोग)பகரண லீலோபகரணம்போலே அவளுக்கு இஷ்ட விநியோகார்ஹமாக வேணு

(உலகேழுமுண்டாகவந்து பிறந்தாய்) ஸகலலோகங்களும் உன்னுடைய அவதாரத்தாலே லப்தஸத்தாகமாய் உஜ்ஜீவிக்கும்படி வந்து பிறந்தவனே!

(திருவுடையாள் மணவாளா) (உ)"कः श्रीः श्रियः" (ங)"श्रियः श्रीः" (ச) "திருவுக்கும் திருவாகிய" என்கிறபடியே-உன்னை தனக்கு ஸம்பத்தாக வுடையளாயிருக்கும் பெரிய பிராட்டியாருக்கு வல்

ணவருளுகிறார் (ஸகலேத்யாதி. (கூ) "ततोऽखिल जगत्पद्मबोधाय - ததோகில ஜகத்பத்மபோதாய" இத்யாத்யநு ஸந்தேயம்.

திருவுக்கு வேறேயொருதிருவைச் சொல்லக் கூடாமையால், எம்பெருமானையே திருவென்று விவக்ஷித்து, அதுக்கு - ஆளவந்தார் திவ்யஸூக்தியையும், பட்டர்திவ்யஸூக்தியையும் பாசுரத்தையும் காட்டாநின்றுகொண்டு அர்த்தமருளுகிறார் (கஶ்ஶ்ரீரித்யாதி. (ஸம்பத்தாக) என்றது-அதிப்ராயகா

† (பா) நிரை. (க) கீ-ச-அ. (உ) ஸ்தோ-ர-கஉ. (ங) ஸ்ரீகுணரத்ந-கூ.
(ச) தி-மொ-எ-சு-க. (ரு) தி-மொ-ச-கூ-உ. (கூ) வி-பு-ஒ-ங-உ.

மூ:—மச்சொடுமாளிகையேறி மாதர்கள்தம்மிடம்புக்குக்
கச்சொடுபட்டைக்கிழித்துக் காம்புதுகிலவைகீறி
நிச்சலுந்தீமைகள்செய்வாய்! நீள்திருவேங்கடத்தெந்தாய்!
பச்சைத்தமநகத்தோடு பாதிரிப்பூச் சூட்டவாராய். (௩)

மிறே, (க) "కేవలకృపానిర్వాహ్య వర్గేయం శేషిత్వేపరమః పుమాన్ - கேவலக்ருபா நிர்வாஹ்யவர்கே வயம் சேஷித்வேபரமஃ புமாந்" என்கிறபடியே. திருவுடையாள் மணவாளனுல் அவள் நியமித்தவிடத்தில் கண்வளருகையிறே உள்ளது. (திருவரங்கத்தே கிடந்தாய்.(மருவி மணம் கமழ்கின்றமல்லிகைப் பூச்சூட்டவாராய்) இம்மருவிமணம் கமழ்கின்ற மல்லிகை யென்னுதல். அன்றிக்கே என்மடியிலே மருவியிருந்து பூச்சூடவேணுங்காண். பூச்சூட்டவாரா யென்னவுமாம். ... ... ... ... (உ)

ஸ்வா;—மூன்றும்பாட்டு. (மச்சித்யாதி) உலகேழுமுண்டாகவந்து பிறந்தாயான நீ மச்சொடுமாளிகையேறித் தீம்பு செய்யக்கடவையோ? மச்சென்றது - நடுவில் நிலம். மாளிகையென்

லபனனவனே! (திருவரங்கத்தே கிடந்தாய்) அவனுகப்புக்காக ஸம்ஸாரி சேதநரை ரக்ஷித்தருளும்படி கோயிலிலே கண்வளர்ந்தருளினவனே!. (மருவித்யாதி) பரிமளமானது நீங்காமல் நின்று கமழாநிற்கிற மல்லிகைப்பூச் சூட்டவாராய். ... ... (உ)

வ்யா.—மூன்றும்பாட்டு. (மச்சித்யாதி) (மச்சு) நடுநிலம். (மாளிகை) மேல்நிலம். மச்சோடேகூடின மாளிகையிலே சென்

றுக வென்றபடி. ஸமபிவ்யாஹாரத்தால் பலிதத்தை யருளுகிறார் (அவனுகப்பித்யாதி). "உருவுடை" என்னுமளவால் போக்யத்வமும், "பிறந்தாய்" என்னுமளவால் ரக்ஷகத்வமும், "கிடந்தாய்" என்னுமளவால் பரத்வஸௌலப்யங்களும் சொல்லுகையாலே, இப்படி பட்ட வனுகையாலே நீ பூச்சூடவந்து என்மநோரதத்தைத் தலைக்கட்டி யருளவேணுமென்று தாத்பர்ய மென்று திருவுள்ளம், ... ... ... ... ... ... ... (உ)

அரு; — மூன்றும்பாட்டு. (மச்சித்யாதி) க்ருஷ்ணன் வளரவளரப் பெண்களை நிலவறைகளிலே வைப்பாரும் மச்சுமேலே வைப்பாரு யாயிறேயிருப்பது. ஆகையாலே அந்தமச்சு மாளிகையிலே ஏறிப் பெண்களிருந்த

(க) ஸ்ரீகுணரத்ந-உ௨.

றது-மேலில்நிலம். மூன்றும் நிலத்திலே மாதர்களிருக்கிற விடங்களிலே சென்று. (கச்சொடு பட்டைக்கிழித்து) முலைக்கச்சுகளுக்கு மேலச் செய்த பட்டுக்களையும் கச்சோடே கிழித்து. (காம்பு துகிலவைகீறி) துகில் காம்புகளைக் கிழித்து. பணிப்புடைவைகளில் விளிம்புகளைக் கிழித்து.

(நிச்சலும் தீமைகள் செய்வாய்) வளரவளரத்தீம்பு கையேறிச் செல்லாநின்றதிறே. இதுவே நிரூபகமானவனே!. (நீள் திருவேங்கடத்தெந்தாய்) பெரிய திருமலையிலே நித்யவாஸம் செய்து கானமும் வானரமும் திருவேடுவரும் ரக்ஷிக்கப்படும்படி ஸந்நிஹிதனாய்ப் போருகிறவனே! அன்றிக்கே இந்த விபூதியிலுள்ளார் பெரிய ஏற்றம் செல்லுமாபோலே, த்ரிபாத்விபூதியிலுள்ளாரும் ஸர்

---

றேறி. (மாதர்கள் தம்மிடம்புக்கு) பெண்களிருக்கிற விடங்களிலே புக்கு. (கச்சொடுபட்டைக் கிழித்து) அவர்கள் முலைக்கச்சோடே அதற்கு மேலீடான பட்டுக்களையும் கிழித்து. (காம்பு துகிலவைகீறி) பணிப்புடைவைகளானவற்றையும் கிழித்து. (காம்பு துகில்) விளிம்பில் பணிபுடன் சேர்ந்தபுடவை.

(நிச்சலும் தீமைகள் செய்வாய்) நாடோறும் தீம்புகளைச் செய்யுமவனே; வளர வளரத் தீம்பு மிகையேறிச் செல்லாநின்றதிறே. (நீள் திருவேங்கடத்தெந்தாய்) ஔச்சத்தையுடைத்தான வடக்குத் திருமலையிலே நிற்கிற என் ஸ்வாமியானவனே!;* கானமும் வானரமும் வேடுமானவற்றுக்கு முகங்கொடுத்துக்கொண்டு

---

விடங்களிலே புக்கென்றது. "காம்புதுகில்" என்று - அரையிலே புடைவையைச் சொல்லுகையாலே, "பட்டு" என்று உத்தரீயமாக வருளுகிறார்; (அவர்களித்யாதி). (பணியுடன் சேர்ந்த) என்றது - எழுத்தூண்டான தென்றபடி.

லோகத்தில் பிள்ளைகள் புத்திபதிந்தால் தீம்பில் நின்று கைவாங்குவர்களிறே; இங்கு "நிச்சலும்" என்னக் கூடுமோ வென்னவருளுகிறார் (வளரவித்யாதி. இவனுக்கு வளர்த்தியே ஹேதுவாகத் தீம்புகளும் அபிவ்ருத்ததென்றுகருத்து. "நீள் திருவேங்கடத்தாயெந்தாய்" என்று திருவேங்கடத்தானென்கையாலேயோ அவன் ஸ்வாமியானதென்ன, அத்தை உபபாதிக்கிறார் (கானமுமித்யாதி). இத்தால் வேங்கடத்தில் நின்ற பின்பு ஸ்வாமித்வமறியலாம் படியாய்த் தென்று திருவுள்ளம். "பாதரிப்பூவை-தயனைக்கழ்ந்தாடு" என்

மூ.—

தெருவின்கண் நின்றிளவாய்ச்சிமார்களைத் தீமைசெய்யாதே
மருவும்தமநகமும் சீர் மாலையணம் கமழ்கின்ற
புருவம்கருங்குழல்நெற்றிப் பொலிந்த முகிற்கன்றுபோலே
உருவமழகியநம்பீ யுகந்திவை சூட்டநீவாராய். (௪)

---

வஸ்மாத்பரனவன்றனும் சென்று சேரும்படியான திரு வேங்கடமாமலை யென்னுதல் (பச்சைத்தமனகத்தோடு பாதிரிப் பூச்சூட்டவாராய்) பசுமை குன்றாத தமனமகத்தோடே செவ்வி குன்றாத பாதிரிப்பூச்சூட்டவாராய். "பச்சை" என்று - அத்யந்த பரிமளிதமான விலையென்னவுமாம்.

இத்தால், மச்சொடுமாளிகையால் - த்ருதீயா விபூதியிலுள்ள விசேஷஜ்ஞரைக் காட்டுகிறது. கச்சொடு பட்டால் - பக்தியை அமைக்கிற ஸ்வரூபஜ்ஞாநத்தில் அநாதரத்தைக் காட்டுகிறது. நிச்சலும் தீமைகள் செய்கிறவித்தால் - த்ருதீயாவிபூதியிலிருப்பாருடன் லீலாரஸமுண்டோ? காம்புதுகிலால் - ப்ரக்ருத்யாத்ம விவேகம் பிறந்தாரளவிலும் அநாதரமும் பக்ஷபாதாங்கீகாரமும் ப்ராப்தமோவென்கிறது. ... ... ... ... (௩)

ஸ்வா;—நாலாம்பாட்டு. (தெருவித்யாதி) "நான் மச்சிலும் மாளிகையிலும் ஏறினேனோ? தெருவிலேயல்லோநின்றேன்; என்னைத் தீம்பனென்ன, நான் ஏதுசெய்தேன்" என்ன; முன்பு செய்

---

நிற்கிறது ஸ்வாமித்வ ப்ராப்தியாலேயிறே. (பச்சையித்யாதி) பசுமைகுன்றாத தமநகத்தோடே, அதுக்குப் பரபாகமான நிறத்தையுடைய பாதிரிப்பூவைச் சூட்டும்படி வரவேணும். ... (௩)

வ்யா.—நான்காம்பாட்டு. (தெருவின்கண்நின்று) நான் மச்சிலும் மாளிகையிலுமேறினேனோ, தெருவிலேயன்றோநின்றேன்; என்னை நீ இப்படி சொல்லுவா னென்னென்ன; அவ்விடத்தில்

---

றால் போராதோ, "பச்சை" என்று விசேஷிப்பானென்னென்ன, வர்ணோத்கர்ஷம் தோன்ற விசேஷித்தா ரென்றருளுகிறார் (பசுமையித்யாதி).

அரு;— நாலாம்பாட்டு. (தெருவித்யாதி) "தெருவின் கண்" என்றத்தாலே, நாலுபேரும் அறியும்படி தெருவிலே தீமைசெய்யாதே ரஹஸ்யத்திலே தீமை செய்யென்று தோன்றுகையாலே, இதுதாயான விவளுக்குச் சேராதென்று உக்திப்ரத்யுக்தி முகேந பாவமருளுகிறார் ( நானித்யாதி )

தாயாகிறுய்; இனித்தானுகிலும் தெருக்களிலே நின்று விளையாடு கிற பருவத்தாலிளைய இடைப்பெண்களைத் தீமைசெய்யாதே. இவன் செய்த அபராதங்களைத் தனித்தனியேசொல்லிப் பரிக(X) ரிக்கப் போகாமையாலே, "தீமை" என்று ஒரு சொல்லாலே தர்சிப்பிக்கிறுள். (மருவும் தமனகமும்) மருவும் தமனகமும் சேர்த்து நன்ருகக்கட்டி மணம் கமழாநின்றவகைமாலை.

(புருவம் கருங்குழல்நெற்றி) உபமாநரஹிதமான திருப்புருவம், கரியதான நிறத்தையுடைய திருக்குழல், திருநெற்றி இவை தானே நீ தீமைசெய்யாதிருக்கிறது. தெருவிடங்களிலே நின்று. (இளவாய்ச்சிமார்களைத் தீமைசெய்யாதே) அவ்விடத்திலே விளையாடா நிற்கிற பருவத்தாலிளைய இடைப்பெண்களைத் தீமைசெய்யாதே. சிற்றில் சிதைக்கை, லீலோபகரணங்களைப் பறிக்கை, அவர்களோடே கைப்பிணக்கிடுகை முதலான இவன் செய்யும் விஷமங்கள் வாசாமகோசரமாகையாலே, தீமையென்று ஒரு சொல்லாலே யடக்கிச் சொல்லுகிறுர். (மருவும் தமநகமுஞ் சீர் மாலை மணம்கமழ்கின்ற) மருவும் தமநகமும் கலந்து கட்டின அழகிய மாலைகளானவை பரிமளம் கமழாநின்றன. உன் திருக்குழலிலே சேரத்தக்க மணம் பாழே போகாநின்றதென்கை.

(புருவமித்யாதி) உபமாநரஹிதமான புருவமும், இருண்டிருந்துள்ள குழலும், இரண்டுக்கும் நடுவே விளங்காநிற்கிற திரு

(செய்யாதிருக்கிறது) என்றவநந்தரம், "என்று கருத்து" என்று கூட்டிக் கொள்வது. கீழே எடுத்தப்ரதீகத்துக்கு சப்தார்த்தம் (தெருவிடங்களிலே நின்று) என்று. போகா(ஞ^ .)ர்ஹமான இளவாய்ச்சிமார்கள் தெருவிலே யிருப்பார்களோவென்ன தாத்பர்யமருளுகிறுர் (அவ்விடத்திலே யித்யாதி). தீமையைவிசேஷித்து, இன்னதென்று சொல்லா தொழிவானென்னென்ன; (க "எங்கள் சிற்றில் வந்து சிதையேலே" என்கிற ஆண்டாள் ஸ்ரீஸூக்தியை உட்கொண்டு, தீமைவிசேஷங்களைக் காட்டாநின்று கொண்டு தாத்பர்யமருளுகிறுர் (சிற்றிலித்யாதி). (கைப்பிணக்கிடுகை) என்றது - அவர்கள் கைகளோடே தன்கை கோத்துக் கொள்ளுகை யென்றபடி.

"புருவமும் கருங்குழலும் நெற்றியும், இவற்றால் பொலிந்ததொரு முகில் கன்றுண்டு, அத்தைப்போலே" என்று அபூர்த்தோபமை திருவுள்ளம்பற்றி யருளுகிறுர் - (உபமாநத்யாதி).

(க) ந-தி-உ-சு.

மூ.—
புள்ளினை வாய் பிளந்திட்டாய் பொருகரியின் கொம்பொசித்தாய்
கள்ளவரக்கியை மூக்கொடு காவலனைத் தலைகொண்டாய்
அள்ளிநீ வெண்ணெய் விழுங்க வஞ்சாதடியே னடித்தேன்
தெள்ளிய நீரிலெழுந்த செங்கழுநீர் சூட்டவாராய். (ரு)

யெல்லாத்தாலும் பொலிந்ததொரு முகிலீன்ற கன்றுபோலே; (உருவமழகியநம்பீ) ஒப்பனையாலும், அவயவசோபையாலும், தீம்பு செய்கிற குணங்களாலும் பூர்ணனானவனே!. (உகந்திவை சூட்டநீவாராய்) உகந்தென்று - நீயுகக்குமவையாய், உனக்கு வேணுமென்று நானுகந்த விவை சூட்டவாராய். இவையென்று - கீழ்ச்சொன்ன செண்பகம் முதலான உக்த ஸமுச்சயம். (உருவ மழகிய நம்பீ) தீமைசெய்யாதே இவை உகந்து சூட்ட நீவாராய்.

இத்தால், ஸங்கல்ப பரதந்த்ரராய், அந்யஸாதநபரராய், அந்ய ப்ரயோஜநபரராய், அந்யோந்யம் லீலாரஸ போக்தாக்களாய் ஸர்வரும் ஸஞ்சரிக்கிறமார்க(்)ங்களில் உனக்குப் பணியென்? உன்னைநோக்கி விளையாடுவாரோடேயன்றோ நீவிளையாடுவது. (ச)

வ்யா;—அஞ்சாம்பாட்டு. (புள்ளித்யாதி) இரண்டவதாரத்துக்கும் விரோதிநிரஸநமே ப்ரயோஜநமென்கிறார். பகஸுரனை

நெற்றியுமாகிற இவ்வவயவசோபையாலே உஜ்ஜ்வலமாயிருப்பதொருமுகிலின்கன்றுபோலே, வடிவால் அழகியனுமாய், ஸர்வப்ரகார பரிபூர்ணனுமா யிருக்கிறவனே!. (உகந்தித்யாதி) "உனக்குச் சூட்டப் பெற்றோம்" என்கிற வுகப்புடனே, மணம் கமழா நின்றுள்ள இம்மாலைகளை நான் உனக்குச் சூடும்படியாக நீவர வேணும். ... ... ... ... ... (ச)

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (புள்ளினை யித்யாதி) கன்றுகள் மேய்க்கிற விடத்தில் * பள்ளத்தில் மேயும் பறவையுருக்கொண்டு உன்னை நலிவதாகவந்த பகாஸுரனை வாயைக்கிழித்துப் போக

"இவை" என்றதுக்கு அர்த்த மருளுகிறார் (மணமித்யாதி). ... (ச)

அரு;—அஞ்சாம்பாட்டு. (புள்ளினையித்யாதி) புள்ளை வாயைப் பிளக்கைக்கு நீரபாதியாலல் கூடாமையாலே ப்ரமாண முகேந விசேஷித்துக் காட்டுகிறார் (கன்றுகளித்யாதி), "புள்ளினை" என்றவிடத்தில், இன்-சாரி

அநாயாஸேந வாயைப்பிளந்து நிரஸித்தாய். (பொருகரியினித்யாதி) க்ருத்ரிமத்தாலே எதிர்பொருத குவலயாபீடத்தின் கொம்பை அநாயாஸேந பிடுங்கி நிரஸித்தாய். (கள்ளவரக்கியித்யாதி) பூதநாசகடாதிகளைப் போலே உருமாறிவந்த ராக்ஷஸிமூக்கோடே, இவளுக்கு ரக்ஷகனானவன் தலையையுமறுத்து நிரஸித்தாய். அவன் இவளுக்குக் காவலனாகையாவது - இவளை "ஸ்வைரஸஞ்சாரம் பண்

---

ட்டவனே! (பொருவித்யாதி) "கல்யாணத்துக்கு" என்று அழைத்துவரவிட்டு, வழியிலே நலிவதாகக் கம்ஸன் நிறுத்திவைத்ததாய், உன்மேலேயுத்தோக்முகமாய்வந்த குவலயாபீடத்தின் கொம்பை அநாயாஸேநப் பிடுங்கிப் போகட்டவனே! (கள்ளவித்யாதி) (௧) "சீதைக்கு நேராவன்" என்று க்ருத்ரிம வேஷங்கொடு வந்த சூர்ப்பணகியாகிற ராக்ஷஸி †மூக்கோடே, அவளுக்கு ரக்ஷகனான ராவணன்தலையையும் அறுத்துப் போகட்டவனே!; இவளுக்கு அவன்காவலனாகையாவது-இவளை "ஸ்வைரஸஞ்சாரம் பண்ணித்திரி" என்று விடுகைபிறே. அன்றிக்கே, பொதுவிலே

---

யைச் சொல்லாய், புள்ளையென்றபடி. ஆனைபொருகைக்கு ஹேதுவைக் காட்டிக்கொண்டு தாத்பர்யமருளுகிறார் (கல்யாணத்துக்கித்யாதி). (கல்யாணம்) விழவு. ராக்ஷஸிமூக்கையும், ராவணன்தலையையும் அறுக்கைக்கு அவளுடைய கள்ளத்தனமே ஹேதுவென்று அத்தை விசேஷித்துக் காட்டாநின்றுகொண்டு ஸங்கார்த்தமருளுகிறார் (சீதைக்கித்யாதி). (நேராவன்) என்றது, ஸத்ருசையாவனென்றபடி. (க்ருத்ரிமவேஷம் கொண்டு) என்றது- (உ) "[illegible] - அஹமேவாநுரூபா தே பார்யாரூபேண பஶ்ய மாம்" என்று காமரூபியானவள் பெருமாளுக்குத் தன்னழகைக் காட்டுகையைப் பற்ற. மூக்கையறுத்தது இளையபெருமாளேயாகிலும், (௩) "[illegible]-ராமஸ்ய தக்ஷிணோ பாஹு:" என்கிருக்கையாலே பெருமாள் செய்ததாகச் சொல்லலாமென்று திருவுள்ளம். ஸ்த்ரீகளுக்கு "காவலன்" என்று பர்த்தாவையன்றோ சொல்லவடுப்பது, ராவணனைச் சொல்லக்கூடுமோவென்ன; அத்தைப்பரிஹரிக்கிறார் (இவளுக்கித்யாதி). நீ ஸ்வைரமாகத் திரிந்தால், உன்விரோதிகளை நிரஸிக்க நானிருக்கிறேனென்று விட்டானென்று கருத்து.

---

† (பா) அரி. (௧) சிறியதிரும-௩௧. (௨) ரா-ஆ-௧௭-௨௪. (௩) ரா-ஆ-௩௭-௧௩.

ணித்திரி'' என்று விடுகையிறே. இவள், அவன் இவ்வளவு சொல்லப் பெற்றால், அவனை ரக்ஷகனென்றொழியுமோ?

(அள்ளி நீ வெண்ணெய் விழுங்க) "இவன் வெண்ணெய் தானே அள்ளிவிழுங்க வல்லனாவது எப்போதோ கூடுவது'' என்று பார்த்திருந்தநான், நீ அள்ளி விழுங்கவும் பெற்று வைத்து. (அஞ்சாதடியேனடித்தேன்) அடியேன் அஞ்சாதபடி அடித்தேன். யாவர்சிலரும் அநுதாபம் தலையெடுத்தால் "அடியேன்'' என்றிறே சொல்லுவது. இவள்தான் அதுதன்னை முன்னை நினையாதே அடிக்கவேண்டிற்றும், இவன் மற்றுமோரிடங்களிலே இது செய்யுமாகில் வரும்பழிச்சொல வக்கஞ்சியிறே, இவன் மார்த்தவம் பார்த்து அஞ்சாதே யடிக்க வேண்டிற்றும். (தெள்ளிய நீரிலெழுந்த செங்கழுநீர் சூட்டவாரா

---

காவலனென்கையாலே ராக்ஷஸ ஜாதிக்காக ரக்ஷகனென்னவுமாம். இத்தால் - ப்ரபலவிரோதிகளை அநாயாஸேநப்போக்கி, உன்னை அநுபவிப்பார்க்கு உன்னை யுபகரித்தவனன்றோ வென்கை.

(அள்ளியித்யாதி) "இவன், வெண்ணெய்தானே அள்ளி விழுங்கவல்லவனாவதெப்போதோ?'' என்று பார்த்திருந்த நான் - நீ வெண்ணெயை அள்ளி விழுங்கவும் பெற்றுவைத்து, உன்மார்த்தவத்தைப் பார்த்தஞ்சாமல் அடியேனடித்தேன். யாவர் சிலரும் அநுதாபம் தலையெடுத்தால் "அடியேன்'' என்றிறே சொல்லுவது; இவள் தான் இதுதன்னை முன்னே நினையாதே அடிக்க வேண்டிற்றும், இவன் மற்றுமோரிடத்திலே இது செய்யுமாகில் வரும்பழிச்சொலுக்கு அஞ்சியிறே. (தெள்ளிய வித்யாதி) ஆன

---

"அடியேன்'' என்று-அநுதபிக்கை தோன்றுகையால், வெண்ணெய்விழுங்கினது-அடியாகைக்கு ஹேதுவாகவும், அஞ்சுகைக்குப்ராஸக்தியையும் காட்டா நின்றுகொண்டு பாவமருளுகிறார் (இவனித்யாதி). "வெண்ணெய் விழுங்க வடித்தேன்'' என்று, அது அடிக்கைக்கு ஹேதுவாகில், "அடியேன்'' என்னக்கூடாதென்று கருத்து. "அடியேன்'' என்றது - அநுவாதஸூசகமான படி எங்ஙனே யென்னவருளுகிறார் (யாவரித்யாதி). ஒருவன் விஷயத்தில் ஒருவன் அபராதம் பண்ணும்போது பொறுப்பிக்கைக்காக, "உனக்கு நான் அடியேன்'' என்று சொல்லுவர்களென்று கருத்து. ஆனால் அடிக்கைக்கு ஹேதுவேதென்ன வருளுகிறார் (இவள்தானித்யாதி). (இதுதன்னை) என்றது-நமக்கு இஷ்டத்தைச் செய்தானென்னுமத்தை யென்றபடி. இவள் இப்படி அநுதபித்ததை-"பூச்சூட்ட வாராய்'' என்கையிலே ஹேதுவாகக்கொண்டு சப்தார்த்தமருளுகிறார் (ஆனபின்பித்யாதி). ... ... ... (ரு)

மூ.—எருதுகளோடுபொருதி யேதுமுலோபாய் காண்நம்பீ!
கருதிய தீமைகள் செய்து கஞ்சனைக்கால்கொடுபாய்ந்தாய்
தெருவின்கண் தீமைகள் செய்து சிக்கெனமல்லர்களோடு
பொருது வருகின்ற பொன்னே புன்னைப்பூச் சூட்டவாராய்.

ய்) சேற்றுவாய்ப்பாலும், தெளிந்த நீராலும் செவ்விபெற்ற செங்க ழுநீர் சூட்டவாராய். .... .... .... .... .... (ரு)

வ்யா;—ஆறும்பாட்டு. (எருதித்யாதி) "திருவாய்ப்பாடியிலு ள்ளாருடைய பழிச்சொலவுபொறுமையாலே அடித்தேன்" என்று ஈடுபடுகிறவள், எருதுகளோடே பொரக்கண்டால் பொறுக்குமோ? கூடக்கண்டு நின்றாற்போலே காலாந்தரமும் தோற்றுமிறே. எருது களோடு பொராநின்றாய். (ஏதுமுலோபாய் காண்நம்பீ) எல்லாம் சொல்லிமீட்டாலும் மீளாய்காண். லோபமையாவது - தேஹத் தைப்பேணுதல், ப்ராணனைப்பேணுதல் செய்யாதிருக்கை. "இவை

பின்பு நான் முன்செய்தவத்தைப் பொறுத்து. தெளிந்த நீரில் எழுந்ததாகையாலே, நிறத்தாலும் பரிமளத்தாலும் விலக்ஷணமா யிருக்கிற செங்கழுநீரை-செவ்வையிலே நான் சூட்டும்படி வாராய்.

வ்யா;—ஆறும்பாட்டு. (எருதுகளோடு பொருதி) நப்பின் னைப் பிராட்டியை லபிக்கையிலுண்டான ஆசையாலே உன் திரு மேனியின் மார்த்தவம் பாராமல், அஸாராவிஷ்டமான எருதுக ளோடே பொராநின்றாய். காலாந்தரமாயிருக்கச் செய்தேயும் தத்காலம்போலே ப்ரகாசிக்கையாலே, "பொருதி" என்று - வர் த்தமாநமாகச் சொல்லுகிறது. (ஏதுமுலோபாய் காண்) ஒன்றி லும் லோபமற்றிரா நின்றாய்காண். அதாவது - தேஹத்தைப் பேணுதல், ப்ராணனைப்பேணுதல் செய்யாதிருக்கை. (நம்பீ) நப் பின்னையளவிலே வ்யாமோஹத்தால் பூர்ணனானவனே!

அரு;—ஆறும்பாட்டு. (எருதுகளித்யாதி) (உன் திருமேனி மார்தவம் பாராமல்) என்றது, "ஏதுமுலோபாய் காண்" என்றத்தைப்பற்ற. நப்பின்னை லபிக்கையில் லோப (ஞ) முண்டாயிருக்க, இப்படிசொல்லப்போமோவென்ன வருளுகிறார் (அதாவதித்யாதி). நப்பின்னைக்காகத் தன் தேஹத்தையும் ப்ராணனையும் பேணாதவனென்று தாத்பர்யம், "உலோபாய்" என்றதுக்கு ஹேதுபரமாக நம்பி பததாத்பர்யமருளுகிறார் (நப்பின்னையித்யாதி).

எருதுகளாக; கம்ஸன் வரவிட்டவையாகச்:" என்று க்ரியாஜ்ஞர் சொன்னாலும் "அதுதானிறே காணுகைப் ாது" என்று சொல்லும்படியான துணிவையுடையைகாண். (நம்பீ) நப்பின்னையளவில் வ்யாமோஹத்தால் பூர்ணனானவனே!.

(கருதிய தீமைகள்செய்து) கம்ஸன் தீமைகள் எல்லாத்தையும் அவன் தன்னோடே போம்படிசெய்து. அவனையும், அவனிருந்த மஞ்சத்தலத்திலே சென்று தள்ளித் திருவடிகளாலே பாய்ந்தாயென்னுதல். அன்றிக்கே; "இவன் இதுவும் செய்யக்கூடுமே" என்று தான் கருதினாப்போலே செய்து முடித்தாய். இன்னும் இப்படிப்பட்ட ஶத்ருக்கள்மேல் விழக்கூடுமென்று பயப்படுகிறாதல்.

---

(கருதிய தீமைகள் செய்து) கஞ்சன் உன்திறத்தில் செய்யக்கருதின தீமைகளெல்லாவற்றையும் அவன் திறத்திலே நீசெய்து. (கஞ்சனைக்காலகொடு பாய்ந்தாய்) கம்ஸனைத் திருவடிகளாலே உதைத்தாய். அதாவது-(௧) "[illegible]" துங்கமஞ்சேஸ்ய வஸ்த்திதம்" என்கிறபடியே அவனிருந்த உயர்ந்த மஞ்சஸ்தலத்திலே சென்று குதித்து, (௨) "కేశేష్వాకృష్య విగళత్కిరీట మవనీతలే! సకంసం పాతయామాస తస్యోపరి పపాతచ - கேசேஷ்வாக்ருஷ்ய விகளத்கிரீட மவநீதலே! ஸகம்ஸம் பாதயாமாஸ தஸ்யோபரி பபாதச" என்கிறபடியே அபிஷேகத்தைப் பறித்தெறிந்து, மயிரைப் பிடித்திழுத்து மஞ்சஸ்தலத்தில் நின்றும் பூமியிலே விழத்தள்ளி, அவன்மேலே குதித்திறே அவனைக்கொன்றது.

---

"க்ருஷ்ணன் கருதிய தீமைகள்" என்று சொன்னால் கம்ஸவதத்துக்கு ஹேது அநுக்தமாமென்றும் இவனிடத்தில் இது குணமாகாதென்றும் திருவுள்ளம்பற்றி, "கம்ஸன்கருதிய" என்றத்யாஹரித்து அர்த்தமருளுகிறார் (கம்ஸனித்யாதி. (அதாவது) என்றநந்தரம், "கூடுமோ?" என்று சேஷம். க்ருஷ்ணன், மயிரைப்பற்றி இழுத்துக் கொன்றானென்று சொல்லியிருக்க, உதைத்தானென்னக் கூடுமோவென்று இந்த ஶங்காபிப்ராயம். இத்தைப் பரிஹரிக்கிறார் (துங்கேத்யாதி. இதுக்கு "தஸ்யோபரிபபாதச" என்கையாலே உதைத்தானென்றது ஸித்தமென்று கருத்து.

---

(௧) வி-பு-௫-௨௦-௨௯.

(௨) வி-பு-௫-௨௦-௮௯.

(தெருவின்கண் தீமைகள்செய்து) "தெருவிலே விளையாடப் போகிறேன்" என்று போய், விளையாடுவாரோடே சொல்லவரிதான தீமைகளையும் செய்தென்னுதல். ஸ்ரீமதுரையில் தெருவிடத்தில் குப்ஜையோடும் நகரஸ்த்ரீகளோடும் முகவிகாரங்களால் செய்த தௌ(ஃ)ர்த்யமென்னுதல். (சிக்கென மல்லர்களோடு பொருது வருகின்றபொன்னே) மல்லரைக்கொன்றபின்பிறே கம்ஸன்பட்டது. ஆயிருக்க, "மல்லர்களோடு சிக்கெனப்பொருது" என்னும்போது மல்லயுத்தம்பின்னாட்டிற்றாக வேணுமிறே.

---

(தெருவின் கண் தீமைகள் செய்து) தெரு - வழி. அவனை நிரஸிப்பதாகப் போகிறபோது வழியிலே அவனுடைய ஈரங்கொல்லியானரஜகனைக்கொன்று, ஆயுதசாலையிலேபுக்கு அவனுக்கு மறம் பிறக்கும்படி "வில்விழவுக்கு" என்று அலங்கரித்திருக்கிற வில்லை முறித்து, அவனுக்கு அபிமதக(ஃ)ஜமான குவலயாபீடத்தைக்கொன்று செய்தவிவையிறே தெருவின்கண் செய்த தீமைகளாவன. (சிக்கென மல்லர்களோடு பொருது) (க) "ஏவிற்றுச்செய்வானேன்றெதிர்ந்து வந்தமல்லர்" என்கிறபடியே கம்ஸன் ஏவிற்றுச் செய்யவேணுமென்று மற்பொருகையை ஏன்றுகொண்டுவந்தசாணூரமுஷ்டிகராகிற மல்லரோடே ப்ரதிஜ்ஞா பூர்வகமாக உறைக்கப் பொருதழித்து.

(வருகின்றபொன்னே) இப்படி விரோதிவர்க்கத்தைநிரஸித்து வருகிறபோதைச்செருக்காலே பொன்போலே உஜ்ஜ்வலமான வடி

---

கீழே கம்ஸவதத்தைச் சொல்லி, மேலே மல்லவதத்தைச் சொல்லுகையாலே, மத்யே "தெருவின்கண் தீமைகள்" என்றால் கூடாமை, ஈரங்கொல்லி முதலானாரை நிரஸித்தது அர்த்தமாகச் சொல்லவேண்டுகையாலே, அது வீதியில் செய்ததாகாமையால் "தெரு" என்றதுக்கர்த்தமருளுகிறார் (தெரு வழி) என்று. தீமைகளானவை யென்னென்ன வருளுகிறார் (அவனையித்யாதி). "தெருவின்கண்" என்றது, இன்-சாரியைச்சொல்லாய், தெருவிடமென்றர்த்தமாய், பலிதத்தையருளுகிறார் (போகிறவழியிலே) என்று. (மறம்) கோபம். "மல்லர்களோடுசிக்கெனப்பொருது" என்றந்வயம் திருவுள்ளம்பற்றி, ப்ரமாணமுகேந மல்லரை விசேஷித்துக்கொண்டு அர்த்தமருளுகிறார் (ஏவிற்றித்யாதி). கீழே "தெருவின்கண் தீமைகள்" என்றத்தோடே இத்தைச் சேர்த்துவிடாதே, தனித்துச் சொல்லுகையாலே விசேஷிக்க வேண்டிற்றென்று திருவுள்ளம். (ஏன்று கொண்டு) பொருந்திக்கொண்டு.

---

(க) ௪-உ-சு.

மூ.—
குடங்களெடுத்தேறவிட்டுக் கூத்தாடவல்லவெங்கோவே
மடங்கொள்மதிமுகத்தாரை மால்செய்யவல்லவென்மைந்தா
இடந்திட்டிரணியன்னெஞ்சை யிருபிளவாக முன்கீண்டாய்
குடந்தைக்கிடந்தவெங்கோவே குருக்கத்திப்பூச்சூட்டவாராய்.

---

(சிக்கென) ப்ரதிஜ்ஞாபூர்வகமாக. "பொன்னே" என்றது விரோதிபோனபின்பு திருமேனியில் பிறந்த புகரைச்சொல்லுதல். ஸ்ப்ருஹையைச்சொல்லுதல். (புன்னைப்பூச்சூட்டநீவாராய்) (க) "புன்னைப்பொன்னேய் தாதுதிர்க்கும்" என்கிறபடியேபொன்னுக்குப்பொன்னைச் சூட்டப்பார்க்கிறார். பொன்னோடேயிறே பொன்சேருவது.

அவ,—ஏழாம்பாட்டு. கீழ்கம்ஸாதிகளால் வந்தவிரோதி,ஸாதுஜநங்களுக்குப்போக்கினப்ரகாரத்தை அநுஸந்தித்தார்; இதில்ஹிரண்யாதிகளால் வந்த விரோதிபோக்கினப்ரகாரத்தை அநுஸந்திக்கிறார்.

ஸ்வா;—(குடமித்யாதி) இடையர் ஐஶ்வர்யம் மிக்கார் தலைச்சாலிவெட்டியாடும் கூத்திறே குடக்கூத்தாவது. அது இவனுக்கு

---

வையுடையவனே!. முந்துற கம்ஸநிரஸநத்தைச்சொல்லி, அதுக்குப்பூர்வத்திலுள்ளவற்றைப் பின்பு சொல்லுவானென்னென்னில்; கம்ஸநிரஸநமே ப்ரதாநமாய், இவை அதுக்குறுப்பாக, போகிறவழியில் செய்த வ்யாபாரங்களாகையாலே அதுக்கு முன்னாகச்சொன்னவிதில் விரோதமில்லை. (புன்னையித்யாதி) உனக்கு உகப்பான புன்னைப்பூச்சூட்டும்படியாக நீ வாராய். "பொன்னே புன்னைச்சூட்டவாராய்" என்கையாலே-பொன்னோடே பொன்னைச் சேர்ப்பாரைப்போலே, பொன்போலேயிருக்கிற திருமேனியிலே பொன்னேய் தாதையுடைய புன்னைப்பூவைச்சூட்ட அழைக்கிறாள்காணும். (௬)

வ்யா.—ஏழாம்பாட்டு. (குடங்களித்யாதி) ப்ராஹ்மணர் ஐஶ்வர்யம் விஞ்சினால் யாகாதிகள் பண்ணுமாபோலே,இடையர்

---

"பொன்னே புன்னைப்பூ" என்கிற ஸமபிவ்யாஹாரத்தை உட்கொண்டருளுகிறார் (உனக்கித்யாதி). இவன் உகக்கும்படியிருக்கைக்கு நியாமகத்தை முக்த கண்ட்டமாக உபபாதிக்கிறார் (பொன்னே புன்னையித்யாதி). (தாது) கேஸரம். ... ... ... ... ... ... (௬)

அரு;—ஏழாம்பாட்டு. (குடங்களித்யாதி). குடக் கூத்தாடுகைக்கு ஹேதுவேது, பசுமேய்க்கவன்றோ வடுப்பதென்ன, த்ருஷ்டாந்தமுகேந வருளுகிறார் (ப்ராஹ்மணரித்யாதி). இடையருக்கு முன்பிலும் ஐஶ்வர்யம் விஞ்

---

(க) தி-மொ-௫-௧-௬.

ஜாத்யுசிதமான தர்மமாகையாலே அநுஷ்டிக்கவேண்டிவருமிறே. ப்ராஹ்மணர்க்கு ஸந்த்யாவந்தநாதிகள் நியதமானாப்போலேயிறே இவனுக்கும். குடமென்னாதே "குடங்கள்" என்கையாலே பலகுடங்களும் கிழே பாரித்திருக்கும்போலேகாணும். எடுக்கும்போது குடங்கள் காணுமதொழியப்பின்னை ஆகாசத்திலே ஏறவிட்டால் சக்ஷுரிந்த்ரியம் தூரக்ராஹியானாலும் குடங்கள் ஆகாசத்திலே யேறுகிற தூரம் க்ரஹிக்கப்போகாதிறே.

"குடங்களெடுத்து" என்றும், "ஏறவிட்டு" என்றும் கண்டவித்தனைபோக்கி, "மீண்டேறவிட்ட குடங்கள் திருக்கையிலேயும் வந்தது" என்கைக்கு ஒரு பாசுரம் பெற்றிலோமிறே. திருமுடியிலேயும் அடுக்குக்குடம் இராநிற்கச்செய்தேயும், ஏறிட்ட குடங்களினுடைய

ஐஶ்வர்யம் விஞ்சினால் செருக்குக்குப் போக்குவிட்டாடுவதொரு கூத்தாய்த்து-குடக்கூத்தாவது. உபயவிபூத்யைஶ்வர்யம்போலன்றிக்கே, பிறந்து படைத்த ஐஶ்வர்யமிறே இவனுக்கிது. இடையர்க்கு ஐஶ்வர்யந்தானாவது-கோ(ஸ)ம்ருத்தியிறே. அந்தஸம்ருத்தி-குறைவறவுள்ளது தனக்கேயாகையாலே, அத்தால்வந்த செருக்குக்குப் போக்குவிட்டுக் குடக்கூத்தாடினபடி சொல்லுகிறது. தலையிலே அடுக்குக் குடமிருக்க, இரண்டு தோள்களிலும் குடங்களிருக்க, இரண்டு கைகளிலும் குடங்களையேந்தி ஆகாசத்திலேஎறிடுவது ஏற்பதாயாடுவதொரு கூத்தாய்த்து - குடக்கூத்தாவது. அத்தைச்சொல்லுகிறது, (குடங்களெடுத்தேற விட்டுக்கூத்தாடவல்ல) என்று.

"குடம்" என்னாதே, "குடங்கள்" என்கையாலே - பல குடங்களையும் கொண்டு ஆடினமையைச் சொல்லுகிறது. "எடுத்தேறவிட்டு" என்கையாலே - அவற்றைத் திருக்கையிலே எடுத்து ஆகாசத்திலே உயர எறிவது, ஏற்பதானமையைச் சொல்லு

---

சினத்தாலே செருக்கிக்கூத்தாடுகை கூடினாலும், அவாப்தஸமஸ்த காமனுக்குக் கூத்தாடச் செருக்கு உருப்படி வந்த வைஶ்வர்யமேதென்னவருளுகிறார் (உடையேத்யாதி). குடக்கூத்தாவது ஏது என்ன, அதின் ஸ்வரூபத்தை யருளுகிறார் (தலையிலித்யாதி).

உக்தப்ரகாரத்தை, பதங்களிலேறிட்டுக்காட்டுகிறார் (குடமென்னாதேயித்யாதி). "கூத்தாடவென்கோவே" என்னாமல், "வல்ல" என்றதுக்குக்கூத்தாத்

போக்குவரத் துண்டாயிருக்கச் செய்தேயும், ஆகாசத்திலே நிறை த்துவைத்தாப்போலே யிருக்கையாலே, போக்குவரத் துண்டெ ன்று மிடம் அநுமாந ஸித்தமாமித்தனை. ஸ்வர்க்காதிகளிலே ஏறி னவர்களுக்கு ஓரவதியும், (க) "க்ஷீணே புண்யே மர்த்யலோகம் விஶந்தி- க்ஷீணே புண்யே மர்த்யலோகம் விஶந்தி" என்று ஒருமீட்சி கண்டாலும், இப்ப்ரத்யக்ஷம் அநுமிக்கு மித்தனையிறே. (கூத்தாடவல்லவெங் கோவே) ஏறிட்டகுடம் கண்டாலும் கூத்தின் வகைகளோதான் காணலாயிருக்கிறது. ப(ஃ)ரதத்தளவுமிறே ந்ருத்தவிசேஷம் காண லாவது. இவனுடைய வல்லபம் தெரியாது. ந்ருத்தத்துக்கு ஒரு ராஜரென்னு மித்தனையிறே. அதாவது-அக்ரகண்யனென்றபடி.

(மடங்கொள்மதிமுகத்தாரை மால்செய்யவல்லவெம்மைந்தா) அவ்வூரிலாண்களையும் வ்ருத்தை(த்தோ)களையும் சிஶுக்களையுமொழிய, நவயௌவனைகளாய், அவனாலே புண்பட்டு பவ்யைகளாய், அவன் பொகட்டுவித்த விடத்தே கிடக்கச் செய்தேயும், சுபதர்ஶியான அவன் வந்தால், முகத்தில் வாட்டம் தோற்றாமல் ப்ரஸந்நைகளாயி ருக்கையாலே, "மதிமுகம்" என்கிறது; இப்படி மால் செய்யவல்ல வெம்மைந்தா. மைந்து-மிடுக்கும், பருவமும், ஶைஶவமும். (இடங்

கிறது. "கூத்தாடவல்ல" என்கையாலே - மற்றும் இக்கூத்தாடு வாருண்டேயாகிலும், இவன் ஆடின கட்டளை ஒருவர்க்கு ஆட ப்போகாதென்னு மிடம் சொல்லுகிறது. அதாவது-இவனுடின வைசி(ஷ)த்ரி, பரதஶாஸ்த்ரத்திலும் காணவரிதாயிருக்கை. (எங் கோவே) எங்களுக்கு நாதனானவனே!

(மடங்கொளித்யாதி) இப்படி யிருக்கிற சேஷ்டிதத்தாலே மடப்பத்தையுடையராய், பூர்ணசந்த்ரனைப்போலே குளிர்ந்து ஒளிவிடாநின்ற முகத்தையுடையரா யிருக்கின்ற ஸ்த்ரீகளைப் பிச் சேற்றவல்ல வென்னுடைய பிள்ளையானவனே!. (இடந்திட்டித்

பர்யமருளுகிறார் (கூத்தாடவித்யாதி). கூத்தெல்லாம் பரத ஶாஸ்த்ர ஸித்த மன்றோ, அது எல்லார்க்கும் பொதுவன்றோ, ஒருவர்க்கும் ஆடப்போகாதென் னக் கூடுமோவென்கிற ஶங்கையிலே யருளுகிறார் (அதாவதித்யாதி).

"கூத்தாடவல்ல" என்றத்தை ஹேதுவாக்கிக் கொண்டர்த்த மருளுகி றார் (இப்படியித்யாதி). ( சேஷ்டிதத்தாலே ) என்றதுக்கு, (பிச்சேற்றவல்ல)

(க) கீ-க௮-௨௧.

திட்டிரணியன் நெஞ்சை யிருபிளவாக (முன் கீண்டாய்) இரணியன் நெஞ்சைக்கொண்டு இருபிளவாகவிடந்திட்டாய். (முன்) காலபரமாதல்; ப்ரஹ்லாதன் முன்னேயாதல். "நெஞ்சு" என்று - மார்பாகவுமாம். மார்பு பிளக்கை எளிதிறே. அமூர்த்தமான நெஞ்சைப் பிளந்தானென்றார்கிறே.

(க)"உளந்தொட்டு" என்றவிடம்-இப்போதாகிலும் அநுகூலிக்குமோவென்று நிர்வஹிப்பாருமுண்டு. அப்போது பூர்வஸங்கல்பவிருத்தமாய் வரும். ஆனால், "உளந்தொட்டு" என்றதுதனக்குப் பொருளென்னென்னில்;—ஸர்வஜ்ஞனாய், ஸத்யஸங்கல்பனாயிருக்கிறவன் வஶக்தி, இப்போது இவன் ஹ்ருதயபரீக்ஷை பண்ணுகைக்கடி - அடியில் பண்ணினப்ரதிஜ்ஞை குலைந்து பிறகு காட்டியோட, அவன் போனவிட மெல்லாம், (உ) [illegible] - லோகத்ரயே ஸபதிமாநுஷ ஸிம்ஹகர்ப்பே" என்று லோகத்ரயத்திலும் கர்பித்த ஸிம்ஹமாய்க் கிடக்கையாலே, அடியில் ப்ரதிஜ்ஞை குலைகையாலே "இனியாகிலும் ஶாத்ரவம் நிலைநிற்குமோ" என்று. அதாவது-பொருணியாமல் பல்கவ்விச்சாகையிறே. (ந) "அன்புடையனன்றேயவன்" என்கையாலே உளந்தொடவும் கூடுமிறே. அவன்தான் தொட்டது எப்போதை நெஞ்சென்னில்; க்ஷீராப்தியில்ச (ஸ்ருங்கபாவத்தில் நெஞ்சிறே இங்குப்பிளந்தது. இல்லையாகில் பிறகிட்டுப்பிடி-

யாதி) நெஞ்சென்று - மார்வைச் சொல்லுகிறது. தேவர்கள் கொடுத்த வரபலத்தாலே பூண்கட்டியிருக்கிற ஹிரண்யனுடைய மார்வை, (ச) "கொலைக்கையாளன் நெஞ்சிடந்த கூருகிராளன்" என்கிறபடியே கூரிய திருவுகிர்களாலே உறைக்க வூன்றியிடந்து இரண்டு கூறும்படியாக முற்காலத்திலே கிழித்துப் பொகட்டவனே! இத்தால் - சிறுக்கனுடைய ஆபத்திலே வந்து உதவினவனாகையாலே, †தளர்ந்தாரை நோக்குமவனென்னுமிடம் சொல்லுகிறது.

என்றத்தோடந்வயம், "இரணியன் நெஞ்சை இடந்திட்டு" என்றந்வயித்து "இடந்திட்டு" என்கையாலே தோன்றுகிற துஷ்கரதைக்காக, மார்வை விசேஷித்துக்கொண்டு தாத்பர்ய மருளுகிறார் (தேவர்களித்யாதி). (தளர்ந்தார்) என்றது-ஆபந்நரை. ... ... ... ... ... ... (எ)

†(பா) தாழ்ந்தாரை.(க) க-எ-கூ. (உ) (ந) பெரியதிருவ-ருஉ. தி-மொ-க-எ-உ.

மூ.—சீமாலிகனவனோடு தோழமைக் கொள்ளவும்வல்லாய்
சாமாறவனை நீ யெண்ணிச் சக்கரத்தால்தலைகொண்டாய்
ஆமாறறியும் பிரானே யணியரங்கத்தே கிடந்தாய்
ஏமாற்றமென்னைத்தவிர்த்தாயிருவாட்சிப்பூச்சூட்டவாராய்

---

பட்டவனைப் பிளந்தால் பௌர்யபங்கம் வருமிறே. அதுக்காகவும், "தேவர்களுக்குக்கொன்று தருகிறோம்" என்று ப்ரதிஜ்ஞை பண்ணு கையாலும், இவனை விடில் க்ஷீராப்ராப்திவாஸிகளை நலிந்தாப்போலே, தேவர்களை நலியுமென்றிறே, * ஆமாறறியும் பிரான் இவனை நிரஸித்தது. ஸம்ஸாரத்தில் ஸங்கல்ப பாரதந்த்ர்யப்ரவ்ருத்தி நிவ்ருத்த்யஶக்தரையும், (க) "ధర్మాన్పరిత్యజ్య మామేకం వ్రజ - தர்மாந்பரித்யஜ்யமாமேகம்வ்ரஜ" என்றருளிறே. "இத்தனையோக்யதைதானுண்டோ?" என்று உளந்தொட்டு இடந்திடுவதொழிய, அவனைக்கொள்ளலாம் கார்யமில்லையிறே.

(குடந்தைக் கிடந்த வெம்கோவே) தமக்குப்ராப்யனுவான் குடந்தைக் கிடந்தவனுகையால், "எங்கோ" என்கிறார். கூத்தாட்டும் மால்செய்கையும், கெஞ்சிடக்கையும் முதலான வ்யாபாரங்களிலுங் காட்டில் "எங்கோ" என்கையாலே, நிர்வ்யாபாரனுய்க்கிடந்தவனுக்கிறே மிகவும் பரியவேண்டுவது. குருக்கத்திப் பூச்சூட்டவாராய்.

அவ,—கீழ் ஹிரண்யனை நிரஸித்தமையை அநுஸந்தித்தார். இங்கு மாலிகனை நிரஸித்தப்ரகாரத்தை அநுஸந்திக்கிறார்.

வ்யா;—எட்டாம்பாட்டு. (சீமாலிகனித்யாதி) மாலிகனென்

---

(குடந்தையித்யாதி) அவதாரங்களுக்குப் பிற்பாடரானவர்களுக்கும் உதவுகைக்காகத் திருக்குடந்தையிலே கண்வளர்ந்தருளின என்னுயனவனே!. (குருக்கத்தியித்யாதி) உனக்கென்று தேடிவைத்த குருக்கத்திப்பூவை உன் திருக்குழலிலே சூட்டும்படியாகவாராய். .. ... ... ... ... (எ)

வ்யா.—எட்டாம்பாட்டு. (சீமாலிகனித்யாதி) மாலிகனென்

---

அரு;—எட்டாம்பாட்டு. (சீமாலிகனித்யாதி) "தர்ம ஸம்ஸ்த்தாபநம்பண்ணப் பிறந்தவனுக்கு தோழமை கொண்டவனைக் கொல்லக் கூடுமோ, அவன் துஷ்டனேயாகிலும் தோழனென்று கொல்லும்படி எங்ஙனே? லோகாபவாதம் வாராதோ" என்ற சங்கையைப் பரிஹரிக்கைக்காகவும், இந்த கதை அதிப்ரஸித்தமாகையாலும், இதிஹாஸத்தில் கதையை விஸ்தரித்தருளி, இதுக்குத் தாத்பர்யமாக வருளுகிறார் ( மாலிகன் ) என்று துடங்கி, ( ஸங்க்ரஹேண

---

(க) கீ-கஅ-உ.

பாணொருத்தன் க்ருஷ்ணன் பக்கலிலே ஆயுதசிக்ஷாஸகாவாய், பல வாயுதங்களும் பயிற்றுவிக்க, க்ருஷ்ணன் பக்கலிலேகற்று, இந்த ஆஸக்தியாலே மூர்க்கனாய், லோகத்திலுள்ள ஸாதுக்களை, வேண்டா வேண்டாவென்ன நலிந்து திரியப்புக்கவாறே, "ஆயுதஸகாவாயிருக்கிறவனை நிரஸிக்க வொண்ணாது" என்றும் "இவனைவஶமாக்க வொண்ணாது" என்றும் திருவுள்ளத்திலே அத்யந்தம் வ்யாகுலம் நடந்து போருகிற காலத்திலே, இவனை ஒருபோது கருக நியமித்தவாறே, இவன்தான் நறுகுமுறுகு என்றாப்போலே சிலபிதற்றி "என்னை ஆழிபயிற்றக் கற்பித்திலீர், எல்லாவாயுதம் கற்பித்தீரேயாகிலும்" என்ன; "அதுஅஸாதாரணம்; உனக்குக் கர்தவ்யமன்றுகாண்" என்ன, "எனக்குக் கர்தவ்ய மன்றியிலே யிருப்பதொரு ஆயுத முண்டோ" என்று அதிநிர்பந்தங்களைச் செய்த

---

பாணொருத்தன் க்ருஷ்ணனுக்குஸகா(ஷா)வாய், பலஆயுதங்களும் பயிற்றுவிக்க, க்ருஷ்ணன்பக்கலிலே கற்று, இந்த ஆஸக்திபலத்தாலே ஒருவர்க்கு மஞ்சாமல் லோகத்திலுள்ள ஸாதுக்களை நலிந்து திரியப்புக்கவாறே, "ஸகாவாய்ப்போந்த விவனை நிரஸிக்க வொண்ணாது" என்றும், "இவனை வஶமாக்கவொண்ணாது" என்றும், திருவுள்ளத்தில் அத்யந்த வ்யாகுலம் நடந்து போருகிற காலத்திலே, அவனை ஒருபோது கடுகநியமித்தவாறே, அவன்றான் "நறுகுமுறுகு" என்றாப் போலே சில பிதற்றி, எல்லா வாயுதங்களும் பயிற்றுவித்தீரேயாகிலும், என்னை, "ஆழி பயிற்றுவித்திலீரோ" என்ன; "அது நமக்கு அஸாதாரணம், உனக்குக்கர்த்தவ்யமன்றுகாண்" என்ன; "எனக்குக்கர்த்தவ்யமன்றியிலே யிருப்பதோ ராயுதமுண்டோ?" என்று அவன் நிர்பந்தங்களைப்பண்ணினவாறே, "இவனுடைய துஸ்ஸ்வபாவங்களடியாக

---

சொல்லுகிறது) என்னுமளவும். (பயிற்றுவிக்க) அப்ப்யஸிக்க. (இந்த வாஸக்தி) என்றது-க்ருஷ்ணனிடத்தில் கற்றப்ரத்யாஸக்தி யென்றபடி. (கடுகநியமித்த வாறே) என்றது- "ஸாதுக்களை நலியாதே" யென்று சுருக்காகவருளிச் செய்தவாறே யென்றபடி. (நறுகுமுறுகு) ஶப்தாநுகாரம், (சிலபிதற்றி) என்றது-"உன்வழிவந்தேனோ, உன்பந்துக்களை ஏதேனும் செய்தேனோ? நீர் எது கோபிக்கிறீர்" என்றாப்போலே சில அஸத்துத்தரம் சொல்லியென்றபடி. (பிதற்றி) என்றவநந்தரம், "அதுக்கு மேலே" என்று கூட்டிவது. (ஆழி பயிற்று

வாறே, "இவனைஎன்செய்வோம்" என்று ஒருவழியாலும் இசைவிக்கவொண்ணாமையாலும், நம்முடைய ஆஸக்தியாலே நாட்டாரை அழிக்கையாலும், அதுக்கு மேலே அஸாதாரண பரிகரம் தனக்கு வஶவர்த்தியாகாதென்னுமிடமறியாமையாலேயிறே நிர்பந்திக்கிறதென்று, *எண்ணம் புகுந்து தித்திக்குமமுதானவன், இவனை நிரஸிக்கும் ப்ரகாரங்களாலே ஒருதோஷமும் வாராமல், "தோழமைகொள்ளவும், சீர்சக்கரத்தால் தலை கொள்ளவும் வல்லாய்" என்றுஇவர் கொண்டாடும்படியிறே நிரஸித்தது.

அது தானேதென்னில்; தன்னுடைய சீர்மைகுன்றுதபடி ஆயுதம் பயிற்றுவிக்கிறானாகத்திருவாழியை ஒருவிரலாலேசுழற்றிஆகாஶத்திலே எழச்சுழன்று வருகிற திருவாழி மீண்டும் திருக்கையிலே வந்திருந்த வாஶ்சர்யத்தைக்கண்டவாறே, "எனக்குஇது அரிதோ" என்று அவன் கைநீட்டினவாறே, "உனக்கு இது அரிதுகாண்" என்னச் செய்தேயும், அவன்வாங்கிச் சுழற்றி மேலே யிட்டு மீண்டு சுழன்று வருகிற போது பிடிப்பானாக நினைத்துத் தன்கழுத்தை அடுக்கத்தன் விரலைவைக்கையாலே, அது *வட்டவாய்நுதிநேமியாகையாலே சுழலவரஇடம்போராமையாலே அதின் வீச்சு இவன் கையிலே பிடிபடாமல் இவன் தலையை அரிந்து கொண்டுபோகையாலே "ஆமாறறியும் பிரானே" என்கிறார்.

---

இவனை நிரஸிக்கவேணும்" என்று திருவுள்ளம்பற்றி, தன்னுடைய சீர்மை குன்றாதபடி ஆயுதம் பயிற்றுவிக்கிறானாக, திருவாழியை ஒரு விரலாலே சுழற்றி ஆகாசத்திலே எழவீச, சுழன்று வருகிற திருவாழியை மீண்டும் திருக்கையாலே அநாயாஸேந ஏற்க, அவன் இத்தைக்கண்டு, "எனக்கு இது அரிதோ" என்று கைநீட்ட, "உனக்கு இது † அரிதுகாண்" என்னச்செய்தேயும் அவன் வாங்கிச்சுழற்றி மேலேவிட்டு, மீண்டு சுழன்று வருகிற போதுபிடிப்பானாக நினைத்து, தன்கழுத்தை ‡படுக்கத்தன்விரலையெடுத்துக்கொடு நிற்க, அது * வட்டவாய் நுதிநேமியாகையாலே சுழலவர இடம் போராதது கொண்டு, அதன் வீச்சு இவன் கையில் பிடிபடாமல் இவன்தலையையரிந்துபொகட்டது" என்று

---

வித்திலீரே) என்றதுக்கு க்ருஷ்ணனிடத்தில் குறை சொன்னானென்று கருத்து. (அடுக்க) என்றது-நிராகரிக்க வென்றபடி.

---

† (பா) ஆகாது. ‡ (பா) எடுத்துத் தன்விரலை வைத்து.

மேல்விளைவ தறிந்து தோழமை கொள்கையாலும், சாமாறெ ண்ணித் தலைகொள்கையாலும், * பொய்யர்க்கே பொய்யனுயும், இதிஹாஸாதிகளாலே சொல்லப்பட்டதொரு வ்ருத்தாந்தத்தை இப்பாட்டில் பூர்வார்த்தத்தாலே ஸங்க்ரஹேண சொல்லுகிறது.

(மொலிகனவனோடு தோழமைக்கொள்ளவும் வல்லாய்) (மொ) ஔபசாரிகம். மாலிகனென்று பேரையுடையனுய் ஆஸுரப்ர க்ருதியா யிருக்கிறவனோடே, உன் குணத்தாலே கலந்து தோழ மைக்கொள்ளவும்வல்லவனே!. (சாமாறவனை நீயெண்ணி) அவன் ஸாதுபீடாதிகளைப் பண்ணப்புக்கவாறே, "இனி இவனை யழியச் செய்யாவிடில் நாடு குடிகிடவாது" என்று அவன்சாகத்தக்க வழி களை நீயே சிந்தித்து. அதாவது-"தோழனைக்கொன்றுன்" என்று தனக்கு அபவாதம் வாராதபடியாகவும், "தன்னுலேதான் முடிந்தான்" என்னும்படியாகவும் தக்கவழியைச் சிந்திக்கை. "அவனை" என்கிற விடத்தில், ஐகாரம் - அவ்யயம். (சக்கரத் தால் தலைகொண்டாய்) "நமக்கு அஸாதாரணமான ஆயுதம், உனக்கிதுஆகாதுகாண்" என்னச்செய்தேயும் அவன்நிர்ப்பந்தம் பண்ணினதுக்காக, அவனை, ஆழி பயிற்றுவிப்பாரைப்போலே உபாயரூபேண திருவாழியாலே ஶிரஶ்சேதம் பண்ணிப்போகட் டவனே!.

(ஆமாறறியும் பிரானே) ஶத்ருநிரஸநம், ஆஶ்ரிதரக்ஷணமா கிற விவற்றில் ஏதேனுமொன்றில் புகுந்தால்,மேல்விளைவதறியும்

"அவன்" என்றத்தாலே, "புத்திஸ்த்தயான வர்த்தத்தை யருளுகிருர் (ஆஸுரேத்யாதி). (கொள்ளவும்) என்ற (உ) சகாரத்தால் தோற்றின துஷ்கரதையைத் திருவுள்ளம்பற்றி (உன்குணத்தாலே கலந்து) என்றது. "அவன் சாமாறு எண்ணி" என்றந்வயித்து ஹேது பூர்வகம் சப்தார்த்த மருளுகிருர் (அவனித்யாதி). ஹிரண்யாதிகளைப் போலே இவனை நிரஸிக் கைக்கு உபாயம் சிந்திக்கும்படி துஷ்கரதை ஏதென்னவருளுகிருர் (அதாவதி த்யாதி). அபவாதம் வாராமல் உபாயம் சிந்திக்கிருனென்று சொல்லிவைத்து, தலையறுக்கக் கூடுமோ வென்கிற ஶங்கையிலே அருளுகிருர் (நமக்கித்யாதி).

"சக்கரத்தால் தலைகொண்டாய்" என்றத்தையும், "அணியரங்கத்தே கிடந்தாய்" என்றத்தையும் கடாக்ஷித்துத் தாத்பர்யமருளுகிருர் (சத்ரு வித்யாதி). (புகுந்தால்) என்றது - உத்யோகித்தாலென்றபடி. (மேல்விளை

மூ.—அண்டத்தமரர்கள்சூழ வத்தாணியுள்ளங்கிருந்தாய்
தொண்டர்கள் நெஞ்சிலுறைவாய் தூமலராள்மணவாளா
உண்டிட்டுலகினையேழு மோராலிலையில்துயில்கொண்டாய்
கண்டுநானுன்னையுகக்கக் கருமுகைப்பூச்சூட்டவாராய் (௯)

✻கொடுங்கோளால் நிலம்கொண்டும், "ஆமாறறியும் பிரான்" என்பதி லும் "அணியரங்கத்தே கிடந்தாய், ஆமாறறியும்பிரானே" என்கை யிறே இவர்க்குத் திருவுள்ளம். இதுதன்னாலேயிறே இவரேமாற் றத்தைப் பெரியபெருமாள் தவிர்த்தருளிற்றும். (ஏமாற்றம்) "இவ்வஸ்துவுக்கு என்வருகிறதோ?" என்று நினைக்கிற க்லேசம். அது பின்னைத் தவிருமோவென்னில், (க) "உரையாவெந்நோய் தவிர" என்கிற விடத்தே கண்டோமிறே. அதுக்கடி காலதர்ஶநம் பண்ணுவிக்கையிறே. இருவாட்சிப்பூச்சூட்டவாராய். (அ)

அவ—ஒன்பதாம்பாட்டு. ஜகத்திலுண்டான விரோதிகளெல் லாத்தையும் உபஸம்ஹரித்த ப்ரகாரத்தை அநுஸந்திக்கிறார்.

ஸ்வா;—(அண்டத்தமரரித்யாதி) (உ) "பரமாத்மனைச் சூழ்ந் திருந்தேத்துவர் பல்லாண்டே" என்கிறபடியே, (அண்டத்து - அத்

உபகாரகனானவனே! (அணியரங்கத்தேகிடந்தாய்) "இங்கேகி டந்தால் நமக்கு முமுக்ஷுக்களை லபிக்கலாம்" என்று ஸம்ஸார த்துக்கு ஆபரணமான கோயிலிலே பள்ளி கொண்டருளுகிற வனே!. (ஏமாற்றமென்னைத் தவிர்த்தாய்) (ங) "நல்லார்கள் வா ழும் நளிரரங்கம்" என்கிறபடியே பரிவருள்ள தேசத்திலே பள் ளிக்கொள்ளுகையாலே உன் ஸௌகுமார்யாதிகளை நினைத்து, "உனக்கென்வருகிறதோ?" என்று வயிறெரியாநிற்குமென் க்லே சத்தைப்போக்கினவனே!. ஏமாற்றமாவது-துக்கம். (இரு வாட்சிப் பூச்சூட்டவாராய்) காலபுஷ்பமானவிது செவ்வியழிவ தற்கு முன்னே உன் திருக்குழலிலே நான் சூட்டும்படி வாராய்.

வது) என்றது - இந்த உத்யோகத்தாலே வரும் ஶத்ருநிரஸநமும், ஆஶ்ரிதர க்ஷணமுமாகிற பலத்தை யென்றபடி. "ஆமாறறியும் பிரானே" என்றத் தைக் கடாக்ஷித்துத் தாத்பர்ய மருளுகிறார் (இங்கேயித்யாதி). இவர்தம்மு டையக்லேசத்தைத் தவிர்க்கச் சொல்லு மவரல்லாமையாலே, விசேஷித் துத் தாத்பர்ய மருளுகிறார் (நல்லார்களித்யாதி). (நளிர்) குளிர்ச்சி. ... (அ)

(க) தி-வாய்-அ-ங-கக. (உ) திருப்பல்லா-கஉ. (ங) நா-தி-கக-ரு

தாணியுள்ளே அமரர்கள் சூழ விருந்தாய்) த்ரிபாத்விபூதியுள்ளே அந்தரங்கரான ஸூரிகள் மங்களாசாஸநம் பண்ண விருந்தாய். (தொண்டரித்யாதி) இங்கு, த்ரிதீயாவிபூதியிலுள்ள தொண்டர்கள் சூழ்ந்து மங்களாசாஸநம்பண்ண, அவர்கள் நினைவிலே ஸந்நிஹிதனாய்ப் போருகிறவனே!. (தூமலராள் மணவாளா) அதுக்கடியான பெரியபிராட்டியார்க்கு அத்விதீய நாயகனானவனே! தூய்தான தாமரைப்பூவைப் பிறந்தகமாகவுடைய பெரிய பிராட்டியார்க்கு நாயகனானவனே!.

---

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (அண்டத்தித்யாதி) (க)"இறந்தால் தங்குமூரண்டமே" என்றும், (உ)"அண்டம்போ யாட்சியவர்க்கு" என்றும், பரமபதத்தை-"அண்டம்" என்று சொல்லக்கடவதிறே, (அண்டத்துள் அத்தாணி-அமரர்கள்சூழ- அங்கிருந்தாய்) பரமபதத்தினுள்ளே அருகிருப்பையுடையரான நித்யஸூரிகள்சூழ ஸேவிக்க, அவர்கள் நடுவே *ஏழுலகும் தனிக்கோல் செல்ல வீற்றிருந்தருளினவனே!. (அத்தாணி) அருகிருப்பு. (தொண்டர்கள் நெஞ்சிலுறைவாய்) இந்த விபூதியிலே. முமுக்ஷுக்களாய் உன்பக்கல் ப்ரேமயுக்தரா யிருக்குமவர்களுடைய மநஸ்ஸினுள்ளே, பரமபதத்திலிருப்பிலுங்காட்டில் உகந்து நித்யவாஸம் பண்ணுமவனே! (தூமலராள்மணவாளா) தூய்தான தாமரைப்பூவைப் பிறந்தகமாகவுடைய பெரிய பிராட்டியார்க்கு நாயகனானவனே!. (ங) "[illegible] ஸ்ரீயாஸார்த்தம்" என்கிறபடியே பரமபதத்திலும், (ச)"அரவிந்தப்பாவையுந்தானும்" என்கிறபடியே தொண்டர்களுடைய ஹ்ருதயத்திலும், பெரிய பிராட்டியும் தானுங் கூடவிறே யெழுந்தருளி யிருப்பது.

---

அரு;—ஒன்பதாம்பாட்டு. (அண்டத்தித்யாதி). அண்ட பதத்தாலே ப்ராக்ருதமான வண்டத்தையும், * அமரபதத்தாலே ப்ரஹ்மாதிகளையும் சொல்லுமாகில் இவனுக்கு அநிரூபமாகாமையாலே, பரமபதமாகவும் நித்யஸூரிகளாகவும் அர்த்தமருளிச் செய்யக்கோலி, அண்டபதம் பரமபதத்தைச் சொல்லுமதுக்கு நியாமகங்களைக்காட்டுகிறார் (இறந்தாலித்யாதி). அங்கயித்ததுக்கு அநுகுணமாக வர்த்தம் (பரமபதேத்யாதி). நெஞ்சில் வர்தநத்தில் உறைப்புத்தோன்றுகையால் "தொண்டர்" என்றதுக்கு சபலரென்றார்த்தம் திருவுள்ளம்பற்றி யருளுகிறார் (இந்த விபூதியிலே யித்யாதி).

---

(க)தி-மொ-கo-உ-கo. (உ)தி-மொ-அ-கo-கo. (ங)வாயுபுராணே. (ச)இ-உ-கo.

மூ.—செண்பகமல்லிகையோடு செங்கழுநீரிருவாட்சி
எண்பகர்பூவுங்கொணர்ந்தே னின்றிவை சூட்டவாவென்று
மண்பகர்கொண்டானையாய்ச்சி மகிழ்ந்துரைசெய்தவிம்மாலை
பண்பகர்வில்லிபுத்தூர்க்கோன்பட்டர்பிரான்சொன்னபத்தே.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.

(உண்டித்யாதி) இவள் புருஷகாரத்தில் அகப்படாதாரை ப்ரளயகாலத்தில் திருவயிற்றிலே வைத்து, முகிழ்விரியாமல் அத்விதீயமான வடபத்ரத்திலே கண்வளர்ந்தருளினவனே!. (கண்டித்யாதி) நானுன்னைக்கண்டு மங்களாசாஸநம்பண்ணி மிகவும் ப்ரீதனும்படி, கருமுகைப்பூச் சூட்டவாராய். .... .... (க)

அவ;—நிகமத்தில் இத்திருமொழி கற்றார்க்குப்பலம் சொல்லித் தலைக்கட்டுகிறார்.

ஸ்வா;—(செண்பகமித்யாதி) (செண்பகமல்லிகையோடு செங்கழுநீரிருவாட்சி) என்கையாலே, "அவனுக்கே" என்று இவன் கோ

(உண்டிட்டித்யாதி) ப்ரளயத்தில், அழியாதபடி ஸகலலோகங்களையும் திருவயிற்றிலே வைத்து ஒரு பவனை ஆலிலையிலே கண்வளர்ந்தருளினவனே!. இந்த ஆபத்ஸகத்வத்துக்கும் ஹேது, கீழ்ச்சொன்ன ஶ்ரியஃபதித்வமிறே. (உ) "యస్యా వీక్ష్యముఖం తదింగిత పరాధీనో విధత్తేఽఖిలమ్ - யஸ்யா வீக்ஷ்யமுகம் ததிங்கித பராதீநோ விதத்தேऽகிலம்." என்கிறபடியே ஸகலமும் அவளுடைய இங்கிதபராதீநனாயிறே செய்வது. (கண்டித்யாதி) மாலையும் மயிர்முடியுமாயிருக்கிற உன்னைக்கண்டு நான் உகக்கும்படியாக, நீ உகக்கும் கருமுகைப்பூச் சூட்டவாராய். ... ... (க)

வ்யா;—பத்தாம்பாட்டு. (செண்பகமல்லிகையோடித்யாதி)

(ஆபத்ஸகத்வத்துக்கும்) என்ற (உம்)சகாரத்தால் கீழ்ச்சொன்ன பரமபதவாஸத்துக்கும், தொண்டர் நெஞ்சிலிருப்புக்கும் - ஶ்ரியஃபதித்வம் ஹேதுவென்னுமிடம் ஸூசிதமாகிறது. (ஸகலமும்) என்றவிடத்தில்-பரமபதவர்த்தநமும், தொண்டர் நெஞ்சிலிருப்பும் விவக்ஷிதம். ... ... (க)

அரு.—பத்தாம்பாட்டு. (செண்பகமித்யாதி) அவ்வவகாலத்துக் கடுத்த புஷ்பங்களைச் செவ்விமாறுமல் தத்தத் காலங்களிலே சூட்டி யசோதை அநுபவித்தாப்போலே, இவரும்ஸாயம்ப்ராதஃ பூச்சூட்டி அநுபவித்து, அந்தவர்த்தத்தை நிகமிக்கிறாராகையாலே, புஷ்பங்களை விசேஷித்துக் காட்டுகிறார்

(க) ஶ்ரீஸ்தவ-க.

லுங் காலத்து காலநியதியில்லை. ஸ்ரீகஜேந்த்ரன் கையில் பூவுங்கூட வாடாமல், மணம் குலையாமல் நெடுங்காலமிருந்ததிறே. அன்றிக்கே, பணியவராகவுமாம். (௧) "பத்ரம் புஷ்பம்-பத்ரம் புஷ்பம்" (௨) "புரிவது வும்புகைபூவே" (௩) "கள்ளார் துழாயும்"-அநயார்ஹமான திருத் துழாயோடே கூட நிர்க(ந்)தமான புஷ்பங்களையு மெடுத்ததிறே, அவனுக்கும் இவனுக்கும் சூட்டுகையும் இடுகையும் கர்தவ்யமாக. (௪) "நகண்டகாரிகாபுஷ்பம்-நகண்டகாரிகாபுஷ்பம்" என்றதும், "பறிக் கிறவன்கையில் முள்படாமைக்கென்றே" என்று ஜீயருக்கு பட்டர் அருளிச்செய்கையாலே, அவனுக்காகாதவையில்லை. "சிறுகாலை, அந் தியம்போது" என்கிற காலநியதியுமில்லை. (௫) "ஸர்வகந்தஃ-ஸர்வகந்தஃ" என்கிற வஸ்துவின் பக்கலிலே சேர்ந்காலிறே புஷ்பங்களுக்கு ஸ்வ ரூபஸித்தி உள்ளதும். (௬) "தோளிணைமேலும்" (எ) "தழைக்கும்து ழாய்மார்பன்" (அ) "அஹிம்ஸாப்ரதமம்புஷ்பம் - அஹிம்ஸாப்ரதமம்புஷ் பம்" இத்யாதி, (௯) "நாடாதமலர்" இவைமுதலாகப் பலவிடங்களி லும் அதிகாரிநியதியொழிய த்ரவ்யநியதியில்லையென்றதிறே. (௧௦) "பூ சும் சாந்து-புனையும் கண்ணி - வாசகம் செய்மாலை" (௧௧) "கலிய னொலி செய்தமிழ்மாலை" என்று பலவிடங்களிலும் பலரும் அருளிச் செய்தார்களிறே.

---

ப்ராதஃகால புஷ்பமான செண்பகமும், ஸாயங்கால புஷ்பமான மல்லிகையுமாகிற விவற்றோடே, ப்ராதஃகால புஷ்பமான செங் கழுநீரும், இருவாட்சியும் முதலான எண்ணிச் சொல்லப்பட்ட

---

(ப்ராதஃகாலேத்யாதி). (ப்ராதஃகால புஷ்பம்) என்றது - ப்ராதஃ விகஸிக்கும் புஷ்பமென்றபடி. "இவைகளோடே செங்கழுநீர்முதலானவற்றைக்கொணர்ந் தேன்" என்று ஒருகாலே கொண்டுவந்ததாகத் தோன்றினாலும், "ப்ராதஃ" என்றும் "ஸாயம்" என்றும் விசேஷிக்கையாலே அது கூடாமையால், "கள் ளவரக்கியை மூக்கொடு காவலனைத் தலை கொண்டாய்" என்றவிடத்தில் மூக்கைக் கொண்டாய், தலையைக்கொண்டாயென்றாப்போலே, இங்கும் கிரு பேதேந அவ்வவகாலங்களில் கொண்டுவந்ததைச்சொல்லுகிறதென்று கொள் ளவேணும். (எண்ணிச் சொல்லப்பட்ட) மநோரதித்துச் சொல்லப்பட்ட.

---

(௧) கீ-௯-௨௬. (௨) தி-வாய்-௧-௬-௧. (௩) தி-மொ-௧௧-எ-௬. (௪) வி-த-அ-௪-௪௨. (௫) சாந்தோ. (௬) தி-வாய்-௧-௯-எ. (எ) பெரிய திருவ-௩௯. (அ) (௯) தி-வாய்-௧-௪-௯. (௧௦) தி-வாய்-௪-௩-௨. (௧௧) தி-மொ-எ-௪-௧௦.

(எண்பகர்பூவும் கொணர்ந்தேன்) ஶாஸ்த்ரஸித்தங்களுமாய் பரிகணிக்கப்பட்ட பூக்களெல்லாம் கொணர்ந்தேனென்கையாலே, எல்லாப் பூக்களுக்கும் உபலக்ஷணமாமிறே. ஆகையிறே கீழே ஒன்பது பூவைச்சொல்லி, நாலுபூவிலே நிகமித்தது. (க)"[illegible]-அகாலபலிநோவ்ருக்ஷா:" (உ)"[illegible]-புஷ்பிதகாநநா:" (ங)"மலர்கள் வீழும்". (கொணர்ந்தேன்) என்றது-கொண்டுவந்தேனென்றபடி. (இன்றிவை பூச்சூட்டவாவென்று) "இன்று" என்று இவர்தாமே அருளிச்செய்கையாலே "ப்ராதம், மத்யாந்ஹம், ஸாயந்தனம்" என்கிற காலநியதியில்லை (ச) "ஆதிநெடுங்கிவாய் வாய்ந்த மலர் தூவி" என்னக்கடவதிறே. "இவை" என்கிற பஹுவசநமுண்டாகையாலே உபலக்ஷணம் வேணுமென்கிற நிர்பந்தமில்லை.

(மண்பகர் கொண்டானை) பகர்-மண்கொண்டானை- மஹாபலி "தந்தேன்" என்று, உதகம்செய்த பூமிகொண்டானையென்னுதல், இவன் தான் அவனை அபேக்ஷித்துப்பெற்ற மண்கொண்டானையென்னுதல். ஶாஸ்த்ர ஸித்தமான லோகங்களையெல்லாம் கொண்டானை யென்னுதல். (ரு)"வேயகமாயினும்" ந்யாயஸித்தத்தாலும் கொள்ளலாவது, மஹாபலிக்கு நடக்கிற பூமியளவு மன்றே

---

பூக்களெல்லாங் கொண்டு வந்தேன் அன்றிக்கே, "எண்பகர்பூ" என்றது-இன்னதின்னதென்று பரிகணிக்கப்படுமதாய், ஶாஸ்த்ரஸித்தமாயிருக்கிற பூக்களென்னவுமாம். (கொணர்ந்தேன்) என்றது-கொண்டுவந்தேனென்றபடி. (இன்றிவை சூட்டவாவென்று) இப்போது இவற்றை உன் திருக்குழலிலே சூட்டும்படி வர வேணுமென்று.

(மண்பகர் கொண்டானை) பகர்ந்த மண்ணைக் கொண்டவனை. பகர்தல் - "மூவடிதா" என்ற இவனுடைய உக்தியாதல்; "தந்

---

இத்தால் பக்திபூர்வக மென்னுமிடம் சொல்லிற்றுபிற்று. "எண்" என்றதுக்கு - லோகத்தாராலே, "இது நல்லது, இதுநல்லது" என்று பரிகணிக்க வல்லதென்றும், "பகர்" என்றதுக்கு - ஶாஸ்த்ரத்தால் சொல்லப்பட்டதென்றும், அர்த்தம் திருவுள்ளம்பற்றி யோஜநாந்தரம் (அன்றிக்கேயித்யாதி).

---

(க)ரா-யு-௧௨௭-௧௮. (உ) ரா-அ-ங-ச. (ங) ங-௬-௧௦. (ச) உ-திருவ-௭ங. (ரு)திருவி-௬௧.

வென்னில்; பதினாலுலோகங்களும், அண்டபித்தியும், மஹாபலிய தென்றே இவரிருக்கிறார்; அந்யசேஷத்வ ஸ்வஸ்வாதந்த்ர்யங்களால் மஹாபலியில் குறைந்திருப்பாரில்லையென்று. (ஆய்ச்சி மகிழ்ந்துரை செய்த) யசோதைப்பிராட்டி ப்ரியப்பட்டுப் பூச்சூட்ட வழைத்த ப்ரகாரத்தை. (பண்பகர் வில்லிபுத்தூர்க்கோன் பட்டர்பிரான்சொன்ன பத்தே) ஸ்ரீவில்லிபுத்தூரி லுள்ளாருடைய உக்திப்ரத்யுக்திகளும் ஆதராநாதரோக்திகளு மெல்லாம் பண்ணிலே சேர்ந்து போலே காணுமிருப்பது. இப்படிப்பட்ட ஊருக்கு நிர்வாஹகரான வாழ்வாரருளிச் செய்த, (இம்மாலை பத்தே) (௧) "ஓர்த்தவிப்பத்தே" என்கிறாப்போலே ஸ்லாகிக்கிறார். இதிறே-ஆப்தவாக்யமும். அந்த வஸ்துவுக்கு வேண்டுவதும், இவனால் செய்யலாவதும், பூமாலையும் சொல்மாலையுமிறே.

பிள்ளை திருவடிகளே சரணம்.

---

தேன்" என்ற மஹாபலி உக்தியாதல். ஶாஸ்த்ரஸித்தமான பூமியையெல்லாம் கொண்டவனை யென்னுதல். (ஆய்ச்சிமகிழ்ந்துரைசெய்த) இப்படியிருக்கிறவனைக்குறித்து "இன்றிவைசூட்டவா" என்று யசோதைப்பிராட்டி உகந்துசொன்ன ப்ரகாரங்களை. "செய்த" என்றது-செய்தவற்றையென்றபடி. (பண்பகர் வில்லிபுத்தூர்க்கோன் பட்டர்பிரான் சொன்ன - இம்மாலை - பத்தே) ஆரேனுமொருவர் ஏதேனுமொன்றைச் சொல்லினும் பண்ணிலே சேரும்படிசொல்லாநிற்கும் ஸ்ரீவில்லிபுத்தூர்க்கு நிர்வாஹகரான பெரியாழ்வாரருளிச்செய்த இம்மாலை; "ஒருபத்தே" என்று இதினுடைய ஶ்லாக்யதையைச் சொல்லுகிறது. இதுக்கொரு பலம் சொல்லாதே இத்தையேஸ்லாகித்துவிட்டது, இதினுடைய ரஸாநுபவந்தானேஇதுக்குப்பலமென்றுதோற்றுகைக்காக.(௧0)

பெரிய ஜீயர் திருவடிகளே சரணம்.

## பெரியாழ்வார் திருமொழி இரண்டாம்பத்து ஏழாம் திருமொழி முற்றிற்று.

---

(ஆரேனுமொருவர்) என்றது கவிதைசொல்ல வாராதவரேயாகிலு மென்றபடி. (ஏதேனுமொன்றை) என்றது-பண்ணில் சேரதக்கதாகாதவற்றையு மென்றபடி. (சொல்லினும்) என்றவநந்தரம், "அத்தை" என்று சேஷம்.

ஜீயர் திருவடிகளே சரணம.

---

(௧) தி-வாய்-௧-௨-௧௧.

# பெரியாழ்வார் திருமொழி
## இரண்டாம்பத்து எட்டாந்திருமொழி
## இந்திரனோடு ப்ரவேசம்.

ஸ்வா;— *பூசும் சாந்திற் படியே புஷ்பாத்யுபகரணங்களைக் கொண்டு அலங்கரித்து, த்ருஷ்டி தோஷபரிஹாரார்த்தமாகக் காப்பிடத் தொடங்கினார்.

அவ;—கீழே, அவனைத் திருமஞ்சனமாட்டித் திருக்குழல் வாரின யசோதைப்பிராட்டி, "அவன் திருக்குழலுக் கலங்காரமாகப் பூச்சூட்டவேணும்" என்றுகோலி, ஒன்றுபோலொன்றன்றிக்கே, விலக்ஷணமான புஷ்பங்கள் பலவற்றையும் ஸம்பாதித்து, "இவைசெவ்வியழிவதுக்கு முன்னே உனக்கு நான் சூட்டும்படி வரவேணும்" என்று அவனைப் பலகாலுமழைத்துப் பூச்சூட்டினவநந்தரம், "அவன்குழலுக்கு த்ருஷ்டிதோஷம் வாராதபடி காப்பிடவேணும்" என்று நினைத்து, "ஸாயங்காலத்திலே உன்னை ஸேவிப்பதாக தேவஜாதியெல்லாம் வந்து நில்லாநின்றார்கள். காலமும் ஸந்த்யையாயிற்று. இக்காலத்தில் உக்ர தேவதைகள்ஸஞ்சரிக்கும் மன்றுமுதலான ஸ்த்தலங்களில்நில்லாதே; உனக்கு அந்திக்காப்பிடும்படி வரவேணும்" என்று பலகாலுமநுவர்த்தித்தழைத்துக் காப்பிட்ட ப்ரகாரத்தை, தாமுமநுபவிக்கவாசைப்பட்டு, உகந்தருளின நிலமான திருவெள்ளறையில் அவன் நிற்கிற நிலையிலே அவனைக்குறித்து, யசோதைப்பிராட்டியுடைய ஸ்நேஹத்தையும் பரிவையு முடையராய்க் கொண்டு, அவள் பேசினாப்போலே பேசி, அவனுக்குத் திருவந்திக்காப்பிடுகையாகிற ரஸத்தை யநுபவிக்கிறார்-இத்திருமொழியில். *

இந்திரன்ப்ரீவேஶ;—(க) "[Grantha script quotation] - ரூபௌதார்யகுணை: பும்ஸாம்த்ருஷ்டி சித்தாபஹாரிணம்" என்னுமவனுக்குப் பூச்சூட்டுகையால் வந்தவழகைக் கண்டு, இதுக்குக் காப்பிடவேண்டுகையாலே, கீழே பூச்சூட்டினவர் இங்கே காப்பிடுகிறாரென்று ஸங்கதிதோன்ற வருளிச்செய்கிறார் (கீழேயித்யாதி). (மன்றுமுதலான) என்றது - நாற்சந்தி முதலான வென்றபடி. (ஸ்நேஹத்தையும்) என்றது-இவனுக்கு இது செய்யவேணுமென்னு மநுராகம். (பரிவையும்) என்றது-என்னதீங்கு வருகிறதோ வென்னும் வயிற்றெரிச்சல். (*)

(க) ரா-அயோ-ங-உக.

மூ—இந்திரனோடு பிரமனீசனிமையவரெல்லாம்
மந்திரமாமலர்கொண்டு மறைந்துவராய் வந்துநின்றார்
சந்திரன்மாளிகைசேரும் சதுரர்கள்வெள்ளறைநின்றாய்
அந்தியம்போதிதுவாகு மழகனே காப்பிடவாராய். (க)

அவ;—முதற்பாட்டு. ஸந்த்யாகாலஸேவார்த்தமாக இந்த்ராதி தேவர்களெல்லாரும் வந்தார்கள்; காப்பிடவாராயென்கிறார்.

ஸ்வா;-(இந்திரனித்யாதி) * தந்துவனாய்நின்றஇந்த்ரனும், இந்த்ரனோடே தொட்டில்வரவிட்ட ப்ரஹ்மாவும், அந்த ப்ரஹ்மாவோடே திருவரைக்குச்சாத்தத் தகுதியானவையெல்லாம் வரவிட்ட வ்ருஷபவாஹநனும், அந்த வ்ருஷபவாஹநனோடே அநுக்தரான தேவர்களெல்லாம் வந்து, அத்ருஶ்யராய், அநூரவிப்ரக்ருஷ்டராய், மந்திர

வ்யா;—முதற்பாட்டு. (இந்திரனித்யாதி) த்ரைலோக்ய பாலகனான இந்த்ரனோடே, சதுர்த்தசபுவநஸ்ரஷ்டாவான ப்ரஹ்மாவும், ஜகத் ஸம்ஹாரகர்த்தாவான ருத்ரனும், இவர்களுக்குப் பரதந்த்ரராய் வர்த்திக்கும் மற்றுமுண்டான தேவர்களுமெல்லாம். இத்தால்-அதிகாரி புருஷர்களோடு அவர்களுக்குக் குடிமக்களாய் வர்த்திக்குமவர்களோடு வாசியற எல்லாருமென்றபடி. ப்ரஹ்மருத்ரேந்த்ரர்கள் மூவரையும் சொல்லுகிறவிடத்தில், இந்த்ரனை முந்துறச் சொல்லிற்று - அவனோபாதி ப்ரஹ்ம ருத்ரர்களுக்கும் அதிகரித்த கார்யத்தால் வந்த ஏற்றமித்தனையொழிய, ஈஶ்வரத்வ கந்த(ஸ்ந)மில்லையென்று தோற்றுகைக்காக.இவர்கள்தான் தொட்டில் பருவமே பிடித்து இவ்விஷயத்திலே கிஞ்சித்கரித்திறே

அரு.—முதற்பாட்டு. (இந்திரனித்யாதி) "இமையவரெல்லாம்" என்று ஒருசொல்லாலே சொல்லலாயிருக்க, தனித்தனியே அருளிச்செய்ததுக்குத் தாத்பர்யம் தோன்ற விசேஷிக்கிறார் (த்ரைலோக்யேத்யாதி). மற்றை வருணாதிகளைத் தனித்தனியே சொல்லாதே, "இமையவரெல்லாம்" என்று முழுக்கச் சொல்லுகையாலே வருளுகிறார் (இவர்களுக் கித்யாதி). "ஆராத்த்யர்" என்று தங்களை நினைத்திருக்கும் தேவஜாதியெல்லாம் தன்னில் வாசியற இவனைக் கிஞ்சித்கரிக்க வருவர்களோ வென்ன வருளுகிறார் (இவர்களித்யாதி). இவனை "ஸர்வஸ்மாத்பரன்" என்றறியுமவர்களாகையாலே, கிஞ்சித்கரித்தாரென்று கருத்து. தொட்டில் பருவத்தில் இவர்கள் கிஞ்சித்கரித்த

மாமலர்கொண்டுநின்றார்கள். ப்ரஹ்மாவோடே "ஈசன்" "இந்திரன்" என்றதே, இந்த்ரனை கௌரவித்தது-ஔபாதிக கர்மதார தம்யத்தால்வந்த வைஶ்வர்யச்செருக்கு,முற்படஸாவதி(நு)யாகை யாலே என்று தோற்றுமிறே. மறைந்துவரா வந்து நின்றாரென்னவுமாம்.

(மந்திரம்) *மறைகொண்ட மந்திரம். தந்தாம் நினைவுகளாலே மறைந்தார்களாக விருக்குமித்தனையொழிய, இவர்க்கும் மறைய வொண்ணாதே. (மாமலர்) கல்பகம் முதலான புஷ்பாத்யுபகரணங்களைக் கொண்டு, தந்தாம் குறைவுகளையும் கொண்டு, அருளப்பாடிடுந்தனையும் பார்த்து நின்றார்கள். ஜபஹோமதாந தர்ப்பணங்களிலே விநியுக்தமானமந்த்ரத்தைக்கொண்டு மங்களாசாஸநம் செய்வதாக நின்றார்கள். சிலம்ருகங்கள் கண்ணைச்செம்பளித்துத்தந்தாமைமறைத்தனவாக நினைப்பன உண்டிறே.

போருவது. ஆகையாலே *எழிலுடைக் கிண்கிணித்தந்துவனாய் நின்ற இந்த்ரனோடு - வண்ணச்சிறுத்தொட்டில்வரவிட்ட ப்ரஹ்மாவும், * உடையார் கநமணி வரவிட்ட ருத்ரனும், *வலம்புரி, சேவடிக்கிண்கிணி முதலானவை வரவிட்ட மற்றுமுண்டான தேவர்களுமெல்லாமென்கை.

(மந்திரமாமலர்கொண்டு) திருமந்த்ர புஷ்பங்கொண்டு. "மந்திரம்"என்கிறது - * மறைகொண்ட மந்த்ரமான ஸ்ரீபுருஷ ஸூக்தாதிகளை. "மாமலர்"என்கிறது - ஶ்லாக்யமான கல்பக புஷ்பாதிகளை. (மறைந்துவராய் வந்துநின்றார்) (க) "கட்கரிய பிரமன் சிவனிந்திரன்" என்கிறபடியே இங்குள்ளாருடைய கண்ணுக்கு விஷயமாகாதவர்களாகையாலே,பிறர்க்கும் தெரியாதபடியாக,நீ அருள் பாடிட்டவாறே வரும்படி உனக்கு அதூரவிப்ரக்ருஷ்டராய் வந்து நின்றார்கள். "மறைந்துவரா" என்று பாடமானபோது, உவரா-அதூரவிப்ரக்ருஷ்டராகவென்று பொருள்.

---

தைக் காட்டாநின்றுகொண்டு, ப்ரக்ருதத்திலே உபஸம்ஹரிக்கிறார் (ஆகையாலே யித்யாதி).

(திருமந்த்ர புஷ்பம்கொண்டு) என்றவிடத்திலே "திரு" என்றது-ஔபசாரிகம். மறைந்திருக்கைக்கும் உவராயிருக்கைக்கும் ஹேதுக்களை தர்ஶிப்பித்துக்கொண்டர்த்த மருளுகிறார் (கட்கரிய வித்யாதி).

---

(க)தி-வாய்-எ-எ-கக.

குணத்ரயவஶ்யரல்லாதார்மேலே "உவர்" என்கிற அநாதரோக்தி செல்லாதே.

(சந்திரனித்யாதி) திருவெள்ளறையில் வர்த்திக்கிற ஶ்ரீ வைஷ்ணவர்கள் திருமாளிகைகளிலும் கோயிலிலுமுண்டான உயர்த்தியாலே சந்திரன் வந்து சேருமென்கிறார். இத்தால்-ஆந்தராளிகரானஜ்ஞாதாக்கள் சேருமிடமென்கிறது. ஶாஸ்த்ரஜந்ய ஜ்ஞாநம் தீபப்ரகாசம்போலே, ஶாஸ்த்ரஜந்யஙில்ஜ்ஞாநவைராக்ய நிஷ்டர் ஆதித்ய ப்ராகாசம்போலே; உபதேஶஜ் ஞாநம்போலேயிறே பூர்ண சந்த்ரனைச் சொல்லுவது. இந்த உபதேஶகம்ய ஜ்ஞாநத்தில் அநந்யார்ஹத்வம் த்ருதீயாவிபூதியிலும் த்ரிபாத்விபூதியிலும் துல்யவிகல்பமாயிருந்ததேயாகிலும், அங்குள்ளார்க்கும் கௌரவப்ராப்ய மிறே. (சதுரர்கள் வெள்ளறை நின்றாய்) அவன் தனக்கும் ப்ராப்யம் இங்கேயிறேநிலைநின்றது. ஆகையிறே (க) "நிலையாரநின்றான்" என்னுமாபோலே நின்றானென்றது. (சதிராவது) பூவாமல்காய்க்கும் மரங்கள்போலே "ஶ்ரேயஸ்ஸ்தலமுக்த ரஸ-க்ரியாகேவலமுத்தரம்" என்கையிறே. அதாவது-(உ) "சலிப்பின்றியாண்டு" என்கிறபடியே தங்களாசாரத்தாலேயும் ஸம்ஸாரஸம்பந்த நிகளநிவ்ருத்திபண்ண வல்லராயிருக்கை.

(அந்தியம் போதிதுவாகும்) விளையாட்டுப்பராக்காலே அஸ்தமித்ததும் அறிகிறாயில்லையே! (அழகனே காப்பிடவா

---

(சந்திரனித்யாதி) சந்த்ரபதத்தளவும் செல்ல ஓங்கியிருக்கையாலே, சந்த்ரன் மாளிகைகளிலே வந்து சேரும்படியிருப்பதாய், உன் ஸௌகுமார்யாதிகளையறிந்து மங்களாசாஸநம் பண்ணி நோக்கவல்ல ஸமர்த்தரானவர்கள் வர்த்திக்கின்ற திருவெள்ளறையிலே நின்றருளினவனே! (அந்தியம் போதிதுவாகும்) இது ஸந்த்யா காலமாயிருக்கும். விளையாட்டுப் பராக்காலே அஸ்தமித்ததும் அறிகிறாயில்லையே! (அழகனே) த்ருஷ்டி தோஷபயத்தாலே அநவர

---

"சதுரர்கள்" என்றதுக்கு ஸ்வார்த்தபரரானவர்களைச் சொல்லுமது, இவர் ப்ரக்ருதிக்குச் சேராதென்று தாத்பர்ய மருளுகிறார் (உன் ஸௌகுமார்யேத்யாதி). "காப்பிடவாராய்" என்றபோதே அழகு அர்த்தஸித்தமாயிருக்க, "அழகனே!" என்று ஸம்போதிக்கவேணுமோவென்னும் ஜிஜ்ஞாஸாப்ரஶ்நத்

---

(க) தி-மொ-கூ-கூ-அ. (உ) தி-வாய்-கூஎ-கூ.

மூ.—கன்றுகளில்லம்புகுந்து கதறுகின்றபசுவெல்லாம்
நின்றொழிந்தேனுன்னைக்கூவி நேசமேலொன்றுமிலாதாய்
மன்றில் நில்லேலந்திப்போது மதிள்திருவெள்ளறைநின்றாய்
நன்றுகண்டாயென்றன்சொல்லு நானுன்னைக்காப்பிடவாராய்.

---

ராய்) அஸ்தமித்தது அறியாதாப்போலே உன்ஸௌந்தர்ய மார்த்தவ வாசியு மறிகிறாயில்லை, உன்னுடைய ஸமுதாய சோபைக்கும் ஒப்பனையழகுக்கும் மங்களாசாஸநம் பண்ணித்திருவந்திக்காப்பிட வேணுங்காண் வாராயென்கிறார். அந்தியம்போதால்-ராஜஸகுணப்ராதாந்யத்தால் அஹங்காரக்ரஸ்தருமாய், பரஸம்ருத்த்யஸஹபரருமாயிருப்பார் நடையாடுங்கால மென்று பீ(ஞ்)தராய், வாராயென்கிறார். ... ... ... ... (க)

ஸ்வா;—இரண்டாம்பாட்டு. (கன்றித்யாதி), கன்றுகளெல்லாம் தொழுவத்தில் தந்தாம் நிலைகளிலே புகுந்து நின்று கதறு

---

தம் காப்பிடவேண்டும்படியான அழகையுடையவனே! அஸ்தமித்ததறியாதாப்போலே உன்னழகின் வாசியும் அறிகிறாயில்லையே! (காப்பிடவாராய்) உன்னுடைய ஸ்வாபாவிகமான ஸமுதாய சோபைக்கும் ஒப்பனையழகுக்கும் ஒரு குறைவாராதபடியாகத் திருவந்திக்காப்பிடவாராய். .... .... .... .... .... (க)

---

திலே ஸமபிவ்யாஹார பலிதத்தை யருளுகிறார் (அஸ்தமித்த தறியாதாப்போலே யித்யாதி). விளையாட்டுப் பராக்காலே மெய்மறந்திருக்கையாலே அழகை ஸ்மரிப்பித்தாரென்று கருத்து. அநவரதம் காப்பிடும்படியான வழகாயிருக்க, "அந்தியம் போதிதுவாகும், காப்பிடவாராய்" என்றுகாலவிசேஷத்தைச் சொல்லி அழைக்க நிமித்தமென்னென்கிற சங்கையிலே அருளுகிறார் (உன்னுடைய வித்யாதி). (ஸ்வாபாவிகமான ஸமுதாய சோபைக்கும்) என்றது - "அழகனே" என்று நிரூபகமாகச் சொல்லுகையாலே. (ஒப்பனை அழகுக்கும்) என்றது - "மந்திரமாமலர் கொண்டு" என்று தேவர்கள் கொணர்ந்த மலர்களாலும், கீழே தான்சூட்டின புஷ்பங்களாலும் வந்தவழகுக்கு மென்றபடி. இத்தால், இரண்டழகாலும் இப்போது ஆலத்தியெடுக்க வேண்டுகையாலே, அருளிச்செய்தாரென்று கருத்து.

"சந்திரன்மாளிகை" என்று தொடங்கி "அழகனே! இந்திரனோடித்யாதி மலர்கொண்டு மறைந்துவாராய் வந்துநின்றார்கள், அவையும் சூட்டிக்கொண்டு, இது அந்தியம் போதாகும், காப்பிடவாராய்" என்று சிறிது அத்யாஹரித்து அந்வயம் கண்டுகொள்வது.

நின்றன. பசுக்கள் எல்லாம் முலைக்கடுப்பாலே புறம்பே நின்று கதறு நின்றன; சுரப்புமாறில் நீ யுண்ணும்படியென்.

(நின்றொழிந்தேனுன்னைக் கூவி) உன்னையழைத்த விடத்தில் நீ வந்திலையே, நான் நின்றேவிடு மித்தனையோ? (நேசமேலொன்று

வ்யா;—இரண்டாம்பாட்டு. (கன்றித்யாதி) பசுக்களானவை யெல்லாம் கன்றுகள் நிற்கிறவிடத்தில் வந்து புகுந்து, கன்றுகளைக் குடிக்கவிடுதல், கறக்குதல் செய்வாரில்லாததுகண்டு முலைக்கடுப் பாலே கதறுநின்றன. அதவா, "கதறுகின்ற" என்றத்தை, கீழும் மேலும் அந்வயித்து, கன்றுகளெல்லாம் தொழுவத்தில் தந்தாம் நிலைகளிலே புகுந்துநின்று முலையுண்ணப் பெறுமையாலே நாக் கொட்டிக் கதறுநின்றன; பசுக்களெல்லாம் புறப்பே நின்று, கன்று கள் குடித்தல் கறத்தல் செய்யப்பெறுமையாலே முலைக்கடுப்பாலே கதறு நின்றனவென்னவுமாம்.

அவை அப்படிக் கதறவேண்டுகிறது-முன்போலே நீ கன்று களை விட்டுக் கறவாமையன்றோ?; அது செய்யா தொழிவானென் னென்ன; (நின்றொழிந்தேனுன்னைக்கூவி) நான் உன்னை யழைத்து நின்றேவிட்டேன்; பின்னை அங்கு ஆரது செய்வார்; அவை கன்றை நினைத்துக்கதறுகிறுப் போலேயன்றோ நான் உன்னை அழைத்தே நின்றுவிட்டபடி. (நேசமேலொன்றுமிலாதாய்) என்பக்கல் ஸ்நே

அரு;—இரண்டாம்பாட்டு. (கன்றித்யாதி) "பசுவெல்லாம் கன்றுகளில் லம் புகுந்து கதறுகின்ற" என்றந்வயம் திருவுள்ளம்பற்றி, கதறுகைக்கு ஹேது வை அருளிச்செய்து கொண்டு அர்த்த மருளுகிறார் (பசுக்களானவையித் யாதி). "கன்றுகளானவை இல்லம் புகுந்து நின்று கதறுகின்ற, பசுவெல் லாம் புறம் பேநின்று கதறுகின்ற" என்று விவக்ஷித்து யோஜநாந்தர மருளு கிறார் (அதவேத்யாதி).

மேலுக்கவதாரிகை (அவையித்யாதி). அந்வயமபிப்ரேத்ய சப்தார்த் தம் (நானித்யாதி). ஹார்த்தபாவம் (பின்னையித்யாதி). "பின்னையும் அங் காரது செய்வார்" என்று கொண்டு "என்னைக் கூவுவானேன் கறக்கப்போக வொண்ணுதோ?" என்னக் கீழ்ச்சொன்னத்தைத் ருஷ்டாந்தமாக்கி ப்ரயுக் த்தரமாக பாவமருளுகிறார் (அவைகன்றையித்யாதி). உன்பக்கல்ஸ்நேஹத்

மிலாதாய்) "இவளழைத்த விடத்தில் செல்லக்கடவோமல்லோம்" என்று என்னளவில் உனக்கு ஸ்நேஹலேசமும் கூடவில்லாதாப் போலே காண்; நானுன்னைநியமித்து வயவர்த்தியாக்கவேணுமென்னும் ஸ்நேஹமொன்றுமே யொழிய, மற்றொன்று மின்றிக்கேயிருக்கிறபடி. மேலொன்றுலும் என்மேலொரு ஸ்நேஹ மில்லாதாயென்றபடி.

(மன்றில் நில்லேலந்திப்போது) நாற்சந்திகளிலே தனியே நில்லாதே கொள்ளாய். உன்னோடே விளையாடுகிற பிள்ளைகளெல்லாரும் அகம் புகுந்தார்கள் காண். உன்னை யறியாவிட்டால் என்னையுமறியாமல் நிர்பரனாயிருக்கவேணுமோ? மதிள் திருவெள்ளறை

---

ஹமாகில் ஒன்றுமில்லாதவனே! கதறுகிற தாய்களளவில் கன்றுகளுக்குண்டான ஸ்நேஹம், என்பக்கல் உனக்குண்டாக வேண்டாவோ?; அதில் ஏகதேசமுமில்லாதவனாயிருந்தாயே நீ.

நான் உன்பக்கல் ஸ்நேஹ மற்றிருக்கிறேனோ? விளையாடி வருகைக்காக நின்றேனத்தனையன்றோவென்ன; (மன்றில் நில்லேலந்திப்போது) ஸந்த்யாகாலத்திலே க்ஷுத்ரதேவதைகள் திரிகுமிடமான நாற்சந்தியிலே நில்லாதே கொள்ளாய். விளையாடுகைக்கு ஸ்தலமும் காலமுமல்லகாண் இது. (மதிள் திருவெள்ளறைநின்றாய்) மங்களாசாஸநபரர்க்கு அஞ்சவேண்டாதபடி உனக்கு அரணாகப்போரும்படியான மதிளையுடைய திருவெள்ளறையிலே நின்றருளினவனே!

---

தாலே போகமாட்டேனென்று கருத்து. "நேசமிலாதாய்" என்றால் "காப்பிடவாராய்" என்றதுக்கு விருத்த(த்த)மன்றோ வென்கிற சங்கையிலே, இப்படிச் சொன்னதுக்கு ஸ்நேஹ ப்ரார்த்தனையிலே நோக்கென்னுமத்தை ஸத்ருஷ்டாந்தமாக உபபாதிக்கிறார் (கதறுகிற வித்யாதி).

மேலுக்கவதாரிகை(நான் உன்பக்கலித்யாதி). "அந்திப்போதுமன்றில் நில்லேல்" என்றந்வயித்து நில்லாமைக்கு ஹேதுதோன்றும்படி நாற்சந்தியைவிசேஷித்தர்த்த மருளுகிறார் (ஸந்த்யேத்யாதி). (விளையாடிவருகைக்காக நின்றேனத்தனை ) என்றதுக்கு உத்தரமானபடியைக் காட்டுகிறார் (விளையாடுகைக்கித்யாதி). இப்போது உனக்கு என்பக்கல் ஸ்நேஹ முண்டானதுக்கடையாளம் மன்றில் நில்லா தொழிகை யென்று கருத்து. காப்பிடும் ப்ரகாணத்திலே மதிளைச்சொன்னதுக்கு பாவம் (மங்களாசாஸநேத்யாதி). ஆனால் மதிளிருக்க, நீர் காப்பிடவரச் சொல்லுவானென்னென்ன, "மன்றில்

நின்றாய்) இவனை மதிளுக்குள்ளே யாக்கி நிர்பரையாய், கன்றுகள் விடவும், கறப்பாரை நியமிக்கவும், தன்னுடைய க்ருஹகார்யத்திலே ஒருப்படவும் போலே காணும் இவள்தான் நினைக்கிறதும். திரு வெள்ளறையில் திருமதிள்தான் மங்களாசாஸந பரர்க்கெல்லாம் நெஞ்சிலே கைவைத்து உறங்கலாம்படி போலே காணுமிருப்பது.

(நன்று கண்டாயென்றன் சொல்லுநானுன்னைக் காப்பிடவாராய்) உனக்குமெனக்கும், நீ உகந்தகன்றுகளுக்கும், சுரப்பாக்களுக்கும்நன்றாய்காண்என்சொல்லிருப்பது. இவருடையநான் தானிருப்பது-சரமசதுர்த்தியிலே மூட்டி மீண்டு த்ருதீயாக்ஷரத்திலே வந்தானுயிறே யிருப்பது. (உன்னை)ப்ரதமாக்ஷரத்திலே நின்று பர்வக்ரமமாகச் சென்று, "அஹம்"என்று மூட்டி,மீண்டுப்ரதமாக்ஷரத்திலே நிற்கையாலே †(நின்றாய்) நின்றவுன்னைக் காப்பிடவாராய் (உன்னை) என்றது-உனக்கென்றபடி.(க)" கண்ணபுரமொன்றுடையானுக்கு" என்றாப்போலே.

---

புறம்பே புறப்பட்டு வ்யாபரியாதே அவ்வரணுக்குள்ளே திரியாநின்றாயாகில் எனக்கிப்படி வயிறுபிடிக்க வேண்டாவே.

(நன்றுகண்டா யென்றன் சொல்லு) இப்படி சொன்னவிடத்திலும் தன்சொல் அவன் கைக்கொள்ளாமையாலே, என் சொலவு நன்றுகிடாய்; அத்தைக் கைக்கொள்ளென்கிறாள்.(உ)"தாயர் வாய்ச்சொல் கருமங்கண்டாய்" என்றாப்போலே. (நானுன்னைக் காப்பிடவாராய்) உன் பக்கல் ஸ்நேஹயுக்தையாய் மங்களாஸாஸநபரையாயிருக்கிற நான், அநவரதம்காப்பிட வேண்டும்படியான ஸௌகுமார்யாதிகளை யுடைய உன்னைக் காப்பிடும்படியாக நீ வாராய். (உ)

---

நில்லேல்" என்றத்தைக்கடாக்ஷித்து பாவமருளுகிறார் ( புறம்பேயித்யாதி ). ஆகையாலே அம்மதிளிருக்கும் ஸ்தலங்களிலே விளையாட வேண்டினாலும், இருகிடாயென்று தாத்பர்யம். (உ)

(இப்படிச் சொன்னவிடத்திலும்) என்றது-மதிளுண்டான விடத்திலே நிற்கவேணும், நாற்சந்தியில் நில்லாதொழியவேணுமென்ற விடத்திலுமென்றபடி. (எனறாப்போலே) என்றதுக்கு, (கைக்கொள்ளென்கிறாள்) என்றத்தோடே அந்வயம். காப்பிடுகைக்கு ஹேதுவாகத் தோன்றவேண்டி " நான் " "உன்னை" என்ற பதங்களை விசேஷிக்கிறார் (உன்பக்கலித்யாதி). ... (உ)

---

(க) தி-மொ-அ-கூ-ரு. (உ) உ-உ-ரு. † அதிகம்.

மூ.-செப்போதுமென் முலையார்கள்சிறுசோறுமில்லும் சிதைத்திட்டு
அப்போது நானுரப்பப்போ யடிசிலுமுண்டிலையாள்வாய்
முப்போதும்வானவரேத்தும் முனிவர்கள்வெள்ளறைநின்றாய்
இப்போது நானொன்றும் செய்யே னெம்பிரான்காப்பிடவாராய்.

(மன்று)நாற்சந்தியாதல்;பலரும் கூடிப் பிரியுமிடமாதல்."நால் சந்தி" என்றது-வேதவாதரதான சாந்த(ஸாந்த)ஸர்வர்த்திக்குமிடத்தைக்காட்டுகிறது.ரஜோகுணோத்ரிக்தர் வர்த்திக்கிற ஸந்த்யாகாலத்தைச் சொல்லுகையாலே, பலரும் கூடிப் பிரியுமென்றத்தாலே-இவர்க்கும் இறையறியாதாரைக் காட்டுகிறது. கன்றென்றது-விஹிதபரராய், ஸ்வரக்ஷணத்தில் அஸக்த்தராயிருப்பாரைக்காட்டுகிறது "பசுக்கள்" என்று-அஸக்தரை அழைத்துரக்ஷித்தாலல்லது துக்க நிவ்ருத்தி பிறவாதாரை. ... ... ... .... (உ)

அவ;—மூன்றாம்பாட்டு. "நீ என்னை அழைக்கிறது-ஒப்பித்து ஒரு காப்பிட்டு விளையாடப் புறப்படாமல் மதிளுக்குள்ளே விட்டுப் பிடித்துக் கொள்ளவன்றோ" என்ன; நான் ஒன்றும் செய்யேனிப் போதென்கிறான்.

ஸ்வா;—(செப்பித்யாதி) "செப்போடே உபமானம் சொல்லும் படியானஸ்தனபரிணாமங்களையுடையராய், அத்யந்தம்ருதுஸ்வபாவைகளாயிருக்கிறவர்களுடைய விளையாடு சிறுசோறுகளையும், சிற்றிலான கொட்டங்களையும் சிதைத்து, அவர்களோடு கைப்பிணக்கிட்டு விளையாடித் திரியவேண்டா காண்" என்று நான் கோபித்தழைக்க வழைக்கப்போய், இப்போதளவாக அடிசிலுமுண்டிலையே)

வ்யா;—மூன்றாம்பாட்டு. (செப்பித்யாதி). செப்பென்று சொல்லும்படியான ஸந்நிவேசத்தை யுடைத்தாய், அதுபோலே கடினமாயிருக்கையன்றிக்கே ம்ருதுவாயிருக்கும் முலையையுடையவர்களுடைய. (சிறுசோறுமில்லுஞ் சிதைத்திட்டு) லீலார்த்தமாக மணற்கொழித்துச் சமைத்த சிறு சோற்றையும் கொட்டகத்தையுமழித்திட்டு. (அப்போது நானுரப்பப்போய்) "பெண்க

அரு;—மூன்றாம்பாட்டு. (செப்பித்யாதி) செப்பென்று ஓதும்படியென்றார்த்த மருளுகிறார் (செப்பென்றித்யாதி). (கடினமாயிருக்கையன்றிக்கே) என்றது - கடினஸ்பர்ஶயாயிருக்கையன்றிக்கே யென்றபடி. (ம்ருதுவாயிருக்கும்) என்றது-ஸலக்ஷணதையாலே ஸுகஸ்பர்ஶமாயிருக்கு மென்றபடி. "உரப்புக"- அதட்டுகையாய், அதன் ப்ரகாரத்தை, கீழ்பதத்தைக் கடாக்ஷித்தரு

இப்படியேயோ என்னையாளவிருக்கிறபடி. (க) "ஆட்கொள்ளத் தோன்றியவாயர்தம் கோவினை" என்னக்கடவதிறே.

(முப்போது மித்யாதி) (உ) "ஊராலொரு மூன்றுபோதும்" என்கிறபடியே த்ரிஸந்தியும் ப்ரஹ்ம பாவனை தலையெடுத்த போ

ளோடே கைப்பிணைக்கிட்டு விளையாடித்திரிய வேண்டா காண்" என்று அப்போது நான்கோபித்தவாறே, "நான் பிடிக்குதல் அடிக்குதல் செய்யப்போகிறேன்" என்று என்முன் நிற்க வஞ்சிப்போய். (அடிசிலுமுண்டிலை) உனக்கினிதாகச் சமைத்துவைத்த அடிசிலும் அமுது செய்திலை. (ஆள்வாய்) என்னை யாளப்பிறந்தவனே!. இப்படியோ நீ யென்னையாளத்தேடுகிறது. இவளையாளுகையாவது-இவள் சொல்வழி வந்து, இவள் கொடுத்தவற்றையும் விநியோகம் கொண்டு, கோல்கீழ்க்கன்றாய் நடக்கையிறே.

(முப்போதுமித்யாதி)(௩) "ஆதிதேவர்திவாய்" என்கிறபடியே, த்ரிஸந்த்யமும்-ப்ரஹ்மபாவனை தலையெடுத்தபோதெல்லாம், தேவர்களாலே ஸ்துதிக்கப்படுமவனாய், மங்களாசாஸநபரராய்க் கொண்டு

ளிச் செய்யாநின்று கொண்டு, "போய்" என்றதுக்கும தாத்பர்யமருளுகிறார் (பெண்களோடேயித்யாதி). "அடிசிலும்" என்ற ச(உம்)காரத்தாலே தோன்றும் ப்ராதாந்யத்தை அருளிச் செய்யாநின்று கொண்டு அர்த்தமருளுகிறார் (உனக்கித்யாதி). "ஆள்வாய்" என்றதுக்கு - கிழைக்கடாக்ஷித்து அபிப்ரேதார்த்தத்தை யருளுகிறார் (இப்படியித்யாதி). பிள்ளையானவன் தாயை ஆளக்கூடுமோ வென்ன; அத்தை விவரிக்கிறார் (இவளையித்யாதி). (கோல்கீழ் கன்றாய்) என்றது-வஶ்யனாயிருக்கை யென்றபடி.

"முப்போதும்" என்ற ச(உம்)காரம் அநுக்த ஸமுச்சயமாய், கால விசேஷத்தைச்சொல்லுகிறதென்று திருவுள்ளம்பற்றி, அத்தைக்காட்டுகிறார் (ப்ரஹ்மேத்யாதி). கர்மபாவனை யுண்டானபோது நியதமாக த்ரிஸந்த்யமும் ப்ரஹ்ம பாவனை தலையெடுத்தால், அநவரதம் ஏத்துவரென்று திருவுள்ளம். "முப்போதும் வானவரேத்தும்" என்றத்தால்-கர்மப்ரஹ்ம பாவநாநிஷ்டருடைய ஸ்தோத்ரத்தைச்சொல்லுகையாலே, இது உபலக்ஷணமாய், கர்மநிஷ்டரும் பக்தி நிஷ்டருமெல்லாரும் முக்த ப்ராயரென்று திருவுள்ளம்பற்றி, இனி "முனிவர்"என்றால், அநந்யரானமங்களாசாஸநபரரைச்சொல்லவேணுமென்று அருளிச்செய்கிறார் (மங்களாசாஸநபரரித்யாதி). இவ்வாக்யத்தால் "வானவரே

(க) க-எ-கக. (உ) பெரிய-திருவ-கூ௭.(௩)உ-திருவ-எ௩.

மூ.—
கண்ணில்மணற்கொடு தூவிக்காலினால் பாய்ந்தனையென்றென்று
எண்ணரும்பிள்ளைகள் வந்திட்டிவரார் முறைப்படுகின்றார்
கண்ணனே வெள்ளறைநின்றாய் கண்டாரோடே தீமைசெய்வாய்
வண்ணமேவேலைய தொப்பாய் வள்ளலே காப்பிடவாராய். (ச)

தெல்லாம் தேவர்களெல்லாரும் வந்து ஸ்தோத்ரம் செய்யக்கேட்டருளி, மநநஶீலரான தேஶிகர் அபிமாநித்ததிருவெள்ளறையிலே நித்யவாஸம் செய்து நிற்கிறவனே! (இப்போதித்யாதி) உன்னை அடிசிலூட்டிவிடுமதொழிய "நியமியேன்" என்றவாறே, "உன்வார்த்தையன்றோ" என்று பிடிகொடாமல் ஓடப்புகுந்தான்; ஓடினவளவிலும் இவர்விடாமல் செல்லுகிறாரிறே, இதென்ன தஶாவிசேஷந்தான்.

"எம்பிரானென்னையாள்வாய், செப்போது மென்முலையார்கள் சிறு சோறுமில்லும் சிதைத்திட்டு நானுரப்பப்போய், முப்போதும் வானவரேத்தும் முனிவர்கள் வெள்ளறை நின்றாய், இப்போது அடிசிலுமுண்டிலை; இப்போது நானொன்றும் செய்யேன்; காப்பிடவாராய்" என்றந்வயம். .... .... .... (ரு)

அவ;—நாலாம்பாட்டு. கீழே "ஓடாதே வாராய்" என்ன; ஓடிப்போய் "அவர்கள் கண்ணிலே மணலைத்தூவினான்" என்று

உன்னுடைய ஸம்ருத்தியையே எப்போதும் மநநம்பண்ணுநிற்குமவர்களுடைய திருவெள்ளறையிலே நிற்குமவனே!. (இப்போது நானொன்றும் செய்யேன்) அப்போது ஹிதரூபமாக உன்னைக் கோபித்து வார்த்தை சொன்னேனாகிலும், இப்போது நானுன்னை ஒன்றும் செய்யேன். (எம்பிரான் காப்பிடவாராய்) என்னுடை நாயனே! உனக்குநான் காப்பிடும்படி வாராய். .... .... (ரு)

த்தும்படியும், முனிவர் மங்களாசாஸநம்பண்ணும்படியும் உகந்திருக்குமவனன்றோ? நீ அப்படியே எனக்கும் காப்பிடும்படி வரவேணும்" என்று கருத்தென்று சொல்லிற்றாயிற்று. "வானவர்க்கும் முனிவர்க்கும் முகம்கொடுக்குமாபோலே வந்து முகம் கொடுக்கச் சொல்லா நின்றாய்; அவர்கள் உன்னைப்போலேஉரப்பினார்களோ?, நீயானால் கோபித்தாயே"என்ன; அதுக்கு உத்தரமாக "இப்போதும் நானொன்றும் செய்யேன்" என்கிறாளென்னுமிடம்தோன்றவருளுகிறார் (அப்போதித்யாதி) .இத்தால்நான்ஹிதமாக அப்போ கோபித்ததைப் பொறுத்துக்கொள்ளென்று சொல்லிற்றாயிற்றென்று திருவுள்ளம்.

முறைப்பட, பொறுமைதோன்ற வார்த்தை சொல்லுகிறாள்.

ஸ்வா;—(கண்ணித்யாதி) விளையாடுகிற பிள்ளைகள் "எங்கள்கண்ணிலே மணலைத்தூவினான்" என்றும், "எங்களைக்காலாலே பாய்ந்தான்" என்றும், பரிகணிக்கவொண்ணாத பிள்ளைகளெல்லாரும் வந்து முறைப்படா நின்றார்களென்று, இவனைப் பிடித்து இறுக்கி, அவர்களைப்பார்த்து இன்னதாகிறாள், (இவரார் முறைப்படுகின்றார்) என்று. அதாவது-"நீங்கள் பலர், இவன் ஒருத்தன், நீங்களோஇன்னும்முறைப்படுகிறீகோள்" என்னும்படியாக. "என்கண்ணிலே மணலைத்தூவி, காலாலே பாய்ந்தார்கள்" என்றமுமே இவன்; அதுவிறே அவள் மெய்யாகக் கொள்வது.

(கண்ணனே) அவர்கள் கண்ணிலே நில்லாதே இங்கேவாராய். அன்றியிலே, "எல்லார்க்கும் உன்னைத்தீம்பேற்றும்படி எளிய

வ்யா.—நாலாம்பாட்டு. (கண்ணிலித்யாதி) கண்விழித்து விளையாடவொண்ணாதபடி கண்ணிலே மணலைக்கொடுவந்துதூவி, "எங்கள்கண்ணிலே நீமணலைத்தூவுவானேன்" என்றவாறே, "கோபித்துக் காலாலே யுதைத்தாய்" என்று தனித்தனியே சொல்லிப் போருவது ஒருவரிருவரன்றிக்கே, அஸங்க்யாதரான பிள்ளைகள் உன்னால் ஈடுபட்டமை தோற்றவந்து இவர்கள் முறைப்படா நின்றபடி பாராய்.

(கண்ணனே வெள்ளறைநின்றாய்) எல்லார்க்கும் ஸுலபனாய்க்கொண்டு திருவெள்ளறையிலே நின்றருளினவனே!. (கண்டாரோடே தீமைசெய்வாய்) உன்னோடு ஸம்பந்தமும் ஸ்நேஹமுமுண்

அரு;—நாலாம்பாட்டு. (கண்ணிலித்யாதி) "காலினால்" என்றவிடத்தில்-இன்-சாரியையாய், காலால்பாய்ந்தவென்றர்த்தமாய், அதுக்கு ப்ரஸக்தியைக்காட்டுகிறார் (எங்களித்யாதி). "என்றென்று" என்றது-என்று சொல்லி யென்றர்த்தமாய், மேலே முறைப்பட்டவர்களைத் திரளச்சொல்லுகையாலே, தனித்தனியே யென்று விசேஷித்தர்த்தமருளுகிறார் (என்று தனித்தனியே சொல்லி) என்று. (இவர்கள்) என்றது-தாய்மார்களை. (தனித்தனியே சொல்லி) என்றதுக்கு, (முறைப்படாநின்றபடி) என்றத்தோடன்வயம். "ஆர்" என்று தானறியாதவர்களைக் கேட்கிறதாகச் சொல்லக்கூடாமையாலே, பலிதத்தையருளுகிறார் (பாராய்) என்று.

பதத்வயஸமபிவ்யாஹாரார்த்தத்தையும் காட்டிக்கொண்டு சப்தார்த்தமருளுகிறார் (எலலார்க்குமித்யாதி). (எல்லார்க்கும்) என்றது-திருவெள்ளறைவெற்

ணய் நில்லா நின்றாயே'' என்னவுமாம். (வெள்ளறை நின்றாய்) அதுதன்னிலுங் காட்டில் ஒரு ஸௌலப்யமிறே இது. (கண்டாரோடே தீமை செய்வாய்) பொருந்தாதாரோடே தீம்புகள் செய்யாநின்றாயே. (வண்ணமே வேலையதொப்பாய்) வேலை போன்ற நிறத்தையுடையவனே!; தீம்புகள் செய்தாலும் விடவொண்ணாத வடிவழகையுடையவனே!; வள்ளலே) இவ்வடிவழகை எனக்கு உபகரித்தவனே!

இத்தால், வைதமான ஜ்ஞாநத்தை இந்த்ரிய பாரவச்யத்தாலே மறைத்தும், அஸாதாரணலீலாரஸ ப்ரத்தையாலே சிலரை அநிஷ்ட நிவ்ருத்திக்கும் இஷ்டப்ராப்திக்கும் ஹேதுவான ஸாதந

---

டாய் நீ செய்தது பொறுக்கத்தக்கவர்க ளன்றிக்கே, கண்டவர்களோடெல்லாம் தீம்புகளைச்செய்யுமவனே!. இப்படி, தீமைசெய்யலாகாதுகாண். (வண்ணமேயித்யாதி) நிறத்தால் ஸமுத்ரத்தோடொக்குமவனே!, வண்ணம்-நிறம். ஏவகாரம்-அவ்யயம். வேலை-ஸமுத்ரம். (அது) என்றது - வேலையாகிற வதுவென்றபடி. இத்தால் - தீம்புசெய்தாலும் விடவொண்ணாத வடிவழகை யுடையவனென்கை. (வள்ளலே) இவ்வடிவழகை யெனக்கு உபகரித்தவனே! (காப்பிடவாராய்). உன்வடிவழகுக்கு நான்காப்பிடும்படியாக வாராய். .... .... .... .... .... .... .... (க)

---

யாகையாலே, மண்ணோர்க்கும் விண்ணோர்க்கு மென்றபடி. காப்பிட வரச் சொல்லும்போது ''தீமைகள் செய்வாய்'' என்றால்விருத்தமாகையாலே, தாத்பர்யத்தை யருளுகிறார் (இப்படியித்யாதி). காம்பீர்யாதிகளாலும் ஸாத்ருச்யம் சொல்லலாமாகையாலே ''வண்ணமே'' என்ற ஏவகாரம் வ்யவச்சேதகமாகையாலே அருளுகிறார் (ஏவகாரமவ்யயம்) என்று.

''கண்ணனே வெள்ளறைநின்றவனே! எண்ணரும் பிள்ளைகள் 'கண்ணில் மணல் கொடுதூவிக்காலினால் பாய்ந்தனை' என்றென்று எண்ணரும் பிள்ளைகளையிட்டு இவர் முறைப்படுகின்றார் ஆர்; இப்படி கண்டாரோடே தீமைகளித்யாதி'' என்றந்வயம் கண்டுகொள்வது. இப்பாட்டில் பூர்வார்த்தம் ''இப்படி'' என்றத்யாஹரியாவிட்டால் அந்வயியாமையாலேயும், ''கண்டாரோடே'' இத்யாதிபதங்களுக்கு ஸமபிவ்யாஹாரதாத்பர்யங்களையருளிச் செய்கையாலும் இப்படியே அந்வயிக்கவேணும். ... ... ... ... ... (ச)

மூ.—

பல்லாயிரவரிவ்வூரிற் பிள்ளைகள்தீமைகள்செய்வார்
எல்லாமுன்மேலன்றிப்போகா தெம்பிரான்நீயிங்கேவாராய்
நல்லார்கள்வெள்ளைநின்றாய் ஞானச்சுடரேயுன்மேனி
சொல்லாரவாழ்த்திநின்றேத்திச் சொப்படக்காப்பிடவாராய். (ரு)

த்தாலே சிலரை நிஷேதித்தும் செய்தானென்று, அவன் மேலே பலராக தோஷத்தை வைப்பர்களிறே, ஸம்ஸாரிகள் தங்கள் தோஷ மறியாமையாலே; ஸாதநஸாத்யங்களில் பொருந்தாதாரைக் கண்டிருக்கச் செய்தேயும் அவர்களுக்கு ஸந்நிஹிதனுகை யிறே தீம்பாவது. (௪)

அவ;—அஞ்சாம்பாட்டு. இப்பாட்டாலும் அதுதன்னையே விஸ்தரிக்கிறது.

ஸ்வா;—(பல்லாயிரவரித்யாதி) இவ்வூரில் பஞ்சலக்ஷம் குடியில்பிள்ளைகளெல்லாரும் தந்தாம் செய்த தீமைகளை உன்மேலே வையா நின்றார்கள். அவர்களபிப்ராயத்தாலும் உன் வ்யாபாரங்களாலும் ஸத்யம்போலே கருத்தறியாதார்க்கு உன்மேலே தோன்றுமிறே. (எம்பிரான் நீ இங்கேவாராய்) இப்படிச்சொல்

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (பல்லாயிரவரித்யாதி) பஞ்சலக்ஷம் குடியான விவ்வூரில் தீமை செய்யுமவர்களான பிள்ளைகள் அனேகமாயிரம்பேரிறே. (எல்லாமுன்மேலன்றிப் போகாது) தந்தாம் செய்த தீமைகளை நீசெய்தாயென்று உன்மேலே வையாநின்றார்கள். ஆகையால், அவர்கள்செய்த தீமைகளெல்லாம் உன்மேலே ஏறுமதொழிய,புறம்புபோகாது. (எம்பிரான் நீயிங்கேவாராய்)என்

அரு;—அஞ்சாம்பாட்டு. (பல்லாயிரவரித்யாதி) "இவ்வூரில் தீமைகள் செய்வார்பிள்ளைகள் பல்லாயிரவர்" என்று அந்வயம் திருவுள்ளம்பற்றி, "பல்லாயிரவர்" என்றிருக்கையாலே தத்நகுணம் ஏதச்சப்த விவக்ஷிதத்தையும் அருளிச்செய்துகொண்டு அர்த்தமருளுகிறார் (பஞ்சலக்ஷமித்யாதி).கீழே கடாக்ஷித்து அத்தீமைகளெல்லாம் இவன்மேலே வருகைக்கு ஹேதுவை அருளிச் செய்யா நின்றுகொண்டு சப்தார்த்தமருளுகிறார் (தந்தாமித்யாதி வாக்யத்வயத்தாலே). "இங்கே" என்றத்தாலே"அங்கு நின்றும்"என்று தோன்றுமாகையாலே "உன் மேலன்றிப்போகாது" என்றவிடத்தில் அபிப்ரேதார்த்தத்தை

வாரிடங்களில் நில்லாதே, அவர்கள் சொலவும் நினைவும் பொருதாரிடத்தே நீவாராய். ఉదఙ్కమహర్షి - உதங்க மஹர்ஷி, இவ்வர்த்தத்தைப்ரஸ்துதமாக்க, "மஹர்ஷி! போந்தகார்யமென்?, போகலாகாதோ" என்றானிறே. த்ருதராஷ்ட்ராதிகளும், (க) "జానామి ధర్మం నచమే ప్రవృత్తిర్జానామ్యధర్మం నచమేనివృత్తిః। కేనాపిదేవేన హృదిస్థితేనయథానియుక్తోస్మితథాకరోమి - ஜாநாமி தர்மம் நசமேப்ரவ்ருத்திர்ஜாநாம்யதர்மம் நசமே நிவ்ருத்திஃ। கேநாபி தேவேந ஹ்ருதி ஸ்த்திதேந யதா நியுக்தோஸ்மி ததாகரோமி" என்று - அறிவுக்குத் தானுசைவும், ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளுக்கு அவனுகவும், விபரீத ப்ரதிபத்திபண்ணிச் சொன்னார்களிறே ஸஞ்ஜயனைப் பார்த்து. (உ) "మాయాంన సేవే భద్రంతే - மாயாம்ஸேவே பத்ரம்தே" என்றானிறே ஸஞ்ஜயனும்.

ஆழ்வார்களும் ஓரோ தசாவிசேஷங்களிலே வந்தவாற்றாமையாலே (ஈ) 'இன்னும் நலிவானெண்ணுகின்றாய்' (ச) "ஆற்றங்கரை வாழ்மரம் போலஞ்சுகின்றேன்" (ரு) "சிற்ற முளவாகிலும் சொல்லுவன்" (சா) "தருதுயரம் தடாயேல்" (எ) "இவை யென்றிவை யறிவனேலும் - என்னுலடைப்பு நீக்கொண்ணாது" என்னுமிவை முதலாகவருளிச்செய்த பாசுரங்களைத் தந்தாமுக்குத்தோன்றின நினைவுகளாலே சொல்லாமல், ஒருநிபுணசார்யன் ஸ்ரீபாதத்திலே ஆஸ்ரயித்து, பூர்வாசார்யர்களுடைய அநுஷ்டாநவசநங்களையும், வசநாநுஷ்டாநங்களையும் ப்ரார்த்தநாபூர்வகமாகக்கேட்டு விளங்கவேண்டியிறே இருப்பது. ஜ்ஞாநாநுஷ்டாநங்கள் கைவந்தாம் போதைக்கு அநுஷ்டாந முண்டானபடி வந்ததில்லையாகிலும், அதுக்கநுதபித்து ஜ்ஞாநத்தில் பழுதற நிற்கப் பெறிலும் நன்றிறே வர்த்தமாநர்க்கு.

---

நாயனே! உன்மேலே தோஷமேறிடுகிறவர்களிடத்தில் நின்றும், அவர்கள் நினைவும் சொலவும் பொருதார் வர்த்திக்கிற விங்கே வாராய்.

---

யும், மேலே "நல்லார்கள்" என்றத்தையும் உட்கொண்டு தாத்பர்யமருளுகிறார் (என்னுயனேயித்யாதி).

---

(க) பார- (உ) பார- (ஈ) தி-வாய்-எ-க-க. (ச) தி-மொ-கக-அ-க. (ரு) தி-மொ-கக-அ-உ. (சா) பெரு-தி-ரு-க. (எ) பெரி-திருவ-ஈ.

(நல்லார்கள் வெள்ளறைநின்றாய் ஞானச்சுடரே) *கண்ணன் விண்ணூரான அவ்வூரில் பிள்ளைகள் தீமைகள் செய்யாதாப் போலேயிறே, திருவெள்ளறையில் தேசிகரும் நல்லவர்களாய், தாங்களும் பொல்லாங்கு செய்யாமல், ப்ராயாதிகமாகப் புகுந்த துண்டாகிலும் அவன்மேலே வையாமல், அவனவதாராதிகளில் செய்த வ்யாபாரங்களில் ந்யூநாதிரேகங்களுண்டாய்த் தோற்றிற்றேயாகிலும், அவற்றையும் செப்பம்செய்து லோகோபகாரமாக்க வல்ல ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீயை யுடையவர்களைக் குறித்திறே "நல்லார்கள் வெள்ளறைநின்றாய்" என்றது. செந்தாமரைக் கண்ணற்கும் நித்ய விபூதியிலுள்ளார்க்கும் தங்களுக்கும் இந்த விபூதியிலுள்ளார்க்கும் அதிகாராநுகுணமாக நல்லவர்கள். (ஞானச்சுடரே) ஜ்ஞாநமும் ஜ்ஞாநாஶ்ரயமான ஸ்வரூபமும் ப்ரகாஶிக்கும்படியான விக்ரஹத்தை யுடையவனே!. ஞானச்சுடரேய்ந்திருக்கிற உன்னுடைய திருமேனியை. "ஜ்ஞாநாஶ்ரயமோ" என்று விகல்பிக்கலாம்படியிறே திருமேனிதானிருப்பது.

(சொல்லாரவாழ்த்திநின்றேத்தி) சொல்நிறையும்படி நின்றேத்தி. ஸர்வஶப்தவாச்யனென்றேத்தி. (க) "கவிக்குநிறை பொ

---

(நல்லார்கள் வெள்ளறைநின்றாய்) உன்பக்கல் தோஷகந்த(?)ம் சொல்லுமவர்களை ஸஹியாதே, உனக்கு ஸ்நேஹிகளாய் மங்களாசாஸந பரராயிருக்கிறவர்கள் வர்த்திக்கிற திருவெள்ளறையிலே நின்றருளினவனே!. (ஞானச்சுடரே) ஜ்ஞாநப்ரபையையுடையவனே!. (உன்மேனி) அந்தஜ்ஞாநத்துக்கும் ஜ்ஞாநாஶ்ரயமான ஸ்வரூபத்துக்கும் ப்ரகாசகமான உன்னுடைய திருமேனியை.

(சொல்லார - நின்றேத்தி) சொல் நிறையும்படி நின்று ஸ்துதித்து. ஸர்வஶப்தவாச்யமானவியஷத்திலேயிறே சொல் ஆருவது. (க)"கவிக்கு நிறைபொருளாய்நின்றான்" என்னைக்கடவதிறே, (வாழ்

---

"இங்கேவாராய்" என்றதுக்கு ஹேதுவாக வேண்டியும் "மங்களாசாஸந பரர்க்கு முகம் கொடுக்குமாபோலே, எனக்குக்காப்பிடவந்து முகம் கொடுக்க வேணும்" என்று மேலுக்கு ஹேதுவாகவும் வேணுமென்று திருவுள்ளம்பற்றி, நன்மைகளை விசேஷிக்கிறார் (உன்பக்கலித்யாதி). திருமேனியை ஏத்தவும் வாழ்த்தவும் வேண்டும்படி கேழைக் கடாக்ஷித்து விசேஷிக்கிறார் (அந்தவித்யாதி). உக்தத்துக்கு ப்ரமாணம் (கவிக்கித்யாதி). ... ... (இ)

---

(க) ச-திருவ-சுஙக.

மூ.—

கஞ்சன்கறுக்கொண்டு நின்மேல் கருநிறச்செம்மயிர்ப்பேயை
வஞ்சிப்பதற்குவிடுத்தா னென்பதோர்வார்த்தையுமுண்டு
மஞ்சுதவழ்மணிமாட மதிள்திருவெள்ளறை நின்றாய்
அஞ்சுவன்நீ யங்குநிற்க வழகனேகாப்பிடவாராய். (சு)

---

ருளாய் நின்றானே" என்கிறபடியே சொல்லாருவது பொருள் நிறைந்தவிடத்தேயிறே. அது கூடுவது-வ்யாபகத்வய வ்யாவ்ருத்தமான ஸமாஸத்வயத்திலும் வாக்யத்வயத்திலுமிறே. அதுதான் நிறைவதும்-கீழ்ச்சொன்ன * குறைவொன்றுமில்லாத கோவிந்தனான கண்ணன் நின்ற திருவெள்ளறையிலேயிறே. ஆகையிறே "நல்லார்கள் வெள்ளறை" என்றதும். இத்தனைவேணுமோ, தான் காப்பிடும்போதைக்கு. (க)"ஏத்திவாழ்த்துமென்னெஞ்சமே"என்கிறபடியே "பல்லாண்டு" "பல்லாண்டு" என்று ஏத்திவாழ்த்தி. (சொப்படக்காப்பிடவாராய்)]. (சொப்பட) என்றது-நன்றாகவென்றபடி. (காப்பு)என்றது(உ)"சேவடி செவ்வி திருக்காப்பு"என்றபடி.

அவ;—ஆறாம்பாட்டு. ஸ்வதோஷத்தைப் பரதோஷமாக்குவாரிடத்திலே நில்லாதே, இங்கேவாவென்றார்கீழ். அவன் வாராமையாலே த்வரிப்பித்து அழைக்கிறார் இதில்.

ஸ்வா;—(கஞ்சனித்யாதி) அசரீரிவாக்யம் முதலானவற்றைக்கேட்டமாத்திரத்திலே சீறினவளவேயன்றிக்கே, அத்யந்தம்

---

த்தி) மங்களாசாஸநம் பண்ணி. (சொப்படக் காப்பிடவாராய்) நன்றாகநான் காப்பிடவாராய். (சொப்பட)நன்றாக வென்றபடி. (ரு)

வ்யா.—ஆறாம்பாட்டு.(கஞ்சனித்யாதி) அசரீரிவாக்யம்கேட்டவன்று தொடங்கி, அத்யந்தம் வைரஹ்ருதயனாய் அதிசங்கை

---

அரு;—ஆறாம்பாட்டு. (கஞ்சனித்யாதி) "கஞ்சன் நின்மேல் கறுக்கொண்டு" என்றந்வயித்து, "கறுக்கொண்டு" என்றதால் சிரகாலாநுவ்ருத்தமான கோபமென்று தோற்றுகையாலே, இதினுடைய பிறப்பே தொடங்கி விஸ்தரேண அநுவ்ருத்திக்கு ஹேதுக்களை யருளுகிறார் (அசரீரி, என்று தொடங்கி (உடையனாய்க் கொண்டு) என்னுமளவும். (அதிசங்கையாலே) என்றது - நாரதர் வந்து கம்ஸனோடே "எல்லாத்துக்கும் மேலான கர்ப்பம் தொடங்கியெண்ணினால் முதலதே அஷ்டமமாகையாலே இப்படியே எல்லாத்

---

(க) பெரு-தி-உ-ச. (உ) திரு-பல்லா-க.

வைரஹ்ருதயனாய், மக்களாறுவரளவிலும் † சாவாமலிழந்த வழிகண்டும், சாவாமல் "சிக்கெனப்பிறந்து காவலோடும் ஸ்வஸாமர்த்த்யத்தோடும் திருவாய்ப்பாடியிலே புக்கு வளருகிறான்" என்று கேட்டிருக்கச் செய்தேயும் பூதனையாலே ஸாதிப்பானாக விறே கம்ஸன் நினைத்துவிட்டது. "ஆகையிறே, நின்மேல்கறுக் காண்டு" என்ன வேண்டிற்று.

ஆகையிறே, (கருநிறச்செம்மயிர்ப்பேயை) இருள் திரண்டு ஒருவடிவானாப்போலே, கருகிய நிறத்தையுடையவளாய், அக்நி ஜ்வாலை மிகவும்கொழுந்து விடக்கிளம்பினாப்போலேயிருப்பதான மயிரையு முடையளாயிருக்கிற பேச்சியை "நீ நேர் கொடுநேரே சென்றால் அவனை உன்னால் ஸாதிக்கப்போகாது, நீ க்ருத்ரிமரூபத்தால் சென்று ஸாதிக்கவேணுங்காண்" என்று சொன்னானென்கிற வார்த்தையுமுண்டுகாண் பிறக்கிறது;இவ்வார்த்தைதான் ஸ்ரீ

யாலே*மக்களாறுவரைக் கல்லிடைமோதி,"ஸப்தமகர்ப்பம் நழுவிப் போய்த்து"என்றுவிட்டு, "அஷ்டமகர்ப்பமானவிது எப்போதோ பிறப்பது" என்று ஹிம்ஸிப்பதாகப் பார்த்துக்கொண்டிராநிற்கச் செய்தேயும், தாயும் தமப்பனுமொழிய அசலறியாதபடி இருளிலே வந்து பிறந்து, அவ்விருளிலே அங்குநின்றும் திருவாய்ப்பாடியிலே போந்தவித்தை, துர்க்கா(ஹ)வசநாதிகளாலே அறிந்த கம்ஸன் உன் விஷயத்திலே மிகவும் சீற்றத்தையுடையனாய்க்கொண்டு, கறுப்பென்கிறவிது-"கறு" என்று குறைந்துகிடக்கிறது. (கறுப்பு)-சீற்றம்.

(கருநிறமித்யாதி) இருள்தானொருவடிவு கொண்டாப்போலே கறுத்தநிறத்தையும், அக்நிஜ்வாலைபோலே சிவந்த தலைமயிரையும் உடையளாயிருக்கிற பேய்ச்சியை,"நீ நேர்கொடுநேர் சென்றால் அவனை உன்னால் ஸாதிக்கப்போகாது, வஞ்சநத்தால்சென்றுஸாதி" என்று வரவிட்டானென்பதொரு வார்த்தையுமுண்டுகாண், பிறக்

துக்கும் எண்ணிக்கை யாகையாலே அஷ்டமத் வமுண்டென்று சொல்ல, அத்தால் வந்த பயத்தாலே யென்றபடி. (வசநாதிகளாலே) என்ற விடத்தில் ஆதிஶப்தத்தாலே சா(ஶா)ரவசநங்களைச் சொல்லுகிறது.

நலிகைக்கு என்னாமல் "வஞ்சிப்பதற்கு" என்கையாலே அத்தை வ்யாவர்த்த்ய பூர்வகமாக வருளுகிறார் (நீநேர்கொடித்யாதி). (வார்த்தையு முண்டு காண்பிறக்கிறது) என்றது - அன்று தொடங்கியும் பிறக்கிற தென்றபடி.

† (பா) மறம்மாறாமல் இழிந்தவழி கண்டும், அஞ்சாமல்.

நந்தகோபர் ஸ்ரீவஸுதேவர் பக்கலிலேசென்றுகேட்டுவந்து சொன்னாராதல்,மதுரையில் பரவைவழக்கமிங்கே பிறந்ததாதல், ஸாக்ஷாத்காரமாதல்.

(மஞ்சுதவழ்மணி மாடமதிள் திருவெள்ளறை நின்றாய்)மேகங்களானவை, நாம் திருமலையில் பெரிய இளைப்போடே பெரிய ஏற்றமேறுமாபோலே, தவழ்ந்தேறும்படியான உயர்த்தியை யுடைத்தாய், (க) "படியிடைமாடத் தடியிடைத்தூணில் பதித்த பன்மணிகளினொளியால்" என்கிறபடியே,உள்ளெல்லாம்ரத்நாதிகளாலே அலங்க்ருதமாயிருக்கிற மாடங்களையுமுடையதாய், அதுக்குத் தகுதியான திருமதிள்களாலே சூழப்பட்டிருக்கிற திருவெள்ளறையிலே நிலையார நின்றவனே! (அஞ்சுவன் நீயங்கு நிற்க) குணத்திலே தோஷதர்சநம் பண்ணுவாரிடத்திலே நிற்கிறதுக்கும் பூதனைக்கஞ்சுமாபோலே காணும் இவர் அஞ்சுகிறபடி.(அழகனே

---

கிறது. இவ்வார்த்தைதான், ஸ்ரீநந்தகோபர் வஸுதேவர் பக்கலிலே கேட்டுவந்து சொன்னாராதல்; ஸ்ரீமதுரையில் பரவைவழக்கமிங்கேவந்து பிறந்ததாதல்.

(மஞ்சித்யாதி) மேகங்களானவை தவழும்படியான உயர்த்தியை யுடைத்தாய், மணிமயமான மாடங்களையும் அரணாகப் போரும்படியான மதிளையுமுடைத்தான திருவெள்ளறையிலே *நிலையார நின்றவனே. (அஞ்சுவன் நீயங்குநிற்க) "பூதனைவந்து வஞ்சநத்தால் உன்னை நலியத்தேடினதும் தன்வசமாயன்றிக்கே, கம்ஸப்ரேரிதையாய்" என்று வார்த்தை பிறக்கையால் "அவன் இன்னம் ஆரைவரவிடும், எது செய்யுமென்று தெரியாது" என்று ப(ய)ஸ்தாநமான அவ்விடத்தில் நீநிற்கிறவிதுக்கு நான் அஞ்சாநின்றேன். (அழகனே காப்பிடவாராய்)ஆனபின்பு அங்குநில்லாதே அதிலோக

---

இதுபிறந்ததுக்கு மூலத்தை இரண்டுவகையாலே காட்டுகிறார் (இவ்வார்த்தையித்யாதி வாக்யத்வயத்தாலே). (பரவை வழக்கம்) என்றது-கர்ணாகர்ணியாகப்பிறக்கிற வார்த்தை யென்றபடி.

"அங்கு நீநிற்க வஞ்சுவேன்" என்றந்வயம் திருவுள்ளம்பற்றி அஞ்சுகைக்கு ஹேதுவை, பூர்வார்த்தத்தை உட்கொண்டு காட்டாநின்று கொண்டு தாத்பர்ய மருளுகிறார் (பூதனையித்யாதி). (பயஸ்த்தாநமானவவ்விடம்) என்றது - நாற்சந்தி முதலான ஸ்த்தல மென்றபடி.

---

(க) தி-மொ-௪-௧௦-அ.

திருநாமமும் பின்பிறே தோன்றுகிறது. இவள் வயிற்றில் பிறப்பாலேயிறே கோவிந்தனுப்த்ததும். (க) "நந்தன் மைந்தனாக வாகும்நம்பி" என்றாப்போலே.

(கற்றினம் மேய்த்து வரக்கண்டுகந்து) (கற்றினம்) கன்றுத்திரள். அத்திரளில் தானுமொருவனாய், அவையொன்றையொன்று பிரியாதாப்போலே தானும் அவற்றோடே நெஞ்சுபொருந்தியிறே மேய்ப்பது. (மேய்த்து) பறித்துத்தின்ற வல்லகன்றுகள் வயிறு நிறைந்தாலும், பறித்துக்கொடுத்தாலும் மென்றிறக்கமாட்டாதவற்றுக்குக் கசக்கிக்கொடுத்து வயிற்றை நிறைத்தாலிறே இவன்தான் மேய்த்தானாக ப்ரதிபத்தி பண்ணுவது. (இப்படி மேய்த்து வரக்கண்டு) மேயாதேவரிலும் வரவுதானே போருங்காணும் இவனுகப்புக்கு. (அவள் கற்பித்தமாற்றமெல்லாம்) இனியொருநாளும் மேய்க்கப் போகக்கடவையல்லையென்று, அவள் பலகாலும் கற்பித்து நியமித்த ப்ரகார வ்யாஜமெல்லாத்தாலும்.

(செற்றமித்யாதி) மங்களாசாஸந பர்யந்தமாய், ஸகலப்ரமா

---

ணுகையாலேயிறே, கோவிந்தனைத்தான் பெற்றது. க்ருஷ்ணனையென்றபடி. (கற்றினம் மேய்த்துவரக்கண்டுகந்து) கன்றுகளினுடைய ஸமூஹத்தை ஒன்றொழியாமல் வயிறுநிறையமேய்த்து, அத்தாலே ஸந்துஷ்டனாய் வரக்கண்டு ப்ரீதையாய், (அவள்கற்பித்தமாற்றமெல்லாம்) அவள் அவனைக்குறித்து "இன்னபடி செய், இன்னபடிசெய்" என்று கற்பித்த சொலவுகளெல்லாவற்றையும்.

(செற்றமித்யாதி) மங்களாசாஸநபரராய் அநுகூலரைக்கூட்டியும் ப்ரதிகூலரை நீக்கியும் தாம்செய்யும் வ்யாபாரங்களில் அஸூ

---

க்ஷித்துக் கருத்தருளுகிறார் (க்ருஷ்ணனையென்றபடி) என்று. "குட்டனே முத்தம்தா, ஆடியமுதுசெய், கன்றின்பின் போகேல், கோலம் செய்திங்கேயிரு" என்கிறபாசுரங்களை யுட்கொண்டருளித்த மருளுகிறார் (அவளவனையித்யாதி).

"செற்றம்" என்று - அஸூயையாய், இந்தவஸூயை அர்த்தகாமபரராக ஆழ்வாரிடத்திலே சிலர்க்கு ஜநிக்குமோ? அப்ரஸக்தமாகச் "செற்றமில்லாதார்" என்று விசேஷிப்பானென் னென்ன, அதுக்கு "வாழாள்பட்டு நின்றீர்" என்கிறபாட்டை உட்கொண்டு தாத்பர்ய மருளுகிறார் (மங்களா

---

(க) தி-மொ.௨-௨-௪.

ஞுநுகூலமான விவருடைய வ்யாபாரங்களும், (க) "எங்கள் குழு வினில் புகுதலொட்டோம்" என்கிற வைராக்ய ப்ரதாநோபதேச ங்களும் கேட்டால், (உ) "அஸூயவே - அஸூயயவே" என்னுமா போலே அத்யந்தாஸஹமானாராயிராநவர்கள் வர்த்திக்கைதானே அத்தேசத்துக்கு வாழ்வாக, (ந) "இருந்தவூரிலிருக்கும்மானிடர்" என்னுமாபோலேயும், (ச) "திரிதலால் - தவமுடைத்து" என் றுப்போலேயும் நினைத்தருளிச் செய்கிறார். "தரு" என்கையா லே-பூர்வவாக்யத்தில் உத்தமனுல் வந்த க்ரியாபத வர்தமாநம்போ லே, நிலைக்கு நிலைமேலேபோகிற பரிபாகயோக்யரென்றுகாட்டுகிறது. அதுவிறே அத்தேசத்துக்கு வாழ்வை உபகரிக்கையாகிறது. ஆகை யாலே, (தென்புதுவை விட்டுசித்தன்) என்கிறார். ஸ்ரீவில்லிபுத் தூரான திருமாளிகை-தெற்குத் திக்கில் ப்ரதாநமாயிறேயிருப்பது. ஆழ்வார்களெல்லார்க்கும் திருமகளாராய் நாய்ச்சியாரவதரிக்கை யாலும், தம்மையடிமைகொண்டு * மயர்வறமதிநலமருளின வட பெருங்கோயிலுடையான் கண்வளருகையாலும், பெரிய பெருமா ள் * அன்பொடு திருக்கண் நோக்கின திருநகரிபோலே, தெற்குத் திக்கில் ப்ரதாநமாயிறே திருமாளிகை தானிருப்பது. "விட்டு சித்தன்" என்றது-விஷ்ணுவை சித்தத்திலேயுடையவனென்றபடி. அதாவது - அஸாதாரணமான விக்ரஹநாநாத்வத்துக்கும் குண நாநாத்வத்துக்கும் அநுப்ரவேச வ்யாப்தியும் மிகையான நித்ய விபூதிக்கும், ஸ்வரூபவ்யாப்திக்கும் மங்களாசாஸநம் பண்ணுகை யாலே.

(சொல்கற்றிவைபாடவல்லார்) இவருடைய மங்களாசாஸநச் சொற்கள் ஒரு ஆசார்யன் ஸ்ரீபாதத்திலே இயல முன்னுகக்கற்று, கற்றப்ரகாரத்திலே இவையென்று தர்ஸித்து, ஸாபிப்ராயத்தோ

---

யையில்லாதவர்கள் வர்த்திக்கிற தர்ஸநீயமான ஸ்ரீ வில்லிபுத்தூரு க்கு நிர்வாஹகரான பெரியாழ்வாரருளிச்செய்த சொல்லான விவ ற்றை. (கற்று - பாடவல்லார்) ஓராசார்யன் பக்கலிலே அப்யஸித் து, இதிலுண்டான ரஸ்யதையாலே ப்ரீதிப்ரேரிதராய்க்கொண்டு பாடவல்லார். (கடல்வண்ணன் கழலிணை காண்பர்களே) "காலிப்

---

த்யாதி). பாடவென்ன வமைந்திருக்க, 'கற்று" என்றதுக்குத் தாத்பர்யமரு ளுகிறார் (ஓரீத்யாதி). ... ... ... ... (க

---

(க) திருப்பல்லா-ந. (உ) ஙீ- (ந) ச-ச- (ச) பெரு-ச0-டு-தி-

டே பாடவல்லார். (கடல்வண்ணன் கழலிணை காண்பர்களே) கடல் நிறம்போலே திருமேனியையுடையவனென்னுதல். கடல்போலே ஸ்வபாவத்தையுடையவனென்னுதல். (வண்ணம்) ஸ்வபாவம். ஒன்றுக்கொன்றொப்பான திருவடிகளைத் தாம்கண்டாப்போலே (௧) "சேவடி செவ்வி திருக்காப்பு" என்று காணப் பெறுவர்களென்று பலம் சொல்லித் தலைக்கட்டுகிறார்.

பிள்ளை திருவடிகளே சரணம்.

## பெரியாழ்வார் திருமொழி மூன்றாம்பத்து மூன்றாம் திருமொழி முற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## பெரியாழ்வார் திருமொழி மூன்றாம்பத்து நாலாம் திருமொழி.

தனைகளும் ப்ரவேசம்.

அவ;-கீழே "நாளைத்தொட்டுக் கன்றின்பின் போகேல்கோலம் செய்திங்கேயிரு" என்கையாலே ஏழுநாளுமிருந்து திருவோணத் திருநக்ஷத்ரமும் கொண்டாடிவிட்டபின்பும் பசுக்களையும்கன்றுகளையும் மேய்க்கப்போய், அவை மேய்ந்த ப்ரீதியாலே தன்னை நாநாப்ரகாரமாக அலங்கரித்துக் குழலூதுவது, இசைபாடுவது, ஆடுவ

பின்னே வருகின்ற கடல்வண்ணன்" என்றுசொன்னகடல்போன்ற நிறத்தையுடையனான க்ருஷ்ணனுடைய பரஸ்பர ஸத்ருஶமான திருவடிகளைத் தாம் கண்டாப்போலே கண்டநுபவிக்கப் பெறுவரென்கை. ... .... .... .... ... ... (௧௦)

பெரியஜீயர் திருவடிகளே சரணம்.

மூன்றாம்பத்து மூன்றாம்திருமொழி முற்றிற்று.

நாலாம் திருமொழி தனைகளும்ப்ரவேசம்.

அவ;—கீழே- "நாளைத்தொட்டுக் கன்றின்பின் போகேல் கோலம் செய்திங்கேயிரு" என்கையாலே, ஏழுநாளுந் தருளியிருந்து திருவோணத் திருநக்ஷத்ரமுங் கொண்டாடிவிட்டபின்பு, பசுக்களையும் கன்றுகளையும் மேய்க்கப்போய், அவைமேய்ந்த ப்ரீதி

அரு:—தனைகளும்ப்ரவேசம். "ஆநிரையின மீளக்குறித்த" என்றத்தையும் "கன்றுகள்மேய்த்தது" என்றத்தையும் கடாக்ஷித்தருளுகிறார் (பசுக்களையும் கன்றுகளையும்) என்று. சிலநாள் கன்றுகளைமேய்த்தும், சிலநாள் பசுக்

(௧) திருப்பல்லா-௧.

தாய்க் கொண்டு தானும் தன்னேராயிரம் திருத்தோழன் மாருமா கப் பெரிய மேளுணிப்போடே எழுந்தருளி வருகிற ப்ரகாரத் தைக்கண்டு, திருவாய்ப்பாடியில் பெண்கள் இவன் பக்கல் அத்யந் தஸ்நேஹத்தோடே விக்ருதைகளாய், ஒருவரை யொருவர் அழைத்துக் காட்டியும், நியமித்தும், நியாம்யைகளாகாதார் எதிர் நின்றுபட்டமெலிவுகண்டும் சொன்ன பாசுர விசேஷங்களை வ்யாஜ மாக்கித் தாமும் அநுபவித்து, இனியராய் தாமநுபவித்த ப்ர காரத்தை ஸாபிப்ராயத்தோடேபாடி அநுபவிப்பார்க்குப் பலம் சொல்லித் தலைக்கட்டுகிறார். .... .... ... .... *

யாலே தன்னை நாநாப்ரகாரமாக அலங்கரித்து, குழலூதுவது இசைபாடுவதாய்க்கொண்டு தானும் * தன்னேராயிரம் திருத் தோழன் மாருமாகப் பெரியமேளுணிப்போடே எழுந்தருளி வரு கிற ப்ரகாரத்தைக் கண்டு, திருவாய்ப்பாடியிலே பெண்கள் பலக ணிவழியேநுழைந்து பார்ப்பாரும் நிற்பாரும், "அவன் வரும்போ தாக எதிரே நின்று உங்கள் வளையை யிழவாதே கொள்ளுங்கோ ள்" என்பாரும், "வருகிற வவன்வடிவை என்பெண் அருகேநின்று கண்டாளித்தனை, அதுகண்டு இவ்வூரொன்று புணராநின்றது" என் பாரும், அவன்வருகிற படியைத் தெருவிலேகண்டு, அவன்பக்கல் ஸ்நேஹத்தாலே தாங்கள் விக்ருதைகளாய், காணுதாரையும் அழைத்துக்காட்டுவாரும், அவன் சேஷ்டிதத்திலே ஈடுபட்டுத் தாங்கள் அநந்யார்ஹரானமையைச் சொல்வாரும், அவன் தெருவே வருமாகில் "எங்கள்பந்தைப்பறித்துக்கொண்டுபோனவன்" என்று வளைத்து "அவனுடைய பவளவாய் முறுவல் காண்போம்" என்பா ரும், அவன் வரவைக்கண்டு தாம் தாமீடுபட்டமை தாய்மார்க்குச் சொல்லும்படிவிக்ருதைகளாவாருமாய், இப்படி அவன்பக்கல் காமு ற்ற ப்ரகாரத்தை அவர்களெல்லாருடையவும் பாவவ்ருத்தியை யுடையராய்க்கொண்டு, தாம்அவனைக்குறித்துப்பேசி ப்ரீதராகிறார்- இத்திருமொழியில்.

களைமேய்த்தும் வந்த வந்திகள் தோறும் அவனை அநுபவித்து ஈடுபட்டார்க ளென்று திருவுள்ளம். " தன்தோழன்மாரோடு கலந்துடன் வருவானை " என்றத்தைப்பற்ற, (தானும்தன்னேராயிர மித்யாதி). (அவர்களெல்லாரு டையவும்) என்றது - தாய்மாருடையவும் பெண்களுடையவு மென்றபடி. (அவனைக்குறித்து) என்றது - அவன் விஷயமாக வென்றபடி.

மூ.—தழைகளுந் தொங்கலுந் ததும்பியெங்கும்
தண்ணுமை யெக்கம் மத்தளி தாழ்பீலிக்
குழல்களுங் கீதமுமாகி யெங்கும்
கோவிந்தன் வருகின்றகூட்டங்கண்டு
மழைகொலோ வருகின்றதென்று சொல்லி
மங்கைமார் சாலகவாசல்பற்றி
நுழைவனர் நிற்பனராகியெங்கு
முள்ளம்விட்டூண்மறந்தொழிந்தனரே. (௧)

ஸ்வா;—முதற்பாட்டு. (தழையித்யாதி). (தழை) - குடை. (தொங்கல்) - பீலிதாழ்குடை. (ததும்புதல்) கிளப்பம் (தண்ணுமை) திருவரையில் சாத்தின சிறுப்பறை. "எக்கம்" என்று - ஏகமாய், ஒருதலைப்பறை யென்றபடி. (மத்தளி) பெருமுழக்க வாத்யம். (தாழ்பீலி) தூக்கின சின்னமென்னுதல், பீலிதாழ்ந்த வாத்ய மென்னுதல். (குழல்கள்) இலைக்குழல், வேய்ங்குழல் முத

வ்யா ;—முதற்பாட்டு. ( தழையித்யாதி ) தழையென்றும், தொங்கலென்றும்-பீலிக்குடைவிசேஷங்கள். [தழை தொங்கல்சாபாலம் பிச்சம் குளிரி பீலிக்குஞ்சமாகும்] என்றுதழையென்றும், தொங்கலென்றும், சாபாலமென்றும், பிச்சமென்றும், குளிரியென்றும், பீலிக்குடைக்குப் பேராகச்சொன்னனிறே திவாகரன். எல்லாம் பீலிக்குடைக்குப்பேரானாலும், அதில் ஆகாரபேதமுண்டாகையாலே, தழையென்றும், தொங்கலென்றும்பிரித்துச்சொல்லுகிறது. "தழைகளும்" என்று பலவாகச்சொல்லுகையாலே, "தொங்கலும்" என்கிற விடத்திலும் பஹுவசநம்விவக்ஷிதம். (ததும்பியெங்கும்) எங்கும்நிறைந்து. (தண்ணுமை) அதாவது- ஒருமங்களவாத்யவிசேஷம். எக்கமாவது - ஏகதந்த்ரியாய், மத்தளியென்று பிரித்துச்சொல்லவுமாம். அன்றிக்கே, (எக்கம்மத்தளி)என்று ஒரு பறைவிசேஷமாகவுமாம். (தாழ்பீலி) பீலிதூக்கின சிஹ்நமென்னுதல்; பீலிதாழ்ந்த வாத்யமென்னுதல். (குழல்களும்)இலைக்கு

அரு:—முதற்பாட்டு. (தழைகளு மித்யாதி). (பீலிக்குடை) - மயில் தோகையால் பண்ணினகுடை. (சின்னம்) என்றது - ஊதுகிறதிருச்சின்ன மென்றபடி.

லானவை. (கீதமும்) ஜாத்யுசிதமான பாட்டுக்களும். ந்ருத்தவிசே ஷங்களு மெங்கு முண்டாக்கி. "தழைகள்" என்று - கொம்புசெறி ந்த பசுந்தழைகள், சாத்தின பீலித்தழைகள். (தொங்கல்) குடை மேல் மாலைகளாதல். சாத்தின இலைத்துடையாதலாம். பிள்ளைக ளும் தானுமாக, (கோவிந்தன் வருகின்ற கூட்டங்கண்டு) கோவிந் தன் * தன்னேராயிரம் பிள்ளைகளான கூட்டத்தோடே மிகவும் ஆரவாரித்துக் கொண்டு வருகிற ப்ரகாரத்தைக்கண்டு. (கோவிந் தன்) கோக்களை ரக்ஷிக்குமவன், கோக்களையுடையவன்; இந்த்ரியங் களை இதர விஷயங்களில் போகாமல் * த்ருஷ்டிசித்தாபஹாரம் பண்ணவல்லவன்.

(மழைகொலோவருகின்ற தென்று சொல்லி மங்கைமார்) மேகஸமூஹங்களோதான் தரைமேலே நடந்துவருகிற தென்று "இதோராஸ்சர்யமிருந்தபடியென் ?" என்று யுவதிகளானவர்கள் மிகவும் கொண்டாட்டத்தோடே சொல்லி, (சாலகவாசல்பற்றி) பலகணித்வாரங்களைப்பற்றி நின்று, (நுழைவனர் நிற்பனராகி) வ்யாமோஹத்தாலே சென்று மேல் விழுவதாக நுழைவாரும்,

---

ழல், வேய்ங்குழல் முதலான குழல்களும். (கீதமும்) ஜாத்யுசித மான பாட்டுக்களும். (ஆகியெங்கும்) எங்குமிவையேயாய்க்கொ ண்டு. (கோவிந்தன்வருகின்ற கூட்டங்கண்டு) கோரக்ஷணத்துக்கு முடி சூடினவன் * தன்னேராயிரம் பிள்ளைகளும் தானுமாய் வரு கிற திரளைக்கண்டு.

(மழைகொலோ வருகின்றதென்றுசொல்லிமங்கைமார்) "மேகஸ மூஹமோதான் தரைமேலேநடந்துவருகிறது" என்று யுவதிகளான ஸ்த்ரீகள் கொண்டாட்டத்துடனே சொல்லி. (சாலகவாசல்பற்றி) பலகணி த்வாரங்களைக் கிட்டி. (நுழைவனர்நிற்பனராகி) வ்யா மோஹத்தாலேசென்று மேல்விழுவதாகநுழைவாரும், ஜாலகப்ரதி

---

எல்லாரும் தன்னேராயிரம் பிள்ளைகளாகையாலே நீலமேகஸ்யாமளனை யிவன்போல்வாரென்று திருவுள்ளம்பற்றி "மழை" என்றதுக்கு (நீலமேகஸ மூஹம்) என்றது. "க்ருஷ்ணன்தன் தோழரோடு வருகிறான்" என்றறிந்தவ ர்கள், "மழைகொலோ" என்றுஸம்ஸயிக்கை அநுபபந்நமாகையாலே (கொண்டாட்டத்துடன்) என்றது. "மறந்தார்" என்றால், இனிமேல் நினை

மூ.—வல்லிநுண்ணித ழன்னவாடைகொண்டு
வசையறத் திருவரைவிரித்துடுத்துப்
பல்லிநுண்பற்றாக வுடைவாள்சாத்திப்
பணைக்கச்சுந்திப் பலதழைநடுவே
முல்லைநன்னறுமலர் வேங்கைமலரணிந்து
பல்லாயர்குழாநடுவே
எல்லியம்போதாகப் பிள்ளைவருமெதிர்நின்
றங்கினவளையிழவேன்மினே. (௨)

ஜாலகப்ரதிபந்தத்தாலும், பந்துவர்கபீதியாலும், ஸ்த்ரீத்வாபி மாநபாஹுள்யத்தாலும் நிற்பாருமாகி, (எங்குமுள்ளம் விட்டு) அவன் போம்வழி யெங்கும் நெஞ்சுகளைப்போகவிட்டு, (ஊண்மறந்து) நெஞ்சில்லாதார்க்கு உண்ணலாமோ ? பூதகாலத்திலுண்டத்தை நினைக்கலாமோ ? இப்போது உண்டு நிறைந்தவர்களுக்கு உண்ணலாமோ?. (ஒழிந்தனரே) இனிகாலாந்தரத்திலும் ஜீவநஸாபேக்ஷகளாகமாட்டார்களென்று தோற்றும்படி. வேறுபட்டார் களிறே. .... ... ... ... ... (௧)

ஸ்வா;—இரண்டாம்பாட்டு. அவன் வரவுகண்டு நெஞ்சிழந்த வர்கள் "அவன்வரும்போது எதிரே நில்லாதே கொள்ளுங்கோள்" என்று நிஷேதிக்கிறார்கள்.

ஸ்வா;—(வல்லியித்யாதி) திருவரைக்குத் தகுதியாய், மார்த்

பந்தத்தாலும் பந்துவர்க்கபீதியாலும் ஸ்த்ரீத்வாபிமாநத்தாலும் நிற்பாருமாகி. (எங்குமுள்ளம்விட்டு) அவன் போனவழியெங்கும் நெஞ்சைப்பரக்கவிட்டு. (ஊண்மறந்தொழிந்தனரே) உணவை மறந்து விட்டார்கள். உணவை நினைக்கும்போது நெஞ்சுவேணு மிறே ; நெஞ்சு அவன்பின்னே போய்விட்டதே; நெஞ்சில்லாதார்க்கு நினைக்கப்போமோ?. ஆகையாலே, "மறந்தனர்" என்றதே, மறந்துவிட்டார்களென்கிறது. ... .... .... ... (௧)

க்கை யோக்யத்தை யாகிலு முண்டு; "மறந்தொழிந்தார்" என்றால் அதுவு மில்லையென்னுமிடம் தோற்றுமென்று திருவுள்ளம்பற்றி, அப்படியாகைக்கு ஹேதுவேதென்ன வருளுகிறார் (உணவையித்யாதி). ... ... (௧)

அரு,—இரண்டாம்பாட்டு. (வல்லியித்யாதி). "வல்லி" என்று-ஸாமா ன்யமாகக் கொடியைச்சொன்னால், இவனுடுத்த திருப்பரிவட்டத்துக்கு ஸத்

தவமான திருப்பரியட்டைத்தைக் கொண்டு வசையும் முசிவுமற விரித்துச்சாத்தி. "வல்லி" என்று-கல்பகத்தில் படர்ந்த கொடியில் பூப்போலே மார்தவமான திருப்பரியட்ட மென்னவுமாம், உடைவாய்ப்பும் - திருவரை பூத்தாப்போலே. (பல்லியித்யாதி) (பணைக்கச் சுந்தி-பல்லி நுண்பற்றாக வுடைவாள்சாத்தி) திருவரையில் சாத்தின பரியட்டத்துக்குமேலே முசிவறவிரித்து நெருங்கச் சாத்தின பெரியகச்சைக்கிளப்பித் திருக்குற்றறுடைவாளைத் திருவரையிலே வேர்விழுந்தாப்போலே சாத்தி. "பல்லி" என்று - வேர்பற்று. பல்லி தாளுகவுமாம். (பலதழைநடுவே) பலகுடையெ

வ்யா;—இரண்டாம்பாட்டு. (வவ்லியித்யாதி) கல்பகவல்லியினுடைய நுண்ணிதாகிய இதழ்போலே ம்ருதுவாய் நிறத்திருக்கிற பரியட்டத்தைக்கொண்டு, (வசையறத்திருவரை விரித்துடுத்து) நன்றாகத்திருவரையிலே விரித்துச்சாத்தி. "வசையற" என்றது-பழுதற வென்றபடி. பரிவட்டம் நன்றானாலும் உடுக்கவல்லதொரு ஸாமர்த்த்யமுண்டிறே. அதாவது - பரிவட்டம் சாத்தினால், (க) " கௌஶேயபுஷ்பிதகடீதடம் - கௌஶேயபுஷ்பிதகடீதடம்" என்கிறபடியே திருவரை பூத்தாற்போலேயிருக்கை. (பல்லியித்யாதி) (பணைக்கச்சுந்தி-பல்லிநுண்பற்றாகவுடைவாள் சாத்தி) திருவரையிற் சாத்தினபரிவட்டத்துக்குமேலே முசிவறவிரித்து, அழுந்தச்சாத்தின பெரிய கச்சைக்கிளப்பி, சுவர்களிலே நீரந்த்ரமாகப் பல்லி பற்றிக்கிடந்தாப்போலே, வைத்துக் கட்டினதாயிராதே, "ஸஹஜம்" என்னலாம்படி திருக்குற்றுடைவாளைச்சாத்தி, (பலதழை நடுவே) பலபீலிக்குடைகளின் நடுவே.

ருஶ்மாகா தென்று விசேஷிக்கிறார் (கல்பகேத்யாதி). வல்லியித்யாதியாலே நல்லதாயிருந்த திருப்பரியட்டத்தை எங்ஙனே உடுத்தாலும் நன்றாயிருக்குமே; "வசையற" என்று விசேஷிக்கவேணுமோ வென்ன வருளுகிறார் (பரிவட்டமித்யாதி). "பல்லிநுண்பற்றாக" என்று மேலேயிருக்கையாலே, அதுக்கநுகுணமாக "பணைக்கச்சு" என்றத்தை விசேஷிக்கிறார் (திருவரையித்யாதி). "பணை" என்றதினர்த்தம் - (பெரிய) என்றது. "உந்தி" என்றதினர்த்தம் (கிளப்பி) என்றது. "நுண்" என்றதின்பலிதம் (நீரந்த்ரமாக) என்றது. பல்லி பற்றுப்போலே யிருக்கையை தார்ஷ்டாந்திகத்திலே ஏறிட்டுக் காட்டுகிறார் (வைத்தித்யாதி).

(க) ர-ஸ்த-க.

பெரியாழ்வார் திருமொழி, ௩-ப, ௪-தி, ௨-பா, வல்லி. நிகூடு

ன்னுதல். பலதழைக்கொம்பென்னுதல். இவை பிடித்து வருகிற
திருத்தோழன்மார் நடுவே.

(முல்லையித்யாதி)ஜாத்யுசிதமாய், செவ்விகுன்றாமல் பரிமளித
மாய், விகஸிதமானமுல்லைமலர் வேங்கைமலர்தொடுத்துச்சாத்தி.
(பல்லாயர் குழாநடுவே) தழையெடுத்து வருகிறவர்களையும் இவன்
தன்னையும் சூழ்ந்து ஒத்ததரத்தராய்வருகிற அநேகமான ஆயர்கள்
நடுவே. (எல்லியம் போதாகப் பிள்ளைவரும்) எல்லி-மாலைக்காலம்.
அஸ்தமித்தபின்பாக *நந்தன்மைந்தனாக வாகுநம்பிவரும். (வரும்)
ஸ்ரீஸங்கமத்யே வநமாலை யடையாளமாகத் தன்னைத் தோற்று
விக்குமா போலே, முல்லைமாலையாலே தன்னைத் தோற்றுவித்துக்
கொண்டு ஆயர்கள்நடுவேவரும். (எதிர்நின்றங்கினவளையிழவேல்மி
னே) எதிர்நிற்கையென்றும், வளையிழக்கையென்றும் இரண்டில்லை
போலே காணும். எதிர்நின்றவர்களில் இனவளைகளிலே ஒருவளை
நோக்கவல்லாருண்டோ ?. ... ... .... ... (௨)

(முல்லையித்யாதி) ஜாத்யுசிதமாக, செவ்விகுன்றாமல் பரிமளித
மாய் விகஸிதமான முல்லைப்பூவும் வேங்கைப்பூவுமாகிறவிவற்றைத்
தொடுத்துச் சாத்தி; (பல்லாயர் குழாநடுவே) "தன்னேராயிரம்
பிள்ளைகள்" என்கிறபடியே தன்னோடொத்த தரத்தராய், தன்னை
ஸேவித்துக்கொண்டு வருகிற பல ஆயருடைய திரள்நடுவே. (எல்
லியம்போதாகப் பிள்ளைவரும்) அந்தியம்போதாக ஸ்ரீநந்தகோபர்
திருமகனானவன் வரும். (எதிர்நின்றங்கினவளை யிழவேன்மினே)
அவன் வருகிற வழியிலே எதிரேநின்று உங்கள் கையில் கிடக்கிற
திரளானவளையை யிழவாதே கொள்ளுங்கோள். எதிர்நிற்கையென்
றும், வளையிழக்கையென்றும் இரண்டில்லைபோலே காணும். "இன
வளையிழவேன்மின்?" என்கையாலே - எதிர்நின்றவர்களில் இன
வளையில்ஒருவளைநோக்கவல்லாரில்லையென்னுமிடம்சொல்லுகிறது

"நன்னறுமலர் முல்லை வேங்கை மலரணிந்து" என்றநவயித்தர்த்த
மருளுகிறார் (ஜாத்யுசித மித்யாதி). "ஆயர்" என்றுஸாமாந்ய சப்தமாகை
யால், பெரியோர்களைச் சொல்லில், சேர்த்தி யழகு ஸித்தி யாமையாலும்,
"குழாநடுவே பிள்ளை வரும்" என்கையாலே இவனுடைய ப்ராதாந்யம்
தோன்றுகையாலே விசேஷிக்கிறார் ( தன்னேராயிர மித்யாதி ). எதிர்
நின்றமாத்ரத்திலே வளையிழக்க வேணுமோ வென்ன; அதினுடைய கார்ய
த்தினுறப்பை யருளிச்செய்து கடைபெடுகிறார் (எதிரித்யாதி). (௨)

மூ.—சுரிகையுந் தெறிவில்லுஞ் செண்டுகோலும்
மேலாடையுந் தோழன்மார் கொண்டோட
ஒருகையா லொருவன்றன் றோளையூன்றி
ஆநிரையினமீளக் குறித்தசங்கம்
வருகையில் வாடியபிள்ளை கண்ணன்
மஞ்சளும்மேனியும் வடிவுங்கண்டாள்
அருகேநின்றாளென் பெண்ணோக்கிக்கண்டாள்
அதுகண்டிவ்வூரொன் றுபுணர்க்கின்றதே (௩)

ஸ்வா;—மூன்றாம்பாட்டு. தாயாரானவள் பெண்பிள்ளைக்கு வந்த பழிசொல்லு பரிஹரிக்கிறதாயிருக்கிறது இப்பாட்டு.

ஸ்வா;—(சுரிகையித்யாதி). "சுரிகை" என்று - ஓராயுதவிசேஷம். கீழே திருக்குற்றுடைவாள் சாத்தியென்றாள். இப்போது சுரிகையென்கையாலே * சென்று செருச்செய்யுமவர்களாகையாலே ஆயுதமும் வேணுமிறே. மேலே லீலாரஸஹேதுவான சுண்டு வில்லும் செண்டு கோலும் வருகையாலே, சுரிகையும் விளையாடுப் பத்திர மென்னவுமாமிறே. (மேலாடையும்) பசுமேய்த்துவரும்

வ்யா;—மூன்றாம்பாட்டு. (சுரிகையித்யாதி) பசுமேய்க்கப் போம்போது விரோதிநிரஸநத்துக்கும் லீலைக்குமுறுப்பான உபகரணங்கள் பலவும் கொண்டாய்த்துப்போவது. "சுரிகை" என்று ஓராயுதவிசேஷம். கீழே, "உடைவாள்சாத்தி" என்றும், இங்கே "சுரிகை" என்றும் சொல்லுகையாலே விரோதிநிரஸநத்துக்குடலான ஆயுதங்கள். * சென்று செருச்செய்யு மவர்களாகையாலே ஆயுதமும் வேணுமிறே. தெறிவில்லாவது - சுண்டுவில்லு; இதுவும் செண்டுகோலுமலீலைக்குஉபகரணம்; இவற்றையும்.(மேலாடை

அரு;—மூன்றாம்பாட்டு. (சுரிகையித்யாதி) பசுமேய்ப்பார்க்குக்கோலுங் குழலு மொழிய,சுரிகைமுதலானவை கொண்டு போகப்ரஸக்தி யேதென்னவருளுகிறார் (பசுமேய்க்க வித்யாதி). (ஆயுதவிசேஷம்) என்றது- சூர்க்கத்தியென்றபடி. சூர்க்கத்தி யெல்லாமலங்காரத்துக் காமதொழிய, இதுவிரோதி நிரஸநத்துக்கு உடலென்று சொல்லலாமோவென்ன, அத்தை ஸமர்த்தித்தருளுகிறார் (கீழேயித்யாதி). இடையர் ராஜாக்களைப்போலே யுத்தம்பண்ணுவர்களோ, ஆயுதமெடுக்கைக் கென்ன ; அதுக்கு ப்ரமாணபூர்வகமாக யுத்தம் பண்ணுவர்களாகையாலே ஆயுத மெடுக்கவேணு மென்கிறார் (சென்று செரு வித்யாதி). (இவற்றையும்) என்றது - சுரிகைமுதலானவற்றையு ;

போது திருவரைக்குத் தகுதியாக முன்பு சாத்தின பரியட்டத்து டனே சாத்தத்தகுதியான மேல்சாத்தும். (தோழன்மார் கொண் டோட) (க) ''உகந்து தோழன் நீ'' என்று அவன் தானுகந்தவள வேயன்றிக்கே, அவன்தன்னை உகந்த தோழன்மார், இவைதானே புருஷார்த்தமாகக் கொண்டோட.

(ஒரு கையாலொருவன் தன் தோளையூன்றி) தோழன்மாரில் யும்) பசுமேய்த்துவரும்போது திருவரைக்குத் தகுதியாக, முன்பு சாத்தின பரியட்டத்துடனேசாத்துகைக்குத் தகுதியான மேற் சாத்தையும் (தோழன்மார் கொண்டோட) ஸமாநவயஸ்கரா ய்த் தனக்கு ஸ்நேஹிகளாய்த் தன்னையொருக்ஷணகாலமும் பிரிந் திருக்கமாட்டாத தோழன்மாரானவர்கள் தங்கள் தங்கள் கைகளி லேகொண்டு அபேக்ஷிதஸமயத்திலே கொடுக்கைக்காகஓரடி காமா மல் பின்னே விரைந்து ஸேவித்துக்கொண்டுவர.

(ஒரு கையாலொருவன்றன் தோளையூன்றி) கீழ்ச்சொன்ன தோழன் மாரளவன்றிக்கே, உயிர்த்தோழனைப் ப்ரியபரனுமாய் படி. இப்படி அநுவதித்தது ''தோழன்மார் கொண்டோட'' என்றதுக் கநுகுணமாக த்விதீயாந்த மாக்குகைக்காகவும், ''மேலாடை'' என்றது - விரோதிநிரஸநலீலோபகரண கோடியென்கைக்கு பஹிர்பூத மென்கைக்காக வுமென்று கொள்வது. (முன்புசாத்தின) என்றதுக்கு - கீழில் பாட்டில் அரையிலே சாத்தினதாகச் சொல்லப்பட்டதென்று கருத்து. (தகுதியான) என்றதுக்கு - ''வல்லிநுண்ணி தழன்ன'' என்ற விசேஷணம் எங்கும் விவக்ஷி தமென்று கருத்து. ''தோழன்மார் கொண்டோட'' என்றதுக்கு - கொண் டோடிப்போக வென்றர்த்த மாகில், தோழன்மாராகக் கூடாமையாலே ''பின் னேயோடிவர'' என்றே அர்த்தம் விவக்ஷித்து,மேய்கிற பசுக்களின் பின்னே அங்கங்கே யிருந்த தோழன்மார் க்ருஷ்ணன் ஊரேறப் போவதாக வொருப் பட்டு, சங்கு குறித்தவாறே, இருந்த விடத்திலிருந்துஸத்வரராய் வந்தமை யையுட்கொண்டு, அதுக்குஹேதுவாக, ''தோழன்மார்'' என்றதுக்கு விவக்ஷி தார்த்தங்களைக் காட்டுகிறார் (ஸமாநேத்யாதி).(விரைந்து) என்றது - நிபிடமா யென்றபடி.

''ஒருவன்'' என்றதுக்கு - கீழே தோழன்மாரென்றத்தாலே '' அவர்களி லொருவன்''என்று விவக்ஷித்து''தன்''என்று விசேஷித்ததுக்குத்தாத்பர்யம் (கீழ்ச் சொன்ன வித்யாதி).(உயிர்த்தோழன்) என்றதுக்கு விவரணம் (ப்ரியே

(க) தி-மொ-ரு-அ-க.

வ்யாவ்ருத்தனாய், அவன் தன்னையுகந்தவளவே யன்றிக்கே, அவன் தானும் உகந்தவனாய், அவர்களைப்போலே ப்ரியபரனாயிருக்கை, ஹிதத்தையும் ப்ரியமாக்கவல்லனுமாயிருக்கிறவன்தோளை ஒரு திருக்கையாலே ஸ்பர்சித்து. (ஆநிரையின மீளக்குறித்த சங்கம்) வலத்திருக்கையிலே ஆநிரையின மீளக்குறித்தசங்கத்தைப்பிடித்து வருகையாலென்னுதல்; ஆநிரையினமீளச் சங்கம் குறித்த கண்ணன் வருகையாலேயென்னுதல்; சங்கம்குறிக்கும்போது-ஆநிரையினம்மீளவூதினதும், விலங்காமைக்கு ஊதினதும், மேயவூதினதும், ஊரில் வரும்போது ஆநிரை முன்னே நடக்கும்படியாகவுமிறே ஊதிற்று.

---

ஹிதபரனுமாயிருப்பானொருவனுடைய தோளை ஒரு திருக்கையாலே ஸ்பர்சித்து. (ஆநிரையினம் மீளக்குறித்த சங்கம்) மற்றொரு திருக்கையாலே பசுநிரையினுடைய திரளானது மீளும்படியாக ஊதின சங்கத்தைப் பிடித்துக்கொண்டு. சங்கம்குறிக்கும்போது ஆநிரையினமானது மேய்கைக்குறுப்பாகக் குறிக்குமதும், மீளுகைக்குறுப்பாகக் குறிக்குமதும், பக்கத்து விலங்காமைக் குறுப்பாகக்குறிக்குமதுவுமாய் பஹுமுகமாயிறேயிருப்பது. இவையெல்லாம், ஊதுகிற த்வநி விசேஷத்தாலே வாஸநைபண்ணின பசுக்களறியுமிறே; இப்போது ஸாயங்காலமாகையாலே, "மீளக்குறித்த

---

த்யாதி). "ஊன்றி" என்றதுக்கு-தன்பாரத்தை அவனைச் சுமக்கப்பண்ணியென்றர்த்த மன்றிக்கே, க்ருஷ்ணன் உயிர்த் தோழன் மேலே இப்படித்தன் கைபோட ஸஹியாதவனென்றும், ஆப்ரிதஸ்பர்ஶமே அபேக்ஷிக்குமவனென்றும் திருவுள்ளம் பற்றியாய்த்து, (ஸ்பர்ஶித்து) என்றது. "ஒரு கையால்" என்றபதத்தையும், "ஊன்றி" என்ற பதத்தையும் இங்கே அநுஷங்கித்துக் கொண்டர்த்த மருளுகிறார் (மற்றித்யாதி). "குறித்த" என்றதினர்த்தம் (ஊதின) என்றது. அநுஷக்தமான ஊன்றியென்ற தினர்த்தம் (பிடித்துக்கொண்டு) என்றது. "மீள" என்றபதத்துக்கு ப்ரயோஜநமருளிச்செய்வாராகக் குறித்தபடிகளை அநேகவிதமாகக் காட்டுகிறார் (சங்கித்யாதி). அஜ்ஞரான பசுக்கள் சங்கூதிலறியும்படி யெங்ஙனே யென்ன வருளுகிறார் (இவையெல்லா மித்யாதி). பசுக்களைமீட்கை தான் போயாதல், தன்திருமிடற்றோசையாலே அழைத்தாதல், தோழரைநியமித்தாதல் செய்யலாயிருக்க, சங்கூதி மீட்க வேணுமோ வென்ன, அதுக்கு க்ருஷ்ணனு

இவ்வாசி ஆநிரைகளெல்லாமறியும்படி அவனூதின வாஸனை யாலே. அந்தத்வநியடங்காமல், பசுப்ராயரை யெல்லாம் "சதிரிள மடவார்தாழ்ச்சியை மதியாதே வாருங்கோள்" என்று அதிருகை நித்யமாய்ச் செல்லா நின்றதிறே. இந்த த்வநிதான் * பூங்கொள் திருமுகத்து மடுத்தூதிய சங்கொலிபோலே, திருவாய்ப்பாடியில் பெண்களுக்கும் தன்வரவை உணர்த்தா நின்றதிறே. இத்தால்பசுப் ராயரான ஸம்ஸாரிகளை-சுத்தஸ்வபாவனுமாய்,*வார்த்தை யறியும வனுமாய், ஆசார்யபரதந்த்ரனுமாய், பரோபகார சீலனுமாய், அநவரதஹிதபரனுமானவாசார்யனை முன்னிட்டாலல்லது, அவன்றன்னுலும் ஸ்ரீகீதை,அபயப்ரதாநம், ஸ்ரீவராஹம், ஸ்ரீபாஞ்சராத்ரம் முதலானவற்றாலும் திருத்தித்தலைக்கட்ட வரிதென்கிறது. ஆகையிறே வணங்குந்துறையும் பிணங்கும் சமயமும் அணங்கும்பலபல வாக்கிமூர்த்திபரப்பினவிடத்திலும் மதிவிகற்புத்தணிந்து திருந்தாதாரையும் (௧) "நின்கண்வேட்கை யெழுவிப்பன்" என்றதும். பட்டர்;—(௨) "ஸ்ரீ ... -ம்ருக்யமத்யஸ்த்தவத்த்வம்" என்றருளிச்செய்ததும். ஆகையிறே வாடவேண்டிற்றும்.

(வாடியபிள்ளைகண்ணன்) பெண்களைக் காணுமையாலே வந்தவன் திருமேனியில் வாட்டமும், மஞ்சளும் மேனியும் வடிவும்

[illegible] இந்தத்வநிதான் - * பூங்கொள் திருமுகத்து [illegible] போலே திருவாய்ப்பாடியில் பெண்களுக் [illegible] ணர்த்துகைக்கு டலாயிறேயிருப்பது.

(வருகையில வாடிய பிள்ளை கண்ணன்) இப்படி வருகிறவளவில், பசுக்களின் பின்னே திரிந்த ஆயாஸம் பொறுத ஸௌகுமா யத்தாலும், பகலெல்லாம் பெண்களைப் பிரிந்து போகையாலுண்

டைய ஹார்தமான ப்ரயோஜநம் வேறேயு முண்டென்று காட்டுகிறார் (இந் வித்யாதி).

* ஸதைகரூப ரூபனானவனுக்கு ஒரு வாட்டம் வரக்கூடாமையாலே, லோகத்ருஷ்ட்யா ஒருஹேதுவும், வஸ்துஸ்வபாவத்தாலே ஒருஹேதுவுமருளிச் செய்து கொண்டர்த்த மருளுகிறார் (இப்படியித்யாதி). (தளர்த்தி) மாநஸிக க்லேசம். "என்பெண்ணோக்கிக் கண்டாள்" இத்யாதியைத் திருவுள்ளத்தில்

(௧) திருவி-௬௬. (௨) பட்டர் முக்தகம்.

 சுரிகையும்,

போலே இவர்களுக்கு அபிநிவேசஹேது வாயிருக்குமிறே. இவன் *யுவாகுமாரனுலு ம்“என்பெண்” என்றவிவளுக்குச் சிறுப்பிள்ளை யாயிறே தோற்றுவது, ஊரலர் பரிஹரிக்கத்தேடுகிறவளாகையா லே. (கண்ணன்) ஸாலபன்.பற்றுமஞ்சள் பூசும்படி ஸாலபனுகை யாலே அவர்கள்பூச, பட்டுப்படாத மஞ்சளும்,அந்த மஞ்சளுக்குப் பரபாகமான திருமேனியின் நிறமும், (வடிவும்) திவ்யமான அவ யவஸமுதாய சோபையும். அவன் வருகிற வழிக்கருகேநின்று, என்பெண் அபூர்வதர்ஶநஸாபேக்ஷையாய்க் கண்டாள். (நோக்கிக் கண்டாள்) விளையாடப்போகிறவள் புரிந்துநோக்கிக்கண்டாள். இவள் கண்டதுகண்டு இவ்வூராரும் “தங்களைப்போலே என் பெண்ணை

---

டாணதளர்த்தியாலும் வந்த வாட்டத்தையுடையனுய் நவயௌவ நனுயிருந்துள்ள க்ருஷ்ணனுடைய. (மஞ்சளும் மேனியுமித்யாதி) * பற்றுமஞ்சள் பூசும்படி ஸாலபனுகையாலே அவர்கள் பூச, பட் டுப்படாத மஞ்சளும், அதுக்குப்பரபாகமான திருமேனியின் நிற மும், திவ்யமான அவயவ ஸமுதாயசோபையும், அவன் வருகிற வழிக்கருகே நின்றவளான என்பெண், எல்லாரும் காண்கிறவோ பாதி கண்டாள். (நோக்கிக்கண்டாள்) விளையாடப்போகிறவள்

---

வைத்துக்கொண்டு, “பிள்ளை” என்றதுக்குத்

யாதி). “கண்ணன்” என்றபதத்தைக்

ளிச்செய்துகொண்டு தாத்பர்யமரு

படாத) என்றது-“மஞ்சளும் மேனியும்” என்று

பரமாக (ஞா) ம்ஸித்திக்கைக்காக வென்று கொளவது, “திருமேனியும் வடி வும்” என்றத்தால் பௌநருக்த்யம் தோன்றுகையாலே, கீழ் அவயவ சோபை யும், இதுஸமுதாயசோபையாக விவக்ஷித்து, “வடிவும்” என்ற ச(ஞ)கார த்தை ப்ராதாந்யத்திலேயாக்கி விசேஷித்தர்த்தமருளுகிறூர் (திவ்யமானவித் யாதி). “அருகேநின்றுள் என்பெண் கண்டாள்” என்றந்வயித்து, மேலே “நோக்கிக்கண்டாள்” என்றிருக்கையாலே இத்தை ஸாதாரணமாகக் காட்சி யாக வர்த்தமருளுகிறூர் (அவன்வருகிறவித்யாதி). ஸாதாரணமாகவாகிலும் கண்டாளென்று கீழே சொல்லி, புநঃ நோக்கிக்கண்டாளென்று சொல்லுகை யாலே,காண்கைக்குநடுவே விச்சேதம் சொல்ல வேண்டுகையால் அத்தையரு ளுகிறூர்(விளையாடவித்யாதி). மேலே “புணர்கின்றதே” என்றுரோபித்துப்

மூ.—குன்றெடுத்தாநிரை காத்தபிரான்
கோவலனாய்க் குழலூதியூதிக்
கன்றுகள்மேய்த்துத் தன்தோழரோடு
கலந்துடன் வருவானைத் தெருவில்கண்டு
என்று மிவனை யொப்பாரை நங்காய்
கண்டறியேனேடி வந்துகாணாய்
ஒன்றுநில்லா வளைகழன்று துகில்
ஏந்திளமுலையு மென்வசமல்லவே. (௪)

---

இவளும் கண்டாள்'' என்று வசைபாடத்தொடங்கி, இவ்வளவே யுள்ளுறையாக நடத்தாநின்றார்கள். இவ்வூரார் புணர்ப்புக்கெல்லாம் இப்பெண்ணும் இப்பிள்ளையுமோ விஷயம். இதுதான் * ஐயபுழுதிக்கு ஹேதுவுமாயிருக்கிறது.

இத்தால், ஆசார்யாபிமாநாந்தர்கதராயிருப்பார்க்கு பகவத்வைலக்ஷண்யதர்ஶநம் அஸஹ்யமென்று தோற்றுகிறது.... (௩)

அவ.—நாலாம்பாட்டு. இவன் வருகிறதைக்கண்டு ஒருவரையொருவர் அழைத்துக் காட்டிச்சொல்லுகிறது.

---

அபூர்வ தர்ஶநத்தாலே புரிந்து கண்வைத்துப்பார்த்தாள். (அதுகண்டிவ்வூரொன்று புணர்க்கின்றதே) இவள் கண்வைத்துப்பார்த்த அவ்வளவைக்கொண்டு, அவன் பக்கலிலே ப்ரவணையாய்ப் பார்த்தாளாகக்கொண்டு, இவ்வூரானது ஒன்றைத்தொடுத்து நடத்தாநின்றது. ஒன்று புணர்க்கையாவது-இவளுக்குமவனுக்கும் ஒரு ஸம்பந்தமின்றிக்கே யிருக்கச்செய்தே, உண்டானாப்போலே ஒன்றைக்கட்டிப் பிடித்துச் சொல்லுகை. ... .... (௩)

வ்யா;— நாலாம்பாட்டு. (குன்றெடுத்தாநிரை காத்தபிரான்) இந்த்ரன் பசிக்கோபத்தாலே கல்வர்ஷத்தை வர்ஷிப்பிக்

---

பழிசொல்லுகிறதாகச் சொல்லுகையாலே, இங்கே ''நோக்கிக்கண்டாள்'' என்றது-ப்ரணயத்தாலன்றிக்கே கண்டாளென்று விவக்ஷித்து, ஆனால் இவள் மீளககாண்கைக்கு ஹேதுவேதென்னு மாகாங்க்ஷை ஜநிக்குமாகையாலே அருளிச்செய்கிறார் (அபூர்வதர்ஶநத்தாலே) என்று. ... ... ... ... ...(௩)

அரு;—நாலாம்பாட்டு (குன்றித்யாதி), ஆநிரைகாக்கவேண்டினால் புல்லும் தண்ணீருமிருந்தவிடம்தேடி மேய்க்கையொழியக்குன்றெடுக்கவேணுமோ வென்னவருளுகிறார் (இந்த்ரனித்யாதி).. குன்றெடுத்துக்காத்தபின்போகோவ

ஸ்வா;—(குன்றித்யாதி). (கோவலனாய்க் குழலூதி, குன்றெடுத்து ஆநிரைகாத்தபிரான்) குன்றெடுத்ததோடு, குழலூதினதோடு, ஆநிரை காத்ததோடு, கன்றுகள் மேய்த்ததோடு வாசியற பரிவரானார் ஈடுபடாதபடி அநாயாஸம் தோன்றவிறே, குழலூதிற்றும். அன்றாகில், குன்றெடுக்கைக்கும் குழலூதுகைக்குமென்னசேர்த்தியுண்டு. பரிவரானார்க்குக்குழலூதுகிறத்வநியிலேதோற்றுமிறே, அநாயாஸத்வம்அநாயாஸத்வந்தனக்கும் ஹேது,ரக்ஷ்ய வர்கத்தில்தவறுதலில்லாமையிறே. அதாவது-பஞ்சலக்ஷம் குடியிருப்பிலும் தந்தாமுக்கென்று ஒரு படல் கட்டாமையிறே(க)"வெற்பையொன்றெடுத்தொற்கமின்றியேநிற்குமம்மான்" என்னக்கடவதிறே. கோவலனானவிறே குன்றெடுக்கவும் குழலூத

---

கப்புக்கவாறே (உ) "கல்லெடுத்துக்கன் மாரி காத்தாய்" என்கிறபடியே - முன்பு "ரக்ஷகம்" என்று சொன்ன மலை தன்னையே வர்ஷநிவாரணமான குடையாகவெடுத்து, ரக்ஷ்யவர்க்கமான பசுநிரையின்மேல் ஒரு துளி விழாதபடி ரக்ஷித்தவுபகாரகன். (கோவலனாய்) கீழ்ச்சொன்னதுக்கும் மேல் சொல்லுகிறதுக்கும் ஹேது இக்குடிப்பிறப்பிறே. "ஆய்" என்கையாலே-இடைத்தனத்தில் புரையில்லாமைசொல்லுகிறது. ஆகையாலிறே "ரக்ஷ்யவர்க்கமான பசுக்கள் நலுங்கவொண்ணாது" என்று ஏழுநாள் ஒருபடிப்பட மலையைச்சுமந்துகொண்டு நின்று ரக்ஷித்தது. இப்படிமலையைச்சுமந்துநின்ற

---

வனைதென்ன, "கோவலனாய்" என்றதை காகாக்ஷிந்யாயேந வருவிங்கித்துத் தாத்பர்யமருளுகிறார் (கீழ்ச்சொன்னவித்யாதி). "கோவலனாய்" என்றத்தாலே ஸர்வேஸ்வரன் கோபாலத்வத்தை யேறிட்டுக் கொண்டானென்று தோன்றுகிறது. இதுஇப்படியானால் பசுக்களை அதிப்ரயாஸகார்யங்களைச்செய்தாகிலும் ரக்ஷிக்கைக்குஹேதுவாமோ வென்ன, அதுஹேதுவானமையைஉபபாதிக்கிறார்(ஆயென்கையாலேயித்யாதிவாக்யத்வத்தாலே).(இடைத்தனத்தில் புரையில்லாமை) என்றது-இடையரைப் போலே பசுக்களிடத்தில் வ்யாமோஹத்தில் குறையில்லாமை யென்றபடி. இடைத்தனத்தில் புரையில்லாதவன் ஏழுநாள் மலையைச்சுமக்கக்கூடுமோ, அவனுக்கு அதிப்ரயாஸமென்று தோற்றிற்றாதோவென்ன, அதுக்கு ஆநிரையென்றபதத்தைக் கடாக்ஷித்துத் தாத்பர்யமருளுகிறார் (இப்படியித்யாதி). லோகத்திலும் பரதந்த்ரரை ரக்ஷிக்குமிடத்

---

(க) தி-வாய்-க-

(உ) திரு-நெ-கஅ.

வுமாவது. சக்ரவர்த்தித் திருமகனால் இவைசெய்ய வொண்ணாதி றே. "ஊதியூதி" என்கிறவர்தமாகத்தால்பாவ(ரூ) னையல்லவென்னு டம்தோற்றுகிறது. (கன்றுகள்மேய்த்துத் தன்தோழரோடு கலந்து டன் வருவானைத் தெருவில்கண்டு) கன்றுகளொன்றுபோலே பொ ன்றிராமையாலே கலந்துமேயும்போது முருத்தெரியுமே. இவன் * தன்னேராயிரம் பிள்ளைகளோடே கலந்து வருகையாலே குறித் துக்காண்கையிலுண்டான வருமையாலே கண்டென்கிறது. (கண் டு) கெடுத்த பொருள் கண்டாப்போலே. (தெருவில் கண்டு) இது விறேகுறை. "வீடேபோதீர்" என்னமாட்டாளே.

(என்றுமித்யாதி) நாள்தோறும் கன்றுகள் மேய்த்துவரக் காணாநிற்கச்செய்தேயும், ஒருநாளும்கண்டறியேனென்னும்போது,

---

விடத்தில் ஓராயாஸம் தோற்றிற்றில்லையிறே-ரக்ஷ்யவர்க்கத்தில் ஒருவர் தந்தாமுடைய ரக்ஷணத்துக்கு ஒரு யத்நம் பண்ணினாரில் லாமையாலே. (குழலூதியூதி) இதுவும் ஜாத்யுசித வ்ருத்தியிறே. வீப்ஸையாலே - பலகாலும் ஊதுமென்னுமிடம் சொல்லுகிறது, அதாவது-கன்றுகள் மேய்க்கைக்கும், கைசழியப்போகாதபடி மறி க்கைக்கும், ஊரைநோக்கி மீளுகைக்கு முடலாகப் பலகாலு மூது மிறே. (கன்றுகளித்யாதி) கன்றுகள் வயிறுநிறையும்படி மேய்த்து, கூடப்போன தன்னுடைய தோழன்மாரோடே "அவர்களிலொரு வன்" என்னலாம்படி கலந்துகூடவருகிறவனைத்தெருவிலேகண்டு.

(என்றுமித்யாதி) ஒருகாலத்திலும் இவனையொப்பாரைக்கண் டறியேன் நங்காய்; "ஏடி! வந்துகாணாய்" என்று-தனக்குத்தோழி

---

தில் ஆயாஸம் தோற்றுதேயென்று திருவுள்ளம். "கோவலனாய்" என்றதை மேலுக்கு ஹேது வென்றருளிச் செய்யாநின்றீர்; லோகத்தில் லீலார்த்தமாக எல்லாரும் குழலூதுவர்களிறே. அந்தக்குடிப்பிறப்பு - பசுக்களைக்காத்ததுக்கு ஹேதுவானாப் போலே, அதுக்கும் ஹேதுவாவானென்னென்ன வருளுகிறார் (இதுவுமித்யாதி). இடையர் ஜாதிக்கு அஸாதாரணமாக ஆதக்கண்டோமாகையாலே ஹேது வென்னலா மென்று திருவுள்ளம். "மேய்த்து" என்றது-வருகைக்குஹேது வென்று திருவுள்ளம் பற்றி, அதுஹேதுவானமை தோன்ற விசேஷிக்கிறார் (வயிறுநிறையும்படி) என்று. "தோழரோடுடன் வருவானை" என்னவமைந்திருக்க, "கலந்து" என்றதுக்குக்கருத்தருளுகிறார் (அவர்களி லித்யாதி).

விஷயம் நித்யாபூர்வமென்னுமது தோற்றுமிறே. "என்றும் இவனையொப்பாரைக் கண்டறியேன்" என்கையாலே உபமாநராஹித்யம் தோற்றுகிறது. "நங்காய்" "ஏடீ" என்கையாலே- உத்தேஸ்யை என்றும், வஸவர்திநியென்றும் தோற்றுகிறது. "நினைத்தகாரியம் தனக்குத் தலைக்கட்டித் தரவல்ல குணபூர்த்தியை யுடையவள்" என்றும் தனக்கவளோடுண்டானஐக்யமும்தோற்றுகிறது. (வந்து காணாய்) என்றது - எனக்காகவந்து காணாயென்றபடி. (எனக்காக) என்றது-உனக்காக வென்றபடி. "ஏடி" என்றது-ஏடீயென்றபடி. (ஒன்றுமில்லாவளை, கழன்று துகில்) துகில்கழன்றுவளையுமில்லா. (ஏந்திளமுலையு மென்வசமல்ல) அவன் தான்நிற்கிலும் வளையும்

யானவளையும் காணவழைக்கிறாள். "நங்காய்"என்கையாலே-நினைத்தகார்யம் தனக்குத் தலைக்கட்டித் தரவல்ல குணபூர்த்தியுடையவளென்னு மிடந் தோற்றச் சொல்லுகிறாள். "ஏடி" என்றது-தோழியென்றபடி. "எல்லேயுமேடியும் தோழியின் முன்னிலைப்பேர்" என்னகடவதிறே. (ஒன்றித்யாதி) அவனைக்கண்ட வநந்தரம் தனக்குப் பிறந்த விக்ருதியைச் சொல்லுகிறார்கள். (துகில்-கழன்று-வளை -ஒன்றுமில்லா) பரியட்டமும் மரையில் தொங்காதபடி கழன்று, கையில்வளைகளும் வலியநிறுத்திலும் ஒன்றும் நிற்கின்றனவில்லை. (ஏந்திளமுலையு மென்வசமல்லவே) ஏந்துதலையும் இளமையையுமுடைத்தான முலையும் என்னுடைய வசத்தில் நிற்கிறதில்லை. (௧) "கொங்கைகிளர்ந்து குமைத்துக் குதுகுலித்து ஆவியையாகுலஞ் செய்யும்" என்கிறபடியே தன்வசமாகக் கிளர்ந்து நலியாநின்றது.

"ஏடீ" என்றால் போராதோ ? "நங்காய்" என்னவேணுமோ வென்ன தாத்பர்யமருளுகிறார் (நங்கா யித்யாதி). (நினைத்தகார்யம்) க்ருஷ்ணஸம்ஶ்லேஷம். கண்டவநந்தரம் பிறக்கும் விக்ருதிகளிலே நாயகனிடத்தில் ஸங்கத்தாலே கழலுகிறதுகில் முந்துறவும், ததலாபப்ரயுக்த கார்ஶ்யம் அநந்தரமும் சொல்லவேண்டுகையாலே அந்வயிக்கிறார் (துகிலித்யாதி). "கழன்று" என்றது - கழ்ன்றதென்றபடி. அல்லாவிடில் "துகில் கழன்று" என்றல்யப்பூஷில் "வளையில்லா" என்றக்ரியை யோடே அந்வயிக்கக்கூடாதிறே, பி(ஹ)ந்நகர்த்ருகமாகையாலே. (ஏந்துதல்) ஔந்நத்யம். உன்வசமல்லாமல் அது என்செய்கிற தென்ன, அதுக்கு ப்ரமாணமுகேந தாத்பர்ய மருளுகிறார் (கொங்கையித்யாதி).

(௧) நா-தி-ரு-எ.

மூ.—சுற்றிநின்றாயர் தழைகளிடச்
சுருள்பங்கிநேத்திரத்தாலணிந்து
பற்றிநின்றாயர் கடைத்தலையேபாடவு
மாடக்கண்டேனன்றிப்பின்
மற்றொருவர்க்கென்னைப் பேசலொட்டேன்
மாலிருஞ்சோலை யெம்மாயற்கல்லால்
கொற்றவனுக்கிவளா மென்றெண்ணிக்
கொடுமின்கள்கொடாதொழிகிற்கோழம்பமே (௫)

கலையும் நில்லா. பாகனைவிசாய்ந்தவானை நிற்கிலும், கச்சுவிசாய்ந்த
விவை என்வசத்தில் நிற்கிறனவில்லை.

ஸ்வா;—அஞ்சாம்பாட்டு. (சுற்றியித்யாதி) திருத்தோழன்
மாரானவர்கள் அத்யந்தஸ்நேஹிகளாய்ச் சூழ்ந்துகொண்டு நின்று
வர்ஷாதப பரிஹாரமான குடைகளைக்கொண்டு நிற்கவென்னுதல்.
தழைத்தகொம்புகளைக்கொண்டு நிற்கவென்னுதல். சுருண்ட திருக்
குழல்களையெடுத்துக்கட்டிச்சூழப்பீலித்தழையாலே அலங்கரித்து.
(பற்றிநின்றாயர்கடைத்தலையே பாடவுமாடக்கண்டேன்) ஆயர்

வ்யா;-அஞ்சாம்பாட்டு. (சுற்றிநின்றாயர் தழைகளிட) திருத்தோ
ழன்மாரான வாயர் அத்யந்த ஸ்நேஹிகளாய்ச் சூழ்ந்துகொண்டு
நின்று வர்ஷாதப பரிஹாரமான குடைகளைத்தன் திருமேனிக்கு
அநுகுணமாகப் பிடிக்க. (சுருள்பங்கி நேத்திரத்தாலணிந்து) சுரு
ண்ட திருக்குழலை யெடுத்துக்கட்டி, சூழப்பீலிக்கண்களாலே யல
ங்கரித்து. (பற்றிநின்றாயர் கடைத்தலையேபாடவுமாடக்கண்டேன்)

"கோவலனாய்க்குன்றெடுத்தித்யாதி - தெருவில் கண்டிருக்கிற வென
க்குத் துகில் கழன்றது; வளையொன்றும் நில்லா; எந்திளமுலையும் என்வச
மல்ல; என்று மிவரை யொப்பாரைக் கண்டறியேன் நங்காய், எழவந்து
காணாய்" என்றநவயம். ... ... ... ... ... ... (௪)

அரு:—அஞ்சாம்பாட்டு. (சுற்றியித்யாதி) "ஆயர்சுற்றி நின்று - தழை
களிட" என்றந்வயித்தர்த்தமருளுகிறார்(திருத்தோழன்மாரித்யாதி). "சுருள்
பங்கிகளைச் சுருள் நேத்திரத்தாலணிந்து" என்றந்வயித்து, சப்தார்த்தமரு
ளுகிறார் (சுருண்டவித்யாதி). "நேத்திரம்"-நேத்ரம். அத்தாலேபீலிக்கண்கள்
விவக்ஷித மென்று திருவுள்ளம். "பற்றிநின்று" என்றதுக்கு இரண்டர்த்தம்;
மாநஸிகமாகவும் காயிகமாகவுமான பொருத்தமென்று. இத்தை அடை

தலைக்கடையிலேநெஞ்சுபொருந்திநின்றுபாடவுமாடவுங்கண்டேன் "ஆயர் தலைக்கடை" என்றது - எங்கள் தலைக்கடையென்றபடி.

இப்படிப்பட்டஇவனுக்கொழிய வேறொருவர்க்கு என்னைப்பேச லொட்டேன். நீங்கள் நினைத்திருக்கில் செய்யலாவதில்லையே. நீங் கள்வாய்விடில் நான் முடிவன். ஆனால் நீதான் குறித்தது யாரை யென்ன; அவனுக்கு ஓரடியுடைமை சொல்ல வேண்டி, மாலிருஞ்

---

ஆயர் தலைக்கடையிலே நெஞ்சுபொருந்திநின்று பாடவும் ஆடவும் கண்டேன்; அன்றிக்கே, (பற்றிநின்ற) என்றது - தலைக்கடையைப் பற்றிநின் றென்னவுமாம். (ஆயர்கடைத்தலை) என்றது - நம்முடைய தலைக்கடை என்றபடி.

(அன்றிப்பின் மற்றொருவர்க்கென்னைப் பேசலொட்டேன்) இப்படிப்பட்டவிவனுக்கொழிய வேறொருவர்க்கென்று என்னைச் சொல்லவொட்டேன். நீங்கள்நினைத்திருக்கில் செய்யலாவதில்லை. நீங்கள் வாய்விடில் நான் முடிவன். (௧)"மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழகில்லேன்" என்னுமாபோலே சொல்லுகிறாள். இப்படி இவள் சொன்னவாறே, இவள் தன்னினைவை இவள் வாயாலே கேட்கைக்காக "எவனுக்கொழியவென்று நீசொல்லுகிறது" என்ன; (மாலிருஞ்சோலை யெம்மாயற்கல்லால்) என்கிறாள். "க்ருஷ்ணனுக்கு" என்னாதே இப்படிச் சொல்லிற்று - இவனுக்கு ஓரடியுடைமை சொல்லுகைக்காக. அடியுடைமை சொல்லும்

---

வேயருளுகிறார் (ஆயர்தலைக்கடை யித்யாதிவாக்யத்வயத்தாலே). தானும் ஆய்ச்சியாயிருந்து, தானுய்ச்சியல்லா தவளைப்போலேஆயர்கடைத்தலை யென்னக்கூடுமோ வென்ன வருளுகிறார் (ஆயரித்யாதி).

நினைக்கவொட்டேனென்னாதே "பேசலொட்டேன்" என்றதுக்குத்தாத்பர்யமருளுகிறார் (நீங்களித்யாதி). பேசினால் தான் நீசெய்யத் தக்கதே தென்ன வருளுகிறார் (நீங்கள்வாயித்யாதி). இவளைப்போலே இப்படிச் சொன்னவர்களுண்டோ வென்னவருளுகிறார் (மானிடவரித்யாதி). (இப்படிஇவள் சொன்னவாறே) என்றதுக்குத்தான் தலைக்கடையிலேகண்டுவந்து அகத்திலே தாய்மாரோடே ஸாமாந்ய மாகச் சொன்னவாறே யென்றபடி. (எம்மாயற்கு) என்றது - க்ருஷ்ணனுக்கென்றபடி. (இப்படிச்சொல்லிற்று) என்றது - மாலிருஞ்சோலையிட்டு விசேஷித்துச் சொன்ன தென்றபடி. (அடியுடைமை) என்றது - வம்சமென்றபடி. கோ(ஸ்ரீ)த்ரஸம் பந்த மென்

---

(௧) நா-தி-௧-௫.

சோலைபோலே என்னையும் தனக்கு அஸாதாரணையாகவுடைய ஆஶ்சர்ய சக்தியுக்தனுக்கல்லாவென்கிறாள். திருவாய்ப்பாடியிலுங் காட்டில் திருமாலிருஞ்சோலைமலை அவனுக்கு அஸாதாரணம்போலே காணும். (ஆயரித்யாதி) அந்யசேஷத்வ மறுத்தாளவல்லவன் வர்திக்கிறவிடம். அவதாரங்களில் உத்தேஶ்ய ஸ்தலம் சொல்லும்போது பரமபதமென்ன வொண்ணாதே; மாலிருஞ்சோலையென்னவேணுமே. (௧) "திருவிளையாடு திண்டோள் திருமாலிருஞ்சோலை நம்பி" என்னு குணபூர்தியுள்ளதும் இங்கேயிறே. (௨) "மாலிருஞ்சோலை நம்பிக்கு- வாய்நேர்ந்துபராவி வைத்தேன்" என்கிறவிடத்தே என்னையும் சேர்க்கப் பாருங்கோளென்கிறாள். அவர்கள் க்ருஷ்ணனுக்கென்றாலும் இவர்தாம் மாலிருஞ்சோலையென்றிறே அருளிச்செய்வது.

(கொற்றவனுக்கு) கொற்றம் - வெற்றி. நீங்கள் கொடுத்திலீகோளாகிலும் தனக்கென்றது விடாதவன். (௩) "அண்ணாந்திருக்க

---

போது ஒரு கோத்ர ஸம்பந்தம் சொல்லவேணுமிறே. மாலிருஞ்சோலைபோலே என்னையும் தனக்கு அஸாதாரணையாக்கிக்கொண்ட ஆஶ்சர்ய சக்தியுக்தனுக் கொழியவென்றபடி. திருவாய்ப்பாடியிலுங்காட்டில் திருமாலிருஞ்சோலை தனக்கு அஸாதாரண தேசம் போலேகாணும். அவதாரகாலமித்தனையுமிறே யங்கு; நித்யஸந்நிதி இங்கேயிறே.

(கொற்றவனுக்கு) கொற்றம்-வெற்றி. நீங்கள் கொடுத்திலீகோளாகிலும் "தனக்கு" என்றது விடாதவனுக்கென்கை. * அண்ணாந்தி

---

றதுசாடு. சாடுவாக ஒருதாத்பர்யமருளிச்செய்து, த்ருஷ்டாந்தார்த்தம் விசேஷித்ததென்று தாத்விகமான தாத்பர்யத்தைக்காட்டாநின்றுகொண்டு சப்தார்த்த மருளுகிறார் (மாலிருஞ் சோலையித்யாதி). * த்ருஷ்டாந்தம் சொல்லவேண்டினால் திருவாய்ப்பாடியைச் சொல்லவமைந்திருக்க, திருமாலிருஞ்சோலையைச் சொல்லவேணுமோ வென்கிற சங்கையைப் பரிஹரியாநின்றுகொண்டு ஈடுபடுகிறார் (திருவாய்ப்பாடியிலு மித்யாதி),

"கொடுமின்கள்" என்றத்தைத் திருவுள்ளம்பற்றி, அவனுக்கென்றதே, "கொற்றவன்" என்றதுக்குக்கருத்தருளுகிறார் (நீங்களித்யாதி). (தனக்கென்ற வஸ்துவைவிடாதவன்) என்றதுக்கு ருக்மிணீகல்யாணத்தில் அப்படியை ப்ரமாணமுகேந காட்டுகிறார் (அண்ணாந்தித்யாதி). "அண்ணாந்து" என்றது

---

(௧) நா-தி-௯-௩. (௨) நா-தி-௯-௯. (௩) நா-தி-௧௧-௯.

வே - தன்னிதன்னைக்கைப்பிடிப்பான்"(௧)"[illegible]-சிசுபால
விஶிஷ்டாய" (௨)"தனிவழிபோயினாள்" என்னாமல், இவளாமென்
றெண்ணிக் கொடுமின்கள். (௩) "[illegible] -
துல்யஶீலவயோவ்ருத்தாம்" (௪)"[illegible]-
இயம் ஸீதா மமஸுதா ஸஹதர்மசரீ தவ" - தன்னை ஒரு ஜநக
குலத்திலே பிறந்தாளாகவும், பெரியாழ்வார்வயிற்றில் பிறந்தாளா
கவும் நினைத்திருக்கிறாள் அவனைக்கண்டபின்பு திருவாய்ப்பாடியில்
பிறப்பை மறந்தாள்போலே காணும். (கொடீராகில் கோழம்பமே)
நீங்கள் குழம்பினிகோளாமித்தனை. நான் போகத் தவிரேன். குரு
தர்ஶநத்தில்முடிந்த சி(ட)ந்தயந்தியைப்போலேயு மிருப்பாளொ

---

ருக்கவேயாங்கவளைக்கைப் பிடித்தவனிறே. (இவளாம் என்றெ
ண்ணிக் கொடுமின்கள்) தனிவழிபோயினா ளென்னுஞ்சொல் வாரா
தபடி, (௩) "[illegible]- துல்யஶீலவயோவ்ருத்தாம்"
என்கிறபடியே- "அவனுக்கு இவள் அநுரூபை" என்று நினைத்து,
(௪)"[illegible]-ஸஹதர்மசரீதவ-ப்ரதீச்சசைநாம்"
என்கிறபடியே கொடுங்கோள். (கொடீராகில் கோழம்பமே) அப்
படிக்கொடிகோளாகில் நீங்கள் குழம்பினிகோளா மித்தனை; நான்
போகைதவிரேன். சிந்தயந்தியைப்போலே யிருப்பாளொருத்தி

---

வாயைத்திறந்துகொண்டு ஆகாசத்தைப்பார்த்தென்றபடி. இதுசிசுபாலனிரு
ந்தபடி. "கொற்றவனுக்கு" என்று நீ அவனுடைய வெற்றியைச் சொல்லா
நின்றாய்; அவனப்படிக்கொண்டுபோனால் போகிறான்; நாங்கள் கொடுக்கமாட்
டோமென்ன; அவர்களுக்குக் கருத்தாக விவக்ஷித்துத் தாத்பர்யமருளுகிறார்
(தனிவழியித்யாதி). மேலே "கொடீராகில் கோழம்பமே" என்று "தான்
போகைதவிரேன்" என்று சொல்ல நினைத்தவளாகையாலே, இங்கே "கொடு
மின்கள்" என்றதுக்கு "தனிவழி போயினாளென்னுஞ்சொல்வாராதபடி"
என்று கூட்டியருளினாரென்று கண்டுகொள்வது. (குழம்பினி கோளாமித்
தனை) கலங்கினி கோளாமித்தனை; ஸம்ப்ரமித்திகோளாமித்தனையென்றபடி.
பலிதார்த்தம் (நானித்யாதி). "பெற்றவர்கள் 'நான் போகத் தவிரேன்'
என்றால், போகவொட்டுவர்களோ, தகையாரோ?" என்று ஶ்ரோத்தாக்கள்
கேட்க, த்ருஷ்டாந்தமும் காட்டா நின்றுகொண்டு உட்கருத்தைக் காட்டுகி
றார் (சிந்தயந்தீத்யாதி வாக்யத்ரயத்தாலே). ... ... ... (௫)

---

(௧)(௨) பா-தி-௧௨-௩. (௩) ரா-ஸு-௧௬-௬ (௪) ரா-பா-௭௩-௨௬.

மூ.—சிந்துரமிலங்கத்தன் திருநெற்றி மேல்
திருத்தியகோறம்புந் திருக்குழலும்
அந்தரமுழவத் தண்டழைக் காவின்கீழ்
வருமாயரோடுடன் வளைகோல்வீச
அந்தமொன்றில்லாத வாயப்பிள்ளை
யறிந்தறிந்திவ்வீதிபோதுமாகில்
பந்துகொண்டானென்று வளைத்துவைத்துப்
பவளவாய் முறுவலுங் காண்போம்தோழீ.

ருத்தி காணும் இவள். (க) "ஸர்வாங்கோபாங்கபரித்யஜ்ய - ஸர்வாங்கோபாங்கபரித்யஜ்ய" என்றும் (உ) "நிரயோ யஸ்த்வயா விநா-நிரயோயஸ்த்வயாவிநா" என்றும், உங்கள் குழப்பம் நிஷ்ப்ரயோஜநம்; முடிவோடே தலைக்கட்டும். ... ... .... .... .... (௫)

ஸ்வா;—ஆறும்பாட்டு; வேறே ஒருத்தி இனிஸ்த்ரீத்வம் பேணியிருக்கமாட்டேனென்கிறாள்.

ஸ்வா.—(சிந்துரமித்யாதி) மிகவும் சிவந்த ஸிந்துரப் பொடியைத் திருநெற்றியிலேசாத்தி; (௩)"சிந்துரச்செம்பொடிப்போல்" அதுக்குமேலாகத் தனக்குத் தகுதியாகச் சமைந்த திருக்கோறம்புஞ்சாத்தி- அதுக்குப் பரபாகமான திருக்குழலும் ஒருநீலரத்நமாலை போலே காணுமிவள். ஆனபின்பு, உங்கள் குழப்பம் நிஷ்ப்ரயோஜநம்; முடிவோடே தலைக்கட்டுமென்கிறாள். (கோழம்பம்) குழப்பம்.

வ்யா—ஆறும்பாட்டு. (சிந்துரமிலங்கத்தன் திருநெற்றிமேல்) (௪) "நாள்மன்னுவெண்டிங்கள்கொல்நயந்தார்கட்குநச்சிலைகொல்" என்னும்படியான அழகையுடைய தன் திருநெற்றிக்குமேலே, அதுக்குப் பரபாகமாம்படி சாத்தின ஸிந்தூரசூர்ணமானது விளங்க. (திருத்திய கோறம்பும் திருக்குழலும்) அதுக்குமேலே திருந்தச்சாத்தின திருக்குறம்பமும், அதுக்குப் பரபாகமான திருக்குழற் கற்றையும் விளங்க. கீழ், "இலங்க" என்றது - இங்கும் வரக்

அரு;—ஆறும்பாட்டு. (சிந்துரமித்யாதி) "தன் திருநெற்றிமேல் - சிந்துரமிலங்க" என்றந்வயித்து, "தன்" என்று விசேஷித்ததுக்கு ப்ரமாணமுகேந தாத்பர்யமருளுகிறார்(நாள்மன்னுவித்யாதி), (கோறம்பமும்)திருநெற்றியில்

(க) ரா-ஸு-கக-கக. (உ) ரா-அ-௩0-க௮.
(௩) நா-தி-௬-௧. (௪) தி-வாய்-எ-எ-எ.

போலேதோன்ற. (அந்தரமுழவ) ஆகாசமெல்லாம் வாத்யகோஷங்களாலே முழங்க. (க) "* மத்தளங்கொட்ட வரிசங்கம் நின்றூதவருகின்றான்" என்றது ஸ்வப்நம். இது ப்ரத்யக்ஷம். (தண்டழைக்காவின்கீழ்) தழை-குடை; அன்றியே, குளிர்ந்தபசுத்தழைக்காவின்கீழே. (வருமாயரோடுடன்) வருகின்ற * தண்ணேராயிரம் திருத்தோழன்மாரோடேகூட. (வளைகோல்வீச) ஒருவர்க்கொருவர் வெற்றிக்காட்டி வளைதடியெறிந்துகொள்ள.

(அந்தமொன்றில்லாதவாயப்பிள்ளை) பிள்ளைத்தனத்தில் முடிவொருவகையாலும் காணவொண்ணாதவிடைப்பிள்ளை. அவதாராந்தரங்களையும் பரத்வாதிகளையும் பரிச்சேதித்தாலும் இவனுடைய பாலசேஷ்டிதங்களில் ஒரொன்றை முடிவு காணப்போகாது. அதாவது - இவன் செய்தவையெல்லாம் அபி

கடவது. (அந்தரமுழவம்) ஆகாசமெல்லாம் வாத்ய கோஷங்களாலே முழங்க; "முழவம்" என்று-மத்தளமாய், அதினுடைய முழக்கம் அத்யாஹார்யமாய்க் கிடக்கிறது. (தண்டழைக்காவின் கீழ்) குளிர்ந்த பீலிக்குடையாகிற சோலைக்கீழே. (வருமாயரோடுடன்) தன்னுடனே வருகிற திருத்தோழன்மாரான ஆயரோடேகூட. (வளைகோல்வீச) ஒருவர்க்கொருவர் வெற்றிக்காட்டி வளைதடியெறிந்துகொண்டு.

(அந்தமொன்றில்லாத வாயப்பிள்ளை) ஒப்பனையழகும் வருகிற அலங்காரமும் லீலாவ்யாபாரமும் ஓரொன்றே எத்தனையேனுமளவுடையாராலும் எல்லைகாண வொண்ணாத இடைப்பிள்ளை.

சாத்துகிற பொற்பட்டமும். (வெற்றிக்காட்டி) என்றது - ஜயத்தை ஸூசிப்பிக்கைக்காக வென்றபடி.

"அந்தமில்லாத" என்ன வமைந்திருக்க, "ஒன்று" என்று சொல்லுகைக்கும் பலவுண்டோவென்ன, கீழையெல்லாம் கடாக்ஷித்துத் தாத்பர்யமருளுகிறார். (ஒப்பனையித்யாதி). (வருகிற வலங்காரம்) என்றது- தோழரோடு வரும் சேர்த்தியழகென்றபடி. (அளவு) ஜ்ஞாநம், "ஆகில்" என்று-வருகையிலருமை தோன்றச்சொல்லுகைக்கு, வரக்கூடாதோவென்று சங்கையைப்பரிஹரியா நின்று கொண்டு "அறிந்து" என்ற பதம்

(க) நா-தி-கூ-கூ.

மதமாய்த் தோற்றுகையிறே. இவன்தான் (க) "இந்திரனுள்ளிட்ட தேவர்குழாம்" என்றாப்போலே காணும் வருமாயர் திரளை நினைத்திருக்கிறது; அவளுக்கு இதுப்ரார்த்தநீயம். (உ) "ஆய்ப்பாடிக்கே யென்னையுய்த்திடுமின்" என்கையாலே. (அறிந்தறிந்திவ்வீதி போதுமாகில்) தன்னையொழிய எனக்குச் செல்லாமையும் என்னையொழியத்தனக்குச் செல்லும்படியுமான தீம்புகளையுமறிந்தறிந்து. மநோரத ஸமயத்திலும் ப்ரணய ரோஷம் நடவாநின்றதிறே, மார்தவாதிசயத்தாலே.

(பந்துகொண்டானென்று வளைத்துவைத்து) அஸங்கதங்களைச்சொல்லி வளைத்து வைத்து;(௩) "கழகமேறேல்" என்பன்; அன்றியே,"நாங்கள் விளையாடுகிறபோது எங்கள் விளையாட்டுப்பந்தைப்பறித்துக்கொண்டு போனாய்" என்பதினென்னவுமாம்; இதுவும் அவனோடு இட்டீடுகொள்கைக்கு ஹேதுவாமித்தனையிறே. அன்றிக்கே, தன் கையில் பந்தை அவன் மடியிலெறிந்து சொல்லுகிறாளென்னவுமாம். (பவளவாய் முறுவலும் காண்போம்) நாம்

(அறிந்தறிந்திவ்வீதி போதுமாகில்) தன்னையொழிய வெனக்குச் செல்லாமையும், என்னையொழியத் தனக்குச்செல்லும்படியான தீம்புகளையுமறிந்தால் இத்தெருவில்வரக்கூடாது; இவற்றையறிந்துவைத்தும் இத்தெருவே வந்தானாகில்.(பந்துகொண்டானென்று வளைத்துவைத்து) "திரளிலே நாம் அவனை வளைக்கும்படியென்?" என்று நீ நினைக்கவேண்டா; "நாங்கள் விளையாடுகிறபோது எங்கள்பந்தைப் பறித்துக்கொண்டு போனான்" என்று சொல்லிப் போகாதபடி தடுத்து வைத்து. (பவளவாய் முறுவலும் காண்போம் தோழி) "நாம் இப்படிச் செய்தவாறே, அவன் கால் வாங்

கர்மஸாகாங்க்ஷமாகையாலே, அத்தையும்தார்ஸிப்பிக்கிறார் (தன்னையொழிய வித்யாதி).வளைத்து வைத்தென்று சொல்லவமைந்திருக்க, "பந்துகொண்டான்" என்று சொல்லுகைக்குத் தாத்பர்யம் (திரளிலேயித்யாதி). லோகத்தார்க்காகப் பந்து கொண்டானென்று சொல்லி, என்னிடத்திலே வ்யாமோஹத்தாலே வளைத்தபடி யென்னென்று அவனுக்கு ஹர்ஷம் ஜநித்து ஸ்மிதம் பண்ணுமென்று திருவுள்ளம்பற்றி, அத்தை உபபாதித்துக் கொண்டர்த்தமருளுகிறார் (நாமிப்படியித்யாதி). ... ... ... (௯)

(க) நா-தி-௯-௩. (உ) நா-தி-௧உ-உ. (௩) தி-வாய்-௯-உ-௯.

மூ.—சாலப்பன்னிரைப்பின்னே தழைக்காவின்கீழ்த்
தன்திருமேனி நின்றொளிதிகழ
நீலநன்னறுங்குஞ்சி நேத்திரத்தா
லணிந்து பல்லாயர் குழாநடுவே
கோலச்செந்தாமரைக்கண் மிளிரக்குழலூதி
யிசைபாடிக் குனித்தாயரோ
டாலித்துவருகின்ற வாயப்பிள்ளை
யழகுகண்டென்மக ளயர்க்கின்றதே. (எ)

---

காணுதலையெல்லாம் காண்போம்; நமக்கொரு அபூர்வ தர்மநமு ண்டாம்; அந்த மந்தஸ்மிதத்துக்கு முகம்கொடுக்கக் கடவோமல் லோம்;" நீர் எங்களை ஆராதநிணைத்துத்தான்மந்தஸ்மிதம் செய்கிறீர்; இது எங்கள் வீதிகாணும், நீர் ப்ர(ப்ரு)மித்தீரோ?" என்று சொல் லக்கடவோமென்று மநோரதிக்கிறாள். இந்தமநோரதம் மெய்யா னுலிறே இவள் ப்ரதிஜ்ஞை நிலைநின்றதாவது. .... (சு)

ஸ்வா;— ஏழாம்பாட்டு. (சாலவித்யாதி) மிகவும் பலநிரைப் பின்னே; ஒருதிற மொன்றாகவெண்ணிலும் பரிகணிக்கவொண் ணுத நிரைப்பின்னே; (தழைக்காவின் கீழ் தன் திருமேனிநின்றொளி

---

கிப் போகாமேநின்று மந்தஸ்மிதம் பண்ணுமே, அப்போது அவனு டைய பவளம் போலேயிருக்கிற திருவதரத்துக்குப் பரபாகமான முறுவலையும், தோழி! நாம் கண்டநுபவிக்கக்கடவோம்" என்று மநோரதிக்கிறாள். .... ... ... ... ... (கூ)

வ்யா,—ஏழாம்பாட்டு. (சாலப்பன்னிரைப் பின்னே) மிகவும் பலவானபசு நிரைகளின்பின்னே. ஓரொருதிறமாகவெண்ணிலும் பரிகணிக்க வொண்ணுதபடியாய்த்து கோ(ஸ)ம்ருத்திதானிரு க்கும்படி.! இப்படியிருக்கிற பசுநிரையை முன் நடக்கவிட்டு, பிற் கூழையிலே யாய்த்து இவன்றான் வருவது. (தழைக்காவின்கீழ்) பீலிக்குடைச் சேர்லைக்கீழே. (தன் திருமேனி நின்றொளிதிகழ)

---

அரு;—ஏழாம்பாட்டு. (சாலவித்யாதி) "சால" என்றும், "பல்" என் றும் அநேகத்வவாசியாகையாலே பௌநருக்த்யம் பரிஹரிக்கிறார் (மிகவுமித் யாதி). பீலிக்குடைக்கும் இவன் திருமேனிக்கும் ஒரு பரபாகம் சொல்லக் கூடாமையாலே, 'விளங்க" என்றதுக்கு - வேறே ஹேதுக்களைக் காட்டிக்

திகழ) (க) "தேவும் தன்னையும்" என்கிற திருமேனி நின்றொளி திகழ, தனைநிறமும்தன்னிறமும் விகல்பிக்கலாம்படியாக, (நீலநன்னறுங்குஞ்சிநேத்திரத்தாலணிந்து)நெய்த்துக்கருகிப்பரிமளிதமான திருக்குழலைப் பீலிக்கண்ணாலே அலங்கரித்து.

(பல்லாயர் குழாநடுவே கோலச்செந்தாமரைக் கண்மிளிர) அநேகமான வாயர் திரளுக்கு நடுவே சிவந்து தர்ஶநீயமாயிருக்கிற திருக்கண்கள் திருத்தோழன்மாரோடேஉறவுதோன்றமிகவும் கடாக்ஷிக்க, (குழலூதி இசைபாடிக் குனித்து)திருவாய்ப்பாடியில் பசுக்கள் வயிறுநிறைய மேய்ந்து மீளப் பெறுகையாலும், "பெண்களோடே கலக்கைக்கிடான காலம் வந்தது" என்னுமத்தாலுமுண்டான வுகப்பாலே தன்னுடைய திருமேனியானது நின்றொளி விளங்க, (நீலநன்னறுங்குஞ்சி நேத்திரத்தாலணிந்து) நீலமான நிறத்தை யுடைத்தாய், சுருட்சியாலும் நீட்சியாலுமுண்டான நன்மையை யுடைத்தாய், பரிமளிதமாயிருந்துள்ள திருக்குழலைப்பீலிக் கண்களாலே அலங்கரித்து, (பல்லாயர் குழாநடுவே) அநேகமான ஆயர் திரளுக்கு நடுவே,

(கோலச்செந்தாமரைக் கண்மிளிர) தர்ஶநீயமாய்ச் சிவந்த தாமரைபோலே யிருக்கிற திருக்கண்களானவை மிளிர, இத்தால் திருத்தோழன்மாருடைய திரளை இடம் வலங்கொண்டு பார்த்து மகிழ்ந்துகொண்டு வரும்படி சொல்லுகிறது, (குழலூதி யிசைபாடிக்குனித்து) (௨) "ஆமருவினநிரை மேய்க்க நீ போக்கு ஒரு பக

கொண்டு "தன்" என்றதுக்குத் தாத்பர்யார்த்த மருளிச் செய்கிறார் (பசுக்களித்யாதி).

உறங்கினகண்ணை மிளிரவென்ன வேணு மொழிய, ஆநிரைப்பின்னே வரும்போது மிளிருகையாவதென் னென்னக் கருத்தருளுகிறார் (இத்தாலித்யாதி). குழலூதுகை-பசுக்களை மேய்க்கைக்கும், மறிக்கைக் காகவும், ஊரேற மீளுகைக்காவுமிறே. இங்கேபசுக்களெல்லாம் மீண்டு வரும்போது குழலூத ப்ரயோஜநமென் னென்ன, அதுக்கு மூன்றுவகையால் ப்ரயோஜநம் காட்டா நின்று கொண்டு அர்த்த மருளுகிறார் (ஆமருவியித்யாதி). "அயர்ப்பு" -விஸ்ம்ருதியர்கையாலே, எத்தைவிஸ்மரித்தாளென்னுமாகாங்க்ஷையிலே, "என்

(க) தி-வாய்-௨-எ-௪. (௨) தி-வாய்-௧0-௩-

மூ.—சிந்துரப்பொடிக்கொண்டு சென்னியப்பித்
திருநாம மிட்டங்கோ ரிலையந்தன்னால்
அந்தரமின்றித் தன்னெறிபங்கியை
யழகியநேத்திரத்தாலணிந்து

பெண்களோடுண்டான பா(ஞ)வபந்தம் தோன்றவும், ப்ரணயரோஷபரிஹாரமாகவும் திருக்குழலூதி, அதுக்குச்சேர்ந்த விசைகளையும் பாடி, அதுக்குச்சேர்ந்த கூத்துக்களையுமாடி. (ஆயரோடலித்து வருகின்ற வாயப்பிள்ளை) ஆயரோடேகூட மேனாணிப்புத்தோன்ற கர்வித்துவருகின்ற இடைப்பிள்ளையுடைய ஸௌந்தர்ய பூர்த்தியைக்கண்டு, (என் மகளயர்க்கின்றதே) தன்னுடையகுடிப்பிறப்பையும் ஸ்த்ரீத்வத்தையும் மறந்து, என்னுடைய நியந்த்ருவத்தையும்மதியாமல் ஈடுபடுவதே. இந்த வயர்ப்புக்குநிதாநம் யாதொன்று, அதுதானே பரிஹாரமாமித்தனையிறே. .... .... (எ)

லாபிரமுழி'' என்னும்படி பகலெல்லாம் தன்னைப்பிரிந்து நோவுபட்டுக்கிடந்த பெண்கள் தான் வருகிறவையுமறிந்து கொந்தளிக்கும்படியாகவும், அவர்களைப் பிரிகையாலே தனக்குண்டான ஆர்த்தியெல்லாம் தோன்றும்படியாகவும், ப்ரணயரோஷம் கொண்டாடியிருப்பார் நெஞ்சில் மறம் தீரும்படியாகவும், தக்க பாசுரங்களை வைத்துத் திருக்குழலூதி, அதுக்கு அநுரூபமான இசைகளையும் பாடி, (க) 'கூத்தன் கோவலன்'' என்கிறபடியே வருகிறபோதை நடையழகாலே வல்லாராடினாற்போலேயாடி. (ஆயரோடாலித்து வருகின்ற வாயப்பிள்ளை) இப்படியே கீழ்ச்சொன்ன தோழன்மாரான வாயரோடேகூடி மேனாணிப்புத்தோன்ற கர்வித்துவருகிற இடைப்பிள்ளையுடைய. (அழகுகண்டென் மகளயர்க்கின்றதே) அவனுடைய வடிவழகைக் கண்டமாத்ரங்கொண்டுகாணும் என்னுடைய பெண்பிள்ளையானவள் தன்னுடைய குடிப்பிறப்பையும் ஸ்த்ரீத்வாபிமாநத்தையும் என்னுடைய நியந்த்ருத்வத்தையும் நிரூபிக்கக்ஷமையல்லாதபடி அறிவழிகிறது. .... ... (எ)

மகள்'' என்றவிடததில் அபிப்ரேத மான வர்த்தத்தைக் காட்டிக் கொண்டருளுகிறார் (இவனுடைய வித்யாதி). ... ... ... (எ)

(க) தி-வாய்-கo-க-

இந்திரன்போல் வருமாயப்பிள்ளை யெதிர்நின்றங்
கினவளை யிழவேலென்னச்
சந்தியில்நின்றுகண்டீர் நங்கைதன் துகிலொடு
சரிவளைகழல்கின்றதே. (அ)

---

ஸ்வா;—எட்டாம்பாட்டு. (சிந்துரப்பொடியித்யாதி) சாதிலிங்கப்பொடிக் கொண்டு திருமுடியிலே சாத்தி; அழகிய விலையாலே திருநெற்றியிலே பற்றும்படி அத்விதீயமான திருநாமமாக

---

வ்யா.—எட்டாம்பாட்டு. (சிந்துரப்பொடிக்கொண்டு சென்னியப்பி) சாதிலிங்கப்பொடிக்கொண்டு திருமுடியிலேசாத்தி. கீழ், "சிந்துரமிலங்கத்தன் திருநெற்றிமேல்" என்று ஸிந்தூரசூர்ணத்தைத் திருநெற்றியிலே விளங்கும்படி திலகமாகச்சாத்தினபடி சொல்லிற்று; இங்கே, "சென்னியப்பி" என்கையாலே திருமுடியிலே திருக்குழல்மேலே அலங்காரமாகக்கொண்டு பரக்கச்செறியச் சாத்தினபடி சொல்லுகிறது. (திருநாமமிட்டங் கோரிலையந்தன்னால்) நேரியதாய்நீண்டு, ஒட்டினவிடத்திலே பற்றும்படி இளையதாய் நிறத்திருப்பதொரு இலையாலே திருநெற்றியிலே திருநாமமாக இட்டு. ஊர்த்த்வபுண்ட்ராகாரமாக அழுத்திவைக்குமாய்

---

அரு.—எட்டாம்பாட்டு. (சிந்துரமித்யாதி) "சென்னி" என்றபதம்- திருநெற்றியையும் திருமுடியையும் சொல்லவற்றாயிருக்க, மேலே "அங்குத் திருநாம மிட்டு" என்று- திருநாம மிடத்தக்கதான திருநெற்றியை "அங்கு" என்று சொல்லவேண்டுகையாலே, இந்தச் சென்னிபதம்- திருநெற்றியையே சொல்லவேண்டி யிருக்க, திருமுடியிலே யென்றர்த்த மருளிச் செய்வானென்னென்ன வருளுகிறார் (கீழித்யாதி), இங்கே அப்படி யென்கையாலும், கீழ்சொன்னத்தைச் சொல்லுகை அப்ரயோஜந மாகையாலும், இப்படியே கொள்ளவேணு மென்று கருத்து. (செறிய) நெருங்க. "ஓரிலையந்தன்னால் அங்குத்திருநாமமிட்டு" என்றந்வயித்து, ஓர்பததாத்பர்யங்களைக் காட்டாநின்று கொண்டு அர்த்தமருளுகிறார் (நேரியதாயித்யாதி). திருமண்ணைத்திருநாம மிடுமதுண்டொழிய, இலையாலே இடுவதுண்டோ வென்ன; இவன் அப்படி யிட்டானாக வேணுமென்று பலிதத்தை யருளுகிறார் (ஊர்த்த்வேத்யாதி). "சென்னி" என்றத்தாலே திருமுடியாகக் கீழே அருளிச் செய்து, "அங்கு" என்றதுக்கு - திருநெற்றி யென்றருளிச் செய்தால் எங்ஙனே சேரும்படி

இட்டு. (அங்கு)என்றது திருநெற்றியில். சாதிலிங்கத்தை ஆஸ்ய ஜலத்தோடே திருநெற்றியிலே பற்றும்படியிட்டு. (அந்தரமின்றித்தன்னெறிபங்கியை யழகிய நேத்திரத்தாலணிந்து) நெறிபிடித்த திருக்குழலை இடைவிடுதியற அழகிய பீலிக்கண்ணாலேயும் யுவதிகள் கண்களாலேயுமணிந்து.

(இந்திரன்போல் வருமாயப்பிள்ளை) இந்த்ரனைப்போலேமேனாணிப்புத்தோன்ற கர்வித்து வருகிற விடைப்பிள்ளை. அன்றிக்கே, தனக்கிட்டசோறு தானுண்ணமாட்டாத இந்த்ரனைப்போலே தன்னையொழியச் செல்லாமை பிறந்தாரை உபேக்ஷிக்கவல்லனென்று ஏகதேச த்ருஷ்டாந்தமாகிலுமாம். அன்றிக்கே; இந்த்ர சப்தம் -

த்து. அங்கென்று - திருநாமத்துக்கு அநுரூபஸ்தலமான திருநெற்றியைச் சொல்லுகிறது. "இலையம்" என்கிறவிடத்தில், அம் - சாரியை. அதவா, சாதிலிங்கப்பொடியை ஆஸ்யஜலத்தாலே நனைத்துத் திருநெற்றியிலே திருநாமமாகச்சாத்தி யென்னவுமாம். அப்போதைக்கு, "ஒரிலயம்" என்று பாடமாய், இல்லென்று-உள்ளாய், அயமென்று - ஜலமாய், ஓரிலயமென்றது- திருப்பவளத்துக்குட்பட்டதொரு ஜலமென்றபடி. "ஆயப்பிள்ளை" என்கிற இடைத்தனத்துக்கும் பிள்ளைத்தனத்துக்கும் சேருவதொரு வ்யாபாரமிறேயிது. (அந்தரமித்யாதி) தன்னுடைய நெறித்தகுழலை இடைவெளியில்லாதபடி அழகிய பீலிக்கண்களாலே அலங்கரித்து.

(இந்திரன்போல் வருமாயப்பிள்ளை) ஸஜாதீயரான தேவர்களடங்கலும் ஸேவிக்க, அவர்களுக்கு நிர்வாஹகனான இந்த்ரன், அவர்கள் நடுவே தன்வைபவமெல்லாம் தோற்றவருமா போலே, *தன்னேராயிரம் பிள்ளைகளான திருத்தோழன்மாரடங்கலும் ஸேவிக்க, அவர்கள்நடுவே தன்செருக்கும்பெருமையும் தோற்றும்படிவருமாயப்பிள்ளை. அங்ஙனன்றிக்கே, இந்த்ரசப்தத்துக்குமுக்ய

என்கிற சங்கையைப்பரிஹரிக்கிறார் (அங்கென்றித்யாதி). "சிந்துரப்பொடி" என்றபதத்தை இங்கு மநுஷங்கித்து "இலையம்" என்றதுக்கர்த்தாந்தர மருளுகிறார் (அதவேத்யாதி). "இலயம்" என்றது - ஆஸ்யஜலமானபடியைய றிவிப்பிக்கிறார் (அப்போதைக்கித்யாதி). "ஓரிலயம்" என்றதால் - ஆஸ்ய ஜலமென்று விவக்ஷிக்கைக்குஸூசகமென் னென்னவருளுகிறார் (ஆயப்பிள்ளையித்யாதி).

மூ.—முன்னரசிங்கமதாகி யவுணன்முக்கியத்தை
முடிப்பான் மூவுலகில்
மன்னரஞ்ச மதுசூதனன்வாயிற்
குழலினோசை செவியைப்பற்றிவாங்க
நன்னரம்புடைய தும்புருவோடு
நாரதனும் தந்தம்வீணைமறந்து
கின்னரமிதுனங்களுந் தந்தங்கின்னரம்
தொடுகிலோ மென்றனரே. (ரு)

---

ந்ருத்தங்களில் குசலராய் அவற்றாலே எல்லா லோகங்களையும் வசீகரிக்கவும் வல்லராய், தாங்களும் தங்கள் கானந்ருத்தங்களின் வசமாய்த் தங்களைக்கொண்டாடி, புயான்களாயிருக்கிறவர்களுடைய ஸ்த்தைர்யத்தையும் சொல்லுகிறது இப்பாட்டால்.

ஸ்வா;— (முன்னித்யாதி). ஆநந்யநாதியைச் சொல்லுதல்; அது தன்னையே மாறாடிச் சொல்லுதல். அதாவது (க) "பண்டுமுனோனமாகி" என்றும், (உ) "பன்றியின்று மேனுமாய்" என்றுமருளிச்செய்கையாலே "முன்" என்கிறது; அது திப்ரஸித்திபும் கூட்டுமிறே. ஹிரண்ய னுடைய வரப்ரதானங்களையும் நோக்கவேண்டுகையாலே நரம்ருகமாய். (அதாகி) தன்னுடையஜ்ஞாநசக்த்யா

---

வ்யா.—ஐந்தாம்பாட்டு. (முன்நரசிங்கமதாகி) முற்காலத்திலே "தேவாதி சதுர்விதஜாதியில் ஒன்றாலும் படக்கடவேனல்லேன்" என்று அவன்கொண்ட வரத்துக்கு அவிருத்தமாக நிரஸிக்கைக்காக (ந) "[illegible]-நரஸ்யார்த்ததநும்க்ருத்வா ஸிம்ஹஸ்யார்த்த தநும்ததா" என்கிறபடியே நரத்வ ஸிம்ஹத்வங்களிரண்டையும் சேர்த்துஒருவடிவாகக்கொண்டு. "அதாகி" என்றது, இப்படிநரத்வ ஸிம்ஹத்வங்களைச் சேர்த்து ஒருவடிவாக்கினவிடத்தில் சேராச்சேர்த்தியா யிருக்கையன்றிக்கே, (ச) "அழகியான் தானே யரியுருவன்தானே" என்னும்படி இருந்த

---

அரு;—அஞ்சாம்பாட்டு. (முன்னரசிங்கமித்யாதி) விருத்தமானவுபயாகாரத்தையும் கொண்டதுக்கு ஹேதுவை யருளிச்செய்து கொண்டு ப்ரமாணபூர்வகம் சப்தார்த்தமும் காட்டுகிறார் (முற்காலத்திலே யித்யாதி). (படக்கடவேனல்லேன்) நசிக்கக்கடவேனல்லேன். "நரசிங்கமாகி" என்றால் போந்திருக்க, "அது" என்றதுக்குத் தாத்பர்யமருளுகிறார் (அதாகி யென்றதித்யாதி).

---

(க) தி-மொ-௪-௧0-௧0. (உ) தி-ச-வி-உஉ. (ந) (ச) ௪-திருவ-உஉ.

திகள் குன்றுமல். (அவுணனித்யாதி) அநுகூல ப்ரதிகூலனும் அஸுரஜந்மத்திலே பிறந்தவன் தன்னுடைய அஜ்ஞாநாநுசக்திக ளாலே வந்த வரபலபுஜ பலங்களாலே வந்தகர்வத்தை முடிப் பதாக.

(மூவுலகித்யாதி) மூன்று லோகத்திலுண்டான ராஜாக்க ளஞ்சி வயிறு பிடிக்கும்படி வர்த்திக்கிற மதுவை நிரஸித்தவ னென்னுதல்; அபிமாந பங்கமாய்வருகையாலேமன்னரஞ்சுவதும் இவன் தனக்கென்னுதல். இவன்தானே ஸ்வரூபாவேச ராம னுமாய், மழுவினால் மன்னராருயிர் வவ்வினதைக் கண்டு சக்ரவர் த்தி முதலானோர்க்கு பயாபயப்ரதாநம் செய்தானும் இவன்தானே யென்னவுமாம். ஆனால் க்ருஷ்ணன்தானோ சக்ரவர்த்தித்திருமக னுமானா னென்னில்; தர்மைக்யத்தாலே அதுவும் கூடுமிறே. முன்னோர்தூதிலனைடவன்றேயென்னிலும் (க)“வையம் காக்கு முரு வும் பேரும் செய்கையு மூழி தோறூழி வேறவன் என்கிற” வழகினுடைய வதிசயத்தைச் சொல்லுகிறது. (அவுணன் முக்கி யத்தைமுடிப்பான்) *எல்லையில்லாத பெருந்தவத்தாலே பலமிறுக் குக்களைப் பண்ணிநின்றுகொண்டு அமரரையல்லல்செய்து, தானே ஜகத்துக்கெல்லாம் ப்ரதாநனாய், பகவந்நாமம் கேட்கப்பொறுமல், அதுசொன்னதுவே ஹேதுவாக “வயிற்றிற் பிறந்தபிள்ளை” என் று பாராதே வாசாமகோசரமான பீடைகளை யெல்லாம் பண்ணின ஹிரண்யாஸுரனுடைய வேண்டப்பாட்டை யழித்துப் பொகட் டவன்.

(மூவுலகில் மன்னரஞ்ச) மூன்று லோகத்திலுண்டான ரா ஜாக்களும், அதிமாநுஷ சேஷ்டிதங்களால்வந்த தன்மதிப்பைக் கண்டால் உள்ளம் நடுங்கும்படியிருக்கிற. (மதுசூதன்வாயிற் குழலினோசை செவியைப்பற்றிவாங்க) ஆஸ்ரிதவிரோதியான மது வை நிரஸித்தவனுடைய திருப்பவளத்தில் வைத்தூதின திருக்

அவுணன் பதத்தாலே தோற்றுகிற வர்த்தத்தைப் பாசுரகந்தியாக வருளிச் செய்யாநின்றுகொண்டு, முக்யதையை முடிக்கைக்கு ஹேதுவாகத்தோற்று வித்துத் தாத்பர்யார்த்தத்தை யருளுகிறார் (எல்லையில்லாத வித்யாதி). (வே ண்டப்பாடு) பெருமை.

(க) தி-வாய்-எ-௩-கக.

நேராலே கூடவுமாமிறே. (வாயித்யாதி) ஸ்ரீகீதை அபயப்ரதாநம் முதலானசாஸ்த்ரங்களை, (க)'அவாக்யநாதர:-அவாக்யநாதரः' என்னு மல், ஸஹ்ருதயமாக வருளிச்செய்த வாயில் குழலினேசைக்கும வசீக்ருதராகாதாருண்டோ? உண்டானாலும் செவியைப்பற்றி வாங்கிகின்றால் தரிக்கவல்லாருண்டோ?.

(நன்னரம்பித்யாதி) செவிபடைத்தாரெல்லாரையும்வசீகரிக்க வற்றாய்த் தமக்கும் அபிமதமான வீணைநரம்பையுடையவர்கள். தங்களுக்கு உடைமையாக நினைத்திருப்பதும் இவ்வளவேயிறே. காநவித்யைக்கு "தும்புரு," "நாரதர்" என்று இருவரும் ப்ரஸித்தராயிருக்குமிறே. (தந்தம் வீணைமறந்து) இவர்தங்களில்மைத்ரமானாலும் "என்னது என்னது" என்று போருகையாலே "தந்தம்வீணை" என்கிறது. (மறந்து) நன்னரம்புடைய வீணையைமறந்து. (கின்னரமிதுநங்களும்) இவர்களைப்போலே கிந்நரமிதுநங்க

குழலினுடைய த்வநியானது செவியைப்பிடித்திழுக்க. (நன்னரம்பித்யாதி) செவிபடைத்தாரெல்லாரையும் தன்னுடைய த்வநியாலே வசீகரிக்கவற்றான நன்மையையுடைய வீணைநரம்பைத் தந்தாமுக்குப் பெரியவுடைமையாக நினைத்திருக்கும் தும்புருவும் நாரதனும். "காநவித்யைக்கு தும்புருநாரதர்" என்று ஸர்வலோக ப்ரஸித்தராயிருக்குமவர்களிறே;இப்படி யிருக்கிறவர்களும். (தம்தம் வீணைமறந்து) தந்தாமுக்கு ஸர்வகாலமும் அபிமதமான வீணைகளையெடுத்துப் பாடாதவளவன்றிக்கே, அவைதன்னை நேராகமறந்து.

(கிந்நரமித்யாதி) கிந்நரங்கொண்டு பாடித்திரிகையாலே "கிந்நரமிதுநங்கள்" என்று ஜகத்ப்ரஸித்தர்களா யிருக்கிறவர்களும் தந்தாமுடைய கிந்நரம் இனித் தொடக்கடவோமல்லோமென்று விட்டார்கள். ... .... .... ... .... (௫)

"நாரதனும்" என்றச (ச) காரத்தால் அப்ராதாந்யம் தோற்றுகையால் அந்தவ ப்ராதாந்யம் இவரோடௌஹபடி தராகையாலே தும்புருவுக்குமர்த்தஸித்தமென்று திருவுள்ளம்பற்றி யருளிச்செய்கிறார் (காநவித்யைக்கித்யாதி). "தும்புருவோடுநாரதனும் வீணைமறந்து" என்றால் போந்திருக்க, "தந்தம்" என்றதுக்கும், "விட்டு" என்னாதே "மறந்து" என்றதுக்கும் தாத்பர்யமருளுகிறார் (தந்தாமுக்கித்யாதி). "கின்னரம்" என்றது - வீணாவிசேஷம். ... (௫)

(க) சாந்தோ-௩-௧௪-௨.

மூ.—செம்பெருந்தடங்கண்ணன் திரடோளன்
தேவகிசிறுவன் தேவர்கள்சிங்கம்
நம்பரமனிந்நாள் குழலூதக்கேட்டவர்க
ளிடருற்றனகேளீர்
அம்பரந்திரியுங் காந்தப்பரெல்லா
மமுதகீதவலை யாற் சுருக்குண்டு
நம்பரமன்றென்று நாணிமயங்கி
நைந்துசோர்ந்து கைமறித்துநின்றரே.

---

ளும் தம் கிந்நரங்களை மறந்து. ஆரேனும் நினைப்பிக்கிலும் "இனித் தொடக்கடவோமல்லோம்" என்று செவியைப்பற்றி வாங்கின வோசைவழியே இழுப்புண்டு போனார்களென்னுதல். அன்றியே ஸ்வவஶராய் ப்ரீதியோடே போனார்களென்னுதல். ஆஶ்ரயத்தளவும்செல்லுமதொழியமீளப்போகாதிறே. (க)"𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑌾 𑌮𑌯𑌾 𑌲𑌙𑍍𑌕𑌾-பரித்யக்தாமயாலங்கா" (உ)"𑌰𑌾𑌵𑌣𑍋 𑌨𑌾𑌮 𑌦𑍁𑌰𑍍𑌵𑍃𑌤𑍍𑌤𑌃-ராவணோநாமதுர்வ்ருத்த:" (௩)"𑌅𑌨𑍍𑌤𑌰𑌿𑌕𑍍𑌷𑌗𑌤𑌃 𑌶𑍍𑌰𑍀𑌮𑌾𑌨𑍍-அந்தரிக்ஷகதஶ்ஶ்ரீமாந்" என்றவன் மீண்டாலும் இவர்கள் செவியுள்ளதனையும் மீளார்களிறே; மீளில்கர்மபாவனையிறே. .... .... ... ... .... (ரு)

ஸ்வா;—ஆறும்பாட்டு. (செம்பெருமித்யாதி.) சிவந்து மிகவும் பெருத்த திருக்கண்களை யுடையவன். (திரடோளன்) (ச)"𑌆𑌜𑌾𑌨𑍁𑌬𑌾𑌹𑍁𑌃-ஆஜாநுபாஹு:" என்கிறபடியே உருண்டழகிய திருத்தோளையுமுடையவன். (தேவகி சிறுவன்) சக்ரவர்த்தித் திரு

---

வ்யா.—ஆறும்பாட்டு. (செம்பெருந்தடங்கண்ணன்) சிவந்து மிகவும் பெருத்திருக்கிற திருக்கண்களை யுடையவன். (திரடோளன்) கணையங்கள்போலே திரண்டிருக்கிற திருத்தோள்களை யுடையவன். (தேவகிசிறுவன்) தேவகிப் பிராட்டிக்கு விதேய

---

அரு;—ஆறும்பாட்டு. (செம்பெருமித்யாதி) "பெருந்தடம்" என்ற மீ மிசைக்கர்த்தம் (மிகவும் பெருத்திருக்கிற) என்று. (கணையங்கள்) என்றது - உழலைத்தடிகளென்றபடி. மேலே "தேவர்கள் சிங்கம்" என்று - அவர்களுக் கடங்காதவனென்கையாலே, இங்கே பவ்யதை தோற்றுமென்று விவக்ஷித்துத் தாத்பர்யம் (தேவகீத்யாதி). "தேவர்கள் சிங்கம்" என்றதுக்கு - ஸூரிகளுக்கு ஶ்ரேஷ்டனென்று சொல்லுமளவில், தர்மைக்யத்தைப் பற்றிச் சொல்ல

---

(க) ரா-யு-ககூ-ரு. (உ) ரா-யு-கஎ-க௦ (௩) ரா-யுகச-கஎ. (ச) ரா-பா-க.

மகனைப்போலே பக்வனை பின்பு மாத்ருவசந பரிபாலநம் செய்கை யன்றிக்கே, அவதரித்த போதே தேவகியுடைய வசந பரிபாலநம் செய்தவன். (தேவர்கள் சிங்கம்) தேவர்களுக்காக அஸுரநிரஸநம் செய்யுமிடத்தில் ஸிம்ஹபுங்கவம்போலே அநபிபவநீயனாய் நின்று ரக்ஷிக்குமவன், (நம்பரமன்) நாங்கள் "ஸர்வஸ்மாத்பரனே" என்று அறுதியிட்டிருக்குமவன். (இந்நாள்குழலூத) "குழலாலே லோகத்தை வசீகரிக்கக்கடவோம்" என் நாரதாதிகளும் வீணை மறந்தல் கைகண்டவிந்நாள் குழலூத. "இந்நாள் கேட்டவர்களிடருற்றன கேளீர்) கேட்டவர்கள் பூர்வாபிமாந நிவ்ருத்தி மறுபாடுருவி க்லேசித்தன கேளீகோள்.

அவர்கள் தான் ஆரென்னும் விவக்ஷையிலே சொல்லுகிறது மேல், (அம்பரத்திரியும் காந்தப்பரெல்லாம்) அம்பரதலத்திலே வர்திப்பாராய், பரதஶாஸ்த்ர வாத்ய கோஷங்களில் வாசியறிவாராய், இக்குழலோசை கேட்டு இதில் வாசியறிந்தவர்க ளெல்லாம், இந்த வாகம்ருத நிதஸீகார வலையாலே தங்கள் பூர்வக்ருத கர்வமெல்லாம் செவிவழி சுருக்குண்டு. (நம்பரமன்றென்று) "இனிவாத்ய

னை புத்ரனானவன். (தேவர்கள் சிங்கம்) தார்மிகளான தேவர்களுக்கு ஸிம்ஹம்போலே அநபிபவநீயனா யிருக்குமவன். (நம்பரமன்) தன்னபிமாநாந்தர்ப்பூதரான நமக்குத் தன்பெருமையெல்லா மரியலாம்படி யிருக்குமவன். (இந்நாள்குழலூத) இற்றைநாள் குழலூத. (கேட்டவர்களிடருற்றனகேளீர்) இக்குழலோசையைக் கேட்டவர்கள் இதினுடையரஸத்தாலே வித்தரானபடியைக் கேளிகோள்.

கேட்டவர்கள்தான் ஆர், அவர்களிடருற்ற ப்ரகாரமென்னென்ன; சொல்லுகிறதுமேல், (அம்பரமித்யாதி) அந்தரிக்ஷசாரிகளாய் ந்ருத்தகீத பராப்பேரும் கந்தர்வஜாதீயரெல்லாம் அம்ருதம் போலே இனிதான காநவலையிலே கட்டுண்டு. (நம்பரமன்றென்று)

வேண்டுமெருமையுண்டாகையாலே அவதாரத்துக்குச் சேரத் தாத்பர்யமருளுகிறார் (தார்மிகளித்யாதி). ஸர்வஸ்மாத்பரனை நமக்குப்பரமனென்றால் போந்திராதென்று திருவுள்ளமாகத் தாத்பர்யமருளுகிறார் (தன்னித்யாதி).

"பரமன்று" என்றது - நிர்வாஹ்யமன்றென்றபடி. நம்பரமன்றென்றுவிட்ட

௬.—புவியுணுன் கண்டதோ ரற்புதங்கேளீர்
பூணிமேய்க்குமிளங் கோவலர்கூட்டத்
தவையுணுகத்துணையான் குழலூத
வமரலோகத்தளவுஞ் சென்றிசைப்ப
அவியுணுமறந்து வானவரெல்லா
மாயர்பாடிநிறையப் புகுந்தீண்டிச்
செவியுணுவின்சுவை கொண்டுமகிழ்ந்து
கோவிந்தனைத்தொடர்ந்தென்றும் விடாரே.

---

கோஷப்ரகாச ப்ராவிஹ்த்தி நமக்குப் பமோ?'' என்று பூர்வஸ்ம்ருதியாலே லஜ்ஜித்து. (மயங்கி) அந்த லஜ்ஜாபரிபாகத்தாலே அறிவு கெட்டு. இனிநாரதாதிகள் வீணை நினைத்தெடுத்தார்களாகிலும், சிதிலாந்தக் கரணபலஹாநியாலே நாங்கள் நினைக்கவும் வாத்யங்களெடுக்கவும் மாட்டோமென்று கைமறித்து நின்றனரே.

''நாங்கள் ஆடுதல் பாடுதல் செய்யும்போது நீங்கள் வாத்யமெடுக்க வேண்டாவோ? நாங்கள் மறந்து பொகட்ட வீணை முதலானவை நினைத்தெடுத்தோம்'' என்று அவர்கள் வந்து அநுவர்த்தித்தாலும் ''உங்களுக்கு நாங்கள் வேணுமோ? உங்கள்ந்ருத்தகீதங்கள் தானே போராதோ? உங்கள் மநஸ்ஸாலே செவியுண்டாயப் பார்த்திகோளாகில், எங்களைப்போலேகைமறித்து நிற்கை உங்களுக்கும் கர்தவ்யம்'' என்றாப்போலே நிர்பரத்வாநு ஸந்தாநத்திலே நிலை நின்றனரே என்று ஆஶ்சர்யப்படுகிறார். .... .... (௬)

ஸ்வா;—ஏழாம்பாட்டு. (புவியித்யாதி). காருகாவிலே

---

இனிப்பாடவென்பதொன்று நமக்குப்பரமன்றென்று. (நாணி) கீழ் பாடிப்போனதுக்கும் லஜ்ஜித்து. (மயங்கி) கீழ்மேல் ஒன்றுதானும் நினைக்கமாட்டாதபடி யறிவழிந்து. (நைந்து) அறிவுக்கு த்வாரமான அந்தக்கரணம் சிதிலமாய். (சோர்ந்து) சரீரம் கட்டுக்குலைந்து தளர்ந்து. (கைமறித்து நின்றனரே) தங்கள் தளர்த்தி, வாக்கால் சொல்லவும்பலமற்று ''ஒன்றுக்கும் க்ஷமரல்லோம்'' என்று கையை மறித்துக்கொண்டு நின்றார்கள். .... .... (௬)

---

வர்களுக்கு நாண்ப்ரஸக்தியே தென்ன வருளுகிறார் (கீழித்யாதி). (கட்டுக்குலைந்து) என்றதுக்கு விவரணம் (தளர்ந்து) என்றது. (கையைமறித்துக்கொண்டு) என்றது - கையைத்திருப்பிக்கொண்டென்றபடி. ... ... (௬)

கருமுகை பூத்தாப்போலே, "இயல், இசை, பண்" என்றுலறியாத விந்த லோகத்திலே இவற்றின் ஆச்ரயத்தோடே சேர்த்தறிந்த நான்; இவை மற்றொரு ஆச்ரயத்தில் கிடவாது-இவ்வாச்ரயத்தில் கிடந்தாலல்லது நிறம்பெறாதென்றறிந்த நான். (கண்டது) கேட்ட வளவேயல்ல, நெஞ்சு புடை போகாமல் பொருந்தக் கண்டதாய், நித்யாபூர்வ போக்யமாய், அத்விதீயமான வாச்சர்யம் கேளீர். (பூணிமேய்க்கு மிளங்கோவலர் கூட்டத்தவையுள்) கற்றுக்களும் கன்றுகளும் மேய்க்கிற விளங்காலிகளான விடையர் திரண்ட திரளில். (நாகத்தணையான் குழலூத) திருவநந்தாழ்வான் அநவரத பரிசர்யை பண்ணக் கண்வளர்ந்தருளினவன் குழலூதின வோசை,

---

வ்யா;—ஏழாம்பாட்டு. (புளியுள் நான்கண்டதோ ரற்புதம் கேளீர்) காரு காலிலே கருமுகை பூத்தாற்போலே, இப்படியிருப்பதொன்று உண்டாகைக்கு யோக்யதையில்லாத பூமியிலே, "இது அகடிதம்" என்று அறிந்தநான், பிறர்வாயால் கேட்கையன்றிக்கே ப்ரத்யக்ஷமாகக் கண்டதோராச்சர்யம் கேளிகோள். (பூணிமேய்க்குமிளம் கோவலர் கூட்டத்தவையுள்) குழல்களூதிக் கொண்டு கன்றுகளும் பசுக்களும் மேய்த்துத்திரியும் இளங்காலிகளான இடையர் திரண்டதிரளில். (நாகத்தணையான் குழலூத) அநந்தசாயியாகையாலே ஸர்வாதிகனானவன் தத்ஸஜாதீயனாய்

---

அரு;—ஏழாம்பாட்டு. (புளியுளித்யாதி) அருளிச் செய்கிறதாம் பூமியிலேயிருக்க, "புளியுள்" என்று விசேஷித்ததற்கு த்ருஷ்டாந்த பூர்வகம் தாத்பர்யமருளுகிறார் (கார்காலிலேயித்யாதி).(காருகால்) - இந்தளம். அதாவது - ஹஸந்திகையென்றபடி. (கருமுகை) சிறு செண்பகம். (இப்படி யிருப்பது) என்றது - "ஸர்வஸ்மாத்பரனானவன் கோபஸங்க மத்யத்திலே" என்று தொடங்கிமேலே சொல்லப்போகிறப்ரகாரங்களை யெல்லாம்பற்ற. "கண்டது- கேளீர்" என்றபோதே "கண்டதுதாம்" என்று தோற்றியிருக்க, நான், என்றதுக்கு பாவம் ( இது அகடிதமித்யாதி ). "பூணி" என்றது - கோஜாதிப் பேராய் விவக்ஷித்து (கன்றுகளும் பசுக்களும்) என்றது. (இளங்காலிகளான) என்றது - பாலர்களான வென்றபடி. "நாகத்தணையான் குழலூத என்று சொல்ல வேணுமோ ?கோவலனென்றன்றோ சொல்ல வேண்டுவது" என்ன, (அநந்தேத்யாதி). அநந்தசாயியானபோது குழலூதுகையில்லாமையாலேதத)

(அமரலோகத்தளவும் சென்றிசைப்ப)-நித்ய விபூதியளவாகச்சென்று பொருந்த.

(அவியுணுமறந்து) இந்த விபூதியிலுள்ள தேவர்களெல்லாரும் யாகாதிகளிலும் ஹவிஸ்ஸு கொள்கை மறந்து. இவர்களுக்கு தாரகாதிகளெல்லாம் அம்ருதமாயிருக்க, அது மறந்தார்களென்றொழிந்தது, அபிமாந போக கௌரவத்தாலேயிறே;*அழைப்புமப் போதொழியுமதொழியஇப்போதொழியஸஹியார்களிறேமறந்தால் செய்யலாவதில்லையே(வானவரெல்லாமாயர்பாடிநிறையப்புகுந்து) அங்குள்ளாரும் இங்குள்ளாரும் திருவாய்ப்பாடி நிறையப்புகுந்து, இதுக்குள்ளடங்காம லீண்டியும் (செவியுணுவின் சுவைகொண்டு)

---

நின்று குழலூத. (அமரலோகத்தளவும் சென்றிசைப்ப) அந்தக் குழலோசை தேவலோகத்தளவும் சென்று த்வநிக்க.

(அவியுணுமறந்து வானவரெல்லாம்) தேவர்களெல்லாரும், தங்களுடைய கௌரவாநுகுணமாக யாகங்களிலே ப்ராஹ்மணர் ஸமர்ப்பிக்கும் ஹவிஸ்ஸுக்களை புஜிக்கமறந்து. அவர்களுக்கு தாரகாதிகளெல்லாம் அம்ருதமாயிருக்க“அதுமறந்தார்கள்” என்றதே, இத்தைச்சொல்லிற்று - தங்கள் வைபவத்துக்குறுப்பாகையாலே, அதிலுங் காட்டில் அவர்கள்விரும்பிஜீவிப்பது இதுவாகையாலே. (ஆயர்பாடிநிறையப் புகுந்தீண்டி) அவ்வளவன்றிக்கே மநுஷ்யகந்தம் பொறுமல் பூமியில்கால்விட அருவருத்துத் திரியுமவர்கள் “இவன் பிறந்து வளருகிறவூர்” என்னுமத்தாலே திருவாய்ப்பாடி நிறையப்புகுந்து திரண்டு. (செவியுள்நாவின் சுவை

---

ஸஜாதீயனாய்) என்றது “ஊத” என்றவநந்தரம் “அது” என்றத்யாஹாரம் திருவுள்ளம் பற்றி,சப்தார்த்தமருளுகிறார் (அந்த வித்யாதி).

“வானவரெல்லாம் அவியுணுமறந்து” என்றந்வயம் திருவுள்ளம் பற்றி அர்த்தம் (தேவர்களித்யாதி). “வானவர்” என்றபதத்தைப்பற்றி*அவிபத தாத்பர்யம் (தங்களித்யாதி). “உண்ணு” என்றது-மெல்லொத்தாய்,“உணு” என்று நீட்டிக் கிடக்கிறதென்று திருவுள்ளம்பற்றி (புஜிக்க) என்றது. ஸ்ரீப்ருந்தாவநத்தில் குழலூதக் கேட்டவர்களுக்கு அங்கு வருகை ப்ராப்தமாயிருக்க, ஆயர்பாடியில் வருகைக்கு வானவர் பதத்தைத் திருவுள்ளம் பற்றிஹேதுவையருளுகிறார் (அவ்வளவித்யாதி). “ஈண்டி” என்றதினர்த்தம் (திரண்டு) என்றது. “செவியுள்” என்றும், “நா” என்றும், “இன்சுவை” என்

செவியாலும் நெஞ்சாலும் நாவால்கொள்ளுகிறரஸத்தைக்கொண்டு மகிழ்ந்தார்க ளென்னுதல், அன்றிக்கே செவிக்குள்ளாலே அஹ்ரு தயமாகக் கொண்டு மகிழ்ந்தார்களென்னுதல்; இந்த்ரியம் இந்த்ரி யாந்தர தர்மத்தை பஜிக்குமிறே சிலர்க்கு; சிலர்க்கு புண்ய லப்த ஜ்ஞாநத்தாலே ப்ரார்த்தநாரூபமாக வுண்டாதல், இத்திருக்குழ லோசை தானே அபேக்ஷாநிரபேக்ஷாகந்துகமாக ப்ரதிபந்தக நிவ் ருத்தியையும் தானே யுண்டாக்கி. நாவின் சுவையைச் செவியிலே பிறப்பிக்கு மென்னுதல்.

(கோவிந்தனைத் தொடர்ந்தென்றும் விடாரே) வாசியறியாத பசுக்களும் கன்றுகளும் வாடையிலே தொடர்ந்துதிரியா நின்றால், வாசியறிந்தவர்கள் ஸௌலப்ப்யாதிகுணங்களில் ஸௌகுமார்யாதி குணங்களில் அவன் வ்யாபாரங்களிலொன்றும் விடாமல் மகிழ்சிக் குறப்பாகையாலே அவன் போமிட மெல்லாம் தொடராதிருப்பா ருண்டோ ? .... .... .... .... ... .... (௭)

கொண்டுமகிழ்ந்து) செவிக்குள்ளில் நாவாலே குழலில்பிறந்த இசை யின் இனியரஸத்தை புஜித்து ஆநந்தித்து. செவிக்கு நாவுண்டோ வென்னில்; (க) "செவியுணுநீட்ட" என்னக்கடவதிறே; சேதந ஸமாதியாலே சொல்லுகிறது. அன்றிக்கே, செவிக்கு உணவாயி ருந்துள்ள இனிதான காநரஸத்தை புஜித்து என்னவுமாம் (க)"செ விக்குணவில்லாதபோது" என்றானிறே. (கோவிந்தனைத்தொட ர்ந்தென்றும் விடாரே) கோரக்ஷணபரனானவனை அவன்போன விடமெங்கும் தொடர்ந்து ஒருக்ஷணகாலமும் விடுகிறிலர்கள்.

ஸர்வஸ்மாத்பரனானவன் கோபஸங்க(ஃ)மத்யத்திலே தத்ஸ ஜாதீயனாய் நின்று குழலூதுகையும், அந்தக்குழலோசை தேவ லோகத்தளவும் செல்லுகையும், அதைக்கேட்டுத் தேவர்களெல்லா

றும், பதவிபாகம் திருவுள்ளம்பற்றி அர்த்தம் ( செவிக்குள்ளிலித்யாதி ). "செவி" என்றும் "உணு" என்றும் பதவிபாகம் திருவுள்ளம் பற்றியோஜநாந் தரம் (அன்றிக் கேயித்யாதி) "உண" என்றது - "உணு" என்று நீட்டிக் கிடக்கு மென்னுமதுக்கு ஸம்வாதம் காட்டுகிறார் (செவிக்கித்யாதி).(என்றானி றே) என்றவநந்தரம் "தமிழன்" என்று சேஷம்.

இப்பாட்டை யெல்லாம் கடாக்ஷித்து "ஓரற்புதம்" என்றதை பஹு முகமாகவுபபாதிக்கிறார் (ஸர்வஸ்மாதித்யாதி). ... ... ... (௭)

(க) (உ)

மூ.—சிறுவிரல்கள் தடவிப்பரிமாறச் செங்கண்கோடச்
செய்யவாய் கொப்பளிப்பக்
குறுவெயர்ப்புருவம் கூடலிப்பக்
கோவிந்தன் குழல்கொடூதினபோது
பறவையின் கணங்கள் கூடுதுறந்து
வந்துசூழ்ந்து படுகாடுகிடப்பக்
கறவையின் கணங்கள் கால்பரப்பிட்டுக்
கவிழ்ந்திறங்கிச் செவியாட்டகில்லாவே. (௮)

---

ஸ்வா;—எட்டாம்பாட்டு. (சிறுவிரலித்யாதி) சிறுவிரல் துடக்கமான விரல்களென்னுதல்; "கரும்சிறுக்கன்குழல் கொடூதின போது" என்கையாலே பருவத்துக்குத் தகுதியான விரற்களென்னுதல். (செங்கண் கோட)* இடவணரையிடத்தோ ளொடு சாய்க்கையாலே அர்த்த கடாக்ஷம் குழலின் நுனியிலே செல்ல, சிவந்த

---

ரும் தாங்கள் விரும்பியிருக்கும் ஹவிர்போஜநத்தை மறக்கையும் அவ்வளவன்றிக்கே மநுஷ்யகந்தம்பொறுக்கவர்கள் கோ(ஷ்)பஸ்ரே ணியிலே வந்து நிரூகையும், அந்தக் குழலோசையினுடைய ரஸத்தை புஜித்து ஆநந்திகளாய்க்கொண்டு இவனைவிடாதேபின்பற்றித் திரிகையுமாகிற இவையெல்லாம் அகடிதங்களாகையாலும், இதுக்கு முன்பு இந்த லோகத்தில் கண்டறியாமையாலுமிறே, " புவியுள் நான்கண்டதோ ரற்புதங்கேளீர்" என்று அருளிச்செய்தது. (௭)

வ்யா;—எட்டாம்பாட்டு. (சிறுவிரல்கள் தடவிப்பரிமாற) "கருஞ்சிறுக்கன்" என்ற பருவத்துக்குத் தகுதியாம்படி சிறுத்திருந்துள்ள திருவிரற்களானவை திருக்குழலின் துளைகளில் புதைக்கவேண்டுவது, புதைத்துத் திறக்கவேண்டுவது, திறக்கைக்காகக் குழலின் துளைகளைத் தடவிக்கொண்டு வ்யாபரிக்க. (செங்கண் கோட) * இடவணரை யிடத்தோ ளொடுசாய்த்துத் துளைதோறும் கண்ணோடநின்று ஊதுகையாலே, சிவந்திருக்கிற திருக்கண்களா

---

அரு;—எட்டாம்பாட்டு. (சிறுவிரலித்யாதி) "சிறு" என்று விரற்களை விசேஷித்ததுக்கு ப்ரமாணம் காட்டாநின்று கொண்டு, தடவிப்பரிமாறு கையைவிவரித்தருளுகிறார் (கருஞ்சிறுக்கனித்யாதி)."கண்கோட" என்றதுக்கு கண்கோணவென்றர்த்தமாய், கோணுகைக்கு ஹேதுவைப் பாசுரகந்தியாகக் காட்டாநின்று கொண்டு, தாத்பர்யமருளுகிறார் (இடவணரையித்யாதி).

திருக்கண்கள் வக்ரிக்க. கோடுதல்-வக்ரித்தல். (செய்யவாய்கொப் பளிப்ப) திருக்கண்களுக்குச் சிவப்பு ஸ்வாபாவிகமாதல், ஊன்ற க்கடாக்ஷிக்கையாலே யாதலாமிறே; திருப்பவளத்துக்குச் சிவப் பு ராககாம ஸாம்யப்ரவாஹத்தாலே யாதல்; ஸ்வாபாவிகமான சிவப்பாதல்; ஒப்பனைதலிற் சிவப்பாதல்; கொப்பளிக்கையா வது-குமிழ்க்கை. அதாவது-பூரகாநிலஸ்ப்புரத்தை.

(குறுவெயர்ப்புருவம் கூடலிப்ப) திருமுக மண்டலத்தைத் தாழ்த்துத் திருப்புருவங்களை மேலே நெளித்தெடுத்து, கான கம் படியுலாவியூதுகிற வாயாஸத்தாலே ஸ்வேதபிந்துக்கள் முத் தரும்பினைப்போலே மிகவும் தோன்ற. (கோவிந்தன் குழல்கொடு தின போது) கோரக்ஷணார்த்தமாகவிறே திருக்குழலூத வேண் டிற்று. மேலருளிச் செய்தவையெல்லாம் யாத்ருச்சிகமாக வுண் ணவை வக்ரிக்க. (செய்யவாய்கொப்பளிப்ப) "வாய்கடைகூட" என்கிறபடியே இரண்டுகடைவாயையும் குவித்து ஊதுகிறபோது சிவந்ததிருப்பவளமானது. அகவாயிலுண்டான வாயுவினுடைய பூரிப்பாலே குமிழ்க்க.

(குறுவெயர்ப் புருவம்கூடலிப்ப) * உலாவியுலாவிக்குழலூது கிற ஆயாஸம்பொறுமல் ஸௌகுமார்யத்தாலே குறுவெயர்ப்பரு ம்பின திருப்புருவமானது மேலே கிளர்ந்துவளைய. (கோவிந்தன் குழல்கொடுதினபோது) கோரக்ஷணத்திலே தீக்ஷிதனாய், அவற்றை மேய்த்துக்கொண்டு திரியுமவன், அவை மேய்ந்து வயிறுநிறைந்த ஹர்ஷத்தாலே ஸர்வ ஜந்துஜாதமநோஹரமான திருக்குழல் கொ (குமிழ்க்க) குமிழிபோலேயாக, அதாவது - முகுளிக்க வென்றபடி.

"குறு-சிறிதாயிருக்கிற, வெயர்-வேர்வையையுடைத்தான, புருவங்கள்" என்று சப்தார்த்தம் விவக்ஷித்து,வெயர்ப்புக்கு ஹேதுவையும்காட்டிக்கொண் டர்த்தமருளுகிறார் (உலாவியித்யாதி)."புருவம் நெரிந்தேற" என்றதைத்திரு வுள்ளம் பற்றி "கூடலிப்ப" என்றதுக்கர்த்தமருளுகிறார் (மேலேயித்யாதி). க்ருஷ்ணன் என்னுதே"கோவிந்தன்" என்றதுக்குத்தாத்பர்யமருளிச்செய்து, கறவையின் கணங்கள் கால் பரப்பிடும்படி குழலூதுகிற ப்ரகரணத்துக்குச்சேர மேய்ந்தஹர்ஷத்தாலே யென்று ஹேதுவைக்காட்டிக்கொண்டு தாத்பர்யமரு ளுகிறார் (கோரக்ஷணத்திலேயித்யாதி).

மூ.—திரண்டெழுதழைமழை முகில்வண்ணன்
செங்கமலமலர்சூழ் வண்டினம்போலே
சுருண்டிருண்ட குழல்தாழ்ந்தமுகத்தா
னூதுகின்ற குழலோசைவழியே

டானதிறே. (பறவையின் கணங்கள் கூடு துறந்து வந்து சூழ்ந்து படுகாடு கிடப்ப) பக்ஷிஜாதங்கள் தந்தாமுடைய வஸ்தவ்யஸ்த்தலங்களை விட்டுக் குழலோசை வழியே வபவர்திகளாய், ஆஶ்ரயத்தளவும் வந்து சூழ்ந்து எதிர் செறிக்கமாட்டாமல், க்ருஷ்ணாம்சத்தளவே கொண்டு வேரற்றுவிழுந்த மரங்கள் போலே அவஶமாய்க் கிடக்க.

(கறவையின் கணங்கள் கால் பரப்பிட்டு) கவிழ்ந்து நிலம் பார்த்திறங்கிக்கால்பரம்பவிரித்து; "இட்டகாலிட்டகை" என்னுமா போலே; செவியசைக்கில் இசைக்கு ப்ரதிபந்தகமாமென்று, உடையவர் முதலானநம்பூர்வாசார்யர்கள் அர்த்த விசேஷங்களைக் கேட்டவர்கள் பூர்வாவஸ்த்தையும் குலைந்து வாஸனையும் மறந்து உபகார ஸ்ம்ருதியாலே சிரக்கம்பம் செய்யவும் மாட்டாமல் ஸ்வயத்நநிவ்ருத்தியிலே நெஞ்சாய்க் கிடக்குமாபோலேயிறே இவைதான் கிடக்கிற ப்ரகாரம். .... ... .... .... .... ... (அ)

ண்டு ஊதினபோது. (பறவையின்கணங்கள்) பக்ஷிகளினுடைய திரள்கள். (கூடுதுறந்து) தந்தாமுடைய வஸ்தவ்யஸ்த்தலங்களைவிட்டு. (வந்துசூழ்ந்து படுகாடுகிடப்ப) குழலோசைவழியே ஊதுகிறவளவும் வந்து சூழ்ந்துகொண்டு வெட்டி விழுந்தகாடுபோலே பரவசமாய்க்கிடக்க.

(கறவையின் கணங்கள்) பசுக்களினுடைய திரள்களானவை. (கால்பரப்பிட்டு) பாரவஶ்யத்தாலே கால்களைப்பரப்பி. (கவிழ்ந்திறங்கி) தலைகளை மிகவும் நாற்றிக்கொண்டு. (செவியாட்டகில்லாவே) "செவியையசைக்கில் இசைக்கு ப்ரதிபந்தகமாம்" என்று செவியையாட்டவும் மாட்டாதேநின்றன. .... .... (அ)

"கவிழ்ந்திறங்கி" என்ற மீமிசைக்குத் தாத்பர்யம் (மிகவும்) என்றது, (இசைக்கு) என்றது - இசை கேட்கைக் கென்றபடி. ... ... (அ

அரு;—ஒன்பதாம்பாட்டு (திரண்டித்யாதி) "எழு" என்றதினர்த்தம்

மருண்டுமான்கணங்கள் மேய்கைமறந்து
மேய்ந்தபுல்லுங் கடைவாய்வழிசோர
இரண்டுபாடுந் துலுங்காப் புடைபெயரா
வெழுதுசித்திரங்கள்போல நின்றனவே. (௯)

ஸ்வா;—ஒன்பதாம்பாட்டு. (திரண்டித்யாதி) பசுந்தழை செறிந்தெழுந்தாப்போலேயும், நீர் கொண்டெழுந்த காளமேகம் போலேயும் விளங்காநின்ற திருநிறத்தையுடையவன். அலர்ந்து சிவந்த தாமரைப்பூவை வண்டுகள் சூழ்ந்திருந்தாப்போலே குழ லிருண்டு சுருண்டுதாழ்ந்தமுகத்தான் (ஊதுகின்ற குழலோசைவழி யே) ஊதாநின்றுள்ள திருக்குழலோசை செவிப்பட்ட வழியே.

(மருண்டித்யாதி) மான்கணங்கள் மருண்டு மேய்கை மறந்து, மான்திரள்களறிவு கெட்டு, "ஸஜாதிவிஜாதி, பக்ஷ்யாபக்ஷ்யம், பாத்ய பாதகங்கள்" என்கிறவையெல்லாம் வாஸனையோடேகெட்டு

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (திரண்டெழு தழைமழை முகில் வண்ணன்) கார்காலத்திலே தன்னிலே திரண்டு கிளர்ந்து அநவா யில் நீர்க்கநத்தாலே தழைபபுண்டாயிருக்கிற வர்ஷுகவலாஹகம் போலே யிருக்கிற திருநிறத்தையுடையவன். (செங்கமலமித்யாதி) சிவந்த தாமரைப்பூவைச் சூழப்படிந்த வண்டினுடைய திரள் போலே, சுருட்சியையு மிருட்சியையுமுடைத்தான திருக்குழல் தாழ்ந்த திருமுகத்தை யுடையவன். (ஊதுகின்ற குழலோசை வழியே) ஊதாநின்றுள்ள திருக்குழலோசை செவிப்பட்டவழியே.

(மருண்டித்யாதி) மான்திரள்களானவை ஸஜாதீய விஜாதீய விபாகாம் தோன்றுதபடி அறிவழிந்து, தனக்குதாரகமாக எப்போ

(கிளர்ந்து) என்றது. தழைப்பு - ஸம்ருத்தி. (வலாஹகம்போலே) மேகத்தின் நிறம்போலே. திருப்பவளத்திலும் திருக்கண்களிலுமுண்டான சிவப்பாலே திருமுகத்துக்குச் செந்தாமரையை த்ருஷ்டாந்தமாகச் சொல்லலாமென்று திருவுள்ளம்பற்றி யருளுகிறார் (சிவந்தவித்யாதி). (திருக்குழல் தாழ்ந்த) என்றது - தாழ்ந்ததிருக்குழலை யுடையவென்றபடி.

"மான்கணங்கள்மருண்டு" என்றநவயித்து மேய்கைமறந்து என்கையா லே, இங்குச்சொல்லும் மருட்சிக்குவிஷயம் காட்டுகிறார் (மான்திரள்களித் யாதி). மேய்ந்தபுல்லுக்குக்கடைவாய் வழிசோரக்கூடாமையாலே யருளுகி

ஒன்றுக்கொன்று முன்னெடுப்பது, ஒன்றின் முலையை ஒன்றுண்பது, பின்னையும் புல்லினை மேய்வதாய், அதுதன்னையும் மறந்து கவ்வினபுல்லுமிறக்குதல் உமிதல் செய்யமாட்டாத அவஶாதிசயத்தாலே கடைவாய் வழியேசோர,(இரண்டுபாடும் துலுங்காப்புடைபெயரா) முன்னும் பின்னுமிரண்டுபக்கமும அசையாமல்(எழுதுசித்திரங்கள் போல நின்றனவே) சித்திரத்திலே எழுதினவற்றுக்கு ஸ்புரத்தையுண்டாகிறாப் இவையொருப்படவேநின்றன. உலாவியுலாவி யூதினகுழலோசைவழியேசெல்லவும் கூடுமிறே.

இத்தால், ஆசார்யோபதேசமார்காநுஸாரிகளாய், பூர்வாவஸ்த்தையில் ஸ்வாபாவிகமான ஜாதிவர்ணத்தில் விரோதிகளாய்ப் போந்தவழியிலே மருட்சியும், ஸ்வயத்நபோகத்திலேவிஸ்ம்ருதியும், ஸ்வயத்நஸித்தாபிமாந போஜ்யத்திலே உதாஸீநமும், பூதகாலத்தில் ப்ராப்த புருஷார்த்தம் ஸ்வயத் நஸாத்யமல் லாதாப் போலே, பவிஷ்யத்காலத்திலும் ப்ரார்ப்தபுருஷார்த்தம் ஸ்வயத்நஸாத்யமன்றென்றும், ஜ்ஞாநாநுஷ்டாந ஸ்த்திதியும், தத்வதர்ஶநத்திலேகாரணவாக்ய விகல்பங்களில் ஸம்ப்ரதாயாபாவத்தாலே வருகிற வ்யாப்ய வ்யாபக வ்யுத்பத்தி ப்ரஸித்திகளில் அஜ்ஞராய், விஹிதா விஹிதகர்மகாமநைகளில் "ஸ்வஸ்வாதந்த்ர்யம்" "அந்யசேஷத்வம்" என்கிற புடைகளில்சலியாமையும், இவைதான்ப்ரணவநமஸ்ஸுக்களாலே கழிந்ததாகிலும், தேஹேந்த்ரியங்களைப்பற்றி வருகிற ஆஹாரஸௌஷ்டவப்ராவண்யம் கழிகை அரிதிறே. இதுக்குப் பெரியவாச்சான்பிள்ளை "இவ்வந்யசேஷத்வம் கழிவதென்" என்று அருளிச்செய்தார், வடக்குத்திருவீதிப் பிள்ளையும் "இங்

தும் செய்துபோரும் மேய்கையைத் தவிருகையன்றிக்கே, விஸ்மரித்துமேயக்கவ்வின புல்லும் இறக்குதல் உமிழ்தல் செய்யமாட்டாதபாரவஶ்யத்தாலே கடைவாய் வழியே நழுவிவிழ. (இரண்டுபாடுமித்யாதி)முன்னும்பின்னுமான இரண்டருகும் அசையாதேபக்கங்களில் போகவும் மாட்டாதே சித்ரத்தில் எழுதினவைபோலே ஒரு வ்யாபாரமற்று நின்றன. ... .... .... (௧)

ரூர் (மேயக்கவ்வின்) என்று. "உமிழ்தல்" வாயில்நின்றும் வெளியிலேதள்ளுதல். "துலுங்கா" என்றதினர்த்தம்-(அசையாதே)என்றது. "புடைபெயரா" என்றதினர்த்தம் (பக்கங்களித்யாதி). (௧௧)

மூ.—கருங்கண்தோகை மயிற்பீலியணிந்து
கட்டிநன்குடுத்த பீதகவாடை
அருங்கலவுருவி லாயர்பெருமா
னவனொருவன் குழலூதினபோது
மரங்களின்று மதுதாரைகள்பாயும்
மலர்கள்வீழும் வளர்கொம்புகள்தாழும்
இரங்கும்கூம்புந் திருமால்நின்ற நின்றபக்கம்
நோக்கி யவைசெய்யுங்குணமே. (௧௦)

---

த்ரியகிங்கரத்வமும் சேரவந்ததே" என்றுமருளிச்செய்தாரிறே. "ஸ்ருஜ்யமானசைதந்யாபாவவ்யக்திகளுக்குஸ்ப்புரத்தையுண்டாக்கிலும்ஆசார்யோபதேசபாரதந்த்ர்யப்ரதாநமானஜ்ஞாநாநுஷ்டாநங்களிலே ஸ்த்திதரானவர்களுக்கு ஸ்வாதீந ஸ்ப்புரத்தையில்லை" என்று காட்டுகிறது. "பொருளல்லாத வென்னைப் பொருளாக்கினன்" என்றிறே இவர்கள் நினைத்திருப்பது. .... .... (௬)

ஸ்வா.—பத்தாம்பாட்டு. (கருங்கண்தோகையித்யாதி) கருகின தலைச்சுழிக்கண்ணையுடைத்தான தோகைமயிற் பீலியைத் திருமுடியிலே சாத்தி. நன்றாகத்திருவரை பூத்தாப்போலே அழுந்தச்சாத்தின திருப்பீதாம்பரமும்.(அருங்கலவுருவில்) பெறுதற்கரிதான திருவாபரணங்களும், அவற்றினிடையிலே கருமாணிக்கம் போலே தோன்றுகிற திருமேனியிலுங் காட்டில் மிகவும் ப்ரகாசிக்கிற நீர்மையிலே மேன்மையுடையவன். (அவனொருவன்) ப்ரஸித்த

---

வ்யா.—பத்தாம்பாட்டு. (கருங்கண்தோகையித்யாதி) கருகின கண்ணையுடைத்தான தோகைமயிற்பீலியைத் திருமுடிக்கு அலங்காரமாகச்சாத்தி. (கட்டி நன்குடுத்த பீதகவாடையருங்கலவுருவில்) திருவரைபூத்தாற்போலே அழுந்தக்கொண்டு நன்றாகச் சாத்தின திருப்பீதாம்பரத்தையும், பெறுதற்கரிய திருவாபரணங்களையுமுடைய திருமேனியையுடையனாய், (ஆயர்பெருமானவனொருவன் குழலூதினபோது) ஆயர்க்கதிபதியான நீர்மையையுடைய

---

அரு;—பத்தாம்பாட்டு. (கருங்கணித்யாதி). (கருகின) என்றது—கறுத்தவென்றபடி, "கட்டி" என்றும், "உடுத்த" என்றும், பௌநருக்த்யம் தோன்றுகையாலே, அதுக்குப்பேதம் தோற்றவர்த்தமருளுகிறார் (திருவரை

னுமாய் அத்விதீயனுமானவன். நீர்மையில் மேன்மை தரை காணவொண்ணாதவன். ( குழலூதினபோது ) தனக்குத் தகுதியான குழலை அபிமானித்து ஊதினபோது.

(மரங்களித்யாதி) தேவதிர்யங் மநுஷ்யாதிஜாதிகள் வசவர்த்திகளாகிற வளவேயன்றிக்கே, ஜ்ஞாநகர்மேந்த்ரியாதிகள் மிகவும் குறைந்த வ்ருக்ஷங்களும் நீர்ப்பண்டமாம்படி உடலுருகி மதகுதிறந்தாப்போலே ப்ரவஹியாநின்றன. ( மலர்கள்வீழும் ) புஷ்பாதிகளெல்லாம் மதாஸ்யந்திகளாய் ஆஸ்ரயத்தையும் நெகிழ்ந்து பதிதமாகாநின்றது. (வளர்கொம்புகள்தாழும்) ஊர்த்த்வகதியை ப்ராபிக்கிற சாகைகளெல்லாம் ஆஸ்ரயத்தோடேதாழாநிற்கும். (இரங்கும்) காவலுங்கடந்து சூழ்ந்த கோவலர் சிறுமியர்போலவும், வானிள

னாய், அழகாலும் நீர்மையாலும் ப்ரவித்தனாய் அத்விதீயனாயிருக்கிறவன் திருக்குழலூதினபோது.

(மரங்கள்நின்று மதுதாரைகள்பாயும்) தேவமநுஷ்யதிர்யக்ஜாதிகள் உருகினவளவன்றிக்கே, அசேதநங்களான வ்ருக்ஷங்களானவை ஒருபடிப்படநின்று உள்ளுருகினமை தோற்ற மதுதாரைகள் பாயாநிற்கும். (மலர்கள்வீழும்) கொம்பில்நிற்கிற பூக்களெல்லாம் நிலைகொலைந்து வீழாநிற்கும். (வளர்கொம்புகள் தாழும்) மேலேவளருகிற சாகைகளானவை கீழேபடியாநிற்கும். (இரங்கும்) தன்னிலையலைந்து ஈடுபடாநிற்கும். ( கூம்பும்திருமால் நின்ற நின்றபக்கம்நோக்கி) ஸ்ரிய:பதியானவன் உலாவியுலாவிய

யித்யாதி'. "அவன்"என்றதுக்கு,கீழெல்லாம் கடாக்ஷித்துத் தாத்பர்யமருளுகிறார் (அழகாலுமித்யாதி).

"நின்று"என்றதினர்த்தம் (ஒருபடிப்படநின்று) என்றது. (உள்ளுருகினமைதோற்ற) என்றது - சேதநர்க்குஜ்ஞாநத்தாலே ஹ்ருதயசைதில்யம் பிறக்குமாபோலே, இவைகளுக்கும் அவ்வர்த்தம் எல்லார்க்கும் தோற்றும்படியென்றபடி. "கூப்பும்" என்றது—மெல்லொத்தாயிருக்கிறதென்று திருவுள்ளம்பற்றி, நின்றநின்றவீப்ஸையாலே பலவிடங்களில் நிற்கைக்குஹேதுவை ப்ரமாணமுகேந வருளிச்செய்யாநின்றுகொண்டு அர்த்தமருளுகிறார் (ஸ்ரிய:பதியித்யாதி).

(௧௦)

மூ.—குழலிருண்டு சுருண்டேறி யகுஞ்சிக்
கோவிந்தனுடைய கோமளவாயில்
குழல்முழைஞ்சுகளினூடு குமிழ்த்துக்
கொழித்திழிந்த வமுதப்புனல்தன்னைக்
குழல்முழவம் விளம்பும் புதுவைக்கோன்
விட்டுசித்தன் விரித்ததமிழ்வல்லார்
குழலைவென்றகுளிர்வாயினராகிச்
சாதுகோட்டியுட் கொள்ளப்படுவாரே. (௧௧)

பெரியாழ்வார் திருவடிகளேசரணம்.

---

ம்படியர் போலவும், மகிழ்ந்து தொடர்ந்து விடாத தேவஜாதிபோல வும், குழலோசைவழியே வந்து இரண்டுபாடும் துலுங்காத ம்ருக ஜாதிபோலவும், கூடு துறந்து வந்து படுகாடு கிடந்த பக்ஷிஜாதி போலவும், கத்யாகதிகளால் வந்த யோக்யதா பாவத்தாலே குழ லோசைவழியே ஆஶ்ரயத்தளவும் செல்லப்பெறுமல் ஈடுபடுவது. இரக்கம் - ஈடுபாடு. "உலாவியுலாவி நின்றாதின குழலோசைவ ழியே அவன் நின்ற பக்கம் நோக்கித்தாளும் தடக்கையும் கூப்பிப் பணிவாரைப்போலே, தாழ்ந்த கொம்புகளும் தன்னிலே குவியாநி ன்றன; "அவை செய்யும் குணமே" என்றுஆஶ்சர்யப்படுகிறுர். இசை வழியே கல்லுருகா நின்ருல் மரமுருகச்சொல்லவேணுமோ?.

இத்தால் "சேதநாதிபதார்த்தங்களில் ஆசார்ய வசநத்துக்கு உருகாதாரில்லை" என்றதாயிற்று. பிள்ளைலோகாசார்யர், பெரு மாள் "உம்மோடன்வயமுள்ளார்க்கெல்லாம் நம்வீடு கொடுக்கக் குறையில்லை"என்று திருவுள்ளமான பின்பு, "தூரஸ்தமான வ்ரு க்ஷங்களை யெல்லாம் கடாக்ஷிப்பது, ஆஸந்நமான வ்ருக்ஷங்களை யெ ல்லாம் திருக்கைகளாலே ஸ்பர்ஶநாதிகளை உண்டாக்குவது. நித்ய ஸம்ஸாரிகளுக்கும் ஶ்ரீவைஷ்ணவர்களுக்கும் தம்மோடே அந்வயமுண்டாம்படி செய்தருளினார்" என்று ப்ரஸித்தமிறே.

---

நின்று குழலூதினவழியேஅவன் நின்றநின்றபார்ஶ்வங்களைநோக்கி, அஞ்ஜலிசெய்வாரைப்போலேதாழ்ந்தகொம்புகளைக்குவியாநிற்கும் (அவைசெய்யும் குணமே) "அவைசெய்த குணமிருந்தபடி யென் ருன்"! என்று ஆஶ்சர்யப்படுகிறுர். .... .... .... (௧௦)

அவ;—நிகமத்தில், இத்திருமொழி கற்ருர்க்குப்பலம் சொல் லித் தலைக்கட்டுகிருர்.

அவ.—நிகமத்தில் இத்திருமொழி கற்றார்க்குப்பலம் சொல்லித் தலைக்கட்டுகிறார்.

ஸ்வா.— (குழலித்யாதி) (இருண்டுசுருண்டு குழலேறிய குஞ்சிக்கோவிந்தனுடைய கோமளவாயில்) குழல்-சுருட்சி, இருள்-கருமை; குஞ்சி - மயிர்; ஏறிய - பொருந்திய. கோவிந்தன் - ஸௌலப்யன். கோவிந்தன் கோமளவாய்- மஹார்க்கமான மாணிக்கம்போலே சிவந்த திருப்பவள மென்னுதல். நன்மையுடைத்தாய் விளங்காநின்றதென்னுதல்.(குழல் முழஞ்சுகளினூடு குமிழ்த்துக்கொழித்திழிந்த வமுதப்புனல் தன்னைக்குழல்முழவ விளம்பும்) குழலினுடைய ஸௌஷிகளூடே சிறுதிவலைகளாய், ஸப்தத்வாரங்களாலே கிளம்பி இழிந்த வாகம்ருதப்புனல் தன்னை. அதில் கிளம்பின ஸ்வரவசநவ்யக்திகளினுடையவோசைதன்னை. "தன்னை" என்றத்தாலே இவைப்ரதிபத்திபண்ணிச் சொல்லுதலிலுண்டான வருமையும் தோன்றுகிறது.

(புதுவைக்கோன்) திருமாளிகைக்குநிர்வாஹகரானவாழ்வார். (விட்டுசித்தன்) வடபெருங் கோயிலுடையானுடைய சித்தத்திலே வர்த்திக்கிறவரென்னுதல்; தம்முடைய சித்தத்திலேஅவன்றன்னையுடையவரென்னுதல்.இதுவிறே, நாராயணபதத்தில் ஸமாஸத்வய

---

வ்யா;— (குழலித்யாதி) " சுருண்டிருண்ட குழல்தாழ்ந்த முகத்தான்"என்கிறபடியே திருநெற்றிப்ரதேசத்திலே தாழ்ந்ததிருக்குழலாலே இருண்டுசுருண்டு மேலேநெருங்கிவளர்ந்த கேசபாசத்தையுடையனாய், கோரக்ஷணபரனாயிருக்குமவனுடைய அழகிய திருப்பவளத்தில். (குழல்முழஞ்சித்யாதி) திருக்குழலில் துளைகளின்வழியே கிளர்ந்தெழுந்து அலையெறிந்துகுதித்த அம்ருதஜலத்தைக் குழலோசையாகச்சொன்ன. இத்தால் - குழலோசையினுடைய ப்ரவாஹமும் ரஸ்யதையுஞ் சொன்னபடி.

(புதுவைக்கோன் விட்டுசித்தன் விரித்த தமிழ்வல்லார்) ஸ்ரீவில்லிபுத்தூருக்கு நிர்வாஹகரான பெரியாழ்வார், இதினுடைய

---

அரு;=பதினோராம்பாட்டு. (குழலித்யாதி) "கோமள" என்றதினர்த்தம் (அழகிய) என்றது. "முழஞ்சுகளினூடு" என்றதினர்த்தம்(துளைகளின் வழியே) என்றது. "விளம்பும்" என்றதினர்த்தம் (சொன்ன) என்றது.

ஜீயர் திருவடிகளே சரணம்.

---

த்தாலும் தோற்றுவதும்; இவர்தாம் தம்மளவில் ப்ரதிபத்தி பண்ணியிராமல், திருமாளிகையிலுள்ளா ரெல்லாரும் ஓதி, ஓதுவித்தறியும்படியாக சிஷ்யாசார்யக்ரமத்தைவிரித்த தமிழ்வல்லார். "குழல்" என்றது வ்யாஜமிறே. இத்தைஸாப்பிப்ராயமாகவல்லார். (குழலை வென்ற குளிர்வாயினராகி) குழலில் ஸ்வரவசந வ்யக்திகளால் வந்த குளிர்ச்சியும் உஷ்ணமென்னும்படி குளிர்ந்த ம்ருதுபாஷிகளாகி.(சாது கோட்டியுட்கொள்ளப்படுவாரே) ஸதாசார்யோபதேச பாரதந்த்ர்ய தத்பரரானவர்களுடைய திரளுக்குள்ளே கொள்ளும்படி அங்கீக்ருதராவர்.

(சாதுகோட்டிப்படுவாரே) அவர்களுடைய ஸமீபத்திலே சென்றாலிறே இவர்களுடைய ஸத்பாவம். (சாதுகோட்டிகொள்ளப்படுவாரே) அவர்களங்கீகரித்தாலிறே இவர்களதிகாரிகளாவது. (சாதுகோட்டியுட்கொள்ளப்படுவாரே) இக்கூட்டம் பிரிந்து போய்த்தந்தாம் திருமாளிகையிலே புகுந்தாலும், இவர்கள் நெஞ்சால் மறக்கமாட்டாமல் கொண்டாடுவதும் இவர்களதிகாரபாகமிறே.

பிள்ளை திருவடிகளே சரணம்.

---

## பெரியாழ்வார் திருமொழி மூன்றும்பத்து ஆறும்திருமொழி முற்றிற்று.

---

வைபவத்தை விஸ்தரேணப்ரதிபாதித்த த்ராவிடபாஷைகளான வித்தை ஸாபிப்ராயமாக வல்லவர்கள். (குழலைவென்ற குளிர்வாயினராகி) திருக்குழலோசையினுடைய குளிர்த்தியையும் கீழ்ப்படுத்தித்தான்மேலாம்படி குளிர்ந்த வ்யவஹாரத்தை யுடையராய். (சாதுகோட்டியுள் கொள்ளப்படுவாரே) ஸ்ரீவைஷ்ணவர்கள் திரளிலேபுகுந்தால் அவர்கள் ஸாதரமாகப் பரிக்ரஹிக்கும் படியாவர்கள். .... .... .... .... ... (கக)

பெரியஜீயர் திருவடிகளே சரணம்.

---

## பெரியாழ்வார் திருமொழி மூன்றும்பத்து ஆறும் திருமொழி முற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## மூன்றாம்பத்து ஏழாம்திருமொழி

### ஐயபுழுதி ப்ரவேசம்.

அவ;—இப்படி ஸ்தாசார்ய பரதந்த்ரரானவர்களை அந்தஸஜாதியர்முகத்தாலும், ஈஸ்வரனுடைய வ்யாமோஹப்ராவண்யாதிசயத்தாலும், இவர்கள் தங்களுக்கு அவன்பக்கல் பிறந்த ப்ராவண்யாதிசயத்தாலும் மீட்கவரிதாய்த்தோன்றுகையாலும், மீளாதபோதுவருமவத்யத்தாலும், அபாயபாஹுள்யத்தாலும் ஹிதகாமனுமாய், பரமக்ருபாளுவுமானவாசார்யன்போரவெறுத்தருளிச் செய்கிறபாசுரத்தை அந்யாபதேசவ்யாஜத்தாலே அருளிச்செய்கிறார் இத் திருமொழியில்.

---

ஐயபுழுதி ப்ரவேசம்.

அவ;-(க) "போகத்தில் வழுவாத புதுவையர்கோன்" என்கிறபடியே திருவவதார ஸமயமே தொடங்கி க்ருஷ்ணாவதார குணசேஷ்டிதங்களை யொன்றொழியாமல் அநுபவித்துக்கொண்டுபோந்தார்-கீழ்; மற்றுள்ளவாழ்வார்களைக் குமிழ்நீருண்ணப்பண்ணும் அவனுடைய ஸௌந்தர்யமாகிற ஆழங்கால்தானே மேடாய்த்தரித்துநின்று மங்களாசாஸநம்பண்ணிப்போரும் ஸ்வபாவரானவிவர், இப்போது அவர்களைப்போலே அவனை யநுபவிக்கவேணுமென்னுமாசைகிளர்ந்து, அவ்வாஸாநுரூபமாகக்கிட்டி அநுபவிக்கப் பெறுமையாலே தாமான தன்மையழிந்து, ஒரு கோபகந்யகாவஸ்த்தையை ப்ராபித்தாராய், ஸ்வதசையை அந்யாபதேசத்தாலேபேசுகிறார்.

---

அரு;—ஐயபுழுதிப்ரவேசம். *வண்ணமாடங்கள்தொடங்கி இவ்வளவும் ஒருபடிகையாக்கி வர்திஷ்டபமாணமானவித்தோடே ஸங்கதியருளுகிறார் (போகத்தில் வழுவாதவித்யாதி). மற்றுமுள்ளவர்களைப்போலே ஸௌந்தர்யத்திலே ஈடுபட்டு அதுகிட்டப்பெறாமையால் நாயகநாயிகாபாவத்துடன் அநுபவிக்கை, இவர் ஸௌந்தர்யத்தில் கால்தாழாமல் தரித்திருந்து மங்களாசாஸநம் பண்ணுமவராகையாலே சேரும்படி எங்ஙனேயென்ன அருளுகிறார் (மற்றுமுள்ளவித்யாதி). (குமிழ்நீருண்ணப்பண்ணும்) என்றது - அமிழ்ப்பண்ணுமென்றபடி. (கோபகந்யகாவஸ்த்தையை ப்ராபித்தாராய்) என்றது - "பையரவணைப்பள்ளியானோடு கைவைத்து இவள்வரும்" என்றத்தைப்பற்ற.

அந்யாபதேசத்தாலே பேசுகிறபடியை ப்பாட்டில் ப்ரமேயங்களைக் காட்டாநின்றுகொண்டு விவரிக்கிறார் (அதாவதித்யாதி).

---

(க) நா-தி அ-௯0.

மூ.—ஐயபுழுதி யுடம்பளைந்திவள் பேச்சு மலந்தலையாய்ச்
செய்யநூலின் சிற்றாடை செப்பனுடுக்கவும் வல்லளல்லள்
கையினிற் சிறுதூதையோ டிவள்முற்றில் பிரிந்துமிலள்
பையரவணைப் பள்ளியானொடு கைவைத்திவள் வருமே. (க)

---

இதுதானே * பயிலுஞ் சுடரொளி, * நெடுமாற் கடிமை முதலாக இவ்வர்த்தம் வந்தவந்த விடங்களிலும் துல்யவிகல்ப மாகவும் சென்றதிறே. இதுதான் யோக ப்ரஷ்டர் ஊர்வசியை வர்ணிக்குமாபோலே யிருப்ப தொன்றிறே. இதுதான் அநு ப்ரவேசாந்வயசக்தியாலே வ்யவஸ்த்தித மாயிறே யிருப்பது. இதுதான் ஸாதாரணத்திலு முண்டிறே. ஆனாலுமது உபாஸகாநுக்ர ஹார்த்த மாகையாலே வ்யவஸ்த்தித மன்றிறே. .... .... *

ஸ்வா;—முதற்பாட்டு. (ஐயபுழுதி யித்யாதி). (ஐய) அழகாதல். அநந்வயமாதல். அநந்வயமானால் மணலைக்காட்டுமிறே.

---

அதாவது-பருவம் நிரம்புவதுக்கு முன்னே க்ருஷ்ணவிஷயத்திலே ப்ரவணையாகாநின்ற தன்மகளுடைய தசையைக்கண்ட திருத்தாயார், இவள்பருவத்தின் இளமையையும், இப்படியிருக்கச் செய்தே அவன் விஷயத்திலே ப்ரவணையாய் அவனோடே இவள் கலந்துவருகிறபடியையும், இதுக்கடி ஸஜாதீயைகளாய் தத்விஷயத்தில் ப்ரவணைகளாயிருக்கும் பாலைகளோடுண்டான ஸம்ஸர்க்கம் என்னுமதத்தையும், இவள் லீலாவ்யாபாரத்திலே அந்வயிக்கிலும் அவனுடைய சிஹ்நங்களொழிய வேறொன்றறியாளானபடியையும், இவை எல்லாவற்றுக்கும் மூலமாகத் தோழிமார் இவளை வசீகரித்துக்கொண்டுபோய் அவன் பக்கலிலே அகப்படுத்தினபடியையும், இவள் தன்னுடைய ப்ராவண்ய ப்ரகாரங்களையும், இத்தைக்கண்ட பந்துவர்க்கமும் அயலும் சொல்லுகிற வார்த்தைகளையுமெல்லாம், ஸந்நிஹிதரைக்குறித்தும் தன்னிலேயும் பேசின பாசுரங்களாலே யருளிச்செய்கிறார். ... .... .... .... ....

வ்யா;—முதற்பாட்டு.(ஐயபுழுதியுடம்பளைந்து) அழகிய புழு.

---

அரு;— முதற்பாட்டு. (ஐயபுழுதியித்யாதி) "பையரவணைப் பள்ளியானோடு இவள் கைவைத்துவரும்" என்னத்தக்க பருவத்தவள் புழுதியளையக் கூடுமோவென்ன, "சிற்றாடைசெப்பனுடுக்கவும் வல்லளல்லள்" என்று

உடம்பெல்லாம் புழுதியாவானென் னென்றால், "விளையாடிப் புழுதியளைந்தேன்" என்று சொல்லலாமிறே. அது சொல்லாமல், "பந்து, கழல், அம்மானை" என்றாப்போலே சில வநந்வயபாஷணங்களைக் கேட்கையாலே "இவள் பேச்சு மலந்தலையாய்" என்கிறாள். "இவள்" என்று பருவத்தை யுறைக்கப் பார்க்கிறாள். "பேச்சும்" என்கிற அபியாலே • இவளொப்பனை குலைந்து வந்த விக்ருதியையும் காட்டுகிறது. (செய்யநூலித்யாதி) சிவந்த நூலாலே சமைக்கப்பட்ட சிறியவாடை உடுக்கவும் வல்லளல்லள். (செப்பனுடுக்கவும் வல்லளல்லள்) அதாவது - அவயவாந்தரத்தில் வாசியறியாமல் சுற்றுகையும், மத்யமாங்கம் பேணிச்சுற்ற வறியாமையும். அபியாலே-செவ்விதாக உடுத்து விட்டாலும் பேணவறியா ளென்னுமிடம் தோற்றுகிறது. (க) "பட்டுடுக்கும்" என்னக்கடவதிறே.

(கையினிலித்யாதி) விளையாடு சிறுதூதையும்சிறுசுளகும்கைவிடாதவள், கையில் இரண்டும் காண்கிறிலோம். இது இங்ஙனேயானபின்பு இவள் மாட்டாததில் லையிறே. க்ருஷ்ணனள வேய

---

தியை யுடம்பெங்குமளைந்து; அதாவது - புழுதியிலேயிருந்து விளையாடுகையாலே சரீரமெல்லாம் புழுதியாலே வ்யாப்தமாயிருக்கை. (இவள்பேச்சுமலந்தலையாய்) "உடம்பெல்லாம் புழுதியாவானென்" என்றால் "விளையாடிப் புழுதியளைந்தேன்" என்றுசொல்லலாமிறே; அது சொல்லாமல், "பந்து கழல் அம்மானை" என்றாப் போலே சில அநந்வித பாஷணங்களைப் பண்ணுகையாலேஇவள்பேச்சும்கலங்கி. (செய்யவித்யாதி)சிவந்தநூலாலே சமைக்கப்பட்டசிறிய ஆடையை உடுக்கு மிடமறிந்து நன்றாகவுடுக்கவும் மாட்டாள்.

(கையினிலித்யாதி) விளையாடுகலமாய்க்கொண்டு கையிலிருக்கும் மணற்சோறாக்கும் சிறு தூதையும் மணற்கொழிக்கும் சிறுசுளகும் இவள் விடுவதும் செய்திலள். இவள்பருவமிது. (பையரவித்

---

சொல்லும்படி பாலையாய் விளையாடுகையாலே கூடுமென்கிறார் (அதாவதித்யாதி) பேச்சுக்கலங்குகைக்கு ப்ரஸக்தி பூர்வகம் தாத்பர்யமருளுகிறார் (உடம்பெல்லாமித்யாதி).

(சிறுதூதை) சின்னபானை. (இவள்பருவமிது) என்றதுக்கு (கைகலந்து வாராநின்றாள்) என்றத்தோடந்வயம். ... ... ... ... (க)

---

(க) தி-௭௩-௧௧.

ன்றிக்கே, அழகிய திருவநந்தாழ்வான் மேலே பள்ளி கொள்ளுகிற ஆஶ்ராப்தி நாதனளவும் சென்று க்ருதஸங்கேதியாய், பூர்வஸ்ம்ருதி தலையெடுத்து வரவும் வல்லளென்று தோற்றுகின்றது. அபி - பரத்வத்தளவும் காட்டுமிறே.

இத்தால் தேஹநாஶ ஹேதுவாக பி(ரி)ந்த விஷயக்ரஹணத்தாலே பி(ரி)ந்தப்ரகாஶத்வாரேந்த்ரியஸமொழிந்த விஷயேந்த்ரிய போகமிறே த்யஜிக்கலாவது. ப்ராப்த விஷய தோஷமுண்டானால் இந்த்ரியங்களும் தேஹமும் போரச் சேருமிறே. ஆனால் அது தன்னை ஆசார்ய முகத்தால் சொல்லாதே அங்யபரமாகச் சிலவற்றைச் சொல்லலாமோ வென்னில்; அவன்தான் ப்ராப்தவிஷயதோஷத்தால் வருமவையும் தூரதஃ பரிஹரணீய மென்றிறே சொல்லிவைப்பதும்; அதுக்கஞ்சி அங்யபரமாய் அநங்வயங்களுமானவற்றைச் சொல்லியாகிலும் தத்காலோசித மாகப் பிழைக்கவும் வேணுமிறே. ஞாலமுண்ட வண்ணத்தைத் தான் பலகாலும் சொல்லிச் "சொன்னேனே" என்றஞ்ச வேண்டும்படியிறே அம்மனை சூழ்ச்சி யிருப்பது. இதுதான் பக்திரூபாபந்நஜ்ஞாநம்கைவந்தார்வார்த்தை யிறே.

இதுக்கெல்லாம் ஸம்ஸ்கார மெங்கே, விஷயாநுரூபம் ஸ்வரூபமென்று, நிர்ணயித்து சேஷத்வாநுரூபஸ்வரூபத்தை அந்த பக்திரூபாபந்நஜ்ஞாநத்தாலே மறைக்கவல்ல பரிபாக முண்டோ வென்று தோற்றுகிறது. விஷயதோஷபோக முண்டானாலும் லீலாரஸபோகோபகரணங்களாகவிறே இவள் புத்திபண்ணுவது. லீலோபகரணங்கள் போகோபகரணங்களோடே அவன் தன்னையு மொன்றாகவிறே ப்ரதிபத்திபண்ணியிருப்பது. (௧)"உக்கமும் தட்டொளியும்" என்றவைமுதலான உபகரணங்களோடே அவன் தன்னையும் கூட்டித்தரவேணுமென்றதிறே. அன்றியே ஸ்வரூபவிவேகோபகரணத்தையும் உண்ணுஞ்சோற்றில் வ்யாவ்ருத்தியாகவுமாம். இரண்டிடத்திலும் கைவைத்து என்னையுமவனையும் சேர்க்கிற ப்ரகாரமெங்ஙனேயோதான். ... ... ... ... (௧)

யாதி) (௨) "அரவணையாயாயறே" என்னும்படி திருவனந்தாழ்வானைப் படுக்கையாக வுடையவனோடே இவள் கைகலந்து வாரா நின்றாள். .... .... .... .... ... (௧ )

(௧) திருப்பா-௨0 (௨) ௨-௨-௧.

மூ,—வாயில்பல்லுமெழுந்தில மயிரும்முடி கூடிற்றில
சாய்விலாதகுறுந்தலைச் சிலபிள்ளைகளோடிணங்கித்
தீயிணக்கிணங் காடிவந்திவள்தன்னன்ன செம்மை சொல்லி
மாயன் மாமணிவண்ணன்மேலிவள் மாலுறுகின்றாளே. (௨)

ஸ்வா.—இரண்டாம்பாட்டு. இவள் சொலவும் செய்லும்மிக
வும் வேறுபட்டிரா நின்றதியென்கிறாள்.

ஸ்வா.—(வாயித்யாதி) "வாயில்பல்" என்றது - முன்வாயில்
பல்லென்றபடி. அதுவிறே முற்படத்தோற்றுவது. (மயிரும்முடி
கூடிற்றில) மயிரும்சேர்ந்து முடிக்கக்கூடிற்றில. (சாய்விலாதகுறு
ந்தலைச் சிலபிள்ளைகளோடிணங்கி) தாய்க்கடங்காமையிலே தலை
நிற்கவல்ல சிறுப்பெண்பிள்ளைகளோடிணங்கி, (தீயிணக்கிணங்காடி
வந்து) ஜாத்யுசிதமல்லாதவிளையாட்டிலே நெஞ்சுபொருந்தி; அவன்
ஸௌந்தர்யத்திலே போக்யபுத்திபண்ணிவந்து. அதிலே முதிர
நடத்திவந்து.

வ்யா,—இரண்டாம்பாட்டு. (வாயிற்பல்லுமெழுந்தில) வா
யில் பல்லும் முளைத்தன வில்லை. இத்தால் - பெற்றதாயாகையா
லே,இவளை அத்யந்த சிசுவாசநினைத்துச் சொல்லுகிறாள். (மயிரும்
முடி கூடிற்றில) மயிரும் சேர்த்து முடிக்கலாம்படிகூடினவில்லை.
(சாய்வித்யாதி) சாய்வு - ஒடுக்கம். தாய்க்கடங்காதே தண்மையில்
தலைநின்ற சில பெண்பிள்ளைகளோடே கூடி. (தீயிணக்கிணங்காடி
வந்து) பொல்லாத இணக்கத்தோடே இணங்கிவந்து. அதாவது
தன்னோடு கலந்துவந்தாரைத் தாய்க்கிழடங்காதபடிதலக்கறுக்கும்
விஷயத்தோடே கலந்துவந்தென்கை.

அரு;—இரண்டாம்பாட்டு, (வாயிலித்யாதி) "மாலுறுகின்றாள்" என்று
சொல்லத்தக்கவளை "பல்லுமெழுந்தில" என்றால்; இது மெய்க்கொள்ளும்
படி யெங்ஙனே யென்னவருளுகிறார் (இத்தாலித்யாதி). "சாய்விலாத" என்
றதின்பலிதம் (தாய்க்கடங்காதே) என்றது. "குறுந்தலை" என்றதினர்த்தம்
(தண்மையில் தலைநின்ற) என்றது. அதாவது-தூர்வ்யாபாரத்திலேஶ்ரேஷ்ட
டர்களென்றபடி.(பொல்லாத விணக்கத்தோடே) என்றது - தாய்வேறு கன்
றுவேறாக்கும் ஸ்வபாவனாய் ஸம்ஶ்லேஷவிஷயமான க்ருஷ்ணனோடே யென்
றபடி. (தலக்கறுக்கும் உறவறுக்குமென்றபடி.

(இவள்) அம்மே இதிறே பருவம். (தன்னன்ன செம்மை சொல்லி) தன்செயலுக்குத் தகுதியான செவ்வைக்கேட்டைச்செவ்வையாகத்தானே ப்ரதிபத்திபண்ணிச் சொல்லிச்சொல்லி. (மாயன் மாமணிவண்ணன்மேல்) இவளை இப்படி அநந்வயமாகப் பேசுவிக்க வல்ல ஆஶ்சர்யத்தையுடையவன்; இதுதான்விளைத்ததும் மேலீடான வடிவழகைக் காட்டியிறே. (இவள் மாலுறுகின்றாளே) அவன் இவள்மேலே மாலுறுகையிறே கர்தவ்யம்; அது காணுதொழிந்தால் இவள் பக்கல் எனக்குண்டான ஆபிமாநிகப்ராந்திதானொழியவுமாமிறே. இவள் பக்கல் தோஷகுணஹாநிகள் மிகமிக, இவள்பக்கல் எனக்குண்டான வ்யாமோஹமும் மிகுந்து செல்லுமத்தனையோதான்.

இத்தால் பூர்வவ்யவஸாயலேசாங்குரமும் இவள்வாக்மித்வத்தில் காண்கிறிலோம், மதியெல்லா முள் கலங்குகையாலே நாநாவிஷயஸாபேக்ஷமான நாநாரூபப்ரபத்திகளும் ஏகவிஷய நிகமநமாம்படி கூடிற்றில்லை, (க)"மொய்பூங்குழற்குறிய" என்னுமாபோலே; ஸதாசார்யன் கையிலு மடங்காமையிலே நிலைநின்று "நின்றோம்" என்கிறது தன்னையுமறியாத சிறுமையுடையரான பரதந்த்ரரோடே ஸஹவாஸம் செய்து, அவர்கள் கொண்டுபோய் அவனோடே சேர்க்க, அவன் நல்வினைக்கின்றியிலே தீயிணக்கிலே சேர்த்து ஸ்வ

---

(இவள்தன்னன்ன செம்மைசொல்லி) இப்படி செய்துவந்த இவள், தன்னோடொத்த செவ்வையைச் சொல்லி. அதாவது - "இத்தனைபோது எங்கேபோனாய்? ஆரோடிணங்கிவந்தாய்"? என்றால், உண்மை சொல்லுகையன்றிக்கே, தன்னுடைய க்ருத்ரிமாநுகுணமாகச்சில குடிலோக்திகளைச் செவ்வைபோலேசொல்லி யென்கை. (மாயன் மாமணிவண்ணன்மேல்)ஆஶ்சர்யமான குணசேஷ்டிதங்களையும் நீலரத்நம்போன்ற வடிவையுமுடையவன் விஷயத்திலே. (இவள் மாலுறுகின்றாளே) இப்படி செம்மைசொன்னவிவள், அதுக்குச்சேராதபடி அவன் குணசேஷ்டிதங்களைச் சொல்லுவது வடிவழகைச் சொல்லுவதாய்க்கொண்டு பிச்சேறுகின்றாள்.

---

"தன்னன்ன" என்றதினர்த்தம்-(தன்னோடொத்த) என்றது. "மா" என்றுகருப்பாக விவக்ஷித்தர்த்தம் (நீலரத்நமித்யாதி)... ... ...(உ)

---

(க) திருவி-

மூ.-பொங்குவெண்மணற்கொண்டுசிற்றிலு முற்றத்திழைக்கலுறில்
சங்குசக்கரந்தண்டு வாள் வில்லுமல்லதிழைக்கலுறாள்
கொங்கையின்னம்குவிந்தெழுந்திலகோவிந்தனோடிவளைச்
சங்கையாகி யென்னுள்ளம்நாடொறுந்தட்டுளுப்பாகின்றதே.

---

ரூபாநுரூபமான போக்ய போக்த்ருவர்க்கங்களை மாறும்படியான ருசியிலே அவகாஹிப்பிக்க, அதிலே நெஞ்சு பொருந்து வந்த வேறுபாடு ஆஶ்ரயத்தில் பொருந்தாமை தோன்றியிருக்கச்செய்தேயும், அதுக்குத்தகுதியான வ்யாபாரங்களை ஸ்வரூபமாகச்சொல்லிச் சொல்லி, ஸதாசார்ய பரதந்த்ரையான இவளை யிப்படி யிப்படி ப்ரமிக்கும்படி பண்ணின ஆஶ்சர்ய சக்தியுக்தனுடைய ஸௌந்தர்யத்திலே காணும் இவள் வ்யாமோஹம் மிகுந்து செல்லுகிறதென்று, ஸதாசார்யனானவன் ஸச்சிஷ்யனை நியமிக்க, அதிலே கருதினவனை, ஸப்ரஹ்மசாரிகள் தங்களோடே சேர்த்து பகவத்விஷயத்திலே மூட்ட, மூட்டின ப்ரகாரங்களைப் பல யல ப்ரகாரங்களாலுமறிந்த ஆசார்யனானவன், பரிபாகம் பிறப்பதற்கு முன்னேமூட்டினவர்களை யும், மூண்ட சிஷ்யனையும் கர்ஹிக்கிறானாய்ச் செல்லுகிறது. (௨)

அவ;—மூன்றாம்பாட்டு, சங்கை ப்ரத்யக்ஷம்போலே தோற்றுகின்றதென்கிறாள் இப்பாட்டில்.

ஸ்வா.—(பொங்கித்யாதி) முன்னே "கைவைத்து இவள் வரும்" என்றும், "மாலுறுகின்றாளே" என்றும், சொல்லிப்போந்தவை யெல்லாம் இவள் சிற்றிலிலேப்ரத்யக்ஷமாகா நின்றதிறே. (க)"வண்டல்நுண்மணல்"(௨) "எக்கலிடுநுண்மணல்"என்னுமாபோலேயும் தாவள்யத்தையும் சுத்தியையு முடைத்தான மணலைக்கொண்டு.

---

வ்யா;—மூன்றாம்பாட்டு. (பொங்கித்யாதி) "புறம்பே போய் * தீயிணக்கிணங்காடாதே முற்றத்திலே யிருந்து விளையாடு" என்று நான் நியமித்து வைத்தால், வண்ட லிட்டதாலகயலே நுண்ணியதாய் வெளுத்திருக்கிற மணலைகொண்டு முற்றத்திலே

---

அரு;—மூன்றாம்பாட்டு. (பொங்கித்யாதி) மாயணிவண்ணன்மேலே மாலேறினவிவள் சிற்றிலிழைக்கைக்குப்ரஸக்தியென்னென்னவருளுகிறார் (புறம்பேயித்யாதி), "பொங்கு" என்றதுக்கர்த்தம் (வண்டலித்யாதி). (வண்டலிட்டது) என்றது - நீராலே கொழிக்கப்பட்டதென்றபடி. (நியமித்துவைத்

---

(க) நா-தி-௨- (௨)

(முற்றத்தூச்சிற்றி லிழைக்கலுறில்) முற்றத்திலே கொட்டகமிடு கையிலே ஒருப்படில். (இடில்) சங்கை பரிஹரிக்கைக்காக வொருப்படில், சங்கை பரிஹரிக்கிறதும் தன் நினைவாலேயிறே. (சங்கும்) ✻ மடுத்தூதியசங்கும். (சக்கரமும்) ✻ அருளார் திருச்சக்கரமும். (தண்டு) ✻ அருளென்னும்தண்டும். (வாள்) ✻ நாந்தகமென்னுமொண்வாள். (வில்) ✻ நாணொலிச்சார்ங்க மென்னும் வில்; இவை முதலான அஸாதாரணசிஹ்நங்களைத் "தன் பருவத்தார்க்குதவினவை" என்று இழைக்குமதொழிய, வேறுதானும் நானும்போந்த ஸ்வரூபாநுரூபப்ராவண்யமும் இழைக்கலுறுள். தன்னுடையபூர்வாவஸ்த்தையையும்,உபகாரஸ்ம்ருதியையும்நினைக்கிலிறே இழைக்கலாவது. (உறில்) என்கிற யதி (௨) யாலே-ஸ்தப்த்தை (ஜ) யாய் நிற்றல், சில அநந்வய பாஷணங்களைச் சொல்லுதல் செய்யுமென்னுமிடமும் தோற்றுகிறது.

(கொங்கையின்னம் குவிந்தெழுந்தில) முலைகளானவை வாசி தோன்றினவில்லை, ஒருவெளுப்பான தொழிய. (க) " ஓமுழுமுலை முற்றும் போந்தில" என்னக்கடவதிறே. இவள் தான் யுவதியானாலும் தாயார்க்குஇவளுடைய சைசவமிறேதோற்றுவது. (கோ

கொட்டகமிட வொருப்பட்டாளாகில், (உறில்) என்கையாலே தில் இவளுக்கு மாஸ்லில்லாமையும்தன்னுடைய நிர்ப்பந்தத்துக்காகச் செய்கிறதித்தனை யென்னுமதும் தோற்றச்சொல்லுகிறுள். (சங்கித்யாதி) அவனுக்கு அஸாதாரணசிஹ்நமாய், அழகுக்கும் விரோதிநிரஸநத்துக்கு முடலாயிருக்கும் ஸ்ரீபஞ்சாயுதமுமொழிய வேறொன்று இடநினையாள்.

(கொங்கை யின்னம் குவிந்தெழுந்தில) (க) "முலையோ முழு முற்றும் போந்தில" என்கிறபடியே முலைகளானவை ஆண்முலைக்கும் பெண்முலைக்கும்வாசிதோற்ற முகம்திரண்டுகிளர்ந்தனவில்லை இவள்தான் யுவதியானாலும் தாயார்க்கு இவளுடைய சைசவமிறே

தால்) என்று கூட்டிச்சொன்னதென் கொண்டென்னவருளுகிறுர்) உறிலெ ன்கையாலேயித்யாதி). இந்தயதி(௨)சப்தத்தாலே கூட்டிறேனென்றுகருத்து.

"கொங்கையின்னமெழுந்தில" என்னவமைந்திருக்க "குவிந்தில" என்றும் சொன்னதுக்கு ஸத்ருஷ்டார்த்தமாகத் தாத்பர்யமருளுகிறுர்( முலையோவித்

(க) திருவி-

விந்தனோடிவளைச் சங்கையாகி) அத்யந்தம் ஸுலபனாய் ரக்ஷகனான வனோடே ரக்ஷ்யமாகவும் ஸுலபையாகவும் மாட்டாத விவளை ஸம்ஶ்லிஷ்டையாக ஸம்பாயித்து. (என்னுள்ளம் நாடொறும் தட்டுளுப்பாகின்றதே) என்னுடைய மனஸ்ஸானது நாள்தோறும் தடுமாறிச் செல்லாநின்றது. (தட்டுளுப்பு) தடுமாற்றம். அன்றியே, ஜலபாத்ரகதமான லவணம்போலே கரையுமென்னுதல். அன்றியே (தட்டுளுப்பு) உளுவுடைய மரத்தை உளுப்பென்றதாய், அம்மரத்தைத் தட்டுந்தோறும் சிதிலமாமாபோலே யென்னுதல்.

இத்தால், விஷயங்களில் கிளம்பி ப்ரகாசிக்கிற இந்த்ரியங்களை உபகரணமாக்கிக் கொண்டு * பின்னானார் வணங்கும் ப்ரதமபதத்திலே நின்று நினைக்கப்புக்காளாகில், அவளிலுங்காட்டில் அவனுக்கு அநர்ஹரான மத்யமபதத்வய நிஷ்ட்டையையும் சரமபதத்வய நிஷ்ட்டையையு முடையவர்களை உத்தேஶ்யராக த்ரிவிதகரணத்தாலும்ப்ரதிபத்திபண்ணி, சேஷத்வாநுரூபமாக, பாதந்த்ரையான தன்னையும், இவ்வர்த்தத்தை உபதேசித்த வென்னையும், இத்தால் வந்த உபகாரஸ்ம்ருதியையும் ப்ரதிபத்தி பண்ணவிட்டால் "ஸந்தேஹமும் படுபாடும்போனலாகாதோ" என்று ஆசார்யன் மிகவும் வெறுத்தானென்னுமிடம் தோற்றுகிறது. இதுக்கெல்

---

தோற்றுவது. (கோவிந்தனோடிவளைச் சங்கையாகி) பசுக்களோடும் பொருந்திவர்த்திக்கும் நீர்மையையுடையனானவனோடே இவளுக்குக் கலவியுண்டாகவேணுமென்று சங்கித்து. (என்னுள்ளம் நாடொறும் தட்டுளுப்பாகின்றதே) என்னுடைய மனஸ்ஸானது நாள்தோறும் தடுமாறிச்செல்லா நின்றது; இவளுடைய ஶைஶவத்தைப் பார்த்தவாறே "உண்டு" என்னப்போகிறதில்லை; இவளுடைய செயல்களைப்பார்த்தவாறே இல்லையென்னப்போகிறதில்லை. ஆகையால், இன்னதென்று நிர்ணயிக்கமாட்டாமல் என்னுடைய ஹ்ருதயமானது தடுமாறுநின்றதென்கை. தட்டுளுப்பு - தடுமாற்றம். .... .... ... ... ... (௩)

---

யாதி). தடுமாறிச் செல்லும் ப்ரகாரத்தை "கொங்கையின்னம் குவிந்தெழுந்தில" என்றதையும், சங்கு சக்கரமித்யாதியையும் கடாக்ஷித்து உபபாதிக்கிறார் (இவளுடைய வித்யாதி). (௩)

மூ.—

ஏழைபேதையோர் பாலகன் வந்தென்பெண்மகளை யெள்கித்
தோழிமார்பலர் கொண்டுபோய்ச் செய்தசூழ்ச்சியை யார்க்குரைக்
ஆழியானென்னு மாழமோழையிற் பாய்ச்சியகப்படுத்தி [கேன்.
மூழையுப்பறியாதவென்னும் மூதுரையுமிலளே. (ச)

லாம்; பரிபாகமெங்கே. நாநாவான பக்தி விசேஷங்களெல்லா
மொருத்தலைத்தாலிறே பக்திவிசேஷம் தானுண்டாவது. "இன்
னம்" என்கையாலே சேதநனிலும் ஈஶ்வரனிலுங்காட்டில்பரிபாக
ஸாபேக்ஷன் ஆசார்யனென்றுதோற்றுகிறது.

"கொங்கையின்னம் குவிந்தெழுந்திலபொங்கு வெண்மணல்
கொண்டு சிற்றிலும் முற்றத்திழைக்கலுறில், சங்குசக்கரம் தண்டு
வாள் வில்லுமல்லதிழைக்கலுறாள். கோவிந்தனோடு இவளைச் சங்
கையாகி" என்றங்வயம். .... .... ... .... ... (௩)

அவ,—நாலாம்பாட்டு; இப்பாட்டால், தத்துல்யரான அநு
கூலஜநங்களை வெறுத்தபாசுரத்தைத் தோழிமார்மேலேவைத்து
அருளிச்செய்கிறார்.

வ்யா.—(ஏழையித்யாதி) பற்றித்து விடமாட்டாத சபலை.
இது சபலபாவமென்னுமறியாதவள். (பேதை) தான் பற்றினவன்
தன்னை விட்டாலும் தான் விடமாட்டாமையிறேசபலபாவமாவது.
(என் துணை)"தன் துணை" என்றதிறேஏழைத்தனமாவது. (ஓர்பால
கன்) அத்விதீயமானபிள்ளைத்தனத்தை யுடையவன். (வந்தென்

வ்யா;—நான்காம்பாட்டு. (ஏழை) நல்லதுகண்டால் விடமா
ட்டாத சபலை. (பேதை) மேல்விளைவது நிரூபிக்கத்தக்க வறிவில்
லாதவள். (ஓர் பாலகன்) இரண்டுக்குமடியான பருவத்தின் இள

அரு;—நாலாம் பாட்டு. (ஏழையித்யாதி) "ஏழை" என்றும்,"பேதை"
என்றும்-தீந விஷயத்தில் ப்ரயோகம் காண்கையாலே பௌநருக்த்யம்வாரா
மைக்காக வர்த்தபேதம் காட்டுகிறார் (நல்லதித்யாதி வாக்யத்வயத்தாலே,
தீநர்க்கு சாபல்யமும் மேல்வரும் நன்மைதீமைகளும் தெரியாதிறே யென்று
கருத்து. "ஓர்" என்றதுக்கு அத்விதீய மென்று சப்தார்த்தமாய், அதுக்குப்
பலிதார்த்தம் (இரண்டுக்கு மடியான) என்றது. "ஆண்பெண்" என்கிற
விசேஷ மறப் பச்சைப் பசும் பிள்ளையைப் பாலகனென்று லோகவ்யவஹார
மூண்டென்று திருவுள்ளம் பற்றி யருளுகிறார் (பருவத்தினிளமையையு

பெண்மகளை) என்பெண்மகளை வந்துகிட்டி. (இள்கி) எத்திஸ்பர் ஸித்து. (தோழிமார் பலர்கொண்டுபோய்) "தோழிமார் கள்வர் ஐவர் பதின்மர்" என்னுமளவன்றே; அநேகர். இவர்களெத்திக் கொண்டுபோய். (செய்த சூழ்ச்சியை யார்க்குரைக்கேன்) க்ரியாபர் யந்தமாகச்செய்த க்ருத்ரிம வ்யாபாரங்களை - யாருக்குச் சொல்லு வேன்.

(ஆழியானென்னு மாழமோழையில்பாய்ச்சியகப்படுத்தி) கடீ ராப்தியிலே கண்வளருகிறவனென்னுதல். * கருதுமிடம்பொரு கிற திருவாழியை யுடையவனென்னுதல்; ஆஸ்ரித விஷயத்தில் செய்ய நினைத்திருக்குமவை அவகாஹநமாயிருக்கையாலே ஒருவ ராலும் பரிச்சேதிக்க வொண்ணாதவனென்னுதல். (என்னும்) இப் படி, பிள்ளை கொல்லிமடு வென்னும்ப்ரஸித்தியை யுடைத்தான (ஆழமோழை) சுழியும் குமிழியும் கிளம்புமபடியாழ்ந்தமடு. ப்ரவா ஹத்திலே சுழி; தேக்கத்தில்குமிழி; இப்படிப்பட்டவற்றுக்குள்ளே

மையையுடையவள். (என் பெண்மகளை) இப்படியிருக்கிற வென் பெண்பிள்ளையை. (தோழிமார் பலர் - வந்து-† இள்கி - கொண்டு போய்)தோழிமாரனேகராக வந்து "விளையாடப்போரு" என்று எத்தி, கூடக்கொண்டுபோய்.

(ஆழியானென்னு மாழமோழையிற்பாய்ச்சியகப்படுத்தி- செய் தசூழ்ச்சியை யார்க்குரைக்கேன்) (க) "அணியாராழி" என்கிறபடி யே ஸர்வாபாணங்களும் தானேயாகப்போரும்படியான திருவாழி யையுடையவனென்று ப்ரஸித்தமாய், ஒருவராலும் நிலைகொள்ளவொ ண்ணாதபடியிருப்பதாய், அகப்பட்டாரை உள்வாங்கிக்கொள்ளும்

டையவள்) என்று. அந்வயமுகேந ப்ரதீகம் க்ரஹித்துச் சப்தார்த்த மருளு கிறார் (தோழிமாரித்யாதி). "இள்கி" என்றதினர்த்தம் (விளையாடப் போரு வென்றெத்தி) என்றது; போருவா வென்றபடி. (எத்தி) வஞ்சித்து.

மற்றை ஆயுதா உஉ பரணங்களிருக்க, திருவாழியை யிட்டு நிரூபிக்கை யாலே பலிதார்த்தத்தை ப்ரமாணமுகேந காட்டுகிறார் (அணியாரித்யாதி). "என் னும்" என்ற தினர்த்தம் (ப்ரஸித்தமாய்) என்றது. "ஆழ" என்றதுக்கர்த் தம (ஒருவராலே யித்யாதி). "மோழை" என்றதினர்த்தம் (அகப்பட்டாரை

(க) தி-வாய்-அ-௩-௪. † (பா.) எள்கி.

முழுநீந்திக் கரைப்படுத்தி. (மூழையுப்பறியாத) உப்பறியாதமூழை. நித்யமாக வளர்ந்தாலும் அதில் ரஸமறியாதமூழை. (என்னும் மூதுரை) பழையதாகமுன்னோர் சொல்லிப்போருகிற ப்ரஸித்தியுமிலளா.

"ஏழைபேதை மூழையுப்பறியாத வம்மூதுரையுமிலளென்னு மென் பெண்மகளைத் தோழிமார் பலர்வந்திள்கிக்கொண்டுபோய், ஆழியானென்னும் பாலகனென்னு மாழமோழையில் பாய்ச்சியகப்படுத்திச் செய்த சூழ்ச்சியை யார்க்குரைக்கேன்" என்றந்வயம்.

இத்தால் ஸதாசார்யனானவன் எல்லாவவஸ்த்தையிலும் சிஷ்யன் அவத்யம் கண்டாலும் கைவிடமாட்டானென்னுமாகாரம் தோன்றுகிறது; "ஏழை" என்கையாலே. அந்த ஏழைத்தனத்தை உபபாதிக்கிறதுமேல் அதாவது - ஜ்ஞாத்ருத்வ கர்த்ருத்வ போக்

கிழாறுபோலேயிருக்கிற விஷயத்திலே உள்ளுறத்தள்ளியகப்படும் படி பண்ணிச்செய்த க்ருத்ரிமவ்யாபாரத்தை யார்க்குச் சொல்லுவேன்.

(மூழையித்யாதி) இவள்படி பார்த்தால், "முகந்துபரிமாறுகிற மூழையானது தான்முகக்கிற பதார்த்தத்தின் ரஸமறியாது" என்னும் இந்த மூதுரையும் தன்பக்கல் இல்லாதவள்கிடீர். அதாவது- தாங்கள் கலந்து பரிமாறுகிற விஷயத்தின் ரஸமறியாதாரையும் "உப்பறியாமூழை" என்று லோகம் சொல்லும் பழமொழிக்கும் யோக்யதை யில்லாதவள் காணுமிவள். "இப்படியிருக்கிற விவளை இவர்கள் இவ்விஷயத்திலே கொண்டுபோய் அகப்படுத்தி மற்றொன்றறியாதபடியாக்குவதே!" என்று தன்னிலேநொந்துசொல்லுகிறாள். ... ... ... ... ... ... ... (ச)

யித்யாதி). "பாய்ச்சி" என்றதுக்கர்த்தம் (உள்ளுறத் தள்ளி) என்றது. (உள்ளுற) உள்ளே ப்ரவேசிக்கும் படி.

"மூழையது உப்பறியாதென்னும் மூதுரையு மிலள்" என்றந்வயித்துச் சப்தார்த்த மருளுகிறார்(இவள் படியித்யாதி). "மூதுரையும் தன் பக்கலில்லாதவள்" என்றத்தாலே இவ்வார்த்தை இவள் சொல்லாளென்று தோன்றுமைக்காக வுபபாதிக்கிறார். (அதாவதித்யாதி). (காணுமிவள்) என்றவநந்தரம் "என்கை" என்று சேஷம். இப்பாட்டுக்கெல்லாம் தாத்பர்யமருளுகிறார் (இப்படியித்யாதி). "ஆர்க்குரைக்கேன்" என்றதாலே பலிதம் (தன்னிலேநொந்து சொல்லுகிறாள்) என்றது. ... ... ... ... ... (ச)

மூ.—நாடுமூரு மறியவேபோய் நல்லதுழாயலங்கல்
சூடியானன் போமிடமெல்லாஞ் சோதித்துழிதருகின்றாள்
கேடுவேண்டுகின்றார் பலருளர் கேசவனோடிவளைப்
பாடுகாவலிடுமி னென்றென்று பார்தடுமாறினதே.

---

த்ருத்வங்களில் அந்த வாசார்யனுடைய "மதீ பூர்வாசார்யத்தால்" என்னுமாபோலே ப்ரமாணானுகூலமான நிலையும் சொலவும் செயலுமொழிய, ஸ்வபோக்த்ருத்வாதிகளில்லையென்கிறது.

"மூழையுப்பறியாதவம் மூதுரையுமிலளே" என்னும் ப்ரஸித்தியாலே;

மூதுரையுமில ளென்கையாலே, பூர்வாசார்யர்களுடைய வசனமொழிக்கவை யெல்லாப்ரகாரத்தாலும் கொண்டாடவொண்ணாது; கொண்டாடில் 'ஏவம்ப்ரகார பூதையானவென் பெண்மகள்' என்று; அவன் அபிமானிக்கும்படி ஜந்மவித்தமான பாரதந்த்ரயத்தையுடையவளை ஸம்பந்தஜ்ஞானத்தினுணர்த்தியுடையார் வந்தெடுத்துக்கொண்டுபோய் * அடியார்க்கென் செய்வனென்றேயிருக்கும் கல்யாணகுணங்களை ப்ரகாசிப்பித்து, அந்வீதியமான பருவத்தையும் வ்யாமோஹத்தை யுமுடையவனென்னு மாகார விசேஷத்தையும் ப்ரகாசிப்பித்து, அதிலே ப்ராவண்யத்தையும் நடத்துவித்து, அஹமர்த்தபர்யந்தமான ஸம்பந்தத்தையும் இனி மீட்கவரிதாம்படி நிலமாக்கி, இவர்கள் செய்தப்ரகாரங்களை இவர்கள் தங்களுக்குச் சொல்லவோ? அந்த வ்யாமுக்தனுக்குச் சொல்லவோ? அதிலேயகப்பட்டவிவள் தனக்குச் சொல்லவோ? ஸநகாதிகளுக்குச் சொல்லவோ? வ்யாஸர்திகளுக்குச் சொல்லவோ? விஹிதபாரதந்த்ரரான ஸம்ஸாரிகளுக்குச்சொல்லவோ? அவிஹிதவிஹிதகாம்யபரரானார்க்குச் சொல்லவோ? யார்க்குரைக்கேன். .... (ரு)

ஸ்வா;—அஞ்சாம்பாட்டு. கொண்டுபோன தோழிமார் நீக்கப்பார்த்தாலும் அவனைவிடாதபடி யைச் சொல்லுகிறது.

ஸ்வா;— (நாடித்யாதி) திருவாய்ப்பாடி நாடும், திருவாய்ப்பாடியானவூரும்; (க) "நாடுநகரமும் நன்கறிய" என்னுமாபோ

---

வ்யா ;—ஐந்தாம்பாட்டு. (நாடுமூருமறியவேபோய்) தானும் தன்னையணைந்த பந்துவர்க்கமும் அறிந்தவளாக அவன்பக்கலிலே

---

அரு;—அஞ்சாம்பாட்டு (நாடுமித்யாதி; வ்யாவர்த்யபூர்கம்தாத்பர்யமருளுகிறார்(தானுமித்யாதி). சூடுந்துழாயலங் கல் நல்லதாயேயிருக்க, "நல்ல"

லே. அன்றியே சாடுகிற ஒருவரிருவரன்றியே யிருக்கிற வூரிலுள்ளாரெல்லாருமறியப்போய். (நல்லதுழாயலங்கல்சூடி) ஸம்ஶ்லேஷத்தாலே பிசகின திருத்துழாய் மாலையைச்சூடி. (அலங்கல்)மாலை; (நாரணன் போமிடமெல்லாம் சோதித்துழிதருகின்றாள்) உள்ளவெழுத்தைக் குறைத்தது வாச்யப்ரதாநத்தாலே; வாசகபூர்த்தியிலும் காணலாவது - ஸ்வரூபகுண ரூபகுண விபூதிகளையிறே. அவையெல்லாம் வாச்யப்ராதாந்யம் கொள்ளும்போதும் விசிஷ்டரூபப்ரகாசமாத்ரத்தாலேயும் காணலாமிறே. (போமிடமெல்லாம் சோதித்து)திருக்குழலூதுகளினது அடியும்சுவடும்பார்த்து அவன்போனவிடம் காணமாட்டாமல் மீண்டு அநுகரித்தவர்களைப்போலன்றியே, போவதாகக் கோலினவிடங்களுமறிந்து முற்பாடையாய்ச் சென்று,(க) "अग्रतस्ते गमिष्यामि - அக்ரதஸ்தேகமிஷ்யாமி" என்கிறபடியே படுகிறவளவுமன்றிக்கே, கிளைகொம்பு பிடித்தும் சோதித்து, அவ்விடங்களிலே நின்று வரவு பார்த்து ஸஞ்சரியாநின்றாள்.

(கேடித்யாதி) இந்தச் சேர்த்தியும் ப்ராவண்யமும் காணவேண்டாத ரேகாயநரேயன்றிக்கே, திருக்குரவையிலுமுண்டான

ப்ரவணையாய் அகம் விட்டுப்புறப்படாமலிருக்கையன்றிக்கே, திருவாய்ப்பாடி சூழ்ந்தநாடும் திருவாய்ப்பாடியான ஊர்தானும் இருந்ததேகுடியாக அறியும்படியாகக்ருஹத்தைவிட்டுப்புறம்பேபோய். (நல்லதுழாயலங்கல் சூடி) ஸம்ஶ்லேஷத்தாலே பிசகின திருத்துழாய் மாலையைச் சூடிக்கொண்டு. (நாரணனித்யாதி) நாராயணனென்னும் திருநாமத்தையுடைய க்ருஷ்ணன் வ்யாபரிக்குமிடம் பலவுண்டாகையாலே, அவன் போமிடமெல்லாம் அவனைக்காண்கைக்காக ஆராய்ந்துதிரியாநின்றாள். அதாவது - பசுமேய்க்கை, பெண்களோடே கலக்கை, விளையாடுகை தொடக்கமானவற்றுக்காக அவன் வ்யாபரிக்குமிடங்களெல்லாம் தேடித்திரியாநின்றாளென்கை.

(கேடுவேண்டுகின்றார் பலருளர்) இக்குடியின் மினுக்கம் பொறுமையாலே "இதுக்கோரவத்யம்வரக் காணவல்லோமே!" என்று

என்று விசேஷிக்கவேணுமோவென்னவருளுகிறார் (ஸம்ஶ்லேஷத்தாலே யித்யாதி). (பிசகின) மூசகின. "உழிதருகின்றாள்" என்றதுக்கர்த்தம் (திரியாநின்றாள்) என்றது.

(மினுக்கம்) பழியில்லாமையால்வந்த வதிசயம். (எடுப்புண்டு)-ஈடுபட்டு.

(க) ஸ்ரீ-அ-

போக்கிலும் நலிய நினைப்பாரும் நலிந்தாரு முண்டிறே. (௧)"கஞ்சன் கடியன்" (௨)"[Grantha] - ஏஹிபஸ்யஸரீராணி". (கேசவனித்யாதி) ப்ரஶஸ்தகேஶனானவனோடே. (இவளை) பருவத்தளவேயன்றியே, பரிபாகம் மிக்க விவள். இவள் * பிறங்கிருங் கூந்தலானாலும், இவள்சொல்லுவது-"மயிரும் முடிகூடிற்றில" என்றிறே.

(பாடுகாவல்) பாதுகாவல்; அதாவது - அருகுவைத்தல்; வைப்பது அந்தஃபுரக்கட்டிலேயிறே. "கேடுவேண்டுகின்றார் பலருளர்" என்கையாலே தாய்மார்க்கு அவனோடே சேர்த்து விடுகையிலே தாத்பர்யமாய்த் தோற்றுகையாலே, இவர்களுடைய பந்துவர்க்கங்களும் அவன் போமிடமெல்லாம் (௩) "[Grantha]-ஸ்த்ரியம்புருஷவிக்ரஹம்" என்று சொல்லி முன்னோடித்திரியாமல் பாடுகாவலிட்டு, அவன்வரவு பார்த்து, அந்தஃபுரக்கட்டிலே ரக்ஷித்திருத்துங் கோளென்கிறார்களென்னுதல்; அர்வயப்ராதாந்யத்தாலே "கேசவன் பாடோடிவளை யோடாமல் காவலிடுமின்" என்றுபந்துவர்கம் சொல்லுமிறேபலராலும். அன்றியே "கேசவனை விட்டுப்புறப்படாமல்பாடுகாவலிடில்காக்கலாம்" என்றுகேக்ஷபமாகவுமாம். (பார்தடுமாறினதே) பூமியிலுள்ளாரும் தாய்க்கடங்காமையைக்கண்டு "நாமும் சிலபெண்களைப் பெற்றன்றோவிருக்கிறோம்; நமக்கும் இங்ஙனே குடிப்பழிவிளையுமோ, விளையாதோ?" என்றுப்போலே தடுமாறிற்றேயன்றோ; தன்னுடைய தடுமாற்றமும்

இக்குடிக்குக்கேடு வேண்டியிருப்பார் பலருமுண்டு. (கேசவனித்யாதி) ஆனபின்பு, ப்ரஶஸ்த கேசனானவனோடே அவன்வைலக்ஷண்யத்திலே யெடுப்புண்டு பின்பற்றித்திரிகிறவிவளை, தானேபோய்ச்சேர்ந்தாளாகாமல் நீங்களே கொண்டுபோய்ச் சேர்த்து அருகுகாவலிடுங்கோள். அதாவது - அவனுக்கு ஆஸந்நமான அந்தஃபுரக்காவலிலேயாக்குங்கோளென்கை. (என்றென்று பார்தடுமாறினதே) இப்படியிருக்க, பலகாலும் சொல்லி, இக்குடிக்குத் தீங்குவராப்பொருத லோகத்தில் அநுகூல ஜநமானது தளும்பிற்றென்கிறாள்.

"பாடு" என்றதினர்த்தம் (அருகு) என்றது. அருகுகாவலிடும்ப்ரகாரத்தைவிவரிக்கிறு. (அதாவதித்யாதி). (தளும்புதல்) - க்லேஶித்தல். ... ...(இ)

(௧) உ-௩-௧. (௨) ரா-ஆ-௬-௧௯. (௩) ரா-அ-௩௦-௩.

மூ.—பட்டங்கட்டிப் பொற்றோடுபெய் திவள்பாடகமுஞ் சிலம்பும்
இட்டமாகவளர்த் தெடுத்தேனுக் கென்னோ டிருக்கலுறாள்
பொட்டப்போய்ப் புறப்பட்டுநின்றிவள் பூவைப்பூவண்ணா
வட்டவார்குழல்மங்கைமீ ரிவள்மாலுறுகின்றாளே [வென்னும்

ஸ்வா;—பந்துவர்கத்தினுடைய தடுமாற்றமு மெல்லார்க்கு மொக்குமென்றிருக்கிறாள்.

இத்தால், வானவர் நாடு, கண்ணன் விண்ணூரென்னுதல்; அதுக்கு மவ்வருகேயான திருவழுதிவளநாடு, திருக்குருகூரென்னுதல்; திருமல்லிவளநாடு, ஸ்ரீவில்லிபுத்தூரென்று - முமுக்ஷுக்களையே சொல்லுதல். "ஸ்வரூபாநுரூபமான புருஷார்த்தத்திலும் விஷயாநுரூபம் புருஷார்த்தம்" என்று நிஶ்சயித்து, ஸூமநாக்களாயிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களை ஸம்ஸாவஹித்து, சிறுப்பேரன்றிக்கே * குறைவொன்றுமில்லாத கோவிந்தனை ப்ரஶஸ்தகேசன் போமிடமெல்லாம், (௧)"ಅಹಂಸರ್ವಂ ಕರಿಷ್ಯಾಮಿ - அஹம்ஸர்வம் கரிஷ்யாமி" என்பாரைப்போலேயும் ஸயுக்தாளரைப்போலேயும்சோதித்துழிதருகின்றார் (பலருளர்) இந்த ஶ்ரீவைஷ்ணவஸ்ரீ காணவேண்டாதாரும் உளராயிறேயிருப்பது. "ದೇಶೋ ವಿಶಾಲಃ - தேசோவிஶாலஃ" (௨) "புடைதான்பெரிதேபுவி"

[இல்லையல்லரே] இப்பரப்பில்கூடாததுண்டோ. கூடாதாகில் வைதரணிமார்கம் துகிர்ந்துபோகாதோ ? அன்றிக்கேஸ்வவிநாசத்தை விளைத்துக்கொண்டு ஸ்ருஜ்யபோக்யராகாதாரு முளரிறே யென்னவுமாம். ஒரு நிபுணாசார்ய விஷயத்திலே அற்றுத்தீர்ந்தவுணர்த்தியையுடையவர்கள் பகவத்விஷயத்திலும் அவன் காட்டிக்கொடுக்கப்போதல், உபகாரஸ்ம்ருதியாலே போதலொழியத்தானே போகை மிகையென்று தோற்றுகிறது. உயர்ந்தோர்மாட்டு-லோகமாகையாலே, லோகம் சிஷ்யாசார்யக்ரமத்தாலல்லது நில்லாதென்னு முணர்த்தியாலேதடுமாறுதல்; இவ்வர்த்தத்திலுணர்த்தியில்லாத அவிவக்ஷிதரையும் இத்தோஷம் தடுமாறப்பண்ணு மென்னுதல்; இது தான் ஸமர்பணவாக்ய ப்ரஸித்தமிறே. .... (௫)

அவ;—ஆறும்பாட்டு. இவள் படியை வினவப் புகுந்தவர்களுக்குச் சொல்லுகிறாள்.

(௧) ரா-அ-௬௮-௨௫ (௨) பெ-திரு-௭௩,

ஸ்வா;—(பட்டமித்யாதி) பட்டம் - தலைபலங்காரம், தோடு - காதுப்பணி. பாடகமும் சிலம்பும் - காலிலிடுமவை. கேசாதிபாத மாக எல்லாவாபரணங்களுக்கு முபலக்ஷணம். இவை யெல்லாம் குறைவறச் சமைத்திட்டு. இவளை நியமியாமல் இவளிஷ்டத்திலே வளர்த்தெடுத்த வெனக்கு. தனக்கு என்னளவில் ப்ரியமில்லையாகிலும், எனக்குத் தன்னளவிலே ப்ரியமானுல், தன் நெஞ்சு புறம்பே போனாலும் தான் என்னருகே யிருக்கலாமிறே. அதுவும் காண்கிறிலோம்; அதுவும் காணவிட்டால் தனக்குப் பொருந்தின தோழிமாரோடுதான்போது போக்கவுமாமிறே; அது தவிர்ந்தால்தான் இருந்தவிடத்தே அவர் வர இருக்கலாமிறே.

அதுவுமொழிந்து அவனிருந்தவிடம் தேடிப்போம்போது த்யாஜ்யங்களை த்யாகப்ரகாரங்களாலே த்யஜித்துப் போவாரைப் போலேயும் போகாமல், நிஷித்த நிந்திதங்களைப் பாராமல் போவா

---

வ்யா,—ஆரும்பாட்டு. (பட்டமித்யாதி) லலாடபூஷணமான பட்டத்தைக்கட்டி, கர்ணபூஷணமான பொன்னின் தோட்டை யிட்டு. பாத பூஷணமான பாடகத்தையும் சிலம்பையு மிட்டு "பெய்து" என்கிறக்ரியை இங்கும் அந்வயிக்கக்கடவது. இவை தான் ஸர்வாபரணங்களுக்கு முபலக்ஷணம். (இட்டமாகவித்யாதி) நியமித்து, வளர்க்கையேயன்றிக்கே இவளுடைய இஷ்டத்திலே வளர்த்து, நிலத்திலே நடக்கவிடாமல் ஒக்கலையிலே யெடுத்துக் கொண்டு திரிந்தவெனக்கு. (இவள் என்னோடிருக்கலுறாள்) இப்படி நான் சீராட்டி வளர்க்கப்பெற்ற விவள், "இப்படி வளர்த்தவளன்றோ" என்று ஸ்நேஹித்து எனக்கு பவ்யையாய் நடக்கவேணுமிறே; அது செய்யாவிட்டால், நான் தன்னைக்கண்டநுபவித்துக் கொண்டிருக்கும்படி நெஞ்சொழியவும் என்னருகு விடாமலிருக்கலாமிறே; அதுவும் செய்கிறிலள்.

---

அரு;—ஆரும்பாட்டு. (பட்டமித்யாதி) "பெய்து" என்றதினைத்தந் (இட்டு) என்றது. பெண்களை வளர்ப்பார் தங்களுக்கிஷ்டமாகாதே வளர்ப்பார்களோ வென்ன, அதுக்குவ்யாவர்த்த்ய பூர்வகம் தாத்பர்யமருளுகிறார்(நியமித்தித்யாதி). (எடுத்தேனுக்கு) என்றவனந்தரம் "பவ்யையாய்" என்றத்யாஹாரம் திருவுள்ளம்பற்றித் தாத்பர்யமருளுகிறார் (இப்படியித்யாதி). (நெஞ்சொழியவும்) என்றது - வளர்த்தெடுத்த வளுக்கு பவ்யையா யிருக்க வேணுமென்னும் மநஸ்ஸில்லாதே [illegible].

ரைப்போலே நானெடுத்து வளர்த்த நாளேக்கும் லஜ்ஜித்து, பாதகா திகளை விட்டுப்போமாபோலே சடக்கெனப் போகவேணுமோ? (புறப்பட்டு நின்று இவள் பூவைப் பூவண்ணவென்னும்) சடக்கெனப் புறப்பட்டு நின்றால் மேலீடானவவன் வடிவழகிலே ஈடுபட்டுக் காயாம்பூவண்ணவென்பாரு முண்டோ? (பூவை) காயாவிலவாந்தரம்.

(வட்டவித்யாதி) சுருண்டு நீண்ட குழலையும் பருவத்தால் வந்த விளமையையு முடையவர்களே!; நீங்களுமெல்லாம் சிலதாய்மார்க்கு நியாம்யைகளாய்ப் போருகிறீர்களே; தனக்கு நான் நியாம்யையாயிருகச் செய்தேயும் என்னோடிருக்கலுறாள். தன்னோடிருக்கலுறாத அவனோடே தானிருப்பதாக மாலுறுகின்றாளே. அவன் தன்னோடிருக்கலுற்றால்; நான்தான் என்னோடே யிருக்கை கர்தவ்யம்.

இத்தால் ஆசார்யனவன் சிஷ்யனுக்குவேண்டுவன பூஷணங்களை யுமுண்டாக்கி, ஹிதத்தை ப்ரியமாக்கிநடத்திக்கொண்டுபோந்தவள

(பொட்டப்போயித்யாதி) அவ்வளவுமன்றிக்கே, சடக்கென என்னைவிட்டுப்போய், எல்லாரும் காணும்படி தெருவிலே புறப்பட்டுநின்று, ஸ்த்ரீத்வத்தாலே வாய்திறவாமலிருக்கக்கடவவிவள் "காயாம்பூவண்ணா" என்று அவனுடையவடிவழகை அநுபவிக்கையிலுண்டான விடாய்தோற்றக் கூப்பிடாநிற்கும். (வட்டவார்குழல் மங்கைமீர்) சுருண்டு நீண்ட குழலையும் பருவத்தால்வந்த இளமையையுமுடையவர்களே!, நீங்களுமெல்லாம் உங்கள் தாய்மார்க்கு நியாம்யைகளாய்ப் போருகிறீர்களே, இவளும்அப்படி போரவேண்டாவோ, அதுசெய்யாமல்; (இவள்மாலுறுகின்றாளே) இவள் அவன் விஷயத்திலே பிச்சேறுநின்றாள். .... .... (சு)

"வண்ணா" என்ற ஸ்வரத்தாலே பலிதம் (விடாய் தோற்ற) என்றது. "வார்" என்றதினர்த்தம் (நீண்ட)என்றது. ஸம்போதிக்கிற வளுடைய தாத்பர்யமருளுகிறார் (நீங்களுமித்யாதி). கீழே "இவள்" என்று சொல்லிவைத்து, திரியட்டும் இங்கே "இவள்" என்றதுக்கு-உங்களைப் போலே எனக்கு பவ்யையாயிருக்கத் தக்கவளென்று சப்தார்த்தம் திருவுள்ளம்பற்றித் தாத்பர்யமருளுகிறார் (இவளுமித்யாதி). "மாலுறுகின்றாள்" என்றதுக்குச்சப்தார்த்தம்(இவளவனித்யாதி), "பட்டம் கட்டிப் பொற்றோடு பாடகமும் சிலம்பும் பெய்து இட்டமாகவளர்த்தெடுத்தேனுக்குபவ்யையாய், இவளென்னோடிருக்கலுறாள்" என்று தொடங்கி அந்வயம். ... ... ... ... ... (சு)

மூ.—

பேசவும் தெரியாதபெண்மையில் பேதையேன் பேதையிவள்
கூசமின்றி நின்றார்கள் தம்மெதிர் கோல்கழிந்தான் மூழையாய்க்
கேசவாவென்றுங் கேடிலீயென்றுங் கிஞ்சுகவாய் மொழியாள்
வாசவார்குழல் மங்கைமீர் இவள் மாலுறுகின்றாளே. (௭)

வி:—ம், தனக்கு வசவர்த்தியாகை தவிர்ந்து பகவத் விஷயத்திலே செல்லும்படியான ப்ராவண்யாதிசயப்ரகாரத்தை ஆசார்ய பரதந்த்ரரானவர்களுக்குச்சொல்லி ஈடுபட்டமைதோற்றுகிறது. (பட்டம்) ஆசார்யபாரதந்த்ர்யபூர்த்தி. (பொற்றேடு) அந்த பூர்த்தி குலையாமைக்கு அவனுண்டாக்கின ஸ்ருதபலம். (பாடகம்) அநந்யகதித்வம். (சிலம்பு) அதினுடைய ப்ரகாசம். .... .... (௬)

அவ;—ஏழாம்பாட்டு. குணஹாநி சொல்லி நியமிக்கப்பொறுதவளவேயன்றிக்கே, குணம் சொல்லிக் கொண்டாடினாலும் நெஞ்சு அல்பகாலமும் தரியாதபடியானுளென்கிறாள்.

ஸ்வா;—(பேசவித்யாதி). "நாண், மடம், அச்சம், பயிர்ப்பு" என்றாப்போலே சொல்லுகிற ஸ்த்ரீத்வங்களையிறே பெண்மை யென்கிறது. அன்றிக்கே, பேதை மயில்போலேயிருக்கிற பெண்ணென்னவுமாம். (என்பேதையிவள்) என்வயிற்றில் பிறப்பாலும் பேதையானவள். பேதைவயிற்றில் பேதை. திருத்தாய்மார்க்குப்பேதைமையாவது-இவள் தன்னைவிட்டால்தான் பின்னும் விட

வ்யா;-ஏழாம்பாட்டு. (பேசவும் தெரியாத பெண்மையில்)ஒருவர் ஒருவார்த்தை சொல்லப்பொறுதஸ்த்ரீத்வத்தையுடைய. அதாவது தன்னுடைய ஆசாரத்தால் ஸ்த்ரீத்வத்துக்கு ஒரு நழுவுதல்வாராதபடி வர்த்திக்குமளவன்றிக்கே, நழுவுதலுண்டாக ஒருவர் ஒரு வார்த்தைசொல்லிலும் அது பொறுமல் ‡ மாந்தும்படியான ஸ்த்ரீத்வத்தை யுடையவளென்கை. ஸ்த்ரீத்வமாவது-" நாண் மடம் அச்சம் பயிர்ப்பு " என்கிற ஆத்மகுணயோகம். (பேதையேன்

அரு;—ஏழாம்பாட்டு. (பேசவுமித்யாதி) பேசத்தெரியாத வென்றதே, "பேசவும்" என்று சொன்னச(ச)காரம் அநுக்தஸமுச்சயமாக்கி, அந்தவர்த்தத்தையும் காட்டாநின்றுகொண்டு தாத்பர்யமருளுகிறார் (அதாவதித்யாதி). (மாந்தும்படி) என்றது-நசிக்கும்படி யென்கை. (பயிர்ப்பு) என்றது - ஒருவிஷ

எதஅ பெரியாழ்வார் திருமொழி, ௩-ப, ௭-தி, ஸ்ரீ்பூர், பேசவும்,
வேண்டு மவளை விடமாட்டாமையிறே. (இவள்) "பருவத்துக்குத் தக்க தலைமையல்ல விடர்" என்று உறைக்கப்பார்க்கிறாள்.

கூச வேண்டுவாரளவிலும் கூசமின்றி ; கூசவேண்டுவாரா கிறார் - தந்தாம் தாய்மார்க்கு பவ்யரானவர்கள். ஸ்வாபதேசத் தில் கூசவேண்டுவாராகிறார்-ஸ்வரூபாநுரூபப்ராப்யம் வஸ்துநிர் தேசத்திலொழியச் சேராதென்னு முணர்த்தியுடையராய், அதிலே நிலைநின்றவர்கள். அன்றிக்கே, நின்றாராகிறார்-உத்தமனில் க்ரியா பதத்தையும் வஸ்துநிர்தேசத்திலே சேர்த்து நிலைநின்றவர்களென் னவுமாம். இது நிலைநிற்பது உடையாளவுமிறே; இவ்வருகுள்ள வையும் நிலைநில்லாதிறே; இதுதான் விஷயஸாபேக்ஷமாயிருக்கை யாலே. ( நின்றார்கள் தம்மெதிர்கோல்கழிந்தான் மூழையாய் ) முன்னே "மூழையுப்பறியாது" என்றாள். இப்போது "கோல்

பேதை) ஒருவிரகறியாத வென்னுடைய பெண்பிள்ளை. அதாவது தன் குலத்துக்கும் ஸ்த்ரீத்வத்துக்கும் அநுகுணமாக நடத்தும தொழியப் போந்து புரிந்து நிற்கைக்கு ஒரு விரகறியாதவென்வ யிற்றிற் பிறந்தவளென்கை. (இவள்) இப்படியிருக்கிறவிவள்.

(கூசமின்றி நின்றார்கள் தம்மெதிர்) தந்தாமுடைய ஸ்த்ரீத் வத்திலும் மாத்ருபவ்யதையிலும் தவறாமல் நின்றவர்கள், "தங்கள் ஸந்நிதியிலே நாமித்தைச் செய்யும்படியென்" என்கிற கூச்சமின் றிக்கே. (கோல்கழிந்தான் மூழையாய்) சோல்கழிந்த மூழை போலே தனக்குஆஸ்ரயமானவென்னோடு ஒரு வொட்டற்றவளாய் இத்தால் - எனக்கு நியாம்யையல்லாதவளா யென்கை.

யத்திலே நின்று விடாதே ஸ்நேஹித்திருக்கை யென்றபடி. ஸ்ரீஷ்வாக்ய விவ ரணம் (அதாவதித்யாதி). ( போந்து ) என்றது-இப்படி நடக்கையை விட் டென்றபடி. (புரிந்து நிற்கை) வேறே யொரு நடக்கையிலே போயிருக்கை

"நின்றார்கள் தம்மெதிர்-கூசமின்றி" என்று அந்வயித்து"நின்றார்கள்" என் கைக்குளதிலேயென்னுமாகாங்க்ஷயிலேதாத்பர்யமருளுகிறார்( தந்தாமுடைய வித்யாதி). (ஸ்த்ரீவத்திலும் மாத்ரு பவ்யதையிலும்) என்றது-ஓழநாயிகா விசேஷணமாகப் "பேசவும் தெரியாத பெண்மையை யுடைத்தான" என் றும் "பேதையேன்பேதை" என்றும் சொன்னது-இவர்களுக்கும் ஸமாநமென் னுமத்தைப்பற்ற.

கழிக்தான் மூழையாய்" என்னுகின்றுள். அதுக்கும் இதுக்கும் வாசி யென்னென்னில் ; — அது குணபாவம். இது - தோஷ தர்மம். (கோல்கழிந்த) ஆன் - சாரியை. கோல்கழிந்த மூழை யால் ஒருப்ரயோஜநமில்லையிறே, இரண்டு தலைக்கும். அன்றியே "முகப்பான்கையில் கோல்கழிந்தமூழைபோலேயானுள்" என்னவு மாம். இத்தால் திருத்தாயார்க்கு நியந்த்ருத்வம்போய், ஸ்வாத ணியாம்மை யென்கை. இது-ஆசார்யவிஷயத்துக்குமொக்கும்.

(கேசவாவென்றும் கேடிலீயென்றும்) விரோதிநிரஸநசீல னென்னுதல், ப்ரஶஸ்தகேச னென்னுதல். (கேடிலீயென்றும்) உன்னுலல்லது செல்லாமை பிறந்தவர்களை ஒருநாளும் கைவிடாத வனேயென்றும். (கிஞ்சுகவாய்மொழியாள்) முருக்கிதள் போலே யிருக்கிறவதரத்தையும், கிளிமொழிபோலேயிருக்கிற வார்த்தையு முடையவள். கிஞ்சுகமென்று - கிளிக்கும்பேர். இவ்விரண்டா லும் (க)"திருவருள்கமுகொண்பழத்தது" என்னவொண்ணுதவிது ளையும், தான் கற்பித்ததொழியத்தானொருவார்த்தையேறக்குறைய முன்பு சொல்லமாட்டாதவளென்கை. (வாசவார் குழல் மங்கை மீர்) நறு நாற்றத்தையும் ஒழுகு நீட்சியையு முடைத்தான குழலையு முடையராய், பருவத்தாலு மிளையவர்களை மங்கைமீரென்கிறுள்.

(கேசவாவென்றும்) ப்ரஶஸ்தகேஶனானவனேயென்றும். (கே டிலீயென்றும்). உன்னுலல்லது செல்லாதவர்களை யொருநாளும் கைவிடாதவனே யென்றும். (கிஞ்சுகவாய்மொழியாள்) கிளியோ டொத்த வாயிற்பழுப்பையும் பேச்சில் இனிமையையுமுடையவள். தனக்கடங்காமல் கைகழிந்து அவன்பேரைச் சொல்லி நின்று கூப் பிடுகிற தசையிலும், இவளுடைய அதரசோபையும் மதுரபாஷண மும் திருத்தாயாருக்கு ஆகர்ஷகமாயிருக்கிறது காணும். (வாச வார்குழல் மங்கைமீர்) பரிமளிதமாய் ஒழுகுநீண்டமயிர் முடியை

"கிஞ்சுகம்" என்று-கிளியாய், அதினுடைய வாய்போலே யிருக்கிறவா யும், மொழிபோலே மொழியுமுடையவளென்று சப்தார்த்தமருளுகிறர் (கிளி யித்யாதி). "தன்னைவிட்டிருக்கிறுள்" என்று சொல்லும் ப்ரகரணத்தில் வர் ணிக்கை சேரும்படி யெங்ஙனேயென்னும் சங்கையை சமிப்பித்துக்கொண்டு அருளுகிறர் (தனக்கித்யாதி). ... ... ... ... (எ)

(க) தி-வாய்-அ-க-ஐ.

மூ.—

காறைபூணுங் கண்ணாடிகாணுந் தன்கையில் வளைகுலுக்கும்
கூறையுடுக்கு மயர்க்குந் தன்கோவைச்செவ்வாய் திருத்தும்
தேறித்தேறிநின் றாயிரம்பேர்த்தேவன்திறம் பிதற்றும்
மாறில்மாமணி வண்ணன்மே லிவள்மாலுறுகின்றாளே. (அ)

---

அவ;— எட்டாம்பாட்டு. தன்னுடைய ஆர்த்யதிசயத்தாலே அவன்வரவு தப்பாதென்றறுதியிட்டு "அவன் சுபதர்ஶியாயிருக்கும்; அவன்நம்முடைய கார்ஶ்ய சேஷம் காணவொண்ணாது" என்று தன்னையலங்கரிக்கிறாள். கண்டால்தான்வந்ததென்னென்னில், "நாம்பரகவாசியறியாமை தாழ்க்கையன்றோ இங்ஙன்விளையவேண்டிற்று" என்று லஜ்ஜையாலும்சோகத்தாலு மீடுபடுமென்று, அதுக்குப்பரிஹாரமாகவும் போகஹேதுவாகவுமிறே இங்ஙனலங்கரிக்கிறது. இந்தமநோரதாலங்காரம் அவன் வந்திலனாகில் செய்வதென்னென்னில், "இம்மணக்கோலம் பிணக்கோலமாகிறதென்றிறே இவள் நினைத்திருப்பது" என்று நாலூர் பிள்ளையருளிச் செய்தாராக ஆச்சான் பிள்ளையருளிச் செய்வர்.

ஸ்வா; —(காறைபூணும் கண்ணாடிகாணும்) பூண்பதற்கு முன்னும் பின்னு முண்டானவாசி கண்ணாடியிலே கண்டால்

---

யும் பருவத்தால் வந்த இளமையையுமுடையவர்களே!. (இவள்மாலுறுகின்றாளே) இப்படியே இவள் அவன் விஷயத்திலே பிச்சேறாநின்றாள். ... .... .... .... ... .... (எ)

வ்யா;—எட்டாம்பாட்டு. (காறைபூணும்) தன்னாற்றாமையாலே "ஏதேனுமொன்றைச் செய்து நாமவனைப் பெறவேணும்" என்று நினைத்து, "அவனுக்கு ஆகர்ஷகமாம்படி நம்மை யலங்க

---

அரு;—எட்டாம்பாட்டு. (காறையித்யாதி) அவன்மேலே மாலேறியிருக்குமவளுக்கு வேறொன்றிலே நெஞ்சு செல்லாமையாலே இவள் காறைபூணுகை முதலானவை சொல்லக்கூடுமோ, ஆகிலுமெல்லாத்துக்கும் மூந்துறக்காறையைத்தான் சொல்லுவானென்னென்னில்; இரண்டுக்கும் நியாமகம் காட்டிக்கொண்டருளித்தமருளுகிறார் (தன்னாற்றாமையாலேயித்யாதி). மூந்துறவவன்

காறைமிகையாய்த் தோற்றுமிறே தனக்கும். (தன்கையில் வளை குலுக்கும்) தானே கழலுகிற வளைகளும் குலுக்கினால் மிகவும் விழவிறே ப்ராப்தம். விழுந்தவை விழுந்தேபோயிற்றன. விழா

---

ரிக்கவே அவன்தானே வந்து மேல்விழும்" என்று தான் தன்னை யலங்கரிக்கையிலே ப்ரவ்ருத்தையாய், ப்ரதமம், அவன்கண்டு ப்ரியப்பட்டுக் கட்டிக்கொள்ளும் கழுத்துக்கு அலங்காரமாகக் காறையைப்பூணும். இதுதான் உத்தமாங்கத்துக்கும் உடம்புக்கும் நடுவாய் நின்று ஒளிவிடுவதோராபரணமிறே. (கண்ணாடி காணும்) காறை பூண்டதிருத்தம் தன்கண்ணுக்கு விஷயமல்லாமையாலே, "அவனுகக்கும்படி வாய்த்ததோ? இல்லையோ" என்னு மிடமறிகைக்காக, காறையும் கழுத்துமான சேர்த்தியழகைக் கண்ணாடிப்புறத்திலே பாராநிற்கும். இதுதான் அவயவாந்தரங்களிலாபரணங்களும் இவள் பூணுமதுக்கு முபலக்ஷணம்.

(தன் கையில் வளைகுலுக்கும்) இம்மநோரதமடியாக உடம்பிலே ஒரு பூரிப்புத் தோற்றுகையாலே அதறிகைக்காகக் கையில் வளையசைத்துப்பாராநிற்கும். விரஹகார்ஶ்யத்தாலே கையில் வளைகள் கழன்றாலும், பின்னையும் எடுப்பது இடுவதாய்க்கொண்டிறே

---

கண்டு ப்ரியப்படுகைமற்றையாபரணங்களுக்குச் சொல்லக்கூடாதோ? இந்தக் காறைக்கு அதிசயமேதென்ன (இதுதானித்யாதி). அவனுகந்து வருகைக் காகக்காறை பூணுமவள் தனக்கு உகப்பு தோன்றக்கண்ணாடிகாணக் கூடுமோ வென்னவருளுகிறார் (காறைபூண்டவித்யாதி) (திருத்தம்) சமத்காரம். (அவயவாந்தரங்களில் ஆபரணங்களும்) என்றது - பெருப்பெருத்த வாபரணங்களு மென்றபடி. இங்ஙனன்றாகில் "தன்கைவளை" என்று வளையிருக்கிறதாகச் சொல்லக்கூடாதிறே.

அவன் வரவுக்குக்காறை பூணுகையும் கண்ணாடி காணுகையும், கூறையுடுக்கையுமுடலானாப்போலே வளைகுலுக்குகை அதுக்குடலன்றே; இதுவேதுக்காக வென்னவருளுகிறார் (இம்மநோரதமித்யாதி). தன்னுடம்பில் பௌஷ்கல்யமும் அவனுக்கு ஆகர்ஷகமாகையாலே, அத்தையறிய வேணுமென்று குலுக்குகிறாளென்று கருத்து. விஶ்லேஷதசையில் கையில்வளை தங்காமையாலே தன்கையில் வளையென்னக்கூடுமோ வென்னவருளுகிறார் (விரஹேத்யாதி). கைவளையை அசைத்தறியவேணுமோ? தன்னுடம்பில் பூரிப்புத்தனைக்

தலை கழலாநிற்கச் செய்தே மநோரத ஸமயத்தில் பூரித்தனவி றே. அவன் குணங்களை நினைத்திருந்த கனத்தாலே குலுக்கக் குலுக்கப் பூரித்தன வென்னுமதொழிய, ஶிதிலமாய் விழுந்தன வென்கை மார்தவத்துக்குப் போராதே.

(கூறையுடுக்கும்) பரியட்டம் அரையில் தொங்கிற்று - இம்ம நோரதத்தாலே யென்னில், உடுக்கவுமாமிறே. அல்லாதபோது கையிலே ஒருதலையும், காலிலும் தரையிலு மொருதலையுமாமிறே.

---

இவள் தானிருப்பது. இவள் எடுத்து இட்டாலும் அவை கையில் தொங்காதே; இப்போது உடம்பில் தோற்றுகிறபூரிப்பாலே அவை கையில் தொங்கினமை யறிகைக்காக அசைத்துப் பாரா நிற்கு மென்கை.

(கூறையுடுக்கும்) பரியட்டமும் அரையில் தொங்கும்படியாய்த் து-இம்மநோரத நிபந்தநமான தேஹபௌஷ்கல்யத்தாலேயிறே; அல்லாதபோது,கையிலேயொருதலையும்,காலிலும்தரையிலும்ஒரு தலையுமாமிறே. வளையும் கலையும், க்ருதஸங்கேதரைப்போலே கழ லும்போதும் ஒக்கக்கழன்று, தொங்கும்போதும் ஒக்கத்தொங்கா நிற்குமாய்த்து; காறை பூண்டதுக்குமேலே ஓரதிசயம் தேடுகைக் காகவிறே கூறையுடுக்கப்புகுந்தது. அதாவது - அவனுக்காகர்ஷ கமாம்படி பரியட்டத்தை நன்றாக உடாநிற்குமென்கை. இவளு டைய அழகிலேயாய்த்து அவனீடுபடுவது; ஆகையால், அவனுக்

---

குத் தெரியாதோ வென்னவருளுகிறார் (இவளெடுத்தித்யாதி வாக்யத்வயத் தாலே). மநோரதமாத்ரத்தால் வந்த பூரிப்பாகையாலே இப்படியறிய வேண் டிற்றென்று கருத்து.

இவள் கூறையுடுக்கிலும் அது அரையில் தங்குமோ வென்ன, (பரி யட்டமு மித்யாதி). ஸ்த்ரீகளுக்குப் பரியட்டமும் வளையைப் போலே கழலச் சொல்லக்கூடுமோ, இப்போ உடுக்கு மென்கைக் கென்னவரு ளுகிறார் (அல்லாத போதித்யாதி). வளையும் கூறையும் மநோரதத்தால் வந்த பௌஷ்கல்யத்தாலே தங்குமென்னுமதுக்கு உபபத்தியருளுகிறார் (வளையும் கலையுமித்யாதி). "கலை" பரியட்டம். காறைமுதலானவை கழற்றிவைக்கவும் வேண்டும்போது பூணவுமாயிருக்குமாகையாலே, அவன்வரவுக்காகவாபரணங் களைப்பூண்டாளாகிலும், கூறையெப்போது முண்டாயிருக்க, இப்போதுஉடுக் கு மென்கைக்குக் கருத்தென்னென்ன வருளுகிறார் (காறை பூண்டதுக்கித் யாதி). "கூறையுடுக்கும்" என்றவர்தமாக தாத்பர்யத்தை ஸஹேதுகமாகவரு ளுகிறார் (இவளுடைய வித்யாதி வாக்யத்வயத்தாலே). ஒப்பனையாலே அவன்

(காறைபூணும்) என்றது - ஆபரணங்களுக்கெல்லா மூலமாய், ஆஶ்ரயம்பெற்ற தென்றபடி. "பூணும்" "உடுக்கும்" என்றவர்தமாநம், ஒப்பணிதலில் அவன் பூட்டியும் உடுத்தியும் செய்தநேர்வருமளவும் கழற்றுவது, பூண்பது, குலைப்பது, உடுப்பதாய்ச் செல்லுமென்று தோற்றுகிறது. (அயர்க்கும்) இந்தவலங்கார கௌரவ மநோரதத்தாலேமுன்பு "கேசவா"என்றழைத்த போதை ஸம்ஶ்லேஷ மநோரதத்தையும் மறக்குமென்னுதல். அன்றியே, மநோரதகௌரவப்ராந்தி தலையெடுத்து, "காறைபூண்பது, பூண்டிலோமோ" என்று தொட்டுப்பார்ப்பது, கண்ணாடி காண்பது, அதில் தோற்றின காறையைக் கண்ணாடியென்றறியாதே அத்தை ஸ்பர்ஶித்துப் பார்ப்பதாய், பதந்தோறும் இவ்வயர்ப்புச் செல்லாநிற்கு வென்னவுமாம்.

(தன்கோவைச் செவ்வாய் திருத்தும்) கோவைக்கனிபோலே ஸ்வாபாவிகமாயிருக்கிற வதரத்தைப் பலகாலும் கண்ணாடி

காகத் தக்கவுடை வாய்ப்பு வருமளவும் குலைப்பது உடுப்பதாய்ச் செல்லாநிற்குமாய்த்து. (அயர்க்கும்) இப்படி அவன் வரவுக்குடலாகத் தன்னை யலங்கரித்தவளவிலும் வரக்காணாமையாலே அறிவழியாநிற்கும்.

(தன்கோவைச்செவ்வாய்திருத்தும்) மீளவு மறிவுகுடிபுகுந்து "இன்னமும் அவனுக்காகர்ஷகமாம்படி யிருப்பதோ ரதிசயம் நம்பக்கலிலே உண்டாக்கக்கடவோம்" என்று ஸ்வபாவமே கோவைப்பழம்போலே சிவந்திருக்கிற தன்னுடைய அதரத்தை, ராகஜநகமான பதார்த்த ஸேவைகளாலும் மிகவும் சிவக்கும்படி பண்ணாநிற்கும். அல்லாதவைபோலன்றிக்கே, இது அவனுக்கு வாய்புகு சோறா யிருப்பதொன்றிறே; (க) "தொண்டையஞ் செங்கனிவாய்

வருமென்றும் மநோரதத்தால் பூரிக்குமவளுக்கு அயர்வு வரப்ரஸக்தியே தென்ன வருளுகிறார் (இப்படியித்யாதி).

அவன் வாராமையாலே பாஹ்யவிஷயமாக வறிவழிந்தவள் கோவைச் செவ்வாய் திருத்தக்கூடுமோ வென்ன, அவன் வ்யாமோஹத்தாலே மீளவு மறிவு பிறந்து செய்தாளென்றருளுகிறார் (மீளவுமித்யாதி). ஒப்பனை யெல்லாத்தாலும், அவன் வாராதிருக்க, இத்தாலே வருமென்று மீளமநோரதிக்கைக்கு, இதுக்குள்ளவேற்ற மென்னென்ன வருளுகிறார் (அல்லாதவையித்

(க)

பார்த்துப்பார்த்துக்கண் ணப்பன் றுநின்றாள். "இவள்தான் அமுது படி திருத்துவது, சாத்துப்படி திருத்துவதாகா நின்றாள்" என்று பிள்ளை அருளிச்செய்வர். அவனுக்குப் படியாவது - கூறையிறே. (தேறித்தேறிநின்று ஆயிரம்பேர் தேவன்திறம் பிதற்றும்) தேறித்தேறியென்கையாலே, "அயர்ந்தயர்ந்து" என்னுமதும் தோற்றுமிறே. ஜாக்ரத்ஸ்வப்ந தசையில் கலக்கமும் தெளிவும்போலே யிறே மநோரதம்தானிருப்பது. ஸ்வப்நம் கண்டவன் இதுஸ்வப்நமென்றறியாதாப்போலேயிறே மநோரதமும். (நின்று) அந்த மநோரதம் நிறுத்த நின்று.

(ஆயிரம்பேர்த்தேவன் திறம் பிதற்றும்) அவனுடைய மேன்மைக்கும் நீர்மைக்கும் வாசகமுமாய், த்யோதமாநமுமான குணங்களையுடையவனுடைய, அஸங்க்யாதமான திருநாமங்களைச் சொல்லுமவள் ... நுகர்ந்தான்" என்கிறபடியே. (தேறித்தேறிநின்று) தன்னுடைய அவயவாலங்காரத்தின் வாய்ப்பாலும், (க) "తస్మింశ్చబహవోగుణాః- தஸ்மிம்ஶ்சபஹவோகுணாः" என்கிறபடியே இத்தசையில் வந்து உதவுகைக்கீடான அவன்குணங்களில் விஶ்வாஸத்தாலும் அயர்க்கைதவிர்ந்து மேன் மேலும் தெளிவை யுடையளாய், அத்தெளிவு கைகொடுக்கத் தரித்துநின்று.

(ஆயிரம்பேர்த்தேவன் திறம்பிதற்றும்.)(உ) "దేవోనామసహస్రవాన్- தேவோநாமஸஹஸ்ரவாந்" என்கிறபடியே தன்குணசேஷ்டிதங்களுக்கு வாசகமான ஆயிரம் திருநாமங்களை யுடையனாய், அவை ...

யாதி வாக்யத்வயத்தாலே). அவன் வாராமையாலே "மாலுறுகின்றாள்" என்னும் தசையிலே "தேறித்தேறி" என்று மீமிசையாக மிகவும் தெளிவு பிறக்கைக்கு ஹேது வென்னென்ன, கீழ்ச்சொன்ன காறைபூணுமித்யாதியையும், மேற்சொல்லப்புகுகிற குணப்ரகாசகங்களான "ஆயிரம்பேர்த் தேவன்" என்றதையுமுட்கொண்டருளுகிறார் (தன்னுடையவித்யாதி).

"[illegible Telugu-script quotation]- திவுக்ரீடாவிஜி ஷீஷாவ்யவஹாரத்யுதிஸ்துதிமோத மதஸ்வப்நகாந்திகதிஷு" என்கிறபடியேகாந்தியை இத்தேவசப்தத்துக்குவிவக்ஷித்துத்தாத்பர்யமருளுகிறார் (அவை யெல்லாவற்றிலும் மித்யாதி). "மா" என்று கறுப்பாய், (நீலேத்யாதி).

(க) ரா-ஸு-௩௭-௧௨. (உ) பார-ஸபா-௩அ-௧௧.

ளையும், அவனுடைய பரிஜநபரிச்சதாதிகளையும் ஆக்ரமமாகச் சொல்லாநின்றாள். (மாதில் மாமணி வண்ணன்மேல்) அத்விதீயமுமாய், மஹார்க்கமுமான நீலரத்நம்போன்ற வடிவழகை யுடையவன் விஷயமாக. (இவள் மாலுறுகின்றாளே) இவள் ப்ராந்தி முதிர்ந்து மேன்மேலும் செல்லாநின்றதென்கிறாள்.

இத்தால், உபாஸநரூபமாக விஹிதைகளாய், த்யாஜ்யஸ்வீகார ப்ரகாசிகைகளான பக்தி ப்ரபத்திகளன்றிக்கே, உபாதேயதமமாய், துல்யவிகல்பம் தோன்றும்படியாய்த் தலைக்குக்கீழாகையாலே பக்திப்ரபத்திகளை ஆத்மபூஷண ப்ரதாநமாக ப்ரகாசிக்கிறது. * காறையால் இப்படி ப்ரகாசிதமான வதிகாரம் பூர்வாசார்யர்களுடைய வசநாநுஷ்டாநங்களோடே ஒப்புப்பார்த்தமை தோற்றுகிறது - "கண்ணாடிகாணும்" என்றதாலே. ஆசார்யவசநாபிமாநத்தாலே இதராபிமாநம் குலைந்து, ப்ராப்தாபிமாநத்தினுடைய மிகுதி இவள் தன்னுளும் ஆசார்யன் தன்னுளும் குலைக்கவொண்ணாதென்னுமிடம் தோற்றுகிறது - "கையில் வளைகுலுக்கும்" என்கையாலே. விஷயாநுரூபம் ப்ராப்யமென்று தோற்றநிற்கச்செய்தேயும்,ஸ்வரூபாநுரூபப்ராப்யம் தோன்றுவது ஒழிவதாகாநின்றதென்னுமிடம் தோன்றுவது "கூறையுடுக்குமயர்க்கும்" என் கையாலே.

ப்ராப்யத்துக்குப் பூர்வக்ஷணபக்தி * பின்னானார் வணங்கும் சோதியிலே சென்று சேருகைதானே ப்ராப்யமென்னுமளவும் மேன்மேலும் தனக்குப் பிறந்த பரிபாக பரீக்ஷார்த்தமாகச் செய்து போரவேணுமென்று தோற்றுகிறது, "கோவைச் செவ்வாய் திருத்தும்" என்கையாலே. அவன் தன்னைப் பெற்றநுபவிக்குமிடங்காட்டில் அவனுக்கு த்யோதகமான கல்யாண குணங்களுக்கு வாசகமான திருநாமங்களும் அவனுடைய ஸம்பந்திகளான பரிஜநபரிச்ச தாதிகளும் உத்தேஸ்யமென்னுமிடமும் தோற்றுகிறது, "தேவன் திறம்பிதற்றும்" என்கையாலே. (க) "இவள்

---

யெல்லாவற்றிலும் மநோஹரமானவடிவழகை யுடையனானவனுடைய ப்ரகாரங்களை, அவற்றினுடையரஸ்யதையாலே கலங்கி அடைவுகெடப்பேசாநிற்கும். (மாதிலித்யாதி) ஆகையால், ஒப்பில்லாதநீலரத்நம்போன்ற வடிவழகையுடையவன் விஷயமாக இவளிப்படி பிச்சேறுகின்றாள். (அ

---

(க) திவ்ய்-கூ-ரு-எ.

மூ.—
கைத்தலத்துள்ள மாடழியக் கண்ணாலங்கள் செய்திவளை
வைத்துவைத்துக்கொண் டென்னவாணிபம் நம்மைவடுப்படுத்தும்
செய்த்தலையெழுநாற்றுப்போ லவன் செய்வனசெய்துகொள்ள
மைத்தடமுகில்வண்ணன் பக்கல் வளரவிடுமின்களே. (கூ)

வாயனகள் திருந்தவே" என்னக்கடவதிறே. இத்திருநாமங்கள் தானே அவன் விக்ரஹ வைலக்ஷண்யத்தைக் காட்டக் கடவதாய், அதிலே பக்தியையும் செலுத்தக்கடவதாயிருக்கு மென்கிறது, "இவள் மாலுறுகின்றாளே" என்கையாலே. .... ... (அ)

அவ;—ஒன்பதாம்பாட்டு. கீழில்பாட்டிலே தமக்குப்பிறந்த மனோரதவிக்ருதியை - பெண்பிள்ளை விக்ருதியைக் கண்டிருந்தாயார் பாசுரத்தாலே அருளிச் செய்தார். இப்பாட்டில் பெண்பிள்ளை விக்ருதியைக்கண்டு வினவப்புகுந்தவர்கள் பாசுரத்தாலே யருளிச் செய்கிறார்.

ஸ்வா;—(கைத்தலமித்யாதி) இவள் பிறந்தநாள்முதலாக வந்தநாட்களில் விசேஷங்களாலும், இவள் பருவம் குறித்த நாட்களாலும், "பந்து வர்கத்துக்கீடாகவும் ஐய்வர்யத்துக்கீடாகவும் லோகாபவாதபீதி பரிஹாரார்த்தமாகவும் லோகம் கொண்டாடும் படியாகவும்; இதொருபெண்ணுமன்றோநமக்குள்ளது"என்னும்தங்கள் ஸ்நேஹாதிசயத்தாலும், ஜாத்யுசிதமாகவந்த உத்ஸவங்களை; தந்தாம் கையிலுள்ள வர்த்தங்களும், பூ(ர்ண)கதமாக்கி வைத்தவர்த்தங்களு மென்னுதல். "மாடு" என்று-கன்றுகாலிகளுக்குப் பேராய், கோதநராகையாலே கற்றுக்களையும் வரட்டாக்களையும்

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (கைத்தலத்துள்ள வித்யாதி) "பந்துவர்க்கத்துக்கீடாகவும் ஐய்வர்யத்துக்கீடாகவும், இதொரு பெண்ணுமன்றோ நமக்குள்ளது" என்னும் ஸ்நேஹத்தாலேலோகமெல்லாம் கொண்டாடும்படி கையிலுள்ள தநமெல்லாமழிய இவள் விஷயமாக வுண்டான கல்யாணங்களை யெல்லாம்செய்து. (இவளை

அரு;—ஒன்பதாம்பாட்டு. (கைத்தலமித்யாதி) கையிலுள்ள தநமெல்லாம் போகக் கண்ணாலம் செய்கைக்கு ஹேதுவையருளிச் செய்துகொண்டு சப்தார்த்தமருளுகிறார் (பந்துவர்கமித்யாதி). "மாடு" என்றதினர்த்தம் (தநம்) என்றது. "வாணிபம்" என்றுவாணிஜ்யமென்றாய், அத்தால் பலிதம்(ப்ரயோஜ

சொல்லிற்றாகவுமாம். (இவளையித்யாதி) "இவளை" என்றது-பருவத்தால் வந்த வடங்காமையை யுறைக்கப்பார்க்கிறாள், (வைத்து வைத்துக்கொண்டென்ன வாணிபம் நம்மைவடுப்படுத்தும்) கீழ் நாள் இவளைக்கொண்டாடிமடியிலு மருகும் வைத்துக்கொண்டு போந்தத்தாலும், இப்போது இவளைச் சிறைசெய்து காவலிட்டு கர்ஹித்துக்கொண்டு போருகிறதாலு மென்ன ப்ரயோஜநமுண்டு. உங்களுக்கும் இவள் தனக்கும் ஜாத்யுசிதமாகக் காணலாவது ஒரு ப்ரயோஜநமில்லையிறே. தனக்கு நன்மைதேடுகிற நமக்குக் குடிப்பழியிறே இவளாலுண்டாவது.

(செய்யித்யாதி) [மைத்தடமுகில் வண்ணனவன் செய்த்தலையெழுநாற்றுப்போலே செய்வன செய்துகொள்ளவளரவிடுமின்களே.] நீர்கொண்டெழுந்த காளமேகம்போலே யிருக்கிற திருநிறத்தையும் தன்பக்கல் ஸ்நேஹலேசமுடையாரையும் விடமாட்டாத கல்யாணகுணங்களாலே தனக்கிஷ்ட விநியோகார்ஹராம்படி செய்யவல்ல வ்யவஸாயத்தையுமுடையனுய் முற்றீய்புசெய்து சிறி

---

யித்யாதி) "நம்முடைய கீழடங்காத பருவமான விவளைக் கடக்கலாமோ" என்று பார்த்து, நியமித்தும் காவலிட்டும் வைத்துக்கொண்டிருந்து என்ன ப்ரயோஜநமுண்டு. நமக்கும் இவளுக்கும் ஜாத்யுசிதமாகக் கொள்ளலாவதொரு ப்ரயோஜநமில்லையிறே. (நம்மைவடுப்படுத்தும்) இதுக்குமுன்பு ஒரு பழிப்பற்றுப்போந்த நம்மை வடுப்படும்படி பண்ணும். அதாவது - "பந்துக்கள் உடன்படாதிருக்கத்தானே புறப்பட்டுப்போனாள்" என்னும்படிபோய் நம்முடைய குடிக்கு அவத்யத்தை விளைக்குமென்கை.

(செய்த்தலையித்யாதி) செய்த்தலையிலே வளர்ந்த நாற்று-உடையவன் வேண்டினபடி விநியோகம் கொள்ளுமாபோலே, இவளையும் அவன்வேண்டினபடி செய்து கொள்ள. (மையித்யாதி) "கழுத்தேகட்டளையாக நீரைப்பருகுகையாலே கறுத்துப் பெருத்திருந்துள்ள மேகம்போலே யிருக்கிற வடிவை யுடையவன் பக்க

---

நம்) என்றது. நம்மையன்றிக்கே கைகழிந்த விவளுக்கும் நமக்கும் ஒரு சேர்த்தியில்லாமல், ஜாதிக்கநுகுணமாக இவள் வர்திக்கையாலே ப்ரயோஜநமில்லையென்கிறார் (நமக்குமித்யாதி). "வடு" என்றதினர்த்தம் (அவத்யம்) என்றது.

(கழுத்தே கட்டளையாக) என்றது - கழுத்து அவதியாகவென்றபடி. அதாவது - பூர்ணமாகவென்கை. ... ... ... ... ... (கூ)

மூ.—

வெருப்பெருத்த கண்ணலங்கள்செய்து பேணிநம்மில்லத்துள்ளே
இருத்துவா னெண்ணிநாமிருக்க விவளுமொன்றெண்ணுகின்றாள்
மருத்துவப்பதம் நீங்கினாளென்னும் வார்த்தைபடுவதன்முன்
ஒருப்படுத்திடுமினிவளை யுலகளந்தானிடைக்கே. (கo)

ய தூக்கினியதிட்டு. "இவளுக்கு இஷ்டவிநியோகார்ஹனானவன்பக்க விலே இனிஇவள் வர்த்திக்கும்படி நீங்களொருமித்துவிடுங்கோள்" என்று இவள் ப்ரக்ருதியறிந்தவர்கள் சொல்லி நியமிக்கிறார்களா யிருக்கிறது.

இத்தால், ஸதாசார்யனானவன் ஸச்சிஷ்யனைப் பார்த்துத் தனக்கு உபாயமாகவும் உபேயமாகவும் கர்ணபரம்பரையாகவந்த அதிகுஹ்யபரமரஹஸ்யமான வர்த்த விசேஷங்களை உபதேசித்து, அந்த வுபதேசத்தாலேவந்த பரிபாக விசேஷங்களைக்கண்டு இவனுக்கம் கருதிக்கொண்டாடி வஸ்தவ்யபூமியும் மேன்மேலுங்கற்பித்துக் கொண்டு போந்தத்தால் என்னப்ரயோஜநம் பெற்றது. இவ்வர்த்த விசேஷங்களைப் பரமரஹஸ்யமாக்கி அழித்ததிறேஉள்ளது. இவ்வர்த்தவிசேஷம், உடையவரைப்பலகாலும் நடைகொண்டுபரீக்ஷித்து உபதேசித்த திருக்கோட்டியூர்நம்பிபோல் வார்க்கிறேதெரிவது. இப்ப்ரபந்ந குலமான தொண்டக்குலத்துக்குச் சேராதவையிறே இத்தால் விளைவது. எல்லாத்துக்கும் பரிஹாரமாக விக்ரஹவைலக்ஷண்யத்தையும் இது விளைப்பதாக எதிர்சூழல்புக்குத்திரிந்த ஆத்மகுண வைலக்ஷண்யத்தையுமுடையவன் பக்கவிலே அவன்தனக்கு இஷ்ட விநியோகார்ஹமாக்கிக்கொள்ளும்படி நீங்கள் கர்ஹிக்கநினையாதே, விஷயாநுரூபப்ராப்தி வர்த்திக்கும்படி விடப்பாருங்களென்கிறது.

அவ;— பத்தாம்பாட்டு. இப்பாட்டாலும் அவர்கள் த்வரிப்பிக்கிறார்களாகத் திருத்தாயார் சொன்ன பாசுரத்தாலேயருளிச்செய்கிறார்.

---

விலே இவள்வளரும்படியாக நீங்களே சேர்த்துவிடுங்கோள்," என்று "இப்படி பந்துக்கள் சொன்னார்கள்" என்கிற வித்தனையும் இவ்விடத்தில் அபிப்ரேதம். அதுக்கடி "தாயுரைசெய்ததனை" என்று-திருமொழி முழுதும், தாயார்வார்த்தை யென்று நியமிக்கையாலே, இது, மேலிற்பாட்டுக்கு மொக்கும். .... .... (கo)

ஸ்வா.—(பெருவித்யாதி) ஐஶ்வர்யச் செருக்காலே ஒருவர்க்கொருவர் மேலான கல்யாணகுணங்களைச்செய்துகொண்டு போருகிறவர்களுக்கும் மேலான கல்யாணகுணங்களையுஞ்செய்து, ஜாத்யுசிதமான தர்மங்களையும் இப்பெண்பிள்ளைதன்னையும் பேணி. (நம்மில்லத்துள்ளே யிருத்துவாவெனெண்ணி நாமிருக்க) நம்முடைய க்ருஹத்துக்குள்ளே இருத்துவதாக நாமெண்ணியிருக்க. (இவளுமொன்றெண்ணுகின்றாள்) இக்ருஹத்தைக் காராக்ருஹமாக நினைத்திரா நின்றாள். தனக்கு வஸ்தவ்யபூமி அவனிருந்தவிடமேயாக நினைத்திரா நின்றாள்.

(மருத்துவமித்யாதி) ஆரோக்யாதிகளுக்கு ஹேதுவாகஔஷதங்கள் சமைப்பார் பாகம்பார்க்குமாபோலே பருவம் தப்பாமல் பார்க்கவேணுமிறே பெண்பிள்ளை பெற்றவர்களுக்கு. அது தப்பிற்றென்னும் வார்த்தை பிறப்பதற்குமுன்னே, வரையாதே

---

வ்யா;—பத்தாம்பாட்டு. (பெருப்பெருத்த கண்ணாலங்கள் செய்து) லோகத்திலுள்ளார் ஐஶ்வர்யச்செருக்காலே பெருக்கச் செய்யும் கல்யாணங்களிலும் பெரியதானகல்யாணங்களைச்செய்து. (பேணி) குலமர்யாதையைப்பேணி. (நம்மில்லத்துள்ளேயித்யாதி) நம்முடைய க்ருஹத்துக்குள்ளே இருத்துவதாக நாம் மநோரதித்துக் கொண்டிருக்க. (இவளுமொன்றெண்ணுகின்றாள்) நம்முடைய எண்ணுதலுக்கு விபரீதமாக இவளுமொன்றை யெண்ணாநின்றாள். அதாவது - இங்குத்தையிருப்பு - காராக்ருஹவாஸமாய், அவன் பக்கலிலே போகவே மநோரதியா நின்றாளென்கை.

(மருத்துவப்பதமித்யாதி) மருத்துவனானவன் சமைக்கிற ஔஷதத்தில் பாகம்பார்த்துச் செய்யாதபோது அது கைதவறுமாபோலே, இவள்பதம் பார்த்து "நாம் செய்யாமையாலே இவள் கைகழிந்தாள்" என்னும்வார்த்தைலோகத்திலுண்டாவதுக்கு முன்னே. (ஒருப்படுத்திடுமினித்யாதி) தன்னுடைமையை-மஹாபலி "என்னது" என்றிருக்க, விரகாலே அவன் பக்கலில்நின்

---

அரு;—பத்தாம்பாட்டு. (பெருப்பெருத்தவித்யாதி) மீமிசைக்கர்த்தம் (லோகத்திலித்யாதி). "உலகளந்தானிடைக்கே ஒருப்படுத்திடுமின்" என்றதுக்கு வயித்தர்த்தமருளுகிறார் (தன்னுடைமையித்யாதி). "இடைக்கே" என்றதினர்த்தம் (அவன் பக்கலில்) என்றது.

திருவுலகளந்துரக்ஷித்த ஸர்வரக்ஷகன் பக்கலிலே நெஞ்சொருமித்துக்கொண்டுபோய்விடப் பாருங்கோள், (இடுமின்) கொண்டுபோயிட்டுவைக்கப்பாருங்கோ ளென்னவுமாம்.

இத்தால் ஸதாசார்யனானவன் ஸச்சிஷ்யனைத் தன்னுபதேசத்தாலே திருத்தித்திருந்தின வம்ஸத்தை க்ரியாபதத்தோடே சேர்த்து மிகவும் விரும்பிக் கொண்டாடிக்கொண்டாடி ஸ்வரூபாநுரூபமாக ஆசார்ய பாரதந்த்ர்ய பதார்ந்தர்கத ஸ்த்தாநத்திலே வைப்பதாக விசாரித்து, இதுதானே புருஷார்த்தமாக நினைத்து நிர்பரத்வாறு ஸந்தாநம் பண்ணிநாமிருக்க, இத்தைக் காற்கடைகொண்டு விஷயாநுரூபம் ப்ராப்யமாக நினைத்து, அதிலே அத்யவஸித்துப் போருகிற ப்ரகாரத்தைக்கண்டு, (௧)"ஆளும் பரமனைக்கண்ணனை" என்றாப்போலே சிலவற்றைச் சொல்லி இப்பாரதந்த்ர்ய பரிபாகத்தைக்கடந்த ப்ரஸித்தியுண்டாவதற்கு முன்னே, தேவாஸுரவ்யாஜத்தாலே வாமநவேஷபரிக்ரஹம் செய்து தன்ஸ்வத்துக்குத்தானே இரப்பாளனுமாய், திருவுலகளந்தவ்யாஜத்தாலே அந்யசேஷத்வஸ்வ ஸ்வாதந்த்ர்யங்களை ப்ரகாசிப்பித்துத் (௨) "தனக்கேயாகவெனைக் கொள்ளுமீதே யெனக்கே கண்ணனையான்கொள் சிறப்பு" என்று ப்ரார்த்தித்து(௩)"வியக்க வின்புறுதும்" என்னும்படி பண்ணுவதாக, * ஆள்பார்த்துழிதருகிறவன் பக்கலிலே நீங்கள் நெஞ்சொருமித்து ஸ்வரூபாநுரூபமான புருஷார்த்தத்திலுங் காட்டில் விஷயாநுரூபபுருஷார்த்தமே உத்தேஸ்யமென்றறுதியிட்டுச் சரமபர்வஸ்த்திதியை ப்ரதம பர்வத்திலே கொண்டுபோய் "கண்டுகொள்" என்று சேர்க்கப்பாருங்கோ ளென்கிறது.

---

றும் வாங்கித் தன் திருவடிகளின் கீழே யிட்டுக்கொண்டவன் பக்கலிலே இவளை நீங்களே சேர்த்து விடுங்கோள் ; நீங்கள் சேராதபோதும் இவள்ஸ்வபாவத்தாலும் அவன்ஸ்வபாவத்தாலும்இரண்டு தலையும் சேர்ந்தேவிடும்; ஆனபின்பு, ஏற்கவே நீங்களே சேர்த்து விடுங்கோளென்று த்வரிப்பிக்கிறார்கள். .... .... (௧௦)

---

(இவள் ஸ்வபாவத்தாலும்) என்றது-"இவளுமொன்றெண்ணுகின்றாள்" என்றத்தைப்பற்ற. ... ... ... ... ... ... (௧௦)

---

(௧) தி-வாய்-௩௭-௨. (௨) தி-வாய்-௨-௯-௪. (௩)தி-வாய்-௧௦-௩-௯.

மூ.—
ஞாலமுற்று முண்டாலிலைத்துயில் நாராயணனுக்கிவள்
மாலதாகி மகிழ்ந்தனளென்று தாயுரைசெய்ததனைக்
கோலமார்பொழில்சூழ் புதுவையர்கோன் விட்டுசித்தன்சொன்ன
மாலைபத்தும் வல்லவர்கட் கில்லைவருதுயரே. (௧௧)

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.

அவ;— நிகமத்தில் இத்திருமொழி கற்றார்க்குப் பலம் சொல்லித் தலைக்கட்டுகிறார்.

ஸ்வா;— (ஞாலமித்யாதி) பஞ்சாஶத்கோடி விஸ்தீர்ணமான அண்டாந்தர்கத லோகங்களையெல்லாம் அத்யல்பமான வடிவைக்கொண்டுதிருவயிற்றிலேவைத்துமுகிழ்விரியாத வாலிலையிலேகண்வளர்ந்தருளுகிறஅக(டி)டிதமும்கடிதமாம்படியிறே-நாராயணனென்கிற ஸமாஸத்வபத்தில் பஹுவ்ரீஹியாலே, (௧) "[illegible]-அணோரணீயாந்" என்கிற மாத்ரமுமன்றிக்கே (௨) "இடந்திகழ்பொருடொறும் கரந்தெங்கும் பரந்துளன்" என்கிறதிறே அகடிதமாவது. இதுதான் கடிதமாகவும் "இவையுண்டகரனே" என்கிறது அகடிதமாகவுமிறே இப்பாட்டில் தோற்றிக்கிடக்கிறது. (இவள்) பருவத்தால் வந்த ஶைஶவபாவம் தோற்றுகிறது. (மாலதாகி) பருவம் நிறைந்தாலும் கூடாதவ்யாமோஹம்சொல்லுகிறது.(அது)

அவ;—நிகமத்தில் இத்திருமொழி கற்றார்க்குப் பலம் சொல்லித் தலைக்கட்டுகிறார்.



வ்யா;—(ஞாலமித்யாதி). பூமிதொடக்கமான ஸகலலோகங்களையும் ப்ரளயத்தில் அழியாதபடி திருவயிற்றிலேவைத்து ஒருபவனை ஆலிலையிலே கண்வளர்ந்தருளின அகடிதகடநாஸாமர்த்த்யத்தை யுடையனாய்,ஸர்வஸ்வாமியான நாராயணனுக்கு, (இவள் மாலதாகி மகிழ்ந்தனளென்றித்யாதி) அதிபாலையானவிவள் அதி

அரு;—பதினோராம்பாட்டு. (ஞாலமித்யாதி)"ஞாலமென்ன,முற்றுமென்ன, இவற்றையுண்ட" என்று சப்தார்த்தம் திருவுள்ளம்பற்றி,உண்கைக்கு ப்ரயோஜநத்தை யருளிச்செய்யா நின்றுகொண்டு தாத்பர்யார்த்தத்தை யருளுகிறார் (பூமிதுடக்கமானவித்யாதி). "அது-மாலாகி" என்றந்வயம் திருவுள்ளம்

(௧) தை-நா. (௨) தி-வாய்-௧-௧-௧0.

என்று - உபமா நராஹித்யம். (மகிழ்ந்தனள்) வ்யாமோஹகார்ய மான புருஷார்த்தம் ஸித்தித்து "மகிழ்ந்தனள்" என்று தாய்மார்க்குதார்த்தைகளான ப்ரகாரத்தை. (தாய்)ஜாத்யேகவசநம். "வளர விடுமின்" "ஒருப் படுத்திடுமின்" என்றவர்களும் தாய் மாரிறே. (இவள்) கைங்கர்ய ப்ராப்யத்துக்குப் பூர்வக்ஷணவர்தியான பக்தியுமுண்டாய், கைங்கர்யமும் ப்ரவ்ருத்தமானாலும் அது தன்னையு மாஶ்ரயத்திலே சேர்த்துத் தன்னைப் போக்யமாக்குகை தானே ப்ராப்தமாயிருக்கிற விவள். "இவள் மாலதாகி மகிழ்ந்தனள்" என்று திருத்தாயாரான வாசார்யன் தானே சொல்லும்படி காணும் பரிபாகம் முதிர்ந்தபடி.

(தாயுரை செய்ததனைக்கோல மார்பொழில்சூழ் புதுவையர் கோன்) தர்ஶநீயமான புஷ்பபலாதிகளாலே நிறைந்தபொழிலாலே சூழப்பட்ட திருமாளிகைக்கு நிர்வாஹகரான வாழ்வார். (விட்டு சித்தன்) விஷ்ணுவை சித்தத்திலே யுடையவரென்னுதல்; விஷ்ணுவினுடைய சித்தத்திலே வஸிக்கிறவரென்னுதல். இதுவுமொரு ஸமாஸத்வயமென்னலாமிறே, துல்ய விகல்பமாய்த் தோற்றுகையாலே. (சொன்னமாலை) மங்களாசாஸந பர்யந்தமாக சப்தார்த்தமும், அந்யாபதேசஸ்வாபதேசங்களும் இவையென்று பரவேத்ய மாம்படிக் கொண்டாடி யருளிச்செய்த இப்பத்துப்பாட்டையும் ஸாபிப்ராயமாக வநுஸந்திக்கவல்லவர்களுக்கு. (இல்லை வருது

---

மாத்ரமான வ்யாமோஹத்தையுடையளாய், தத்ஸம்ஶ்லேஷ மநோரதத்தாலே ப்ரீதையானாளென்று தாயாரானவள் சொன்னசொல்லை.

(கோலமித்யாதி) அழகுமிக்கிருந்துள்ள பொழிலாலே சூழப்பட்ட ஸ்ரீவில்லிபுத்தூரிலுள்ளார்க்கு நிர்வாஹகரான பெரியாழ்வாரருளிச்செய்தஸந்தர்ப்பமாய்ஶ்லாக்யமாயிருந்துள்ளபத்துப்பாட்டையும் ஸாபிப்ராயமாக அநுஸந்திக்க வல்லவர்களுக்கு. (இல்லை

---

பற்றி "அந்தமாலையுடையளாய்" என்று சப்தார்த்தமாய், அத்தால்பலிதார்த்தம் (அதிமாத்ரேத்யாதி). ... ... ... ... ... ... (௧௧)

ஜீயர்திருவடிகளேசரணம்

யரே) "துயர் வருக இல்லை" என்றதே "இல்லை வருதுயர்" என்கையாலே இதுவும் பொருந்தமஸ்ஸிருக்கிறபடி. துயராவது - மங்களாசாஸநமான ரக்ஷ்ய ரக்ஷகபாவத்துக்கு வருகிற மாறாட்டம் வாரா தென்றபடி. (க) "பழிப்பிலோம்" என்றதும் இது தன்னையிறே. அந்யசேஷத்வ ஸ்வஸ்வாதந்த்ர்யம் நேராக வறிவதும் இதுதன்னாலேயிறே. ... .... .... .... .... .... (கக)

பிள்ளை திருவடிகளே சரணம்.

## பெரியாழ்வார் திருமொழி மூன்றும்பத்து ஏழாந்திருமொழி முற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## எட்டாம் திருமொழி நல்லதோர் தாமரை ப்ரவேசம்.

அவ;—கீழில் திருமொழியிலே *குறைவொன்றுமில்லாத கோவிந்தனோடே சங்கையாய், அவனுக்குச் சிறு பேரான நாராயணனுக்கிவன் "மாலதாகியவனோடே மகிழ்ந்தனளென்று சங்காநிவ்ருத்தி பூர்வகமாக ஸம்ஸ்லேஷம் ப்ரவ்ருத்தமாயிற்றென்று திருத்தா

வருதுயரே) பகவதநுபவாதிகளுக்கு விரோதியாய் வருவதொரு துக்கமில்லை. .... ... .... ... .... (கக)

பெரியஜீயர் திருவடிகளே சரணம்.

## மூன்றும்பத்து எட்டாந்திருமொழி.

நல்லதோர்தாமரை, ப்ரவேசம்.

அவ.—கீழிற்றிருமொழியிலே தன்பெண்பிள்ளைக்கு அவன் பக்கல் செல்லுகிற ப்ராவண்யத்தைக்கண்ட திருத்தாயார்

அரு;— நல்லதோர் தாமரைப்ரவேசம். பந்துஜநங்கள் இவளுடைய தசையையறிந்து சடக்கென க்ருஷ்ணனுக்குக் கொடுத்துவிடச் சொல்லச் செய்தேயும், அதித்வரையாலே கொடாமையாலே அவன்வந்து கொடுபோக, திருத்தாயார்க்லேசித்து மநோரதிக்கிறபடியைச் சொல்லுகிறதென்று ஸங்கதியை யருளிச்செய்து கொண்டு, பாட்டில் ப்ரமேயங்களையும் காட்டுகிறார் (கீழ்த் திருமொழியிலேயித்யாதி). (கள்வன்கொல்லிப் பிராட்டி) என்றது-பிராட்டி

(க) திருப்பல்லா-௩.

யார் தெளிந்தபின்பும், வரைவுக்கிடங்கொடாமையாலே, அவனும் அது தன்னை யறிந்து மிகவும் வருந்திப் பார்த்த வளவில், அதுகூடாமையாலே, "நம்மைப்பட்டபொருளை விடக்கடவோமல்லோம்" என்று (௧)"𑌦𑌦𑌾𑌮𑌿-ததாமி" (௨)"𑌸𑍍𑌮𑌰𑌾𑌮𑌿-ஸ்மராமி" (௨)"𑌨𑌯𑌾𑌮𑌿-நயாமி" என்றவன் தனக்கு அத்யந்தாபிமதஸ்தாநமான திருவாய்ப்பாடியிலே கொண்டு போனானென்று, திருத்தாயார் படுக்கையில் காணாமையாலே "இவளை யொழியக் கொண்டு போவாரில்லை" என்றும், "திருவாய்ப்பாடி யொழிய வஸ்தவ்ய பூமியில்லை" என்றும், "இதுதான் பந்துக்களுக்கு ஏச்சமோ? குணமாமோ" "கோவிந்தனோடி வளைச்சங்கையாகி" என்று "அவனோடு இவளுக்குக் கலவியுண்டாய்த்ததோ" என்று மூந்துறச்சங்கித்து, பின்பு பலஹேதுக்களாலும்ஸம்ஶ்லேஷம் ப்ரவ்ருத்தமானமையைத்தானுமறிந்து, இவளுடைய ப்ராவண்யத்தின் முறுகுதலைக்கண்ட பந்துக்களும், "மருத்துவப்பதம் நீங்கினாளென்னும் வார்த்தை படுவதன்முன் ஒருப்படுத்திடுமினிவளை யுலகளந்தானிடைக்கே" என்று சொல்லியிருக்கச்செய்தேயும், சடக்கெனவிரைந்து கொடாதொழிகையாலே, அவன் முற்பாடனாய்வந்து * கள்வன் கொல்லிப் பிராட்டியைக் கொண்டு போனாப் போலே இவளை அத்தவாளத்தலையாலே மறைத்துக் கொண்டு தன்னுடைய திவ்யநகரியான திருவாய்ப்பாடியிலே கொண்டுபோக, அந்தரங்கமாகக் காத்துக்கொண்டுகிடந்த திருத்தாயார், படுக்கையில் பெண்பிள்ளையைக் காணாமையாலே, "இவளையொழியக் கொண்டு போவாரில்லை" என்றும் "இவன் கொண்டு போவது தான் திருவாய்ப்பாடியிலே" என்றும் அறுதியிட்டு, "இவள் போகையாலே தன் திருமாளிகை யெல்லாமழகழிந்து வெறியோடிற்று" என்றும்; "இவன் இப்படி யடைவுகேடாகக் கொண்டு போனவிது இக்குடிக்கு ஏச்சாமோ? குணமா

---

தசையை ப்ராப்தரான திருமங்கைமன்னனைச் சொல்லுகிறது. (அத்தவாளம்) என்றது - மயிற்றோகை விரித்தாப்போலே பின்னேசாத்தும் திருப்பரியட்டம். (திருவாய்ப்பாடியிலே) என்றது- "ஆயர்கள் சேரியிலும்புக்கு" என்றத்தைப்பற்ற. (வெறியோடிற்று) என்றது - வெளியாய்த்தென்றபடி.

(௧) கீ-௧௦-௧௧. (௨) வராஹசரமம்.

மூ.—

நல்லதோர் தாமரைப்பொய்கை நாண்மலர்மேற் பனிசோர
அல்லியுந்தாது முதிர்ந்திட் டழகழிந்தாலொத்ததாலோ
இல்லம்வெறியோடிற்றாலோ வென்மகளை யெங்குங்காணேன்
மல்லரை யட்டவன்பின்போய் மதுரைப்புறம்புக்காள்கொலோ.

என்றும், "அங்குச் சென்றால் அவனும் அவனுடைய பந்துக்களும் ஆதரிப்பரோ? அநாதரிப்பரோ" என்றும், வழியிடைக்கண்டாரையும் வினவிக்கொண்டு சென்ற ப்ரகாரங்களை வ்யாஜமாக்கி மங்களாசாஸநபர்யந்த மாகவநுஸந்திக்கிறார். ... ... ❋

அவ;—முதற்பாட்டு. படுக்கையைத் தடவிப்பார்த்துக் காணாமையாலே க்லேசித்துச் சொல்லுகிற பாசுரமாயிருக்கிறது.

மோ?"என்றும்; "இவளுக்குப்பாணிக்ரஹணார்த்தமான உத்ஸவம் இபபடி நடக்குமோ?" என்றும் ; "மாமியாரான யசோதைப்பிராட்டி இவளைக் கண்டுகந்து மணவாட்டுப் பெண் பிள்ளை யென்று ஸத்கரிக்குமோ" என்றும் ; "மாமனாரான ஸ்ரீநந்த கோபர் உகந்தணைத்துக் கொண்டு இவள் வைலக்ஷண்யத்தைக்கண்டு இவளைப் பெற்ற தாயார் இனித்தரிக்கமாட்டாளென்பரோ" என்றும்; "அவன்றான் நிஹீநகுலத்தி லுள்ளாரைப் போலே என்மகளைப் புணர்ந்து, உடன் போகை ஹேதுவாகக் கொண்டு குடிவாழுமோ, நாடெல்லாமறியும்படி நன்றாகக் கண்ணாலஞ் செய்து கைப்பிடிக்குமோ"என்றும் ; "தன்பெருமையாலே அவன் இவளுக்கு ரூபகுண தோஷங்களைச் சொல்லி வரிசையறுத்து ஆண்டிடுமோ, தனக்கு ஜாத்யுசிதமான மஹிஷியாகப்பட்டங்கட்டி, பூர்வமஹிஷிகள் முன்னே வைபவம் தோற்ற வைக்குமோ" என்றும்; "இவள்தான் தயிர்கடைகை முதலான வன்தொழில்கள் செய்து குடிவாழ்க்கை வாழுவல்லளோ" என்றும் இப்படி க்லேசித்தும் மநோரதித்தும்சென்ற ப்ரகாரத்தைச் சொல்லுகிறது - இத்திருமொழியில்.

வ்யா.—முதற்பாட்டு. (நல்லதோர் தாமரைப் பொய்கை) பரப்புமாறத் தாமரை பூத்துக் கிடக்கையாலே, அழகியதாய் அத்விதீயமான பொய்கையானது. (நாண்மலர் மேற்பனி சோர)

அரு;—முதற்பாட்டு. (நல்லதோரித்யாதி) பொய்கையினுடைய நன்மைக்குஹேதுவை யருளிச்செய்யா நின்றுகொண்டு சப்தார்த்தமருளுகிறார் (பரப்பு மாறவித்யாதி). (பரப்புமாற) எங்குமொக்க. "நாண்மலர்" என்றபத

ஸ்வா;—(நல்லவித்யாதி) ஜலஸம்ருத்திமாறுமையும், பூஸார முண்டாகையுமிறே பொய்கைக்கு நன்மையாவது. இப்பொய்கை கண்ணாலேயிறே தாமரைக்கு நன்மை யுண்டாவது. (ஓர்) உபமாந ராஹித்யம், இப்படி, "நாற்றம், செவ்வி, குளிர்த்தி, மார்தவம்" என்றாப்போலே சொல்லுகிற நாண்மலர்மேல். (பனிசோர) அதுக்கு விருத்தமான பனியானது மிகவும் சொரிய, அத்தாலே அல்லியும் தாதும் செவ்விகெட்டு உதிர்ந்து. ஸ்த்தாவரஜாதிகளுக்கெல்லாம் உபகாரமாயிருந்ததே யாகிலும், தாமரையை அழகழித்து ஸத்தாஹாநியைவிளைப்பிக்கைப்ரதிநியதஸ்வபாவமாயிருக்குமிறே; அதுபோலே இப்பெண்பிள்ளையும் என் வயிற்றில் பிறப்பொழுக்கம்

"சிவப்பு, விகாஸம், செவ்வி, குளிர்த்தி, பரிமளம், மார்த்தவம்" என்கிறஇவற்றையுடைத்தானநாட்பூவின்மேலே, அதுக்கு விருத்தமான பனியானதுமிகவும் சொரிய, (அல்லியித்யாதி) அத்தாலே அல்லியும் தாதும்செவ்விகெட்டுஉதிர்ந்து, அலங்காரமான பூஅழிகையாலே தானழகழிந்தாப்போலே யிராநின்றது. ஸ்த்தாவரஜாதிக்கெல்லாமுபகாரகமா யிருந்ததேயாகிலும் தாமரைக்கு பாத(बाध)கமாகை நியதஸ்வ பாவமிறே பனிக்கு. அப்படி பனியேறுண்ட தாமரையோடை போலேயாய்த்து இத்திருமாளிகைகிடக்கிறது. ஆறும், ஓவும்-விஷாததிசயஸூசகம்.

(இல்லம் வெறியோடிற்றாலோ) க்ருஹமானது வெறிபாய்ந்துவிட்டது. ஒருஜநஸஞ்சாரமற்று வெளியாய்க்கிடவாநின்றதென்கை

வாஸனையைத் திருவுள்ளம்பற்றி, இவள் திருமாளிகைக்கு த்ருஷ்டாந்தம் பொய்கையாய், செய்யாளான பெண்பிள்ளைக்கு உபமாநம் தாமரைப் பூவாகையாலே, செந்தாமரைப்பூ இங்கு விவக்ஷிதமென்று தாத்பர்யமருளுகிறார் (சிவப்பித்யாதி). (நாள்பூ) காலமலர்த்தவலர்ந்த பூ. பொய்கையழகழிகைக்கு அல்லியும் தாது முதிர்ந்தது ஹேதுவல்லாமையாலே அதுக்கநுகுணமாகப் பூ வழிகையைக் கூட்டி அர்த்தமருளுகிறார் (அத்தாலேயித்யாதி). (அல்லி) இதழ். (தாது) கேஸரங்கள். (தான்) என்று - பொய்கை யென்றபடி. ஸர்வோஜ்ஜீவர்த்தகமான பனிசொரிகை அல்லியும் தாது முதிருகைக்கு ஹேதுவாமோ வென்ன வருளுகிறார் (ஸ்த்தாவரேத்யாதி). "ஒத்தது இல்லமாலோ" என்றந்வயம் திருவுள்ளம்பற்றி ஸாத்ருஶ்யத்தைக் காட்டுகிறார் (அப்படியித்யாதி).

குன்றாமல் வர்த்திக்க இந்த க்ருஹமும் முழுக்கற்றுப்போனுப் பேர்லே வெறியானது தோன்றுகின்றது.

தாமரைத்தடம்போன பொய்கைதான் இருந்து வந்தபடியோ? அது அல்லியும் தாதுமுதிர்ந்து அழகழிந்தாம் காலாந்தரங்கள் த்திக்கியுண்டிறே, காலாயக்கிடக்கையாலே; அதாவுமில்லையிறே இந்த க்ருஹத்துக்கும் எனக்கும். ஸாநர்த்தி ப்ரஹ்மாஸ்திபாளையின்பு ஐச்வர்யத்வம் பின்னாட்டுத்திக்கையிறே. ஜனகராஜன் திருமகளும் பின்புஸ்ரீயிதில்லை நினைத்திலளிறே. ஆகையாலே "ஆலோ" என்கிற அசையாலே உபமாநாஜதிப்யமும் புகராவ்ருத்யபாவமும் தோற்றுகிறது. இக்க்ருஹம் முழுக்க இப்பெண்பிள்ளை யொருத்தியும் போலே காணுமிருந்தாள்.

(என்மகளை யெங்கும் காணேன்) அவள் "தன் மகளன்று" என்று போனாலும், இவள் "என்மகள்" என்னுமிறே. எங்கும் பார்த்துக் காணுதொழிந்தாலும் "என்மகள்" "என்று க்ருஹாந்தரங்கள் தோறும் ஸ்வக்ருஹம் போலே பார்த்தாளாதல், இவள்போன வடி பிடித்துப் போய், அங்கு மோரிடத்தில் காணாமல் வழியெதிர் வந்தவர்களும் கண்டமை சொல்லாமையாலே மிகவும் க்லேசித்தாளென்னுதல். பின்னையும் தன்னுடைய சபலபாவத்தாலே, என் வயிற்றில் பிறப்பாலும், பெண்பிள்ளையுடைய ப்ரக்ருதி ஸ்வபாவத்தாலும், * குறைவொன்றில்லாத கோவிந்தன் தீம்பாலும், அவன் ஆஸ்ரித ரக்ஷணார்த்தமாக விரோதிநிரஸநம் செய்த ஸாமர்த்தியத்

இக் க்ருஹம் முழுக்க இப்பெண்பிள்ளை யொருத்தியும் போலே காணுமிருந்தாள்; எல்லாருமிருந்தாலும் இவளொருத்தி போகையாலே திருத்தாயார்க்கு அப்படி தோற்றுமிறே. மீளவும் "ஆலோ" என்கிறாள்-விஷாதாதிசயத்தாலே. (என்மகளை யெங்கும் காணேன்) என் பெண்பிள்ளையை யோரிடத்திலும் காண்கிறிலேன். க்ருஹம் மாத்ரமன்றிக்கே, பண்டு இவளிருக்குமிடம் ஸஞ்சரிக்குமிட மெங்கும் தேடிக்காணாமையாலே சொல்லுகிறாள். (மல்லரையித்யாதி) இங்குக் காணாமையாலே "அவன் கொண்டு போ

மற்றபேரெல்லாருமிருக்க, இவளொருத்தியில்லாமையாலே வெறியோடிற்றென்பானென்னென்ன, ப்ரேமத்தாலே சொல்லுகிறாளென்கிறார் (இரு

தானும்,(க)"அணியாலிபுகுவர்கொலோ"என்னுமாபோலே, "மல்லரையட்டவன் பின்போய் மதுரைப் புறம் புக்காள்கொலோ" என்கிறாள்.

(புறம்) திருவாய்ப்பாடி. ஒருவர்க்கொருவர் ஊமத்தங்காயாகையாலே கம்ஸநகரியான மதுரையிலே புகவும் கூடுமிறே. அன்றிக்கே "தன்னதான திருவாய்ப்பாடியிலே புகுந்தாளோ" என்று ஸம்ஶயிக்கிறாள். மல்லர் முடிந்தபோதே கம்ஸனும் முடிந்து உக்ரஸேநனும் சிறைவிட்டு ராஜாவாய், நகரத்திலுள்ளாரும் அநுகூலரான பின்பும், மதுரை யென்றவாறே பயப்படவேண்டி வருமிறே, பிணமெழுந்தாலும் தெரியாதென்னும் பயத்தாலே.

இத்தால்-ஆசார்யனானவன், பனியாலே தாமரை குடிபோன பொய்கையை, ஸௌமநஸ்யத்தையுடைய சிஷ்யனானவன் தன்னுடைய † ஹிதவசநத்தை அதிக்ரமித்துத் தன்னுடைய ஸந்நிதியை

ளன்" என்று அறுதியிட்டு, மல்லநிரஸநம்பண்ணின வீரப்பாட்டையுடையவன் பின்னேபோய், மதுரைப்புறத்திலே புகுந்தாளோ வென்கிறாள். மதுரைப்புறமாவது-மதுரைக்கு அடுத்து அணித்தான திருவாய்ப்பாடி, "மதுரைப்புறம் புக்காள்கொலோ" என்றது (க) "அணியாலி புகுவர் கொலோ" என்றாப்போலே. அதாவது-ஒருவர்க்கொருவர் ஊமத்தங்காயாகையாலே கம்ஸ நகரியான மதுரைதன்னிலே சென்று புகவும் கூடுமிறே; அது செய்யாதே, தனக்கு உத்தேஶ்யபூமியான திருவாய்ப்பாடியிலே போய்ப் புகுந்தாளோ வென்று ஸம்ஶயிக்கிறாள். .... .... .... (க)

ஹம்முழுக்கவித்யாதி வாக்யத்வயத்தாலே). (அறுதியிட்டு) நிஶ்சயித்து. மதுரை யென்னாதே "புறம்" என்றதுக்குத் தாத்பர்யமருளுகிறார் (மதுரையித்யாதி). திருவாய்ப்பாடியிலிருக்கும்க்ருஷ்ணன் பின்புபோனமை நிஶ்சயித்தவள் "மதுரைப்புறம்புக்காள் கொலோ" என்று ஸம்ஶயிக்கை சேரும்படியெங்ஙனே யென்ன, த்ருஷ்டாந்தமும் காட்டா நின்றுகொண்டு விவரிக்கிறார் (மதுரைப்புறமித்யாதிவாக்யத்ரயத்தாலே) (போலே) என்றவநந்தரம் "இருக்கிறது" என்று சேஷம். (ஒருவர்க்கொருவர் ஊமத்தங்காயாகிறது) அந்யோந்ய ஸந்தர்ஶநஸஞ்ஜநிதாநந்தத்தாலே பாஹ்யவிஷயஜ்ஞாநமில்லாமையைஜநிப்பிக்கிறவர்களென்றபடி. ... ... (க)

(க) தி-மொ-௩-எ-க. † (பா) ஹிதவசநத்தாலே கருகி.

மூ.—ஒன்றுமறி வொன்றில்லாத வுருவறைக் கோபாலர்தங்கள்
கன்றுகால் மாறுமாபோலே கன்னியிருந்தாளைக்கொண்டு
நன்றுங்கிறிசெய்துபோனான் நாராயணன் செய்ததீமை
என்றுமெமர்கள்குடிக் கோரேச்சுக்கொலாயிடுங்கொலோ.

ஈஶ்வரனுடைய தண்ணளியாலே போகட்டுப்போனவனுக்கு ஸர்வதா ஸாத்நுப்யமாகவநுஸந்திக்கிறாளென்று தோற்றுகிறது. வஸ்தவ்யமான தன்னுடைய ஸந்நிதியை விட்டால் பின்னை வஸ்தவ்யம் பகவத் ஸந்நிதியுள்ள பரத்வாதிகளெங்குமிறே, இவளுக்குப் பார்க்கவும் கண்டிலே னென்னவும் ப்ராப்தியுள்ளது. ஆனால் சங்கித்த கோவிந்தன் பக்கலிலேயிறே ப்ராப்தி; இவளுடைய அபூர்த்தி திரஸ்காரது, அவனுக்கபிமதத்வேநவஸ்தவ்ய பூமியான திருவாய்ப்பாடியிலேயிறே; உத்தேஶ்யத்தைப் பிரித்து உடன்கொண்டுபோன அவனுக்கும், கூடப்போன இவர்கள் தனக்கும் ஸாவதியாவதும் அது தானேயிறே. (க)"புகுமூர்"என்றுப்போலே, நாநாவான அநுமாந ஸம்ஶயங்களாலே நிர்ணயிக்கிறது. ப்ரத்யக்ஷமும் ப்ரமாணாநுகூலமானால் அநுமாநமும் ப்ரமாணாநுகூலமாயிறே யிருப்பது. (௧)

அவ;—இரண்டாம்பாட்டு. இவ்வுடன் போக்கு குணமோ, தோஷமோ வென்று ஸம்ஶயிக்கிறாள்.

ஸ்வா;—(ஒன்றுமித்யாதி), பொருந்தினவறிவொன்று மில்லாத. * அறிவொன்றுமில்லாத வாய்க்குலமிறே. தேஹ தர்மத்தோடேயாதல், ஆத்ம தர்மத்தோடே யாதல் பொருந்தின வறிவு அல்பமுமில்லாத. (அறிவொன்றுமில்லாத) காட்டிலே பசுமேய்க்

வ்யா; — இரண்டாம்பாட்டு. (ஒன்றுமறிவொன்றில்லாத) பொருந்தின வறிவு ஒன்றுமில்லாத. லௌகிக வைதிகங்களோடு சேர்ந்த வறிவு அல்பமுமில்லாத; * அறிவொன்று மில்லாத வாய்க்குலமிறே. காட்டில் பசு மேய்க்கப்போன விடங்களிலே வழி திகைத்தால் வழிகாட்டுவது பசுக்களாம்படியிறே- இவர்களறி

அரு;—இரண்டாம்பாட்டு.(ஒன்றுமித்யாதி) "ஒன்றுமறிவு" என்றதுக்கு ஒன்றினவறிவென்றுவிவக்ஷித்துசப்தார்த்தம்(பொருந்தினவித்யாதி). எத்தோடே யொன்றின வென்னவருளுகிறார் (லௌகிகேத்யாதி). அறிவில்லாமையைப்ரமாண பூர்வகமுபபாதிக்கிறார் (அறிவொன்றுமித்யாதிவாக்யத்தாலே). (வழிதிகைத்தால்) வழிதெரியாவிட்டால். கீழ்பதத்தைக் கடாக்ஷித்துத்

கப்போன விடங்களில் வழி திகைத்தால் வழிகாட்டுவது பசுக்க ளாம்படியிறே இவர்களறிவிருப்பது. * வல்லாளுயிரிறே. குடவை யில் சோற்றையுமுண்டு புதுமழைத்தண்ணீரையும் குடித்த செருக் காலே தாங்கள் திரள நின்றால் இந்த்ரனை ஜயித்துவந்த கம்ஸனை, "இவனுக்குக் குடிமை செய்வாரார்; இத்தப்பசு மேய்க்கிற கோல் களாலே அவனைச் சாவ வடித்திழுக்கப் பாருங்கோள்" என்றாப் போலேயிறே இவர்களறியாமையால் வந்த நெஞ்சில் வலிமைதா னிருப்பது.

(உருவறைக்கோபாலர்) அறிவைப்பேணமாட்டாதாப்போலே யிறே தேஹத்தையு மழுக்கறுத்துப் பேணமாட்டாமையும். (கோ பாலர்) கோவர்கத்தை ரக்ஷிக்கிறவர்களென்னுதல். அவை தன் னாலே ரக்ஷைபடுகிறவர்க ளென்னுதல். (தங்கள் கன்றுகால் மாறு மாபோலே) தங்கள் கன்றுகள் விளைவதறியாதே யிருந்ததேயாகி லும் முன்னடியிலே பின்னடியிட்டு, இரண்டு காலாலே நடந்தாப் போலேயிறே யிருப்பது. அப்படியே படிகடிந்து புறப்படாமல்

---

விருப்பது. (உருவறைக்கோபாலர்) ரூபஹீநரான கோபாலர். ஆத்மகுணமில்லாதாப்போலே ரூபகுணமுமில்லாதவர்களென்கை. (தங்கள்) "தாங்கள்" என்கிற வித்தைக் குறைத்துக் கிடக்கிறது. கோபாலர் தாங்களென்றபடி. இவர்களுடைய வறிவு கேடும் உருவுகேடும் சொன்னது-இவை பார்த்தால் பொல்லாதா யிருக்கு மாபோலே, இவர்களுடைய வ்ருத்தியும் பார்த்தால் பொல்லாதா யிருக்கு மென்கைக்காக. அந்த வ்ருத்தி தன்னைச் சொல்லுகிறது மேல் (கன்று கால் மாறுமாபோலே) என்று. கன்றுகால் மாறு கையாவது-தீதாயிருந்துள்ள தங்களுடையகன்றுகளை "உங்களது" என்று பிறர்க்குக்காட்டி, நல்லதாயிருந்துள்ள அவர்களுடைய

---

தாத்பர்யம்(ஆத்மகுணமித்யாதி). க்ருஷ்ணனுக்கு த்ருஷ்டாந்தமாகச்சொன்ன விடையர்க்கு அறிவுகேடும் ரூபஹாநியும் சொன்னது தார்ஷ்டாந்திகமான க்ருஷ்ணனிடத்தி லில்லாமையாலே, அவர்களுடைய வ்ருத்திக்குத்ருஷ்டாந்த மென்கிறார் (இவர்களுடையவித்யாதி). (இவை) என்றது - அறிவும் ரூபமும். கன்று மாறுகையும் கால்மாறுகையு மென்ற க்ஷரார்த்தம் திருவுள்ளம்பற்றி உபபாதிக்கிறார் (கன்றுகால் மாறுகையாவதித்யாதி). "கால்" என்றது - நல் வழியாக வருங்கன்று.

க்ருஹத்திலே யிருந்த கந்யகையைத் தன்னோட்டைச் சுவட்டை யறிவிப்பித்துக் கொண்டுபோனபடி.

(நன்றுமித்யாதி) பொல்லாங்கான க்ரியைகளைச் செய்து, அதுவே பாதேயமாகக் கொண்டுபோனான். தானிட்ட வழியிலே யிஷ்டப்படியாக நன்றான வீரகுகளைச் செய்து கொண்டு போனான். அன்றியே, உருவறைக் கன்றுகளைக் காற்கடை கொண்டு நீக்கிக் காலோக்கமும் ஒழுகுசிட்சியும் மயில்புறச்சாயையும் பொலி யேற்றால்வந்த பிறப்புடைமையுமுடைத்தான கன்றுகளை அடிக்கெரியாமல் கொண்டு போவாரைப்போலே, தான் பண்டு விரும்பினவர்களை "உருவறைகள்" என்று போகட்டு, உருவான என் பெண்ணைக் கொண்டு போனானென்னவுமாம். (நாராயணன் செய்த தீமை) ஸமஸ்த கல்யாண குணாத்மகனாயிருக்கிறவன். ஔஷதம் அபத்ய

கன்றுகளைத் தங்களதாக்கிக் கொள்ளுகையும், நல்வழியாய்க் கண்ணுக்கு நன்றாயிருக்கும் கன்றுகளை, உடையவர்களறியாமல் களவிலே நிலைபேர்த்துக்கொண்டு போகையுமிறே; இதில்பிற்பட்டதே இவ்விடத்துக்குச் சேருவது. இப்படி இவர்கள் செய்யுமாபோலே.

(கன்னியிருந்தாளை-நன்றும் கிறிசெய்து-கொண்டு-போனான்) கந்நிகையாய், விஷயரஸமென்ப தொன்றறியாதே படி கடந்து புறப்படாமல் என்கிழேயிருந்தவளை, முன்தீம்பு செய்து தன்சுவட்டையறிவித்துத் தன்வசமாக்கி, நானறியாதபடி மிகவும் விரகு செய்து கொண்டு போனான். (நாராயணன் செய்ததீமை) ஸமஸ்த கல்யாண குணாத்மகனானவன் நன்மையே செய்யக் கடவவன் இப்படி தீமையைச்செய்வதே!. இவ்விடத்தில் தீமையாவது-தன்னுடைமையைத்தான் கொண்டுபோம்போது வரைந்து வெளிப்படக் கொண்டு போகலாயிருக்க, இப்படி களவிலே கொண்டுபோனது. (என்றுமித்யாதி) இப்படி இவன்செய்த தீமை நிரவத்யமான வெங்கள் குடிக்கு எல்லாக்காலத்திலும் நிற்பதொரு பழிப்பாமோ? அன்றிக்கே, இக்குடியிற் பிறந்ததொரு விஷயத்தை வரைந்து

"இருந்தாளை" என்றதுக்கர்த்தம்; (படிகடந்தித்யாதி). கந்நியாய், தாய்க்கீழிருக்குமவளைக் கொண்டுபோகக் கூடுமோ வென்னவருளுகிறார் (முற்றீம்பித்யாதி).(முற்றீம்பு) என்றது - அறியாப் பெண்களைத்தானே முந்துறமுன்பு ஸம்ஶ்லேஷிக்கை யென்றபடி. "நன்றும்கிறி செய்து" என்ற தினர்த்தம்(மிகவும் விரகு செய்து) என்றது. (விரகு) உபாயம். கண்ணன் என்றதே "நாராயணன்" என்றும், "செய்ததீமை"என்றும் சேராதவற்றைச்சேர்த்துச்சொன்னதுக்கு ஈடுபாடாகக் கருத்தருளுகிறார் (ஸமஸ்தேத்யாதி).(வரைந்து)வரித்து.

மூ.—குமரிமணஞ் செய்துகொண்டு கோலஞ்செய் தில்லத்திருத்தித்
தமரும்பிறருமறியத் தாமோதரற் கென்றுசாற்றி
அமரர்பதியுடைத்தேவி யரசாணியை வழிபட்டுத்
துமிலமெழப்பறைகொட்டித் தோரணம்நாட்டிடுங்கொலோ.

---

மாமா போலே நீமை யென்கிருள். தன்னுடைமையைத் தான் கொண்டுபோம்போது வரைந்து வெளிப்படவும் கொண்டுபோகலா மிறே.

(என்றுமெமர் குடிக்கோரேச்சுக்கொல்) (எமர்கள் குடிக்கென் றுமேச்சுக்கொல்)-எங்கள் குடிக்கென்று மேச்சாமோ?. அன்றியே வரைவுகருதிப் பெறுதார்க்கு உடன்போக்கு குணவத்தாயிடுமோ? (ந)"கொல்லையென்பர் கொலோகுணம் மிக்கனளென்பர்கொலோ" என்னக் கடவதிறே.

இத்தால் ஆசார்யனவன், தனக்குப் பரதந்த்ரனாயிருக்கிற வனை ஈஸ்வரன் விஷயீகரித்துக் கொண்டுபோன ப்ரகாரங்களை நினைத்தும் சொல்லியும் வெறுத்தமை தோன்றுகிறது. ... (உ)

அவ;—மூன்றாம்பாட்டு. போனவள் என்செய்தாளோ வென் றறிகிறிலோமிறே யென்கிருள்.

ஸ்வா;—(குமரியித்யாதி). "குமரி" என்று-கந்யகை. கந்யகை யைஜாத்யுசிதமாகஅங்கராகாதிகளாலும்புஷ்பாதிகளாலும்அலங்க ரித்து, ஸுவர்ணவரத்நவஸ்த்ராதிகளாலே கோலம் செய்து.

---

கொடுக்கப்பெறுமல், அவன் மூற்பாடனுய்வந்துகைக்கொண்டுபோ னவிதுதன்னாலே இக்குடிக்கோரேற்றமாமோ. (க)"கொல்லையென் பர்கொலோ குணம் மிக்கனளென்பர்கொலோ" என்னுமாபோலே, இக்குடிக்கு இது பழியாமோ, புகழாமோவென்கிருள். .... (உ)

வ்யா;—மூன்றாம்பாட்டு. (குமரிமணம் செய்துகொண்டு) கும ரி-கந்யகை. கந்யகாவஸ்த்தையில் செய்யும் கல்யாணத்தைச்செய்து கொண்டு. அதாவது-விவாஹத்துக்குப் பூர்வாங்கமாகச் செய்யும் உத்ஸவ விசேஷத்தைச் சொன்னபடி. (கோலஞ்செய்து) ஆபரண

---

'எமர்கள்குடிக்கு' என்றும், ஏச்சு கொலன்றிக்கே, ஆயிடுங்கோலோ-நன்றாயி டுங்கொலோ" என்று சப்தார்த்தம் திருவுள்ளம் பற்றித் தாத்பர்யமருளுகிருர் (இப்படியித்யாதி). ... ... (உ)

---

(க) தி-வாய்-கூ-எ-ச.

(இல்லத்திருத்தி) கல்யாணக்ருஹத்துக்குள்ளே தாரு தாருக்கைத்த ளமைரயாமலிருத்தி. (தமரும் பிறருமறியத்தாமோதரற்கென்று சாற்றி) பந்துக்களுக்கும் மற்றுள்ளார்க்கும் ப்ரஸித்தமாம்படி தாமோதரர்க்கென்று சாற்றி. அப்ராப்த விஷயங்களுக்காகிலிறே அப்ரஸித்தமாக்கிக் கொடுக்கவேண்டுவது. (தாமோதரற்கு) அபலையாய்மாதாவான வளுடைய வசநபரிபாலந பாரதந்த்ர்யத்தாலே பந்தபாசவிமோசநம் செய்து கொள்ளமாட்டாமல், (க) "ஸக்தஸ்ஸ்வா-யதிரஸ்க்ருதி" என்ற பின்னும் அஸக்தி தோன்றவிறே இருந்தது. இப்படிப்பட்ட குணவானுக்கென்று சாற்றி. இத்தைப் பாரத்வத்திலே யாக்கில் இத்தனை சௌரவம் தோன்றாதிறே.

(அமரர்பதியித்யாதி) இந்த்ரனுடைய ஸ்த்ரீயான ஸசிதேவியை - "ஸீஸ்த்ர - லேகத்ர:" என்கிற ந்யாயத்தாலே வழிப்படுமவளன்றே. இவள் - இந்த்ரனுக்கும் இந்த்ரனாய், ஸம்ருநிர்வாஹகனாய், ஸ்ரியப்பதித்வமே நிரூபகமாகவுடையவனுடைய தேவி. (உ) "லக்ஷ்மீ-விஷ்ணுபத்நீ" (க) "அநபாயிநீ-அநபாயிநீ" என்கிறபடியே அவனை நிரூபகமாகவுடையவள். (ச) "உன் திரு" என்னக்கடவதிறே. இதுவிசேஷண நிரூபகமே யாகிலும் "ஸ்ரியப் பதியானவுன் திரு" என்கையாலே ஸ்வரூபநிரூபகமாமிறே. சதுர்த்தியில் சேஷத்வத்துக்கு-பதஸாமர்த்த்யத்தாலும் ராஜபுருஷந்யாயத்தாலும் சேஷியானவன் தானே நிரூபகனுமானானிறே.

---

வஸ்த்ராங்கராகாதிகளாலே யலங்கரித்து. (இல்லத்திருத்தி) கல்யாண க்ருஹத்திலே யிருத்தி. (தமருமித்யாதி) பந்துக்களும் மற்றுமுள்ளாருமறியும்படி, "தாமோதரனுக்கு இவளைக் கொடுக்கப் புகாநின்றோம்" என்று ப்ரஸித்தமாக்கி. "தாமோதரன்" என்றது-மாதாவானவள் கட்டின கட்டு அவிழ்த்துக்கொள்ள ஸக்தனன்றிக்கே, அவள் நியமநம் தப்பாமலிருந்த நீர்மையையுடையவனென்றபடி.

(அமரர்பதியுடைத்தேவி) அங்குத்தைக்கென்று ஸங்கல்பித்து *தமரும் பிறரு மறியச் சாற்றினபோதே * அயர்வறுமமரர்களதி

---

அரு;—மூன்றும்பாட்டு. (குமரியித்யாதி) "இருத்தி" இருக்கப்பண்ணி "சாற்றி" என்றதினர்த்தம் (ப்ரஸித்தமாக்கி) என்றது.

அரசாணியைவழிப்படுக்கைக்குமுன்னே "அமரர்பதியுடைத்தேவி" என்று சொல்லக் கூடுமோ வென்னவருளுகிறார் (அங்குத்தைக்கித்யாதி). (வலம்

---

(க) வி-பு-ரு-கூ-கடு. (உ) ஸ்ரீஸூக்தம் (க) வி-பு-க-அ-கள. (ச)

(அமரர்பதியுடைத்தேவி) அவளை "பெருந்தேவி" என்றும், இவளை (க)"என் சிறுத்தேவி" என்று மருளிச் செய்தார்களிறே. ஆகையாலே சிறுத்தேவி-பெரியதேவியை வழிப்பட வேணுமிறே, (அரசாணியை) அம்மியை. (உ) "அம்மி மிதிக்க" என்கிறபடியே மிதித்து வழிபடுமித்தனையிறே இங்கு. அரைக்கப்பட்டசாணை. ஐகாரம் இகாரமாய்க்கிடக்கிறது. பெருந்தேவியை வழிப்பட்டபோதே நித்யவிபூதியும் அவளிட்டது வழக்காகையாலே, இவள் தன்னை "அமரர் பதியுடைத்தேவி" என்னவுமாம்.

(தமிலமெழப்பறைகொட்டி) பெரியவார்ப்பரவம் தோன்ற வாத்யாதிகளை முழக்கி. "மத்தளம் கொட்ட" என்னக்கடவதிறே. (தோரணமித்யாதி). பஞ்சலக்ஷம் குடியிருப்பான திருவாய்ப்பாடியில் தெருக்கள்தோறும், நாற்சந்துகள்தோறும் தோரணம் முதலான வலங்காரங்களைக் கற்பித்துக்கொண்டாடுவர் கொளோ; குடிப் பிறந்தார் கல்யாணத்துக்குக் கொண்டாட்டமென்செய்ய வென்பர்களோ ?.

இத்தால், தன்னளவிலேயற்றுத் தீர்ந்த சிஷ்யனை ஈஶ்வரன் தன் அபிமதத்தாலே விஷயீகரித்துக்கொண்டு போனதும்,போன விடத்தில் "என்செய்கிறானோ" என்று ஆசார்யனானவன் கரைகிற ப்ரகாரம் தோற்றுகிறது. ... ... .... (௩)

---

பதியானவனுடைய தேவியானவள். (அரசாணியை வழிப்பட்டு) ஜாத்யுசிதமாம்படி அலங்காரபீடத்துக்குத் தூணான அரசாணியை வலம்வந்து. அரசாணியாவது-அலங்காரபீடத்தின் மேலே நாட்டும் அஶ்வத்தகண்டம். (தமில மெழப்பறை கொட்டி) பெரிய ஆரவாரந்தோன்ற வாத்யத்தை முழக்கி. (உ) "மத்தளங்கொட்ட" என்னக் கடவதிறே. (தோரணம் நாட்டிடுங்கொலோ) ஊரெங்கும் தோரணம் நாட்டுகை முதலான அலங்காரங்களைக் கற்பித்துக் கொண்டிடுவர்களோ; குடியிற் பிறந்தார், "கல்யாணத்துக்குக் கொண்டாட்டமென்செய்ய?" என்பர்களோ?. ... .... (௩)

---

வந்து) என்றது - வலம் வந்திருக்கும்படியென்று கருத்து. இதுவே கல்யாணமென்று திருவுள்ளம். (குடிப்பிறந்தார்) என்றது - இறையிறுத்துக்குடித்தனம் பண்ணுவார்க்ருஹத்தில் பிறந்தவர்களென்றபடி "குமரியித்யாதி, அமரர் பதியுடைத்தேவியானவள் அரசாணியை வழிப்படும்படி தமிலமெழவென்று தொடங்கி" என்றந்வயம். ... ... (௩)

---

(க) நா-தி-௯-அ. (உ) நா-தி-௬-௬.

மூ.—ஒருமகள்தன்னையுடையேனுலகம்நிறைந்தபுகழால் [போனான்
திருமகள்போல வளர்த்தேன் செங்கண்மால்தான் கொண்டு
பெருமகளாய்க்குடிவாழ்ந்து பெரும்பிள்ளைபெற்றவசோதை
மருமகளைக்கண்டுகந்து மணாட்டுப்புறஞ் செய்யுங்கொலோ.

ஸ்வா;—நாலாம்பாட்டு. (ஒருவித்யாதி). தான் வளர்த்த வருமையைச் சொல்லுகிறாள். உபமாநரஹிதையான வென்பெண். "தன்னை" என்கிற மதிப்பாலே (க) "ஸ்வோத்ஸீ-சுகதாநம்" என்னுமாபோலே, குடிப்பிறப்பால் வந்தவளவேயன்றியே, ஸௌந்தர்ய குணபூர்த்திகளாலே இவளுக்குத் தாயாரென்கைதானே எனக்குப் பெருமதிப்பாகவுடையேன். (உலகமித்யாதி) குத்ராமகிர்வாஹகனைத் தொடங்கி அண்டகிர்வாஹகன் முடிவான வளவன்றிக்கே, (௨) "𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌮𑍀𑌶𑍍𑌵𑌰𑍀 - ஸர்வபூதாநாமீச்வரீ" என்கிறபடியே ஸ்ரீகளுக்கு மவ்வருகான புகழையுடையளாய், அவன்றனக்கும்

வ்யா;—நாலாம்பாட்டு. (ஒருமகள் தன்னையுடையேன்) அத்விதீயையா யிருப்பாளொரு பெண்பிள்ளையை யுடையேன். ஒருமகளென்கையாலே - ஏகபுத்ரி யென்னுமிடமும், "தன்னை" யென்கையாலே - ஸௌந்தர்யாதிகளாலுண்டான இவளுடைய மதிப்பும், "உடையேன்" என்கையாலே-இவளைப்புத்ரியாகவுடையளாகையாலுண்டான தன்னுடைய ஏற்றமும் சொல்லுகிறது. (உலகம் நிறைந்த புகழால்) விசேஷஜ்ஞரோடு அவிசேஷஜ்ஞரோடு வாசியறத் தந்தாமுடைய அளவுகளுக்கீடாக இருந்த விருந்த விடங்களிலே இவளுடைய குணங்களைச்சொல்லி ச்லாகிக்கும்படி லோகமெல்லாம் வ்யாப்தமான புகழோடே.

அரு;—நாலாம்பாட்டு. (ஒருமகளித்யாதி) "தன்னை" என்றதின் பலிதார்த்தம் (அத்விதீயையாய்)என்றது. "மகள்" என்றபோதே ஏகத்வம் தோற்றியிருக்கச்செய்தேயும்,"ஒரு"என்று விசேஷித்ததுக்கும்,"தன்னை" என்றத்தால் அத்விதீயத்வம் சொன்னதுக்கும், மகள் தன்னை வளர்த்தேனென்னலாயிருக்க, "உடையேன்"என்றதுக்கும் பாவத்தைக்ரமேணவருளுகிறார் (ஒருமகளென்கையாலேயித்யாதி). புகழ், உலகம்நிறைந்திருக்கையை உபபாதித்துக் கொண்டு சப்தார்த்தமும் காட்டுகிறார் (விசேஷஜ்ஞரித்யாதி). (அளவுகளுக்கு) என்றது - அறிவுகளுக் கென்றபடி.

(க) பாரு. (௨) ஸ்ரீஸஹ.

(க)"திருமகளார் தனிக்கேள்வன்" என்னுமதுதானே பெருமையாம்படியான திருமகள்போல. திருமகளுக்கவ்வருகு சொல்லலாம்படியானதொரு புகழில்லாமையாலே திருமகள்போல் வளர்த்தேனென்கிறாள். ஆனாலும் குடிப்பிறப்பால் வந்தபுகழ் குறைந்திருக்குமிறே அவளுக்கு, ஒருஸமுத்திரம், ஒருஜநகராஜன் முதலானார்களாகிலும். ஆகையிறே "ஒருமகள்" என்றது.

(செங்கண்மால் தான் கொண்டுபோனான்) ஸ்வாபாவிகமான சிவப்பாதல், பக்கம் நோக்கறியாமல் இவள் தன்னையே பார்க்கும்படியான வ்யாமோஹத்தால் வந்த சிவப்பாதல். (தான் கொண்டு போனான்) ஆதிவாஹிகரைவரவிட்டுக்கொண்டுபோதல், பெரியதிரு

---

(திருமகள்போல வளர்த்தேன்) (உ.) "கடிமாமலர்ப் பாவையொப்பாள்" என்கிறபடியே ஸர்வர்க்கும் வைலக்ஷண்யத்துக்கு உபமாநபூமியாய், புருஷகாரத்வயுக்தையான * நாரீணாமுத்தமையோடு ஸத்ருஶஸ்வபாவையாம்படி வளர்த்தேன். (செங்கண்மால் தான் கொண்டுபோனான்) (௩) "யதா கப்யாஸம் புண்டரீகம் - யதாகப்யாஸம்புண்டரீகம்" என்கிறபடியே ஸ்வாபாவிகமான சிவப்புக்கு மேலே * பக்கம்நோக்கறியாமல் இவளைப்பார்த்துக் கொண்டிருக்கும் வ்யாமோஹத்தாலும் சிவந்த திருக்கண்களையுடையனாய், இந்தவ்யாமோஹமே தனக்கு நிரூபகமாம்படியிருக்குமவன், ஆதிவாஹிகரை வரக்காட்டியாதல், பெரியதிருவடியை வரக்காட்டியா

---

"திருமகள் போல" என்று திருமகளுக்குள்ள வதிசயம் இங்கும் சொல்லவேண்டுகையாலே அந்தத்திருமகளுக் குள்ள வதிசயத்தை ப்ரமாண பூர்வகமுபபாதிக்கிறார் (கடியித்யாதி). கடி - பரிமளம். ப்ரகாரஷட்கமாவது - அநந்யார்ஹ சேஷத்வம், அநந்யஶரணத்வம், அநந்யபோகத்வம், ஸம்ஶ்லேஷத்தில் தரித்திருக்கை, விஶ்லேஷத்தில் தரியாமை, ததேக நிர்வாஹ்யத்வங்கள்; ஸத்ருஶஸ்வபாவை யாம்படி வளர்க்கை யாவது - பதிவிஷயத்தில் அநந்யார்ஹ சேஷத்வாதிகள் இவளுக்குப் பிறக்கும்படி தன்னுடைய வுக்தி விசேஷங்களாலே சொல்லிக் கொண்டு இவளைக்குணதிகையாம்படி வளர்க்கையென்கை. "செங்கண்" என்றதுக்கு ப்ரமாணத்தையும், மால்பத ஸமபிவ்யாஹார பலிதார்த்தத்தையும், "தான்" என்றதுக்கு வ்யாவ்ருத்தியையும் காட்டா நின்று கொண்டு சப்தார்த்த மருளுகிறார் (யதேத்யாதி).

---

(க) தி-வாய்-க-அ-க. (உ) தி-மொ-௩-எ-க. (௩) சாந்தோ-க-அ-௬.

வடிவை வரவிட்டுக்கொண்டு போகையன்றிக்கே, *கள்வன்கொல் லில் பிராட்டியைப்போலேயிறே கொண்டு போய்த்து.

இவ்விடத்திலே ஆழ்வான் திருநாட்டுக் கெழுந்தருளினபோது, உடையவர், விஶ்லேஷம் பொறுக்கமாட்டாமல் "ஒரு மகள் தன்னையுடையேன்" என்றும் "உலகம் நிறைந்த புகழால் திருமகள் போல வளர்த்தேன்" என்றும், "செங்கண்மால்தான்கொண்டு போனான்" என்றுமருளிச்செய்தாரென்று ஆச்சாம்பிள்ளை யருளிச் செய்வர். (க)"சாதியந்தணர்"என்றும், (உ)"கலையறக்கற்றமாந்தர்" என்றும், (௩)"பலரடியார் முன்பருளியபாம்பணையப்பன்"என்றும், (௪)"மொழியைக் கடக்கும் பெரும்புகழான்" என்றும், (௫)"ஓர்ப்பால் கருதுவர்" என்று முண்டாயிருக்கையாலே உலகுநிறைந்த புகழுள்ளது ஆழ்வானுக்கேயிறே. "லோகே" "ஶாஸ்த்ரே."

---

தல் கொடுபோகையன்றிக்கே, * கள்வன்கொல்லில் பிராட்டியைக் கொண்டுபோனாப்போலே தானேகொண்டுபோனான்.

ஆழ்வான் திருநாட்டுக்கெழுந்தருளின போது, உடையவர், விஶ்லேஷம் பொறுக்கமாட்டாமல், "ஒருமகள் தன்னையுடையேன்" என்றும், "உலகம்நிறைந்தபுகழால் திருமகள்போல வளர்த்தேன்" என்றும், "செங்கண்மால் தான்கொண்டுபோனான்" என்று மருளிச் செய்தார்என்று ப்ரஸித்தமிறே. (௬) "ఉపమానమశేషాణాం సాధూనాం యస్సదాzభవత్ - உபமாநமசேஷாணும் ஸாதூநாம் யஸ்ஸதாபவத்" என்கிறபடியே - ஸாதுக்களுக்கெல்லா முபமாந பூமியாகச் சொல்லலாம்படி யிருக்கையாலே உலகம் நிறைந்த புகழுள்ளது ஆழ்வானுக்கேயிறே.

---

இவ்வளவும்தாமருளிச் செய்தவர்தங்களுக்குச் சேரவோரை திஷ்யமருளிச் செய்கிறார் (ஆழ்வானித்யாதி). "ஒருமகள் தன்னையுடையேன்"என்று எம்பெருமானாருளிச்செய்ததுக்கு (எ) "శ్రీమత్కూరకులాధీశం శ్రీవత్సాఙ్కముపాస్మహే। అగ్ర్యం యతీన్ద్రశిష్యాణామాద్యం వేదాన్తవేదినామ్- ஶ்ரீமத் கூரகுலாதீசம் ஶ்ரீவத்ஸாங்கமுபாஸ்மஹே। அக்ர்யம் யதீந்த்ரஶிஷ்யாணமாத்யம் வேதாந்தவேதிநாம்" என்கிறபடியே முந்துற விவரொருவராஶ்ரயித்த வத்ஸலையைத் திருவுள்ளம்பற்றினரென்றும், ஆழ்வானுடைய விஶ்லேஷத்தாலே(அ) "సుతా నేకాకి- ஸுதாநேகாகீ" என்று நித்யஸூரிகளிருக்கச் சொன்னாப்போலே ப்ரேமத்தாலே இப்படி சொல்லலாமென்றும் தாத்பர்யம் கண்டு கொள்வது.

---

(க) திருமா-௪௩. (உ) திருமா-எ. (௩) தி-வாய்-எ-௧0-௫. (௪) இரா-நூ-எ. (௫) (௬) வி-பு-௧-௧௫-௧௫௬. (எ) (அ) மஹோப-௧.

(பெருமகளாய்) திருவாய்ப்பாடியில் பஞ்சலக்ஷம் குடிக்கெல்லாம் ஸ்ரீநந்தகோபர் கர்த்ருத்வத்தால் வந்த பெருமையை யுடையரானாப்போலே யிறே இவளும் குடிவாழ்ந்து பெருமை யுடையளானபடி. (பெரும்பிள்ளை பெற்றவசோதை) தான் பெருமகள் பெற்றது பெரும்பிள்ளையாகையாலே; பெருமைக்கு மேலே பெருமையாய், (க)"இவனைப்பெற்ற வயிறுடையாள்" என்று இவன்பிறந்தபின்பிறே அசோதை யென்கிறபேர் நிலைநின்றது. (மருமகளைக் கண்டுகந்து) "அவன் கொண்டுபோனான்" என்று வெறுத்தகாலத்திலும், போனால் பிறக்கும் முறையுறவு சொல்லவேண்டுகையாலே மருமகளென்கிறாள்.

(கண்டித்யாதி) பெண் பிள்ளையுடைய ஸௌந்தர்யாதிகளையும் வ்யாமோஹத்தையும் கண்டு மடியிலே வைத்தணைத்து "பெ

---

(பெருமகளாய்க் குடிவாழ்ந்து) பெரிய பெண்பிள்ளையாய்க் குடிவாழ்க்கைவாழ்ந்து. திருவாய்ப்பாடியில்பஞ்சலக்ஷம்குடிக்கும் நிர்வாஹகரான பெருமையுடைய ஸ்ரீநந்தகோபர் மஹிஷியாகையாலே, இவளை "பெருமகள்" என்கிறது. அவர் ஊர்க்காரியத்துக்கெல்லாம் அபிமாநியாய் நிர்வஹிக்குமாபோலே, இவள் க்ருஹகார்யத்துக்கெல்லா மபிமாநியாய் நிர்வஹிக்கையாலே "குடிவாழ்ந்து"என்கிறது.(பெரும்பிள்ளைபெற்றவசோதை) பெரியபிள்ளையைப் பெற்றவசோதை. ரூபகுணத்தாலும் ஆத்மகுணத்தாலும் பரிபூர்ணனாய் (க)"என்னநோன்புநோற்றாள்கொலோ இவனைப்பெற்ற வயிறுடையாள்" என்னும்படி யிருக்கையாலே "பெரும்பிள்ளை" என்கிறது. தானும்பெருமகள்; பெற்றதும் பெரும்பிள்ளை காணுமிவள்.

(மருமகளைக்கண்டுகந்து) மருமகளைக்கண்டு ப்ரியப்பட்டு. "அவன்கொண்டுபோனான்"என்று வெறுத்தகாலத்திலும், போனால் பிறக்கு முறையுறவு சொல்லவேண்டுகையாலே "மருமகள்"

"செங்கண்" என்றதைப்பற்ற (ரூபகுணத்தாலும்)என்றது."மால்" என்று ஆஶ்ரித வ்யாமுக்தனென்கையாலே (ஆத்மகுணத்தாலும்) என்றது. வ்யாக்யாதா, பதச்சேர்த்தியைக் கண்டு ஈடுபடுகிறார் (தானுமித்யாதி).

தான் நீர்வார்த்துக் கொடாதிருக்க, "மருமகள்" என்று தன்வாயால் சொல்லலாமோ, பிறக்கும் தசையிலென்ன வருகிறார் (அவனித்யாதி). (உறையுறவு)கிட்டவணித்தவுறவு."மணாட்டு"மணாட்டியாக்குகைக்குச்சீர்மை.

---

(க) ௨-௨-௬.

மூ.—

தம்மாமன் நந்தகோபாலன் தழீஇக்கொண்டென் மகள் தன்னை
செம்மாந்திரேயென்றுசொல்லிச்செழுங்கயற்கண்ணுஞ்செவ்வாயும்
கொம்மைமுலையு மிடையுங் கொழும்பணைத் தோள்களுங் கண்டிட்டு
இம்மகளைப் பெற்றதாய ரினித்தரியாரென்னுங் கொலோ. (௫)

---

றுப்பேறு பெற்றோம்" என்று உகந்து.(மணாட்டுப்புறம் செய்யுங்கொலோ) மணவாட்டுப் பிள்ளையாகநினைத்து, புஷ்பாதிகளாலும வஸ்த்ரபூஷணாதிகளாலும் நெஞ்சாலே செய்யவேண்டுவன செய்யுமோ? ஜாத்யுசிதமாகச் செய்யவேண்டுமோப்பரவு செய்யுமோ?

இத்தால், ஆசார்யனானவன், தன் பக்கல் பவ்யதையாலே அத்விதீயனான ஶிஷ்யனை ஈஶ்வரன் அது தானே பற்றாசாக வங்கீகரித்துக்கொண்டு போனாலும்,தன்னிழவை மறந்து அவனுடையபேறிழவுகளே தனக்குப்பேறிழவுமாய் நடக்குமென்னுமிடம் சொல்லிற்றாய்த்து. ஆசார்யபரதந்த்ரன் தேச விசேஷத்துக்குப்போனால் அங்குள்ள * மதிமுகமடந்தையரும் பிராட்டிமாரும் அங்கீகரிப்பர்களென்னுமிடம் இங்கேயும் தோற்றுகிறது. • ... .... (௫)

அவ;—அஞ்சாம்பாட்டு. என்னுடைய விழவு ஶ்ரீநந்தகோபர் நெஞ்சிலே படுமோ வென்கிறாள்.

ஸ்வா;—(தம்மாமனித்யாதி) தன்னுடைய மாமனான ஶ்ரீநந்த கோபர் பெண்ணையணைத்து மடியிலே வைத்து. (என் மகள் தன்னை) "தம்மாமன்" என்றபின்பிறே"என்மகள்" என்றதும்;"தம்

---

என்கிறாள். (கண்டுகந்து) பெண்பிள்ளையுடைய ஸௌந்தர்யாதிகளையும் வ்யாமோஹத்தையும்கண்டு மடியிலேவைத்தணைத்து, "பெறாப்பேறுபெற்றோம்" என்று ப்ரியப்பட்டு. (மணாட்டுப்புறம் செய்யுங்கொலோ) மணவாட்டுப்பிள்ளையாக நினைத்துத் தான் செய்யக்கடவசீர்மைகள் செய்யுமோ? "கூடிய கூட்டமன்றோ" என்று - லௌகிகத்துக்குத் தக்கவளவு அஹ்ருதயமாகச் செய்துவிடுமோ?.

வ்யா;—அஞ்சாம்பாட்டு. (தம்மாமன்நந்த கோபாலன்) பெண்பிள்ளை தனக்கு மாமனான ஶ்ரீநந்தகோபர். (தழீஇக்கொண்

---

"புறஞ்செய்கை" என்றது - மேலெழச் செய்கையென்று சப்தார்த்தமாய், "கொலோ" என்றத்தால் தோன்றுகிற ஸஹ்ருதயமாகச்செய்கையை முந்துற வருளுகிறார் (மணவாட்டுப் பிள்ளையித்யாதி). (தக்கவளவு)வேண்டினமாத்ரம்,

மாமன்'' என்றதேயிறே நிலைநிற்பது, ப்ரபஞ்சாவலம்பநாயத்தில். அதுக்குமேலே''என்மகள்'' என்கையாலே, இதுதானேபோலே காணும் நிலைநிற்பது; மெய்ம்மையையுணர்ந்து, மிகவுணர்ந்தால். (செம்மாந்திரே யென்று சொல்லி) இவள் வ்ரீளையாலே நிலம்பார்க்க, ''செம்மாந்திரே'' என்று சொல்லி. செம்மாப்பு - செவ்வை. முகம்முதலாக அவயவங்களையும் ஸமுதாயஶோபையையும் பார்த்தாரென்னுமிடமும் தோற்றுகிறது. பாரார்த்தமானால் வ்யக்திதோறும் உபமாநதர்ஶநமும் செய்யக்கூடுமிறே.

(செழுங்கயல்கண்ணும்) அழுக்கயத்தில்தெளிந்தநீரில் மிளிர்ந்த கயல்போலும் பொருதுநோக்கும்நோக்கும் (செவ்வாயும்) ஸ்வாபாவிகமாகச் சிவந்த வாயிறே தனக்கு வசவர்த்தியான நான் கண்டிருப்பதும். (கொம்மை முலையும்) பருவத்தினளவல்லாத பரிணமத்

டென்மகள் தன்னை ) தமக்கு " மருமகள் '' என்னும் ஸ்நேஹந் தோற்ற என்மகள் தன்னை யணைத்துக்கொண்டு மடியிலேவைத்து. (செம்மாந்திரே யென்றுசொல்லி) இவள் வ்ரீளையாலே நிலம் பார்க்க, செவ்வேயிருவென்று சொல்லி. செம்மாப்பு-செவ்வை. முகம் முதலான அவயவங்களையும் ஸமுதாய சோபையையும் பார்க்கைக்காகவிறே - செவ்வேயிருவென்பது. (செழுங்கயல்கண்ணும்) அழகிய கயல்என்கிற மத்ஸ்யம்போன்ற கண்ணையும். (செவ்வாயும்) ஸ்வபாவமே சிவந்திருக்கிற அதரத்தையும்.

(கொம்மைமுலையும்) பருவத்தினளவல்லாத பரிணமத்தையுடைத்தான முலைகளையும். கொம்மை-பெருமை. (இடையும்) முலை

அரு,—அஞ்சாம்பாட்டு. (தன்மாமனித்யாதி) தழுவிக்கொள்ளுகைக்கு ஹேதுபூர்வகமர்த்த மருளுகிறார் (தமக்கித்யாதி). (மடியிலே வைத்து) என்றது-ஸ்நேஹக்ருத்யமாகையாலே அர்த்தாத்ஸித்தம். ''செம்மாந்திரு'' என்று சொல்லுகைக்கு ப்ரஸக்தி பூர்வகமர்த்தமருளுகிறார் (இவள் வ்ரீளையித்யாதி). ''இறே'' என்றவிடத்தில் ஏவகாரம் அவ்யயமாதல், ''செம்மாந்தே'' என்று கூட்டுதலாதல் செய்து கொள்வது. ஸ்த்ரீத்வத்தாலே நிலம் பார்த்திருக்குமவளை இப்படி சொல்லுகைக்கு ப்ரயோஜநமென்னென்னவருளுகிறார் (முகமித்யாதி). (கயல்)-மத்ஸ்யவிசேஷம்.

கந்யகாவஸ்த்தையாய் கல்யாணத்துக்கு யோக்யதையுள்ள தசையிலே முலைக்குப் பெருமை சொல்லக்கூடுமோ வென்னவருளுகிறார் (பருவத்தினித்

ளையுடைய முலைகளும். (இடையும்) உபமாந ரஹிதமானவிடையும், வளர்பணை போலேயிருக்கிற தோள்களும். (கண்டு)கண்கள் நிறையுமளவுங்கண்டு. (இட்டு) ப்ரீதி தலையிட்டு, என்னுடைய இழவு நெஞ்சிலேதோன்றி, (இம்மகளைப் பெற்ற தாயர்) (இனித்தரியாரென்றுங்கொலோ). இவளைப்பிரிந்தபின்பு இவளைப்பெற்றதாயார் ப்ராணனோடே ஜீவித்திருக்குமோ; அன்றியே, இவளுக்கு இத்தலையிலுண்டான நன்மைகளை நினைத்து ப்ரீதையாயிருக்குமோ வென்று கொலோ வென்கிறாள்.

இத்தால்-ஆசார்ய பாதந்த்ரனானவனுடைய ஜ்ஞாத்ருத்வத்தையும் வாக்மித்வத்தையும் பக்திபாரவஶ்யத்தையு மொன்றும் பொறாத வைராக்யத்தையும் பரஸம்ருத்த்யேக ப்ரயோஜநத்தையுங்கண்டு இவற்றையுண்டாக்கின வாசார்யனுடைய இழவு பேறுகளை நினைத்து, “அவாக்யநாதரஃ-அவாக்யாநாதரஃ” என்றிருக்கிறவஸ்து விக்ருதியடைந்து சொல்லும் பாசுரங்களை அங்குச் சேனை முதலியாழ்வார் தொடக்கமானவர்கள் கொண்டாடுமென்று காட்டுகிறது. இங்குத்திருவடி, நம்மாசார்யர்கள் கொண்டாடுமாபோலே.

---

யினுடைய வளர்த்தியாலே நெருங்கி நொந்திருக்கிற இடையும். (கொழும்பணைத்தோள்களும்) சுற்றுடைமையாலும் பசுமையாலும் செவ்வையாலும் வளர்ந்து மூங்கில்போலேயிருக்கிற தோள்களையும். கொழுமை - அழகும், பெருமையும். (கண்டிட்டு)தனித்தனியும் ஸமுதாயேநவும் தர்ஶித்து. என்னுடைய இழவுநெஞ்சிலே தோன்றி, (இம்மகளையித்யாதி) இப்பெண்பிள்ளையைப் பெற்ற தாயாரானவள் இவளைப்பிரிந்தபின்பு ப்ராணனோடே தரித்திருக்க மாட்டாளென்று சொல்லுவரோ?; அன்றிக்கே; அவிக்ருதராயிருப்பரோ?. .... ... .... .... (௫)

---

யாதி). சீராட்டி வளர்த்தத்தாலே அதிக பரிணாம முண்டாய்த்தென்று கருத்து. முலைகளுக்கு கொம்மையென்று விசேஷணமிட்டு, இடைக்குவிசேஷணமிடாமையால் பலிதார்த்ததை [illegible] முலையுடைய வித்யாதி). (நொந்திருக்கிற) என்றது-[illegible]படி. மேலே “இம்மகளை” என்கையாலே [illegible] விவக்ஷிதமென்று திருவுள்ளம்பற்றி யருளுகிறார் (தனித்தனியுமித்யாதி). மேலுக்கு ஹேதுவைக்காட்டுகிறார் (என்னுடையவித்யாதி). “இனி” என்றதினர்த்தம் (இவளைப்பிரிந்த பின்பு) என்றது. ... ... ... (௫)

மூ.—வேடர்மறக்குலம்போலே வேண்டிற்றுச் செய்தென்மகளை
கூடியகூட்டமே யாகக்கொண்டு குடிவாழுங்கொலோ
நாடுநகருமறிய நல்லதோர் கண்ணாலஞ்செய்து
சாடிறப்பாய்ந்தபெருமான் தக்கவாகைப்பற்றுங்கொலோ.

அவ;—ஆறும்பாட்டு. ஶகடாஸுர நிரஸந கர்வமேது செய்யுமோ வறிகிறிலே னென்கிறாள்.

வ்யா;—(வேடரித்யாதி). பர்வதசாரிகளையும், பூமியிலே வநசாரிகளாய் வர்த்திக்கிறவர்களையும் போலே ஸ்வைரசாரியாய். (என்மகளை) என்வயிற்றில் பிறப்பையும் தன் பிறப்பையும் நினையாமல், (கூடிய கூட்டமேயாக) தாங்களிருவரும் நெஞ்சுபொருந்திக்கூடினதே புருஷார்த்தமாகக் கொண்டு, குடிக்குத்தகுதியல்லாத வாழ்க்கையிலே நிலைநிற்குமோ? * சாடிறப்பாய்ந்த பெருமானையாலே. (௧) "அருவழிவான மதர்பட - தேர்வலங்கொண்டு செல்லும்செருவழியாத மன்னர்கள் மாளச்செய்த வாண்மைகொலோ" என்னுமாபோலேயிலே சகடாஸுர நிரஸநஞ்செய்த கர்வந்தான் குடிப்பிறப்பை மதியாதிறே. இந்த விரோதிநிரஸநம் தன்னாலே கன்னையும்

வ்யா;—ஆறும்பாட்டு. (வேடர்மறக்குலம்போலே) தண்ணியஜாதியான வேடரையும் மறக்குலத்திலுள்ளாரையும் போலே. "கள்ளர், பள்ளிகள்" என்னுமாபோலே, "வேடர் மறவர்" என்கிறதும் - தண்ணியஜாதியில் அவாந்தரபேதம். (வேண்டிற்றுச் செய்து) இரண்டு தலையிலுமுண்டான குடிப்பிறப்பைப்பாராதே, ஒருஶாஸ்த்ரமர்யாதையுமின்றிக்கே, தனக்குவேண்டினபடிசெய்து. (என்மகளை) பழுதற்றகுலத்திலேயுள்ள என்வயிற்றிலேபிறந்தபெண்பிள்ளையை. (கூடிய கூட்டமேயாகக்கொண்டு) புணர்ந்து உடன்போக்கில் இரண்டு தலையும் நெஞ்சுபொருந்திக்கூடின கூட்டரவு மாத்ரமே மணமாகக்கொண்டு. (குடிவாழுங்கொலோ) குடிவாழ்க்கைவாழுமோ?

அரு;—ஆறும்பாட்டு. (வேடரித்யாதி "குடிப்பிறப்புப்பாராதே" என்றதுக்கு அதனைதப்பார்க்கில் ஶாஸ்த்ர மர்யாதை தப்பக்கூடாதே யென்று கருத்து. "என்" என்றதுக்குத் தாத்பர்யம் ; பழுதற்றவித்யாதி ). கூடிய கூட்டமே மணமாக வத்த்யாஹரித்தர்த்தமருளுகிறார் (புணர்ந்தித்யாதி).

(௧) தி-மொ-௧௦-௩-௫.

பொகட்டுப்போன மாதா பிதாக்கள் மேலே அபவாத விரோதத்தையும் போக்கினவனாகையாலே.

(நாடுநகரமறிய) திருவாய்ப்பாடி சூழ்ந்த நாடும் திருவாய்ப்பாடி நகரமறிய. ஸ்ரீநந்தகோப ரிருக்கையாலே திருவாய்ப்பாடியை நகரமென்னலாயிற்று. (நல்லதோர் கண்ணாலஞ்செய்து) உக்தலக்ஷணமும்லோகப்ரஸித்தியுண்டாம்படிகல்யாணஞ்செய்து. (தக்கவா கைப்பற்றுங்கொலோ) ஜாத்யுசிதமான தர்மத்துக்குத் தகுதியாகப் பாணிக்ரஹணம் செய்யுமோ?

"சாடிறப்பாய்ந்த பெருமான் என்பெண்மகளை வேடர் மறக்குலம்போலே வேண்டிற்றுச் செய்து கூடிய கூட்டமேயாகக் கொண்டு தாதுவர்குடிவாழுமோ? நாடு நகரமறிய நல்லதோர் கண்ணாலம்செய்துதக்கவாறு கைப்பற்றுங்கொலோ?" என்றந்வயம்.

இத்தால், செடியாராக்கையைப்பற்றி மற்றொன்று மறியாத தேஹாத்மாபிமாநிகளும், பர்வதசாரிகளாய் உயர்ந்த நிலத்திலே வர்த்திக்கிற ஸ்வஸ்வாதந்த்ர்யபரரும், காம்யதர்மாக்களாகையாலே வேண்டிற்றுச் செய்யுமென்கிறது. .... .... (௬)

---

(சாடிறப்பாய்ந்த பெருமான் - நாடுநகருமறிய நல்லதோர் கண்ணாலம் செய்து - தக்கவா கைப்பற்றுங்கொலோ) அஸுராவேசத்தாலே தனியிடத்திலே நலியவந்த சகடத்தை, முலைவரவு தாழ்க்குச்சீறி நிமிர்த்த திருவடிகளாலே முறியவுதைத்துத் தன்னை நோக்கி, "தனியிடத்திலே பிள்ளையை விட்டுவைத்துப் போகையாலே தாழ்வு வந்தது" என்று தாயர்க்குப் பழி வாராதபடி நோக்கின குணநிகனானவன், இரண்டு குடிக்கும் பழிவாராதபடி திருவாய்ப்பாடி சூழ்ந்தநாடும் திருவாய்ப்பாடியாகிற நகரமுமறியும்படியாக "இதுக்கு முன்பு இப்படிசெய்ததில்லை" என்னும்படி விலக்ஷணமாய் அத்விதீயமான கல்யாணத்தைச் செய்து, ஜாத்யுசிதமான தர்மத்துக்குத்தகுதியாகப் பாணிக்ரஹணஞ்செய்யுமோ?

---

"சாடிறப்பாய்ந்த" என்றதுக்கு ப்ரக்ருதோபயுக்தமாக ஹேதுத்வம் தோன்ற வ்யாக்யாநம் செய்தருளுகிறார் (அஸுராவேசத்தாலே யித்யாதி). (பழிவாராதபடி) என்றதுக்கு (பாணிக்ரஹணம் செய்யுமோ) என்றத்தோடு என்றந்வயம். "நல்லது" என்றதினர்த்தம் (இதுக்கு முன்பித்யாதி).

௭.—

அண்டத்தமரர்பெருமா னாழியானின் றென்மகளைப்
பண்டப்பழிப்புக்கள்சொல்லிப் பரிசறவாண்டிடுங்கொலோ
கொண்டுகுடிவாழ்க்கைவாழ்ந்து கோவலப்பட்டங் கவித்துப்
பண்டைமணாட்டிமார்முன்னே பாதுகாவல்வைக்குங்கொலோ

---

ஸ்வா:—ஏழாம்பாட்டு. (அண்டமித்யாதி) திவ்ய விபூதியிலே வர்திக்கிற ஸூரிகளுக்கு நிர்வாஹகனுமாய், (க) "ஷட்ஸம்ஹார-உபஸம்ஹார" என்னும்படி திவ்யாயுதங்களோடேயிறே அவதரித்தது. அவதரித்தவன்றே மாத்ருவசநபரிபாலநம் செய்தவன். (இன்றென்மகளை) அன்று அங்ஙனே வசநபரிபாலநம் செய்தவன் தத்துல்யமங்களபரையாயிருக்கிற வென் வசந பரிபாலநம் செய்தானாகில் இப்பிரிவு வேண்டாவிறே. என் மகளைப்பிரித்துக்கொண்டு போனவன் தான் பண்டப்பழிப்புக்கள் சொல்லாமல் பரிசு கொடுத்து ஆண்டுகொண்டு போருமோ? பண்டப்பழிப்புக்கள் சொன்

---

வ்யா;-ஏழாம்பாட்டு. (அண்டத்தமரர்பெருமானாழியான்) அப்ராக்ருதமான பரமபதத்திலே அஸ்ப்ருஷ்ட ஸம்ஸாரகந்த(ர்)ரான நித்யஸூரிகளுக்கு நிர்வாஹகனாய், ஸர்வேஶ்வரத்வ சிஹ்நமான திருவாழியைத்தரித்துக்கொண்டிருக்கும்பெருமையையுடையவன், அந்தப்பெருமையால் வந்த செருக்காலே, (இன்றென் மகளைப் பண்டப்பழிப்புக்கள் சொல்லி) ஸர்வலக்ஷண ஸம்பந்நையானவென்னுடைய பெண்பிள்ளையை, இப்போது பதார்த்த தூஷணங்கள்

---

அரு;—ஏழாம்பாட்டு. (அண்டத்தித்யாதி) அமரரென்றதே "அண்டத்தமரர்" என்று விசேஷித்ததுக்குக் கருத்தருளுகிறார் (அப்ராக்ருதேத்யாதி) அமரபதத்தைச்சொல்லுகையாலே அப்ராக்ருத தேவரை வ்யாவர்த்திக்கிறதென்றுகருத்து. "அமரர்பெருமான்" என்றுவைத்து, ஆழியானென்று அத்யந்த நிருபமாகச் சொல்லுகையாலே பலிதார்த்தத்தை யருளுகிறார் (ஸர்வேஶ்வரத்வேத்யாதி), "அண்டத்தமரர் பெருமானாழியான்" என்றது-பழிப்புச் சொல்லுகைக்கு ஹேதுவென்று தோற்றுகையைக் காட்டுகிறார் (அந்தவித்யாதி). "என்மகளை இன்று பண்டப்பழிப்புக்களைச் சொல்லி" என்றந்வயித்து "என்" என்றதுக்குத் தாத்பர்யமருளிச்செய்துகொண்டு ஸப்தார்த்தமருளுகிறார் (ஸர்வலக்ஷணேத்யாதி), (இப்போது) என்றது-இவர்கள் கைப்பட்ட பின்பென்றபடி. பண்டமென்றதினர்த்தம் (பதார்த்தம்) என்றது.

---

(க) வி-பு ௫-[illegible]

[illegible] பண்டைக்குலக்குப்பழிப் [illegible]
[illegible]
[illegible]
[illegible] விரகிக்கிறீர்.

(கொண்டு குடிவாழ்க்கை வாழ்ந்து) [illegible] கொண்டு, குடிக்குத்தகுதியாகவாழ்ந்து. (கோவலப்பட்டம் கவித்து) கோபாலஸ்த்ரீகளுக்கெல்லாம் ஸ்வாமினிப்பட்டமே [illegible] யாகிலும் ப்ரதாநமஹிஷியாம்படி பட்டங்கட்டி. (பண்டைமணாட்டிமார் முன்னே) பண்டே பட்டங் கட்டி வல்லவைகளாயிருப்பார் முன்னே. (பாதுகாவல்வைக்குங்கொலோ) பெரியவிருப்பத்தோடே அந்தப்புரக்காவல் வைக்குமோ? பாது-பசு.

இதனால், ஆசார்யனைப்பிரிந்து, தேசவிசேஷத்திலே கொண்டு போனாலும், (௧) "எம்மிசைத்தேனையாக்கி" என்கிற மேன்மையுடனே கொடுக்கினும் இந்நிலைக்குப் போதவொட்டாத விருப்பத்தைக் காட்டுகிறது. .... .... .... .... (எ)

---

கொல்லி. அதாவது-ரூபத்திலேயாதல், குணத்திலேயாதல் சில குறைகளைச் சொல்லி யென்கை. (பரிசறவாண்டிடுங்கொலோ) அபக்ருஷ்ட புத்தியாலே வரிசைகெட ஆண்டிடுமோ? அதாவது - அந்தரங்க வ்ருத்திகொள்ளாமல் புறத்தொழில்களைக்கொண்டு விடுமோ வென்கை.

(கொண்டு குடிவாழ்க்கை வாழ்ந்து) இவளைக்கொண்டு தன்னுடைய குடிவாழ்க்கை யெல்லாம் வாழ்ந்து. அதாவது-இவள் முகப்பாகத் தன்னுடைய க்ருஹக்ருத்யமெல்லாம் நடத்தி யென்கை. (கோவலப்பட்டங்கவித்து) "கோபகுலத்துக்கு ஸ்வாமிநி" என்று தன்மஹிஷியானமை தோற்றப் பட்டங்கட்டி. (பண்டைமணாட்டிமார் முன்னே) பண்டேபட்டங்கட்டி, தனக்கு மஹிஷிகளாயிருக்கிறவர்கள் முன்னே. (பாதுகாவல் வைக்குங்கொலோ) அந்தப்புரக்காவலிலே வைக்குமோ? .... .... .... .... .... (எ)

---

வரிசைகெடவாளுகையும், வரிசையுடனாளுகையுமென்றிரண்டுண்டோவென்ன வருளுகிறார் (அதாவதித்யாதி).

(முகப்பாக)-ப்ரதாநமாக. (பட்டங்கட்டி) அபிஷேகம்பண்ணி. (எ)

---

(௧) ௪-௯-௧.

மூ.—
குடியிற்பிறந்தவர்செய்யுங் குணமொன்றுஞ்செய்திலனந்தோ
நடையொன்றுஞ்செய்திலன்நங்காய்நந்தகோபன்மகன்கண்ணன்
இடையிருபாலும்வணங்கவிளைத்திளைத்தென்மகளேங்கி
கடைகயிறே பற்றிவாங்கிக் கைதழும்பேறிடுங்கொலோ. (அ)

அவ.—எட்டாம்பாட்டு. தார்மிகரானஸ்ரீநந்தகோபர்க்குத் தகுதியானவை செய்தாலாகாதோவென்கிறாள்.

ஸ்வா,—(குடியித்யாதி) ஒருகுடியிலே பிறந்தவர்கள் செய்யும் காரியம் செய்யாவிட்டால் மேல்நடக்கும் காரியங்கள் குடிப்பிறப்பில்லாதார்க்கும் லோகஸங்க்ரஹதயா செய்யவேண்டிவருமிறே. அவற்றிலேகதேஸமும் செய்திலன். (நங்காய்) குடியில் பிறந்து நடையில் தவறாத குணபூர்த்தியை யுடையவளே! இது எங்குத்தைக்கும் முன்னிலை. (நந்தகோபன் மகன்கண்ணன்)

வ்யா;—எட்டாம்பாட்டு. (குடியிற்பிறந்தவர் செய்யும் குணமொன்றும் செய்திலன்) உயர்ந்த குடியிலே பிறந்தவர்கள் அக்குடிக்குத்தகுதியாகச் செய்யும் குணத்தில் ஒன்றும் செய்திலன். அதாவது-முறையிலே இவளை வரைந்துகொண்டு வெளியில்கொண்டு போகாமையிறே. அதிலேகதேசமும் செய்திலன். (அந்தோ) ஐயோ! என்று விஷண்ணையாகிறாள். (நடையொன்றும் செய்திலன்) குடியிற் பிறந்தவர்கள் செய்யுமவைசெய்யாவிட்டால், லோகத்தில் நடக்கும் மர்யாதைதான் செய்ய வேணுமிறே; அதில் ஏகதேசமும் செய்திலன். அதாவது-லோகத்திலே இப்படிச் செய்வாரில்லையிறே யென்கை. (நங்காய்) குலமர்யாதையும் லோகயாத்ரையு மறியும் குணபூர்த்தியுடையவளே யென்று, தனக்கு பந்துவாய் ஸந்நிஹிதையானவள் முகத்தைப் பார்த்துச் சொல்லுகிறாள். (நந்தகோபன் மகன் கண்ணன்) குடிப்பிறப்பில் வந்தால் ஸ்ரீநந்தகோபர் திருமகனாயிருக்கிற க்ருஷ்ணன். "நங்காய் நந்தகோபன் மகன் கண்

அரு;—எட்டாம்பாட்டு. (குடியிலித்யாதி) குணமொன்று மென்று சொல்லுகைக்கு குணமிரண்டுண்டோ வென்ன வருளுகிறார் (அதாவதித்யாதி), அதாவது-அந்த குணமாவதென்றபடி. "ஒன்றும்" என்றதுக்குத்தாத்பர்யம் (அதிலித்யாதி), (இப்படிச்செய்வார்) என்றது-வரியாமல் வெளியிலே கொண்டோடுவா ரென்றபடி. மேலுக்கவதாரிகை (நங்காய் நந்தகோபனித்யாதி).

குடிப்பிறப்பில் தாசாதியுமொப்பல்ல. மண்ணும் விண்ணுமளிக்கும் குணபூர்த்தியையுடையவன்னன், (க) "ஸத்யேந [illegible]-மர்யாதமேவாநுவர்த்ததே" (உ) "ஸ [illegible]-மமை வதஞ்சக்ருதம் கிஞ்சித்" என்னுமாபோலே இதுக்கு ஹேது என்பக்கலிலேயிறே.

(இடையிருபாலும் வணங்க) இடம் வலங்கொண்டு கடைகயிறே. பற்றியிளைத்திளைத்தேங்கிவாங்குகையாலே என்மகளிடையிருபாலும் வணங்க. (கைதழும்பேறிடுங்கொலோ) கோவலர்பட்டம் கட்டினாலும், கடைகயிறு வலிக்கவேணுமிறே இடைச்சிகளுக்கு. தான் தன் பெண்ணினருமை சொல்லுகிறாளித்தனையிறே.

---

னன் - குடியிற்பிறந்தவர் செய்யும் குணமொன்றும் செய்திலன்-கடையொன்றும் செய்திலன்-அந்தோ" என்று-அவன் முறைகெடக் கொண்டுபோன ப்ரகாரத்தைச்சொல்லி விஷண்ணையாய், மேல் தன்னுடைய பெண்பிள்ளையின் மார்த்தவத்தை நினைத்து நொந்து சொல்லுகிறாள்.

(இடையிருபாலும் வணங்க) இடம் வலங்கொண்டு கடைகையாலே, இடையானது இரண்டு பார்ஶ்வத்திலும் வணங்க. (இளைத்திளைத்தென்மகளேங்கி)ஸுகுமாரையான வென்பெண்பிள்ளை லபஹாஸியாலே மூச்சுத்தாங்கிக்கடையவும்மாட்டாமல்ஏங்கிநடுநடுவே இளைத்திளைத்து. (கடைகயிறித்யாதி) தொடங்கினகார்யம் தலைக்கட்டு மளவும் இடைவிடாமல் கடைகயிற்றையே பிடித்துவலித்து, அத்தாலே தளிர்போலே ம்ருதுவான கையானது தழும்பேறிவிடுமோ வென்கிறாள். கோவலர் பட்டங்கட்டினாலும் கடைகயிறு

---

"என்மகளேங்கி யிளைத்திளைத்து" என்றநவயித்து, பக்கத்துக்கு ஹேதுவையருளிச் செய்யா நின்று கொண்டு அர்த்தமருளுகிறார் (ஸுகுமாரையான வித்யாதி). (மூச்சுத்தாங்கி) மூச்சுப்பிடித்து. இளைத்தவள்கடைகயிற்றை விடலாமேயென்னவருளுகிறார் (தொடங்கினவித்யாதி). "வாங்கி" என்றதினர்த்தம்(வலித்து)என்றது.வலித்து-இழுத்து. இவளைப்புறத்தொழில் செய்யும்படி வரிசையற வாளும்போது வேணுமாகில் கைத்தழும்பேறிடுமோ வென்று நொந்து சொல்ல ப்ராப்தம். கோவலர்பட்டம் கட்டினபோது ஆளிட்டுச் செய்யலாமே யென்னவருளுகிறார் (கோவலர்பட்டமித்யாதி). ஜாத்யுசித

---

(க) (உ) ரா--ஸு-௩-அ-௬௭.

மூ;-வெண்ணிறத்தோய்தயிர் தன்னை வெள்வரைப்பின் முன்னெழுந்து
கண்ணுறங்காதேயிருந்து கடையவும்தான் வல்லள்கொலோ[?]
ஒண்ணிறத்தாமரைச் செங்கணுலகளந்தா னென்மகளைப்
பண்ணறையாப் பணிகொண்டு பரிசறவாண்டிடுங்கொலோ.

---

இத்தால், ஆசார்ய பரதந்த்ரனானவனை ஸம்ஸாரன் விஷயீகரித்துத் தன் நிலையாலே ஆசார்யனுக்க, இவனும் ப்ரதமபதத்தில் மகாரப்ரதமான ப்ரணவத்திலே ப்ரக்ருத்யாத்ம விவேகம் செய்விக்கக்கடவோமென்று பலகாலும்ஸங்கல்பித்து உபதேசித்தாலும், கைக் கொண்டு தந்நிஷ்டராவாரில்லாமையாலே இதரோபாய ஜ்ஞாந பக்திகளையும் பூர்வஸங்கல்பம் பலியாதிருக்கச் செய்தேயும் விவேகஸௌகர்யத்தைப்பற்றி உபதேசித்து, இளைத்துச் சொல்லுகையாலே "ஸ்வஸங்கல்பம் ஸங்கல்பிக்க ஸங்கல்பிக்கப் பழுதிச்செல்லுமோ? கார்யகரமாமோ" என்று ப்ரதமாசார்யனானவன் ஸம்சயிக்குமென்னுமிடம் தோற்றுகிறது. (அ)

ஸ்வா.—ஒன்பதாம்பாட்டு. (வெண்ணிறவித்யாதி) பூர்வமேயுண்டானவெண்மை குன்றாமல் காய்ச்சிப்பக்வமறிந்துறையிட்டுத் தோய்த்துவைக்கத் தோய்ந்ததயிரை. பூர்வதிக்கில் ஆதித்யன் வரவுக்கு ஹேதுவானவெள்வரை தோற்றுவதற்குமுன்னே. வெள்வரை பின்னும்படி முன்னே, (எழுந்து) துயிலுணர்ந்தெழுந்திருந்து. ப்ராஹ்மணர் உபயஸந்தியும்பார்த்து உதயாஸ்தமயங்கள்

---

வலிக்க வேணுமிறே இடைச்சிகளுக்கு. தான் தன் பெண்ணின் மார்த்தவம் சொல்லுகிறாளித்தனையிறே. ... ... (அ)

வ்யா;—ஒன்பதாம்பாட்டு. (வெண்ணிறத்தோய் தயிர்தன்னை) செவ்வி குன்றாதபடி காய்ச்சித்தோய்க்கையாலே வெளுத்தநிறத்தையுடைத்தாய்ச் செறியத்தோய்ந்த தயிர்தன்னை. (வெள்வரைப்பின் முன்னெழுந்து) ஆதித்யோதயத்துக்கு ஸூசகமான வெள்வரைப்பு தோற்றுவதற்கு முன்னே யெழுந்திருந்து. (வெள்வரைப்பு) கிழக்கு வெளுக்கை; ப்ராஹ்மணர் ஸந்த்யாவந்தநார்த்தமாக அருணோதயத்துக்குமுன்னேயெழுந்திருக்குமாபோலேயிறே-இடைச்சி

---

தர்மமாகில் தாய் நொந்துகொள்வானென்னென்னவருளுகிறார் (தானித்யாதி).

அரு;—ஒன்பதாம்பாட்டு. (வெண்ணிறமித்யாதி) தயிரானபோதே வெளுப்பும் தோய்கையும் ஸஹஜமாயிருக்க, விசேஷித்ததுக்குத் தாத்பர்யமருளுகிறார் (செவ்வியித்யாதி). கிழக்கு வெளுக்கைக்கு முன்னே யெழுந்திருக்க வேணுமோ வென்ன வருளுகிறார் (ப்ராஹ்மணரித்யாதி).

[illegible] [illegible] [illegible] பெரியபிராட்டி இடைச்சிகளும் ஏதுக் கிறுப்பார. [illegible] [illegible] சிறையானையாமிடுமே. (பரிசற ஆண்டிடுங்கொலோ) [illegible] [illegible] [illegible] தனக்குள்ளே கடைசியாக [illegible] [illegible],

(ஒண்ணிறத்தாமரைச்செங்கண்) ஒளியை நிறத்தையுடைத்தாய், செவ்வி யுடைத்தான [illegible] தாமரைபோலே சிவந்த திருக்கண் களையுடையனாய், லோகத்ரயத்தையும் திருவடிகளின் கீழே யாக்கிக்கொண்டவன். என்மகளைத் தனக்குப் பரதந்த்ரையாக்கி இவளுடைய பண்ப பரிசாமல் தாழ்ந்த பணிகளிலே ஏவிக்கொண்டு இவள் பெருமை கெடுமையாம்படி யாளுமோ? பெருமை குன்றாத படியாக பரிசிட்டாண்டு போருமோ?

இத்தால், விஹித கர்மம் குச்சுப்பாதக ஹேதுவான ப்ரயோஜன விதிகளிலும் காம்ய விதிகளிலும் செல்லாமல் நிறம் பெறும்படி பகவத் முகத்தாலே ஒளமிலே வ்யவஸாயத்தை [illegible] பரதந்த்ரரான தேவதாந்தர ப்ரகாச முண்டாவ [illegible] முன்னே நிர்ப்பரத்வானுஸந்தானம் செய்யாதிருந்து மகாத்மாக்களும் அயிர்கடைகைக்கு எழுந்திருக்கும்படி. (கண்ணுறங்காதே யிருந்து) எழுந்திருந்தாலும் நித்ரை பகைவாயிடே; அதின் வசமாகாதே விழித்திருந்து. (கடையவும் தான்வல்லன் கொலோ) மதுநாப்ரக்ருதியானதான் ஆயாஸித்துக்கடையவும் வல்லனோ?.

(ஒண்ணிறத்திக்யாதி) அலர்ந்த போதை அழகிய நிறத்தையு டைத்தான தாமரைப்போலே சிவந்த திருக்கண்களையுடையனாய், ஸமஸ்தலோகங்களையும் தன் திருவடிகளின் கீழே யாக்கிக்கொண்ட வன். இத்தால்-தன் கண்ணழகாலே இவளை அநந்யார்ஹையாக் கித் தன்காற்கீழே யிட்டுக் கொண்டவனென்கை. (என்மகளைப் பண்ணறையாப் பணிகொண்டு) நான் * திருமகள்போலே வளர்த்த வென் பெண்பிள்ளையை, பண்பு கெடத்தாழ்ந்த பணிகளிலே யேவிக்கொண்டு. (பரிசற ஆண்டிடுங்கொலோ) இவளுடைய பெரு மைகெட ஆளுமோ, பெருமைகெடாதபடி யாளுமோ, அறிகிறிலே னென்கிறாள். .... ... ... ... (க)

(பண்பறையா) என்றது-பண்பானது-தன்னுடையநீர்மையானது, அறை யா-அறும்படியென்று சப்தார்த்தம் விவக்ஷித்தருளுகிறார் (பண்புகெட)என்று.

மூ;—மாயவன்பின் வழிசென்று வழியிடை மாற்றங்கள்கேட்டு
ஆயர்கள் சேரியிலும்புக் கன்குத்தைமாற்றமு மெல்லாம்
தாயவள் சொல்லியசொல்லைத் தண்புதுவைப்பட்டன்சொன்
தூயதமிழ்பத்தும் வல்லார் தூமணிவண்ணனுக்காளரே. [ன

ப்ரதாநமான மந்த்ரோபதேசத்தாலே ப்ரக்ருத்யாத்மவிவேகமும் செய்யவல்லனே?, "அந்யசேஷத்வமும் ஸ்வஸ்வாதந்த்ர்யமு மறும்படியான வ்யாபாரங்களைச் செய்து அநந்யார்ஹ சேஷத்வமும் அத்யந்தபாரதந்த்ர்யமுமுண்டாக்கவல்லாராரோ" என்று எங்கும் பார்க்கையாலே அப்போதலர்ந்த செவ்வித்தாமரைபோலே சிவந்த திருக்கண்களை யுடையனுயிறே உலகளந்ததும். என்னுடைய சிஷ்யனை ஸ்வரூபாநுரூபமான கைங்கர்யங்களைக்கொள்ளாதே விஷயாநுரூபமான வ்ருத்திகளை ஸங்கல்பாநுரூபமாகவும் கொண்டு "ததாநந்தாநு மோதநம் - ததாநந்தாநு மோதநம்" என்கிற பரிசினு மிடாமலாளுமோ? பரிசிலிடாமை அநாதரமிறே. .... (க)

அவ;—நிகமத்தில் இத்திருமொழி கற்றார்க்குப் பலம் சொல்லித்தலைக் கட்டுகிறார்.

ஸ்வா;—(மாயவனித்யாதி) உடையவன் உடைமையைக் கொண்டு போகையாலும், உடையவன் காட்டிக்கொடுக்கக்கொண்டு போகாமையாலும், குணதோஷங்க ளிரண்டு முபாதேயமாய்த் தோற்றுகிற வாஶ்சர்யத்தை நினைத்து மாயவனென்கிறாள். அவ

அவ;—நிகமத்தில் இத்திருமொழி கற்றார்க்குப் பலஞ் சொல்லித் தலைக்கட்டுகிறார்.

வ்யா;-பத்தாம்பாட்டு. (மாயவன்பின்வழிசென்று) தன்னுடைய பெண்பிள்ளையானவள், ரூபகுணசேஷ்டிதங்களால்ஆஶ்சர்யபூதனாய், அவற்றைக்காட்டித் தன்னை வசீகரித்துக்கொண்டவனுடைய பின்னே, ✻கள்வன் கொல்லில் பிராட்டியைப்போலேவழிபோய். (வழியிடை மாற்றங்கள் கேட்டு) (க) "கிளிபோல் மிழற்றிநடந்து" என்

அரு;—பத்தாம்பாட்டு. (மாயவனித்யாதி) சென்று கேட்டுப்புக்கு என்கிற ல்யபந்தங்களுக்கெல்லாமொருகர்த்ருபதம் வேண்டுகையாலே அத்தையத் த்யாஹரித்தருளுகிறார் (தன்னுடைய பெண்பிள்ளையானவளித்யாதி). "மாயவன்" என்றது பின்வழி செல்லுகைக்கு ஹேதுவென்னுமிடம் தோன்ற தாத்பர்ய மருளுகிறார் (ரூபேத்யாதி). (மிழற்றி) அவ்யக்த மதுரமாக ஜல்பித்து

(க) தி-மொ-௩-எ-உ.

ன்போன வழியிலே தானும் வழிப்பட்டுச் சென்று, வழியெதிர் வந்தாரை முன்போனவர்களுடைய ஸ்திதி கமநப்ரகாரங்களை வினவிக்கேட்டு.

(தாயவள் சொல்லியசொல்லை) வழியெதிர் வந்தாரை "மதுரைப் புறம்புக்காள்கொலோ" என்றுகேட்டும் "எமர்கள் குடிக்கோரேச்சா மோகுணமாமோ" என்றுப்போலேகேட்டும், "திருவாய்ப்பாடியில் தோரணம் முதலான வலங்காரங்களும் வாத்ய கோஷங்களும் கண்டு கேட்டி கோளோ" என்று கேட்டும், ஆயர்கள் சேரியிலே சென்று யசோதை ஸ்ரீநந்தகோபருடைய ஆதராநாதரங்களெல்லாம் வினவி வினவிக்கேட்டும் அவர்கள் சொன்ன விசேஷங்களுமெல்லாம் திருத்தாயாரானவள் சொன்ன ப்ரகாரங்களை. *அவளன்று விசேஷிக்க தச்சப்தத்தாலே - அதிகுஹ்ய பரமரஹஸ்யமென்று தோற்றுகிறது. இவற்றை வ்யாஜமாகக்கொண்டு தம்மு

கிறபடியேபோகிறவழியிடையிலே அபூர்வபதார்த்தங்களைக்கண்டால் இவையென்னென்பினவென்று அவைவிஷயமாக இவளை வார்த்தைகள்கேட்டு. (ஆயர்கள் சேரியிலும்புக்கு) ப்ராப்யதேசமானதிருவாய்ப்பாடியிலும் சென்று புகுந்து. இப்படியுண்டான செயல்களையும். (அங்குத்தை மாற்றமுமெல்லாம்) அவ்வூரிற்புகுந்த பின்பு, அங்குண்டான யசோதைப்பிராட்டி, ஸ்ரீநந்தகோபர், நாயகனை க்ருஷ்ணன், தன் பெண்பிள்ளையான விவள், தந்தாமுக்கு அநுகுணமாகச் செய்யும் வ்ருத்தாந்த விஷயமான சொலவுகளையும் எல்லாவற்றையும், "மாற்றமும்" என்கிறஸமுச்சயவாசிஶப்தத்தாலே-கிழுண்டான செயல்களையும் கூட்டிக்கொள்வது. (தாயவள் சொல்லிய சொல்லை). திருத்தாயாரானவள் தன் க்ருஹத்திலே யிருந்து தன்னிலே க்லேசித்தும் மநோரதித்தும் ஸங்கிஹிதரைக் குறித்துச் சொன்ன சொலவுகளை.

---

(என்னென்பின) என்றது-என்னென்றவென்றபடி. (அவைவிஷயமாக) அவற்றின் விஷயமாக. "தாயவள் சொல்லிய" என்றதுக்கநுகுணமாக த்விதீயாந்த பதம் வேண்டுகையாலே, "ஆயர்கள் சேரியிலும்புக்கு" என்றவநந்தரம், "இருக்கையும்" என்று திருவுள்ளம்பற்றி அந்தவத்யாஹ்ருத பதத்துக்கர்த்தமருளுகிறார் (இப்படியித்யாதி).

டைய பக்தி ரூபாபந்நஜ்ஞாநத்தை மங்களாசாஸந பர்யந்தமாக. (தண்புதுவைப்பட்டன் சொன்ன) போக்யாதிகளால் குறைவற்றிருக்கையாலும், அவைதான் மங்களாசாஸநோப கரணங்களாகையாலும் திருமாளிகைக்குண்டான குளிர்த்தியைத் தம்மோடே சேர்ந்தருளிச் செய்கிறார். இப்படிப்பட்ட திருமாளிகைக்கு நிர்வாஹகரான வாழ்வாரருளிச்செய்த.

(தூயதமிழ் பத்தும் வல்லார்) தமிழுக்குத் தூய்மையாவது-சாஸ்த்ரங்கள் போலே வாசகத்துக்கு வாச்யமின்றிக்கே, வாச்யத்

---

அதவா, (மாயவனிக்யாதி) தன்னுடைமையைத்தான் கொண்டு போனுகையாலும், அது தன்னை முறையிலே காட்டிக்கொடுக்கக் கொண்டு போகாமையாலுமுண்டான குண தோஷங்களிரண்டும் உபாதேயமாய்த் தோற்றும்படியிருக்கிற ஆஸ்சர்ய பூதனானவன் போனவழியிலே தானும் வழிப்பட்டுச்சென்று, வழியெதிர்வந்தாரை முன்போனவர்களுடைய ஸ்த்திதி கமநப்ரகாரங்களையும் வினவிக்கேட்டு. (ஆயர்கள் சேரியிலும் புக்கு) திருவாய்ப்பாடியில் ஸ்ரீநந்தகோபர் திருவளவாகச்சென்று, அங்கு நின்றவர்களை அங்குத்தை விசேஷங்களையும் வினவிக்கேட்டு. (தாயவள் சொல்லிய சொல்லை) வழியெதிர்வந்தாரை "மதுரைப்புறம் புக்காள் கொலோ" என்று கேட்டும், "எமர்கள் குடிக்கு ஒரேச்சாமோ குணமாயோ" என்றாப்போலே கேட்டும், "திருவாய்ப்பாடியில் தோரணம் முதலான அலங்காரங்களும் வாத்ய கோஷங்களும் கண்டு கேட்டீரோ" என்று கேட்டும், ஆயர்கள் சேரியிலேசென்று யசோதை ஸ்ரீநந்தகோபருடைய ஆதராநாதரங்களெல்லாம் வினவிக்கேட்டும், அவர்கள் சொன்ன விசேஷங்களுமெல்லாம் திருத்தாயாரானவள் சொன்ன ப்ரகாரங்களையென்று இங்ஙனே யோஜிக்கவுமாம். இதிலுங்காட்டில், பூர்வயோஜநைக்கு ஔசித்யமுண்டு.

(தண்புதுவைப்பட்டன் சொன்ன) ஸம்ஸாரஸ்ரமஹரமான குளிர்த்தியையுடைய திருப்புதுவைக்கு நிர்வாஹகரான பெரியாழ்வாரருளிச்செய்த. (தூயதமிழ் பத்தும் வல்லார்) ஸம்ஸ்க்ருத

---

ஒருவிடத்திலும் அத்ய்யாஹார மின்றிக்கே "தாயவள்" என்றதையே கர்தாவாக்கியோஜநாந்தரமருளுகிறார் (அதவேத்யாதி). "அங்குத்தை மாற்றமுமெல்லாம்" என்றவநந்தரம், "கேட்டு" என்றது அநுஷங்கித்துத்தாத்பர்யமருளுகிறார் (அங்கு நின்றவர்களையித்யாதி). (ஔசித்யமுண்டு) என்றதுக்கு "இல்லம் வெறியோடிற்றாலோ" என்று தன் க்ருஹத்திலே யிருந்து க்லேசித்தமை தோன்றுகையாலும், நாயகன் மேலே மாலேறின பெண்ணை அவன் கொண்டு போனால் தாயானவள் பின்தொடர்ந்து போகை ஸ்த்ரீத்வத்துக்குப் பேராமையாலுமென்று திருவுள்ளம்.

துக்கு வாசகமாய் நடைவிளங்கித் தோற்றுகையும், அநுதாப ப்ர தாநமாகையும், ப்ரக்ருதி ப்ரத்யய தாதுக்களால் ஶ்ருதிஸ்ம்ருதிதி ஹாஸபுராணங்கள் போலே விகல்பிக்க வொண்ணாதிருக்கையும், ப்ரக்ருதி ப்ரத்யய விகல்பமுண்டேயாகிலும் தாத்வர்த்த விகல்ப மில்லாமையாலே க்ரியா விகல்பங்களும் வாசகஶக்தி நிர்ணாயகங்க ளாய், (௧) "நின்றனர் இருந்தனர்" என்று க்ரியா விஶிஷ்டமாகத் தோற்றுகையாலும், சப்த ரூபமான ப்ரக்ருதிலிங்க த்ரயாத்மக மாய், "நாம், அவர்" என்று விசேஷித்துத் தோற்றுகையாலும், ஸகல ஶாஸ்த்ர நிபுணராயிருக்கிற நம்மாசார்யர்களும் இவ்வாழ் வார்கள் பாசுரங்களை நிர்மலங்களென்று விசேஷித்து ஆதரிக்கை யாலும், * தூயதமிழென்னலாமிறே.

(பத்தும்வல்லார்) உஜ்ஜீவநத்துக்கோரொன்றே போந்தி ருக்கச் செய்தே "பத்தும் வல்லார்" என்கிறது-அதினுடைய ரஸ்ய தையாலே. "வல்லார்" என்றது-இவர் தம்மைப்போலே மங்களா சாஸந பர்யந்தமாக வநுஸந்திக்கவல்லாரென்றபடி. (தூமணி வண் ணனுக்காளரே) ப்ரமாணத்துக்குண்டான தூய்மை ப்ரமேயத்தி லும் காணலாமிறே. "தூமணிவண்ணன்"என்கையாலே. இதில்சது ர்த்தி (௨) "கண்ணபுரமொன்றுடையானுக்கு" என்னுமாபோலே. "ஆளரே" என்ற ஏவகாரத்தாலே பதத்ரயமும் சதுர்த்திப்ரதாந மாயிருக்கிறது.

இது மங்களாசாஸநமானபடி யென்னென்னில், ஆசார்ய பர தந்த்ரனைப் போருகிறவனை ஈஶ்வரன் இதுக்குப்பூர்வமேவ க்ருஷி

---

சப்தம்போலே யிருண்டு பொருள் தெரியாதபடி யிருக்கையன்றிக் கே, பெண்ணுக்கும் பேதைக்கும் அறியலாம்படி ஸ்வார்த்த ப்ர காசமாயிருக்கும் தூய்மையையுடைத்தான த்ராவிட பாஷையாய், ஒரொன்றே ஓராத்மாவினுடைய உஜ்ஜீவநத்துக்குப் போருமென் னும்படி யிருக்கிற பத்துப்பாட்டையும் ஸாபிப்ராயமாக அநுஸந் திக்க வல்லவர்கள். (தூமணிவண்ணனுக்காளரே) பழிப்பற்ற நீல

---

(இருண்டு) துர்ஜ்ஞேயமாய், இதுக்குவிவரணம் (பொருளித்யாதி). "பத் தும்" என்ற ச(உம்)காரத்துக்குத் தாத்பர்யமருளுகிறார் (ஒரொன்றேயித்யாதி). ஜீயர் திருவடிகளேசரணம்.

---

(௧) தி-வாய்-௧-௧-௪. (௨) தி-மொ-அ-௯-௩.

பண்ணினான் தானாகையாலே தன்னளவிலே சேர்த்துக்கொண்டு போக, "அத்தலைக்கு மங்களாசாஸநம் செய்யவல்லனோ, மாட்டானோ" என்று ஆசார்யனானவன் பின்சென்று எதிர் வந்தாரையும் ஊரில் நின்றாரையும் வினவிக்கேட்கையாலே, இது மங்களா சாஸநமாகக்கடவது. "வழியெதிர் வந்தார்" என்கிறது - உபாதேயதசை மூட்டி மீண்டவர்கள். ... ... .... .... ... (௧0)

பிள்ளை திருவடிகளே சரணம்.

## எட்டாம் திருமொழி முற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளேசரணம்.

---

## மூன்றாம்பத்து ஒன்பதாம் திருமொழி என்னாதன் ப்ரவேசம்.

அவ;—கீழில் திருமொழியிலே க்ருஷ்ணாவதாரத்தைப் பலவிடங்களிலும் ப்ரஸ்துத மாக்கி, ஆசார்ய பரதந்த்ரன் ஈஶ்வரனைப் பற்றிப் போன ப்ரகாரங்களை அநுஸந்தித்தார். போன

---

ரத்நம் போன்ற வடிவழகையுடையவனுக்கு சேஷபூதராய் அடிமை செய்யப்பெறுவர். ... .... ... ... (௧0)

பெரியஜீயர் திருவடிகளே சரணம்.

---

## பெரியாழ்வார் திருமொழி எட்டாம் திருமொழி முற்றிற்று.

---

## என்னாதன் ப்ரவேசம்.

அவ;—க்ருஷ்ணாவதாரைகப்ரவணராய், தத்குணசேஷ்டிதங்களையே யநுபவித்துக்கொண்டு போந்தார் - கீழ்; இப்போது, அந்த க்ருஷ்ணாவதார குணசேஷ்டிதங்களோடே தத்பூர்வகாலிகமான ராமாவதாரகுணசேஷ்டிதங்களையும் ஏககாலத்திலே யநுபவிக்கவேணுமென்னும் அபிநிவேசம்பிறந்து, அதுக்குடலாகஇரண்டு

---

அரு;—என்னாதன்ப்ரவேசம்;—வண்ணமாடங்கள் தொடங்கி ஒரு பேடிகையாக்கி அதுக்கும் இத்திருமொழிக்கும் ஸங்கதியை யருளுகிறார் (க்ருஷ்ணாவதாரேத்யாதி). க்ருஷ்ணாவதாரத்தை அநுபவித்தவாறே அதுக்கு முற்பட்ட ராமாவதாரம் நெஞ்சில் பட்டு அத்தையு மநுபவிக்கிறாரென்று ஸங்கதி சொல்லிற்றாய்த்து. (தத்குணசேஷ்டிதங்களையே) என்ற எவகாரத்துக்குக் கீழே அவதாராந்தர குணாதிகளை அநுபவித்தாலும் தாத்பர்யத்தாலே க்ருஷ்ணக(ம)தமாகவநுபவித்தாராகையாலே அவத(ா)ரிக்கலாமென்று கருத்து.

சேதநன்மேன்மையும் நீர்மையும் தோற்றின அவதாராபதாந விசேஷகுணங்களையும், நீர்மையே விஞ்சித் தோற்றின ராமாவதார விசேஷகுணங்களையும், தன்னையு மிரண்டு வகையாக்கி அநுஸந்தித்த ப்ரகாரத்தைத் திருவாய்ப் பாடியில் பெண்கள் இரண்டுவகையாய் இரண்டவதாரத்தையும் புகழ்ந்துரைத்து விளையாடி உந்தி பறந்த பாசுரத்தாலே அநுஸந்தித்து மங்களா சாஸநத்தோடே சேர்த்து ப்ரீதாராகிறார். இரண்டுவகையான குணங்களும் மங்களா வஹமிறே. சேதநனுக்கு ஏககாலத்திலே இரண்டுஸரீரமாகைகூடுமோவென்னில், தேசவிசேஷத்திலே, (௧) "அநேகதாபவதி - அநேகதாபவதி" என்று நடவாநின்றது; (௨) "விண்ணுளாரிலும் சீரியர்" என்று இங்குள்ளாரையும் ஸ்லாகியாநின்றால் இது தான் கூடாது. திருச்சாழலிலே "இரண்டு பிராட்டிமாரவஸ்த்தை ஏககாலத்திலே கூடுமோ?" என்று ஜீயர் பட்டரைக் கேட்

ஸ்ரீகோபிமாரவஸ்த்தையை ப்ராப்தராய், அதிலே ஒருத்தி க்ருஷ்ணாவதாரகுணசேஷ்டிதமும், ஒருத்தி ராமாவதாரகுணசேஷ்டிதமுமாகக்கொண்டு, ஒருவர்க்கொருவர் எதிரியாய்க்கொண்டு சொல்லி, உந்திபறந்த பாசுரத்தாலே உபயாவதாரகுண சேஷ்டிதங்களையும் பேசி யநுபவிக்கிறார் - இத்திருமொழியில்.

இரண்டு கோபிமாரவஸ்த்தையை ஏககாலத்திலேயடையக் கூடுமோவென்னில்; பகவத்ப்ரஸாதவிசேஷத்தாலே ஜ்ஞாநத்தில் தடையற்றால்எல்லாம்செய்யலாமிறே. (௩)"மானமருமென்னோக்கி" என்கிற திருமொழியிலே, "இரண்டு பிராட்டிமார் தசை ஏககாலத்திலே கூடிம்படியென்?" என்று ஜீயர் பட்டரைக்கேட்க; "தேசவிசேஷத்தில் அநேக சரீரபரிக்ரஹம் ஏககாலத்தில் கூடுகிறபடி எங்

(இரண்டுகோபிமார்)இத்யாதிக்கு ஒருத்தர்க்கொருத்தர் ஏற்றம் சொல்லிக்கொண்டநுபவித்தால் நன்றாக வநுபவிக்கலாமென்று கருத்து. (பகவத் ப்ரஸாத விசேஷத்தாலே) இத்யாதி பரிஹாரத்தைக்கீழே தாய்மார்தசையையும் நாயிகா தசையையும் ப்ராப்தராணரென்றாப்போலே சொல்லு மிடத்துக்கெல்லாம் கூட்டிக்கொள்வது. இப்பரிஹாரத்துக்கு ஆப்த ஸம்வாதம் காட்டுகிறார் (மானமருமித்யாதி). (பார்த்தருளினால்) என்றது-ஈஸ்வரன்மயர்வறமதிநல

(௧) சாந்தோ. (௨) திருவி-எ௬. (௩) தி-மொ-௧௧-௫.

மூ.—என்னுதன்தேவிக் கன்றின்பப்பூ வீயாதாள்
தன்னுதன்காணவே தண்பூமரத்தினை
வன்னுதப்புள்ளால் வலியப்பறித்திட்ட [யைப்பாடிப்பற.
என்னுதன்வன்மையைப்பாடிப்பற வெம்பிரான்வன்மை

---

க, தேச விசேஷத்திலே, "*அநேகதா பவதி கண்டீரே" என்றருளிச் செய்தாரென்று, ஆச்சாம் பிள்ளை யருளிச் செய்வர். .... *

அவ;—முதற்பாட்டு. (என்னுதனித்யாதி) ஒருவகையிலுள்ளாரெல்லாரும் க்ருஷ்ணவ தாரத்திலே அவகாஹித்த ப்ரகாரத்தைச் சொல்லுகிறது.

ஸ்வா;-(என்னுதனித்யாதி). பிராட்டிமா ரோடுண்டான ஸமபாவத்தாலும் மிதுநச்சேர்த்தி ப்ராதாந்யத்தாலும் (க) "நமக்கும் பூவின் மிசைநங்கைக்கும்" என்னுமாபோலே "என்னுதன்" என்று அவன் தனக்குசேதந விசேஷணநிரூபகமானபின்பிறே "நாதன்தேவி" என்றது. (உ) "உன்திரு" என்னுமாபோலே. (௩) "ஆகியவன்பே" என்று ஆஸ்ரயம் தோற்றியும் தோற்றுதுமாயிராநின்ற

---

நனே; அப்படியே இவரையும்பார்த்தருளினால் கூடும்" என்றருளிச்செய்தார் என்று ப்ரஸித்தமிறே. .... ... ... *

வ்யா;—முதற்பாட்டு. (என்னுதன் தேவிக்கு) என்னுடைய நாதனானவனுடைய தேவிக்கு. நாதனென்றது - சேஷியென்றபடி. ஸ்வரூபத்தையுணர்ந்தால் எல்லார்க்கும் தனித்தனியே "என்னுதன், என்னுதன்" என்னலாம்படியிறே வஸ்துவோட்டை ப்ராப்திதானிருக்கும்படி. இவ்வாத்மாவினுடைய சேஷத்வந்தான் கேவலம் அவனளவன்றிக்கே மிதுநவிஷயமாயிறே யிருப்பது; ஆகையா

---

மருளிக் கடாக்ஷித்தா லென்றபடி. *

அரு;—முதற்பாட்டு. (என்னுதனித்யாதி), மேலே "என்னுதன் வன்மை" என்றுசொல்லி, இங்கும் "என்னுதன்" என்றால் பௌநருக்த்யம் வருகையாலே அத்தைப் பரிஹரிக்கிறுர் (நாதனென்றதித்யாதி). அங்கு பதித்வம் சொல்லுகிறதென்றுகருத்து. ஸர்வசேஷியானவனை "என்னுதன்" என்று தனித்துச்சொல்லக்கூடுமோவென்னவருளுகிறுர்(ஸ்வரூபத்தையித்யாதி). ஸத்யபாமைப் பிராட்டிக்கென்னுதே "என்னுதன்தேவி" என்று இப்படி சொன்னதுக்கு பாவமருளுகிறுர் (இவ்வாத்மேத்யாதி வாக்யத்ரயத்தாலே). ஆனல்பத்நி

---

(க) தி-வாய்-ச-ரு-அ (உ) தி-வாய்-௧௦-௧௦-உ (௩) தி-வாய்-௧௦-௧௦-எ.

திறே. (அன்று) சசி(ச்சீ)தேவிபகலிலே ஸத்ய பாமை நாய்ச்சியா ரெழுந்தருளின வன்று. (அன்று) அவளுக்கபேக்ஷாநிரபேக்ஷமாக ஒருமஹாநிதி கைப்பட்ட வன்று. (இன்பப்பூவீயாதாள்) போக்ய மான பூவர, அத்தைக் கண்டு நாய்ச்சியார பேக்ஷிக்கவும் பெற்று வைத்து, நிர்ப்பாக்யையாகையாலே நிரர்த்தகமாகச்சில ஹேதுக் களைச் சொல்லி ஈயாதாள். தானே அபேக்ஷித்துச் சாத்த ப்ராப் தமாயிருக்க, அபேக்ஷிக்கவும் கொடாதாள்.

(தன்னுதன் காணவே) இத்தையிறே அவள் தனக்குக்கனக்க ப(ஃ)லமாக நினைத்திருக்கிறது. (ஈயாதாள்தன்னுதன்) (௧) "வேரி மாறாத பூமேலிருப்பாள் வினைதீர்க்குமே" என்றும், (௨)"உக்கமும் தட்டொளியும் - உன்மணாளனையும் தந்து" என்றும் அநிஷ்ட நிவ்ருத்தியும் இஷ்ட ப்ராப்தியும் பண்ணு மவளன்றே. இவளுக்

---

கிறே "என்னுதன் தேவிக்கு" என்றது. (௩) "விஷ்ணுபத்நீ - விஷ்ணுபத்நீ" என்கிறபடியே, இவளுக்கு நிரூபகம் - அவனு டையதேவி யென்னுமதிறே. "தேவி" என்கையாலே - ஸத்ய பாமைப் பிராட்டியுடைய வால்லப்யம் சொல்லுகிறது. (அன்று) நரகாஸுர நிரஸநம்பண்ணித்தங்களுக்குக் குடியிருப்புப்பண்ணிக் கொடுத்த க்ருஷ்ணனோடேகூட, தன்னுடைய க்ருஹத்திலே ஸத்ய பாமைப்பிராட்டி யெழுந்தருளினவன்று. அபேக்ஷா நிரபேக்ஷமாக மஹாநிதி கைப்பட்டவன்று. (இன்பப்பூவீயாதாள்) போக்ய மான கல்பகப்பூ வர, அத்தைக்கண்டு நாய்ச்சியார் அபேக்ஷிக்கவும் பெற்றுவைத்து, நிர்ப்பாக்யையாகையாலே நிரர்த்தகமாகச் சில ஹேதுக்களைச் சொல்லிக்கொடாத இந்த்ராணி.

(தன்நாதன்) "அவனைத்தனக்கு நாதனாகவுடையோம்" என் னுமித்தையிறே இவள்தனக்குக் கனக்கப்பலமாக நினைத்திருப்பது.

---

யென்ன வொண்ணுதோ? தேவியென்ன வேணுமோ வென்ன வருளுகிறார் (தேவியென்கையாலேயித்யாதி). (தன்னுடைய) என்றது-சசியை. "என்னுத ன்தேவி" என்றதைக் கடாக்ஷித்துத் தாத்பர்யாந்தரம் (அபேக்ஷத்யாதி).

ஈயாதாள் நாதன் என்னவமைந்திருக்க, "தன்" என்றதுக்குத்தாத்பர்யம ருளுகிறார் (அவனையித்யாதி). காணவென்னுதே "காணவே" என்றஏவகாரத்து க்குத் தாத்பர்யமருளுகிறார் (தானித்யாதி). வேதத்தை நாதமென்றதுக்குத்

---

(௧) தி-வாய்-௪-௫-௧௧. (௨) திருப்பாவை-௨௦. (௩) ஸ்ரீஸூ.

குத் தகுதியாயிறே அவனு மிருப்பது. "ஸ்ரியப் பதி" என்றுப் போலேயிறே "இவளையுடையோம்" என்று அவள் நினைத்திருப்பது, கர்மபா (ஞ) வனையில். ஆகையிறே "தன்னுதன்" என்றது. "நான் இந்த்ரனல்லேனோ? ஸுர நாயகனல்லேனோ" என்றிறே அவன் நினைத்திருப்பது. (காணவே) அவன் கண்டு கொண்டு நிற்கவே. (தண்பூமரத்தினை) குளிர்ந்து பரிமளிதமாயிருக்கிற பூவையுடைத்தாய், "கல்பகதரு" என்று ப்ரஸித்தமாயிருக்கிறவ்ருக்ஷத்தை. (வன்னுதப்புள்ளால்) நாதப்ரதாநவேதமயனாயிருக்கிற பெரிய திருவடியாலே, நாதத்துக்கு வலிமையாவது-பாஹ்யகுத்ருஷ்டிகளால் சலிப்பிக்கவொண்ணாமை, (வலியப்பறித்திட்ட) அவன் தன்னை அபேக்ஷித்துக் கொள்ளைகயுமன்றிக்கே, அவனபேக்ஷித்துத் தரக் கொள்ளைகயுமன்றிக்கே, அவனுடைய அஸந்நிதியிலே பிடுங்குகையுமன்றிக்கே, அவன்தான் பார்த்து நின்று வஜ்ரத்தை வாங்கி விலக்கா நிற்கச் செய்தே பிடுங்கிக்கொண்டுபோர, பின்னையும் தொடர்ந்து வாங்குவானாக வந்தானிறே; முஷ்டு போரவாதரித்தவன்.

---

(காணவே) "தான் முப்பத்துமுக்கோடி தேவர்களுக்கும் நிர்வாஹகனான இந்த்ரனல்லேனோ" என்று தன்னைப் போரப்பொலிய அபிமானித்திருக்குமவன் கண்டுகொடு நிற்கவே. (தண்பூமரத்தினை) தழைத்துக்குளிர்ந்து பூத்துநிற்கிற கல்பகவ்ருக்ஷத்தை. (வன்னுதப் புள்ளால்) நாதப்ரதாந வேதமயனாயிருக்கிற பெரிய திருவடியாலே. (க) "த்ரிவ்ருச்சிரோ காயத்ரஞ்சக்ஷு:" - த்ரிவ்ருத் தேசிரோகாயத்ரஞ்சக்ஷுஸ்" இத்யாதியாலே - இவனுடைய வேதமயத்வம் ஸுவ்யக்தமாகச் சொல்லப்படாநின்றதிறே. நாதத்துக்கு வன்மையாவது-பாஹ்யகுத்ருஷ்டிகளால் சலிப்பிக்கவொண்ணாமை. வன்மை-பெரியதிருவடிக்குவிசேஷணமாகவுமாம். இவனுக்குவலிமையாவது நினைத்தகாரியம் செய்து முடிக்கவல்ல சக்தி. (வலியப்பறித்திட்ட) வலியாலே பிடுங்கிக்கொண்டுபோந்த. அவன்றன்னை அபேக்ஷித்துக் கொள்ளுகை யன்றிக்கே, அவன் தான் அபேக்ஷித்துதாகக் கொள்ளுகையு மன்றிக்கே, அவனுடைய அஸந்நிதியிலே பிடுங்குகையுமன்றிக்கே, அவன் பார்த்து நின்று † விலக்கச் செய்தே, பலத்தாலேயிறே பிடுங்கிக்கொண்டு போந்தது.

---

தாத்பர்யம் (நாதப்ரதாநமானவேதம்) என்று. "நாதம்" என்றது-உதாத்தாதி ஸ்வரங்களென்றபடி. "வலிய" என்றதுக்குவ்யாவர்த்த்யங்களையருளிச்செய்து கொண்டு தாத்பர்யமருளுகிறுர் (அவன்தன்னை யித்யாதி).

---

† (பா) வலிக்கச் செய்தே. (க) யஜு.

இத்தால்-உபயபாவநா நிஷ்டர்க்குப் பிறந்த பகவத் ப்ராவண்யத்தால் வந்த வறிவும் ஆஸ்திக்யமும் நிலைநில்லாதென்னுமளவே யன்றிக்கே, அபிமத ஸித்திக்கு ஹேதுவான ராகத்வேஷங்கள் க்ரியாபர்யந்தமானாலும் ஜீவிகையாகாமல் வ்ரீளையோடே தலைக்கட்டுமென்று தோற்றுகிறது. இதுதான் இவனளவேயன்றிக்கே, கர்மபாவனையில் எல்லாரளவிலும் சுருக்கமொழியக்காணலாமிறே.

(என்றுதன் வன்மையைப் பாடிப்பற) அவனுடைய ஆஶ்ரித பக்ஷபாதத்துக்குத் தோற்று "என்றுதன்" என்கிறாள். அவனுக்கு வன்மையாவது - ஆஶ்ரிதரக்ஷணம் ஒரு தலையானால், ஸ்வஸங்கல்ப பரதந்த்ரரையும் ஸங்கல்பந்தன்னையும் பாராநிறே. (க) "மயங்க வலம்புரிபிந்யாதி". இங்கு "ஸ்வஸங்கல்ப பரதந்த்ரர்" என்றது, காம்ய தர்மபரதந்த்ரரான புண்யதர்மாக்களை. ஸ்வஸங்கல்ப பாரதந்த்ர்யம் அவன் தனக்குமுண்டிறே. ஸங்கல்பமாவது - அகாணை ப்ரத்யவாய பரிஹாரமிறே. ந்யாய ஹாநியுண்டானால் நிரங்குஶ ஸ்வாதந்த்ர்யம் இவற்றைப்பாராதிறே. இவ்வன்மையுள்ளது இவனொருத்தனுக்குமேயிறே. (எம்பிரான் வன்மையைப் பாடிப்பற) இவ்வன்மை மங்களாவஹமாகையாலே "எம்பிரான்" என்கிறாள். "பற" என்றது-லீலாரஸ விசேஷ வ்யாபாரமாய், ஒருவரையொருவர் மிகுத்துச் சொன்னதாய்த் தலைக்கட்டுகிறது. ... (க)

அவ;—இரண்டாம்பாட்டு. இப்படி மங்களாசாஸநபரர்க்கும் ஜநகராஜன் திருமகளுக்கும் உதவினதாயிருக்கிறது.

---

(என்றுதன்வன்மையைப்பாடிப்பற) அபிமதையான ஸத்யபாமைப் பிராட்டிக்குப்பரதந்த்ரனுய்க்காரியம்செய்த ப்ரணயித்வ குணத்தாலே யென்னை யெழுதிக்கொண்டவனுடைய. நினைத்தது முடிக்கவல்ல ப(ப)லத்தை ப்ரீதியாலே பாடிக்கொண்டுபற. (எம்பிரான் வன்மையைப் பாடிப்பற) பிராட்டிக்குச் செய்த உபகாரம் தனக்குச் செய்ததாக நினைத்து "எம்பிரான்" என்கிறார். "வன்மையைப் பாடிப்பற" என்று மீளவும் சொல்லிற்று ப்ரீதி ப்ரகர்ஷத்தாலே. "பற" என்றது-உந்திபற வென்றபடி. .... .... (க)

---

கீழ்ச்சொன்னதெல்லாம் "என்றுதன்" என்றதுக்கு ஹேதுவென்னுமிடம் தோன்றவருளிச்செய்கிறார்(அபிமதையான வித்யாதி). "உந்திபற" என்றது-ஒரு லீலாவ்யாபாரம். ... ... ... ... ... ... (க)

---

(க) க-திருவ-அ.

இக்கண்ணுக்கிலக்காமவர் இலக்கானால் மான்பார்வை உபமாநத்தால் வந்த மிகையமரும்படியென்னுதல், மானைவிட்டு இங்கே அமரும்படியிறே கண்ணழகு தானென்னுதல். வைதேஹியை வைதேவி என்கிறது - தேஹஸம்பந்தமான த்யோதமாநாதி குணங்களைப்பற்ற. (கானித்யாதி) அமரும் கல்கானதர்போய் - பொருந்தின கல்காட்டுவழிபோய் வநவாஸம் செய்கிறகாலத்திலே.

---

திருந்துள்ள ம்ருதுவான நோக்கை யுடையளாய், விதேஹ ராஜாவினுடைய புத்ரியானவளே! இத்தால் (௧) "வ்ரியமாணபவந்தாவ்ருதாம்ராக்ஷஸீகணை| ஸ்வகணேந ம்ருகீம் ஸிநாம்வகணைராவ்ருதாமிவ - ப்ரியஞ்ஜநமபஶ்யந்தீம் பஶ்யந்தீம்ராக்ஷஸீகணம் - ஸ்வகணேநம்ருகீம் ஹீநாம்ஶ்வகணைராவ்ருதாமிவ" என்கிறபடியே தன்னினத்தைப்பிரிந்து அநேகம் நாய்களினுடைய திரள்களாலே வளைக்கப்பட்டு நடுவே நின்று மலங்கமலங்க விழிப்பதொரு மான் பேடைபோலே, அநுகூலஜநத்தின் முகத்திலே விழிக்கப்பெறுமல் ப்ரதிகூலமான ராக்ஷஸிகணத்தைப் பார்த்துக்கொண்டிருக்கிற விருப்பையும், அவர்களுடைய தர்ஜநபர்த்ஸநங்களாலே உளைந்து வேண்யுத்க்ரதநோத்யுக்தையாம்படி தேஹத்தை யுபேக்ஷித்தபடியையும் சொல்லுகிறது. (விண்ணப்பம்) அடியேன் விண்ணப்பம் செய்கிறவார்த்தையைத் திருவுள்ளம்பற்றி யருளவேணும். (கானமருமித்யாதி) காடுசெறிந்திருப்பதாய் * கல்நிரைந்துகிடப்பதான

---

மான் நோக்கோடென்றபடி. "அமரும்" என்றதின் பலிதார்த்தம் (ஒத்திருந்துள்ள)என்றது. "மானமருமென்னோக்கி"என்றுதல், "வைதேவி"என்றுதல் சொல்லவமைந்திருக்க, இரண்டையுமருளிச் செய்ததுக்கு ப்ரகரணநுகுணமாகத் தாத்பர்யமருளுகிறர் (இத்தாலித்யாதி). (இத்தால்)என்றுதொடங்கி, (பார்த்துக்கொண்டிருக்கிற விருப்பையும்)என்னுமளவும், மானமரு மென்னோக்கி என்றதின்பலிதார்த்தம். (தேஹத்தைஉபேக்ஷித்தபடியையும்)என்னுமளவும், வைதேவி யென்றதின் பலிதார்த்தம். கீழ்ப்பாட்டில் "கேட்டருளாய்" என்றத்தை இங்கு மநுஷங்கித்து ஸப்தார்த்தம் (அடியேனித்யாதி). "அமரும்" என்றது - சேர்ந்திருக்கையாய், அத்தால் பலிதம் (செறிந்து) என்றது. இத்தால் நிபிடமென்றபடி, "கல்லதர்" என்று கல்லை நிரூபகமாகச் சொல்லுகையால் அத்தையருளிச் செய்கிறர் (கல்நிரைந்து கிடப்பதான) என்று. அதரென்றதினர்த்தம் (வழியிலே) என்றது.

---

(௧) ரா-ஸு-௧௫-௨௪.

(தேனித்யாதி) வண்டுகள் மாறாத பொழிலை யுடைத்தான திருச்சித்ரகூட பர்வதத்திலே ஏகாந்த போக மநுபவிக்கிற காலத்திலே. (பால்மொழியாய்) பால்போலும் ரஸாவஹமான வார்த்தையையுடையவளே! (பரதநம்பி பணிந்ததுமோ ரடையாளம்) மீண்டெழுந்தருள வேணுமென்று பாரதந்த்ர்யத்தால் பூர்ணனான ஸ்ரீபரதாழ்வான் வந்து ப்ரபத்தி செய்ததுமோரடையாளம். (ரு)

---

வழியிலே திருவடிகளின் மார்த்தவம் பாராதேபோய் வநவாஸம் பண்ணின காலத்திலே.

(தேனமருமித்யாதி) வண்டுகள்மாறாமல் பொருந்திக்கிடக்கிற பொழில்களோடுசேர்ந்த பர்யந்தத்தையுடைய சித்ரகூட பர்வதத்திலே (உ) "உடஜாஸீநம் ஜடாமண்டலதாரிணம் | க்ருஷ்ணாஜிநதரம் தந்துசீரவல்கலவாஸஸம்" - உடஜேராமமாஸீநம் ஜடாமண்டலதாரிணம் - க்ருஷ்ணாஜிநதரம் தந்துசீரவல்கலவாஸஸம்" என்கிறபடியே இளையபெருமாள் சமைத்த ஸ்ரீபர்ணசாலையிலே யெழுந்தருளியிராநிற்க. (பால்மொழியாய்) பால்போலே ரஸாவஹமான மொழியையுடையவளே! இதுக்குமுன்பு இவள்சொன்ன வார்த்தைகளில் ரஸ்யதையாலும் இது கேட்கையிலுண்டான ஆதரத்தாலும் சொல்லுகிறான். (பரதனம்பி பணிந்தது மோரடையாளம்) பாரதந்த்ர்யத்தால் பூர்ணனான ஸ்ரீபரதாழ்வான்வந்து "மீண்டு எழுந்தருளவேணும்" என்று ப்ரபத்திபண்ணினது மோரடையாளம். ... .... ... .... ... (ரு)

---

சாரல் - சார்வென்று விவக்ஷித்து அர்த்தமருளுகிறார் (பர்யந்தத்தையுடைய) என்று, சித்திரகூடத்துப்பரதனம்பிபணிந்தென்ன வமைந்திருக்கவும், இருப்பவென்றதுக்குத் தாத்பர்யமருளுகிறார் (உடஜேயித்யாதி). நம்பியான பரதனென்றந்வயித்து ஸப்தார்த்தத்தை யருளிச்செய்கிறார் (பாரதந்த்ர்யேத்யாதி) ... ... ... ... ... ... (ரு)

அரு;—ஆறும்பாட்டு. (சித்திரகூடமித்யாதி) சிறுகாக்கை முலை தீண்டினமாத்ரத்தாலே ப்ரஹ்மாஸ்த்ரம் ப்ரயோகிக்கவேணுமோ வென்ன, அது

---

(க) ரா-அ-கக-உரு.

மூ,—சித்திரகூடத்திருப்பச் சிறுகாக்கை முலைதீண்ட
அத்திரமேகொண்டெறிய வனைத்துலகுந் திரிந்தோடி
வித்தகனே யிராமாவோ நின்னபய மென்றழைப்ப
அத்திரமே யதின்கண்ணை யறுத்ததுமோ ரடையாளம். (௬)

---

வ்யா.--ஆறும்பாட்டு. (சித்திரகூடத்திருப்ப) சோலைகளும் ஆறுகளும்மிலாதலங்களுமாய்க்கொண்டுபோகஸ்த்தாநமாயிருக்குஞ்சித்ரகூட பர்வதப்ரதேசத்திலே, (௧) "தஸ்யோபவநஷண்டேஷு நாநாபக்ஷிஸமாக்ருதேஷு । விஹ்ருத்ய ஸலிலக்லிந்நா தவாங்கே ஸமுபாவிசம்—தஸ்யோபவநஷண்டேஷு நாநாபுஷ்பஸுகந்திஷு - விஹ்ருத்யஸலில க்லிந்நாதவாங்கே ஸமுபாவிசம்" என்கிறபடியே பெருமாளும் தேவரீருமாய்க்கொண்டு ஏகாந்தரஸமநுபவித்து ஒருவர்க்கொருவர் மாறி மாறி மடியிலே கண்வளர்ந்து ரஸோத்தரராயிரா நிற்கச்செய்தே. (சிறுகாக்கை முலைதீண்ட) இந்த்ரன்மகனான ஜயந்தன் தமோகுணப்ரசுரனாகையாலே ப்ராப்தாப்ராப்த விவேகஸூந்யனாய் தேவவேஷத்தைமறைத்து க்ஷுத்ரமான காகவேஷத்தைப் பரிக்ரஹித்துக்கொண்டுவந்து, பெருமாள், மடியிலே கண்வளர்ந்தருளாநிற்கச்செய்தே (௨) "வாயஸஸ்ஸஹஸா ஸுக்ஷ்மநாஸஸ்ஸ்தநாந்தரே - வாயஸஸ்ஸஹஸாகம்ய விததாரஸ்தநாந்தரே" என்கிறபடியே ஜநநியென்றறியாதே தேவரீர் திருமுலைத்தடத்திலே நலிய.

(அத்திரமேகொண்டெறிய) அவ்வளவிலே பெருமாளுணர்ந்தருளி, (௩) "ஸ தர்ப்பம் ஸம்ஸ்தராத் க்ருஹ்ய ப்ராஹ்மேணாஸ்த்ரேண யோஜயத்" ...

---

ஸ்வா.—ஆறும்பாட்டு. (சித்திரகூடமித்யாதி). அந்த சித்திரகூடந்தன்னிலே பெருமாள் மடியிலே கண்வளராநிற்கச் செய்தே இந்த்ரன் மகனான ஜயந்தன் தமோகுண ப்ராசுர்யத்தாலே அறிவால் சுருங்கி சுருக்கமுணரும்படி பேரளவில்லாததாக வேஷத்தை ஆஸ்த்தாநம்செய்து திருமுலைத்தடத்திலே நலியப்புக, பெருமாளும் இவ்வளவிலே உணர்ந்து இவனைச்செருக்குவாட்டுகைக்காகவும், மாதா பிதாக்கள் தேவர்கள் ருஷிகள் மற்றும் ஆச்ரமம்

---

தமோகுணப்ரசுரமானஜயந்தனென்றருளுகிறார் (இந்த்ரணித்யாதி). சிறுவென்றதினர்த்தத்தை ஸஹேதுகமாகவருளுகிறார் (தமோகுணேத்யாதி).

---

(௧) ரா-ஸு-௩௮-௧௩. (௨) ரா-ஸு-௩௮-௨௨. (௩) ரா-ஸு-௩௮-௨௬.

ஸ்யம் நோக்கி மூன்றுலோகத்தில் ப்ரஸித்தராயும் அப்ரஸித்தராயு முள்ளவர்களுடையவளவறிகைக்காகவும் (௧) [ஸவித்ராவஸிதஸ்ததா - ஸபித்ராசபரித்யக்த:] பிதாவும் கைவிட்டானென்கையாலே ஸ்ரீதேவியும் மஞ்சள் கீறிப்புறப்பட்டு "பிதாகைக்கொள்ளிலும் ராமாபராதியை நான் கைக்கொள்ளேன்" என்றுளென்றுமிடம் தோற்றுகிறது. [ஸுரைஸ்ச - ஸுரைஸ்ச] "மாதாபிதாக்கள் சிக்ஷாரூபத்தாலே கைவிட்டார்களாகில் அவர்கள் கோபம் தீர்ந்தவாறே காட்டிக் கொடுக்கிறோமென்பர்களோ? நாமண்ட பரிகரமன்றோ" என்று அங்கே ஒதுங்கப்பார்த்தான். அவர்கள் கைக்கொள்ளோம் என்றார்கள். [ஸமஹர்ஷிபி: - ஸமஹர்ஷிபி:] ப்ரஹ்மபாவனையிலே ஊன்றினவர்களாகையாலே செல்ல; அவர்

---

க:க்ரீடதி ஸரோஷேண பஞ்சவக்த்ரேண போகிநா" என்று அதிக்ருத்தராய், (௨) "ஸ தர்ப்பம் ஸம்ஸ்தராத்க்ருஹ்ய ப்ராஹ்மேணாஸ்த்ரேண யோஜயத் । ஸ தீப்த இவ காலாக்நி: ஜஜ்வாலாபிமுகோ த்விஜம் । ஸ தம் ப்ரதீப்தம் சிக்ஷேப தர்ப்பம் தம் வாயஸம் ப்ரதி - ஸதர்ப்பம் ஸம்ஸ்தராத்க்ருஹ்ய ப்ராஹ்மேணாஸ்த்ரேண யோஜயத் - ஸதீப்த இவகாலாக்நி: ஜஜ்வாலாபிமுகோத்விஜம்। ஸதம்ப்ரதீப்தம்சிக்ஷேப தர்ப்பந்தம் வாயஸம்ப்ரதி" என்கிறபடியே ஒருதர்ப்பத்தையெடுத்து, அதில் ப்ரஹ்மாஸ்த்ரத்தை யோஜித்து, அத்தை அந்தக் காகத்தின்மேலே செலுத்திவிட. (அனைத்துலகுமித்யாதி). அந்த அஸ்த்ரம் மந்தகதியாகவிடுகையாலே பின் தொடர்ந்துசெல்ல, அத்தைத்தப்பவழிதேடி, (௧) "ஸ பித்ரா ச பரித்யக்த: ஸுரைஸ்ச ஸமஹர்ஷிபி: । த்ரீந் லோகாந் ஸம்பரிக்ரம்ய - ஸபித்ராசபரித்யக்த ஸ்ஸுரைஸ்சஸமஹர்ஷிபி:। த்ரீந்லோகாந்ஸம்பரிக்ரம்ய" என்கிறபடியேமுந்துறபித்ருக்ருஹத்திலே சென்றவளவில் பிதாவாலும் மாதாவாலும் கைவிடப்பட்டு, பந்துக்களானவர்கள்தான் கைக்கொள்ளுவார்களோவென்று தேவர்கள்பக்கலிலே சென்றவளவில் அவர்களாலும்பரித்யக்தனாய், ஆந்ருஸம்ஸ்ய ப்ரதாநரானருஷிகள்தான் கைக்

---

ப்ரஹ்மாஸ்த்ரம் ப்ரயோகித்தவுடனே அவனைப்பிடிக்கவேண்டியிருக்க, அவன் அனைத்துலகம் திரியக்கூடுமோவென்ன (அந்தவஸ்த்ரமித்யாதி) பித்ராச என்றவிடத்தில் சகாரம் அநுக்தஸமுச்சயமாக்கி யருளுகிறார் (மாதாவாலும்)

---

(௧) ரா-ஸு-௩௮-௩௩. (௨) ரா-ஸு-௩௮-௩௦.

களும் கைவிட்டார்கள். (௧) [த்ரீந்லோகாந் ஸம்பரிக்ரம்ய] அறிந்தவர்களோடு அறியாதவர்களோடு வாசியறத் திறந்து கிடந்தவாசல்கள்தோறும் ஒருகால்போலே ஒன்பதின்கால்சென்று இரந்தவளவிலும்கைக்கொள்ளாமல் தள்ளிக் கதவடைத்தார்கள்.

இப்படி செய்யவேண்டுவதென்னென்னில்? (அத்திரமே கொண்டெறிய) கிடந்ததொரு துரும்பை ப்ரஹ்மாஸ்த்ரமாக்கி மந்த்ர கதியாக்கி விட்டவளவில் நின்ற நில்லேபிறே இது. (அனைத்துலகம் திரிந்தோடி) எல்லாலோகத்திலும். சரணம் புகுவாருண்டாகிலும் ஶரண்யரில்லை யென்னுமிடம் தோற்ற அனைத்துலகமென்கிறார். அனைத்துலகம் திரிந்துமீண்டோடிவந்து. (வித்தகனே) ஸர்வ த்துக்கும் காரணபூதனுமாய் ஸமர்த்தனுமானவனே! (ராமா) ரஞ் ஜயதீதிராஜா. ரமயதீதிராமஃ. (ஓ நின்னபயமென்றழைப்ப) உன்னை யொழிய வேறு அபயப்ரதாநம் செய்வாரில்லையென்று உள்ளழற்

---

கொள்ளுவர்களோவென்று அவர்கள் பக்கலிலே சென்றவளவில் அவர்களும் கைவிடுகையாலே, திறந்துகிடந்த வாசல்கள்தோறும் ஒருகால் நுழைந்தாப்போலே ஒன்பதின்கால் நுழைந்து மூன்று லோகங்களையும் வளைய ஓடித்திரிந்தவிடத்திலும், ஒருவரும் கைக் கொள்ளாமையாலே (௧) ''தமேவஶரணம் கதஃ'' என்கிறபடியே சிறிதும் காலைக்கட்டிக்கொள்ளலாம்படி யிருக்கும் க்ருபாவானுகையாலே விஸ்மயநீயனுய், "எல்லாரையும் குணத்தாலே ரமிப்பிக்கவல்லவனே!" என்று ஶரண்யனை பெருமாள்குணத்தைச்சொல்லி, "ஓ!" என்று தன்னுடைய அநந்யகதி

---

என்று. *த்ரீந்லோகாநித்யாதிக்கர்த்தம்(திறந்தித்யாதி). பரியென்றது-பரிதஃ என்றுய், அத்தால் பலிதம் (திறந்துகிடந்த வாசல்கள் தோறும்) என்றது. 'ஸம்' என்று - ஸம்யக்காய், அத்தால்பலிதம் (ஒருகால்நுழைந்தாப்போலே ஒன்பதின்கால்நுழைந்து) என்றது. *பரிஎன்றதின்சப்தார்த்தம் (வளைய)என்றது. அனைத்துலகம் திரிந்தோடினுல் தன்மேலே அஸ்த்ரம் விட்டவரையே அவர் குணம் சொல்லி ஶரணம் புகுரவேணுமோ வென்ன வருளுகிருர் (ஒருவரித்யாதி)." உனக்கு-உன்பொருட்டு, அபயம்-அபயக்குரலிட்டேன்" என்றுகூட்டிக்கொள்வது. இத்தால்"நின்-உன்னுடைய, அபயம்வேணும்"என்று மூலத்துக்கு ஶப்தார்த்தம் கண்டுகொள்வது.

(௧) ரா-ஸு-௩௮-௩௩.

றியோடே வந்து அஸ்த்ரம்நலியாமல் "காக்கா" என்று திருவடி களிலே விழ.

இத்தை முன்பே செய்யாமையாலும் இவன்பின்னே திரிந்த வேகத்தாலும், (அத்திரமே யதன் கண்ணையறுத்ததும்) பெருமானைக் கேள்விகொள்ளாமல் அஸ்த்ரந்தானே ஒரு கண்ணழிவுசெய்துவிட்டது. அஸ்த்ரந்தானே செய்கைக்கடி இதுதான்கண்டக ப்ரபத்தியாகையாலேயிறே. அதாவது – "ரக்ஷித்தானாகில் ப்ராணனைப் பெறுகிறோம்; இல்லையாகில் அவனுக்கொரு தேஜோவதத்தையுண்டாக்குகிறோம்" என்றாப்போலேயிறேஇதின் நினைவு. "[illegible] - லகுர்தண்ட: ப்ரபந்நஸ்ய" என்றுமுண்டிறே. அன்றிக்கே, கார்யப்பாடறிந்தானொரு திருப்பணி செய்வான் செய்தானென்று நம்பிள்ளை அருளிச்செய்தாரென்று ஆச்சாம்பிள்ளை யருளிச்செய்வர். .... .... ... ... ... ... (௬)

த்வத்தை முன்னிட்டுக்கொண்டு "எனக்கு அபயம்" என்று சரணாகதனானமை தோற்றக்கூப்பிட.

( அத்திரமேயித்யாதி ) இப்படி சரணம் புகுருகையாலே(க) "[illegible] - ஸதம்நிபதிதம்பூமௌ ஶரண்யஶ்ஶரணாகதம் | வதார்ஹமபிகாகுத்ஸ்த: க்ருபயா பர்யபாலயத்" என்கிறபடியே க்ருபையாலே பெருமாள் ரக்ஷித்தருளுகிறவளவில் காகத்துக்கு ப்ராணப்ரதாநம்பண்ணி அஸ்த்ரத்துக்கு ஒருகண்ணழிவு கற்பிக்கையாலே, முன்பு தலையறுப்பதாகத் தொடர்ந்த அஸ்த்ரந்தானே அதினுடைய ஒருகண்ணை யறுத்துவிட்டதும் ஒரடையாளம். .... .... .... .... .... (௬)

அஸ்த்ரம், "நின்னபயம்" என்று ஶரணம் புகுந்த காகத்தின் கண்ணை யறுக்கக்கூடுமோ வென்னும் ஶங்கையாலே அஸ்த்ரத்தில் நின்றும் ப்ராணனைக்காப்பாற்றி, அஸ்த்ரம்மோக (வை)மாகாமைக்காக, கண்ணை வாங்கினாரென்று திருவுள்ளம்பற்றி அதுக்கு ப்ரமாணபூர்வகம் தாத்பர்யமருளுகிறார் (இப்படியித்யாதி). (ஒருகண்ணழிவு) என்றது - ஒரு கண்ணழிவைமாத்ரம் ப்ரயோஜநமாக்கினாரென்றபடி. ப்ராணனை உத்தேஶித்து விட்டத்தைக் கண்மாத்ரத்திலே நியமிக்கையாலே அதுக்கவத்யத்தை உண்டாக்கினாரென் றுத்வங்யர்த்தம். ... ... ... ... (௬)

.(க) ரா-ஸு-௩௮-௩௪.

மூ.—மின்னொத்தநுண்ணிடையாய் மெய்யடியேன் விண்ணப்பம்
பொன்னொத்தமானொன்று புகுந்தினிதுவிளையாட
நின்னன்பின்வழிநின்று சிலைபிடித்தெம்பிரானேகப்
பின்னேயங்கிலக்குமணன் பிரிந்ததுமோரடையாளம். (எ)

---

ஸ்வா;—ஏழாம்பாட்டு. (மின்னித்யாதி). மின் உபமாநம் போராமையாலே "நுண்ணிடையாய்" என்கிறார். பாரதந்த்ர்யபூர்த்தியாலே வந்த வைராக்யமிறே. (மெய்யடியேன் விண்ணப்பம்) இளையபெருமாளுடைய துறையிலே அவருடைய ப்ரியத்திலேவந்தவராகையாலே மெய்யடியே னென்கிறார். ⁕மெய்ம்மையை மிகவுணர்ந்துஆம்பரிசறியாதொழிந்தாலும்,ஸாத்விகபுராணவாஸனையாலும், திருவாழிமோதிரம்அவன்கையிலிருக்கையாலும்,இந்தஸந்நிதிவிசேஷத்தாலும்ப்ரஹ்மபாவனை தலையெடுத்தால்இங்ஙனேசொல்லலாமிறே. "அடியேன் மெய்விண்ணப்பம்" என்னில், பலவிடங்களிலும் காணலாமிறே. இது தன்னை ஆழ்வாரருளிச்செய்யவும் பெற்றதிறே. இவருடைய ⁕உறகலுறகலுக்குளதுதான் சேராது. (பொன்

---

வ்யா.—ஏழாம்பாட்டு. (மின்னித்யாதி) மின்னோடொத்திருந்துள்ள நுண்ணிய இடையையுடையாய்!; இடையினுடைய நுண்ணிமையும், விரஹதசையில் நோவுபாடாற்ற வொண்ணாமைக்கு உடலாயிருக்குமிறே; அத்தைப்பற்றச் சொல்லுகிறான். (மெய்யடியேன்விண்ணப்பம்) புரையற்ற சேஷபூதனான நான் விண்ணப்பஞ் செய்கிறதைத் திருவுள்ளம் பற்றியருளவேணும். மெய்யடியானாகையாவது - எதிர்த்தலையில் ஸம்ருத்தியே புருஷார்த்தமாயிருக்குமதொழிய, ஸ்வப்ரயோஜந பரனன்றிக்கேயிருக்கை. (பொன்

---

அரு;—ஏழாம்பாட்டு. (மின்னித்யாதி) (மின்னோடொத்திருந்துள்ள) என்றது - மின்போலே சஞ்சலமாய், ஒடுங்கு விழுமாபோலே யிருக்கிறவென்றபடி. இத்தசையில் இப்படிவர்ணிக்கைக்குத்தாத்பர்யமருளுகிறார் (இடையினுடையவித்யாதி). (நுண்ணிமையும்)என்ற ச(உ)காரம் அநுக்தஸமுச்சயமாய், ஸௌகுமார்யத்தைச்சொல்லுகிறது.ஸௌகுமார்யம்போலேநுண்ணிமையும் ஆற்றவொண்ணாமைக்கு உடலாயிருக்கையால் அத்தைப் பற்றிக்லேஶித்துச் சொல்லுகிறானென்று கருத்து. (புரையற்ற) த்ருடமான. அடியார் இரண்டு வகையுண்டோ? மெய்யென்று விஶேஷிக்கைக் கென்னவருளுகிறார் (மெய்யடியானித்யாதி)."பொன்னொத்தஒன்றானமான்"என்றந்வயித்து,ஒன்றென்ற

னொத்தமானென்று புகுந்தினிது விளையாட) ஸுவர்ணரத்நாதிக ளாலே நாநாவர்ணமா யிருப்பதொரு மானின் வேஷத்தைக் கொண்டு மாரீசனானவன் ஜாதிம்ருகங்கள் நடுவே புகுந்து அவை விஸஜாதீயமென்று வெறுத்துப்போகச்செய்தேயும் இதொன்றும் தனியே நின்று இஷ்டத்திலே விளையாடுகிறதாக பாவித்துநிற்க.

(நின்னன்பின் வழிநின்று) தேவரீர் பக்கலுண்டான ஸ்நே ஹத்தினுடைய வழியாக மற்றொன்று திருவுள்ளம் பற்றாமையாலே நிலைநின்று. (சிலைபிடித்தெம்பிரானேக) தமக்குச்சிலையும் கணையும்

னொத்தமானித்யாதி) மாயாவியான மாரீசன் இதுக்குமுன்பு லோ கத்தில் கண்டறியாததொரு வடிவையெடுத்துக் கொண்டுவந்தா னைகயாலே, பொன்போலிருக்கிற நிறத்தையும் நாநாரத்நங்கள் போலிருக்கிற புள்ளிகளையும் மற்றுமநேகம்வைசித்ரியையு முடைத் தாயிருப்ப தொருமானனது, எழுந்தருளியிருக்கிற ஆஶ்ரமத்தின் முன்னேவந்துமநோஹரமாம்படி நின்று துள்ளித்துள்ளிவிளையாட.

(நின்னன்பின்வழிநின்று) " இத்தைப்பிடித்துத்தரவேணும் " என்று பெருமாளைப்பார்த்து தேவரீர் அருளிச்செய்தவிடத்தில் இளையபெருமாள் அருகேநின்று, "லோகத்தில் இப்படி யிருப்ப தொரும்ருகமில்லை, மாரீசன் இங்ஙனே சிலமாயாரூபங்களைக்கொ ண்டு திரியும்" என்று ப்ரஸித்தம்; ஆகையால், இது மாயாம்ருகம்" என்னாநிற்கச் செய்தேயும், தேவரீருடைய ஆசையின்வழியிலே

துக்கு - அத்விதீயத்வமென்று விவக்ஷித்து. அதுக்கு, ஹேதுபூர்வகம் தாத்பர் யமருளுகிறார் (மாயாவியானவித்யாதி). (புள்ளிகளையும்) பிந்துக்களையும். (மற் றும் அநேகவைசித்ரியையும்) என்றது - மணிப்ரவரஶ்ருங்காக்ரத்வாதிகளை.

நின்சொல்வழியென்னாதே, "அன்பின்" என்றதுக்கு அநதிலங்க்கநீயத் வம்தோன்றுகையால்அத்தையருளுகிறார்(இத்யையித்யாதி). (திரியுமென்று ப்ரஸித்தம்)என்றது-(க)"[illegible] அநேகநிஹதாராஜந்ரா ஜாநஃ காமரூபிணா" என்று இவர் முன்பு கதையைக் கேட்டுச் சொல்லுகை யைப்பற்ற. பிராட்டிபெருமாளைப்பார்த்துச்சொன்னால்,(உ)"[illegible] - அஹம்ஸர்வம் கரிஷ்யாமி" என்றிருக்கிற விளையபெருமாளிருக்

(க) ரா-ஆ. (உ) ரா-அ-ஙக-உடு.

துணையாக, உமக்கு இளையபெருமாள் துணையாக வெழுந்தருள, க்ருத்ரிமரூபமான ராக்ஷஸோக்தி விசேஷத்தாலே தேவரீர் திருவுள்ளம் கலங்கி "அங்கே சீக்ரமாகச்சென்றறியீர்" என்று நியமிக்கவும் அவர்மறுக்கமறுக்க அவரால் மறுக்க வொண்ணாதபடி அருளிச் செய்தபின்பாக அத்தனியிடத்திலேபிரிந்ததென்னுதல்; பெருமாள் முன்னே பிரிகையாலே பின்னே பிரிந்த தென்னுதல்.

---

நின்று. (சிலைபிடித்தெம்பிரானேக) இளையபெருமாளை இங்குத்தைக்குக்காவலாக நிறுத்தி, திருக்கையிலே, பிடித்தவில்லும் தாமுமாய்க்கொண்டு அத்தைப்பிடிப்பதாகப் பெருமாள் நெடுந்தூர மெழுந்தருள. பின்பு தங்களை யெல்லாரையும் விஷயீகரித்த உபகாரத்தை நினைத்து "எம்பிரான்" என்கிறான்.

(பின்னேயித்யாதி) நெடுந்தூரம் பின்பற்றிப்போன விடத்திலும் பிடிகொடாமல் அது தப்பித்திரிகையாலே "இதுமாயாம்ருகம்" என்று திருவுள்ளம்பற்றி அதின்மேலே ஶரத்தைவிட, அது பட்டு விழுகிறபோது "ஹா ஸீதே!,ஹா லக்ஷ்மணா!" என்று பெருமாள் மிடற்ரோசைபோலே கூப்பிட்டுக் கொண்டுவிழ, அத்தை தேவரீர் கேட்டருளி, பெருமாளுக்கேதேனும் அபாயம்வந்ததாக நினைத்து, "இத்தைச் சடக்கெனப்போய் அறியும்" என்று தேவரீர் அருளிச்செய்யச் செய்தேயும் இங்குத்தைக்குக் காவலாகநிறுத்திப் போகையாலும், பெருமாளுடைய ஶௌர்யத்தை யறிகையாலும் "அங்குத்தைக்கு ஒன்றும்வாராது, தேவரீர் பயப்பட்டருளவேண்டா" என்று விண்ணப்பம்செய்து, தாம்போகமாட்டாமல் சுற்றிக் கொண்டுநிற்க, அவர் நில்லாமல் போகவேண்டும்படி தேவரீர் சில வருளிச்செய்கையாலே, பிற்பாடு அங்கே இளையபெருமாள் பிரிந்து போனது மோரடையாளம். .... .... .... (எ)

---

கத்தாமேயெழுந்தருளுவானென்னென்னவருளுகிறார் (இளையபெருமாளையித்யாதி). இத்தால் பிராட்டிவார்த்தையில் அபிநிவேஶத்தாலே தாம்காவலாக விராமலெழுந்தருளினாரென்று கருத்து. ம்ருகத்தின் பின்தொடருகை திருவடிக்கொரு உபகாரகமல்லாமலிருக்க, எம்பிரானென்னக்கூடுமோ வென்ன வருளுகிறார் (பின்பித்யாதி).

பெருமாள் காவலாகவைத்திருக்க, இவர் பிரிகைக்கு ஹேதுவென்னென்ன, அத்தைப்பரக்கவுபபாதிக்கிறார் (நெடுந்தூரமித்யாதி) ... (எ)

மூ.—மைத்தகுமாமலர்க்குழலாய் வைதேவீ விண்ணப்பம்
ஒத்தபுகழ்வானரக்கோ னுடனிருந்து நினைத்தேட
அத்தகுசீரயோத்தியர்கோ னடையாளமிவை மொழிந்தான்
இத்தகையாலடையாள மீதவன்கைமோதிரமே. (அ)

பெருமாள் பிரிந்தபோது இளைய பெருமாளுண்டு. இவர் பிரிந்ததிறே அரிதாய்த்தோற்றுகிறது. (க) "நவஸீதாஸுயா ஹீநா - நசஸீதாத்வயாஹீநா" என்னவும் பொருந்தாமையோ டேகொண்டுபோருவது, ஸ்ரீகுஹப்பெருமாளோடேகூடினபோது பாகவதலாபத்தாலே உருக்காண்பது, அதினுடைய அலாபமே ஸித்திக்கில் "கிம்கார்யம்" என்பது முதலாகக்காரியப்பாடொழிய வறியாதவர்க்கும் இவருடைய வசநபரிபாலநம் செய்கிறவர்க்கும் இக்கலக்கம் பைத்ருகமாமித்தனையிறே. .... .... (எ)

அவ;—எட்டாம்பாட்டு. (மையித்யாதி) நீ இவையெல்லா மறிந்தபடி யென்?" என்றருளிச்செய்ய, அதுக்கு ஹேது இன்ன தென்கிறது இப்பாட்டால்.

ஸ்வா;—(மையித்யாதி ). திருக்குழலிருட்சிக்கு மையொரு புடைக்கொப்பாக்கி, அதின்மேலே மலரையும்கூட்டுகையால், இப் போதுகண்டதன்றே, கீழ்"நெறிந்தகருங்குழல்"என்கிறபோலே யிறே இப்போது பொலிவழிந்து ஆர்ப்பேறிக்கிடக்கச் செய்தேயும் இதுக்குப்ராப்தமாகத்தகுவனதேடிச்சொல்லவுமாமிறே, நல்சரக்கு க்குவந்தவழுக்காகையாலே.இக்குழல் மைத்தகுமாமலர்க்குழலாக வன்றோ புகுகிறது" என்று மங்களவாசகமாகவுமாம். (வைதேவீ)

வ்யா;—எட்டாம்பாட்டு. (மைத்தகுமாமலர்க்குழலாய்). மை போலே இருண்டு ஶ்லாக்யமானமலரோடே கூடியிருக்கும் குழலையு டையவளே! இந்த விசேஷணங்கள் இப்போதிருக்கிற இருப்புக் குச் சேராமையாலே, இப்படியிருக்கைக்கு யோக்யமான குழலெ ன்றுசொல்லுகிறுனித்தனை.பிரிவாற்றாமையாலேபேணுமலிருக்கை யால் புழுதிபடைத்துப் பூமாறியிறே யிப்போது கிடக்கிறது. (வை

அரு;-எட்டாம்பாட்டு. (மைத்தகுவித்யாதி) இவ்விசேஷணங்கள் இப்போ தை யிருப்புக்குச்சேராமையை உபபாதிக்கிறர்(பிரிவாற்றாமையாலேயித்யாதி)

(க) ரா-அ-டுக.௬க.

இதுவும் பைத்ருகம். (விண்ணப்பம்) முறைமை தோன்றச் சொல்லுகிறான். (ஒத்தவித்யாதி) ஸக்யராய் சோகஹர்ஷங்களொத்திருக்கையாலே "ஒத்தபுகழ்" என்கிறது. (வாநரக்கோன்) வாநரராஜேவீ) தேஹத்தை உபேக்ஷித்திருக்கிறபடியைக்கொண்டு சொல்லுகிறான். (விண்ணப்பம்) இந்த விண்ணப்பத்தைத் திருவுள்ளம் பற்றவேணுமென்கை.

(ஒத்தபுகழ்வானரக்கோன்) காண்பதற்குமுன்னே (க) "ஸுக்ரீவம் நாதமிச்சதி - ஸுக்ரீவம்நாதமிச்சதி" (உ) "ஸுக்ரீவம் சரணம்கத:-ஸுக்ரீவம் சரணம்கத:" என்று இளையபெருமாள் அருளிச்செய்யும்படிதாமே பஹுமாநம் பண்ணிக்கொண்டுவந்து, கண்டபின்பு அக்நி ஸாக்ஷிகமாக ஸக்யம்பண்ணி, (௩) "த்வம்வயஸ்யோஸிஹ்ருத்யோமேஹ்யேகம் து:க்கம்ஸுகஞ்சநௌ - த்வம்வயஸ்யோஸிஹ்ருத்யோமேஹ்யேகம் து:க்கம்ஸுகஞ்சநௌ" என்று பெருமாள் அருளிச்செய்த பின்பு, "பெருமாளோடு சோகஹர்ஷங்கள் ஒத்துப்போந்தவர்" என்னும் புகழையுடையராய் வாநராதிபதியான மஹாராஜர். இப்போது வாநராதிபதியென்றது ஸாபிப்ராயம். அதாவது-தேவரீரைத்தேடுகைக்காக (ச)"யாம்கபீநாம் ஸஹஸ்ராணி-யாம்கபீநாம்ஸஹஸ்ராணி" என்கிறபடியே திக்குக்கள் தோறும் திரள்திரளாகப் போகவிடத்தக்க வாநரஸேனையையுடையவரென்கை. (உடனிருந்து) மால்யவானிலும் கிஷ்கிந்தையிலுமாகப் பிரிந்திருந்துபோய் பெருமாளுடன் கூடியிருந்து.

ஒத்தவரென்றும், புகழையுடைய வாநரக்கோனென்றும் அக்ஷரார்த்தம் திருவுள்ளம்பற்றி ஒத்தவரென்றதுக்கு சோகஹர்ஷங்களிலொத்தவரென்று தாத்பர்யமருளிச் செய்யக்கோலி அதுக்கு ஹேதுவைப்ரக்ருதோபயுக்தமாக வருளிச் செய்கிறார் (காண்பதற்கு முன்னே யித்யாதி). சோகஹர்ஷங்களொத்தவரென்றும் புகழன்றிக்கே, குணாந்தரத்தால்வந்தபுகழ்-நினைத்தேடவென்றதுக்குப் புகழல்லவென்று திருவுள்ளம்.ஸுக்ரீவனென்னாதே வாநரக்கோனென்றதுக்கு பாவத்தை யருளிச்செய்கிறார் (இப்போதித்யாதி வாக்யத்தாலே). "நினைத்தேட" என்றவநந்தரம் "ஆள் விடுகிறவளவில்" என்றத்யாஹாரம் திருவுள்ளம்பற்றி, அப்போது தம்மோடே தானே பெருமாள

(க) ரா-கி-ச-க௮. (உ) ரா-கி-ச-கக-
(௩) ரா-கி-ரு-க௮ (ச) ரா-கி-ஸு-௩௦-௩.

ஜன்• (உடனிருந்து) சேரவிருந்து. (நினைத்தேட) தேவரீரைத் தேடிக்கொண்டுவருவதாக.

(அத்தகு சீரித்யாதி) இந்த ஶோகத்துக்குத் தகுதியான வந்த சோகத்தையுடையராய், திருவயோத்யைக்கு நிர்வாஹகராக ப்ராப்தரானவர். (அடையாளமிவைமொழிந்தான்) அவன் மொழி

(நினைத்தேட) தேவரீரைத்தேடுகைக்காக. ஸர்வதிக்குக்களிலும்ஆள் விடுகிறவளவிலே, (க) "விஶேஷேண து ஸுக்ரீவோ ஹநூமத்யர்த்த முக்தவாந் - விசேஷேண துஸுக்ரீவோ ஹநூமத்யர்த்த முக்தவாந்" என்கிறபடியே எல்லாரையும் போலன்றிக்கே விசேஷித்து என்னையபிமானித்து "இவன் இக்காரியத்துக்கு ஸமர்த்தன்" என்று மஹாராஜர் திருவுள்ளம்பற்றினவநந்தரம்.

(அத்தகுசீரயோத்தியர்கோனடையாளமிவைமொழிந்தான்)தேவரீரைப்பிரிந்தபின்பு ஊணுமுறக்கமுமின்றிக்கே கடித்ததும் ஊர்ந்ததுமறியாதே ஏதேனுமொரு போக்யபதார்த்தங்களைக் கண்டால் தேவரீரை நினைத்து ஈடுபடாநின்றுள்ள அந்தநிலைக்குத் தகுதியான ப்ரணயித்வகுணத்தை யுடையராய், ஸ்ரீபரதாழ்வான் * அடிசூடுமரசாய்த் திருவடிநிலைகொண்டு போகையாலே திருவயோத்யையிலுள்ளார்க்குத் தாமேராஜாவான பெருமாள், விண்ணப்பஞ்செய்த இந்த வடையாளங்களெல்லாம் அடியேனுக்குத் தம்முடைய திருப்பவளத்தாலே யருளிச்செய்தார்; அல்லாதபோது * மல்லிகைமாமாலைகொண்டு அங்கார்த்தது அடியேனுக்கு அறியக்கூடுமோ?

டையாள மருளிச்செய்கைக்கு ஹேதுவையுமருளிச் செய்துகொண்டு தாத்பர்யமருளுகிறார் (தேவரீரையித்யாதி).

அத்தகுசீரென்றதுக்கு-ஒத்தபுகழென்றுசொன்ன புகழுக்குத்தக்ககல்யாணகுணமென்று சொல்லுமளவில் "அடையாளமிவை மொழிந்தான்" என்றதுக்குஹேதுவாகக் கூடாமையால் "அ" என்றதச்சப்தம் புத்திஸ்த்தபராமர்ஶியாக்கித்தாத்பர்யமருளுகிறார்(தேவரீரைப்பிரிந்தவித்யாதி).(பெருமாள்)என்றவநந்தரம் "நான்" என்று சேஷம். தம்முடைய திருப்பவளத்தாலே அருளிச்செய்தாரென்றதுக்கு நியாமகம் காட்டுகிறார் (அல்லாத வித்யாதி). இத்திருமொழியிலே திருவடியருளிச் செய்ததாகச்சொன்னவடையாளங்களெல்லாம் தமக்குப் பெருமாள் தாமே யருளிச்செய்ததாகச் சொன்னாரென்று மயர்வற

(க) ரா-கி-௪௪-க.

பெரியாழ்வார் திருமொழி, ௩-ப, ௧0-தி, அ-பா, மைத்தகு. அசாக ந்தவடையாளங்களிவை. (இத்தகையாலடையாளம்) என்னுல் விண்ணப்பம் செய்யலாமடையாளமிவ்வளவு. அவரருளிச்செய்த வற்றில் என்னுல் தரிக்கலாவதும் விண்ணப்பம் செய்யலாவதும் இவ்வளவே. (ஈதவன் கைமோதிரமே) "அவர் திருவிரலில் சாத்தினவறுகாழியிது" என்று, "அடையாளங்களில் சங்கையில்லை. சங்கையுண்டாய்த்தாகிலும் தேவர்க்குத் தெளிய வேண்டுவதெல்லாம் போரும் இது" என்று திருவாழியாலே ப்ராண ப்ரதிஷ்டை பண்ணுகிருன். ... .... .... .... .... (அ)

---

(இத்தகையா லடையாளம்) ஆனபின்பு, விண்ணப்பஞ்செய்த வடையாளமித்தனையும் இந்தப்ரகாரத்தாலே வந்ததென்று அறிவித்து. (ஈதவன்கைமோதிரமே) இது அவர்திருக்கையில் திருவாழி மோதிரமென்று, (க) "ராமநாமாங்கிதஞ்சேதம் பஶ்யதேவ்யங்குளீயகம் - ராமநாமாங்கிதஞ்சேதம் பஶ்யதேவ்யங்குளீயகம்" என்கிறபடியே பெருமானுடைய திருநாமத்தாலே அங்கிதமாயிருக்கிற திருவாழிமோதிரத்தைக் கொடுத்தாணுய்த்து. ... (அ)

---

மதிநலமருளப்பெற்ற வாழ்வாரருளிச்செய்கையாலே ஸ்ரீராமாயணத்தில்பெருமாளருளிச் செய்ததாகவில்லாமலிருந்தாலும் இது கல்பாந்தரமென்றுகொள்வது. காகாஸுரவ்ருத்தாந்தத்தைப் பிராட்டி தாமடையாளமாகச் சொல்லியிருக்கையாலேயும் அந்தகாகவ்ருத்தாந்தம் பெருமாளருளிச் செய்ததாகச்சொன்னதுக்கும் கல்பாந்தரமென்கையாலே விரோதமில்லை.

"அடையாளமிவையித்தகையால் மொழிந்தான்" என்றந்வயித்துச்சொல்லுமளவில் "இத்தகையால்" என்றதுக்குவையர்த்த்யம் ப்ரஸங்கிக்கையால், ஆழ்வாருடைய ஸ்ரீஸூக்தியாக்கி "அறிவித்து" என்றுருபதமத்த்யாஹரித்தர்த்தமருளுகிருர் (ஆனபின்பித்யாதி). மேல்பாட்டில் "உச்சிமேல்வைத்துக்கொண்டு உகந்தனள்" என்றருளிச்செய்கைக்கநுகுணமாகஇப்பாட்டில் "மோதிரமே" என்றவநந்தரம் "என்று கொடுத்தான்" என்றத்த்யாஹரித்தர்த்த மருளிச்செய்கிருர் (இது அவர் திருக்கையிலித்யாதி) ... ... ... (அ)

---

(க) ரா-ஸு-௩௬-௨.

மூ.—

திக்குநிறைபுகழாளன் தீவேள்விச்சென்றநாள்
மிக்க பெருஞ்சவைநடுவே வில்லிறுத்தான் மோதிரங்கண்டு
ஒக்குமாலடையாள மனுமானென் றுச்சிமேல்
வைத்துக்கொண்டுகந்தனளால் மலர்க்குழலாள்சீதையுமே. (௯)

ஸ்வா;—ஒன்பதாம்பாட்டு. (திக்கித்யாதி) திக்குநிறைந்த புகழையுடையவனென்று விஶ்வாமித்ரனுக்குப் பேரானபோது பஞ்சாஶத்கோடி விஸ்தீர்ணமான அண்ட நிர்வாஹகன் முதலானோர்அநுவர்திக்கும்படியாகவும், ஒரு ருஷியாலே ஒருராஜா சண்டாளனாக அந்த சண்டாளந்தன்னையே வாரேயுறுப்பாகயஜிப்பித்து, அந்தஶரீரத்தோடே ஸ்வர்க்கமேற்றி, "ஸ்வஸ்தி-த்வம்ஸ" என்கிறவளவிலும் "நில்" என்னவல்லனாகையாலும், ராஜர்ஷியானதான் ப்ரஹ்மர்ஷியாகையாலும், க்ஷத்ரியத்வம்பின்னாட்டாமையாலும், அண்டாந்தர்கதமான விந்ததிக்குக்களெல்லாம் தபஃபலமாக நிறைந்த புகழையுடையவனென்னவுமாம். ஒரு ராஜாவை சண்டாளனாக்கி, ஒரு சண்டாளனை ப்ராஹ்மணனாக்கவல்லவனுடைய ஶாபத்தையிறே இவனிப்படிசெய்தது; ஆகையால்தபஸ்ஸுக்கள் ஔபாதிகமானால் எல்லாம் செய்யலாமிறே. அன்றிக்கே பெருமாளானபோது அண்டாந்தர்கத மாயன்றே புகழிருப்பது. அந்த விஶ்வாமித்ரன் பெருமாளை (க) "அஹம்வேத்மி—அஹம்வேத்மி" என்கிறபோது "ம

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (திக்கித்யாதி) தத்வஜ்ஞானத்தாலும், ப்ராக்ருதவிஷய வைராக்யத்தாலும், முமுக்ஷுவாய் பலாபிஸந்திரஹிதமாக கர்மாநுஷ்ட்டாநங்களைப்பண்ணிக்கொண்டு போருகையாலும், ஸர்வதிக்குக்களிலும் நிறைந்த புகழையுடையனை ஸ்ரீஜநகராஜனுடைய ஆஹவநீயாத்யக்நித்ரயத்தோடே பண்ணும் யாகத்திலே விஶ்வாமித்ரமஹர்ஷிகொண்டு செல்ல, எழுந்தருளின

அரு;—ஒன்பதாம்பாட்டு. (திக்கித்யாதி) "திக்கு-திக்குக்கள் தோறும் நிறை-பூர்ணமான, புகழாளன்-யஶஸ்ஸையுடையவனானவன், அப்படிப்பட்ட ஜநகமஹாராஜருடைய தீயோடுகூடின வேள்வி-யாகத்தில் பெருமாள் சென்ற நாளிலே" என்று ஶப்தார்த்தம் திருவுள்ளம்பற்றி ஜநகனென்றுதே "திக்கு நிறை புகழாளன்" என்றதுக்கு ஹேதுக்களைக்காட்டா நின்று கொண்டு அர்த்தமருளுகிறார் (தத்வஜ்ஞாநத்தாலுமித்யாதி). பெருமாள் மோதிரமென்றதே

(க) ரா-பா-௧௯-௧௪.

பெரியாழ்வார்திருமொழி, ௩-ம், ௰-தி, ௬-பா, திக்குநிறை. அசாஉ

ஹாத்மா" "ஸத்யபராக்ரமர்" என்றறிவேன். மஹாதேஜஸ்விக ளான வஸிஷ்டாதிகளும் மற்றுமோரோரதபஸ்ஸுக்களில் நிலை நின்றவர்களும் அறிவார்களென்றுனிறே. (திவேழ்வியித்யாதி) யஞ் ஜத்தில் அக்நிஹோத்ரரக்ஷணவ்யாஜமாக விச்வாமித்ரன்பின்னே சென்றநாள். (மிக்கவித்யாதி) ப்ராஹ்மணரும் க்ஷத்ரியரும்திரண் டபெரிய திரள் நடுவே சென்று வில்லை முறித்துப் பாணிக்ர ஹணம் செய்கிறபோது திருக்கண்களாலே ரூபமும் திருக்கைகளா லே ஸ்பர்சமும் கண்டு.

(ஒக்குமித்யாதி) நீ முன்பு சொன்னவடையாளங்களும்நான் பாணிக்ரஹணகாலத்தில் கண்டதும்; [ஸத்-ஸு: கரவிஹ-ஷணம்- பர் துஃகரவிபூஷணம்] "இது அவன் கைமோதிரம்" என்று தந்த

காலத்திலே. (மிக்கபெரும் சவைநடுவே) மிகவும்பெரிய ஸபாமத் யத்திலே. (வில் இறுத்தான் மோதிரங்கண்டு) தனக்கு சால்மாகக் கல்பித்திருந்த வில்லை முறித்த பெருமாளுடைய திருக்கையிலே அப்போது கிடந்ததாய், பின்பு பாணிக்ரஹணம் பண்ணுகிற போது தன்கையிலே உறுத்தினதாய், ஸர்வகாலமும் பெருமாள் திருக்கையிலே கிடக்குமதான திருவாழிமோதிரத்தைக்கண்டு.

(ஒக்குமித்யாதி) அநுமானே! நீமுன்பு சொன்னவடையாளங் களும் திருவாழிமோதிரத்திலடையாளமும் ஒக்குமென்று அவன் முகத்தைப் பார்த்துச்சொல்லி, (க) "ம்ருஹீத்வா ப்ரேக்ஷமாணாஸா

"வில்லிறுத்தான் மோதிரம்" என்றதுக்கு ப்ரயோஜந மருளுகிறார் (தனக்கித் யாதி).

"அனுமான் அடையாள மொக்குமென்றுச்சிமேல் வைத்துக் கொண்டு மலர்க்குழலாள் சீதையுமுகந்தனளால்" என்றந்வயம் திருவுள்ளம்பற்றி ப்ர மாண பூர்வகமர்த்தமருளிச் செய்கிறார் (அநுமானே யித்யாதி). (திருவாழி மோதிரத்திலடையாளம்) என்றது - பெருமாள் திருநாமத்தை, உச்சிமேல் வைத்துக்கொண்ட வநந்தரம் "மலர்க்குழலாளாய் உகந்தனள்" என்றுசொன் னதுக்கு பாவநாப்ரகாஷம் ஹேதுவென்று திருவுள்ளம்பற்றி, அது இவ்வசநத் தில் தோற்று மென்று வசநத்தை யருளுகிறார் (க்ருஹீத்வேத்யாதி).

(க) ரா-ஸு-௩௬-௪.

பின்பு "அநுமான்" என்று ப்ரீதியோடே வாங்கித்திருக்குழலிலே வைத்துக்கொண்டு பெருமாளோடே ஒருபடுக்கையிலே யிருந்து அவரலங்கரிக்க, பூமுடித்தாப்போலே யிருந்தாள். மண்ணில் பரிமளம் வடிவுகொண்டாப்போலேயிறே வடிவுதானிருப்பது. மணந்தான் கந்தகுணியாயிறே யிருப்பது அபியாலே இருவரையும் காட்டுகிறது-

---

ஸா தத் ப⁴ர்த்ருகரவிபூ⁴ஷணம்| ஸ ப⁴ர்த்தாரமிவ ஸம்ப்ராப்தா ஜாநகீ முதி

தாப⁴வத் - க்ருஹீத்வாப்ரேக்ஷமாணாஸா பர்த்து꞉கரவிபூஷணம் | பர்த்தாரமிவஸம்ப்ராப்தா ஜாநகீமுதிதாபவத்." என்கிறபடியே-அத்திருவாழிமோதிரத்தை வாங்கி அதினுடைய கௌரவமும் தன்னுடைய ஆதரமும் தோற்றத் தலைமேலே வைத்துக்கொண்டு, பின்னை அத்தைக் கையிலேயேந்தி, வைத்தகண்மாறுமல் பார்த்துக்கொண்டிருக்கையாலே அத்திருவாழிமோதிரத்தோடுசேர்ந்ததிருக்கைவிரலையும் அத்தோடு சேர்ந்ததிருக்கையையும் அத்தோடுசேர்ந்த திருத்தோள்களையும் நினையாநின்று கொண்டு, அவ்வழியாலே திருமேனியெல்லாவற்றையும் நினைத்து, பாவநாப்ரகர்ஷத்தாலே பெருமாள்

---

ஸா தத் ப⁴ர்த்ருகரவிபூ⁴ஷணம் க்³ருஹீத்வா, ப்ரேக்ஷமாணா-ப்ரகர்ஷே-

ண ஈக்ஷமாணா-பர்த்து꞉கரவிபூஷணம்க்ருஹீத்வா, ப்ரேக்ஷமாணா-ப்ரகர்ஷேண ஈக்ஷமாணா] வைத்தகண் வாங்காதே பார்த்துக் கொண்டிருக்குமவள், [ஸைவம்பூ⁴தா ஜாநகீ ஸா தத் ப⁴ர்த்தாரம் ப்ராப்தேவ முதி³தாப⁴வத்

ஏவம்பூதாஜாநகீ பர்தாரம்ப்ராப்தேவமுதிதாபவத்] ப்ராப்தாவென்றது - ஸம்யக்ப்ராப்தாவென்ருய், ஒரு படுக்கையிலே பெருமாளையடைந்தவளென்றபடி. ஒரு படுக்கையிலே யடைந்தாப்போலே இவள் ஸந்துஷ்டையாகிறபடி சொல்லுகையாலே பெருமாளுடைய திருவாழிமோதிரத்தைக்கண்டபின்பு அவருடைய திருக்கையையும் அத்தாலே திருத்தோளும் அப்படி மேன்மேலும் திவ்யாவயவங்கள் திவ்யமங்கள விக்ரஹம், இவற்றைத்திருவுள்ளத்திலேபாவித்து, முதிதையாளுளென்றுகொள்ளவேணுமென்று கருத்து. இவ்வர்த்தத்தைத் திருவுள்ளம்பற்றி "உச்சிமேல் வைத்துமலர்க்குழலாளாயுகந்தனளால்" என்னுமிவற்றுக்கர்த்தமருளுகிருர் (திருவாழிமோதிரத்தை யித்யாதி). சீதையுமென்றது இப்படி க்லேஶித்தவளென்ருய், அவளுமொருப்படி க்லேஶம் தீர்ந்து உகந்தாளேயென்று ஆஶ்சர்யப்படுகிருரென்று கருத்து. ... (௯)

மூ.—வாராருமுலைமடவாள் வைதேவிதனைக்கண்டு
சீராருந்திறலனுமன் தெரிந்துரைத்த வடையாளம்
பாராரும் புகழ்ப்புதுவைப் பட்டர்பிரான் பாடல்வல்லார்
ஏராரும் வைகுந்தத் திமையவரோ டிருப்பாரே. (௧௦)

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.

---

அவ;—நிகமத்தில் இத்திருமொழிகற்றார்க்குப் பலம் சொல்லித்தலைக் கட்டுகிறார்.

ஸ்வா.—(வாராரித்யாதி) முன்பெல்லாம் நெகிழ்ந்து கிடந்த கச்சு திருக்குழலிலே திருவாழிமோதிரம் சேர்ந்த பாவநாப்ரகர்ஷத்தாலே திருமுலைத்தடங்கள் விம்மிநிறைந்த தென்றுதோற்றுகிறது. "மடவாள்" என்று முறப்பட்ட வொடுக்கமாதல். ஸ்த்ரீத்வமாதல். (வைதேவிதனைக் கண்டு) தேஹநிபந்தநமான ஸ்த்தூலகார்ஸ்யங்களை மதியாத குடிப்பிறப்பையுடையவளை. (தனைக்கண்டு) அந்த: புரகார்யம் தலைக்கட்டுகையாலே ராமதாஸன் என்று தன்னையும் கண்டென்னுதல். இவளைக் கண்டாலல்லது பெருமாளையும் காணவொண்ணாமையாலே இருவரையும் கண்டென்னுதல். (சீராருமித்யாதி) (௧) "ந வஹ்நிஷ்த: வ்யூநா:-நசஸங்குசிதா: பந்தா:"

---

அலங்கரிக்கப் பூமுடித்து ஒருபடுக்கையிலே யிருந்தாப்போலே தோன்றி, பிராட்டி மிகவும் ப்ரீதையானாளென்று ஆஶ்சர்யப்பட்டருளிச் செய்கிறார். .... .... .... .... (௯)

அவ. — நிகமத்தில், இத்திருமொழிகற்றார்க்குப்பலம்சொல்லித் தலைக்கட்டுகிறார்.

வ்யா;—பத்தாம்பாட்டு. (வாராருமித்யாதி) வாரோடு சேர்ந்திருக்கைக்கு யோக்யமாயிருக்கச்செய்தே, இப்போதுவெறும்புறத்திலே யிராநிற்பதான முலையையுடையளாய், விரஹத்தால்வந்த துவட்சியையு முடையளாய்,தேஹத்தில் உபேக்ஷையாலே விதேஹபுத்ரியானமை தோற்றவிருக்கிற பிராட்டியைக்கண்டு. (சீராரும் திறலனுமன்) முதலிகளெல்லாரு முண்டாயிருக்க "இவனே இக்கா

---

அரு;—பத்தாம்பாட்டு. (வாராருமித்யாதி) "சீரென்று-ஜ்ஞாநாதிகளாய், அத்தால் ஆர்-பூர்ணனாய், திறல்-மிடுக்கையுடையவன்" என்று ஶப்தார்த்தம் திருவுள்ளம்பற்றி ஹேது பூர்வகம் தாத்பர்யமருளுகிறார் (முதலிகளித்யாதி). இத்திருமொழியில் திருவடி வார்த்தையாக முடியவில்லாமலே

---

(௧) ரா.

என்னைவேண்டாதசீர். (க) "நத்ஜெயம்கயஞ்ஞநா | ஜௌஷொயசாவி சவ்ய ஹஸ்தாஜெத உமஹிஷிதம்-நத்யஜேயம் கதஞ்சநதோஷோ யத்யபிதஸ்யஸ்யாத் ஸதாமேததகர்ஹிதம்" என்றவர்க்குப்ராண பர்யந்தமாகப் பரியாதசீர். "வத்யதாம்-வத்யதாம்" என்றபரிவர்க்கும் பெருமாள் தமக்கும் ப்ராணனையுண்டாக்கினசீர். (உ) "கிம்கோப மூலம் மநுஜேந்த்ரபுத்ர-கிம் கோப மூலம்மநுஜேந்த்ர புத்ர" என்று இளைய பெருமாள் ஸந்நிதியிலே நிற்கும்படி தம்பதிகளை ஸாரஜ்ஞகமாக்கின சீர். (ஆரும்) நிறையும். ஆஸ்ரயத்திலே சேருவதற்கு முன்னே† ஆர்ந்த தென்னலாயிறேதோற்றுகிறது. (திறல்) ஔஷதபாவதங்கள் நிமித்தமாகச் செய்த ஸாமர்த்யங்களென்னுதல். ஆழியிலுண்டானவிரோதிவர்கங்களை நீக்கிப்போந்த ஸாமர்த்யமென்னுதல். (அநுமன்) வீரத்தழும்புசுமக்கவல்லவன்.

(தெரிந்தித்யாதி) பெருமாளருளிச்செய்தவற்றில்தான் தரித்தவற்றில்சொல்லலாமவற்றில் சொல்லவேண்டுமடையாளமிறே தெரிந்துரைத்ததும். (பாராருமித்யாதி) உபயவிபூதியும் நிறைந்த புகழையும்திருமாளிகையும்பட்டர்பிரானென்கிற திருநாமத்தையுமுடைய ஆழ்வார், பெருமாளுக்கும்நாய்ச்சிமாருக்கும்திருவடிக்குமுண்டான விசேஷகுணங்களைச் சேர்த்தருளிச்செய்த விப்பத்துப்பாட்டையும் ஸாபிப்ராயமாக வல்லார். (ஏராரித்யாதி) எல்லாநன்மைகளும்சேர்

ரியம் செய்யவல்லான்" என்று பெருமாள் திருவுள்ளம்பற்றி அடையாளங்களும் சொல்லித் திருவாழிமோதிரமும் கொடுத்துவிடும்படி ஜ்ஞாநாதி குணங்களால் பரிபூர்ணனாய், நினைத்ததுமுடிக்கவல்ல சக்திமானாயிருக்கிற திருவடி.

(தெரிந்துரைத்தவடையாளம்) பெருமாளருளிச் செய்தபடிகளில் ஒன்றும் தப்பாமல் ஆராய்ந்து பிராட்டிக்கு விஸ்வஸநீயமாக விண்ணப்பம் செய்த வடையாளங்களை. (பாராருமித்யாதி) பூமியெங்கும் நிறைந்த புகழையுடையரான ஸ்ரீவில்லிபுத்தூருக்கு நிர்வாஹகரான பெரியாழ்வாரருளிச்செய்த பாடலானவிப்பத்தை ஸாபிப்ராயமாக வல்லவர்கள். (ஏராருமித்யாதி) எல்லாநன்மைகளும் சேர்ந்த பரமபதத்திலே, (௩) "அடியரோடிருந்தமை" என்கிறபடி

(க) ரா-யு-௧௮-௩. (உ) ரா-கி-௩௩-௪௦. (௩) தி-வாய்-௧௦-௯-௧௧.
† (பா) ஆராய்ந்த.

மிகவேண்டுவது இங்கேயாகையாலே செல்லாநிற்கும். (சீர்) அம்மலைமேல் வர்திக்கிறவர்களும், அம்மலைமேலுண்டான பதார்த்தங்களைப்பக்வமாக்கி, அங்கேயிருந்திறே திருமலையாழ்வாரை(௧)"உன் பொன்னடிவாழ்க" என்று அமுதசெய்யப்பண்ணுவதும். ஆஶ்ரிதர் ஸந்நிதி பண்ணவேணுமென்ற விடத்திலே ஸந்நிதிபண்ணுமவரிறே திருமலையாழ்வாரும். அன்றிக்கே "உன்பொன்னடிவாழ்க" என்கிறது அழகராகவுமாம். இருவர்க்குமுண்டிறே மங்களாசாஸநபரரான வாஶ்ரிதர்க்குப் பரதந்த்ரராகை. இரண்டிடத்திலுமுண்டிறே *பின்னுமாளும் செய்மைகை' எவம் ப்ரகாரமான குணங்களையும், "திருமாலிருஞ்சோலைமலை" என்கிறதிருநாமத்தையுமுடையராயிறே திருமலையாழ்வார் தாமிருப்பது. இனக்குறவர் "பொன்னடிவாழ்க" என்கிறது, "எந்தாய்" என்கிறதிலே ப்ராதாந்யம். இங்குத் திருமாலிருஞ்சோலையென்கையாலே திருமலையாழ்வார்மேலே ப்ராதாந்யம். அதுக்கடி-அழகர்க்கு(௨)"சென்றால்குடையாம்" என்கிறபடியே இஷ்டவிநியோகார்ஹமாயிருக்கையிறே. "தென்" என்று திக்காதல், அழகாதல், தென்னவென்கிற ஆளப்பமாதல். மாலும் இருமையும்-பெருமையாய், மிக்க பெருமையென்னுதல், மாலினுடைய பெரியசோலையென்னுதல், *மயல்மிகு பொழிலாய், மாலுக்கு மாலைவிளைக்குமென்னுதல். ... ... ... (௨)

---

*புனத்தினைக்கிள்ளிப் புதுவவிக்காட்டுகிற குறவரும் "உன் பொன்னடிவாழ்க" என்று மங்களாசாஸநம் பண்ணும்படியிறே நிலத்தின் மிதிதானிருப்பது. (சீர்த்தென்திருமாலிருஞ்சோலையே) இப்படியிருந்துள்ள கௌரவத்தையுடைத்தாய், அழகியதாயிருந்துள்ள திருமாலிருஞ்சோலையென்கை.

---

உட்கொண்டு ப்ரமாணம் காட்டுகிறார் (புனத்தினையித்யாதி). புனத்தில் தினையைமுறித்து ஹவிஸ்ஸாகக்காட்டி, புதியதமுது செய்யப் பண்ணியென்று பாசுரார்த்தம். (தினை) தாந்ய விசேஷம். இத்தால் ப்ரயோஜநாந்தரத்துக்கும் கூட எம்பெருமானைப் பற்றவழியாத குறவருங்கூட அந்நில ஸ்வபாவத்தாலே மங்களாசாஸநம் பண்ணும்படியானால், பகவத்விஷயத்தில் ப்ரயோஜநாந்தரங்களைக் கொள்ளுமவர்களுக்குச் சொல்லவேண்டாவிறே யென்று தாத்பர்யம் சொல்லிற்றாயிற்று. தென்னென்றதினர்த்தம் (அழகியதாய்) என்றது. (௨)

---

(௧) ௫-௩-௩. (௨) க-திருவ-௫-௩.

மூ.—தக்கார்மிக்கார்களைச் சஞ்சலஞ்செய்யுஞ் சலவரைத்
தெக்காநெறியே போக்குவிக்குஞ் செல்வன்பொன்மலை
எக்காலமுஞ் சென்று சேவித்திருக்குமடியரை
அக்காநெறியைமாற்றுந் தண்மாலிருஞ்சோலையே. (ங)

ஸ்வா;—மூன்றாம்பாட்டு. (தக்காரித்யாதி) ஈஸ்வரனோடொக்கக்ருபையொத்திருக்குமவர்கள். (தக்கார்) ஈஸ்வரனுக்குத் தகுதியானவர்கள். அதாவது-நினைவொன்றாயிருக்கை. ஸர்வாத்மாக்களும் உஜ்ஜீவிக்கவேணுமென்கிற க்ருபையொத்திருக்கை. (மிக்கார்களை) ஈஸ்வரனிலும்பிராட்டியிலும் க்ருபைமிக்கிருக்கை. அதாவது-புருஷகாரமாவார்-கைவிட்டவர்களைக் கொள்ளுமவர்களிறே. (க)"அன்னையாயத்தனையென்னையாண்டிடுந் தன்மையான் சடகோபனென் நம்பியே" என்று ஈஸ்வரனும் பிராட்டியும் செய்யுங் காரிய

வ்யா;—மூன்றாம்பாட்டு. (தக்கார்) ஈஸ்வரனோடொக்க க்ருபையொத்திருக்குமவர்கள். (தக்கார்) ஈஸ்வரனுக்குத் தகுதியானவர்கள். அதாவது-நினைவு ஒன்றாயிருக்கை. "ஸர்வாத்மாக்களுமுஜ்ஜீவிக்கவேணும்" என்கிற க்ருபை ஒத்திருக்கை. (மிக்கார்களை) அவனைப்போலே ஸ்வதந்த்ரராய், அபராதங்களைக் கண்டவாறே (உ)"க்ஷிபாமி-க்ஷிபாமி"(ங)"நக்ஷமாமி-நக்ஷமாமி," என்கையன்றிக்கே, எப்போதுமொக்கஅநுக்ரஹ சீலராயிருக்கையாலே அவனிலுங் காட்டில் அதிகராயிருக்குமவர்களை. ஆகையிறே-இவர்களைப் பற்றுமிடத்தில் புருஷகார நிரபேக்ஷமாகப் பற்றலாயிருக்கிறது.

அரு;—மூன்றாம்பாட்டு. (தக்காரித்யாதி) "தக்கார் மிக்கார்கள்" என்றதுக்கு துல்யரென்றும் அதிகரென்றும் தோன்றுகையாலே, அது சேராமையாலே ஓராகாரத்தாலே துல்யரென்றும், ஓராகாரத்தாலே அதிகரென்றும்விவக்ஷித்து தௌல்யத்தைக் காட்டுகிறார் (ஈஸ்வரனோடித்யாதி). (ஈஸ்வரனோடொக்க) என்றது - ஈஸ்வரனோடொக்கும்படியாக வென்கை. புநஃ ப்ரதீகம் க்ரஹித்துபாப்தார்த்தமருளுகிறார் (தக்காரித்யாதி). தகுதியானவரென்று ஶப்தார்த்தமாகில் க்ருபை யொத்திருக்குமவர்களென்று சொன்னபடியெங்ஙனேயென்னவிவரிக்கிறார் (அதாவதித்யாதிவாக்யத்வயத்தாலே). உக்தார்த்தத்தை உபபத்தியாலே த்ருடீகரிக்கிறார் (ஆகையிறேயித்யாதி. எப்போது மொக்கவநுக்ரஹஶீலரென்கைக்கு ப்ரமாணங்களைக்காட்டுகிறார் (சலிப்பின்றியித்யாதி)'

(க) கண்ணி-எ. (உ) கீ. (ங) வராஹபு.

மும்செய்து, தாம்செய்யும் காரியமும் செய்கையாலே மிக்காரென்கிறது. (க) "வருமையுமிம்மையும்நன்மையளிக்கும் பிராக்களே" என்று இம்மைக்கும் மறுமைக்கும் ரக்ஷிப்பாரிவர்களிறே. ஈஶ்வரனருளிலும் இவர்களருளிறே நன்றாயிருப்பது. (உ) "நல்லருளாயிரவர்நலனேந்தும் திருவல்லவாழ்" என்னக்கடவதிறே.

(சஞ்சலம் செய்யும் சலவரை) பகவத் விஷயத்திலே வைத்த நெஞ்சைக் கலங்கப்பண்ணும் க்ருத்ரிமரை. ஶ்ரீதண்டகாரண்யவாஸிகளான ருஷிகள் பகவத்த்யாநம் குலைந்து (ங) "வநஹிவஶ்ஶரீராணி-ஏஹிபஶ்யஶரீராணி" என்று உடம்புக்கு மன்றாடும்படியாய்த்திறே (சலவர்) அநுகூலரைப்போலே வந்து ப்ராதிகூல்யம்

(ச) "சலிப்பின்றி யாண்டெம்மைச் சன்மசன்மாந்தரம் காப்பர்" என்கிறபடியே-ஆஶ்ரயித்தவர்களைச்சலமறநோக்குவாரும்(க)"வருமையுமிம்மையும் நன்மையளிக்கும் பிராக்கள்" என்கிறபடியே இம்மைக்கும் மறுமைக்கும் ரக்ஷிப்பாரும் இவர்களேயிறே, ஆகையால், ஈஶ்வரனருளிலும் இவர்களருளிறே நன்றாயிருப்பது. (உ) "நல்லருளாயிரவர் நலனேந்தும்திருவல்லவாழ்" என்னக்கடவதிறே.

(சஞ்சலஞ்செய்யும் சலவரை) பகவத்விஷயத்திலே வைத்த நெஞ்சைக் கலங்கப்பண்ணும் க்ருத்ரிமரை. ஶ்ரீதண்டகாரண்யவாஸிகளான ருஷிகள் பகவத்த்யாநம் குலைந்து (ங) "வநஹிவஶ்ஶரீராணி-ஏஹிபஶ்யசரீராணி" என்று உடம்புக்குமன்றாடும்படியாய்த்திறே-ராக்ஷஸர்கள் கலக்கினபடி. (சலவர்) அநுகூலரைப் போலேயிருந்து ப்ராதிகூல்யம் பண்ணுமவர்கள். (தெக்காநெறியே) நரகத்

ப்ரக்ருதோபஸம்ஹாரம் (ஆகையாலித்யாதி). இவர்களருள் நல்லதென்கைக்கு ஸம்வாதமருளுகிறார் (நல்லருளித்யாதி).

தேக்கா நெறியே போக்குவிக்கைக்கு ஹேதுவாக வேண்டி, சித்த சாஞ்சால்ய பரமாக்கி ஶப்தார்த்த மருளுகிறார் (பகவத் விஷயத்திலித்யாதி). இப்படிகலங்கப்பண்ணின விடமுண்டோ வென்னவருளுகிறார் (ஶ்ரீதண்டகேத்யாதி) (சலவர்). ச(ஶ)லவான்கள்; அத்தால் கபடிகளென்று விவக்ஷித்துத் தாத்பர்யமருளுகிறார் (அநுகூலரையித்யாதி). தெக்காவென்று-தெற்குத்திக்குக்குப் பாலகனான யமனைச் சொல்லுகிறதாய், தத்ஸம்பந்தியான நெறி-மார்கமென்று ஶப்தார்த்தம் திருவுள்ளம் பற்றித்தாத்பர்யமருளுகிறார் (நரகத்துக்

(க)தி-வாய்-ங-எ-கு. (உ) தி-வாய்-கு-கூ-கO. (ங)ரா-ஆ. (ச) தி-வாய்-ங-எ-கூ.

பண்ணுமவர்கள். (தெக்காநெறியே) நரகத்துக்குப்போம் வழியே. (போக்குவிக்கும்) மீட்சியில்லை. (செல்வன்பொன்மலை) இப்படி போம்படி பண்ணுகைக்குஹேது ஶ்ரியஃபதியாகையாலே. (க) "அசுரர்க்குத் தீங்கிழைக்கும் திருமால்" என்னக்கடவதிறே ராவணாதிகளைக் கொல்லுகைக்குத் தபஸ்ஸு பண்ணுமவனிறே. (பொன்மலை) ஶ்ரியஃபதிவர்த்திக்கிற ஶ்லாக்யமான திருமலை.

(எக்காலமும் சென்று சேவித்திருக்குமடியரை) அநந்ய ப்ரயோஜநராய்ப் புறம்பு அந்யபரதையில்லாமையாலே சேவித்திருப்பர்கள். ப்ரயோஜநாந்தரபரர்க்கிறே காலநியதி உள்ளது. இவர்க

---

துக்குப்போம் வழியே. யமபுரம் தக்ஷிணதிக்கிலே யாகையாலும், நரகத்துக்குப் போவார் போவது அவ்வழியே யாகையாலும், "தெக்காநெறி" என்று - யாம்யமார்க்கத்தைச் சொல்லுகிறது. (போக்குவிக்கும்) மீட்சியில்லை. (செல்வன்). இப்படி போம்படிபண்ணுகைக்கு ஹேது ஶ்ரியஃபதியாகையிறே. (க) "அசுரர்க்குத் தீங்கிழைக்கும் திருமால்" என்னக்கடவதிறே. ராவணாதிகளைக் கொல்லுகைக்கு தபஸ்ஸு பண்ணுமவனிறே. (பொன்மலை) இப்படியிருக்கிறவன் வர்த்திக்கிற ஶ்லாக்யமான திருமலை.

(எக்காலமுமித்யாதி) அநந்யப்ரயோஜநராய், புறம்பு அந்யபரதையில்லாமையாலே ஸர்வகாலமும் சென்று ஸேவித்திருப்பர்கள். ப்ரயோஜநாந்தரபரர்க்கிறே காலநியதியுள்ளது; இவர்களு

---

கித்யாதி வாக்யத்வயத்தாலே). "நெறியேபோக்குவிக்கும்" என்றதுக்கு நரகத்தைப்ராபிப்பிக்குமென்றாய், அதில்வர்த மாநார்த்தமருளுகிறார் (மீட்சியில்லை) என்று: (அசுரர்க்குத் தீங்கிழைக்கும்) என்றதுக்கு (ராவணேத்யாதி). (௨) "[illegible] ஹரிஃ - ஸ்வர்கஞ்துர்கதிமபவர்கிகபதம்ஸர்வஞ்சகுர்வந் ஹரிஃ" என்றதநுஸந்தேயம்.

(புறம்பு அந்யபரதையில்லாமையாலே) என்றதுக்கு பாஹ்யபதார்த்தங்களிலே ப்ரக்ருதிவாஸநையாலே உண்டான வாஸக்தியில்லாமையாலேயென்று கருத்து. "[illegible] - நப்ரதோஷேஹரிம் பஶ்யேத்" என்றிருக்க, ஸர்வகாலமென்னக்கூடுமோவென்னவருளுகிறார் (ப்ரயோஜநாந்தரேத்யாதி). "அடியரை" என்றது ஹேத்வபிப்ராயமென்கிறார்

---

(க) தி-வாய்-௩-ரு-௨. (௨) ப்ரீஸ்த.

ளுக்கு காலநியதியில்லை. அதுக்கடி அடியாராகையாலே. (க)"எழுவார் விடைகொள்வாரீன் துழாயானை வழுவாவகை நினைந்து வைகல் தொழுவார்" என்னக்கடவதிறே. (அக்கான்நெறியைமாற்றும்) அக்காட்டு வழியை மாற்றும். *பாவக்காடிறே. (தண்மாவிருஞ்சோலையே) அழகர் ப்ரதிகூலரைத் தெக்கானெறியே போக்குவிப்பர். திருமலையாழ்வார் அநுகூலரைஅக்கானெறியைமாற்றுவிப்பர். (உ) "பிணிவீயுமாறு செய்வான்திருவேங்கடத்தாயன்" (ரு)"சமன் கொள்வீடுதரும் தடங்குன்றம்" என்னக்கடவதிறே. அழகரைப் பற்றுகையிலும் * அயன்மலையடைவததுவிறே கருமம்.

---

க்கு அது இல்லை; அதுக்கடி - * அடியாராகையிறே. (க) "எழுவார் விடைகொள்வா ரீன்றுழாயானை, வழுவாவகை நினைந்துவைகல் தொழுவார்" என்னக்கடவதிறே. (அக்கான் நெறியை மாற்றும்) அக்காட்டு வழியை மாற்றும். * பாவக்காடிறே. (தண்மாவிருஞ்சோலையே) தட்பமாவது-ஸம்ஸாரதாபத்தை ஆற்றுமதாயிருக்கை. அழகர், ப்ரதிகூலரை *தெக்காநெறியே போக்குவிப்பர்; திருமலையாழ்வார், அநுகூலரை*அக்கானெறியை மாற்றுவிப்பர். (உ) "பிணிவீயுமாறு செய்வான் திருவேங்கடத்தாயன்". (ரு)"சமன் கொள்வீடுதரும் தடங்குன்றம்" என்னக்கடவதிறே. அழகரைப் பற்றுகையிலும் * அயன்மலையடைவததுவிறே கருமம். .... (ரு)

---

(அதுக்கித்யாதி). இத்தால் "[illegible] – அத்யந்தபக்தி யுக்தாநாம் நஶாஸ்த்ரம் நைவசக்ரமஃ" என்கிறபடியே ப்ரீத்யதி ஶயத்தாலே கைங்கர்யம் பண்ணுமவர்களுக்கு ஒரு கால நியதியில்லையென்றதாயிற்று. உக்தார்த்தேப்ரமாணம் (எழுவாரித்யாதி). (வழுவாவகை) நழுவாவகை. தச்சப்தம்ப்ரஸித்தித்யோதகமாகையாலேப்ரமாணப்ரஸித்தியைக்காட்டுகிறார்(பாவக்காடிறே)என்று.ப்ரதிகூலரைத்தெக்கான் நெறியேபோக்குவிக்கையாவது- ஆஶ்ரிதவிரோதிநிரஸநம் பண்ணுகையென்று திருவுள்ளம்பற்றி,பிணியும் ஆஶ்ரித விரோதியாகையாலே அதுக்கு ப்ரமாணமருளுகிறார் (பிணிவீயுமாறித்யாதி). அநுகூலரை அக்கானெறியை மாற்றுகையாவது-பரபங்களைப்போக்கிப் பரமபதத்தைக் கொடுக்கையென்று விவக்ஷித்து அதுக்கு ப்ரமாணம் (சமன்கொளித்யாதி). இப்பாட்டிலர்த்தத்தை யெல்லாம் திருவுள்ளம்பற்றிசுடுபெடுகிறார் (அழகரையித்யாதி). ... ... (ரு)

---

(க) க-திருவ-உகூ. (உ) தி-வாய்-ரு-ரு-சு. (ரு) தி-வாய்-ரு-ரு-எ.

மூ;—ஆனுயர்கூடி யமைத்தவிழவை யமரர்தம்
கோனார்க்கொழியக் கோவர்த்தனத்துச் செய்தான்மலை
வானாட்டினின்று மாமலர்க்கற்பகத்தொத்திழி
தேனிழிபாயுந் தென்றிருமாலிருஞ்சோலையே. .... (௪)

ஸ்வா;—நாலாம்பாட்டு. (ஆனுயரித்யாதி) பசுமேய்க்குமிடையர் திரண்டு.(க)"ஆனானுயன்" என்னக்கடவதிறே இவன் தன்

வ்யா;—நாலாம்பாட்டு. (ஆனுயரித்யாதி) கோ(மா)தநரான இடையர், வர்ஷார்த்தமாக வத்ஸரந்தோறும் ஒருதிவஸம் இந்த்ரனை ஆராதித்துப்போரக் கடவர்களாய், அதுக்குடலாக அவர்கள், வாசல்கள்தோறும் ஆக்கியெடுத்துச் செல்லுகிறபடியைக்கண்டு, "நீங்கள்செய்கிறதென்?" என்று கேட்க; "வர்ஷார்த்தமாக இந்த்ரனுக்குச் சோறிடுகையாயிருக்கும்" என்ன; "நாம் பிறந்து வளருகிற வூரிலே ஒரு த்ரவ்யத்தை தேவதாந்தரம் கொள்ளுகை யாவதென்?" என்று நினைத்து அத்தைவிலக்குகைக்காக, "இந்த்ரனாகிறவனெவன், அவனை நீங்கள் கண்டறிவதுண்டோ, அவன்றான் நீங்களிட்ட சோற்றை உண்ணக்கண்டறிவீகோளோ, ஒன்று மறியீகோளாயிருந்திகோள்; ஆனபின்பு, மேகங்களும் வந்து படிந்து வர்ஷிக்கும்ஸ்த்தாநமாய், என்றுமொக்கப் பசுக்களுக்குப் புல்லும் தண்ணீருமுண்டாய், நமக்கு மழைக்கும் காற்றுக்கு மொதுங்கிடமாய், கோக்களைவர்த்தி(யி)ப்பிக்கையாலே"கோவர்த்தநம்"என்னும் பேரையுடைத்தாயிருக்கிற இம்மலையன்றோ நமக்குத்தெய்வம், இதின் முன்னே நீங்கள் சமைத்தவையெல்லாம் கொண்டுவந்திடுங்கோள்" என்ன; பஞ்சலக்ஷம் குடியிலுள்ள இடையரெல்லாரும்

அரு;—நாலாம்பாட்டு. (ஆனுயரித்யாதி) இடையரெல்லாரும் இந்த்ராராதநரூபமானவிழவைக்கூட்டிக்கொள்ளுகைக்கு நிமித்தத்தையும், க்ருஷ்ணன் அவனுக்குத் தவிர்த்து மலைக்கிடுவித்தப்ரசாரத்தையும் பரக்க உபபாதியா நின்று கொண்டு தாத்பர்யமருளுகிறார் (கோதநரித்யாதி). ஆயரென்னவமைந்திருக்க, ஆனென்று விசேஷித்ததுக்குக் கருத்து (கோதநரான) என்றது. (கொண்டு வந்திடுங்கோள் என்ன)என்கிறவிதுக்கு கோவர்த்தநத்துக்காம்படி செய்தவென்றத்தோடன்வயம், கூடியென்றதினர்த்தம் (பஞ்சலக்ஷத்யாதி).

(க) தி-வாய்-௧-௮-௮.

னையும். (அமைத்தவிழவை) இடையர்கூடிச் செய்த உத்ஸவத்தை. இதில் உடன்படாதான்க்ருஷ்ணனொருவனுமிறே. அதுக்கடி, தான் பிறந்து இவர்கள் கொடாதபோது, உங்களளவிலே யதிகரித்து அஸாதாரண விக்ரஹத்திலே கைக்கொள்ளும் பதார்த்தங்களை தேவதாந்தர்யாமித்வாரா கைக்கொள்ளுகை திருவுள்ளத்துக்கு அஸஹ்யமாகையாலே. (அமரர்தங்கோனார்க்கொழிய) அமரரென்று தேவஜாதி. கோனென்று இவர்களைக்கும்பிடு கொள்ளுகிறவர். (ஒழிய) க்ருஷ்ணன் நந்தகோபரையழைத்து "பசுக்களுக்கு இந்த மலையிலேயன்றோ புல்லும் தண்ணீரும்; இது கோவர்த்தநமென்று பேராகைக்கடி, கோவை வர்த்திப்பிக்கு மென்றன்றோ? ஆனபின்பு அவனுக்கிடத் தவிர்ந்து இந்தமலைக்கிடப்பாருங்கோள்"என்றருளிச் செய்ய, அவருமதத்தைக்கேட்டு இடையரையழைத்து "இந்தச் சிறுப்பிள்ளைக்குள்ள வறிவும் நமக்கின்றிக்கேயிருந்தது, இவன் சொன்னப்போலே செய்யுங்கோள்" என்ன; அப்படியே செய்கிறோமென்று மலையின்முன்னே கொண்டுபோய்க் குவித்தார்கள். (கோவர்த்தநத்துச் செய்தான் மலை) ❋ அங்கொரு பூத வடிவு கொண்டு அமுதுசெய்து இடையரோடுங்கூட நின்று வேண்டும் வரங்களும் வேண்டிக்கொண்டவன் வர்திக்கிற தேசம்.

---

திரண்டு இந்த்ரார்த்தமாகக் கல்பித்த உத்ஸவத்தை, முப்பத்துமுக்கோடி தேவர்களையும் கும்பிடு கொள்ளு மேற்றத்தையுடையராய், தம்மைப்போரப்பொலிய நினைத்திருக்குமவர்க்கொழிய, அசேதநமாயிருப்பதொரு பர்வதமான கோவர்த்தநத்துக்காம்படி செய்தவனுடையமலை. அப்படி தன்னபிமாநத்திலே ஒதுங்கினவர்களை அந்யசேஷமாகாதபடி நோக்கி, திருமலையாழ்வார்க்கு சேஷமாக்குகைக்காக அவனெழுந்தருளியிருக்கிற தேசமென்கை.

---

அமைத்த விழவை யென்றதினர்த்தம் (இந்த்ரார்தமாகவித்யாதி). அமரர்தம் கோனென்றதினர்த்தம் (முப்பதித்யாதி). கோனென்றத - பூஜாயாம்பஹுவசநமாகையாலேஅத்யைருளுகிறார் (தம்மையித்யாதி). "கோவர்த்தனத்து" என்றவிடத்தில் சதுர்த்தி விபக்திலுப்தமாயிருக்கிறதென்று திருவுள்ளம்பற்றி அர்த்தமருளுகிறார் ( அசேதநேத்யாதி ). "ஆம்படி" என்றதத்த்யாஹார்யம். க்ருஷ்ணன் மலையென்னவமைந்திருக்கவும், இப்படிவிசேஷித்ததுக்கு ஹார்த பாவத்தையருளுகிறார் (அப்படியித்யாதி).

(வானாட்டினின்றும் மாமலர் கற்பகத்தொத்திழி தேனுழு பாயும்)இந்த்ரன் கல்வர்ஷம்பொழிவித்தவபராதத்துக்கும்*என்று தன் தேவிக்கன்றின்பப் பூவீயாத வபராதத்துக்கும் தோற்றுப் பணிப்பூவிடுகிறபடி. வானென்று - ஸ்வர்க்கத்தில் பெரிய பூக்களையுடைத்தான கற்பகத்தில் பூங்கொத்துக்களின் தேன் ஆறாய்ப் பாயுமழகிய பரப்பையுடைத்தான திருமலை.

தன் ஶிஷ்யன் புறம்பொருவராலே திருந்திவர்திக்கப்புக்கால் ஆசார்யன் நினைக்கும்படி (க)"யானேநீ யென்னுடைமையும்நீயே" என்றிருக்கிறவனாகையாலே தன்ஸமர்பணத்தின்படி கைக்கொண்டானென்றிருக்கக் கடவன். அன்றிக்கே நாம் தத்விஷயத்திலே சேர்ந்ததுக்கு பலம் (௨)"அடியார்க் கென்னையாட்படுத்தவிமலன்" என்றுஈஶ்வரன் நிலையையறிந்து,ஶிஷ்யன்தானும்"அடியார்க்கென்னையாட்படுத்தாய்"என்றுப்ரார்த்திக்குமவனாகையாலே மூவர் நினைவாலும் வெறுப்பில்லை. தன் அஸந்நிதியில் புறம்பேதிருந்தினுகில், திருமதிள் திருநந்தவநம் தான் குறையாக்கியிட்டு வைத்துப் போனால் அத்தை வேறே ஒருதார்மிகன் தலைக்கட்டினால் தான் வந்து அவனையுகக்குமாபோலே உகக்கக்கடவன். திருத்தமாட்டாதவர்கள் பக்கலிலே போனால் "இவ்வாத்மாவை எம்பெருமான் நம்மோடே சேர்த்தெடுக்க நினைத்தானென்றிருந்தோம்;இது இப்படி தட்டுப்படுவதே?" என்று அவன் நாஶத்துக்கு நோகக் கடவன். .... .... .... .... ... (௪)

---

(வானாட்டிவித்யாதி) ஸ்வர்க்கலோகத்தில் நின்றும், பெரிய பூக்களையுடைத்தான கல்பகத்தினுடைய பூங்கொத்துக்களினின்றும் கீழ்நோக்கிப்ரவஹியாநின்றுள்ள தேனானது ஆறாய்க்கொண்டு பரம்பி ஓடாநிற்கு மழகையுடைய திருமாலிருஞ் சோலையென்கை.

---

"வானாட்டில்" என்றவல்லொத்து மெல்லொத்தாய், வானாடென்றும். நாட்டினின்றும் என்றவிடத்திலும் மெல்லொத்தாயிருக்கிற தென்று திருவுள்ளம்பற்றி ஶப்தார்த்தமருளுகிறார் (ஸ்வர்கேத்யாதி), தொத்தென்றதின்ர்த்தம் (பூங்கொத்துக்களில்) என்றது. ... ... (௪)

---

(க) தி-வாய்-௨-௯-௯. (௨) அமல-௧.

மூ.—ஒருவாரணம் பணிகொண்டவன் பொய்கையிற் கஞ்சன்ற
னொருவாரண முயிருண்டவன்சென் றுறையுமலை
கருவாரணந் தன்பிடிதுறந்தோடக் கடல்வண்ணன்
திருவாணைகூறத்திரியுந் தண்மாலிருஞ்சோலையே. (ரு)

---

ஸ்வா;—அஞ்சாம்பாட்டு. (ஒருவாரணமித்யாதி) ஜ்ஞாந
மும் பக்தியும் விரக்தியும் பூர்ணமாக வுடைத்தாகையாலே அத்
விதீயமானஸ்ரீகஜேந்த்ராழ்வானை.(பணிகொண்டவன்)பூவில்செவ்வி

---

வ்யா;—அஞ்சாம்பாட்டு. (ஒருவாரணம் பணிகொண்டவன்
பொய்கையில்) ஶாபத்தாலே கஜயோநியிலே பிறந்திருக்கச் செய்
தேயும், பூர்வஜந்ம ஸ்ம்ருதி குலையாமையாலே, மிகவும் பகவத்பக்
தியையுடைத்தாய் திருப்பள்ளித்தாமம் பறித்திட்டுத் திரியாநிற்க,
ஜகத்திலே ஒருபூமலர் கிடையாதபடி வர்ஷாபாவமாய் வரண்ட
வளவிலே, "எங்கேயொரு பூக்காணலாம்" என்றுதேடித் திரியச்
செய்தே (க) "மெய்ம்மாம் பூம்பொழிற் பொய்கை" என்கிறபடி
யே தூரத்திலே ஒரு குளிர்ந்த சோலையும் பூத்த பொய்கையுமாய்த்
தோற்றக்கண்டு ஓடிச்சென்று "உள்ளே துஷ்டஸத்வங் கிடக்கிற
தென்றறியாமலிழிந்து" (உ)"காமருபொய்கை வைகுதாமரைவாங்
கியவேழம்" என்கிறபடியே தன் அபிநிவேசாநுகுணமாக பூவை
வாரிப்பறித்துக் கரையிலே யேறுவதற்கு முன்னே, நெடுங்கால
மெல்லாம் "நம் சாபமோக்ஷத்துக்கு ஒரு கறையடி காணவல்
லோமே" என்று கிடக்கிறதொரு முதலை வந்து காலைப் பிடித்துக்
கொள்ளுகையாலே,அதுநீர்க்கிழுக்க, தான் கரைக்கிழுக்க, இங்ஙனே

---

அரு;—அஞ்சாம்பாட்டு (ஒருவாரணம்) "ஒருவாரணத்தைப் பொய்கை
யில் பணிகொண்டவன்" என்றந்வயம் திருவுள்ளம்பற்றி, திர்யக்கானவானை
பணிசெய்கைக்கு நிமித்தத்தையும் அதுபொய்கையிலே வருகைக்கு ப்ரஸக்
தியையும் ஒருவென்றதுக்குத் தாத்பர்யமாக வுபபாதிக்கிறார் (ஶாபத்தாலேயி
த்யாதி). (திருப்பள்ளித்தாமம்) என்று திருத்துழாய். இத்தைஸமர்பிக்கை-
கைங்கர்யங்களுக்கெல்லா முபலக்ஷணம். (கறையடி)என்றது-கறையென்று
உரலாய், அதுபோன்ற அடியையுடைத்தானதென்றும், ஆனையைச்சொல்லு

---

(க) தி-வாய்-ந-ரு-க. (உ) தி-மொ-ரு-அ-ந.

குலைவதற்குமுன்னேவந்து கைக்கொண்டவன். பணிகொண்டது தான் பரமபதத்தேயோ வென்னில், அங்கன்று - பொய்கையிலே. இத்தால்தேஹதோஷமும்பாராரென்கிறது.(க)"உம்பராலறியலா காவொளியுளாரானைக்காகி வந்தார், நம்பரமாய துண்டே நாய்க ளோம் சிறுமையோரா"(உ)"ஒப்பிலேனாகிலும் நின்னடைந்தேனு னைக்கு நீயருள் செய்தமையால்" என்னக்கடவதிறே. திருக்கச்சி நம்பி அருளாளப்பெருமாள் திருவடிகளிலேசென்று"தேவரீர் திரு வுள்ளத்துக்கு உகந்ததொரு திருநாமம் தந்தருளவேணும்"என்று விண்ணப்பம் † செய்தவநந்தரத்திலே "ஸ்ரீகஜேந்த்ரதாஸன் என் றழைக்கக்கடவோம்" என்றருளிச்செய்தார்.

(கஞ்சன்தனொருவாரணமுயிருண்டவன்) இங்கு ஒருவாரண மென்றது பாதகத்திலுறைப்புத்தோற்ற. கஞ்சன்தனொருவாரண

---

நெடுங்காலம் நின்றலைந்து தன்னாற்செய்யலாவ தற்றவாறே, திரு வடிகளை நினைத்துக்கூப்பிட்டதோரானையை, அந்தத்வரி வழியே அதித்வரையோடே அதுஇடர்பட்ட பொய்கையிலே சென்று அம் முதலையின் வாயினின்றும் ஆனையை விடுவித்து, அதின் கையிற்பூ செவ்வியழியாமல் திருவடிகளிலே இடுவித்துக்கொண்டு அடிமை கொண்டவன்.

(கஞ்சனித்யாதி) (ங) "தீயபுந்திக்கஞ்சன்" என்கிறபடியே - துர்ப்புத்தியான கம்ஸன், ஆஸுர ப்ரக்ருதிகளை ப்ரச்சந்நரூபரா க்கி வரவிட்டு பஹுமுகமாக நலியப்பார்த்தவளவில், வந்தவர்க ளொருவரும் விசேஷம்சொல்ல மீண்டுசெல்வரொருவரைக் காணா மையாலே, "இனி இதுகொண்டு இவனைவெல்லப்போகாது" என் று "வில்விழவுக்கென்று அழைத்து நலியக்கடவோம்" என் று, தன்னுடைய மந்த்ரிகளில் அநுகூலரான அக்ரூரரை வர

---

கிறது. (பொய்கையிலே) என்றவநந்தரம் "சென்று" என்று ஒருபதத்தையத் த்யாஹரித்து எம்பெருமான்வரவுக்கு ப்ரஸக்திபூர்வகம் தாத்பர்யமருளுகிறார் (அந்தவித்யாதி). பணிகொண்டப்ரகாரத்தை யருளிச்செய்துகொண்டு ஸப் தார்த்தமருளுகிறார் (முதலையினித்யாதி).

கஞ்சனென்னவமைந்திருக்க, "தன்" என்று விசேஷித்ததின் கருத்தை ப்ரமாணபூர்வகமருளுகிறார் (தீயவித்யாதி). கம்ஸனு டையவானையினுயிரு ண்கைக்கு ப்ரஸக்தியேதென்ன வருளுகிறார் (அஸுரேத்யாதி). நிறுத்திவை

---

(க) திருமாலை-உஅ. (உ) ச-கO-க. (ங) உ-உ-ரு.

மென்கையாலே-ஆனைக்குபாதகத்வம் ப்ரக்ருதியாயிருக்கச்செய்தே யும் ஔஷதங்களையிட்டு மதமுதிதமாம்படி பண்ணுவிக்கை. ஒன் றுக்கு ப்ராண ப்ரதாநம்பண்ணி ஒன்றின் ப்ராணனை அபஹரித்த வன். (சென்றுறையும் மலை) ஆநுகூல்ய முடையவானையை ரக்ஷித்து ப்ராதிகூல்யம்பண்ணினவானையை நிரஸித்தவன்வர்திக்கிற தேசமாகையாலே அநுகூலமானவானைகளெல்லாம் சேர்ந்ததேசம்.

---

விட, அவரும் வந்தழைத்துக் கொண்டு போகா நிற்கச்செய்தே, வழியிலே நலிவதாக மதகரமான த்ரவ்யங்களைத் தீற்றிப்பிச்சே ற்றி (க) "புகுவாய் நின்றபோதகம்வீழ்" என்கிறபடியே-புகுகிற வாசலிலே நிறுத்திவைத்ததோரானையை மதியாமல்சென்று அடர் த்து அதினுடைய கொம்புகளைப் பிடுங்கி ப்ராணனை முடித்தவன். (சென்றுறையும்மலை) தன்னுகப்பெல்லாம் தோற்றும்படி வந்து, (உ) "நங்கள் குன்றம்கைவிடான்" என்கிறபடியே நித்யவாஸம்பண் ணுகிறமலை. (கருவாரணமித்யாதி) ஆநுகூல்யமுடையதோரானையை ரக்ஷித்து, ப்ராதிகூல்யம பண்ணின தோரானையை நிரஸித்தவன் வர்த்திக்கிற தேசமாகையாலே, அநுகூலமான ஆனைகளெல்லாம் வர்த்திக்கும் தேசமாய்த்து. (ந) "மழக்களிற்றினஞ்சேர் மாலிருஞ் சோலை" என்னக்கடவதிறே.

---

த்த வென்றுமளவால் ஒருவென்றதின் தாத்பர்யமானவானையின் கொடுமை சொல்லிற்றென்று கண்டுகொள்வது. உயிருண்டப்ரகாரத்தை யருளுகிருர் (மதியாமலித்யாதி). உறையும்மலையென்றபோதே செல்லுகை அர்த்தஸி த்தமாயிருக்கவும், சென்றென்றதுக்குக் கருத்தென்னென்னவருளுகிருர் (தன் னுகப்பெல்லாமித்யாதி), உகப்பென்றதுக்கு அநுகூலமானவானையைப் பணி கொண்டு ப்ரதிகூலமான வானையை முடிக்கையாலுண்டான ஹர்ஷமென்று கருத்து. "உறையும்" என்றவிடத்தில் வர்த்தமாநார்த்தத்தை ப்ரமாணபூர்வக மருளுகிருர் (நங்களித்யாதி). திருமலையிலேயிருக்குமானைகள் திர்யக்ஜாதீயங்க ளாகையாலே இவைகளுக்குத் திருவானைகூறவும், அத்தைகேட்டுமீளவும் கூறும்படி யென்னென்னவதுக்கு ஹேதுபூர்வகம் பரிஹாரத்தை யருளுகிருர் (ஆநுகூல்யமித்யாதி). இத்தால் ஒருவாரணமென்றது ஜாத்யபிப்ராயமாய், இவ்விடத்திலானைகளெல்லாம பகவத்பக்தியுக்தங்களென்ற தாயிற்று.

---

(க) தி-மொ-௬ ரு-௬. (௨) தி-வாய்-௧௦-௭-௪-

(கருவாரணம் தன் பிடிதுறந்தோட) கறுத்தவாரணையின் நிறத்தைக் கண்டபிடி "நம்மையொழிய வேறே கலந்து பெற்ற நிறமாயிருந்தது" என்றுப்ரணய ரோஷத்தாலேயோட; தன்னைஸங்யஸித்துப்போக அநந்தரம் இது மீளுகைக்கிடான உபாயங்களிலே இழிந்தது; அதாவது *பெருகுமதவேழம்மாப்பிடிக்குமுன்னின்று இருகணிள மூங்கில்வாங்கி அருகிருந்த தேன்கலந்து நீட்டத்தொடங்கிற்று; "அத்தை யுனக்கு வேண்டுவார்க்குக் கொடு" என்று போகத்தொடங்கிற்று. இனி உபாயாந்தரம்பலித்ததில்லை; இனிசரமோபாயத்தை அநுஷ்டிப்போமென்றுபார்த்து(கடல்வண்ணன்

---

(கருவாரணம்) கறுத்தநிறத்தையுடைய ஆனையானது. (தன் பிடிதுறந்தோட) இந்நிறத்தைக்கண்ட தன்னுடைய பிடியானது, "நம்மையொழிய வேறேகலந்து பெற்ற நிறமாயிருந்தது" என்று ப்ரணய ரோஷத்தாலே தன்னை ஸங்யஸித்துப் புரிந்து பாராமல் கடுநடையிட்டுப்போக. இப்படி இது ஓடப்புக்கவாறே, இது மீளுகைக்கிடான உபாயங்களிலே இழிந்து, (க) "பெருகுமதவேழம்" இத்யாதிப்படியே சில உபஹாரங்களைப் பண்ணப்பார்க்க, "அத்தை உனக்குவேண்டுவார்க்குக் கொடாய்" என்று போகப்புக்கவாறே, "உபாயாந்தரம் பலித்ததில்லை, இனி சரமோபாயத்தை யநுஷ்டிப்போம்" என்று பார்த்து, (கடல்வண்ணன் திருவாணைகூற) அழகர் ஸ்ரீபாதமே போவாயென்ன, (திரியும்) அந்த திவ்யாஜ்ஞைக்கு இளைந்து, போகமாட்டாமல் மீளும் (உ) "ஸுந்தரதோர் திவ்யாஜ்ஞாலம்பநகாதரவஶாநுயாயிநிகரிணி । ப்ரணயஜகலஹஸாயிந்யத்ரவநாத்ரி ஸஹஸஸுந்தரதோ:ஷ: - ஸுந்தரதோர் திவ்யாஜ்ஞாலம்பநகாதரவஶாநுயாயிநி கரிணி - ப்ரணயஜ

---

பிடியானது துறந்தோடுகைக்கு வாரணத்தின்கருமையை ஹேதுவாகத் திருவுள்ளம்பற்றி அர்த்தமருளுகிறார் (இந்நிறத்தையித்யாதி). பிடி - பெண்ணானை. துறந்தென்றதினர்த்தம் (ஸங்யஸித்து) என்றது. துறந்தோடப்புக்கவாறே மூந்துறவே ஆனையிடுகை ப்ரணயரஸத்துக்குச் சேராதாகையாலே அதுக்குச்சேர மேலுக்கவதாரிகையிடுகிறார்( இப்படியித்யாதி). (உபஹாரங்களைப் பண்ண)என்றது *இருகணிள மூங்கில்வாங்கியருகிருந்த தேன்கலந்து நீட்டுகையைச் சொல்லுகிறது. உக்தார்த்தத்துக்கு ஸம்வாதம் (ஸுந்தரேத்யாதி).

---

(க) உ-திருவ-எரு-  (உ) ஸுந்தர-ஸ்த-அ-

மூ.—எலிற்றுச் செய்வானேன் றெதிர்ந்துவந்த மல்லரைச்
சாவத்தகர்த்த சாந்தணிதோள் சதுரன்மலை
ஆவத்தனமென் றமரர்களும் நன்முனிவரும்
சேவித்திருக்கும் தென்றிருமாலிருஞ்சோலையே. (கூ)

---

திருவாணைகூற) அழகர் ஸ்ரீபாதமே போவாயென்ன; அநந்தரத்திலே மீண்டது திரியும். அன்றிக்கே "கடல்வண்ணன்" என்று அழகர்திருநாமமாய் திருவாணை யென்று பெரியபிராட்டியாராணை யாகையாலே நாய்ச்சியாராணை போவாய் என்றதாகவுமாம்.

இத்தால் ஶிஷ்யன் ஆசார்யனை அநாதரித்துப்போக புருஷகாரத்திணையுமிட்டு மீட்கக்கூடுகிறுன். இத்தால் ஶிஷ்டனைப்புகலறுக்க, அவன்தானே வந்து கூடினபடி தோற்றுகிறது. (தண்மாலிருஞ்சோலையே) அதிகாரிகள் நின்ற நின்றவளவுக்கீடாக விடாய்களை யாற்றும் திருமலை. இதுக்குப்பிடி துறந்தோடுகையிறே ஆபத்து. .... ... ... (ரு)

ஸ்வா;—ஆறும்பாட்டு. (எலிற்றுச் செய்வான்) தோற்றல்

---

கலஹஸமாதிர்யத்ரவநாத்ரிஸ்ஸ ஏஷஸுந்தரதோஷ்ணஃ" என்று இவ்வ்ருத்தாந்தத்தையருளிச்செய்தாரிறே - ஆழ்வான். (தண்மாலிருஞ்சோலையே) தட்பமாவது - ஸகல வஸ்துக்களும்நின்றநின்ற நிலைகளிலே தாபத்தை ஆற்ற வற்றாயிருக்கை. .... .... (ரு)

வ்யா;—ஆறும்பாட்டு. (எலிற்றுச்செய்வானேன் றெதிர்ந்து

---

கரிணீஹ்ருநகாதரவஶாநுயாயிநிஶதி - ஸம்ப்ரநந-நாயகஸ்ய அந்யகாந்தாஸம்ஶ்லேஷேண, காதரா-கலுஷிதஹ்ருதயா, யா-வஶா கரேணுகா, "கரேணுர்யோந்நுகாவஶா" இத்யமரஃ. தாமநுகச்சதி இத்யர்த்தஃ - கரிணிலம்ப்பநகாதரவ ஶாநுயாயிநிஸதி, லம்ப்பநே ந - நாயகஸ்ய அந்யகாந்தா ஸம்ஶ்லேஷேண, காதரா - கலுஷிதஹ்ருதயா, யா-கரேணுகா, "கரிணீதேநுகாவஶா" இத்யமரஃ. தாமநுகச்சதிஸதித்யர்த்தஃ. திருமலையாழ்வார் தம்மிடத்திலிருக்கையாலே ஆனைக்கு பகவத்விஷயஜ்ஞாநாதிக்யம் பிறப்பித்து கடல்வண்ணனுணையிட, அத்தால் நாயிகாலாபம் வருகையாலே அதுக்குவேண்டும் புருஷார்த்தத்தைக்கொடுத்துத் தாபத்தைமாற்றுகையைத் திருவுள்ளம்பற்றித் தாத்பர்யமருளுகிறுர் ( தட்பமாவதித்யாதி). (நின்றநின்றநிலைகளிலே) என்றது - தத்தத்புருஷார்த்த நிஷ்டைகளிலே யென்றபடி ... ... ... ... ... (ரு)

தங்கள் ப்ராணனைக்கொண்டு தப்பவிரகில்லை; மீளில் இவன் கழி கத்தியாலே கழிக்குமதில் அவன் கையிலே பட்டுப்போனால் வீர ஸ்வர்க்கம் கிடைக்குமென்று, படக்கடவதாகத் துணிந்து வந்தமல் லரை. (சாவத்தகர்த்த) பசுங்கலமுடைத்தாப்போலே, கொன்று ஞய்த்து; விரோதிநிரஸநம் கைவந்தபடி.

(சாந்தணிதோள்சதுரன்) தாம் காலும் கையுமுடலும் சேர்ந்து பொராநிற்கச் சாந்தழியாத சதிர். அதுக்கடி மஞ்சத்தில்

---

வந்த மல்லரை) ஸ்வதந்த்ரராய்வந்து மேல்விழிவிறே, - முடியாதே கைவாங்கலாவது; கம்ஸனுக்குப் பாதந்த்ரராய் வருகையாலே, இங்குத் தோற்றார்களாகில் அவன் அங்கே தோள்களைக் கழிக் குமாய்த்து; ஆனபின்பு, "கோழைகளாய்க் கொலையுண்பதில் புக ழோடே முடியவமையும்" என்று மேலிட்டார்கள். என்றெதிர்ந்து வருகையாவது—"பொரக்கடவோம்" என்று நெஞ்சிலே துணிந்து பிற்காலியாதே எதிரே நடந்து வருகை; இப்படியிருந்துள்ள மல் லரை. (சாவத்தகர்த்த) குற்றுயிராக்கி விடுகையன்றிக்கே, பசுங் கலமுடைத்தாப்போலே அநாயாஸேநதகர்த்துப் பொகட்ட.

(சாந்தணிதோள்சதுரன்) கூனி சாத்திவிட்ட சாந்து குறி யழியாதே காணும் அவர்களோடே வ்யாபரித்தது. மல்லரோடே

---

அரு,—ஆரும்பாட்டு. (எவிற்றித்யாதி) "என்றெதிர்ந்துவந்த மல்லரை" என்னவமைத்திருக்க, எவிற்றுச் செய்வானென்று சொல்லுகைக்குத் தாத்ப ர்யமருளுகிறார் (ஸ்வதந்த்ரராயித்யாதி வாக்யத்ரயத்தாலே). (முடியாது) என் றது - தங்களுக்கு ஜயம்தலைக்கட்டாதென்றபடி. (கூழைகளாய்) ஏழைக ளாய். என்றுதல்-பொருதலாய், மாநஸிகமானதுணிவைச்சொல்லுகிறார்(என்றி த்யாதி). சாவவென்றதுக்கு வ்யாவர்த்ய பூர்வகம் தாத்பர்யமருளிச்செய்யாநி ன்றுகொண்டு, தகர்க்கை - சிதறுவிக்கையாய், அதுக்கு சதுரனென்றதைக் கடாக்ஷித்துத் தாத்பர்யமருளுகிறார் (குற்றுயிரித்யாதி). (குற்றுயிர்)குறுகின ப்ராணன். (பசுங்கலம்) பச்சைப்பானை.

இவன்மல்லரோடு பொருதும்போது சாந்துக்கு ப்ரஸக்தியையருளிச்செ ய்யாநின்றுகொண்டு, இப்போதுசதுரனென்றதுக்கும் கருத்தருளுகிறார் (கூனி யித்யாதி). ஆகில் சாந்தின் குறியழியாமைக்காகநுணிக்கையாலே பட்டதுப டாதே வ்யாபரித்தானோவென்ன, அத்தைப் பரஹரியாநின்றுகொண்டு ஈடுப கிறார் (மல்லரோடேயித்யாதி). கூனிசாத்தின சாந்தில் குறி எவ்வகையாலே

பெண்கள் கூனி சாந்துசாத்தினபோதே தங்கள் கண்களாலேகுறி யிட்டு விட்டார்கள்; இக்குறியழியாமல் பொருத சதுரன்மலே. (அமரர்களும்நன்முனிவரும்)(௧)"முனிவர்களும்யோகிகளுமித்யாதி" (சேவித்திருக்கும்) (உ)"அடியரோடிருந்தமை" என்னக்கடவதிறே.

(ஆவத்தனமென்று) உபாயத்துக்கு ஒரு கால் நினைக்கவமை யுமிறே. (சேவித்திருக்கும்) பின்பு பலத்திலேயிறே அந்வயம்.

---

கூடஸர்வாவயவங்களும் பொருந்தி வ்யாபரியாநிற்கச்செய்தேசாத் தின சாந்து குறியழிந்ததில்லை காணும். கூனி சாத்திவிட்ட வநந் தரத்திலே, பெண்கள், கண்ணாலே இலச்சினையிட்டு விடுகையாலே இவனுலழிக்கவும் போகாதிறே. அவர்கள் கண்ணாலே யிலச்சினை யிடுகையாவது - இவன் தோளிலே சேலுங்கயலு மிடுகையிறே. இவன்மல்லரோடேஅழித்தானுகிலும் "மற்றெங்கேனுமழித்தான்" என்றிறே அவர்களிருப்பது. இது அழித்துப்போனுகில், பின்பு பெண்கள் கோஷ்டிக்கு ஆளாகானே. (மலே) இப்படி ப்ரதிகூலரை நிரஸித்து அநுகூலரையுகப்பிக்குமவன் வர்த்திக்கிறமலே.

(ஆவத்தனமென்று) நமக்கு ஆபத்துக்கு ரக்ஷகமான தந மென்று நினைத்து. (அமரர்களும் நன்முனிவரும் சேவித்திருக்கும்) உபயபாவநாநிஷ்டரான ப்ரஹ்மாதிதேவர்களும்,ப்ரஹ்மபாவநைக

---

அழியாமலிருக்குமோ அப்படி சாதுர்யத்தோடே வ்யாபரிக்கவேண்டும்படி குறியிட்டுவைத்தாரா‍ரென்னவருளுகிருர்(கூனியித்யாதி).(அழிக்கவும்)என்ற (வ) சகாரத்துக்கு இவர்களோடு யுத்தம் பண்ணுதிருக்கவும் போகாதிறே யென்று கருத்து. சேலும் கயலும் மத்ஸ்ய விசேஷங்கள். இவற்றை யிடுகை யென்றது - இவைபோன்றதம் கண்களாலே பார்க்கையைச் சொல்லுகிறது. பெண்கள் பார்த்துவைத்தால் இந்தச் சாந்தைமல்லரோடு பொருதழித்தால் வரும்குற்ற மென்னென்னவருளுகிருர் (இவனித்யாதி வாக்யத்வயத்தாலே). கண்ணனென்னுதே "சாவத்தகர்த்த சாந்தணிதோள் சதுரன்" என்றதுக் குத் தாத்பர்யமருளுகிருர் (இப்படியித்யாதி).

முனிவர்க்கு "நன்" என்று விசேஷித்து, அமரர்க்கு விசேஷியா மையாலே வேறுபடத் தாத்பர்யமருளுகிருர் (உபயேத்யாதி). (உபயபாவ நா) என்றதுகர்மபாவனையும் ப்ரஹ்மபாவனையும் சொல்லுகிறது. "ஆவத்தந

---

(௧) திருப்பாவை-௬-    (உ) தி-வாய்-௧௦-௯-௧௪-

மூ.—மன்னர்மறுக மைத்துனன்மார்க் கொருதேரின்மேல்
முன்னங்குநின்று மோழையெழுவித்தவன் மலை
கொன்னவிற்கூர் வேற்கோனெடுமாறன் றென்கூடற்கோன்
தென்னன்கொண்டாடும் தென்திருமாலிருஞ்சோலையே. (எ)

ஸ்வா;—ஏழாம்பாட்டு. (மன்னரித்யாதி) மலயத்வஜசக்ரவர்த்தியாலும் ச்லாகிக்கப்பட்ட திருமலையென்கிறார்.

ஸவா;—ஏழாம்பாட்டு (மன்னரித்யாதி). ஒருநாளையுத்தத்திலே மைத்துனன் மாரான ராஜாக்கள் தண்ணீர் விடாயாலே தாங்ளும் தங்கள் பரிகரமுமாகத் தங்கள் படைநிலத்தில் தண்ணீரில்லாமையாலே மிகவு மீடுபட்டு எதிர்த்தலைவாங்காமையாலே யென் செய்வோ மென்கிறவளவிலே, அத்விதீயமானதேரின்மேலே ஸாரதியாய்த்தாழ்ந்ததட்டிலே நின்று. (நின்று) பாண்டவபக்ஷபாதம்தோன்றநின்று. க்ருஷ்ணதேரை மீளவிடு, ப்ராணனுண்டாகில் நாளையும் யுத்தம் செய்து கொள்ளலாமென்னவும் நின்று. அவனோடே வார்த்தை யாக்கி "வாருணாஸ்த்ரத்தை இங்ஙனே தொடுத்துவிடு.

நிஷ்டரான ஸநகாதிமஹர்ஷிகளும் ஸேவித்துக்கொண்டு இராநிற்கும். "ஆவத்தனம்" என்று ஒருகால் நினைத்தால்அதுக்குபலம் அநவரதம் ஸேவித்துக்கொண்டிருக்கையாய்த்து. (தென்திருமாலிருஞ்சோலையே) தென்னென்று - அழகாய், ஸர்வப்ரகார விலக்ஷணமான தேசமென்றபடி. .... .... ... (கூ)

வ்யா.—ஏழாம்பாட்டு. (மன்னர்மறுக) அர்ஜுநனுடைய தேரிலே பூண்ட குதிரைகள் தண்ணீருக்கு விடாய்த்து இளைத்த

மென்று ஸேவித்திருக்கும்" என்றும்போது "ஹேமவ்யாதாயஸ்வபிதிமுகம் வ்யாதாயஸ்வபிதி" என்று வாயைத்திறந்துகொண்டுஉறங்குகிறனைறவிடத்தில் போலே ஸேவித்திருக்கும்போதெல்லாம் இந்நினைவநுவர்த்திக்குமென்றுதோன்றுமைக்காகத் தாத்பர்யமருளுகிறார் (ஆவத்தநமென்றித்யாதி). ஆபத்ரக்ஷகமென்னுமத்யவஸாயம் உபாயத்வாத்யவஸாயரூபமாகையாலே அதுஸக்ருத்கர்தவ்ய மென்கிற சாஸ்த்ரத்தைத்திருவுள்ளம்பற்றி (ஒருகால் நினைத்தால்) என்றது. ... ... ... (கூ)

அரு;—(மன்னரித்யாதி) மன்னர் - ராஜாக்கள், மறுக - வயிறெரியும்படியாக வென்று சப்தார்த்தம் விவக்ஷித்து "மோழை யெழுவித்தவன்" என்றத்தைக்கடாக்ஷித்துஹேதுபூர்வகமாகத்தாத்பர்யமருளுகிறார் (அர்ஜுந

தண்ணீருண்டாங்காண், அஞ்சாதேகொள்'' என்ன, அவனும் தொ
டுத்து எங்கே விடவென்ன, பூமியில் நீர் நரம்பறிந்தவனுகையாலே
இந்த நீர்நரம்பிலே யென்ன, இவனும் அங்கேவிட, அம்பு போன
வழியே மோழைபட்டு மேலே மண்ணைக்கரைத்துக்கொண்டு கிளம்
பிப்படை நிலமெல்லாம் வேண்டு மளவிலே பரக்கும்படி குமிழி
யெழப்பண்ணினவன் நித்யவாஸம் செய்கிறமலை. (மோழை) குமி
ழி; மேட்டுநீர்.

---

வளவிலே, கடிநஸ்த்தலத்திலே நீர்நரம்பு அறியுமவனுகையாலே,
வாருணாஸ்த்ரத்தை விடுவித்து அங்கே நீரையுண்டாக்கி, குதிரை
களைவிட்டு நீரூட்டி, புரட்டி யெழுப்பிக்கொண்டு போந்து பூட்டிக்
கொண்டு வந்து முன்னே நிறுத்தின இத்தைக்கண்ட ராஜலோக
மடைய ''இவனுடைய பக்ஷபாத மிருந்தபடியால் நாமிவனைவெல்
லுகை யென்றொன்றுண்டோ'' என்று குடல் மறுகும் படியாக.
(மைத்துனன்மார்க்கு) (க) '' க்ருஷ்ணாஶ்ரயா: க்ருஷ்ணபலா: க்ருஷ்ணநா
தாஶ்ச பாண்டவா: -க்ருஷ்ணாஸ்ரயா: க்ருஷ்ணபலா: க்ருஷ்ணநாதா
ஸ்ச பாண்டவா:'' என்கிற படியே தன்னையே ஸர்வமுமாகப்பற்றி
யிருக்கும் பாண்டவர்களுக்கு.

(ஒரு தேரின்மேல்) ''ஆயுதமெடுக்க வொண்ணாது'' என்கையா
லே,(க)''கொல்லாமாக்கோல்கொலைசெய்து''என்கிறபடியேஉழவு
கோலும் கையுமாய் நின்று தேரை நடத்துகிற ஸாமர்த்யத்தாலே
தேர்க்காலாலே எதிரிகளையடங்கலும் நெரித்துப்பொகடும்படி தன
க்கு உபகரணமாயுள்ள அத்விதீயமானதேரின்மேலே. (முன்னங்கு
நின்று) ஸாரத்யம் பண்ணுகைக்கு அநுரூபமாக அத்தேரின்முகப்
பான அவ்விடத்திலே நின்று. (மோழையெழுவித்தவன்)நீர்நரம்

---

நனித்யாதி). (நீர்நரம்பு) நீர்த்தாரை; அதாவது-ஜலமிருக்கும் மர்மஸ்த்தலம்.
(இவனை) அர்ஜுநனை. ''மைத்துனன்மார்''என்கிற சரீரஸம்பந்தமே ஸாரத்
யம் பண்ணுகைக்கு ஹேதுவாகையாலே அதுக்கு ப்ரமாணபூர்வகம் தாத்பர்
யமருளுகிறார் (க்ருஷ்ணேத்யாதி).

தேரொன்றுயிருக்க, ஒரு வென்று விசேஷித்ததுக்குத் தாத்பர்யமருளு
கிறார் (ஆயுதேத்யாதி). ''முன்னுன அங்கு''என்று விசேஷணமாக்கித்தாத்பர்ய
மருளுகிறார் (ஸாரத்யமித்யாதி).

---

(க) பார-த்ரோ-கஅ-கூ-உச.

(கொன்னவிலித்யாதி) கொலைக்குப்பரிகரமென்னும்படியான கூரிய வேலையுடையனாய், தர்மயுத்தமே செய்யுமவனாய், தபஃ பலத்தாலே நித்யகங்காஸ்நாநம் செய்து வரவல்லனாய், பாண்ட்ய மண்டலத்துக்கு ராஜாவுமாய், தெற்கில் திக்குக்கு ப்ரதாநனுமாய் மதுரையென்கிற பேரையுடைத்தானபடைவீட்டுக்கு நிர்வாஹகனுமாய். (தென்னன்) தென்னாட்டையுடையவன். "மேகத்தை விலங்கிட்டான், பூதத்தைப் பணிகொண்டான், இந்த்ரன் தலையிலே பில்விட்டவாருணாஸ்த்ரத்தின் வழியேகிழுண்டான ஜலமான துருமிழியெழுந்து கிளரும்படி பண்ணியருளினவன். (மலை) இப்படி ஆஸ்ரித பக்ஷபாதியானவன் நித்யவாஸம் பண்ணுகிற மலை.

(கொன்னவிலித்யாதி) (க) "ஜயயூஜஊதி வ்யொதா ஊாந வெ௦ஜெரா ஜஷீவதிஃ - மலயத்வஜ இதிக்யாதோ மாநவேந்த்ரோ மஹீபதிஃ" என்கிற மலயத்வஜ சக்ரவர்த்தி இத்தேசத்தை உபலாளித்துக்கொண்டு போந்தானென்னும் ப்ரீதியாலே அவனை ப்லாகிக்கிறார் மேல். கொலைக்குப் பரிகரமென்னும்படியான கூரிய வேலையுடையனாய், ராஜநீதி குலையாமல் தர்ம யுத்தமே செய்யுமவனாய், தபஃபலத்தாலே நித்யம் கங்காஸ்நாநம் செய்து போரவல்ல பெருமையுடையனாய், பாண்டியராஜ்யத்துக்கு ராஜாவாய், கட்டளைப்பட்டு "நான்மாடக்கூடல்" என்னும்பேரையுடைத்தாயிருக்கும் மதுரைக்கு நிர்வாஹகனாய், தக்ஷிண திக்குக்கு ப்ரதாநனான மலயத்வஜ சக்ரவர்த்தியாலே கொண்டாடப்பட்ட தேசமாய்த்து.

---

"நாக்குநின்னையல்லாலறியாது" என்றருளிச்செய்யுமிவ்வாழ்வார், மலயத்வஜனை இப்படி ஸ்துதிக்கக்கூடுமோவென்னவருளுகிறார் (மலயத்வஜேத்யாதி). (இத்தேஶத்தை) என்றது - திருமலையாழ்வாரையென்றபடி. "கொல்" என்று ஹிம்ஸிக்கையாய், "நவில்" அத்தைப் பரிசயம் பண்ணுமதென்றாய், அத்தால் பலிதம் (கொலைக்கித்யாதி). கூர்வேலென்ற வநந்தரம் "மாறன்" என்றதை அந்வயித்து, அதுக்கு எதிரியென்று ஶப்தார்த்தம் திருவுள்ளம்பற்றி, பலிதார்த்தமருளுகிறார் (ராஜநீதியித்யாதி). "நெடு" என்றுபெருமையாய், அதுக்கர்த்தம் (தபஃபலத்தாலேயித்யாதி). "கோன்" என்றதுக்கர்த்தம் (பாண்டியேத்யாதி). தென்னென்றதினர்த்தம் (கட்டளைப் பட்டு) என்றது. அதாவது - பணியழகையுடைத்தாயென்கை. (நான்மாடக்கூடல்) என்றது வித்வான்கள் திரளும் தேஶமென்றபடி. ... ... ... (எ)

வளையெறிந்தான்,வடிம்பலம்பநின்றான்கடலிலே, மடியிலேகயலிட்டான்'' என்றாப்போலே சொல்லக்கடவது, பாண்ட்ய மண்டலத்தில் தர்மராஜாக்களை. அவ்வளவன்றிக்கே மலயத்வஜனென்கிற பேரையுடையனாய்.

அதாவது-அகஸ்த்யன்வர்த்திக்கிறமலய பர்வதத்திலே சென்று அகஸ்த்ய மஹர்ஷி முன்னே ''தர்மமே நடத்தக்கடவேன்'' என்று மலயபர்வத மெழுதிக்கொடி யெடுத்தவன், கங்கையில் ஸ்நாநம் செய்யப்போகா நிற்கச்செய்தே *மதிதவழ் குடுமியளவில் சென்றவளவிலே தேர் அவ்விடத்தோடாமல் நின்றதாய், அவ்விடத்திலே தேரை நிறுத்தி ''இவ்விடத்திலே தீர்த்தவிசேஷமும் தேவதாஸந்நிதியுமுண்டாக வடுக்கும்'' என்றிறங்கி யாராய்ந்து பார்த்தவளவிலே அவ்விடத்தில் அழகர் ஸந்நிதி பண்ணி ''இவ்வாற்றிலே ஸ்நாநம் செய்'' என்ன, நாமம் கேட்டு ஸ்நாநம் செய்யவேண்டுகையாலே இதுக்குப் பேரென்னென்றுகேட்க, ''முன்னே ப்ரஹ்மா நம்மைக் கால்கழுவுகிற காலத்திலே நம்சிலம்பில் நீர் இதிலே தெறித்து 'சிலம்பாறு' என்று ''இதுக்குப் பேராய்த்து'' என்ன, அங்கே ஸ்நாநம்செய்து கங்காஸ்நாநம் தவிர்ந்து அந்யசேஷத்வ நிவ்ருத்தி கொண்டாடி, அழகர்க்கு

---

அதாவது - அகஸ்த்யன் வர்த்திக்கிற மலய பர்வதத்திலே சென்று அகஸ்த்ய மஹர்ஷிமுன்னே ''தர்மமே நடத்தக்கடவேன்'' என்று மலயபர்வதத்தை யெழுதிக்கொடியெடுத்தவன், கங்கையிலே ஸ்நாநம் செய்யப்போகாநிற்கச்செய்தே, * மதிதவழ் குடுமி யளவிலே சென்றவாறே, தேர்வடக்கு ஓடாமல்நின்றதாய். அவ்விடத்திலே தேரை நிறுத்தி, ''இங்கே தீர்த்த விசேஷமும் தேவதாஸந்நிதியு முண்டாக வடுக்கும்'' என்று இறங்கி ஆராய்ந்து பார்த்தவளவிலே, அவ்விடத்திலே அழகர் ஸந்நிதி பண்ணி, ''இவ்வாற்றிலே ஸ்நாநம்செய்'' என்ன; நாமம் கேட்டு ஸ்நாநம்பண்ண வேண்டுகையாலே ''இதுக்குப்பேர் என்'' என்று கேட்க; ''முன்பே நம்மை ப்ரஹ்மா காலைக்கழுவுகிற காலத்திலே நம் சிலம்பில் நீர் இதிலே தெறித்து 'சிலம்பாறு' என்று இதுக்குப்பேராய்த்து'' என்ன; அங்கே ஸ்நாநஞ்செய்து, கங்காஸ்நாநம் தவிர்ந்து இங்கே ப்ரவணனாயிருந்து, ''அழகர்க்கு வேண்டுமடிமைகளெல்லாம் செய்

மூ.—குறுகாதமன்னரைக் கூடுகலக்கி வெங்கானிடைச்
சிறுகானெறியே போக்குவிக்குஞ் செல்வன் பொன்மலை
அறுகால் வரிவண்டுக ளாயிரநாமஞ் சொல்லிச்
சிறுகாலைப்பாடுந் தென்றிருமாலிருஞ்சோலையே. (அ)

வேண்டுமடிமைக ளெல்லாம் செய்தானென்றொரு ப்ரஸித்தியுண்டிறே. அத்தைப்பற்ற "தென்னன் கொண்டாடும்" என்கிறது. (க) "பஞ்சவன் பவுழியன் சோழன்பார்மன்னர் மன்னர் தாம் பணிந்தேத்தும்வரன்" என்பது, (உ) "பலவேந்தர்வணங்குகழல்பல்லவன் மல்லையர்கோன் பணிந்த பரமேசுவர விண்ணகரம்" என்பது, இவர்களோடே கூட அநந்ய ப்ரயோஜநராய் அநந்ய ஸாதநராயிருக்கிற தொண்டைமான் சக்ரவர்த்திகளையும் கொண்டாடாநின்றாரிறே. இதிறே ஆழ்வார்கள் திருவுள்ளமிருக்கும்படி. இதுக்கடி பகவத் பாகவதாசார்ய விஷயங்களில் ப்ரீத்யதிஶயமிறே. இதுவிறே நம்மாசார்யர்களுக்கும்திருவுள்ளம், "ஶ்வயஶுஜஉதிவ்யாமெதா ஶாநவெஷெ்ராஶஹீவதிঃ-மஇலயத்வஜதிக்யாதொமாந வேந்த்ரோமஹீபதிঃ" .... ... ... .... .... (எ)

ஸ்வா;—எட்டாம்பாட்டு. (குறுகாத மன்னரை) திருமலையைக்கிட்டாதராஜாக்களை. (கூடுகலக்கி) இருப்பிடத்தைக்குலைத்தான்" என்று ஒரு ப்ரஸித்தியுண்டிறே; அத்தை அருளிச்செய்தாராய்த்து. (தென்திருமாலிருஞ்சோலையே) இப்படி அவனாலே கொண்டாடப்பட்டிருப்பதாய் தெற்குத் திக்கிலேயான திருமாலிருஞ்சோலையே. .... .... ... (எ)

வ்யா;—எட்டாம்பாட்டு. (குறுகாதமன்னரை) திருமலையைக் கிட்டாத ராஜாக்களை. அநுகூலராய்ச் சேர்ந்து வாழ்ந்து போகலாயிருக்க, ப்ரதிகூலராய்ச் சேராதேயிருக்குமவர்களை. (கூடுகலக்கி) இருப்பிடத்தைக்குலைத்து, அதாவது-போக்ய போகோப

அரு;—எட்டாம்பாட்டு. (குறுகாதவித்யாதி) திருமலையைக் கிட்டாதவர்களை உபேக்ஷிக்க ப்ராப்தமாயிருக்க, அவர்களை வெங்கானிடைச் சிறுகானெறியே போக்குவிப்பானென்னென்ன வருளுகிறார் (அநுகூலராயித்யாதி), "வெங்கானிடைச் சிறுகானெறியே போக்குவிக்கும்" என்றத்தாலே தானேயிருப்பிடத்தைக் குலைக்கை ஸித்தமாயிருக்க, விசேஷித்ததுக்குத் தாத்பர்யமருளுகிறார் (அதாவதித்யாதி). இத்தாலே இஷ்டஹாநி சொல்லிற்றென்று

(க) தி-மொ-எ-எ-ச. (உ) தி-மொ-உ-க௦-க.

து. இருப்பிடமென்றபோதே ராஜார்ஹமாயிருந்ததென்றிறே நல்ல விடங்களைச் சொல்லுவது. (வெங்கானிடை) நிலவனுக்கும் ஸஞ்சரிக்கவொண்ணாதவழி. (சிறுகானெறியேபோக்குவிக்கும்) கெட்டுப்போகும்போது பின்தொடருகிறார்களென்னுமச்சத்தாலே போக்குவிக்கும். (க) "உய்மின்திறை கொணர்ந் தென்றுல காண்டவரித்யாதி" அதுக்கடி-ஶ்ரியஃபதியாகையாலே; (௨) "அசுரர்க்குத்தீங்கிழைக்குந்திருமால்". (பொன்மலை) ஶ்ரியஃபதிவர்த்திக்கிற ஶ்லாக்யமான மலை.

(அறுகால்வரிவண்டுகளாயிரநாமம் சொல்லி) ராஜாக்கள் கரண போகஸ்த்தாநங்களெல்லாவற்றிலும் விலக்ஷணமாம்படி அவர்கள் பண்ணிக்கொண்டிருக்கும் நகரிகளிலிருப்பைக்குலைத்தன்மை. (வெங்கானிடை) வெவ்வியகாட்டின் நடுவே. நிலவனுக்கும் ஸஞ்சரிக்கவொண்ணாதபடியாய்த்துக்காட்டின் வெம்மையிருக்கும்படி. (க) "வெம்மினொளிவெயில் கானகம்" என்கிறபடியே, (சிறுகானெறியே போக்குவிக்கும்) கெட்டுப்போம்போது பின் தொடருகிறார்களென்னு மச்சத்தாலே வழியானவிடம்கிடக்க, சிற்றடிப்பாடே நுழைந்து போம்படியாகப்பண்ணும். (செல்வன்) இதுக்கடி-ஶ்ரியஃபதியாகை. அநுகூலரக்ஷணமும் ப்ரதிகூலநிரஸநமும் பண்ணுவது அவனுக்காகவிறே. (பொன்மலை) இப்படியிருந்துள்ள ஶ்ரியஃபதியானவன் வர்த்திக்கிற ஶ்லாக்யமானமலை.

(அறுகால்வரிவண்டுகள்) ஷட்பதங்களான அழகியவண்டுகள் கருத்து. காட்டின் வெம்மை ஶீதவாதா தபங்களை ஸஹித்திருக்கும் தரித்ரனுக்கும் போகவொண்ணாதபடி மிகுத்த வெய்யிலால் வந்த வெம்மையென்று திருவுள்ளம்பற்றி ப்ரமாணமும் காட்டித் தாத்பர்யமருளுகிறார் (நிர்தநனுக்குமித்யாதி வாக்யத்வயத்தாலே). கானெறியென்று சொல்லவமைந்திருக்க, சிறுவென்று விசேஷித்ததுக்குத் தாத்பர்யமருளுகிறார் (கெட்டுப்போமித்யாதி). (கெட்டுப்போந்து) என்றது - ஶத்ருராஜாக்களைவிட்டு இவர்களிருப்பிடத்தை ஈஶ்வரன் குலைக்கையால் கெட்டுப்போம்போதென்றபடி. இவ்வளவால் இவர்களுக்கு அநிஷ்டத்தை ப்ராபிக்கை சொல்லிற்றாயிற்றென்று கருத்து. ஶ்ரியஃபதியாகில் ப்ரதிகூலரை இஷ்டஹாநியையும் அநிஷ்டத்தை ப்ராபிக்கையும்செய்து நிரஸிக்குமோவென்னவருளுகிறார் (அநுகூலேத்யாதி). இவ்விடத்தில் அநுகூலரக்ஷணத்தைச் சொன்னது த்ருஷ்டாந்தார்த்தம்.

"வரி" என்றதினர்த்தம் (அழகிய) என்றது. "அறுகால்" என்றும் "வரி"

(க) தி-வாய் ௪-௮-௨. (௨) தி-வாய்-௯-௫-௨.

த்யாஜ்ரென்னுமிடமும், திருமலை யோட்டைபந்தத்தாலே திர்யக்கு உபாதேயமென்னுமிடத்தையும் சேரச்சொல்லிற்று. (அறுகால்வரி வண்டுகள்) அவற்றிலும் தேஹகுணமிறே இவர்க்கு உத்தேஸ்யம். (ஆயிரநாமம் சொல்லிச் சிறுகாலைப்பாடும்) ஸத்வோத்தரகாலத்திலே யெழுந்திருந்துதிருப்பள்ளியெழுச்சிபாடாநிற்கும். (க) "காலை யெழுந்திருந்து கரியகுருவிக்கணங்கள் - சோலைமலைப்பெருமான்" என்னக்கடவதிறே. (தென்திருமாலிருஞ்சோலையே) அழகையுடைத்தானமலை. .... .... .... .... (அ)

அவ;-ஒன்பதாம்பாட்டு. (சிந்தவித்யாதி) குறுகாதமன்னரளவில் அழகர்தம்மால்வரும் நிக்ரஹம்(உ) "ஏறுதிருவுடையான்" (ங) "திரு

---

இத்தால்-இவற்றினுடைய ரூபகுணம் சொல்லிற்று. (ஆயிரநாமம் சொல்லிச் சிறுகாலைப்பாடும்) (ச) "ஜெவொநாமஸஹஸ்ரவாநு - தேவோநாமஸஹஸ்ரவாந்" என்கிற அவனுடைய ஆயிரந்திருநாமங்களையும் ஸத்வோத்தரமானகாலத்திலே ப்ரீதிக்குப்போக்குவிட்டுப் பாடாநிற்கும். (தென்திருமாலிருஞ்சோலையே) இப்படியிருந்துள்ள அழகையுடைத்தான திருமாலிருஞ்சோலை யென்கை. ... (அ)

அவ;—ஒன்பதாம்பாட்டு. அந்த தேஶவர்த்திகளான ஸ்ரீவைஷ்ணவ பூதங்களினுடையவ்ருத்தமிருக்கும்படி சொல்லுகிறது. அழகர் தம்முடையசெயல்போலேயாய்த்து-இவற்றினுடைய செயலுமிருக்கும்படி. அதாவது-ப்ரதிகூலரானவர்களைக்காணப்பொறுதாய்த்து.

---

என்றும் விசேஷித்ததுக்குத் தார்த்பர்யம் (இத்தாலித்யாதி). ரூபமென்றது - வண்டின்சரீரம். குணமென்றது-அழகிய வென்றவிடத்தில் விவக்ஷிதமான ஸர்வகுணங்களும். இத்தால் ஆயிரநாமம் சொல்லுகிற வண்டுகளிடத்தில் ப்ரீதியாலே இப்படி வர்ணித்தாரென்று கருத்து. (சிறுகாலை) என்றது-ப்ராதஃகாலமாய், அத்தால் பலிதம் (ஸத்வோத்தரமான காலத்திலே) என்றது. (அ)

அரு;—ஒன்பதாம்பாட்டு. (சிந்தவித்யாதி) "ஆவத்தனம் செய்" என்று அழகரை ரக்ஷகமென்று நினைத்து ஸேவிக்கும் பூதங்கள் அவர்க்கநிஷ்டமாகச் சிந்தப்புடைத்தென்று ப்ராணி ஹிம்ஸை பண்ணக்கூடுமோ வென்ன வவதாரிகை (அந்ததேசேத்யாதிவாக்யத்வயத்தாலே). (அழகர் தம்முடைய செயல் போலே) என்றது-"குறுகாதமன்னரை" என்றகீழ்ப்பாட்டைப்பற்ற.

---

(க) நா-தி-கூ-அ. (உ) நா-தி-கூ. (ங) நா-தி-கூ. (ச) பார-ஸபா-ஙஅ-கக.

மூ;—சிந்தப்புடைத்துச் செங்குருதிகொண்டுபூதங்கள்
அந்தப்பலிகொடுத் தாவத்தனஞ்செய்யப்பன்மலை
இந்திரகோபங்க ளெம்பெருமான் கனிவாயொப்பான்
சிந்தும்புறவிற் றென்றிருமாலிருஞ் சோலையே. (௯)

விளையாடுதிண்டோள்'' என்னச்செயதேயும்(௧)'அவுணரிடைப்புக்கு' (௨)''என்றுனுமிரக்கமிலாதவன்'' என்கிறபடியேவருமென்று சொல்லிற்றுக்கீழ். இதில் அம்மலையிலே வர்த்திக்கிறஸ்ரீவைஷ்ணவபூதங்கள் (௩)''சென்றுசென்றுதேவர்''(௪)''ஜந்தூநாஸஹஸ்ரேஷு-ஜந்மாந்தரஸஹஸ்ரேஷு'' என்கிறபடியேகுறுகாதவளவன்றிக்கே அம்மலையிலே வர்திக்கச் செய்தே தாழ்ச்சியை மதித்துத் தீவினைபெருக்கி ஆயமாயவன் கோயில் வலஞ்செய்யாமல் வலஞ்செய்து வழக்கென நினையாமல் சூதும் களவும் செய்து அவன் தந்தகரணங்களைக் கொண்டு வழிகெட நடந்து அந்வய விநாஸரஹிதரானவர்களை அந்வயவிநாஸமுண்டாக்குவதாக பாபகரணங்களைக் குலைத்து அழகரை யுகப்பிக்குமென்னும் ப்ரகார விசேஷங்களைச் சொல்லுகிறது இப்பாட்டால்.

ஸ்வா;—(சிந்தவித்யாதி) அவர்கள் தங்களுக்கடைத்த காலங்களிலே ஸஞ்சரிக்கும்போது இவர்களெதிர்பட்டால் மூக்கும்வாயும் ரக்தம்கக்கும்படிசாகவடித்து அந்தச்செங்குருதியோடேசவத்தைக்

வ்யா;—( சிந்தப்புடைத்து ) சிதறப்புடைத்து. ஆஸ்திகராய், த்யாஜ்யோபாதேய விவேகமுடையராய், அழகரளவிலும் திருமலையாழ்வாரளவிலும் ப்ரேமமுடையராய் வர்த்திக்குமவர்களைக் கண்டால் அவர்கள் ஸந்நிதியில் நில்லாதே அஞ்சலி வந்தநாதிகளைப் பண்ணித் தந்தாமைக்கொண்டு மறைந்துவர்த்தித்து, நாஸ்திகராய் த்யாஜ்யோபாதேய விவேகஶூந்யராய், தேஹபோஷணாதிகளைப் பண்ணி ஸ்வைரம் ஸஞ்சரித்துத்திரியும் ப்ரதிகூலஜநங்களை, தந்தாம் ஸஞ்சரிக்கிற தேசத்திலே காலத்திலே கண்டால், அவயவங்கள் சிதறவடித்துக் கொன்று பொகடாநிற்குமாய்த்து. ( செங்குருதி

''கீழ் ப்ரதிகூலரைக் காணப் பொறுதாய்த்து'' என் கையாலே. சிதறப்புடைக்கை ப்ரதிகூலரையென்று விவக்ஷித்து, இத்தால் தோற்றுகிற அநுகூலாநு வர்தநப்ரகாரத்தையும் கூட்டித் தாத்பர்யமருளுகிறார் (ஆஸ்திகராயித்யாதி). (காலத்திலே) என்றது-ஸந்த்யாகாலாதிகளிலேயென்றபடி.

(௧) தி-மொ-௨-௯-௧ ௨-௯-௧ (௨) தி-மொ-௨-௪-௧ (௩) தி-ச-வி-௯௯,

கொண்டு கண்டாகர்ணனைப்போலே "இத்தைக்கொண்டருளவேணும்" என்று ப்ரார்த்தித்துக்கொடுத்து, அந்தமலையில் வர்திக்கிற ஸ்ரீவைஷ்ணவ பூதங்களாகையாலே தந்தாமுக்கடைத்த ஸந்த்யா காலத்திலேகொடுத்து, (க)"பின்னுமாளும்செய்வன்" என்பாரைப் போலே பின்னையும் செய்யுமென்கிறார். அன்றிக்கே தந்தாமுடைய ஆபத்துக்கழியாத தநமாக அழகர்தம்மையே நினைத்துக்கொடுக்கு மென்னவுமாம். அப்போது இக்குடைஸாதநத்திலே அந்வயிக்குமென்று தோற்றும்.

இவற்றுக்கு இப்படி அயோக்யரைத் தேடிக் கொல்லக்கிடைக்குமோவென்னில்; தமகளுக்கடைத்தகாலத்திலே யோக்யரையும் பாராது. யோக்யகாலம் பார்த்துப் புறப்படார்களே. புறப்பட்டார்களாகில் அவன்தானே யகலும்; அந்தியம்போது அங்கு நில்லென்றால், ஸங்கல்பபாரதந்த்ர்யம் வரப்பண்ணுமே; படைவீடுகாவ

---

கொண்டு) தாந்தாம் அடித்துக்கொன்றவர்களுடைய தேஹத்தில் நின்றும், செவ்வியிலே சிவந்துபுறப்படுகிற ரக்தத்தைக்கொண்டு. (பூதங்கள்) பூதயோநியாயிருக்கச் செய்தேயும், வைஷ்ணவ நாம ரூபங்களோடு கூடி, பகவத்பாகவத பக்தியுக்தங்களாய்க் கொண்டு திரியும் பூதங்களானவை.

(அந்திப்பலிகொடுத்து) (க) "நவமீ ஸவமிதம் புண்யம்"-நவம் சவமிதம் புண்யம்" என்றுஸமர்ப்பித்த கண்டாகர்ணனைப்போலே, தங்களுடைய ஜாத்யுசிதமாக ஜீவிக்குமத்தை, ஸந்த்யாகாலங்களிலே ஆராதநரூபேண ஸமர்பித்து. (ஆவத்தனம்செய்) தங்களுக்கு ஆபத்துக்கு ரக்ஷகமான தநமாக நினைத்து ஸேவித்துக்கொண்டு

---

(புகடாநிற்குமாய்த்து) என்றவநந்தரம் "பூதங்கள்" என்று சேஷம். குருதியென்றபோதே சிவப்புஸித்தமாயிருக்கவும் "செம்" என்று விசேஷித்தது தாத்காலிக சிவப்பைச் சொல்லுகிறதென்கிறார் (தாந்தாமித்யாதி). (செவ்வியிலே) என்றது-செவ்வியழிந்த தத்காலத்திலே யென்றபடி.

இப்படி ப்ராணி ஹிம்ஸைபண்ணி அநுசிதமானதை அழகருக்கு அந்திப் பலியாகக் கொடுக்கக்கூடுமோவென்னவருளுகிறார் (நவமித்யாதி), ஆபத்துக்கு தநமாக-ரக்ஷகமாக, "செய்"-மநஸ்ஸிலேசெய்யப்படுகிறவென்று ஸப்தார்த்தம் விவக்ஷித்துத் தாத்பர்யமருளுகிறார் (தங்களுக்கித்யாதி), இன்னார்க்கு அப்ப

விலொடுக்கமுறச்செறிந்தால்காவலாளர்எதிர்பட்டாரைக்கொல்லு கையும் ராஜாக்களுக்கு ப்ரியமிறே. பகவத்கார்ய நிமித்தமாகபக்தி பாரவஶ்யத்தாலே காலம் பாராமல் புறப்பட்டார்களாகில் இவர்க ளுக்குத் தோற்ருமல் நிற்றல்; தோற்றம் பொறுப்பர்களாகில் பரீ க்ஷித் தநுவர்த்தித்தல் செய்யுமித்தனையிறே. (அப்பன் மலை) அவயவ ப்ரதானம் செய்தவன் நித்ய வாஸம்செய்கிற திருமலை.

(இந்திரவித்யாதி) அம்மலைமேலுண்டான சோலைகள் பூத்து உதிர்ந்தாப்போலே அழகர் திருப்பவளத்துக்கொரு புடையொப்பா னவிந்த்ரகோபங்கள் சிந்தா நிற்குமாய்த்து; இப்படிப்பட்ட சோலை களாலே சூழப்பட்ட தென்திருமாலிருஞ்சோலையே; காலத்தைமதி யாமைடறப்பட்டார்க்கும்பாபகரணங்கள்குலைந்து பிழைக்கலாமா கையாலே அதுவேதேஶம். பாபகரணம் பகவத்கார்யமாகத் தந் தாம் காலங்களிலேகுலைப்பார்க்கும துவேதேசம். காலமறிந்துபுறப்

போரும்படியிருக்கிற. (அப்பன்மலை) ஸர்வகாரண பூதனானவன் நித்யவாஸம் பண்ணுகிறமலை. "அப்பன்" என்றது-இவற்றுக்கும் இப்படி கிட்டிவர்த்திக்கலாம்படியிருக்கிறது, காரணத்வப்ரயுக்த மானகுடற்றுடக்காலே யென்னுமிடம் தோற்ற.

(இந்திரகோபங்கள்) சிவந்தநிறத்தை யுடையவாய், "இந்த்ர கோபம்" என்கிற நாமத்தையுடைத்தாயிருக்கிற ஜந்துக்களான வை. (எம்பெருமான் கனிவாயொப்பான்) ஸர்வஸ்வாமியான அழகருடைய, கொவ்வைக்கனிபோலேயிருக்கிற திருவதரத்துக் குப் போலியாம்படி. (சிந்தும்புறவில்) கண்டவிடமெங்கும் சித றிப்பறக்கும் பர்யந்தத்தையுடைய. (க) "சிந்துரச் செம்பொடிப் போல் திருமாலிருஞ்சோலை யெங்கும் இந்திரகோபங்களே யெழுந் தும் பரந்திட்டன" என்றாரிறே-இவர் திருமகளாரும். (தென்திரு

னென்னுமையாலே யருளுகிறார் (ஸர்வேத்யாதி). அழகரென்னுதே அப்ப னென்றதுக்குத் தாத்பர்யமருளுகிறார் (அப்பனென்றதித்யாதி).

(போலியாம்படி) என்றவநந்தரம் "ஆய்க்கொண்டு" என்று சேஷம். "புற" என்று பர்யந்தமாய், அதில் இன்னவிடமென்று விசேஷியாமையாலேயெங் குமென்று விவக்ஷித்துத் தாத்பர்யமருளுகிறார் (கண்டவிடமெங்குமித்யாதி), இவ்வர்த்தத்துக்கு ஸம்வாதமருளுகிறார் (சிந்துரமித்யாதி). ... (க)

(க) நா-தி-க-ச.

மூ.—எட்டுத்திசையு மெண்ணிறந்த பெருந்தேவிமார்
விட்டுவிளங்க வீற்றிருந்த விமலன்மலை
பட்டிப்பிடிகள் பகடுறிஞ்சிச்சென்று மாலைவாய்த்
தெட்டித்திளைக்குந் தென்றிருமாலிருஞ்சோலையே. (௧௦)

---

படாமல் புறப்பட்டு வர்திப்பார்க்குமதுவேதேசம். இந்தும் புற விலேவிளங்காநின்ற தென்திருமாலிருஞ்சோலையே. .... (௯)

ஸ்வா;—பத்தாம்பாட்டு. (எட்டுத்திசையுமித்யாதி) ஸ்ரீமத் த்வாரகையி லொவ்வொருதிக்கில் தேவிமாரைப்பரிகணிக்கவொண் ணாமையாயிறே யிருப்பது; இவர்களெல்லாரும் இன்னாரின்னாரென் னும்ப்ரஸித்தியோடே "ஒருவராலேஒருவர்க்குதேஜஸ்" என்கிறதை விட்டு க்ருஷ்ணனோடே விளங்கவென்னுதல்; இவர்கள்தான் "எல்

---

மாலிருஞ்சோலையே) இப்படியிருந்துள்ள அழகையுடைத்தான திரு மாலிருஞ்சோலை யென்கை. ... ... (௯)

வ்யா;—பத்தாம்பாட்டு. (எட்டுத்திசையும்) எட்டுத்திக்கிலும். (எண்ணிறந்த பெருந்தேவிமார்) அஸங்க்யாதராய், ரூபகுணத்தா லும், ஆத்மகுணத்தாலும் வந்த பெருமையையுடையராய், ஶாஸ்த் ரோக்தமானப்ரகாரத்திலே பரிக்ரஹிக்கப்பட்ட தேவிமாரானவர் கள். (விட்டுவிளங்க) மிகவும் ப்ரகாசிக்க. அதாவது - பார்த்த பார்த்தவிடமெங்கும் இவர்களுடைய திரளின் ப்ரகாசமேயாயிருக் கை. (வீற்றிருந்த) இவர்கள் நடுவே தன் வ்யாவ்ருத்தி தோற்

---

அரு;—பத்தாம்பாட்டு. (எட்டுத்திசையுமித்யாதி). நரகாஸுரவதம்பண் ணி க்ருஷ்ணன் ராஜகந்யகாஸஹஸ்ரங்களைக் கலியாணஞ்செய்தா னென்கிற ப்ரமாணத்தையுட்கொண்டருளுகிறார் (ஶாஸ்த்ரோக்தமானவித்யாதி), "எண் ணிறந்த பெரும்தேவிமார் எட்டுத்திசையிலும்விட்டுவிளங்க" என்றந்வயம்திரு வுள்ளம்பற்றியருளுகிறார் (அதாவதித்யாதி). (௧) "ஷோடஶஸ்த்ரீஸஹஸ்ராணி ... தேவ்யஸ்ஸஹஸ்ரம்ததா" என்கிறபடியே பரமபதநாதனுக்கு எண்ணிறந்த பெருந்தேவிமார் நடுவே வீற்றிருக்கையுண்டாயிருந்ததே யாகிலும், வீற்றிருக் கும் விமலனென்னாதே வீற்றிருந்த வென்று பூதநிர்தேசம் தோற்ற வருளிச் செய்கையாலே, க்ருஷ்ணவதார விஷயமென்று திருவுள்ளம்பற்றித் தாத்பர்ய மருளிச்செய்கிறார் (இவர்களித்யாதி). ஸ்த்ரீஜாதிகள் நடுவே புருஷனிருக் கும்போது வ்யாவ்ருத்தி ஸ்ப்புடதரமாயிருக்கவும், "வீற்றிருந்த" என்று விசே

---

(௧) ஸ்ரீகுண-ர.

லாரையும்விட்டுஎன்னொருத்தியோடும்விளங்காநின்றான்'' என்னும்படியாதல்; ஸௌபரியுடைய ஸ்த்ரீகளை, பிதாவழைத்துத் தனித் தனியே "பர்தா உன்னளவில்எப்படி'' என்ன "எனக்குப்ரியமாகவர்த்தித்துப்போரா நின்றான்'' என்று எல்லாருமிப்படி சொன்னார்களிறே. (க) "கல்லுங்கனை கடலும்'' (உ) "ஏபாவம்'' (ங) "பக்கம் நோக்கறியான்.'' அன்றியே "எண்ணிறந்தவெட்டுத்திசையும்'' என்கையால் பஞ்சாஶத்கோடியில் திக்கு முடியாதே. அன்றியிலே "பதினாறுமாயிரவர்'' என்கிற பரிகணனை யளவின்றிக்கேயென்னுதல்; அவன்தன்னையும் நாலிரண்டுபெட்டினி கொள்ளும் காலத்திலும் மற்றும் சிலஸ்த்ரீகளுண்டென்று பரிகணிக்கவொண்ணாதபடி அவனையுகப்பிக்க வல்லவர்களென்னுதல். (வீற்றித்யாதி) வேறுபாடு தோன்ற விருந்த விமலன். "ஒருவனுக்கு பகவத்ஸம்ருத்தியுண்டானால், அத்தால் வந்த ஸம்ருத்தி ஆஶ்ரிதரெல்லார்க்கும் வேணும்'' என்றிருந்த போதிறே தனக்கு வைஷ்ணவத்வமுண்டென்றறியலாவது. (விமலன்) ஸ்வார்த்த ப்ரதிபத்தியில்லாமையாலே விமலத்வமான வேறுபாடு தோன்ற விருந்தவனென்கிறது. இப்படியிருக்கிறவன் நித்யவாஸம் செய்கிறதிருமலை.

---

றும்படி ஸ்ரீமத்த்வாரகையிலே யெழுந்தருளியிருந்த. அதாவது - இத்தனை பேரோடும் பரிமாறுகிற விடத்தில் ஒரொருத்தரே "என்னையொழியவறியான்'' என்னும்படி பரிமாறுகையால்வந்த வீறுடைமைதோற்ற விருந்தவனென்கை. (விமலன்) இப்படி பரிமாறினவிதில் ஸ்வார்த்தப்ரதி பத்தியாகிறதோஷமில்லாதவனென்கை. இவனுடைய ஸமஸ்தவ்யாபாரங்களும் ஆஶ்ரிதரை ரக்ஷிப்பிக்கைக்கு உறுப்பாயிறேயிருப்பது. இப்படியிருந்துள்ளபாரதந்த்ர்யந்தான் ப்ரணயித்வ ப்ரயுக்தமாகையாலே இவன்றனக்கு ஏற்றத்துக்குடலாமித்தனையிறே. (மலை) ஏவம் பூதனானவன் இந்த ஸ்வபாவமெல்லாம் ப்ரகாசிக்கும்படி வர்திக்கிற மலை.

---

ஷித்ததுக்குத்தாத்பர்யமருளுகிறார் (அதாவதித்யாதி).வீற்றிருந்தவென்றவநந்தரம் விமலனென்றச் சேர்த்திக்குத் தாத்பர்யமருளுகிறார் (இப்படியித்யாதி). "[illegible]'' ஸ்வரூபம் ஸ்வாதந்த்ர்யம்பகவத:'' என்கிறபடியே நிரங்குஶஸ்வ தந்த்ரனுக்கு ஸ்வார்த்தப்ரவ்ருத்தியில்லையென்னக்கூடுமோ? ஆனாலும் ஸ்த்ரீ பாரவஶ்யம் குணமாமோ வென்னவருளுகிறார் (இவனுடைய வித்யாதி வாக்யத்வயத்தாலே).

---

(க) பெரி-திருவ-கூஅ. (உ) தி-வாய்-உ-உ-உ. (ங) தி-வாய்-உ-க-ஓ.

மூ.—மருதப்பொழிலணி மாலிருஞ்சோலைமலைதன்னைக்
கருதியுறைகின்ற கார்க்கடல் வண்ணனம் மான்றன்னை
விரதங்கொண்டேத்தும் வில்லிபுத்தூர் விட்டுசித்தன்சொல்
கருதியுரைப்பவர் கண்ணன் கழலிணை காண்பரே. (௧௧)
பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.

---

(பட்டியித்யாதி) தனக்கு வஸ்தவ்யமான பூமியிலே மேய்ந்து வந்து கிடக்கிற பெண்ணானையானவைகள் அருகுகிடக்கிற களிற்றுனைகளை உரோசியெழுப்பி; ஸ்பர்ஶித்தெழுப்பி யென்றபடி. (சென்று) அதினிஷ்டத்துக்கிடாக நெஞ்சு பொருந்திச்சேர்ந்து. (மாலையித்யாதி) இராக்காலத்தில் ப்ரணயரோஷந்தலையெடுத்து ஊடலும் கூடலுமாய், ஒன்றுக்கொன்று இருய்த்து விளையாடுதல், தீர்க்கஸம்ஶ்லேஷந்தானுதல் தெட்டல்-வாத்ஸ்யாயநமுதிர்ச்சிபோலேயிருக்கை

இத்தால் ஆசார்யனானவன் சிஷ்யன் பக்கலிலே ஶமதமாதிகளையுண்டாக்கி ஆத்மகுணத்தை விளைத்து அவனுடைய ப்ரார்த்தநாநுரூபமாக அவகாஶப்ரதாநம்பண்ணிஶாஸ்த்ரங்களையுமொருங்க விட்டு கைங்கர்யங்களையும் மிகவுமங்கீகரிக்கு மென்னுமிடம் தோற்றுகிறது. ... ... ... (௧௦)

அவ;—நிகமத்தில் இத்திருமொழி கற்றூர்க்குப்பலம் சொல்லித் தலைக்கட்டுகிறார்.

---

(பட்டிப்பிடிகள்) ஸ்வைரஸஞ்சாரிகளான பிடிகளானவை. (பகடுறிஞ்சிச்சென்று) *களிற்றுனையோடே ஸ்பர்ஶித்துச்சென்று. ஸ்பர்ஶத்தால் ஸம்ஶ்லேஷத்தைச் சொல்லுகிறது. "சென்று" என்று - அதிலுண்டான காலதைர்க்க்யத்தைச் சொல்லுகிறது. (மாலைவாய்) ராத்ரியிடத்திலே. (தெட்டித்திளைக்கும்) அந்த ஸம்ஶ்லேஷரஸம் முற்றிக்கனியாநிற்கும். தெட்டல்-முற்றல். திளைத்தல் - கனித்தல். (தென்திருமாலிருஞ்சோலையே) இப்படி யிருந்துள்ள சிறப்பையுடைய திருமாலிருஞ்சோலைமலை யென்கை. (௧௦)

அ,—நிகமத்தில், இத்திருமொழிகற்றூர்க்குப் பலம்சொல்லித் தலைக்கட்டுகிறார்.

---

"பகடு-புருஷகஜத்தை, உருஞ்சி-ஸ்பர்ஶித்து" என்றுஶப்தார்த்தமாய், அத்தையருளுகிறார் (களிற்றுனையித்யாதி). (சிறப்பு)-அதிஶயம். ... (௧௦)

ஸ்வா;—(மருதவித்யாதி) தவிழ்ந்து முறிக்க வேண்டாத மரங்களாகையாலே தழைத்து நிழல்கொடுக்கும் மருதமரப்பொழிலாலும், மற்றும் நாநாவான புஷ்பபலத்ருமங்களாலும் அலங்க்ருதமான திருமலையை. (தன்னை) தன்னுடைய போக்யதையாலே (க)"நங்கள்குன்றம் கைவிடான்" என்கிறபடி அழகர்தம்மை வைத்த கண்வாங்கி நீங்கவொட்டாதென்னுமிடம் தோற்றுகிறது. (கருதியுறைகின்ற) நித்யவிபூதியிலிருப்பில் விருப்பத்திலுங்காட்டில் மிகவும் விரும்பிக் கருதினதாகையாலே, நித்யவாஸம் செய்யுமென்று தோற்றுகிறது. (கார்க்கடல் வண்ணனம்மான் தன்னை) கருங்கடல் வண்ணனென்னுதல்; மேகம்போலேயும் ஸமுத்ரம்போலேயுமிருக்கிற திருநிறத்தை யுடையவனென்னுதல். (அம்மான்தன்னை) எனக்கு நிருபாதிக ஸேஷியானவனை.

(விரதமித்யாதி) ஸ்வரூபாநுரூபமான மங்களாசாஸநமிறே

---

வ்யா;—(மருதமித்யாதி) மருதஞ்சோலைகளாலே அணியப்பட்டிருப்பதாய், "திருமாலிருஞ்சோலை" என்னும் திருநாமத்தை யுடைத்தாயிருந்துள்ள திருமலைதன்னை. "தன்னை" என்கையாலே இதினுடைய போக்யதாதிசயத்தைச் சொல்லுகிறது. (கருதியுறைகின்ற) நித்யவிபூதியிலுங்காட்டில் இதுவே நமக்கு வாஸஸ்தாநமென்றுவிரும்பி, (க)"நங்கள் குன்றம் கைவிடான்" என்கிறபடியே நித்யவாஸம் பண்ணுகிற. (கார்க்கடல் வண்ண னம்மான்றன்னை) கருங்கடல்போலே யிருண்டு ஸ்ரமஹரமான திருநிறத்தையுடைய ஸ்வாமியானவனை.

(விரதமித்யாதி) ஸ்வஸேஷத்வாநுரூபமான மங்களாசாஸநமே

---

அரு;—நிகமத்தில்;-(அணியப்பட்டிருப்பதாய்) அலங்கரிக்கப்பட்டிருப்பதாய். "கருதி"என்றதுக்கு-விரும்பியென்றர்த்தம் திருவுள்ளம்பற்றி,எத்தைக் காட்டில் விருப்பமென்னுமாகாங்க்ஷயிலேயருளுகிறார்(நித்யேத்யாதி).உறைகின்ற வென்றவர்த்தமானார்த்தம் (நங்கள் குன்றமித்யாதி).

விரதமென்றது வ்ரதமென்றாய், அது மங்களாசாஸநரூபமென்றும், அர்சாவதார ப்ராவண்யமென்றும் திருவுள்ளம்பற்றி யோஜநாத்வய மருளுகிறார் (ஸ்வஸேஷத்வேத்யாதி வாக்யத்வயத்தாலே). (அர்சாவதாரம்) என்றதுக்கு (என்னப்படும் விஷயமாகையாலே) என்றதந்தோடந்வயம். ... (கக)

ஜீயர் திருவடிகளேசரணம்.

---

(க) தி-வாய்-க0-எ-ச.

இவர்க்கு வ்ரதமாவது. எல்லாரும் யாதானும் பற்றி நீங்கும் வ்ரதமும், அவனைப்பற்றி அந்த வ்ரதத்தை விடுவித்துக்கொள்கையுமின்றிக்கே, (க)"தேய்த்துக்கிடக்கநானொட்டேன்" என்று அவனுடைய ப்ரதிஜ்ஞாரூப வ்ரதத்தைக் குலைக்கும்படியிறே இவருடைய மங்களாசாஸநரூபமான வ்ரதந்தானிருப்பது. (வில்லிபுத்தூர் மன்னிட்டு சித்தன் சொல்) திருமாளிகைக்கு நிர்வாஹகரான வாழ்வாரருளிச் செய்ததை ஸாபிப்ராயமாக புத்திபண்ணி அநுஸந்திக்குமவர்கள் அத்யந்தஸுலபனான க்ருஷ்ணன் திருவடிகளை,(உ)"சேவடி செவ்விதிருக்காப்பு" என்று காணப்பெறுவர்கள். இதிறே*பாதப்பயன் கொள்ள வல்லபத்தியாவது. .... .... (கக)

பிள்ளை திருவடிகளேசரணம்.

## நாலாம்பத்து இரண்டாந்திருமொழி முற்றிற்று.

---

தமக்கு வ்ரதமாகக்கொண்டு திருப்பல்லாண்டுபாடியேத்துமவரான ஸ்ரீவில்லிபுத்தூரில் பெரியாழ்வாரருளிச்செய்தத்தை. அன்றிக்கே அர்ச்சாவதாரம் (ரு) "அடியோமுக்கே யெம்பெருமானல்லீரோ நீர்" என்னப்படும் விஷயமாகையாலே, "இவ்விஷயத்தை யேத்தக்கடவோம்" என்னும் வ்ரதத்தையுடையராய்க்கொண்டுமங்களாசாஸநரூபேண ஏத்துமென்னவுமாம். (கருதியுரைப்பவர்) ஸாபிப்ராயமாக புத்திபண்ணி அநுஸந்திக்குமவர்கள். (கண்ணன்கழலிணை காண்பரே) அத்யந்தஸுலபனான க்ருஷ்ணன் திருவடிகளைக் கண்டநுபவிக்கப் பெறுவர். ... .... .... (கக)

பெரியஜீயர் திருவடிகளேசரணம்.

## நான்காம்பத்து மூன்றாந்திருமொழி உருப்பிணிநங்கை ப்ரவேசம்.

——[*]——

அவ.—கீழ்த்திருமொழியிலே ராமாவதார குணசேஷ்டிதங்க

---

அரு;—உருப்பிணிப்ரவேசம். கீழ்த்திருமொழியிலே அழகரையும் திருமலையாழ்வாரையு மநுபவித்தவர்த்ருப்தி பிறவாமையாலே மீளவுமநுபவிக்கிறாரென்று ஸங்கதியருளிச் செய்யாநின்று கொண்டு பௌநருக்த்யத்தையும் பரிஹரிக்கிறார் (கீழித்யாதி).

---

(க) உ-ச-க. (உ) திருப்பலா-க. (ரு) தி-மொ-ச-௬-௫.

ஆழ்வார் திருவடிகளேசரணம்.

# நாலாம்பத்து மூன்றும் திருமொழி
## உருப்பிணி நங்கைப்ரவேசம்.

---

ஸ்வா;—இதுவும் கீழ்ப்போந்தரீதி பின்னாட்டிச் சில உபமாந விசேஷங்களோடே அவதாரங்களிலுண்டான வ்யாபாரங்களையும் கூட்டி அநுஸந்திக்கிறார். *

---

னும் க்ருஷ்ணாவதாரகுண சேஷ்டிதங்களுமெல்லாம் ப்ரகாசிக்கும் படி அழகர் திருமலையிலே யெழுந்தருளியிருக்கிறபடியை அநுப வித்துக்கொண்டு, "அவரினுங்காட்டில் அவர்விரும்பி யெழுந்தருளி நிற்கிற திருமலேயே பரமப்ராப்யம்" என்று அநுஸந்தித்து, திரு மலையாழ்வாருடைய வைபவத்தை பஹுமுகமாகப்பேசி யநுபவி த்தார்; அப்படி அநுபவித்த வளவால் தமக்குப் பர்யாப்தி பிறவா மையாலே மீளவும் அவதாரகுண சேஷ்டிதங்களெல்லாம் ப்ரகாசிக் கும்படி அழகர்திருமலையில் நிற்கிற நிலையை, கீழ்ச்சொன்ன க்ரம மன்றிக்கே முகபேதநபேசி, திருமலைவைபவத்தையும் கீழ் உக்த ப்ரகாரமன்றியே முகபேதந பலபடியாகப்பேசி யநுபவிக்கி றார் - இத்திருமொழியில்.—

கீழ் - ராமாவதாரகுணசேஷ்டிதம் முன்னாக க்ருஷ்ணாவதார குண சேஷ்டிதங்களையும் அழகர்பக்கலிலே கண்டநுபவித்தார்; இதில்-க்ருஷ்ணாவதாரகுணசேஷ்டிதம் முன்னாக ராமாவதாரகுண சேஷ்டிதங்களையும், அவதாராந்தரகுணசேஷ்டிதங்களையுமெல்லாம் அழகர்பக்கலிலே தர்ஸித்தநுபவிக்கிறார். முத்துக்கோக்கவல்லவன் முகமறிந்து கோத்தவாறே அது விலேயறுமாபோலே, அவதார குண சேஷ்டிதங்களும் விசேஷஜ்ஞரான விவர் சேர்த்தநுபவிக் கிற வாசியாலே நிறமும் ரஸமுமுண்டாயிருக்குமிறே. ததீயவிஷ

---

அழகரை யநுபவிக்குமிடத்தில் முகபேதத்தை யுபபாதிக்கிறார் (கீழ் ராமாவதாரேத்யாதி). முன்பின்னாக வநுபவித்த மாத்ரத்தாலே விசேஷமென் னென்ன, த்ருஷ்டாந்தமுகேநவருளுகிறார் (முத்தித்யாதி). (நிறம்) சோபை. (ரஸம்) ஆநந்தம். திருமலையாழ்வாரை முகபேதநவநுபவித்ததை விவரிக்கி றார் (ததீயேத்யாதி). ததீயசப்தம் திருமலையாழ்வாரைச்சொல்லுகிறது. (விசே

மூ.—

உருப்பிணிநங்கைதன்னைமீட்பான் றொடர்ந்தோடிச்சென்ற
உருப்பனையோட்டிக் கொண்டிட்டுறைத்திட்ட வுறைப்பன்மலை
பொருப்பிடைக் கொன்றைநின்று முறியாழியும் காசுங்கொண்டு
விருப்பொடுபொன் வழங்கும் வியன்மாலிருஞ்சோலையதே. (௧)

---

ஸ்வா;—முதற்பாட்டு. (உருப்பிணியித்யாதி)ருக்மிணிநாய்ச்சி
யாரை க்ருஷ்ணனும் கொண்டுபோவான். ஶிசுபாலன் முதலான

---

யத்திலும் விசேஷணபேதத்தாலே விசேஷ்யத்துக்கு ரலவிசேஷ
முண்டாகக் கடவதிறே. ஆக, இது கீழ்த்திருமொழிக்கும்இத்திரு
மொழிக்கு முண்டான விசேஷம். .... ... ... *

வ்யா;—முதற்பாட்டு. (உருப்பிணிநங்கைதன்னை) ருக்மிணிப்
பிராட்டி தன்னை. "நங்கை" என்று இவளுடைய குணபூர்த்தியைச்
சொல்லுகிறது. அதாவது பித்ராதிகளெல்லாம் புறம்பே கொ
டுப்பதாக ஸங்கல்பித்து, அதுக்கீடான உத்ஸவமும் நடத்திச்செல்
லாநிற்க, அந்த அந்யசேஷத்வத்துக்கு வெருவி "இவ்வளவிலே
க்ருஷ்ணன்வந்து கைக்கொண்டிலனாகில் நான் முடிவன்" என்று
வ்யவஸிதையாயிருந்த குணபூர்த்தியிறே; இப்படி அவள் வ்யவஸி
தையாயிருக்கிற வளவிலே, புறச்சோலையிலே நின்று ஸ்ரீபாஞ்சஜந்
யத்தை முழக்கிஅந்த த்வநியாலே அவளுக்குப்ராணப்ரதிஷ்டை
யைப்பண்ணி, விரைந்துசென்று கைக்கொண்டு தேரிலேயேற்றிக்
கொண்டு போராநிற்கச்செய்தே.(மீட்பான் றொடர்ந்தோடிச்சென்ற)
"இப்படிப(வெ)லத்திலேகொண்டுபோகையாவதென்?"என்றுயுத்த

---

ஷண பேதத்தாலே) இத்யாதிக்கு திருப்பதி வளப்பத்தைக் கீழ்த்திருமொழி
யில் சொன்னபடியன்றிக்கே வேறுபடச்சொல்லுகையாலே விசேஷ்யமான
திருப்பதியை யநுபவிக்கையிலொரு ஆநந்தமுண்டாமென்று கருத்து. ... *

அரு;—முதற்பாட்டு. (உருப்பிணியித்யாதி). "நங்கைதன்னைமீட்பான்"எ
ன்று அவன்மீட்கைக்குறுப்பானகுணபூர்த்தியென்று தோன்றுமைக்காகவிவரிக்
கிறார் (அதாவதித்யாதி). (வெருவி) என்றது-பயப்பட்டென்றபடி. ருக்மி
ணிப் பிராட்டியை ருக்மன் மீட்கைக்கு ப்ரஸக்தியையருளிச்செய்துகொண்டு
மேலுக்கவதாரிகையிடுகிறார் (இப்படியித்யாதி), "ஓட்டி" என்றது-தோற்பித்
தென்றபடி. க்ருஷ்ணன் அவனைக்கொல்லாமல் பிடித்துக்கொள்ளுவானென்

ராஜாக்கள் அஶக்யமென்றுவிட, ருக்மன்தானும் மீட்பான்தொடர்ந் தோடிச் செல்வான். அவனை யோட்டிப்பிடித்துக் கொண்டு தேர்த் தட்டிலேயிட்டுச்சிக்கெனப்பரிபவித்திட்ட. (உறைப்பன்மலை)நாய்ச் சியாரை விடாமல் வ்யவஸித்துக் கைக்கொண்டவன் மலை.

(பொருப்பித்யாதி)கொன்றைகள்பொருப்பிடைநின்றுபொன் முறியாழியும் காசுங்கொண்டு விருப்பொடு வழங்கா நிற்கும்

---

ம்பண்ணி மீட்பதாகப்பின்பற்றியோடிவந்த. (உருப்பனையோட்டிக் கொண்டிட்டு) ருக்மனை ஒட்டிப்பிடித்துக்கொண்டு தேர்த்தட்டிலே யிட்டு. அதாவது - ருக்மிணிப்பிராட்டிக்குத் தமையனாகையாலே, "இவனைக்கொல்லில் இவள் முகம் கருகும்" என்று அவனைப்பிடித் துக்கொண்டுவந்து தேர்த்தட்டிலே கட்டியிட்டுவைத்தமையைச் சொல்லுகிறது. (உறைத்திட்ட) சிக்கனப்பரிபவித்திட்ட. அதா வது - தேஜோவதமாம்படி தலையைச் சிரைக்கை முதலான பரிப வங்களைப் பண்ணுகையிறே. (உறைப்பன்மலை) ருக்மிணிப் பிராட் டியைச் சிக்கனக் கைக்கொண்டு, மீட்கவந்த ருக்மனையும் பங்கித் துவிட்ட மிடுக்கையுடையவன் வர்த்திக்கிற மலை.

(பொருப்பிடைக் கொன்றை நின்று) கொன்றைகளானவ்வ மலையிடத்திலே நின்று. (பொன்-முறியாழியும் காசுங்கொண்டு) பொன்னுண்டான முறிந்த மோதிரத்தையும்காசையுங்கொண்டு. முறிந்த பொன்மோதிரமும் பொற்காசும்போலே யாய்த்து - இதி னுடைய பூவிலுள்ள நரம்பும் இதழுமிருக்கும்படி. (விருப்பொடு

---

னென்னவருளுகிறார் (அதாவது ருக்மிணியித்யாதி). (கருகும்) என்றது - கருக்குமென்றபடி. (சொல்லுகிறது) என்றவநந்தரம், "என்கை" என்று சே ஷம். (பரிபவித்து) என்று ப்ரமாணப்ரஸித்தியாலே அர்த்தஸித்தம். (தே ஜோவதமாம்படி) பஹுமாநஹாநியாம்படி. "உறைப்பன்" என்றதுக்கு மிடுக் கையுடையவனென்றர்த்தமாய், அந்தமிடுக்கை இரண்டு வகையாக விவரியா நின்றுகொண்டு ஸப்தார்த்தமுமருளுகிறார் (ருக்மிணிப்பிராட்டியையித்யாதி).

பொன்விளங்குமென்றவிடத்தில் பொன்பதத்தை முறியென்றத்தோ டந்வயித்து ப்ரதீகமெடுத் தருளுகிறார் (பொன்முறியித்யாதி). (முறிந்த) என்றது - ஒடிந்தவென்றபடி. "பொன்" என்றதை "காசு" என்றத்தோடநு

மூ.—கஞ்சனுங் காளியனுங் களிறுமருது மெருதும்
வஞ்சனையின்மடிய வளர்ந்தமணிவண்ணன்மலை
நஞ்சுமிழ்நாக மெழுந்தணவி நளிர்மாமதியைச்
செஞ்சுடர்நாவளைக்குந் திருமாலிருஞ்சோலையதே. (௨)

(வியன்மாலிருஞ்சோலையதே) வியன்—வேறு பாடு. இங்கு வழங்கி னாலும் கைக்கொள்வாரில்லை, கைக்கொள்ளத் தகுதியானரை இங்கு வரவொட்டார்கள். இத்தால் தந்தாமுக்கடைத்த விடங்களிலே நில்லாவிட்டால், ஸௌமநஸ்யம் ஸ்ப்ருஹாவஹமானாலும் நிஷ்ப்ரயோஜநமென்று தோற்றுகிறது. இவ்வளவே யன்றிக்கே நின்ற விடத்துக்கு அவத்யாவஹ மென்றும் தோற்றுகிறது. இதுதானெல்லாம் வேண்டுகிறது அங்கேதான் தோன்றநிற்கிலிறே. இது தன்னையிறே நிஷ்ப்ரயோஜநத்துக்கு நிதர்சநமாக வாழ்வார் திருமகளார், பெரியாழ்வார் வயிற்றிலே பிறக்கையாலும், பிறந்தேன் நானைகையாலும் அநந்யார்ஹையானாலும்இரண்டுதலையும்உபேக்ஷிக்கும்படிநின்று தூங்காநின்றேனென்றதும். "இரண்டுதலையும்" என்றது அழகரையு மாழ்வாரையுமிறே. (க) "ஜநிகூாஹஶிக்ராஷி-ஜநித்வாஹமித்யாதி" (அதே) உறைப்பன்மலையதே; அதுவே. (க) "திருமலையதுவே" என்பாரைப்போலே.

வழங்கும்) இவற்றை விருப்பத்தோடே கொடாநிற்கும். பொன் மோதிரங்களையும் பொற்காசுகளையும் வாரிக்கொண்டு ஆதரத்தோடே பிறர்க்குக் கொடுப்பாரைப்போலே யாய்த்து - இவை பூச்சொரியும்படி. (வியன்மாலிருஞ்சோலையதே) இப்படி யிருந்துள்ள வளப்பத்தை யுடைத்தாகையாலே விஸ்மயநீயமாய், "திருமாலிருஞ்சோலை" என்னும் பேரை யுடைத்தாயிருக்கிற வதுவே. அதுவென்று - ப்ரஸித்தியைப்பற்றச் சொல்லுகிறது. ... (க)

வ்யா.—இரண்டாம்பாட்டு. (கஞ்சனித்யாதி) *சாதுசனத்தை

ஷங்கித்துத் தாத்பர்யமருளுகிறார் (முறிந்தவித்யாதி). (நரம்பு) என்றது - தாது. கீழ்வாக்ய விவரணம் (பொன்மோதிரங்களையுமித்யாதி). ... (க)

அரு;—இரண்டாம்பாட்டு. (கஞ்சனுமித்யாதி), சகாரங்களுக்கு ஸமுச்சயமாகில் ப்ரயோஜநமில்லாமையால், ப்ராதாந்யத்திலேயாக்கி அது தானும் கொடுமையிலேயென்று திருவுள்ளம்பற்றி தத்தத்ஸ்வபாவாநுகுணமாக விசேஷித்தர்த்தங்களருளுகிறார் (சாதுசனத்தையித்யாதி). "களிறுமருதும்" என்ற

(க) ஸ்தோ-ர.

ஸ்வா;— இரண்டாம்பாட்டு. (கஞ்சனித்யாதி) விபரீதவர்க்க மெல்லாம் தந்தாம் வஞ்சனைகளாலே தாம்தாம் முடியும்படியாகத் திருவாய்ப்பாடியில் வளர்ந்தவன், நீலரத்நம்போன்ற திருமேனியோடே நித்யவாஸம் செய்கிற திருமலை. (நஞ்சித்யாதி) மதிதவழ் குடுமியிலே நஞ்சுகக்கிப் பசித்துக்கிடக்கிற மாசுணப் பாம்புகள் அம்மலையிலே தவழுகிற குளிர்ந்த பூர்ணசந்த்ரனை அபிபவரூபேண "ஜாத்யுசித ஜீவநமன்றோவிது" என்று அதின்மேலே மிகவும் கிளம்

நலியும் கம்ஸனும், பசுக்களும் இடையரும் தண்ணீர் குடிக்கிற பொய்கையை விஷத்தாலே தூஷித்துக் கிடந்த காளியனும், (க) "புகுவாய் நின்ற போதகம்" என்கிறபடியே - கம்ஸனுடைய க்ருஹத்துக்குப் புகுகிற வழியிலேநின்று நலியத்தேடின ஆனையும், தவழ்ந்து போகாநிற்க வழியிலே நலிவதாக நின்ற யமளார்ஜுநமும், (உ) "வம்பவிழ்கானத்து மால்விடை" என்கிறபடியே - காட்டிலே நலிவதாகவந்த அரிஷ்டனாகிற ருஷபமும். (வஞ்சனையின் முடிய வளர்ந்த) தந்தாம் வஞ்சனைகளாலே தாந்தாம் முடியும்படியாகத் திருவாய்ப்பாடியிலே வளர்ந்த. காளியனுக்கு வஞ்சநமும் மடியும் - ஆத்மாபஹாரமும், அபிமாந பங்கமுமாகக்கடவது. (மணிவண்ணன்மலை) இப்படி விரோதிகள் * தேயவளர்ந்தவன் நீலரத்நம்போன்ற வடிவோடே நித்யவாஸம் பண்ணுகிற மலை.

(நஞ்சித்யாதி) * மதிதவழ்குடுமி ப்ரதேசத்திலே, நஞ்சையுமிழ்ந்து பசித்துக்கிடக்கிற மாசுணமானது, அந்தச் சிகரத்தின்மேலே தவழுகிற குளிர்ந்த பூர்ணசந்த்ரனை, தனக்குஆமிஷமாகக்கருதி கிளர்ந்துகிட்டி, சிவந்த தேஜஸ்ஸையுடைத்தான நாவாலே அவனை

விடத்தில், களிறும் என்றுச(உ)காரத்தைக்கூட்டிக்கொள்வதென்று திருவுள்ளம். காளியன் வஞ்சனை செய்யாதிருக்கவும் க்ருஷ்ணன் தான் அவனை ப்ராணனோடே விட்டிருக்கவும், இவர்வஞ்சனையில் மடியவென்னக்கூடுமோவென்ன வருளுகிறார் (காளியனுக்கித்யாதி).

நஞ்சுமிழ்கையாலே (பசித்துக்கிடக்கிற) என்றது-அர்த்தஸித்தம். (மாசுணம்) பாம்பு. நாவளைக்கைக்கு ஹேதுவருளுகிறார் (தனக்கித்யாதி).(ஆமிஷம்) மாம்ஸம், "நாகம் நளிர்மாமதியை எழுந்தணவிச்செஞ்சுடர் நாவளைக்கும் திருமாலிருஞ்சோலையதே மணிவண்ணன்மலை" என்றந்வயம் கண்டுகொள்வது.

(க) தி-மொ-கூ-டு-கூ. (உ) தி-மொ-க0-எ-கந.

௩,—மன்னுநரகன் றன்னைச் சூழ்போகி வளைத்தெறிந்து
கன்னிமகளிர்தம்மைக் கவர்ந்தகடல் வண்ணன்மலை
புன்னைசெருந்தியொடு புனவேங்கையுங் கோங்குநின்று
பொன்னரிமாலைகள் சூழ் பொழில்மாலிருஞ்சோலையதே.

---

ரிச் சிவந்து பெரிதான நாக்காலே வளைப்பதாகத் தேடா நின்றுள்ள திருமாலிருஞ்சோலை மணிவண்ணன்மலை.

இத்தால் பரார்த்தவாக்மிகள் பாகவதசேஷத்வபர்யந்தமான அந்த திவ்யதேசவாஸம் தன்னாலே அத்தைவிட்டு அந்த தேசத்திலே வர்த்திக்கிறவர்களுடைய குளிர்ந்து தெளிந்த ஜ்ஞாநத்தைக் கண்டு இழந்தநாளைக்கநுதபித்து மிகவும் ஊர்த்த்வ கதியை ப்ராபித்து பக்திபாரவஶ்யப்ரார்த்தனையாலே க்ரஹிக்கத் தேடுவர்களென்னுமர்த்த விசேஷங்கள் தோற்றுகிறது. பொய்யேயாகிலும் திவ்யதேசங்களிலே வர்த்தித்தால் ஒருநாளல்லா வொருநாளாகிலும் உயர்ந்தவர்களறிவைத் தாழ்ந்தவர்களாசைப்படுவர்களென்னுமிடம் தோற்றுகிறது. "உகந்தருளின நிலங்களிலே பொய்யேயாகிலும் புக்குப்புறப்பட்டீர், அந்திமதசையிலேகார்யகரமாம்" என்று பூர்வாசார்யர்களருளிச் செய்வர்களென்று ஆச்சாம்பிள்ளை யருளிச் செய்வர். அதாவது(க) "துஞ்சும்போதும்" இவ்விடத்திலே கணியனூர்சிறியாச்சான் வார்த்தையை நினைப்பது. விஷவாக்காவது-த்ரிவிதப்ராவண்ய நிபந்தனமான வார்த்தைகளிறே. ... .... (உ)

ஸ்வா;— மூன்றும்பாட்டு. (மன்னித்யாதி), விபரீதத்திலே நிலைநின்றநரகாஸுரனைவளைத்துஇளைப்பித்து·(எறிந்து)கொன்று.

---

அளையாநிற்கும் திருமாலிருஞ்சோலையாகிற வதுவே - மணிவண்ணன் மலை. ... .... .... .... (உ)

வ்யா;—மூன்றும்பாட்டு. (மன்னுநரகன்றன்னை) "ஆள்வலியாலும் தோள்வலியாலும் நமக்கோரலைச்சலில்லை" என்றுப்ரதிஷ்டிதனாயிருந்த நரகாஸுரனை· அதவா, விபரீதத்திலேநிலைநின்ற நரகாஸுரனை யென்னவுமாம். அதாவது - தேவர்களை யடர்த்து

---

அரு;—மூன்றும்பாட்டு. ( மன்னித்யாதி ) மன்னுவென்றதுக்கு ப்ரதிஷ்டிதனென்றும், விபரீதாசரணத்தில் நிலைநின்றவனென்றும் அர்த்தத்வயம் காட்டுகிறார் ( ஆள்வலியாலுமித்யாதி வாக்யத்வயத்தாலே ).
(உ) [illegible]

---

(க) தி-வாய்-க-க௦-௪. (உ) பாக-க௦.

(சூழ்போகி) விசாரித்து. (கன்னிமகளிர்தம்மை) பதினாறாயிரம் கந்யகைகளேயும், "அவர்களிஷ்டத்துக்கிடாக நம்மை யமைத்துப் பரிமாறக்கடவோம்" என்று விசாரித்துக் கைக்கொண்ட. "சூழ் போகி" என்று திருநாமமாகவுமாம். (கடல்வண்ணன்மலை) இவர்களை அங்கீகரித்த பின்பு தன்னிறம் பெற்றபடி.

---

தேவஸ்த்ரீகளைப்பிடித்து, அதிதியினுடைய குண்டலமளவாகப் பறித்துக்கொண்டுபோந்து குடியிருக்கமாட்டாமல் இந்த்ரன்வந்து ஸ்ரீமத் த்வாரகையிலே கூப்பிடும்படி பண்ணினவனிறே. (சூழ் போகிவளைத்தெறிந்து) இந்த்ரன் வந்து விண்ணப்பஞ்செய்த வநந்தரம் "இனியிவனை நிரஸிக்கக்கடவோம்" என்று நிரஸிக்கும் ப்ரகாரமும் திருவுள்ளத்திலே விசாரித்து, ஸத்யபாமைப் பிராட்டியோடே கூடப் பெரிய திருவடியை மேற்கொண்டு திருவாழிதொடக்கமான திவ்யாயுதங்களோடே ப்ராக்ஜ்யோதிஷ புரத்திலே எழுந்தருளி, தப்பவொண்ணாதபடி அவனை வளைத்துக்கொன்று. சூழ்ச்சியாவது - விசாரம்; விளைத்தல் - போக்கறுத்தல்; எறிதல் - சேதித்தலாய், திருவாழியாலே யறுத்துப்பொகட்டமையைச் சொல்லுகிறது. (கன்னிமகளிர்தம்மைக் கவர்ந்த) அவன்றான் பாணிக்ரஹணம் பண்ணுவதாக அங்கு மிங்கும் திரிந்து † பொறுக்கிக் கொண்டுவந்து திரட்டிவைத்த கந்நிகைகளானபதினாறாயிரத்தொரு நூறு ஸ்ரீகளையும் கைக்கொண்டுபோந்து, ஸ்ரீமத் த்வாரகையிலே பாணிக்ரஹணம்பண்ணித் தனக்கு தேவிமாராக்கியருளின. (கடல் வண்ணன்மலை) நரகவதம்பண்ணி இந்த்ராதிதேவர்களை ரக்ஷிக்கையாலும், அவன் திரட்டிவைத்தகந்நிகைகளைக்கைக்கொண்டுபோந்து திருமணம்புணர்ந்து அவர்களை உகப்பிக்கையாலுமுண்டானஹர்ஷத்தாலே, கடல்போன்ற திருநிறத்தையுடையனாயிருந்தவன் நித்ய வாஸம் பண்ணுகிற மலை.

---

[illegible] - இந்த்ரேண ஹ்ருதசத்ரேண ஹ்ருதகுண்டலபந்துநா । ஹ்ருதாமராத்ரிஸ்த்தாநேந ஜ்ஞாபிதோ பௌமசேஷ்டிதம்" என்றவசநத்தை உட்கொண்டு விபரீதத்திலே நிலைநிற்கையை விவரிக்கிறார் ( அதாவதித்யாதி ). கவருகையினர்த்தம் (கைக்கொண்டு) என்றது.

---

† (பா) பெருக்கி.

மூ.—மாவலிதன்னுடைய மகன் வாணன் மகளிருந்த
காவலைக்கட்டழித்த தனிக்காளைகருதும்மலை
கோவலர் கோவிந்தனைக் குறமாதர்கள் பண்குறிஞ்சிப்
பாவொலிபாடி நடம்பயில் மாலிருஞ்சோலையதே. (ச)

---

(புன்னையித்யாதி) ஸுவர்ணஸத்ருஶமான புஷ்பங்களை ஒழுகும்படி பொன்னரி மாலைபோலே தோற்றுவித்து நின்ற பொழிலாலே சூழப்பட்ட மாலிருஞ்சோலை - கடல்வண்ணன்மலை. இத்தால் ஸுமநாக்கள் பலரும் சேரும் தேசமென்கிறது. (ரு)

வ்யா;—நாலாம்பாட்டு. (மாவலியித்யாதி) மஹாபலிமகனான பாணனுடையமகளான உஷையிருந்த கந்யாக்ருஹத்தில் காவலை, தன்பேரனைவ்யாஜீகரித்தழித்த. (தனிக்காளை கருதும்மலை) அத்விதீயமான காளை. அதாவது-காமனைப்பெற்ற பின்பும் பரமபதத்தில்

---

(புன்னையித்யாதி) பொற்கென்ற பூக்களை யுடைத்தான புன்னையும் செருந்தியும் புனத்திலுண்டான வேங்கையும் கோங்கும் ஒழுங்குபடநின்று பூக்கையாலே, திருமலையாழ்வார்க்குப் பொன்னரிமாலைகள் சுற்றினாற்போலே யிருக்கும் பொழில்களையுடைய மாலிருஞ்சோலையாகிற வதுவே - கடல்வண்ணன்மலை. ... (ரு)

வ்யா;—நான்காம்பாட்டு. (மாவலியித்யாதி) மஹாபலிபுத்ரனான பாணனுடைய மகளான உஷையிருந்த. இத்தால் அவளுக்கு பிதாவாய் அபிமாநியானவனுடைய பலமும், அவன் இவளுடைய வைலக்ஷண்யத்துக்கீடாக வைத்த அரணும் தோற்றுகிறது. (காவலைக் கட்டழித்த) அவளிருந்த கந்யாக்ருஹத்தில் பிதாவானவன் செய்துவைத்த காவலை யெல்லாவற்றையும், பேரனான அநிருத்தாழ்வானுக்காகச் சென்று, அரணழித்த; அதாவது அநிருத்தாழ்வா

---

"பொன்னரிமாலைகள்" என்றதுக்கு அநுகுணமாக (பொற்கின்ற பூக்களையுடைத்தான) என்றது. (ஒழுங்குபடநின்று) பங்க்தியாகநின்று. (பொன்னரிமாலை) பொன்னாலே யுண்டானதர்ய், அரி - ஒளியை யுடைத்தான மாலையென்றபடி. ... ... ... ... ... (ரு)

அரு;—நாலாம்பாட்டு. (மாவலியித்யாதி) உஷையிருந்த காவலையென்று சொல்லாமல், வாணன்மகளிருந்த வென்றும், அவனை மாவலிதன்னுடைய மகனென்றும் விசேஷித்ததுக்குக் கருத்தையும், அவளிருந்த காவலென்றத்தாலே தோற்றுகிற வபிப்ராயத்தையுமருளுகிறார் (இத்தாலித்யாதி), திருப்பேர

படியே பஞ்சவிம்ஶதி வார்ஷிகனாயிருக்கை. (கருதும் மலை) பரம பதத்திலுங்காட்டில் மிகவுமபிமானித்து நித்யவாஸம் செய்கிறமலை.

(கோவலரித்யாதி) கோரக்ஷணம் விதேயமாம்போதும் ஜாதியிலே பிறக்கவேணுமே. (குறவித்யாதி) இனக்குறவர் வாழ்பாடாநின்றால்-இனமான குறமாதர்களும் அது தன்னையே பாடுமத்தனையிறே. பல்லாண்டொலியிறே அத்திருமலை தன்னிலுள்ளது. [குறிஞ்சிப்பண்பாவொலிபாடி நடம்பயிலாநிற்கும்மாலிருஞ்சோலையதே]. "நந்தன் மதலையைக்காகுத்தனை நவின்று" என்னுமாபோலே. (௪)

---

னைச் சிறைவைத்த நிமித்தமாகவிறே வாணபுரத்தேகெழுந்தருளி வாணனைஜயித்தது. அவனைஜயித்தபின்பிறே உஷை அநிருத்தனுக்கு சேஷமாய்த்து. அத்தைப்பற்ற "காவலைக்கட்டழித்த" என்கிறது. (தனிக்காளை கருதும்மலை) (க) "காமனைப்பயந்தகாளை" என்னுமாபோலே காமனைப்பெற்ற பின்பு அத்விதீயமான யௌவநத்தையுடையனாயிருந்தவன் பரமபதத்திலுங் காட்டில் இதுவே நமக்கு வாஸஸ்தாநமென்றுகருதி நித்யவாஸம்பண்ணுகிறமலை.

(கோவலர்கோவிந்தனை) கோரக்ஷணம் பண்ணுகிற ஜாதியிலே பிறந்து அவர்களிலே ஒருவனாய், கோவிந்தாபிஷேகம் பண்ணினவனை. (குறமாதர்கள்) குறப்பெண்களானவர்கள். (பண்குறிஞ்சிப்பாவொலிபாடி நடம்பயில்மாலிருஞ்சோலையதே)குறிஞ்சிப்பண்ணோடே கூடினபாட்டுக்களாலே ஒலிபெறப்பாடி, அப்பாட்டுக்கநுரூபமான ந்ருத்தத்தைப் பண்ணாநின்றுள்ளமாலிருஞ்சோலையாகிறவதுவே - தனிக்காளை கருதும்மலை. ... ... (௪)

---

அநிருத்தாழ்வானுக்கு உஷையை சேஷமாக்கின பின்பு தனிக்காளையென்னக்கூடுமோவென்ன, அபிப்ராய பூர்வகம் தாத்பர்யமருளுகிறார் (காமனையித்யாதி). (என்னுமாபோலே) என்றது-என்கிறபடியே யென்றபடி. (காமனைப்பெற்றபின்பும்) என்றது - அநிருத்தபிதாவான ப்ரத்யும்நனைப்பெற்ற பின்பெல்லாமென்றபடி.

(கோவிந்தாபிஷேகம் பண்ணினவனை) என்றது-கோக்களாலே கோவிந்தாபிஷேகம் பண்ணப்பட்டவனென்றபடி. பாவென்றதினர்த்தம் (பாட்டுக்கள்) என்றது. ... ... ... ... ... (௪)

---

(க) தி-வாய்-௧0-௨-௮.

மூ.—பலபலநாழஞ்சொல்லிப் பழித்த சிசுபாலன்றன்னை
அலைவலைமைதவிர்த்த வழகனலங்காரன்மலை
குலமலைகோலமலை குளிர்மாமலை கொற்றமலை
நிலமலை நீண்டமலை திருமாலிருஞ்சோலையதே. (ரு)

---

ஸ்வா;—அஞ்சாம்பாட்டு. (பலபலவித்யாதி) க்ஷீராப்தியில் நினைத்த வாஸனை ஹிரண்யராவண ஜந்மங்களில் நினைத்தவை கூசாமல் சொன்ன ப்ரபாசாரவாஸனைகள்; இவன்றான் அவற்றோடே யாக்கிக்கொள்ளுமளவன்றிக்கே, அவ்வாஸனை தாமும் இவன் இஜ் ஜந்மத்திலார்ஜித்த பாபவிசேஷங்களோடே, அவைதான் அல்ப மென்னும்படி, இவை வந்து கூடினபடி. இவையெல்லாத்தையும் நினைத்திறே, "பலபல நாழம் சொல்லிப்பழித்த" என்றது. நாழ்-குற்றம். பழித்தல்-ஸ்துதி நிந்தையாளுப் போதுமன்று, நிந்தாஸ்துதியுமன்று; நிந்தையே. (சிசுபாலன் தன்னை) அஸுரஜந்மத்திலே பிறந்து செய்த பாபங்களைப் போலன்றே ராஜஜந்மத்திலே பிறந்து த்ரிவிதகரணங்களாலும் செய்த பாபவிசேஷங்கள்.

---

வ்யா. ஐந்தாம்பாட்டு. (பலபலவித்யாதி) பலபலகுற்றங் களைச் சொல்லி நிந்தித்த சிசுபாலன்றன்னை. இவன் சொல்லும் தோஷங்கள் அநுகூலர்வாக்கால் சொல்லத்தக்கதல்லாமையாலே "நாழ்" என்கிறது. (நாழ்) குற்றம். "அது தனக்கு ஒரு ஸங்க்யை யில்லாமையாலே "பலபல" என்கிறது. அது தன்னை நெஞ்சால் நினைத்திருக்குமளவன்றிக்கே, பிறரறியும்படி வாய்விட்டுச் சொல் லுவதே" என்று "சொல்லி" என்கிறது.

---

அரு.—அஞ்சாம்பாட்டு. (பலபலவித்யாதி) ஶிசுபாலன் க்ருஷ்ண தோஷங்களைத் தனித்தனியே சொல்லியிருக்க, இவர் நாழென்று ஸாமாந்ய ஶப்தத்தாலே சொல்லுவானென் னென்னவருளுகிறார் (இவனித்யாதி). நூறென்று ஸங்க்யாதமான வசவுகளை க்ருஷ்ணனெண்ணிக்கொண்டானென் றிருக்க "பலபல" என்னக்கூடுமோ வென்னவருளுகிறார் (அது தனக்கித் யாதி). இத்தால் அவன்ஸதஸ்ஸில் சொன்னது நூறானாலும்ஜந்மாவதிசொன் னால் அவற்றுக்கு ஸங்க்க்யையில்லை யென்று திருவுள்ளம். நினைத்தென்னா தே சொல்லி யென்றதுக்குத் தாத்பர்யமருளுகிறார் (அது தன்னையித்யாதி).

(அலைவலைமைதவிர்த்த) நாட்டை நலிகிறவலைவலைத்தனத்தை
விக்ரஹஸௌந்தர்யத்தைக்காட்டித் தவிர்த்தானித்தனை. அல்லாது

(க) "கேட்பார்செவிசுடு கீழ்மை வசவுகளே வையும்" என்று
ரிறே - ஆழ்வார். அதாவது - பகவந்நிந்தைக்கு ஜீவநம்வைத்துக்
கேட்குமவர்களுடைய செவிக்கும் சுடும்படியான தண்ணிய வசவு
களைச் சொல்லிவைகை. "சேட்பால் பழம்பகைவன்" என்று இதுக்
கடியும் அருளிச்செய்தாரிறே அவர்தாமே;, அதாவது - ஹிரண்ய
ராவணஜந்மங்களே தொடங்கி மிகவும் ஸ்வபாவமாய்க்கொண்டு
வருகிற பழையதான பகையை யுடையவனென்றபடி. இவன்
ஒரோஜந்மங்களிலே பண்ணின ப்ராதிகூல்யத்துக்கு ஓரளவில்லை
யிறே. அவ்வவஜந்மங்களிலுண்டான காலத்தின் மிகுதியையும்,
பண்ணின ப்ராதிகூல்யத்தினுடைய மிகுதியையும், இவை யெல்லா
வற்றையும் நினைக்கிறது - பகையினுடைய பழைமையாலே. அந்த
வாஸனையாய்த்து - இந்த ஜந்மத்தில் இவன் இப்படி நிந்தைபண்
ணித் திரிகைக்கு ஹேது. இப்படி இவன் செய்து திரிந்த கொடு
மையை நினைத்திறே "சிசுபாலனை" என்னாதே, "தன்னை" என்று
இவர் ஊன்றி யருளிச்செய்தது.

(அலைவலைமைதவிர்த்தவழகன்) சரமதசையிலே தன்னழகைக்
காட்டித் தன்னளவில் த்வேஷத்தை மாற்றுகையாலே, "தான்"
என்றால் நிந்தித்துக்கொண்டு திரியும் அலைவலைத்தனத்தைப்போக்கி

"பிறரறியும்படிசொல்லுவதே" என்று இவரநுதபித்ததைக்கு ஸம்வாதம்
காட்டுகிறார் (கேட்பாரித்யாதி). அநுகூலர் பகவந்நிந்தையைக் கேளார்களா
கையாலே அவர்களைக் கேட்பாரென்னக்கூடாது; ப்ரதிகூலராகில்அவர்களுக்
குச் செவிசுடக்கூடுமோவென்ன (அதாவதித்யாதி). (நிந்தைக்கு) என்றது -
நிந்தை பண்ணுகைக் கென்றபடி. (ஜீவநம் வைத்து) என்றது - ஜீவநம்
கொடுத்தென்றபடி. பலபலநாழம்சொல்லிப்பழிக்கைக்கு ஹேதுவேதென்னு
மாகாங்க்ஷையிலே "தன்னை" என்றது - இதுக்கு ஹேதுவை ஸூசிப்பிக்கிற
தென்றருளிச்செய்யக்கோலி, நம்மாழ்வாரும் ஹேதுவையருளிச்செய்தாரென்
கிறார் (சேட்பாலித்யாதி). இதிலடியேதுசொல்லப்பட்டதென்னுமாகாங்க்ஷை
யிலே, எடுத்த பாசுரத்தை விவரித்துக் கொண்டு உபபாதிக்கிறார் (அதாவது
ஹிரண்யேத்யாதி). "சேழ்" என்றதினர்த்தம் (மிகவும்) என்றது. மிகுதியை
உபபாதிக்கிறார் (இவனொரோவித்யாதி வாக்யத்வயத்தாலே).

(க) தி-வாய்-எ-ரு-௩.

ப்ரேரகாதிகளாலும் நியமிக்கவல்ல சொக்கநாராயணர்க்குஜ்ஞாந பக்திவைராக்யங்களோடே மங்களாஸாஸநபர்யந்தமாக வடிமை செய்யுமாளாகப்பெறுவர். ... .... (கக)

பிள்ளை திருவடிகளே சரணம்.

—(*)—

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## பெரியாழ்வார் திருமொழி நாலாம்பத்து அஞ்சாம்திருமொழி ஆசைவாய் ப்ரவேசம்.

அவ;—கீழில் திருமொழியிலே, "ஆதியானடியாரையும் அடிமையின்றித்திரிவாரையும்" என்று ஸம்ஸாரிகள் பொல்லாங்கும் ஸ்ரீ வைஷ்ணவர்களேற்றமுமிறே சொல்லிற்று. ஸம்ஸாரிகளுக்கு பகவத்ஸம்பந்தமொத்திருக்க, அவர்களைக்கழிக்கைக்கடி ஸம்பந்த ஜ்ஞாநமில்லாமையிறே.(க)"வணக்கொடுமாள்வதுவலமே" என்று

அந்யபரமாகாதபடி நியமித்து அடிமைகொள்ள வல்லவனுக்கு அடிமை செய்யுமவர்களாகப் பெறுவர். (கக)

பெரியஜீயர் திருவடிகளேசரணம்.

## நாலாம்பத்து நாலாம்திருமொழி முற்றிற்று.

ஆசைவாய் ப்ரவேசம்.

கீழ்த்திருமொழியிலே "ஆதியானடியாரையும் அடிமையின்றித் திரிவாரையும்" என்று ஸம்ஸாரிகள் பொல்லாங்கும் ஸ்ரீவைஷ்ணவர்களேற்றமுமிறே சொல்லிற்று; ஸம்ஸாரிகளுக்கு பகவத் ஜ்ஞாநஸம்பந்தமொத்திருக்க, அவர்களைக்கழிக்கைக்கடி பகவத்ஸம்பந்தஜ்ஞாநமில்லாமையிறே. (க) "வணக்கொடுமாள்வது வலமே"

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:.

அரு;—ஆசைவாய்ப்ரவேசம்;—கீழ்நிந்த்யத்வேந ஸம்ஸாரிகள் ப்ரஸ்துதராகையால் அவர்களைக் குறித்து உபதேசிக்கிறாரென்று ஸங்கதியை தர்சிப்பிக்கிறார், (கீழித்யாதி). ஸம்பந்தமென்றது-வாஸ்தவமான சேஷத்வ ஸம்பந்தமென்றபடி. (ஜ்ஞாநம்)என்றவநந்தரம் "அவர்களுக்கு""என்றத்யாஹார்யம். அடிமையின்றித் திரிவர்களைக்குறித்து உபதேசித்தால் ப்ரயோஜநமென்னென்ன வருளுகிறார் ( வணக்கொடித்யாதி). (ஸமயத்திலே ) என்றவநந்தரம் "ஆகிலும்" என்று சேஷம். *

(க) தி-வாய்-க-ரு-அ.

மூ.—

ஆசைவாய்ச்சென்ற சிந்தையராகி யன்னையத்தனென் புத்திரர்பூமி
வாசவார்குழலாளென்றுமயங்கிமாளுமெல்லைக்கண்வாய்திறவாதே
கேசவா புருடோத்தமா வென்றுங்கேழலாகிய கேடிலீயென்றும்
பேசுவாரவ ரெய்தும்பெருமை பேசுவான்புகில் நம்பரமன்றே. (க)

---

சரமஸமயத்திலே பகவத் ஸமாச்ரயணம் பண்ணுகை ச்ரேஷ்ட்ட
மாகையாலே ஸம்ஸாரிகளைப் பார்த்து ஹிதோபதேசம் பண்ணி
யருளுகிறார் இத்திருமொழியால்.

அவ;—முதற்பாட்டு. திருநாமங்களைச் சொன்னவர்கள் பெ
றும் பேறு என்னால் சொல்லப்போகாதென்கிறார்.

ஸ்வா;—முதற்பாட்டு, (ஆசைவாயித்யாதி) ஸ்நேஹமிருந்த
விடத்திலே கைகழிந்த மநஸ்ஸையுடையராய்; * அன்னை யென்று
தொடங்கி வாசவார்குழலாளளவும் ஆசையிருக்குமிடம். (மயங்கி)
இவர்கள் பேரும் சொல்லமாட்டாதே மயங்கி, (மாளுமெல்லைக்
கண்) (க)“வைத்தநாள் வரையெல்லை குறுகி” என்கிறபடியேசரம
காலத்திலே, (வாய்திறவாதே) அவ்வளவிலே கீழ்ச்சொன்னவர்
பேர்களைச் சொல்லியழையாதே.

---

என்று ஸமயத்திலே பகவத்ஸமாச்ரயணம்பண்ணுகைச்ரேஷ்ட்ட
மாகையாலே ஸம்ஸாரிகளைப் பார்த்து ஹிதோபதேசம் பண்ணி
யருளுகிறார் இத்திருமொழியில். ... .... .... *

அவ;—முதற்பாட்டு. திருநாமங்களைச் சொல்லுமவர்கள் பெ
றும்பேறு என்னால் சொல்லப்போகாதென்கிறார்.

வ்யா.—(ஆசையித்யாதி) ஸ்நேஹமிருந்தவிடத்திலே கைகழி
ந்த மநஸ்ஸையுடையராய். * அன்னையென்று தொடங்கி, * வாச
வார்குழலாளளவும்ஆசையிருக்குமிடம். (மயங்கி)இவர்கள் பேரும்
சொல்லமாட்டாதேமயங்கி. (மாளுமெல்லைக்கண்) (க) “வைத்தநா
ள்வரை எல்லை குறுகி” என்கிறபடியே சரமகாலத்திலே. (வாய்திற
வாதே). அவ்வளவிலேகீழ்ச் சொன்னவர்கள் பேரைச்சொல்லி
யழையாதே.

---

அரு;—முதற்பாட்டு. (ஆசைவாயித்யாதி), கேசவாவித்யாதியை யெல்
லாம் கடாக்ஷித்து அவதாரிகை (திருநாமங்களை யித்யாதி). (அத்தன்) பிதா

---

(க) தி-வாய்-ரு-ரு-கூ.

அவர்கள் பேர் சொல்லவொண்ணாதாகில் பின்னையார் பேர் சொல்லுவதென்னில், (கேசவா) உங்கள் மரணவேதனைபோகவேணுமாகில் (௧) "கேஶவ꞉ க்லேஶநாஶந꞉-கேசவ꞉க்லேஶநாஶந꞉" என்னப்பாருங்கோள். (௨) "கெடுமிடராயவெல்லாம்கேசவாவென்ன" என்றுசொல்லக்கடவதிறே. (புருடோத்தமா) ஔதார்யம். அதாவது அநிஷ்டநிவ்ருத்தியு மிஷ்டப்ராப்தியும் பண்ணுகை. (கேழலாகிய கேடிலீயென்றும்) இவர்கள் கேடுபோனால்தன் கேடுபோச்சுதாக நினைத்திருக்கை. (பேசுவாரவரெய்தும் பெருமை) அவர்களேற்றத்துக்குப் பாசுரமிடப்போகாது. அவரென்னுமித்தனையிறே. அவர்கள் பெறும்பேற்றை நம்மால் பேசப்போகாது. (பேசுவான் புகில் நம்பரமன்றே) நம்மால் பேசித்தலைக்கட்டப்போகாது. கொடுக்கிறவன் தானறியுமித்தனை. அதாவது - "இதரஸங்கம் குலைப்ப பெறுவதாம், சரமகாலத்திலதிலே அவர்களை யழையாதொழி

அவர்கள்பேர் சொல்லவொண்ணாதாகில் பின்னையார்பேரைச் சொல்லுவதென்னில்; (கேசவா) உங்கள் மரணவேதனை போகவேணுமாகில் (௧) "கேஶவ꞉ க்லேஶநாஶந꞉—கேசவ꞉ க்லேசநாசந꞉" என்னப்பாருங்கோள். (௨) "கெடுமிடராயவெல்லாம் கேசவாவென்ன" என்று சொல்லக்கடவதிறே. (புருடோத்தமா) ஔதார்யம். அதாவது - அநிஷ்ட நிவ்ருத்தியும் இஷ்டப்ராப்தியும் பண்ணுகை. (கேழலாகிய கேடிலீயென்றும்) இவர்கள் கேடு போனால் தன்கேடு போச்சுதாக நினைத்திருக்கை. (பேசுவாரவரெய்தும் பெருமை.) அவர்களேற்றத்துக்குப் பாசுரமிடப்போகாது, "அவர்" என்னுமித்தனையிறே. அவர்பெறும்பேற்றை நம்மால், சொல்லப்போகாது. (பேசுவான்புகில்) பேசப்புக்கோமாகில். (நம்பரமன்றே) நம்மால் பேசித்தலைக்கட்டப்போகாது. கொடுக்கிறவன்றானறியுமித்தனை. அதாவது-"இதரஸங்கம்குலையப்பெறுவதாம் சரமகாலத்தில் அவர்களை அழையாதொழியப் பெறுவதாம்; நம்மு

(வாசம்) பரிமளம். (வார்) நீளுதல். (கேழலாகி) வராஹரூபியாய். (கேடிலீ) கேடில்லாதவனேயென்று சப்தார்த்தமாய், கேடில்லாமைக்கு ஹேதுவையருளுகிறார் (இவர்கள் கேடீத்யாதி). நம்பரமென்றதுக்கு வ்யாவர்த்த்யம் சொல்லுகிறார் (கொடுக்கிறவனித்யாதி வாக்யத்வயத்தாலே). (௧)

(௧) (௨) தி-வாய்-௧௦-௨-௧.

மூ;—

சீயினாற்சிறந் தேறியபுண்மேற் செற்றலேறிக் குழம்பிருந்தெங்கும்
ஈயினாலரிப் புண்டு மயங்கி எல்லைவாய்ச்சென்று சேர்வதன்முன்னம்
வாயினால்நமோநாரணாவென்று மத்தகத்திடைக் கைகளைக்கூப்பிப்
போயினாற்பின்னை யித்திசைக்கென்றும் பிணைக்கொடுக்கிலும்போக
[வொட்டாரே.

யப்பெறுவதாம்; நம்மையழைக்கப்பெறுவதாம்; தென்னவேற்றம்;
இதென்ன வேற்றம்'' என்று இதிலேற்றமறிந்து ஈடுபடுவானவனி
றே. ... .... .... .... ... ... (க)

அவ;—இரண்டாம்பாட்டு (சீயித்யாதி). இத்திருநாமம்சொன்
னவர்கள் மோக்ஷத்தைப் பெறுவர்களென்கிறார்.

ஸ்வா,—(சீயினால் சிறந்தேறியபுண்மேல்) சீயானது விஞ்
சிப்புடைப்பட்டபுண்ணின் மேலே. (செற்றலேறி) ஈயிருந்து முட்
டையிட்டு. (குழம்பிருந்து) அவை புழுத்து நீராய்ப்பாயுமளவில்,
(ஈயினாலரிப்புண்டுமயங்கி)அதுபொறுக்கமாட்டாமல்மூர்ச்சித்து.
(எல்லைவாய்ச்சென்று சேர்வதன் முன்னம்) சரமகாலத்தைச்
சென்று கிட்டுவதுக்கு முன்னே. (வாயினால்நமோநாரணாவென்று)
வாய்படைத்ததுக்கு ப்ரயோஜநம் பெறும்படி. ''எனக்குநானுரி
யேனல்லேன்; உனக்கு உரியேன்'' என்று சொல்லுகையிறே வாய்

டைய பேர்களைச்சொல்லப் பெறுவதாம்; இதென்னவேற்றம்!
இதென்னவேற்றம்'' என்றுஇதின்ஏற்றமறிந்துஈடுபடுவானவனிறே.

அவ.—இரண்டாம்பாட்டு. திருநாமஞ்சொன்னவர்கள் மோ
க்ஷத்தைப் பெறுவர்களென்கிறார்.

வ்யா:—( சீயினாற்சிறந்தேறிய புண்மேல் ) சீயானது விஞ்சி
உடைபட்ட புண்ணின்மேலே.(செற்றலேறி). ஈயிருந்து முட்டை
யிட்டு. (குழம்பிருந்து) அவைபுழுத்து நீராய்ப்பாயுமளவிலே. (ஈயி
னாலரிப்புண்டு) ஈயினாலே அரிப்புண்டு (மயங்கி) அதுபொறுக்கமாட்
டாமல் மூர்ச்சித்து. ( எல்லைவாய்ச்சென்று சேர்வதன்முன்னம் )
சரமகாலத்தைச்சென்று கிட்டுவதுக்குமுன்னே. (வாயினால் நமோ
நாரணாவென்று) வாய்படைத்த ப்ரயோஜநம் பெறும்படி. ''என

அரு;—இரண்டாம்பாட்டு. (சீயினாலித்யாதி) பிணைக்கொடுக்கிலுமித்யாதி
யைப் பற்றவவதாரிகை (திருநாமமித்யாதி).

படைத்தப்ரயோஜநம். (மத்தகத்திடைக்கைகளைக் கைகூப்பி) தலை படைத்தப்ரயோஜநம் பெற்று.

(போயினுல்) இப்படிச்செய்து, போயினுலென்றதுவழிபோக்குத்தானே ப்ரயோஜநமென்கை. இவனொருகால் தொழுதால் இதுக்குப்பலம் வழிபோக்கில் (க)"மற்றெல்லாம்கைதொழப்போய்"என்றும், (உ) "தொழுதனருலகர்கள்" என்றும் சொல்லுகிறபடியே,இவன்பார்த்தவிடமெல்லாம் அஞ்ஜலிக்காடாயிறேஇருப்பது,அங்குப்புக்காலும்,(ந)"ஸாஂஜலிபுடா:-பத்தாஞ்ஜலிபுடா:" என்றுஅங்கும்இதிறேபலம். இவனொருகால்ஆத்மஸமர்பணம் பண்ண,(ச)'ஆண்மின்கள்வானகமாழியான்தமர்' என்றுத்ரிபாத்விபூதியாக ஸமர்ப்பிப்பர்கள். ஒருகால் "நம:" என்ன, காலதத்வமுள்ளதனையும்(ரு) "நமோநாராயணய" என்று சூழ்ந்திருந்தேத்துகையிறேபலம். (பின்னையித்திசைக்கென்றும் பிணைக்கொடுக்கிலும்போக

க்கு நானுரியேனல்லேன், உனக்குரியேன்" என்று சொல்லுகையிறே வாய்படைத்ததுக்கு ப்ரயோஜநம். (மத்தகத்திடைக் கைகளைக்கூபபி) தலைபடைத்த ப்ரயோஜநம் பெற்று.

(போயினுல்) இப்படி செய்துபோனுல். போயினுலென்றது-வழிப்போக்குத்தானே ப்ரயோஜநமென்கை. இவன் ஒருகால் தொழுதால், இதுக்குப் பலம் வழிப்போக்கில், (க) "மற்றெல்லாம் கை தொழப்போய்" என்றும், (உ) "தொழுதனருலகர்கள்" என்றும் சொல்லுகிறபடியே இவன் பார்த்தப்பார்த்தவிடமெல்லாம் அஞ்ஜலிக்காடாயிறே யிருப்பது. அங்குப்புக்காலும் (ந) "ஸாஂஜலிபுடாஹ்ருஷ்டா:" என்றதிறேபலம். இவன் ஒருகால் ஆத்மஸமர்ப்பணம்பண்ண, (ச)"ஆண்மின்கள் வானகமாழியான்றமர்" என்று த்ரிபாத்விபூதியாக ஸமர்ப்பிப்பர்கள். ஒருகால் "நம:"என்ன, காலதத்வ முள்ளதனையும் * நமோநாராயணயவென்று சூழ்ந்திருந்தேத்துகையிறே பலம். (பின்னையித்திசைக்கென்றும் பிணைக்கொ

வழிப்போக்குத்தானே ப்ரயோஜநமென்னுமத்தை, கைகூப்பி யென்றத்தைக் கடாக்ஷித்து விவரிக்கிறுர் (இவனொருகாலித்யாதி வாக்யத்வயத்தாலே). நமோநாரணுவென்றத்தைப்பற்றி வழிபோக்கு ப்ரயோஜநமென்னுமத்தை உபபாதிக்கிறுர் (இவனொருகாலித்யாதி வாக்யத்வயத்தாலே). (உ)

(க) தி-மொ-ந-எ (உ) தி-வாய்-கo-கூ-ந. (ந) பார-ஆந‌ொ.
(ச) தி-வாய்-கo-கூ-௬. (ரு) திருப்பல்லா-கஉ.

மூ.— [சுற்றமிருந்து
சோர்வினாற்பொருள்வைத்ததுண்டாகிற்சொல்லு சொல்லென்று
ஆர்வினலும் வாய்திறவாதே யந்தகால மடைவதன்முன்னம்
மார்வமென்பதோர் கோயிலமைத்துமாதவனென்னுந் தெய்வத்தை
ஆர்வமேன்பதோர் பூவிட வல்லார்க் கரவதண்டத்தி லுய்யலுமாமே. [நாட்டி

வொட்டாரே) நித்யமுக்தரைப்பிணையிடிலும் போரவொட்டார்கள். அதுக்கடி *விண்ணுளார் பெருமாற்கடிமை செய்வாரையும் செறும் தேசமாகையாலே. அவன் தானும் * ஏற்றிவைத்தேணி வாங்குமவனிறே. இத்தால் கர்மமடியாக மீட்சியில்லையென்றபடி.

அவ;—மூன்றும்பாட்டு. (சோர்வித்யாதி) ஆத்மஸமர் பணம் பண்ணினார்க்கு யமவஶ்யதையில்லை யென்கிறார்.

ஸ்வா;—(சோர்வினால் பொருள்வைத்ததுண்டாகில்) முன்பு இவன் கையில் கண்டவையடைய (க)"அட்டைகள்போல் சுவைப்பர்" என்கிறபடியே, இவர்கையிலுள்ளவை நிஶ்ஶேஷமாகவாங்கிக் கொள்வர்கள். "இவர்களைக்காணுமல்வைத்ததுண்டாகில் சொல்லு சொல்லு" என்று ஒருகால் சொன்னப்போலே ஒன்பதின்கால்

டுக்கிலும்போகவொட்டாரே) நித்யமுக்தரைப்பிணையிடிலும் போகவொட்டார்கள். அதுக்கடி - * விண்ணுளார் பெருமாற்கடிமை செய்வாரையும் செறும் தேசமாகையாலே. அவன்றானும் * ஏற்றி வைத்தேணி வாங்குமவனிறே. இத்தால்-கர்மமடியாக மீட்சியில்லை யென்றபடி. ... .... .... .... ... .... (௨)

அவ.—மூன்றும்பாட்டு. ஆத்மஸமர்ப்பணம் பண்ணினார்க்கு யமவஶ்யதை யில்லையென்கிறார்.

வ்யா.—(சோர்வினால் பொருள்வைத்த துண்டாகில்) முன்பு இவன்கையில்கண்டதையடைய (க)"அட்டைகள்போல்சுவைப்பர்" என்கிறபடியே இவன்கையிலுள்ளவை நிஶ்ஶேஷமாகவாங்கிக்கொ

அரு;—மூன்றும்பாட்டு. (சோர்வினவித்யாதி) உத்தரார்த்தத்தையெல்லாம் கடாக்ஷித்து அவதாரிகை (ஆத்மேத்யாதி).

"சோர்வினால்"என்றது-காணுமலென்றாய், "வைத்ததுண்டாகில்" என்றயதி(ஶ்ரீ) ஶப்தத்தாலே வைக்கைக்கு யோக்யதையில்லையென்று தோன்றுகையால் அத்தையருளுகிறார் (முன்பித்யாதி).

(க) தி-வாய்-௯-௧-௨.

சொல்லி. (சுற்றுமிருந்து) "இவனொருத்தரையொருத்தரறியாமல் கொடுக்கில் செய்வதென்" என்று விடாதே சுற்றுமிருப்பர்கள். ஆத்ம பந்துக்களாகிலிறே, (க) "திருமாலைப் பாடக்கேட்டு வளர்த்ததனால்பயன்பெற்றேன்" என்பது. (உ) "துஞ்சும்போதழைமின்" இத்யாதி.

(ஆர்வினவிலும் வாய்திறவாதே) பகவத்பாகவதவிஷயங்களையும் ஆசார்யனையும் ப்ரக்ருதி பந்துக்களையும் மறைத்துவைத்த வர்த்தம்கொடுத்து வேட்ட விளையாள் வினவிலும்வாய்திறவாதே. இவர்களுக்கும்இவனுக்கும் "இவனையிழக்கப்போகிறோமென்கிறபயமன்று. இவன் வைத்த வர்த்தம் ஒருவருமறியாமல் மண்டின்று போகில் செய்வதென்" என்கிறபயம். இவ்வர்த்தத்தை நச்சிவரும் போதும் அக்காலத்திலே அவன் முகத்திலே விழிக்கவருகிறோமென்றிறே வருவது. (அந்த காலமடைவதன் முன்னம்) சரமகாலம் வருவதுக்கு முன்னே.

---

வாருவர்கள். இவர்களைக்காணாமல் வைத்ததுண்டாகில. (சொல்லு சொல்லென்று) ஒருகாற் சொன்னாற்போலே ஒன்பதின்கால் சொல்லி. (சுற்றுமிருந்து) "இவன் ஒருத்தரை ஒருத்தரறியாமல் கொடுக்கிற் செய்வதென்" என்றுவிடாதே சுற்றுமிருப்பர்கள். ஆத்ம பந்துக்களாகிலிறே, (க) "திருமாலைப்பாடக்கேட்டு வளர்த்ததனால் பயன் பெற்றேன்" என்பது. (உ) "துஞ்சும்போதழைமின்" இத்யாதி.

(ஆர்வினவிலும் வாய்திறவாதே) பகவத் பாகவத விஷயங்களையும் ஆசார்யனையும் ப்ரக்ருதிபந்துக்களையும் மறைத்துவைத்த அர்த்தங்கொடுத்துவேட்ட இளையாள்வினவிலும் வாய்திறவாதே. இவர்களுக்கும் இவனுக்கும் "இவனையிழக்கப் புகுகிறோமென்கிற பயமன்று, இவன்வைத்த அர்த்தம் ஒருவருமறியாமல் மண்டின்று போகிற் செய்வதென்?" என்கிறபயம். இவ்வர்த்தத்தை நச்சிவரும் போதும்அக்காலத்திலே "அவன் முகத்திலே விழிக்கவருகிறோம்" என்றிறே வருவது. (அந்தகாலமடைவதன்முன்னம்) சரமகாலம் வருவதுக்குமுன்னே.

---

ஆரென்று வினவுமிடத்தில் ஆவஶ்யகதை தோற்றுகையால் அத்தையருளுகிறார்(பகவதித்யாதி). (மறைத்து) என்றது-அறியாதபடிபண்ணியென்றபடி.

---

(க) தி செ-கச. (உ) தி-மொ க-க-௧௦.

(மார்வமென்பதோர் கோயிலமைத்து)ஹ்ருதயமென்றுப்ரஸித்தமாய்,அத்விதீயமானஸ்த்தாநத்தையுண்டாக்கி-(மாதவனென்னும் தெய்வத்தை நாட்டி) ஶ்ரியஃபதியென்று ப்ரஸித்தமாய் அத்விதீயமானவஸ்துவைப்ரதிஷ்டிப்பித்து. (க) "திருமாலிருஞ்சோலைமலையென்றேனென்னத் திருமால் வந்தென்னெஞ்சு நிறையப் புகுந்தான்" என்று இவர் அஹ்ருதயமாகச் சொன்னத்தை ஸஹ்ருதயமாகக்கொண்டுவந்து புகுந்தான். "இவர் இப்போதே அஹ்ருதயமாகச் சொன்னேனென்னவும் வல்லர், அதுக்குமுன்னே இவர் நெஞ்சிலிட மறப்புகுந்து கொள்ளும் கிடீர்" என்று பிராட்டி கூடக்கொண்டு புகுந்தாள். இவர் நெஞ்சு திருந்துவதுக்கு முன்பிறே அல்லாதவிடங்களில் நிற்பது. (உ)"நின்றதெந்தை யூரகத்து" ழுத்யாதி உகந்தருளினநிலங்களில் கண்டநுபவிக்குமாபோலேஇவர் திருவுள்ளத்திலிருப்பும்கண்டநுபவிக்கலாம்படியிருக்குமிவர்க்கு. (ங) "சலசயனத்துள்ளு மென துள்ளத்துள்ளுமுறைவாரை யுள்ளீரே" என்

(மார்வமென்பதோர் கோயிலமைத்து) ஹ்ருதயமென்று ப்ரஸித்தமாய் அத்விதீயமான ஸ்த்தாநத்தை யுண்டாக்கி. (மாதவனென்னும் தெய்வத்தை நாட்டி) ஶ்ரியஃபதி யென்று ப்ரஸித்தமாய் அத்விதீயமான வஸ்துவைப்ரதிஷ்டிப்பித்து. (க) "திருமாலிருஞ்சோலைமலையென்றே னென்னத் திருமால்வந்தென் னெஞ்சுநிறையப்புகுந்தான்" என்று - இவர் இப்போதே அஹ்ருதயமாகச் சொன்னத்தை ஸஹ்ருதயமாகக் கொண்டுவந்துபுகுந்தான். இவர், இப்போதே "அஹ்ருதயமாகச் சொன்னேன்" என்னவும் வல்லர், அதுக்குமுன்னே இவர்நெஞ்சில் இடமறப் புகுந்துகொள்ளுங் கிடீரென்று பிராட்டியுங் கூடக்கொண்டு புகுந்தான். இவர் நெஞ்சு திருந்துவதுக்குமுன்பிறே - அல்லாதவிடங்களில் நிற்பது; (உ) ["நின்றதெந்தை யூரகத்து" இத்யாதி] உகந்தருளின நிலங்களில் கண்டநுபவிக்குமா போலே இவர் திருவுள்ளத்தி லிருப்புக் கண்டநுபவிக்கலாம்படி யிருக்குமிவர்க்கு; (ங) "சல

இவன் நாட்டினுல் அவன் வந்திருக்குமோவென்ன, இருக்குமென்னுமதுக்குபலப்ரமாணங்களாலுமர்த்தமருளுகிறுர்(திருமாலிருஞ்சோலையித்யாதி)

(க) தி-வாய்-கo-அ-க. (உ) தி-ச-வி-கூச. (ங) தி மொ-எ-கூ-க.

னக்கடவதிறே. (க) "வந்தாயென்மனம் புகுந்தாய்" என்று இன்றிறே புகுந்தது. (உ) "வந்துவந்தென்மனத்திருந்து" என்கிறபடியே இவரிசையாமல்தட்டினநாளைக்குஓரவதியில்லையிறே. (௩) "அடியார் மனத்தாயோ" (ச) "வெள்ளத்தான்வேங்கடத்தானேலும் கலிகன்றியுள்ளத்தினுள்ளேயுளன்" என்றுஉகந்தருளின நிலங்களோடொக்குமிறே இவர் திருவுள்ளமும்.

(ஆர்வமென்பதோர்பூவிடவல்லார்க்கு) "சோர்வினால் பொருள் வைத்ததுண்டாகில்" என்று "தேஹபந்துக்களையும் ஆத்மபந்துக்களையும் மறைத்துவைத்த பொருளையிட்டுக்கோயிலைச் சமைத்துத் திருநந்தவநத்தையுமுண்டாக்கித் திருப்பள்ளித்தாமத்தையும் தேடு" என்று இவனையரிய தேவைகளையிடானிறே. (ரு)*நாடாதமலர்

சயனத்துள்ளு மெனதுள்ளத்துள்ளு முறைவாரை" என்னக்கடவதிறே. (க) "வந்தாயென்மனம் புகுந்தாய்" என்றிறே புகுந்தது. (உ) "வந்து வந்தென்மனத்திருந்து" என்கிறபடியே இவர் இசையாமல் தட்டினநாளுக்கு ஓர் அவதியில்லையிறே. (௩) "அடியார் மனத்தாயோ" (ச) "வெள்ளத்தான் வேங்கடத்தானேலும் கலிகன்றி உள்ளத்தினுள்ளேயுளன்" என்று-உகந்தருளின நிலங்களோடொக்குமிறே - இவர் திருவுள்ளமும்.

( ஆர்வமென்பதோர் பூவிடவல்லார்க்கு ) "சோர்வினால் பொருள் வைத்ததுண்டாகில்' என்று-தேஹபந்துக்களையும் ஆத்மபந்துக்களையும் மறைத்து வைத்தபொருளையிட்டுக் கோயில்சமைத்துத் திருநந்தவநத்தையு முண்டாக்கித் திருப்பள்ளித் தாமத்தையும் தேடு" என்று இவனை அரியதேவைகளையிடானிறே. (ரு)*நாடாதமலர் நாடிநாடோறும் நாரணன்றன் வாடாதமலரடிக்கீழ்வைக்கவிறே இவனை அடியிலே ஸ்ருஷ்டித்தது; இப்படி பூவோடே பூவைச்

"ஆர்வமென்பதோர் பூ" என்றதுக்கு இரண்டர்த்தம்-பக்தியாகிறபுஷ்பமென்றும், "ஆர்வமென்பது" என்றும் "ஓர்பூ" என்றும்பதத்தைப்பிரித்து, பக்தியையும் புஷ்பத்தையுமென்றும், அதில் முந்தினவர்த்தத்தை வ்யாவர்த்ய பூர்வகமருளுகிறார் (சோர்வினாலித்யாதி). இரண்டாமர்த்தம் ( நாடாதவித்யாதி ). இரவியின் புத்ரன்யமனுடையாலே அரவனென்று யமனைச் சொல்

(க) தி-மொ-க-கo-க. (உ) தி-மொ-கூ-உ-௩. (௩) தி-மொ-எ-கூ-எ. (ச) தி-மொ-கக-ரு-கo. (ரு) தி-வாய்-க-ச-கூ.

மூ.—

மேலெழுந்ததோர்வாயுக்கிளர்ந்து மேல்மிடற்றினையுள்ளெழவாங்கி
காலுங்கையும் விதிர்விதிர்த்தேறிக் கண்ணுறக்கமதாவதன்முன்னம்
மூலமாகியவொற்றையெழுத்தை மூன்றுமாத்திரை யுள்ளெழவாங்கி
வேலைவண்ணனை மேவுதிராகில் விண்ணகத்தினின் மேவலுமாமே.

---

நாடிநாடோறும் நாரணன் தன் வாடாதமலரடிக்கீழ் வைக்கவிறே, இவனை அடியில் ஸ்ருஷ்டித்தது. இப்படி பூவோடே பூவைச் சேர்க்க வல்லார்க்கு. ( அரவதண்டத்திலுய்யலுமாமே ) யமபடரால் வரும்க்லேசம். அதாவது-(க)''வெஞ்சொலாளர்கள்-கடியர்கொடிய செய்வனவுள'' என்னக்கடவதிறே. நெடுஞ்சொலால் மறுத்ததுக்குப் பலம் கடுஞ்சொல் கேட்கையிறே. (உய்யலுமாமே) ப்ராப்யத்திலும் இதுபோகையிறே ப்ரதாநமென்கிறார். ... .... (ந)

அவ;—நாலாம்பாட்டு. (மேலித்யாதி). ப்ரணவார்த்தம்நெஞ்சில் பட்டவர்கள்* அடியார்கள் குழாங்களையுடன்கூடுவரென்கிறார்.

வ்யா;—(மேலெழுந்ததோர் வாயுக்கிளர்ந்து) மேல் மூச்செறிந்து, (மேல்மிடற்றினையுள்ளெழ வாங்கி) நெஞ்சுகீழே யிடிவிழுந்து,

---

சேர்க்கவல்லார்க்கு. (அரவதண்டத்திலித்யாதி) (அரவதண்டம்) யமபடரால் வரும் க்லேஶம்; அதாவது - (க)''வெஞ்சொலாளர்கள் நமன்றமர்கடியர் கொடியசெய்வனவுள'' என்னக்கடவதிறே * நெடுஞ் சொலால் மறுத்ததுக்குப் பலம் கடுஞ்சொல் கேட்கையிறே. (உய்யுலுமாம்)ப்ராப்யத்திலும்இதுபோகையிறேப்ரதாநமெனகிறார்.

அவ;—நாலாம்பாட்டு. ப்ரணவார்த்தம் நெஞ்சில் பட்டவர்கள் * அடியார்கள் குழாங்களையுடன் கூடுவரென்கிறார்.

வ்யா.—(மேலெழுந்ததோர் வாயுக்கிளர்ந்து) மேல்மூச்செறிந்து. (மேல்மிடற்றினையுள்ளெழவாங்கி). நெஞ்சு கீழேயிடியவிழு

---

விற்று, அத்தையருளுகிறார் (யமபடரித்யாதி). அரவதண்டத்திலும் தப்பி உஜ்ஜீவிக்கலாமென்று ஶப்தார்த்தமாய், இத்தைத் தப்புகிறது உஜ்ஜீவநமாமோ வென்னவருளுகிறார் (ப்ராப்யத்திலுமித்யாதி). (ந)

அரு;—நாலாம்பாட்டு. ( மேலெழுந்தவித்யாதி ) மூலமாகியவித்யாதியைக் கடாக்ஷித்தவதாரிகை (ப்ரணவார்த்தமித்யாதி).

---

(க) தி-மொ-ரு-அ-ச

மூ.—
மடிவழிவந்து நீர்ப்புலன்சோர வாயிலட்டிய கஞ்சியும்மீண்டே
கடைவழிவாரக்கண்டமடைப்பக் கண்ணுறக்கமதாவதன்முன்னம்
தொடைவழியும்மைநாய்கள்கவராச்சூலத்தாலும்மைப்பாய்வதுஞ்செய்யார்
இடைவழியில்நீர் கூறையுமிழவீ ரிருடீகேசனென் றேத்தவல்லீரே.

(காலும் கையும் விதிர்விதிர்த்தேறி) ப்ராணவாயுமேல் நோக்கின வாறே, காலும் கையும் பதைக்கத்துடங்கிற்று. (கண்ணுறக்கமதாவதன்முன்னம்) தீர்க்கநித்ரை கொள்வதற்கு முன்னே. (மூலமாகியவொற்றையெழுத்தை) ஸகலவேதங்களுக்கும் காரணமான திருமந்த்ரத்தில் ப்ரதமபதத்தை உச்சாரணக்ரமம் தப்பாமலுச்சரித்து, (வேலைவண்ணனை மேவுதிராகில்) ஸ்ரீவைகுண்ட நாதனைக்கிட்ட வல்லிகோளாகில், (விண்ணகத்தினில் மேவலுமாமே) அடியார்களோ யுடன் கூடலாமென்கிறார். ... .... (ச)

அவ;—அஞ்சாம்பாட்டு. (மடியித்யாதி). விரோதிநிரஸந ஸீலனை ஏத்துவார்க்கு முன்பு க்லேஸப்பட்டுப்போனவழி இனிப் போகவேண்டா வென்கிறார்.

ந்து. (காலும் கையும் விதிர்விதிர்த்தேறி). ப்ராணவாயு மேல் நோக்கினவாறே காலும் கையும் பதைக்கத் தொடங்கிற்று. (கண்ணுறக்கமதாவதன் முன்னம்). தீர்க்க நித்ரை கொள்ளுவதற்கு முன்னே. (மூலமாகிய ஒற்றையெழுத்தை). ஸகலவேதங்களுக்கும் காரணமான திருமந்த்ரத்தில் ப்ரதமபதத்தை உச்சாரண க்ரமம் தப்பாமல்உச்சரித்து. (வேலைவண்ணனைமேவுதிராகில்)ஸ்ரீவைகுண்ட நாதனைக்கிட்டவல்லிகோளாகில், (விண்ணகத்தினில்மேவலுமாமே) * அடியார்கள் குழாங்களுடன் கூடலாமென்கிறார். (ச)

அவ;—அஞ்சாம்பாட்டு. விரோதி நிரஸநஸீலனை யேத்துவார்க்கு முன்பு க்லேஸப்பட்டுப்போன வழியிலே இனிப்போக வேண்டா வென்கிறார்.

(பதைக்கத்துடங்கிற்று)சலிக்கத்துடங்கிற்று."மாத்ராத்ரயமும், உள்ளெழ-உள்ளில் நின்று மெல்லார்க்கும் கேட்கும்படி, வாங்கி-உச்சரித்து" என்றாய், பலிதத்தையருளுகிறார் (உச்சாரணக்ரமமித்யாதி). (ச)

அரு.—அஞ்சாம்பாட்டு. (மடிவழியித்யாதி) இந்த்ரியங்கள் ஆத்மாவுக்கு விரோதிகளாகையாலே அவற்றை நியமிக்கை இருடீகேச பதத்துக்கர்த்தமென்று திருவுள்ளம்பற்றி அவதாரிகை யருளுகிறார் (விரோதீத்யாதி).

ஸ்வா;—(மடிவழி வந்து நீர்புலன்சோர) யமபடரைக்கண்ட பயத்தாலே ஒருஇந்த்ரியவிசேஷத்தாலேஜலம் ப்ரவஹிக்க. (வாயிலட்டியகஞ்சியும் மீண்டே கடைவழிவாரக்கண்டமடைப்ப) பொரிக்கஞ்சியைக் கொடுத்தால் கண்டமடைக்கையாலே உள்ளுப்புகாதே மீண்டும் கடைவாயாலே வழியாநிற்கும். (கண்ணுறக்கமதாவதன் முன்னம்) தீர்க்க நித்ரை கொள்வதற்கு முன்னே.

(துடைவழியும்மை நாய்கள் கவரா) "நாயினத்தொடும்திளைத்திட்டோடியு முழன்றும்" என்றதுக்குப்பலம். (சூலத்தாலும்மைப்பாய்வதும்செய்யார்) "உயிர்களைக்கொன்றேன்" என்று ஆயுதத்தாலே நலிந்ததுக்குப்பலம். (இடைவழியில் நீர்கூறையுமிழவீர்) "வழிகளில்நின்று சிலையுறிந்ததுக்குப்பலம்" என்றென்று சொல்லியிறே அவர்கள் வழியில் நலிவது. இதுதப்பவேண்டியிருந்தி கோளாகில் (இருடீகேசனென்றேத்த வல்லீரே) இந்த்ரியங்களை நியமிக்குமவனென்று ப்ரீதியோடே கூட ஸ்தோத்ரம் பண்ணில் இவை

---

வ்யா.—(மடிவழிவந்து நீர்ப்புலன்சோர) யமபடரைக்கண்ட பயத்தாலே ஓர் இந்த்ரிய விசேஷத்தாலே ஜலம் ப்ரவஹிக்க. (வாயிலட்டியகஞ்சியும் மீண்டே கடைவழிவாரக் கண்டமடைப்ப) பொரிக்கஞ்சியைக் கொடுத்தால், கண்டமடைக்கையாலே உள்ளுப்புகாதே மீண்டும் கடைவழியாலே வழியாநிற்கும். (கண்ணுறக்கமதாவதன் முன்னம்) தீர்க்க நித்ரைகொள்ளுவதற்குமுன்னே.

(துடைவழியும்மை நாய்கள்கவரா) (க)"நாயினத்தொடும்திளைத்திட்டு ஓடியுமுழன்றும்" என்றதுக்குப்பலம். (சூலத்தாலும்மைப்பாய்வதுஞ் செய்யார்) "உயிர்களைக்கொன்றேன்" என்று ஆயுதத்தாலே நலிந்ததுக்கு பலம். (இடைவழியில் நீர்கூறையுமிழவீர்) வழியில்நின்று சிரையுரிந்ததுக்கு பலம். என்று என்று சொல்லியிறே அவர்கள் வழியில் நலிவது. இது தப்பவேண்டியிருந்தி கோளாகில் (இருடீகேசனென்றேத்தவல்லீரே) இந்த்ரியங்களை நிய

---

"அட்டிய" என்றது-வார்த்தவென்றாய், அத்தால்பலிதமருளுகிறார் (பொரியித்யாதி).

(நாயினத்தோடும் திளைத்திட்டு) என்றது - வேட்டையாடுகிற போது நாய் ஸமூஹங்களோடே கூடப்போய் களித்துக்கொண்டென்றபடி. (ரு)

---

(க) தி-மொ-க-கூ-கூ.

மூ.—

அங்கம்விட்டவையைந்துமகற்றி யாவிமூக்கினிற்சோதித்தபின்னைச்
சங்கம்விட்டவர்கையைமறித்துப்பையவேதலைசாய்ப்பதன்முன்னம்
வங்கம்விட்டுலவுங் கடற்பள்ளிமாயனை மதுசூதனைமார்பில்
தங்கவிட்டுவைத்தாவதோர்கருமஞ் சாதிப்பார்க்கென்றுஞ் சாதிக்கலாமே

---

வாராது, யமவஶ்யதைக்கடி இந்த்ரிய வஶ்யதையிறே, இதுக்கு
ஸாதநமாகவிறே பரஹிம்ஸாதிகளைப்பண்ணுவது. அத்தைக்குலைக்கு
மவனென்கிறார். ... .... ... .... (ரு)

அவ;—ஆறும்பாட்டு. (அங்கமித்யாதி) முற்பட்டொருகால்
உபாயவரணம்பண்ணினார்க்கு ஸதாபஶ்யந்திபண்ணலாமென்கிறார்.

ஸ்வா;—(அங்கம் விட்டவையைந்து மகற்றி) பஞ்சவ்ருத்தி
ப்ராணன் ஶரீரத்தை விட்டகன்று. (ஆவிமூக்கினில் சோதித்த
பின்னை) இவனுக்கு ப்ராணனில்லை யென்றறிந்த பின்பு. (சங்கம்

---

மிக்குமவனென்று ப்ரீதியோடேகூட ஸ்தோத்ரம் பண்ணினால்
இவைவாரா. யமவஶ்யதைக்கடி இந்த்ரியவஶ்யதையிறே. இதுக்கு
ஸாதநமாகவிறே பரஹிம்ஸாதிகள் பண்ணுவது; அத்தைக் குலைக்கு
மவனென்கிறார். .... .... .... (ரு)

அவ.—ஆறும்பாட்டு. (அங்கமித்யாதி) இப்பாட்டில், ஒரு
கால் உபாயவரணம் பண்ணினார்க்கு * ஸதாபஶ்யந்தி பண்ணலா
மென்கிறார்.

வ்யா.—(அங்கம் விட்ட வையைந்துமகற்றி) பஞ்சவ்ருத்தி
ப்ராணன் சரீரத்தை விட்டகன்று. (ஆவிமூக்கினில் சோதித்த
பின்னை) இவனுக்கு ப்ராணனில்லையென்று அறிந்தபின்பு. (சங்கம்

---

அரு,—ஆறும்பாட்டு. (அங்கமித்யாதி) வங்கம் விட்டித்யாதியைக்
கடாக்ஷித்தவதாரிகை (இப்பாட்டிலித்யாதி,

"அவையைந்தும் அங்கம்விட்டகற்றி" "என்றந்வயித்தர்த்த மருளுகிறார்
(பஞ்சவ்ருத்தீத்யாதி),(அகன்று) என்றது-அகன்றதென்றபடி. "சோதித்த"
என்றதினர்த்தம் (இல்லையென்றறிந்த) என்றது. 'சங்கமென்றது-ஸங்க
மாய், ஆசையைச் சொல்லுகிறதென்று' ஜீவனாசையில்லையென்றும், அர்த்தாசையில்லையென்றும் விவக்ஷித்து முதலர்த்தமும் மூன்றுமர்த்தமும், ஸங்க

விட்டு) இனி இவன் பிழைக்கு மென்கிற வாசையைவிட்டு. "சங் கம்விட்டு" என்று "சொல்லுசொல்லு"என் றுசுற்றுமிருக்கிறதிரள் குலைந்தென்னுதல்; அன்றியேஇனிஇவன்பக்கல் சிலகிடைக்குமென் கிற வாசையைவிட்டென்னுதல். (கையைமறித்து) அருகிருந்தவர் களை "அவன் செய்ததென்" என்று வந்தவர்கள் கேட்க, கையை மறித்து. (பையவே தலைசாய்ப்பதன் முன்னம்) மெள்ள இவனருகு நின்று மெழுந்திருந்து விடப்போய் இவனையிழந்த இழவு தோற்றக் கவிழ்தலையிட்டிருப்பர்களாய்த்து.

(வங்கம்விட்டுலவும்கடல்பள்ளிமாயனை) மரக்கலமுலாவாநின்றுள் ள கடலிலே கண்வளர்ந்தருளுகிற அத்யாஸ்சர்யபூதனை. அன்றிக் கே "மாயனை"-என்றது-ஜ்ஞானமாய்,தன்னிச்சையாலே கண்வளர்ந் தருளுகிறவனென்றபடி. (க)"குரைகடல்மேல் அரவணைமேல் குல வரைபோல்பள்ளிகொண்டு" என்னக்கடவதிறே. (மதுசூதனை)மது

---

விட்டு) இனி இவன் பிழைக்குமென்கிற ஆசையைவிட்டு. "சங்கம் விட்டு" என்று - * சொல்லுசொல்லென்று சுற்றுமிருக்கிற திரள் குலைந்தென்னுதல். அன்றிக்கே, இவன்பக்கல் சிலகிடைக்குமென் கிற ஆசையை விட்டென்னுதல். (கையைமறித்து) அங்கிருந்தவர் களை, "அவன்செய்ததென்" என்று வந்தவர்கள்கேட்க, கையை மறித்து. (பையவே தலை சாய்ப்பதன் முன்னம்) மெள்ளஇவனருகு நின்று மெழுந்திருந்து விடப்போய், இவனை இழந்த இழவுதோற்ற கவிழ்தலையிட்டிருப்பர்களாய்த்து.

(வங்கம்விட்டுலவும் கடல்பள்ளி மாயனை) மரக்கலமுலாவா நின்றுள்ள கடலில் கண்வளர்ந்தருளுகிற வாஸ்சர்யபூதனை. அன்றி க்கே, "மாயனை" என்றது - ஜ்ஞானமாய், தன்னிச்சையாலே கண் வளர்ந்தருளுகிறவனென்றபடி. (க)"குரைகடல்மேல் அரவணைமேல் குலவரைபோல்பள்ளிகொண்டு" என்னக்கடவதிறே. (மதுசூதனை) மதுவை நிரஸித்தாற்போலே ஆஸ்ரித விரோதியைப் போக்கும

---

(ஸூ)மென்றிரண்டாமர்த்தமாக வருளுகிறார் (இனியிவனித்யாதி வாக்யத்ரயத் தாலே). (விடப்போய்) தூரப்போய்.

"விட்டுலவு" என்றது- அப்ரதிஹதமாகஸஞ்சரிக்கையென்றமுப்தார்த்தம் திருவுள்ளம்பற்றி யருளுகிறார் (மரக்கலமித்யாதி). நரகம் வாராமைக்குப்

---

(க) தி-மொ-ரு-௬-எ.

வைநிரஸித்தாப்போலே ஆஶ்ரிதவிரோதியைப்போக்குமவனை. (௧) "வெள்ளைநீர்வெள்ளத்தணைந்தவரவணைமேல் துள்ளுநீர்மெள்ளத்துயின்றபெருமானே, வள்ளலேயுன்தமர்க்கென்றும்நமன்றமர் கள்ளர்போல்" என்னக்கடவதிறே. (மார்வில் தங்கவிட்டு வைத்து) விடுகையாவது-ஓரிடத்திலேயிருத்துகை. (ஆவதோர்கருமம்) ஸுகரமுமாய்ப்ராப்தமுமானஆத்மஸமர்பணம்; (௨) "நமோவென்னலாம்கடமை" என்னக்கடவதிறே. (சாதிப்பார்க்கென்றும் சாதிக்கலாமே) உபாயம் ஸக்ருத்கர்தவ்யம்; உபேயம் ஸதாகர்தவ்யம். ※ஆவத்தனமென்றது-ஸக்ருத். சேவித்திருக்குமென்றது-ஸதா. .... (௬)

---

வனை. (௧) "வெள்ளை நீர்வெள்ளத்தணைந்தவரவணைமேல், துள்ளுநீர் மெள்ளத் துயின்றபெருமானே, வள்ளலே உன்றமர்க்கென்றும் நமன்றமர்கள்ளர்போல்" என்னக்கடவதிறே. (மார்வில்தங்கவிட்டு வைத்து) தங்கவிடுகையாவது - ஓரிடத்திலேயிருத்துகை. (ஆவதோர்கருமம்) ஸுகரமுமாய் ப்ராப்தமுமான ஆத்மஸமர்ப்பணம். (௨) "நமோவென்னலாங்கடமை" என்னக்கடவதிறே. (சாதிப்பார்க்கென்றும் சாதிக்கலாமே) உபாயம் ஸக்ருத்கர்த்தவ்யம், உபேயம் ஸதாகர்தவ்யம். (௩) "ஆவத்தநம்" என்று - ஸக்ருத்; "சேவித்திருக்கும்" என்று - ஸதா. ... .... ... .... (௬)

---

பரோபதேசம் பண்ணும் ப்ரகரணத்துக்குச்சேர ஆஶ்ரித விரோதிகளின்று ரென்று ஸம்வாதமுகேந காட்டுகிறார் (வெள்ளைநீரித்யாதி). மார்வில்-மநஸ்ஸிலே, தங்கவிட்டு வைத்து-அந்த வோரிடத்திலே தானேயிருக்கும்படி வைத்தென்று பூபதார்த்தமாய் தங்கவிடுகையை விவரிக்கிறார் (விடுகையாவதித்யாதி). என்றும் சாதிக்கலாமென்று ஸார்வகாலிகமான பலத்தைச்சொல்லுகையாலே அதுக்குச் சேரவர்த்தமருளுகிறார் (ஸுகரமுமாயித்யாதி). ப்ராப்தமென்னுமதுக்கு ஸம்வாதம் காட்டுகிறார் (நமோவென்னலாமித்யாதி). (கடமை)ப்ராப்தம். "சாதிப்பார்க்கு"என்றது-ஆத்ம ஸமர்பணமாகிறகருமம் செய்வார்க்கென்றும், என்றும் சாதிக்கலாமென்றதுக்கு நித்யமான வுபேயத்தை ஸாதிக்கலாமென்றும் பூபதார்த்தம் விவக்ஷித்துப் பலிதார்த்த மருளுகிறார் (உபாயமித்யாதி), உக்தத்துக்கு அடைவே ஸம்வாதம் (ஆவத்தநமித்யாதி). "ஆவத்தநமென்றமரர்களும் நன்முனிவரும் சேவித்திருக்கும் தென் திருமாலிருஞ்சோலையே" என்றந்வயம். ... ... ... (௬)

---

(௧) தி-மொ-அ-௧௦-எ. (௨) தி-வாய்-௩-௩-௬௦. (௩) ௪-௨-௬.

ரூ.—

தென்னவன்றமர் செப்பமிலாதார் சேவதக்குவார் போலப்புகுந்து
பின்னும்வன்கயிற்றால் பிணித்தெற்றிப்பின் முன்னாக விழுப்பதன்முன்னம்
இன்னவனினையானென்றுசொல்லி யெண்ணியுள்ளத் திருளறநோக்கி
மன்னவன்மதுசூதனனென்பார் வானகத்துமன்றாடிகள்தாமே.(எ)

---

அவ;—ஏழாம்பாட்டு. (தென்னவனித்யாதி) இப்பாட்டில் விரோதிநிரஸந சீலனையநுஸந்திப்பார் நித்யஸூரிகள் கார்யத்துக்கும் ஸ்ரீவைகுண்டநாதனோடே மன்றாடுவர்களென்கிறார்.

வ்யா;— (தென்னவன்) தமர். தெற்குத் திக்குக்குக் கடவனான யமனுடைய ஶேஷபூதர். (செப்பமிலாதார்) செவ்வையில்லாதார், கரணத்ரயமும் அடைவு கெட்டிருக்குமவர்கள். (சேவதக்குவார் போலப்புகுந்து) எருதுகள் தங்கள் வசப்படுகைக்கு இவற்றின் செருக்கைக்குலைக்கும் நீசஜாதிகளைப்போலே புகுந்து துக்கானுபவம்பண்ணுவிக்கை. (பின்னும் வன்கயிற்றால் பிணித்தெற்றி) சேவதக்குவார் அதக்கும் ப்ரகாரம், துக்கானுபவத்துக்குத் தங்

---

அவ;—ஏழாம்பாட்டு. (தென்னவனித்யாதி) இப்பாட்டில், விரோதிநிரஸநசீலனை அநுஸந்திப்பார் நித்யஸூரிகள்கார்யத்துக்கும் ஸ்ரீவைகுண்ட நாதனோடே மன்றாடுவர்களென்கிறார்.

வ்யா.—(தென்னவன்தமர்) தெற்குத் திக்குக்குக் கடவனான யமனுடைய சேஷபூதர். (செப்பமிலாதார்) செவ்வையில்லாதார், கரணத்ரயமும் அடைவு கெட்டிருக்குமவர்கள். (சேவதக்குவார் போலப்புகுந்து) எருதுகள் தங்கள் வசப் படுகைக்கு இவற்றின் செருக்கைக் குலைக்கும் நீசஜாதிகளைப்போலே புகுந்து துக்கானுபவம் பண்ணுவிக்கை. (பின்னும் வன்கயிற்றால் பிணித்தெற்றி) சே

---

அரு;—ஏழாம்பாட்டு. (தென்னவனித்யாதி). மதுசூதனனித்யாதியைக் கடாக்ஷித்து அவதாரிகையிடுகிறார் (இப்பாட்டித்யாதி).

செப்பம்-செவ்வையாய், கரணத்ரயைக ரூப்யமில்லாதாரென்று ஶப்தார்த்தமாய், பலிதார்த்தமருளுகிறார் (கரணேத்யாதி). சேவை - எருத்தை; அதக்குவார் போலப்புகுந்து - க்லேசப்படுத்தியென்று ஶப்தார்த்தம் விவக்ஷித்துப்பலிதார்த்தமருளுகிறார் (எருதுகளித்யாதி). செருக்கைக்குலைக்கையாவது - வ்ருஷணத்தை ப்ரஹரிக்கை. அதக்கும் ப்ரகாரமென்ற

கள் கர்மமாத்ரமே யமைந்திருக்கப் பின்னும் யமபடர் பாசங்களாலே சூரியிலே வரிவாரைப்போலே வரிந்து. (எற்றி) (க) "நமன்றமர்செய்யும் வேதனை" என்கிறபடியேஎற்றி. (பின்முன்னைகவிழப் பதன் முன்னம்) மூக்கும் முகமும் உதடும் பல்லும் தகரும்படி முகம் கிழ்ப்பட யமபுரத்தளவும் இழுப்பதற்கு முன்னே.

( இன்னவனினையானித்யாதி ) அவனின்னானென்னு மதுக்கு ஏகாந்தமான குணங்களையுமநுஸந்தித்து நெஞ்சில், அஜ்ஞாநாந்தகாரம் போகப்பார்த்து. (மன்னவன்) தென்னவனுக்கு மன்னவனானவன். (மதுசூதனனென்பார்) ஆஶ்ரித விரோதிகளைப்போக்குமவனென்று சொல்லுமவர்கள். (வானகத்து மன்றாடிகள்தாமே) பரமபதத்தில் நித்யஸூரிகள் கார்யத்துக்கும் ஶ்ரீ வைகுண்டநாதனோடேமன்றாடுமவர்களிறே. (தாமே) வேறுஸஹகாரிகளில்லை. (எ)

---

அதக்குவார் அதக்கும் ப்ரகாரம்; துக்கானுபவத்துக்குத்தங்கள் கர்மமாத்ரமேயமைந்திருக்க, பின்னையும்யமபடர், பாஶங்களாலே சூரியிலே வரிவாரைப்போலே வரிந்து. (எற்றி) (க) "நமன்றமர் செய்யும்வேதனை" என்கிறபடியே எற்றி. (பின் முன்னாக இழுப்பதன் முன்னம் ) மூக்கும் முகமும் உதடும் பல்லும் தகரும்படி முகம் கிழ்ப்பட யமபுரத்தளவும் இழுப்பதற்கு முன்னே.

(இன்னவனின்னையானென்று சொல்லியெண்ணி) அவன் இன்னானென்னு மதுக்கு ஏகாந்தமான குணங்களையு மநுஸந்தித்து. (இருளறநோக்கி) நெஞ்சில் அஜ்ஞாநாந்தகாரம் போகப்பார்த்து. (மன்னவன்) தென்னவனுக்கும் மன்னவனானவன். (மதுசூதனனென்பார்) "ஆஶ்ரிதவிரோதிகளைப்போக்குமவன்" என்று சொல்லுமவர்கள். (வானகத்து மன்றாடிகள்தாமே) பரமபதத்தில் நித்யஸூரிகள் கார்யத்துக்கும் ஶ்ரீவைகுண்ட நாதனோடே மன்றாடுவாரிவர்களிறே. (தாமே) வேறு ஸஹகாரிகளில்லை. (எ)

---

வநந்தரம் "பண்ணுவிக்கும்" என்று சேஷம். (சூரியிலே) வரிகோடியிலே. (வரி வாரைப்போலே) வரிஞ்சுபோடுவாரைப்போலே; பந்திப்பாரைப்போலே யென்றபடி.

இன்னவனினையா னென்ற விரண்டுக்கும் ஸ்வரூபபரமாகவும் ஸ்பாவபரமாகவும் தாத்பர்யமருளுகிறார் (அவனித்யாதி). உள்ளத்திருளறநோக்கி யென்றதினர்த்தம் (நெஞ்சிலித்யாதி). ... ... ... (எ)

---

(க)

மூ.—
கூடிக்கூடி யுற்றார்களிருந்து குற்றம்நிற்க நற்றங்கள் பறைந்து
பாடிப்பாடியோர்பாடையிலிட்டுநரிப்படைக்கொருபாகுடம்போல
கோடிமூடியெடுப்பதன்முன்னம்கௌத்துவமுடைக்கோவிந்தனோடு
கூடியாடிய வுள்ளத்தராறு் குறிப்பிடங்கடந் துய்யலுமாமே.(அ)

அவ;-எட்டாம்பாட்டு. (கூடியித்யாதி) இப்பாட்டால், மூன்
றெழுத்தை உச்சரிப்பார் ஸ்ரீ கௌஸ்துபத்தோபாதி அவனுக்கா
தரணீய ரென்கிறார்.

வ்யா;—(கூடிக்கூடியுற்றார்களிருந்து) இவனுக்குச்சரமகாலம்
வந்தவாறே பந்துக்களெல்லாரும் திரண்டு திரள்திரளாக விருந்து,
(குற்றம்நிற்க நற்றங்கள் பறைந்து) இவன் பண்ணின ப்ராதி
கூல்யங்கள் கிடக்க, அல்பாநுகூல்யங்களுள்ளவற்றைச் சொல்லா
நிற்பர்கள். மஹாராஜர் வாலிபட்டவளவில் அவன்முன்புபண்ணின
ப்ராதிகூல்யங்களை மறந்து, "நான் முற்படவசப்பட்டபோது என்
னைக் கொல்லலாயிருக்க, கொல்லாதே விட்டவனையிறே நான்

அவ;—எட்டாம்பாட்டு. (கூடியித்யாதி) இப்பாட்டால்-மூன்
றெழுத்தை உச்சரிப்பார் ஸ்ரீகௌஸ்துபத்தோபாதி அவனுக்கு ஆத
ரணீயரென்கிறார்.

வ்யா.—(கூடிக்கூடியுற்றார்களிருந்து) இவனுக்குச் சரமகாலம்
வந்தவாறே, பந்துக்களெல்லாரும் திரண்டு திரள்திரளாகவிருந்து.
(குற்றம் நிற்க நற்றங்கள் பறைந்து) இவன் பண்ணின ப்ராதிகூல்
யம் கிடக்க, அல்பாநு கூல்யங்களுள்ளவற்றைச் சொல்லாநிற்பர்
கள். மஹாராஜர், வாலி பட்ட வளவிலே, அவன் முன்புபண்ணின
ப்ராதிகூல்யங்களை மறந்து, "நான் முற்பட அகப்பட்டபோதே
என்னைக்கொல்லலாயிருக்க என்னைக்கொல்லாதே விட்டவனையிறே
நான் கொல்லுவித்தேன்" என்று அழுதாரிறே; அத்தைக்கண்டு,

அரு.—எட்டாம்பாட்டு. (கூடியித்யாதி) "கௌத்துவமுடைக்கோவி
ந்தனோடு கூடியாடிய" என்றதால் அவன் குணாநுஸந்தானத்தால் வந்
ப்ரீதிக்குப் போக்குவிட்டு கோவிந்தாவென்று திருநாமோச்சாரணம் பண்ணு
கை அர்த்தஸித்தமாகையாலும், கௌஸ்துபத்தைச் சொன்னது அத்தை
ப்போலே யாவனென்னுமது தோற்றுகைக்காகவுமென்று விவக்ஷித்து அவ
தாரிகை (இப்பாட்டாலித்யாதி).

சொல்லுவித்தேன்'' என்றழுதாரிறே. அத்தைக்கண்டு பெருமாளும் சோகித்தாரிறே. பெருமாள் ராவணன் பூசல் தலையில் நிராயுதனாய் நின்றபடியைக்கண்டு கொல்லாதே "இன்று போய்நாளை வா" என்றாரிறே. க்ருஷ்ணன் கம்ஸனை நிரஸித்த வநந்தரம் அவன் ஸ்த்ரீகள் படுகிற க்லேசத்தைக்கண்டு "நான் என்ன காரியம் செய்தேன்'' என்று வெறுத்தானிறே. இப்படி எல்லார்க்கும் க்ருபை பிறக்கும்படியாயிறே அத்தசையிருப்பது. (பாடிப்பாடி) இவர்கள் ப்ரலாபிக்கும்போது ஒரு ப்ரபந்தம் பாடினாப்போலே யாய்த்திருப்பது. (ஓர்பாடையிலிட்டு) ஓராசந்தியில் இவனையெடுத்து. (நரிப்படைக்கொரு பாகுடம் போலே).

(கோடி மூடி யெடுப்பதன் முன்னம்) கோடிப் புடவையையிட்டு மூடியெடுத்தல்; அன்றிக்கே ஆசந்தியைக் கோடித்தெடுத்தென்னுதல்; இப்படி செய்வதுக்கு முன்னே. (கௌஸ்துபமு

பெருமாளும் ஸோகித்தாரிறெ. பெருமாள், ராவணன், பூசல்தலையில்நிராயுதனாய் நின்றபடியைக்கண்டு கொல்லாதே "இன்று போய் நாளைவா'' என்றாரிறே; க்ருஷ்ணன், கம்ஸனை நிரஸித்தவநந்தரம் அவன் ஸ்த்ரீகள் படுகிற க்லேஸத்தைக்கண்டு, "நான் என்னகாரியம் செய்தேன்!'' என்று வெறுத்தானிறே. இப்படி எல்லார்க்கும் க்ருபை ஜநிக்கும்படியாயிறே அத்தசையிருப்பது. (பாடிப்பாடி). இவர்கள் ப்ரலாபிக்கும்போது, ஒருப்ரபந்தம் பாடினாப்போலேயாய்த்திருப்பது. (ஓர்பாடையிலிட்டு) ஓர் ஆசந்தியிலே இவனை இட்டு. (நரிப்படைக்கொரு பாகுடம்போலே) நரிப்படை - நரிக்கூட்டம். (பாகுடம்) பாகுக்குடம்.

(கோடிமுடி யெடுப்பதன் முன்னம்) கோடிப்புடைவையையிட்டுமூடியெடுத்தென்னுதல்; அன்றிக்கே, ஆசந்தியைக்கோடித்தெடுத்தென்னுதல்; இப்படிசெய்வதற்குமுன்னே. (கௌஸ்துபமுடைக்

---

(நிராயுதனாய் நின்றபடியை) என்றது - மரிக்குமவன்போலே ஆயுதங்களைப் பொகட்டு நின்றபடியை யென்கை. (நரிப்படைக் கொருபாகுடம் போலே) என்றது - நரிக்கூட்டத்துக்கு ஒரு உபஹாரம்போலேயென்றபடி.

(கோடி) புடவை ; நூதநவஸ்த்ரம், (கோடித்து) - அலங்கரித்து. கௌஸ்துபம் ஆத்மவர்க்கத்துக்கு அபிமாநி தேவதையாகையாலே யருளுகிறார்

டைக்கோவிந்தனோடு) இவ்வாத்மவர்க்கத்தைத்தரித்தது நிரூபகமாகவு டையனாய் ஸர்வஸுலபனுமான க்ருஷ்ணனோடே. (கூடிபாடியவுள் ளத்தாராகில்) ஈஶ்வரனும் சேதநனுமொரு நினைவாய் அவன்குணங் களிலே அவகாஹித்த நெஞ்சையுடையாரானால். (குறிப்பிடம் கடந் துய்யலுமாமே) "அவஶ்யமநுபோக்தவ்யம்" என்கிறபடியே அநுப வவிநாஶ்யமானதேசத்தைக்கடந்து. (உய்யலுமாமே) (க) "உயிரும் தருமனையே நோக்கும்" என்கிறதேசத்தைவிட்டு, "தாமரையாள் கேள்வனொருவனையே நோக்கும்" என்கிற தேசத்தேறப்போகப் பெறுவர்களென்கிறார். (உ) "ஒண்டொடியாள் திருமகளும் நீயுமே நிலாநிற்பக்கண்டசதிர்" என்னக்கடவதிறே, .... ... (௮)

அவ;—ஒன்பதாம்பாட்டு. (வாயித்யாதி) இப்பாட்டு ஸர்வ

---

கோவிந்தனோடு) இவ்வாத்மவர்க்கத்தைதரித்தது நிரூபகமாகவுடை யனுமாய் ஸர்வஸுலபனுமானக்ருஷ்ணனோடே. (கூடியாடியவுள் ளத்தாரானால்) ஈஶ்வரனும் சேதநனும் ஒரு நினைவாய்அவன் குணங் களிலே அவகாஹித்த நெஞ்சை யுடையரானால். (குறிப்பிடங் கட ந்துய்யலுமாமே) (ங) "அவஶ்யமநுபோக்தவ்யம் க்ருதம் கர்ம ஶுபாஶுபம் - அவஶ்யமநு போக்தவ்யம்" என்கிறபடியே அநுபவ விநாஶ்யமானதேசத்தைக் கடந்து. (உய்யலுமாமே) (க) "உயிரும் தருமனையே நோக்கும்" என்கிற தேசத்தைவிட்டு "தாமரையாள் கேள்வனொருவனையே நோக்கும்" என்கிற தேசத்தேறப் போகப் பெறுவர்களென்கிறார். (உ) "ஒண்டொடியாள் திருமகளும் நியுமேநிலாநிற்பக் கண்ட சதிர்" என்னக்கடவதிறே. .... ... (௮)

அவ.—ஒன்பதாம்பாட்டு. (வாயித்யாதி). இப்பாட்டில் ஸர்வ

---

(இவ்வாத்மேத்யாதி). (ஈஶ்வரனும் சேதநனுமொரு நினைவாய்) என்றது - சேதநனை ஈஶ்வரன் சேஷபூதனென்று நினைத்திருக்கை யென்றபடி. (அநுபவ விநாஶ்யமான தேஶத்தை) என்றது - தேசஸம்பந்தத்தை யென்றபடி. யமவஶ்யதையுள்ள தேஶத்தை விட்டுப் பரமபதத்தில் போய் ஜீவிக்கலாமென்னுமதுக்கு ஸம்வாதங்களைக் காட்டுகிறார் (உயிருமித்யாதி).

அரு,—ஒன்பதாம்பாட்டு. (வாயித்யாதி) செங்கண்மாலொடும் சிக்கெனச் சுற்றமாயித்யாதியைப் பற்றவருளுகிறார் (இப்பாட்டாலித்யாதி).

---

(க) க-திருவ-சுஎ. (உ) தி-வாய்-ச-க-கூ. (ங)

ரு.—

வாயொருபக்கம் வாங்கிவலிப்ப வார்ந்தநீர்க்குழிக்கண்கள்மிழற்றத்
தாயொருபக்கந் தந்தையொருபக்கந் தாரமுமொருபக்கமலற்ற
தீயொருபக்கஞ்சேர்வதன்முன்னஞ்செங்கண்மாலொடுஞ் சிக்கெனச்சுற்ற
மாயொருபக்கம் நிற்கவல்லார்க் கரவதண்டத்தி லுய்யலுமாமே.

---

வித பந்துவாக அவனைப்பற்றினால் பின்னை யம வஸ்தை யில்லை யென்கிறார்.

ஸ்வா;—(வாயொருபக்கம் வாங்கிவலிப்ப) வாதவிகாரத்தாலே வாயானது ஒருக்கடித்துவலிக்க.(வார்ந்தநீர்க் குழிக்கண்கள்மிழற்ற) பந்துக்களை விட்டுப்போகிறேனென்று இவர்கள் பக்கல் ஸங்கத்தாலே அழுகிற வளவிலே யமபடரைக்கண்டவாறே பயத்தின் கனத்தாலே கண் உள்ளே இடிவிழுந்தலமாவாநிற்கும். தன்னையுண்டாக்கினாரும் தானுண்டாக்கினவர்களும் ஓரருகேயிருந்துகதற.

அநந்தரம் (தீயொருபக்கம் சேர்வதன் முன்னம்) ஸம்ஸ்கரிப்பதுக்கு முன்னே. (செங்கண்மாலொடும் சிக்கெனச் சுற்றமாய்) வாத்ஸல்யத்தையும் வ்யாமோஹத்தையுமுடைய ஸர்வேஶ்வரனை. (சிக்கெனச்சுற்றமாய்) நிருபாதிக ஸர்வவித பந்துவுமாகப்பற்ற

---

வித பந்துவாக அவனைப்பற்றினால், பின்னையமவஸ்யதை இல்லை யென்கிறார்.

வ்யா.—(வாயொருபக்கம் வாங்கிவலிப்ப) வாதவிகாரத்தாலே வாயானது ஒருக்கடுத்துவலிக்க. (வார்ந்த நீர்க்குழிக்கண்கள்மிழற்ற) "பந்துக்களைவிட்டுப் போகிறேன்" என்று இவர்கள் பக்கல் ஸங்கத்தாலே அழுகிற வளவிலே, யமபடரைக்கண்டவாறே பயத்தின் கனத்தாலே கண் உள்ளே இடிய இழிந்து அலமாவாநிற்கும். (தாயொருபக்கமித்யாதி). தன்னை உண்டாக்கினாரும், தானுண்டாக்கினவர்களும், ஓரருகே யிருந்து அலற்ற,

அநந்தரம், (தீயொருபக்கம் சேர்வதன்முன்னம்) ஸம்ஸ்கரிப்பதற்கு முன்னே. (செங்கண்மாலொடும்) வாத்ஸல்யத்தையும் வ்யாமோஹத்தையு முடைய ஸர்வேஶ்வரனை. (சிக்கெனச்சுற்றமாய்) நிருபாதிக ஸர்வவித பந்துவுமாகப்பற்ற வல்லாருமாய். (ஒருபக்கம் நிற்கவல்லார்க்கு) ஸம்ஸாரிகளோடுள்ள உறவைக் கலசாதே அவ

---

(ஒருக்கடுத்து வலிக்க) என்றது - ஒரு பார்ஶ்வமாக விழுக்கவென்றபடி. மிழற்ற வென்றதினர்த்தம் (அலமாவாநிற்கும்) என்றது. ... (கூ)

மூ.— [ரான்மேல்
செத்துப்போவதோர்போது நினைந்து செய்யுஞ்செய்கைகள் தேவபி
பத்தராயிறந்தார்பெறும்பேற்றைப்பாழித்தோள்விட்டுசித்தன்புத்தூர்க்கோன்
சித்தம்நன்கொருங்கித் திருமாலைச்செய்தமாலையிவைபத்தும் வல்லார்
சித்தம்நன்கொருங்கித் திருமால்மேற் சென்றசிந்தை பெறுவர்தாமே. (௧௦)

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.

---

வல்லாருமாய். (ஒரு பக்கம் நிற்கவல்லார்க்கு) ஸம்ஸாரிகளோ டுள்ளவுறவைக்கலசாதே இவனேயாகப்பற்றி நிற்கவல்லார்க்கு. (அரவதண்டத்திலுய்யலுமாமே)யமபடரையும் அவர்கள்க்ரூரமான தண்டங்களையும்தப்பி உஜ்ஜீவித்துப்போகலாம். (௧)"மாதாவினைப் பிதாவைத்திருமாலைவணங்குவன்" என்றும் (௨)"சேலேய் கண்ணிய ரும்பெரும் செல்வமும் நன்மக்களும் மேலாத்தாய் தந்தையும் அவ ரே"என்று பற்றுமவர்க்கு உஜ்ஜீவித்துப்போகலாமென்கிறார். (௯)

அவ;—நிகமத்தில் இத்திருமொழியை அப்யஸித்தவர்கள் ஸ்ரீ யஃபதிபக்கலிலே பெரியாழ்வார் பெற்றவரிசைகளை பெறுவார்க ளென்கிறார்.

ஸ்வா;—(செத்துப்போவதோர் போது நினைந்து) ஶரீராவ ஸாநஸமயத்திலே யமபடர்செய்யும் செயல்களை நினைத்து. (தேவ பிரான் மேல்பத்தராய்) அயர்வறுமமரர்களதிபதிபக்கலிலே ப்ரே

---

மனேயாகப்பற்றி நிற்கவல்லார்க்கு. (அரவதண்டத்திலுய்யலுமாமே) யமபடரையும் அவர்கள் க்ரூரமான தண்டங்களையும் தப்பி உஜ்ஜீ வித்துப் போகலாம். (௧) "மாதாவினைப்பிதாவைத்திருமாலை வண ங்குவனே" என்றும், (௨) "சேலேய் கண்ணியரும்பெரும்செல்வ மும் நன்மக்களும், மேலாத்தாய்தந்தையுமவரே" என்றும் பற்றி னவர்க்கு உஜ்ஜீவித்துப்போகலா மென்கிறார். (௯)

அவ;—நிகமத்தில்,இத்திருமொழியை அப்யஸித்தவர்கள், ஸ்ரியஃ பதிபக்கலிலேபெரியாழ்வார்பெற்றவரிசைகளைப் பெறுவரென்கிறார்.

வ்யா;—(செத்துப்போவதோர் போது - செய்யும் செய்கை கள்-நினைந்து) சரீராவஸாநஸமயத்தில யமபடர்செய்யும் செயல்களை நினைத்த. (தேவபிரான்மேல் பத்தராய்) * அயர்வறுமமரர்களதிபதி

---

அரு;—பத்தாம்பாட்டு. (செத்தித்யாதி) பாழித்தோ ளித்யாதியைக் கடாக்ஷித்தலதாரிகை (நிகமத்திலித்யாதி).

---

(௧) திருவி-௯௫. (௨) தி-வாய்-௫-௧.

மத்தைப்பண்ணி. (இறந்தார் பெறும் பேற்றை) பக்தராய், பின்பு இறந்தார் பெறும்பேற்றை (பாழித்தோள் விட்டுசித்தன்) ஸம்ஸாரத்தை வென்ற மிடுக்கையுடையதோள்களை யுடையவராழ்வார். சரமகாலத்திலே இவர்களைப்போலே பக்தியுண்டாகையன்றிக்கே ஹதாமநோரதம் பண்ணும் நித்யஸூரிகளைப்போலே யிருக்கிற வாழ்வாரை ஸ்வாமியாகப் பற்றியிருக்கும் ஸ்ரீவில்லிபுத்தூருடையருமாய் "ஆசைவாய்ச் சென்ற சிந்தை யருமாய்" என்கிறபடியே கரணத்ரயமும் புறம்படபோதல், கலந்திருத்தல் செய்யாதே. (திருமால் மேல் சென்ற சிந்தை பெறுவர்தாமே) ஸ்ரிய:பதிவிஷயமாகச் சொன்ன விப்பத்துப் பாட்டுமப்ப்யஸித்தவர்கள் ஆழ்வாரைப் போலே கரணத்ரயமுமொருபடிப் படவுடையராவர்கள். (௧௦)

பிள்ளை திருவடிகளே சரணம்.

---

பக்கலிலே ப்ரேமத்தைப்பண்ணி. (இறந்தார் பெறும்பேற்றை) பக்தராய், பின்பு இறந்தார் பெறும்பேற்றை. (பாழித்தோள் விட்டுசித்தன்) ஸம்ஸாரத்தைவென்ற மிடுக்கையுடைய தோள்களையுடைய ஆழ்வார். (புத்தூர்க்கோன) சரமகாலத்திலே அவர்களைப்போலே பக்தியுண்டாகையன்றிக்கே, ஹதா மநோரதம் பண்ணும் நித்யஸூரிகளைப்போலே யிருக்கிற ஆழ்வாரைஸ்வாமியாகப் பற்றி யிருக்கும் ஸ்ரீவில்லிப்புத்தூரையுமுடையரானவர்.

(சித்தம் நன்கித்யாதி) "ஆசைவாய்ச்சென்ற சிந்தையராகி" என்கிறபடியே கரணத்ரயமும் புறம்புபோதல் கலந்திருத்தல் செய்யாதே ஸ்ரிய:பதிவிஷயமாகச் செய்த இப்பத்துப்பாட்டும் அப்யஸித்தவர்கள். (சித்தம் நன்கொருங்கித் திருமால்மேல் சென்ற சிந்தை பெறுவர்தாமே) ஆழ்வாரைப்போலே கரணத்ரயமும் ஒருபடிப்பட வுடையராய், ஸ்ரிய:பதிபக்கலிலே சென்ற மநஸ்ஸை யுடையராவர்கள். ... ... ... .... .... (௧௦)

பெரியஜீயர் திருவடிகளேசரணம்.

---

க்ஷத்ரியரல்லாதவராகையாலே தோள் மிடுக்கைச் சொல்லககூடுமோ வென்னவருளுகிறார் (ஸம்ஸாரத்தையித்யாதி). விட்டுசித்தனென்றபதத்தின் யோகார்த்தத்தையும் கூட்டியர்த்த மருளுகிறார் (சரமகாலத்திலேயித்யாதி).

ஜீயர் திருவடிகளே சரணம்,

## பெரியாழ்வார் திருமொழி நாலாம்பத்து அஞ்சாம் திருமொழி முற்றிற்று.

---

ஆழ்வார்திருவடிகளேசரணம்,
பெரியாழ்வார் திருமொழி நாலாம்பத்து ஆறாந்திருமொழி
## காசும் கறையுடைப்ரவேசம்.

ஸ்வா;—நாவகாரியத்திலே, ப்ராப்யாநுரூபமானபக்தியோடே
திருநாம விசேஷங்களைஆசார்ய முகத்தாலறிகையன்றிக்கேதந்தா
முடைய தர்மவீர்ய ஜ்ஞாநத்தாலே பிறந்த வெளிச்செறிப்புக்
கொண்டு திருநாமங்களை ஒரு போகியாகச்சொல்லி நிர்ணயித்துப்
பரிகணித்து ஊர்த்த்வகதியிலே பர்வக்ரமமாகப்போய் ஒருநிபுணா
சார்யமுகத்தாலே அடிமைத்தொழிலிலே திருநாமங்களைச்சொல்லி
மூளாதவளவேயன்றிக்கே நின்றநிலை தெரியாமல் நிற்க, நிலையின்றி
யேறினவழியே மீளுவாரைப்போலன்றிக்கே ஶாஸ்த்ரஜந்யஜ்ஞா
நந் தன்னாலே யேறி நிபுணாசார்யனைக்கிட்டி அடிமைத்தொழிலிலே
மூண்டுமூண்டு திருநாமவாசியறிதல், உபதேஶகம்யஜ்ஞாநத்தாலே
இவர்களுடைய சரமத்தை ப்ரதமமாக்கி அடிமையாய்த் திருநாமம்
சொல்லுவாரையும் அடைவிலே அருளிச்செய்தார்.

இவ்வடைவிலே திருநாமம் சொல்லவல்லார் செத்துப்போவ

---

## காசுங்கறையுடை ப்ரவேசம்.

அவ.— * நாவகாரியத்திலே, பகவத்விமுகராய்த் தம்மாலே
நிந்திதரானவர்களையும் விடமாட்டாத பரமக்ருபையாலே அவர்க
ளைக் குறித்து ஹிதத்தை உபதேசிப்போமென்று பார்த்து, (க)
"மாளுமோரிடத்திலும் வணக்கொடுமாள்வதுவலமே" என்கிறபடி
யேசரமதசையிலேயாகிலும்பகவத்ஸமாஶ்ரயணத்தைப்பண்ணினால்
தப்பாமல் உஜ்ஜீவிக்கலாம்படி யிருக்கையாலே, இந்தவாசியை
அவர்களுக்கறிவித்தால், சேதநராகையாலே பகவத்ஸமாஶ்ரயண

---

காசும் கறையுடைப்ரவேசம்;—கீழில் திருமொழியிலே ஸம்ஸாரிகளைக்
குறித்து சரமகாலத்திலே எம்பெருமானை நினைத்துத் திருநாமங்களைச் சொ
ன்னால் உஜ்ஜீவிக்கலாமென்று உபதேசித்து, அதுக்கு மாட்டாதவர்களைக்
குறித்து நீங்கள் பெற்ற பிள்ளைகளுக்கு அவன் திருநாமங்களைச் சாற்றி
வாயாரவழைத்தால் உஜ்ஜீவிக்கலாமென்று உபதேசிக்கிறாரென்று ஸங்கதி
யைக்காட்டுகைக்காக பரோபதேசத்துக்கு ப்ரஸக்தியை யருளுகிறார் (நாவ

---

(க) தி-வாய்-க-ங-அ.

தோர் போதை இப்போது இப்போதென்று நினைத்து பக்திபார வஶ்யத்தாலும் கைங்கர்யம் தேஶகாலாவஸ்தா ரூபமாகச்செய்யுமடைவறிந்து செய்துபோருமவர்கள் ஶரீராவஸாநத்திலே பெறும் பேற்றை ஆசைவாயிலே அருளிச்செய்தார்.

---

த்திலேயிழிவர்களென்று திருவுள்ளம்பற்றி, "ப்ராக்ருதவிஷயங்களிலுண்டான ஆசையாலே அவற்றின் பக்கலிலேசென்ற நெஞ்சையுடையராய் அவற்றின் பேரைச்சொல்லி, பின்னை அதுதானும் மாட்டாதே கலங்கி முடிந்து போங்காலத்திலே அவற்றின் பேர்களைச்சொல்லாமல் பகவந்நாமத்தைப் பேசுமவர்கள்பெறும் பேற்றின்கனம்நம்மால்சொல்லித்தலைக்கட்டப்போகாது" என்றுதொடங்கி, அந்திமதசையில்வரும் க்லேசபரம்பரைகளையும், அத்தசை வருவதற்குமுன்னே ஏதேனுமொருவழியாலேயாகிலும் பகவத்ஸமாஶ்ரயணத்தைப் பண்ணிஶரீரத்தை விட்டால் அதிக்ரூரமாக யமபடர்பண்ணும் தண்டங்களையும் தப்பி அர்ச்சிராதிமார்க்கத்தாலே பரமபதத்திலேபோய் பகவதநுபவ~~த்தைப்பண்ணி~~ புநராவ்ருத்தியின்றிக்கே காலதத்வமுள்ளதனையும் நித்யஸூரிகள் திரளிலே கூடியிருந்து வாழலாமென்னுமிடத்தை அவர்கள் நெஞ்சிலேபடும்படியாகவுன்ற உபதேசித்தார் - கீழ்திற்றிருமொழியில்.

இப்படி இதரவிஷய ஸங்கமற்று பகவத்ப்ரேமபூர்வமாக அவன் திருநாமங்களைப் பேசத்தக்க பரிபாகமில்லாதாரையும் ஒருவழியால் அவன் திருநாமத்திலே அந்வயித்து உஜ்ஜீவிப்பிக்கவேணுமென்று திருவுள்ளம்பற்றி, த்ருஷ்டப்ரயோஜநங்களை நச்சி, பெற்ற பிள்ளைக்கு ப்ராக்ருதவிஷயங்களின்பேரை யிடுமவர்களைக்குறித்து, நீங்கள் இப்படி ப்ராக்ருதவிஷயங்களின் பேரிட்டால் இம்மையில் நீங்களாசைப்படுகிற க்ஷுத்ரப்ரயோஜநங்கள் தானும்ஸித்திப்பது பணியில்லை; மறுமைக்குத்தானே யொன்

---

காரியத்திலித்யாதி). (பகவந்நாமங்களையே பேசுமவர்கள்) என்றதுக்குஇதுவுமொரு ஸமாஶ்ரயணமென்று கருத்து.

(ப்ராக்ருதவிஷயங்கள்)என்றது-உபகரிக்கும்பாமரரான மநுஷ்யர்களென்றபடி. (இம்மையிலே) இஜ்ஜந்மத்திலே. (மறுமைக்கு) அத்ருஷ்டத்துக்கு.

இப்படி திருநாமம் சொல்லுமடைவறியாதவர்களையும் ஒரு வழியே யறிவிப்பதாகவும் தம் அபிமாநத்திலே சேர்ப்பதாகவும் திருவுள்ளம்பற்றியருளிநெஞ்சிளகியிருப்பாரும்பாரதந்த்ர்யத்திலே ஒருபடிப்பட்டிருப்பாரும் ஸ்த்ரீகளாகையாலே,(க)[நஸ்த்ரீ ஸ்வாதந்த்ர்ய-நஸ்த்ரீஸ்வாதந்த்ர்யம்] ஸ்த்ரீகளுக்கு ஒருகாலும் ஸ்வாதந்த்ர்யமில்லை. கந்யகையானபோது மாதாபிதாக்கள் கீழே நின்றும், பின்பு பர்தாவின் கீழேநின்றும், பர்தா பாணிக்ரஹண ஸமயத்தில் ப்ரதிஜ்ஞை குலைந்தாலும் தான்படி கடவாமல் கிடந்தும், அவன் தர்மத்திலே ஒருப்பட்டபோது தான் ஸஹதர்மசாரியுமாய், அவனுடைய நியதாநியதங்களைப் பாராமல் பாதிவ்ரத்யத்தாலே அத்யந்த பரதந்த்ரையுமாய் இவனுடைய வியோகத்தில் புத்ராதிகள் கீழேஒதுங்கியும், அதில்லையாகில்பின்னையும் மாதாபிதாக்கள் ஜ்ஞாதிவர்கஸம்பந்திகளில்லையாகில் லோகாபவாதத்தின் கீழே ஒதுங்கியும் போருகையாலே பித்ராதிகளிலும் காட்டில் மாத்ருவர்கத்துக்கு, புத்ராதிகளைத் திருநாமம் சாத்தினால் நிரயநிஸ்தாரகமான அநிஷ்டநிவ்ருத்தி-"நம்பிகாள் நாரணன் தம்மன்னை நரகம்புகாள்" என்று முற்பட இவர்களுக்குக் கண்ணழிவற ஸித்திக்குமென்று திருநாம ப்ரபாவத்தை இதர ஸம்பந்தரஹிதமாக்கி வைத(ய) மாகவருளிச் செய்கிறார். .... .... .... ....

அவ;—முதற்பாட்டு. (காசித்யாதி), ஆபாஸமான பேர்களை நச்சி நீங்கள் பெற்ற பிள்ளைகளை இதரர்பேரிட்டு நரகாத்மாவாய்ப் போகாதே எல்லாரையும் பெற்றவர்களைப்பெற்றவன்பேரிட்டால்,

---

றுக்கும் உறுப்பன்று, ஆனபின்பு அத்தைவிட்டு பிக்ஷைபுகுந்தாகிலும்ஜீவித்துத் தன் திருநாமத்திலே அந்வயித்தாருடைய ஸகல க்லேஶங்களையும்போக்கும் ஸர்வேஶ்வரனுடைய திருநாமத்தை, நீங்கள் பெற்றபிள்ளைக்கிட்டுவாயாரவழைத்து ப்ரீதராயிருங்கோள்: இவ்வளவேபற்றாசாக அந்தப்பிள்ளையுடைய மாதாவானவள் (உ) "ஜநநீக்ருதார்த்தா - ஜநநீ க்ருதார்த்தா" என்கிறபடியே நரகத்திற் புகாமல் உஜ்ஜீவித்துப்போமென்று ஒருகால்போலே ஒன்பதின் காலுபதேசித்து, பகவந்நாமங்களை யிடும்படியாக அவர்கள் நெஞ்சைத் தெளிவிக்கிறார் - இத்திருமொழியில். .... (*)

---

(க) மநுஸ்ம்ருதி. (உ)

மூ.—காசுங்கறையுடைக் கூறைக்குமங்கோர் கற்றைக்கும்
ஆசையினு லங்கவத்தப் பேரிடுமாதர்காள்
கேசவன் பேரிட்டு நீங்கள்தேனித் திருமினே
நாயகன் நாரணன் தம்மன்னை நரகம்புகாள். (௧)

---

யமவஶ்யதைதவிரும், பின்னைஊர்த்த்வகதியைப்ராபிக்கவுமாமென்று உபதேசிக்கிறார்.

ஸ்வா;—(காசித்யாதி), நாலிரண்டு காசுகிடைக்குமென்றும், ஒருதலைக்கறைச்சீரை கிடைக்குமென்றும், அங்கே பின்னையும் ஒரு கோட்டை நெல் ஒருகட்டுக்கற்றைக்கு ஒரு பொய்த்தரவும் கிடைக்குமென்றும்ப்ரத்தையாலே, (அங்கவத்தப்பேரிடுமாதர்காள்) அங்கவத்தப்பேரென்று -ஸமஸ்த பதமானபோது மிகவும் பொல்லாப் பேரளவிலே நிற்கும். அங்கென்றும் அவத்தமென்றும் பதமான போது, அங்கென்றவஸ்துக்கள் விலங்கிப்போமிடங்களிலேவஸிக்

---

வ்யா;—முதற்பாட்டு. (காசித்யாதி) பிறர்பேரிடுகிறது - அவர்களுக்கு உத்தேஶ்யராய், ஸ்வயம்ப்ரயோஜநமாகவன்றே; அத்ருஷ்டப்ரயோஜநத்துக் காகவுமன்றே; த்ருஷ்டப்ரயோஜநங் களில் சிலவற்றை நச்சியிறே. ஆகையால், நாலிரண்டு காசுகிடைக்குமென்றும், தலைகளில் கறையையுடைத்தாயிருப்பதொரு சீரைகிடைக்குமென்றும், அங்கே ஒருகட்டுக்கற்றை கிடைக்குமென்று முண்டான வாசையாலே. உங்களுடைய ஆசையொழிய அதுதான் ஸித்திக்கிலுமாம், ஸித்தியாதொழியிலுமாம், என்னும் படியிறே அவர்கள் லுப்ததையிருக்கும்படி. (அங்கவத்தப்பேரிடும் ஆதர்காள்) ப்ராக்ருதரானவர்கள் பக்கலுண்டான ஹேயமான நாமங்களையிடும் அறிவுகேடர்காள். “அங்கு” என்று இவர்கள் உபகாரமாக நினைத்திருக்கும் விஷயங்களினுடைய க்ஷுத்ரதையைச் சொல்லுகிறது. அவர்கள் தான் க்ஷுத்ரராானாலும்

---

அரு;—முதற்பாட்டு. (காசுமித்யாதி)(தலைகளில்) தலைப்புக்களில். (கறை) கம்பி. “கற்றைக்கும் அங்கவத்தப்பேரிடும்” என்னுதே ஆசையினுலென்றதுக்குத்தாத்பர்யமருளுகிறார் (உங்களுடையவித்யாதி). கொடுக்குமவனவத்தப் பேரென்னுதே அங்கென்று - ஔதாஸீந்யம் தோன்ற வருளிச்செய்ததுக்குத் தாத்பர்யமருளுகிறார் (அங்கித்யாதி). (உபகாரமாக) என்றது-உபகாரகங்களாக

குமவர்களைக் காட்டும்; அவத்தமென்றபோது அங்குள்ளவர்களும் பேர் சொல்லக்கூசும்படியான துர்நாமங்களைக்காட்டும். (ஆதர் காள்) அறிவுகேடர்காள்.

(கேசவன்பேரிட்டு) ஸர்வகாரணபூதனாய் க்லேசநாசகனாயிருக்கிறவனுடைய பேரிட்டு, கேசவாவென்றழைத்து, (நீங்கள் தேனித் திருமினோ) நீங்கள் அந்தப்பிள்ளை யளவிலே ஸ்நேஹித்து ஸந்தோஷத்தோடே யிருங்கோள். (தேனிக்கை) ஸ்நேஹிக்கை. (நாயகன் நாரணன்) நாயகன்-ஸர்வசேஷி. (நாரணன்) ஸமஸ்த கல்யாணகுணாத்மகன். (தம்மன்னை நரகம்புகாள்) தம்மன்னை - தன்னன்னை.

நாமந்தான் நன்றாயிருக்கையன்றிக்கே, அதுவும் தீயதாயிருக்குமென்னுமிடம் சொல்லுகிறது - "அவத்தப்பேர்" என்று. ஆதர்-குருடரும், அறிவிலோரும்.

(கேசவன்பேரிட்டு.)(க) "கஐதிப்ரஹ்மணோநாமேசோஹம் ஸர்வதேஹிநாம் । ஆவாமங்கஸம்பூதௌ தஸ்மாத்கேசவ நாமவாந் - க இதிப்ரஹ்மணோநாம ஈசோஹம் ஸர்வதேஹிநாம்-ஆவாம் தவாங்கேஸம் பூதௌ தஸ்மாத் கேசவநாமவாந்." என்கிறபடியே - ஸர்வகாரண பூதனாய், (உ) "கேஶவ: க்லேஶநாஶந: கேசவ: க்லேஶநாஶந:" என்கிறபடியே-க்லேசநாசனாயிருக்கிறவனுடைய திருநாமத்தையிட்டு "கேசவா" என்றழைத்து. (நீங்கள் தேனித்திருமினோ) நீங்கள் அந்தப் பிள்ளையளவிலே ஸ்நேஹித்து ஸந்தோஷத்தோடே யிருங்கோள். தேனித்திருக்கையாவது-இனியராயிருக்கை. (நாயகன் நாரணன்) "நாயகன்" என்றது - ஸர்வசேஷியென்றபடி, "நாரணன்" என்றது - ஸமஸ்த கல்யாண குணாத்மகனென்றபடி. இத்தால் - ஆஶ்ரிதரை ரக்ஷிக்கைக்கீடான ப்ராப்தியையும் குணயோகத்தையு முடையவனென்கை. (தம்மன்னை) தாயாரானவள். * "தமப்பன்" என்னுமாபோலே, "தம்

மென்றபடி. (நாமம் நன்றாயிருக்கை) என்றது - அவர்களுடைய பேர்தான் பகவந்நாமமாய் அத்ருஷ்டப்ரதாநமாயிருக்கை யென்றபடி.

கேசவன் பேரானல் ப்ராப்தமுமாய் மஹாபலப்ரதமுமாயிருக்குமென்றருளிச்செய்கிறார் (கஇதித்யாதி) நாயகனை நாராயணன் பேருடைய பிள்ளைக்குத்தமன்னையென்று ஸப்தார்த்தம் விவக்ஷிதமாகையால், நரகம்புகாளென்ற

(க) (உ) நாரஸிம்ஹபு.

மூ.—அங்கொரு கூறையரைக்குடுப்பதனாசையால்
மங்கியமானிடசாதியின் பேரிடுமாதர்காள்
செங்கணெடுமால் சிரீதராவென்றழைத்தக்கால்
நங்கைகாள் நாரணன்றம்மன்னை நரகம்புகாள். (௨)

---

நரகம்புகாள்-பிள்ளைக்கு நாராயணனென்று பேராகில் அவனைப் பெற்றவளுக்கு எங்ஙனே யமவஶ்யதை கூடுவது; பிள்ளைபெற்று நாராயணனென்று பேரிட்டது யமவஶ்யதை கூடுகைக்கோ; அன்றிக்கேதம்மன்னையென்று-நாராயணனுடையமனையிலுள்ளார் நாராயணனென்றழைக்கையாலே இப்படி அழைத்தவர்களெல்லார்க்கும் யமவஶ்யதையில்லை. ஆகையாலே நரகம்புகார்களென்று சொல்விரித்ததாகவுமாம். கேசவனென்றது-நாராயணனளவில்பர்யவஸிக்கும் பேரிடும் மாதர்காளென்னவுமாம்; நங்கைகாளென்னுமாபோலே.

ஸ்வா;—இரண்டாம்பாட்டு. (அங்கித்யாதி). அங்கென்று-ஸூத்ராஸ்த்தர் வர்திக்கிற தேசத்தைக்காட்டுகிறது. ஒரு கூறையென்று ஹேயமாய்கொள் கொடைக்†காற்றிப்போராதென்கிறது,

---

மன்னை" என்கிறது. (நரகம்புகாள்) பிள்ளைக்கு நாராயணனென்று பேராகில் அவனைப்பெற்றவளுக்கு எங்ஙனே யமவஶ்யதைகூடுவது. பிள்ளைபெற்று "நாராயணன்" என்று பேரிட்டது யமவஶ்யதை கூடுகைக்கோ. பெற்ற வருத்தமும் பிள்ளையளவில் ஸ்நேஹம் மிக்கிருப்பதும் மாதாவுக்காகையாலே - இவளை ப்ரதானையாகச் சொல்லுகிறது. இப்படிபேரிட்டழைத்து, பிள்ளையளவிலே ஸ்நேஹித்துப் போரும் பித்ராதிகளுக்கும் இப்பேறு ஒக்குமிறே. (௧)

வ்யா;—இரண்டாம்பாட்டு. (அங்கொருகூறை யரைக்குடுப்பதனாசையால்) அங்கே பெற்று ஒருபுடவை அரைக்கு உடுக்கவேணுமென்னும் ஆசையாலே. இவ்விடத்திலும் "அங்கு" என்று உபகாரவிஷயத்தினுடைய க்ஷுத்ரதையைச் சொல்லுகிறது. "ஒரு

---

துக்கு பாவமருளுகிறார் (பிள்ளைக்கித்யாதி). நாரணன் தமப்பனென்றே தம்மன்னை யென்றதுக்குத் தாத்பர்யம் காட்டுகிறார் (வருத்தமுமித்யாதி). ஆனால் தமப்பன் முதலானார்க்கு இப்பலமொக்குமோ வென்னவருளுகிறார் (இப்படியித்யாதி)

அரு,—இரண்டாம்பாட்டு. (அங்கொருவித்யாதி) அங்கென்ற வநந்தரம் பெற்றென்றத்த்யாஹாரம் திருவுள்ளம்பற்றி யருளுகிறார் (அங்கித்யாதி).

---

† (பா) மாற்றப்போகாது,

நன்றென்று மேல்புடவையும் தலைச்சீரையும் புறம்பே தேடவேணு மென்கிறது. (ஆசையால்) இவனுக்காசையும் அவனுக்குநிராசையு மாயிறே யிருப்பது. (மங்கிய மானிடசாதியின் பேரிடுமாதர்காள்) ஹேயராய்ச் செத்துப்போனவர்களுடைய "உங்களையாண்டார், அப்பாண்டார், ஐஎிபிளி" என்றாப்போலே சிலபேர்களையிட்டுச் சென்றுலாகிலும் சிலதருமோவென்று பேரிடுமல்பார்காள்.

(செங்கணெடுமால் சிரீதராவென்றழைத்தக்கால்) இப்படிப் பேரிட்டுஅழைத்தக்கால், (நங்கைகாள்)(க) "ஷ்ரூவஷாயயிதாரஜமகூ

கூறை" என்றும், "அரைக்குடுப்பது"என்னும் சொல்லுகையாலே, அரைக்குஉடுக்கும் சீரைக்கு இணைச்சீரை வேறே தேடவேணு மென்கை. "ஆசையால்" என்கையாலே-அதுதானும் உங்களாசை யேயுள்ளது, கிடைக்கிலுமாம், கிடையாதொழியிலுமாமென்கை. (மங்கியமானிடசாதியின்பேரிடு மாதர்காள்) (உ) "சுவைஷ்வ - அஸந்நேவ" என்கிறபடியே அழிந்துகிடக்கிற மநுஷ்யஜாதியுடைய பேரையிடாநிற்கும் அறிவுகேடர்காள். (ங) "ஆன்விடை யேழன் றடர்த்தாற் காளானாரல்லாதார் மானிடவரல்லர்" என்னும்படி யானவர்கள் பேரையிறே யிடுகிறது. த்ருஷ்டத்துக்கும் அத்ருஷ் டத்துக்கும் உறுப்பன்றிக்கே யிருக்கிறவர்கள்பேரை யிடுகிறது உங்களறிவுகேடிறே.

(செங்கண் நெடுமால் சிரீதராவென்றழைத்தக்கால்) வகுத்த சேஷியானவனுடைய திருநாமத்தையிட்டு, "செங்கணெடுமாலே" "சிரீதரனே" என்று அழைத்தால். "செங்கணெடுமால்" என்றது - வாத்ஸல்யப்ரகாசகமான திருக்கண்களையும், ஆஸ்ரிதவிஷயத்தில் மிக்கவ்யாமோஹத்தையுமுடையவனென்கை. அன்றிக்கே, "மால்" என்றது - பெரியோனென்றபடியாய், * நெடுமையால் - ஸர்வாதி கத்வம் சொல்லுகிறதாகவுமாம். அப்போதைக்கு, "செங்கண்" என்றது - ஐஸ்வர்யத்துக்குஸூசகம். "சிரீதரா" என்றது-கீழ்ச்

(இணைச்சீரை) மாறியுடுக்கும் புடவையும், மேலுக்குப்போகடும் புடவையும். அறிவுகேடெப்படி யென்னவருளுகிறார் (ஆன்விடையித்யாதி). கீழ்வாக்யவிவ ரணம் (த்ருஷ்டேத்யாதி).

செங்கணெடுமாலென்றதினிரண்டார்த்தத்தைத்திருவுள்ளம் பற்றித் தாத்பர்யமருளுகிறார் (வகுத்தவித்யாதி).

(க) (உ) தை-ஆ- (ங) தி-மொ-௧௧-௭-௬.

படியூன்றி அவன்தலையபிஷேகத்தோடே நெரியும்படியாகப்பிடித்துக் கண்கள்பிதுங்கிப் புறப்படும்படியாகவும் வாய்விட்டுக் கூப்பிடும்படியாகவும் கிழித்துப் பொகட்டவன் நித்யவாஸம் பண்ணுகிற கோயில். (தெழித்தல்) ஆர்ப்பரவம் செய்கையென்னவுமாம்.

(உரமித்யாதி) நிலவுரத்தாலேவயல்களிலுண்டான தாமரைப்பூவானது திருவுலகளந்தருளினபோது எடுத்ததிருவடிகள்போலே வளர்ந்து தோற்ற; (வரம்புற்ற வித்யாதி) வரப்பிலே கதிர்கனத்தாலே சாய்ந்த செந்நெற்கதிரானது அத்திருவடிகளுக்குத்தோற்று நிர்மமரானவர்களுடைய ப்ரஹ்வீபாவத்தைக் காட்டா நின்றுள்ள ப்ரமஹரமானகோயில்.

---

ராகாதிகளாலே அலங்கரித்து, அவன் பலகாலும் பார்த்து அநுபவித்துக்கொண்டிருந்த அழகியமார்விலே மறுபாடுருவும்படியாக வூன்றி. (சிரமித்யாதி) அபிஷேகமானது பொடிபடும்படியாகவும், கண்கள் பிதுங்கும்படியாகவும், வேதனைகள் பொறுமல் வாய் அலறும்படியாகவும், தலையைப்பிடித்து நெரித்து, "ப்ரஹ்லாதனுடைய விரோதி போகப்பெற்றோம்" என்னும் ப்ரீதியாலே ஆர்ப்பரவம் செய்தவன் இங்ஙனொத்த விரோதிகளைப்போக்கி ஆச்ரிதரை ரக்ஷிக்கைக்காக நித்யவாஸம் பண்ணுகிற தேசம்.

(உரம்பெற்றவித்யாதி) சேற்றுவாய்ப்பாலே உரம்பெற்றிருக்கிற தாமரைப்பூவானது திருவுலகளந்தருளினபோது மேலெடுத்த திருவடிகளைப்போலே கிளரவளர்ந்து ப்ரகாசியா நிற்க. (வரம்புற்ற வித்யாதி) அப்போது, (க) "ஸம்மெவெலூ--ாராணாடீ - ஸந்கைஸ்ஸ--ராணும்" என்கிறபடியே தேவர்கள் முதலானவர்கள் திரண்டு காலைநீட்டித் தலையைவணக்கித் தண்டனிட்டுக் கிடந்தாற்போலே, வரம்புசேர்ந்து விளைந்துநிற்கிற செந்நற்களானவை தாள்களை நீட்டித் தலையை வணங்கும் சிறப்பையும், ஸர்வர்க்கும் தாபஹரமான குளிர்த்தியையுமுடைத்தான திருவரங்கமே. (அ)

---

முடியிடியக் கண்பிதுங்க வாயலறச் சிரம்பற்றித்தெழித்தான்" என்றங்வயித்து அர்த்தமருளுகிறார் (அபிஷேகமித்யாதி), தெழித்தானென்றதினர்த்தம் (ஆர்ப்பரவம் செய்தவன்) என்றது அதாவது-அட்டஹாஸம். (அ)

---

(க) மாங்கள்யஸ்தவம்.

மூ.—

தேவுடையமீனமா யாமையா யேனமா யரியாய்க் குறளாய்
மூவுருவிலிராமனாய்க் கண்ணனாய்க் கற்கியாய் முடிப்பான் கோயில்
சேவலொடு பெடையன்னஞ் செங்கமலமலரேறி யூசலாடிப் [கமே.
பூவணைமேல் துதைந்தெழு செம்பொடியாடி விளையாடும் புனலரங்

இத்தால்—கருந்தரையில் ஆசார்யனுடைய ஜ்ஞாநாநுஷ்ட்டாநங்களாலே ஊர்த்த்வகதியை ப்ராபித்தஶிஷ்யனுடைய ஸௌமநஸ்யத்தை அந்யஶேஷத்வஸ்வஸ்வாதந்த்ர்யங்களை நிஷேதித்த திருவடிகளுக்குப் போலியாகக்கண்டு * அஹமந்நபூதராயி ருக்கச் செய்தேயும் அதிகாராநுகுண ப்ரமாணவ்யவஸாயம் கடவாமல் தானும் தடக்கையும் கூப்பிப்பணியுமவர்களைக் காட்டுகிறது. (அ)

அவ;—ஒன்பதாம்பாட்டு. (தேவுடையவித்யாதி) எல்லாவவதாரங்களையும் சேர்த்தநுபவிக்கிறார்.

ஸ்வா;— (தேவுடையவித்யாதி) த்யோதமாநகுணங்களையுடையனவாய் ஆபத்ரக்ஷகங்களுமான மத்ஸ்யாத்யநேகாவதாரங்க

அவ;—ஒன்பதாம்பாட்டு. தஶாவதாரமாய்க்கொண்டு ஜகத்ரக்ஷணம் பண்ணுமவன் நித்யவாஸம் பண்ணுகிற தேசமிது வென் கிறார்.

வ்யா;-(தேவுடை)தேஜஸ்ஸையுடைய. இது,ஸகலாவதாரவிசேஷணம்.சேதநருடையஜந்மம்,கர்மநிபந்தநமாய்ஸ்வார்த்தமாயிருக்கையாலே பிறக்கப்பிறக்க ஒளிமழுங்கி வாராநிற்கும்; ஈஶ்வரனுடைய ஜந்மம், இச்சமாய் பரார்த்தமாயிருக்கையாலே பிறக்கப்பிறக்க ஒளி பெற்று வாராநிற்கும். (க)"பலபிறப்பாய் ஒளிவரும்" என்றருளிச் செய்தாரிறே. (உ) "ஸஉஶ்ரேயாந் பவதிஜாயமாநஃ" என்னக்கடவதிறே. உகாரம் அவதா(யா)ரணவாசகமாய். 'ஸஏவஶ்ரேயாந்' என்றபடி. அதாவது - அவனே ஜாயமாநனாய்க்கொண்டு ஶ்ரேயானாக நின்றவனென்கை. அவதாரணத்தாலே சேதநனை வ்யாவர்த்திக்கிறது. (மீனமாய்) (ங) * வா

அரு;—ஒன்பதாம்பாட்டு. ( தேவுடையவித்யாதி ) அவதாரமாகையாலே சேதநனுடைய ஜந்மம் போலே தேஜஸ்ஸங்கமழுங்கியிருக்கவேண்டாவோ வென்ன, இரண்டுக்கும் வைஷம்யமருளுகிறார் (சேதநனித்யாதிவாச்யத்வயத்தாலே).

(க) தி-வாய்-க-ங-உ. (உ) யஜு-ஆர. (ங) தி-மொ-அ-அ-க.

ளைப் பண்ணி ப்ரளயத்தை வற்றுவித்து, ஜகத்தைத்தரித்து, ப்ரளயத்தினின்றும் ஜகத்தையெடுத்து, ஆஸ்ரிதனுடைய வாபத்திலே தோற்றி, தன்னுடைமை பெறுகைக் கிரப்பாளனாய், க்ஷத்ரியகுலங்களை அறுத்துப்பொகட்டு, லங்கையை தஹித்து, க்ருஷ்ணனுக்குப் பரிவனாய், பாண்டவஸாரதியாய், ஜகத்ஸம்ஹாரத்தைப்பண்ணினவன்.

---

ஞானரளவும் முதுமுந்நீர் வளர்ந்தகாலம் வந்துய்யக்கொண்ட மத்ஸ்யாவதாரமாய். (ஆமையாய்) தேவகார்யார்த்தமாக ஸமுத்ரமதநம் பண்ணுகிறபோது மந்தாநமான மந்தரத்துக்கு ஆதாரமான கூர்மாவதாரமாய். (ஏனமாய்) ப்ரளயங்கதையாய் அண்டபித்தியிலே சேர்ந்தபூமியை உத்த(ஸ)ரிக்கைக்கீடானவராஹாவதாரமாய். (அரியாய்) "தேவாதி யோநிகளொன்றாலும் படக்கடவேனல்லேன்" என்று வரங்கொண்ட ஹிரண்யனை நிரஸிக்கைக்கீடான நரஸிம்ஹாவதாரமாய். (குறளாய்) மஹாபலியாலே அபஹ்ருதமான ராஜ்யத்தை இந்த்ரனுக்கு வாங்கிக்கொடுக்கைக்கீடாக வாமநாவதாரமாய்.

(மூவுருவிலிராமனாய்) அதாவது - துஷ்டக்ஷத்ரிய நிரஸநார்த்தமாக பரசுராமாவதாரமாய், ராவணவதார்த்தமாக தஸரதாத்மஜ ராமாவதாரமாய், ஆஸுரப்ரக்ருதிகளான க்ஷத்ரியாதிகளை நிரஸிக்கைக்காக பலபத்ர ராமாவதாரமாய். இதில் நடுச்சொன்ன ராமாவதாரம் முக்க்யம் - ஸ்வரூபேணவதரித்ததாகையாலே. பூர்வோத்தாரங்களிரண்டும்கௌணம்-ஆவேஸாவதாரங்களாகையாலே. ஆனால் இவைதன்னை முக்க்யாவதாரங்களோடேகூடப் பரிகணிப்பானென்னென்னில்; ஸ்வரூபாவேசமாகையால் வந்த உத்கர்ஷத்தாலே. இவற்றில் பரசுராமாவதாரம், அஹங்கார யுக்தஜீவனை அதிஷ்டித்து நிற்கிறதாகையாலே, முமுக்ஷுக்களுக்கு அநுபாஸ்யம், பலபத்ர ராமாவதாரம், அஹங்கார கந்தரஹிதமாய் ஈஸ்வரனுக்கு அத்யந்தாபிமதவிஷயமாயிருக்கையாலே, முக்க்யாவதாரங்களோபாதி உபாதேயம். அநுபாஸ்யமான அவதாரந்தன்னை இவரரு

---

ப்ராஸங்கிகமாகப்ரபந்நருக்குச் சிலஸ்வரூப ஸிக்ஷை செய்தருளுகிறார் (ஓதி ஸித்யாதி). திருவநந்தாழ்வானை எம்பெருமான் ஸ்வரூபேணவரவழித்தபடியைப்பற்றவருளுகிறார் (பலபத்ரேத்யாதி). (அநுபாஸ்யமான அவதாரம்) என்

அவ்வவதாரங்களுக்குப் பிற்பட்டவர்களுக்கும் இழக்கவேண்டாத படி நித்யவாஸம் பண்ணுகிறகோயில்.

(சேவலித்யாதி) சிவந்ததாமரைப்பூவின்மேல் அன்னமானது பேடையோடேகூடிச் செருக்குக்குப் போக்கு வீடாகக் காற்றடித்தசைந்த பூக்களின்மேலேயிருந்துஊசலாட, அந்தப்பூம்படுக்கைகளினின்றும் அவற்றினுடைய ஸஞ்சாரத்தாலே கிளம்பின சிவந்த

---

ளிச்செய்வா னென்னென்னில்; தஶாவதாரமு மருளிச்செய்கிறவ ராகையாலும், அவ்வவதாரத்தில பண்ணின விரோதிநிரஸநம் தமக்கு அபிமதமாயிருக்கையாலுமருளிச்செய்தார். (க)“மன்னடங்க மழுவலங்கைக் கொண்ட விராமநம்பி” என்றிறே மேலும் இவரருளிச்செய்தது.

(கண்ணனாய்.) பூபாரநிரஸநார்த்தமாகக்ருஷ்ணாவதாரமாய். (கற்கியாய்) கலிகல்கதூஷிதரான துஷ்டரை நிரஸிக்கைக்காக கல்க்யவதாரமாய். (முடிப்பான்) இப்படி இவ்வவதாரங்களாய்க் கொண்டு துஷ்க்ருத்துக்களை முடிக்குமவன். (கோயில்) அவதாரத்துக்குப் பிற்பாடரானவர்களையும் ரக்ஷிக்கைக்காக நித்யவாஸம் பண்ணுகிற தேசம்.

(சேவலித்யாதி) அபிமதவிஷயமான சேவலோடே கூடவந்து தனக்கு அபிமதமாயிருந்துள்ள பேடையன்னமானது, சிவந்த தாமரைப்பூவின்மேலே ஏறியிருந்து, ஸ்வவ்யாபாரங்களாலே †(முழுசி), அத்தையசைத்து ஊசலாடி. (பூவணையித்யாதி) பூப்படுக்கையின் மேலே பரஸ்பர ஸம்ஶ்லேஷ கார்யரூபமான உழறுதலைச் செய்து, அத்தாலே அங்கினின்றும் கிளர்ந்த சுண்ணமாகிற சிவந்த

---

றது - பரசுராமாவதாரம், “கல்கீ பவிஷ்யந் கலிகல்மஷதூஷிதாந் து-ஷ்டாந்மலேச்சாந் ஹநிஷ்யஸி - ஸஶைத்ய வஸாஸ்ஸ ஸந்தாநப்ராயி லக்ஷ்மீஸஸக்ஷேவந: - கல்கிபவிஷ்யந்கலிகல்கதூஷிதாந் துஷ்டாநமேச்சாந்பகவாந் ஹநிஷ்யஸி । ஸஶைதஸ்யாவஸாஸ்ஸ ஸந்தாநப்ரஸாதி லக்ஷ்மீஸஸக்ஷேமேவந:” என்கிறஶ்லோகத்தைத்திருவுள்ளம்பற்றி கல்கியாயென்றதுக் கர்த்தமருளுகிறார் (கலிகல்கேத்யாதி). (சேவல்) - பும்பக்ஷி. (ஊசலாடி) உஞ்சலாடி. துளைந்தென்றதினர்த்தம் (உழறுதலை) என்றது. அதாவது - துளைக்கை யென்றபடி. (சுண்ணம்) புஷ்பதூளி. ... ... ... ... ... (கூ)

---

† குண்டலிதகம் க்வாசித்கம் (க) ரு-ச-கூ,

மூ.—
செருவாளும்புள்ளாளன் மண்ணாளன் செருச்செய்யுநாந்தகமென்னு
மொருவாளன் மறையாள னோடாதபடையாளன் விழுக்கையாளன்
இரவாளன்பகலாளன் னென்னையாளனேழுலகப்பெரும்புரவாளன்
திருவாளனினிதாகத் திருக்கண்கள் வளர்கின்ற திருவரங்கமே.

சுண்ணங்களிலே அவகாஹித்து லீலாரஸமநுபவிக்கும்படி ஜலஸம்
ருத்தியையுடைய திருவரங்கம்.

இத்தால்—ஸாரக்ராஹிகளாய் ஶுத்தஸ்வபாவருமான ஶ்ரீவை
யாசார்யர்கள் ஸௌமநஸ்யத்தோடே ராகோத்தரராய் வர்த்திக்
கும்படியைக் காட்டுகிறது. ... ... .... (க)

ஸ்வா;—பத்தாம்பாட்டு. (செருவித்யாதி) விரோதிநிரஸந
ஸ்பாவனானபெரியதிருவடியைத்தன் திருவுள்ளத்தின்படியே நடத்து

பொடியிலே முழுகி, இப்படி யிருந்துள்ள லீலாவ்யாபாரங்களைப்
பண்ணும்படியான ஜலஸம்ருத்தியையுடைய திருவரங்கமே.... (க)

அவ. பத்தாம்பாட்டு. ஸர்வநிர்வாஹகனாய் ஶ்ரியஃபதியான
வன் ஸரஸமாகக் கண்வளர்ந்தருளுகிற தேசமிதுவென்கிறார்.

வ்யா.—(செருவாளும்புள்ளாளன்) யுத்தத்தை ஸ்வயமேவ நிர்
வஹியாநிற்கும் பெரியதிருவடியை ஆளுகிறவன். ஆஶ்ரித விரோதி
களான அஸுரராக்ஷஸரோடே யுத்தம்பண்ணுமிடத்தில், அந்த
யுத்தத்தைப் பெரியதிருவடி தானே நடத்த, இவன் காணவந்த சோ
ழரோபாதி அத்தைக் கண்டுகொண்டு அவன் தோளிலே யிருக்கு
மத்தனையாய்த்து. (க) "பாறிப்பாறி அசுரர்தம்பல் குழாங்கள நீ
றெழப்பாய் பறவையொன்றேறி வீற்றிருந்தாய்" என்றாரிறே ஆழ்
வார். அதாவது-அஸுரவர்க்கத்தினுடைய பலவகைப்பட்டகுழா
ங்களானவை, பாறிப்பாறி நீறெழுந்துபோம்படியாக, ப்ரதிபக்ஷத்

அரு.—பத்தாம்பாட்டு. (செருவாளுமித்யாதி) இனிதாகவென்றதைப்
பற்ற (ஸரஸமாக) என்றது. "ஶ்ருங்காரவீரகருணாத்புதஹாஸ்யரௌத்ரபயாநகாஃ - த்ரவோ
ரேகுணோரஸஃ" என்கிறபடியேரஸ மென்று ராகத்தைச் சொல்லுகிறது.(தா
னே நடத்த) என்றது - தானே யுத்தத்தை நடத்த வென்றபடி. (காண
வந்த சோழரோபாதி) என்றது - யுத்தம்பார்க்கவந்த தடஸ்தராஜாக்களைப்
போலே யென்கை. (பாறிப்பாறி) 'சிதறிச்சிதறி. "செருவாளும்" என்றத்

(க)தி-வாய்-உ-கூ-அ.

மவன். (மண்ணாளன்) பெரியதிருவடி தோளிருப்பைக்காட்டி பூமியை எழுதிக்கொண்டவன். (செருவித்யாதி) யுத்தோந்முகமாய் நாந்தகமென்னும் திருநாமத்தை யுடைத்தாய் அத்விதீயமான

---

தின்மேலே பாயாநின்றுள்ள அத்விதீயமான பெரியதிருவடியை மேற்கொண்டு தன்னுடைய வ்யாவ்ருத்திதோற்ற விருந்தவனென்றபடி. (க) "புகழ்நின்ற புள்ளூர்தி" என்று விரோதி நிரஸநத்தால் வந்த புகழடங்கலும் கிடப்பது அவன்பக்கலிலே. "அவனை வாஹநமாகவுடைய னென்கிறதே அவனுக்கேற்றம்" என்று மருளிச் செய்தாரிறே.

(மண்ணாளன்) நித்யஸூரிகளில் தலையான பெரியதிருவடியை வாஹநமாகவுடைய னென்கையாலே நித்யவிபூதியை யாளுமவனென்னுமிடம் சொல்லிற்றாய், இத்தால் லீலாவிபூதியை ஆளும்படி சொல்லுகிறது. ஆஶ்ரிதாநாஶ்ரித விபாக(ஶூந்ய)மறமண்ணிலுள்ளாரெல்லாரையும் ஆளுகிறவன். ஆஶ்ரிதரை, "நம்மோட்டை ஸம்பந்தமறிந்தவர்கள்" என்று ஆளும்; அநாஶ்ரிதரை, தானறிந்த ஸம்பந்தத்தாலே ஆளும். பூமியைச்சொன்னவிது அல்லாத லோகங்களுக்கு முபலக்ஷணம். (செருச்செய்யும் நாந்தகமென்னுமொருவாளன்) கீழ், "புள்ளாளன்" என்று -ஆஶ்ரிதரக்ஷணத்துக்குடலான வாஹநத்தைச் சொல்லிற்று, இங்கு, ஆயுதத்தைச் சொல்லுகிறது. ஆஶ்ரிதவிரோதிகள்மேலே பூசலைச்செய்யாநிற்பதாய், நந்தகமென்

---

தோன்றும் வீரஶ்ரீ அவனுக்கே யானால் ஸர்வேஶ்வரனுக்கேற்ற மேதென்ன வருளுகிறார் (புகழ் நின்றவித்யாதி).

உபயவிபூதிநாதனை மண்ணாளனென்று ஏகதேஶத்தையிட்டுச் சொல்லுகைகூடாமையால் தாத்பர்யமருளுகிறார் (நித்யஸூரிகளிலித்யாதி). "மண்" என்று "மஞ்சா꞉ க்ரோஶந்தி" என்றாப்போலேமண்ணிலுள்ளாரைச் சொல்லுகிறதாய், அந்தஸாமாந்யோக்திக்கு பாவமருளுகிறார் (ஆஶ்ரிதாநாஶ்ரிதேத்யாதி) ஆஶ்ரிதரையுமநாஶ்ரிதரையும் ஏகரீதியாகவாளக்கூடுமோவென்னவருளுகிறார் (ஆஶ்ரிதரையித்யாதி). மண்ணென்று லீலாவிபூதியை யெல்லாம் சொல்லும்படி யெங்ஙனே யென்னவருளுகிறார் (பூமியையித்யாதி). நந்தகமானபோதே யுத்தஸாதநத்வம்ஸித்தமாயிருக்க, 'செய்யும்' என்றுவிஶேஷித்ததுக்குத் தாத்பர்யமருளுகிறார் (கீழித்யாதி). ஸப்தார்த்த மருளுகிறார் (ஆஶ்

---

(க) தி-வாய் ௧௦-௪-௯.

வாளைத்திருக்கையில் சலியாமல் பிடிக்கவல்லவன். (மறையாளன்) வேதத்தினுடைய ஸ்வரூபாதிகளையும் நித்யத்வத்தையும் தன்புத்ய திநமாகவுடையனாய் (க) "[illegible]-வேதைஶ்சஸர்வைரஹமேவவேத்ய:" என்கிறபடியே வேதைகஸமதிகம்யனானவன். (ஓடாதவித்யாதி) வளையாத அல்லாத வாயுதங்களையுடையவன். ஓடுதல் - கெடுதல். அன்றியேநாட்டில் நடையாடாத வாயுதமென்னுமாம். (விழுக்கையாளன) சீர்மையையுடையனும் திருநாமத்தையுடைத்தாய் அத்விதீயமாயிருந்துள்ள கொற்றவொள்வாளை யுடையவன். திவ்யாயுதங்கள்தான் ஸர்வஜ்ஞமாய், நினைவறிந்து கார்யம் செய்யுமவையாயிறே யிருப்பது.

(மறையாளன்) இப்படி ஆயுதத்தாலே அழியச்செய்யவொண்ணாத பாஹ்யகுத்ருஷ்டி மதங்களையழியச்செய்கைக்குப்பரிகரமான வேதத்தை ஆளுகிறவன், ஶஸ்த்ரத்தாலும் ஶாஸ்த்ரத்தாலுமிறே ப்ரதிபக்ஷநிரஸநம்பண்ணுவது. ஶஸ்த்ரத்தாலே நிரஸிக்குமளவில், ஶரீரவிநாசபர்யந்தமாம்; ஶாஸ்த்ரத்தாலே நிரஸிக்குமளவில், அவர்களுடைய விபரீதஜ்ஞாநாதிகள்போய், இச்சரீரந் தன்னோடேயிருக்கச்செய்தே திருந்தி உஜ்ஜீவிக்கைக்கு உறுப்பாம். இது இரண்டுக்கும் விசேஷம். (ஓடாதபடையாளன்) யுத்தத்தில் புகுந்தால் பிற்காலியாதபடியான பரிகரத்தை யுடையவன். அன்றிக்கே, (உ) "[illegible] - அஸங்க்க்யேய நித்யநிரவத்ய நிரதிசய கல்யாண திவ்யாயுத" என்கிறபடியே லோகத்தில் வழங்காத ஆயுதவிசேஷங்களை யுடையவனென்னவுமாம். (விழுக்கையாளன்) (ந) "[illegible]

ரிதவிரோதிகளித்யாதி). (கொற்ற) ஜயஸூசகமான. (ஒள்வாள்) அழகியவாள். "செருச்செய்யும்" என்று ஸ்வாதந்த்ர்யேண கர்த்ருத்வமாய் யுத்தத்துக்குச் சொல்லக்கூடுமோ வென்ன (திவ்யேத்யாதி).

விரோதி நிரஸந ப்ரகாரத்துக்குச் சேரத் தாத்பர்யமருளிச் செய்கிறார் (இப்படியித்யாதி). நந்தகம் போலே வேதமும் விரோதி நிரஸநம் பண்ணும் ப்ரகாரமெங்ஙனே யென்ன வருளிச் செய்கிறார் (யுக்தத்திலித்யாதி). படையென்றது ஆயுதமாய், அர்த்தாந்தரம் (அன்றிக்கேயித்யாதி). (வழங்காத) வ்யவஹ்ருதமல்லாத. இது - ஓடாதவென்றதின் பலிதார்த்தம்.

(க) கீ-கரு-கரு. (உ) ஶரணா-கத்யம். (ந) வரத-ஸ்த-கூரு.

வன். விழுக்கை - நீக்குதலென்றுமாம். அத்தால் ஶத்ருக்களோயோ ட்டவல்லனென்கை.

(இரவாளன் பகலாளன்) அஹோராத்ரோபலக்ஷிதமான காலத்துக்கு நிர்வாஹகனானவன். (என்னையாளன்) என்னை அநந்யார் ஹனாக்கியாண்டுகொடுபோருகிறவன், (ஏழுலகப்பெரும்புரவாளன்) உபயவிபூதியையும் *அங்காதும் சோராமல் ஆளுமவன். (ஏழுலகு) த்ரிவிதசேதநரும், சதுர்விதப்ரக்ருதியையும், (புரவு) வரிசையும் தரங்கட்டும். (திருவாளன்) இவையெல்லாத்துக்கும் ஹேதுவாகப்

---

ஸ-ஷணாநி -பரிஜநபரிபர்ஹா பூஷணாநி" இத்யாதிப்படியே ஆத்மாத்மீயங்களுடைய ஆஶ்ரிதார்த்தமாக்கிவைக்கும்சீர்மையை யுடையவன். (விழுக்கை) சீர்மை. அன்றிக்கேவிழுப்பத்தையுடைத்தான கையையுடையவன், சீர்மையோடேகூடின கொடையை யுடையவனென்றபடி. (ந) "ஸஸவ-ஸா-நயி-ஸ்ரெநாஊ-ஷா ஸமெசத்ர வஸ்தி நநூவ - ஸ்ஸர்வாநர்த்திநோத்ருஷ்ட்வா ஸமேத்யப்ரதிநந்த்யச" என்னக் கடவதிறே.

(இரவாளன்பகலாளன்) திவாராத்ரரூபமான காலத்துக்கு நிர்வாஹகனானவன். இத்தால் சேதநர்க்கு ஜ்ஞாநஸங்கோச ஹேதுவாயும் ஜ்ஞாநவிகாஸ ஹேதுவாயுமிருந்துள்ள காலங்களை ஸ்வாதீநமாக வுடையவனென்கை. (என்னையாளன்)(உ)"எயிற்றிடை மண் கொண்ட வெந்தை யிராப்பகலோதுவித்தென்னைப் பயிற்றிப் பணி செய்யக்கொண்டான்" என்கிறபடியே தானேதிருத்தி, திவாராத்ர விபாகமற என்னையாளுகிறவன். (ஏழுலகப்பெரும்புரவாளன்) ஸமஸ்தலோகங்களுமாகிற பெரிய புரவை ஆளுகிறவன். (புரவு) ஸ- க்ஷேத்ரம். "இத்தால்ஸமஸ்தலோகங்களையும் ஆளுமிடத்தில், அல்பக்ஷேத்ரவானானவன் அத்தை இரவுபகல் பார்த்து நோக்கி ஆளுமா

---

சேதநர் விஷயத்தில் உபகாரம் சொல்லுகிற ப்ரகரணத்துக்குச் சேரத் தாத்பர்யமருளிச் செய்கிறார் (இத்தாலித்யாதி). (ஜ்ஞாநஸங்கோசஹேதுவாயும்) என்றது - நித்ராஹேதுவாயுமென்றபடி. இத்தால் நித்ராப்ரதாநத்தால் ஆயாஸம் தீருகையே உபகார மென்றதாய்த்து. கீழே உபயவிபூதியையுமாளுமவனென்று சொல்லி யிருக்கையால், அத்தோடுபௌநருக்த்யம் வாராமைக்காகத் தாத்பர்யமருளிச் செய்கிறார் (இத்தாலித்யாதி). ... (கo)

---

(க) ரா-அ-கசு-உஎ, (உ) ரு உ-ந,

மூ;—கைந்நாகத்திடர் கடிந்தகனலாழிப் படையுடையான்கருதுங்கோயில்
தென்னாடும் வடநாடுந் தொழநின்ற திருவரங்கந் திருப்பதியின்மேல்
மெய்ந்நாவன்மெய்யடியான்விட்டு சித்தன்விரித்த தமிழுரைக்கவல்லார்
எஞ்ஞான்று மெம்பெருமா னிணையடிக் கீழிணைபிரியா திருப்பர்தாமே.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.

——[z]——

பெரிய பிராட்டியாருக்கு வல்லபனானவன், திருவாலே ஆளப்பட்டவனென்னுதல். திருவையாளுமவனென்னுதல். (இனிதாகவித்யாதி) பெரியபெருமாள் பிராட்டியாரோடுகூட ஆஸ்ரிதரக்ஷணத்துக்குப்பாங்கான தேசமென்று உகந்து கண்வளர்ந்தருளுகிறவிடம் கோயில். (க௦)

அவ;—நிகமத்தில் இத்திருமொழி கற்றார்க்குப்பலம் சொல்லுகிறது.

ஸ்வா;—(கைந்நாகத்தித்யாதி) கையையுடையநாகமுண்டு —

---

போலே ஆண்டுகொண்டு போருமவனென்கை. (க)"பொங்கோதம் சூழ்ந்த புவனியும் விண்ணுலகு மங்காதுஞ் சோராமேயாள்கின்ற" என்னக்கடவதிறே.

(திருவாளன்) பெரியபிராட்டியாரை திவ்யமஹிஷியாக வுடையவன். கீழ்ச்சொன்ன லோகத்தையெல்லா மாளுவது இருவருமான சேர்த்தியிலேயாய்த்து. (இனிதாகத்திருக்கண்கள் வளர்கின்ற திருவரங்கமே) "க்ஷீராப்தி தொடக்கமான ஸ்த்தலங்களெல்லாவற்றிலுங்காட்டில் அபிமதஸித்திக்குடலான தேசம்" என்று திருவுள்ளத்திலுகப்போடேகூடக் கண்வளர்ந்தருளுகிற கோயில், திருவரங்கமே. (உ) "க்ஷீராப்³தௌ⁴ ... [illegible] ... க்ஷீராப்தேர் மண்டலாத்பாநோர் யோகிநாம்ஹ்ருதயாதபி-ரதிம்கதோ ஹரிர்யத்ரதஸ்மாத்ரங்கமிதிஸ்ம்ருதம்" என்னக்கடவதிறே (க௦)

அவ;—நிகமத்தில், இத்திருமொழி கற்றார்க்கு பலம்சொல்லித் தலைக்கட்டுகிறார்.

வ்யா.—(கைந்நாகத்திடர்கடிந்த) ஸ்ரீகஜேந்த்ராழ்வானுடைய

---

(க) நா-தி-கக-ந.   (உ) ஸ்ரீரங்கமா.

ஶ்ரீகஜேந்த்ரன் அவனுடைய துதிக்கை முழுத்தும்படியான வாபத்தை ஸவாஸநமாகப்போக்கினவன விரோதிநிரஸநபரிகரமான திருவாழியாகிற ஆயுதத்தோடே உகந்துவர்த்திக்கிறகோயிலான. (தெதுःக்கத்தைப் போக்கின, "ஆனைக்கும் தனக்குத்தக்க வாதம்" என்னுமாபோலே வடிவின் கனத்துக்குத் தக்கபடியிறே துःக்கத்தின் கனமிருப்பது. (க) "ஆனையின் துயரம்" என்றாரிறே. ஆனைக்கு வாசகமான ஶப்தங்கள் பலவுமுண்டாயிருக்க, 'கைந்நாகத்திடர்' என்றது-(உ) "கைம்மா துன்பம்" என்கிறபடியே துதிக்கையை முழுத்தின ஆபத்தென்று தோற்றுகைக்காக.

அதாவது - நெடுங்காலம் வர்ஷாபாவத்தாலே வரண்டு, லோகத்தில் ஒருபூக்காணக்கிடையாதபடியாகையாலே, "எங்கேயொரு திருப்பள்ளித்தாமம் கிடைக்குமோ" என்று தடுமாறுகிற்க, (௩) "மொய்ம்மாம் பூம்பொழிற் பொய்கை" என்கிறபடியே - தூரத்திலே குளிர்ந்தசோலையும் பூத்தபொய்கையுமாய்த் தோற்றகண்டு, பெரிய அபிநிவேஶத்தோடே ஓடிச்சென்று, "உள்ளே துஷ்டஸத்வங்கிடக்கிறது" என்றறியாமல் பொய்கையிலே யிழிந்து பூவைவாரிப்பறித்துக் கரையிலேயேறத் தேடுகிறவளவிலே, முதலைவந்து காலைப்பிடிக்க; "ஒரு நீர்ப்புழு நிமித்தமாக ஈஶ்வரனை யழைக்கவேணுமோ, நாமோ தள்ளிப்போகிறோம்" என்று போகப்பார்த்தவளவில்; பிடித்தமுதலை ப்ரபலமாகையாலே (௪) "மஜ க்ருஷ்யதெ தீரே ஐராஹ க்ருஷ்யதெ ஜலெ - கஜ ஆகர்ஷதே தீரே க்ராஹ ஆகர்ஷதே ஜலே" என்கிறபடியே இங்ஙனே ஆயிரம் தேவஸம்வத்ஸரம் சென்றவளவில்; முதலைக்குத்தன்னிலமாகையாலும் அபிமதலாபத்தாலும் (க) "முழுவலிமுதலை" என்கிறபடியே பலம் அபிவ்ருத்தமாய், ஆனைக்

---

அரு,—பதினோராம் பாட்டு. (கைந்நாகமித்யாதி) ஆனையினுடையஇடர் கடிகை அதிஶயமாகவேண்டி இடரின்கனத்தை யருளுகிறார் (ஆனைக்குமித்யாதி).

ஆபத்துவருகைக்குஹேதுவையும், அவ்வாபத்தை இவன்போக்குகைக்கு நிமித்தத்தையும், போக்கும் ப்ரகாரத்தையும் விஸ்தரேணவருளிச்செய்வதாக ப்ரஸநத்தைக்கிளப்புகிறார் (அதாவதித்யாதி). (அதாவது) என்றவநந்தரம் "எங்ஙனேயென்னில்" என்றுசேஷம். (அபிமதலாபத்தாலும்) என்றவநந்தர "பொய்கை" என்றுசேஷம். (அபிமதாலாபத்தாலும்), என்றது-பூவிடாதகுறை

---

(க) தி-மொ-உ-௩-௯. (உ) தி-வாய்-உ-௯-க.
(௩) தி-வாய்-௩-௫-க. (௪) வி-த-௬-௯.

குத் தன்னிலமல்லாமையாலும் அபிமதாலாபத்தாலும்பலம் க்ஷீண
மாகையாலே அதிக்கை முழுத்தும்படி யாய்த்ததிறே;

இப்படி யானவாறே தன்னுற்செயலற்று, (க) "உதலாவிஷய
ஷரிழ - மஸாசிந்தயத்தரிம்" என்கிறபடியே ஸர்வேஶ்வரனையே
ரக்ஷகனாக வநுஸந்தித்து, (உ) "நாராயணா ஓ! மணிவண்ணா நாக
ணையாய் வாராய்" என்ன; இந்த ஆர்த்தத்வநி செவிப்பட்டவாறே
(ங) "சுதந்த்ரத்வஉஒபெதி வ்யூஹிதஹஸ்து - அதந்த்ரிதசமூபதி
ப்ரஹிதஹஸ்தம்" இத்யாதிப்படியே, (ங) "ஸமவதஷ்ராமெய
நசஃ — பகவதஸ்த்வரமைநமஃ" என்று அறிவுடையார் ஈடுபடும்
படி பெரியத்வரையோடே மடுவின்கரையிலே வந்து, ஆனையை ஒரு
கையாலும் முதலையை ஒரு கையாலுமாக எடுத்தணைத்துக்கொ
ண்டு கரையிலேறி, கையில் திருவாழியாலே முதலையின் வாயைப்
பிளந்து விடுவித்து, சாத்தியருளின திருப்பரியட்டத் தலையைச்சுரு
ட்டித் திருப்பவளத்திலேவைத்து அதினுடைய புண்வாயை வேது
கொண்டு, நெடுநாள்பட்ட க்லேஶமெல்லாம் தீரும்படி திருக்கையா
லே குளிர ஸ்பர்ஶித்துத் திருக்கண்களாலே குளிரக்கடாக்ஷித்து
அதின் கையில் பூவைத்திருவடிகளிலே யிடுவித்துக்கொண்டு அதி
னுடைய துக்கத்தைப்போக்கினபடியைச்சொல்லுகிறது - "இடர்
கடிந்த" என்று.

(கனலாழிப்படையுடையான்) ஜ்வலியாநின்றுள்ள திருவாழி
யை ஆயுதமாகவுடையவன், "இடர்கடிந்த கனலாழிப்படையு
டையான்" என்கையாலே - கையும் திருவாழியுமாய்க் கொண்டு
வந்துதோற்றியாய்த்து முதலையைவிடுவித்ததும், ஆனையைரக்ஷித்த
தும். (ச) "தொழுங்காதல் களிறளிப்பான்-மழுங்காதவைநுதிய சக்
கரநல் வலத்தையாய் - தோன்றினையே" என்று அறிவுடையார்
ஈடும்படியாயிறே அப்போது வந்ததோன்றினபடி. (கருதும்கொயில்)

---

யாலுமென்றபடி. (பலக்ஷீணமாய்) என்றது-பலம் க்ஷீணமாயென்றபடி. (இத்
யாதிப்படி) என்றதுக்கு (பெரியத்வரையோடே) இத்யாதி வாக்யத்தோடந்
வயம்.

---

(க) விஷ்-தர்ம்-சுக-சஎ, (உ) சிறியதிரு, (ங) ர-ஸ்த-உ-ருஎ, (ச) தி-வாய்-க-க,

ன்றுடித்யாதி) ஸகலலோகங்களிலுள்ளாரும் பெரியபெருமாள் குண ங்களுக்குத்தோற்று நிர்மமராய்த்தொழும்படிவிஷயமாய், திருவரங் கமென்கிற திருநாமத்தையுடைத்தாய் நித்யாபிமதமானதேசமென் கை,

(மெய்ந்நாவனித்யாதி) விப்ரலம்பகரன்றென்கை. யதார்த்த வாதியென்று ஆப்திக்குறுப்பாக வருளிச்செய்கிறார் (மெய்யடியா ன்) ப்ரயோஜநாந்தரபரரன்றிக்கே அநந்யப்ரயோஜநராய் அநந்ய ஸாதநராய் மங்களாசாஸநமே யாத்ரையாம்படியான தாஸ்யபூர்த்

"பரமபதம் க்ஷீராப்தி தொடக்கமான ஸ்த்தலங்களெல்லாவற்றிலுங் காட்டில், ஆஶ்ரிதரை அநுபவிப்பிக்கைக்கும் ரக்ஷிக்கைக்கு முட லானஸ்த்தலம்" என்று விரும்பிவர்த்திக்கும் கோயில். (தென்னாடும் வடநாடும் தொழநின்ற) த்ராவிட பாஷாப்ரதாநமான தென்னாடும், ஸம்ஸ்க்ருத பாஷாப்ரதாநமான வடநாடும் இருந்ததே குடியாகத் தொழும்படிநின்ற. (திருவரங்கந் திருப்பதியின்மேல்) திருவரங்க மென்கிற திருநாமத்தையுடைத்தான திருப்பதிவிஷயமாக.

(மெய்ந்நாவன்) மெய்யே சொல்லும் நாவையுடையவன். அஸ த்யமென்பது ஒன்று ஊடுகலசாத நாவையுடையவனென்கை, (க) "பொய்ம்மொழி யொன்றில்லாத மெய்ம்மையாளன்" என்னுமா போலே. இத்தால் - பகவத்வைபவம் தேஶவைபவம் கீழருளிச் செய்தவற்றில் ஒன்றிலும் ஒருபொய் யில்லாமை சொல்லுகிறது. (மெய்யடியான்) அநந்யப்ரயோஜநனை வடியான். "அடியான்" என்று பேரிட்டு ப்ரயோஜநத்துக்கு மடியேற்குமவர்கள் பொய்யடி யாரிறே. ஶேஷத்வம் ஸ்வரூபமானால் சேஷிக்கு அதிஶயத்தை விளை க்குமதொழிய, ஸ்வாதிஶயந்தேடுகை சேராதிறே. அங்ஙனன்றி க்கே, ஶேஷிக்கு மங்களமே ஆஶாஸித்துக்கொண்டு திரியும் ஸ்வ பாவரானகையாலே, தம்மை "மெய்யடியான்" என்கிறார். இவையி ரண்டும்-தாமருளிச்செய்தவசநங்களை அப்யஸிப்பார்க்கு ஆப்திக்கு

கீழ்நாடும் மேல்நாடுமென்னாதே இப்படிச்சொன்னதுக்குக் கருத்தருளு கிறார் (த்ராவிடேத்யாதி). இத்தால் உபயவேதாந்த ஜ்ஞாநவான்களும் தொ ழுவரென்று சொல்லிற்றாய்த்து. "மெய்ந்நாவன்" என்றதால் வ்யாவர்த்யந் தையருளுகிறார் (அஸத்யேத்யாதி). (ஊடு) வார்த்தாமத்தயே. இணை

தியையுடையவர். (விட்டுசித்தன்) திருவுள்ளத்துக்குள்ளே அவனை வைத்து நோக்குமவர். (விரித்ததமிழுரைக்கவல்லார்) மங்களாசாஸநபுருஷார்த்தம் விஸதமாம்படி ஸர்வாதிகாரமான த்ராவிடபாஷையாலே விஸ்த்ருதமாக்கின விந்தத்திருமொழியை அப்யஸிக்க வல்லவர்கள். (எஞ்ஞான்றுமித்யாதி) எல்லாக்காலத்திலும் எங்களுக்கு ஶேஷியான ஶ்ரீ வைகுண்டநாதனுடைய ஒன்றுக்கொன்றொப்பான திருவடிகளின் கீழேவிஶ்லேஷரஹிதராய், தங்களிலொருகினைவாயிருப்பர். (க) "பரமாத்துமனைச் சூழ்ந்திருந்தேத்துவர்" என்னக்கடவதிறே. ... ... (கக)

பிள்ளை திருவடிகளே சரணம்,



## பெரியாழ்வார் திருமொழி நாலாம்பத்து
## பத்தாந் திருமொழி துப்புடையாரை ப்ரவேசம்.

அவ;—கீழ்த்திருமொழியிலே புருஷகாரத்தாலல்லது பகவத்ஸமாஶ்ரயணம் ஸித்தியாதென்னுமிடமும் எல்லாத்தேஶத்திலும்

---

உடலாக வருளிச்செய்தாராய்த்து. (விட்டுசித்தன்) * அரவத்தமளிப்படியே - ஸர்வேஶ்வரனைத் திருவுள்ளத்திலே வைத்துக்கொண்டிருக்கிறவர். (விரித்த தமிழுரைக்கவல்லார்) விஸ்தரேண ப்ரதிபாதித்த த்ராவிடரூபமான இத்திருமொழியைச் சொல்ல வல்லவர்கள். (எஞ்ஞான்றுமித்யாதி) எல்லாக்காலத்திலும், எனக்கு ஶேஷியான ஶ்ரீவைகுண்டநாதனுடைய, ஒன்றுக்கொன்றொப்பான திருவடிகளின்கீழே விஶ்லேஷரஹிதராய், * அடியார்கள் குழாங்களோடே தாங்களிருக்கப்பெறுவர். (கக)

பெரியஜீயர் திருவடிகளேசரணம்.

## பெரியாழ்வார்திருமொழி, நாலாம்பத்து
## ஒன்பதாம் திருமொழி முற்றிற்று.

---

நான்காம்பத்து - பத்தாந்திருமொழி - துப்புடையாரைப்ரவேசம்.

அவ,- கீழ் இரண்டு திருமொழியிலே - பெரிய பெருமாளு

---

யென்றதின்பலிதார்த்தம் (அடியார் குழாங்களோடே) என்றது. (இணை) தங்களுக்கு ஸத்ருஶரென்றபடி.

ஜீயர் திருவடிகளேசரணம்

---

(க) திருப்பல்லாண்டு கஉ.

எல்லாக்காலத்திலும் எல்லாவவஸ்த்தையிலும் மங்களாஶாஸநமே ஸ்வரூபத்தோடு சேர்ந்த நிலைநின்ற புருஷார்த்தமென்று அறுதியிட்டார் கீழ்; மங்களாஶாஸநம்பண்ணாதபோது க்ஷணகாலமும்பொறுக்கமாட்டாத தம்முடைய மார்த்தவத்தை அவன் திருவுள்ளத்திலே படும்படியாக விண்ணப்பம் செய்கிறார். *

டைய திவ்ய வைபவத்தையும், பெரியகோயிலான திருவரங்கம்திருப்பதியினுடைய வைபவத்தையும், பெரிய அபிநிவேஶத்தோடே பேசியநுபவித்து ப்ரீதரானார்; (க) "தன்னடியார்" இத்யாதியிற்சொன்னபடியே - புருஷகாரபூதையான பிராட்டிதானே சிதகுரைக்கிலும் அவளோடே மறுதலைத்து ஆஶ்ரித ரக்ஷணம்பண்ணும் வாத்ஸல்யாதிமயயுக்தராய், (உ) "இருளகற்றும் எறிகதிரோன் மண்டலத்தூடேற்றி" இத்யாதிப்படியே - அநந்யப்ரயோஜநராய்த் திருவடிகளை ஆஶ்ரயித்தவர்களை அர்ச்சிராதிமார்க்கத்தாலே அபுநராவ்ருத்திலக்ஷணமான பரமபதத்திலே கொடுபோய் * அருள் கொடுத்திட்டு அடிமைகொள்ளும் ஸ்வபாவரான பெரிய பெருமாளுடைய திவ்ய குணத்தை யநுஸந்திக்கவராகையாலே, அவர்க்குத் திருந்தின சேதநரை இங்கு நின்றும் கொடுபோய் அடிமைகொள்ளுகை திருவுள்ளமாகையாலே, "நாம்இனி அங்கேபோய்அடிமைசெய்யவேணும்" என்னும் அபேக்ஷை பிறந்து, அதுக்கு தேஹஸம்பந்தமற்றுப்போகவேண்டும்படியை அநுஸந்தித்து, இந்தப்ரஸங்கத்திலே ஶரீரவிஶ்லேஷஸமயத்தில் ஸம்ஸாரிகளானவர்களுக்கெல்லாம் யமபடரால் வரும் நலிவைநினைத்து, "அது நமக்கு வாராதொழியும்போது ஸர்வேஶ்வரனானவனே போக்கித்தந்தருளவேணும்" என்று அத்யவஸித்து, "அது தன்னை ஏற்கவே அவன் திருவடிகளிலே விழுந்து

ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

அரு;—துப்புடைப்ரவேஶ,—கீழிரண்டு திருமொழியாலும்பெரியபெருமாளை அநுபவிக்கும்போது அவருடைய வாத்ஸல்யாதிகள் அநுபூதமாகையால் தம்முடையபயநிவ்ருத்திக்காரணம்புகுகிறார் இத்திருமொழியிலென்றுஸங்கதியைப் பரக்கவருளிச் செய்வதாக வ்ருத்த வர்த்திஷ்யமாணங்களைச் சொல்லா நின்றுகொண்டு இவ்வர்த்தத்தில் வரும் ஶங்காஸமாதாநங்களையும் பண்ணுகிறா (கீழிரண்டித்யாதி).

(க) ச-கூ-உ-

இது அந்திமஸ்ம்ருதியாறுலோவென்னில்; அதுகூடாது. ப்ர பந்நானவிவர்க்கு அந்திமஸ்ம்ருதி உபாயபூதனை ஸீஶ்வரன்பக் கலிலேகிடக்கையாலே. (க)''அஹம் ஸ்மராமி-அஹம்ஸ்மராமி'' என்னக் கடவதிறே. ஆகையாலே கரணங்கள் அவிதேயங்களான மரணகா லத்தில் மங்களாசாஸநம் பண்ணுதபோது தரிக்கமாட்டேன். இது க்கு விச்சேதம் வாராதபடி பரிஹரித்துத் தந்தருளவேணுமென்று பெரியபெருமாளை அர்த்திக்கிருர். இம்மங்களாசாஸநம் ஸ்வரூபத் தோடே சேருமோவென்னில், ரக்ஷ்யரக்ஷகபாவம் மாறுடிப்படி ப்ரேமம் தலைமண்டையிட்டு அதன்கார்யமாய்க்கொண்டு வருகிற பரி வாகையாலே சேரும். *

அர்த்தித்துச்செய்வித்துக்கொள்வோம்'' என்று ஒருப்பட்டு, ''சரம தசையில் கர்மாநுகுணமாக யமபடர்வந்து என்னை நலியும்போது அந்த க்லேசத்தாலே தேவரீருடைய திருவடிகளை ஒருபடியாலும் நினைக்கவும் ஒன்று சொல்லவும் க்ஷமனல்லேன்'' என்று அத்தைப்ப ற்ற ''அப்போதைக்கு இப்போதே சொல்லிவைத்தேன், ஆனபின்பு அக்காலத்தில் அவர்கள் என்னை நலியாதபடி தேவரீர் ரக்ஷித்தரு ளவேணும்''என்று பெரியபெருமாள் திருவடிகளிலே சரணம்புக்கு விண்ணப்பம்செய்து சொல்லுகிருர் - இத்திருமொழியில்:

இதுதானிருந்தபடியென்?;-(உ)''நவை-ஸாமவதா யவிஷ யம ஆந்தி -நச லுபாகவதாயமவிஷயம்கச்சந்தி'' என்று ஶாஸ்த்ரம் சொல்லுகையாலும், (ந) ''வேண்டாமைநமன்றமரென்தமரை வின வப்பெறுவாரலர்'' என்கிற பகவதுக்தியாலும், (ச) ''உன்றமர்க்கெ ன்றும் நமன்றமர் கள்ளர்போல்'' என்று அபியுக்தர் சொல்லுகை யாலும், (ரு) ''பரிஹர மதுஸூதநப்ரபந்நாந் - பரிஹரமது ஸூதநப்ரபந்நாந்'' என்று யமன்றனே சொல்லுகையாலும், பாக வதரானவர்களுக்கு யமவஶ்யதை வரக்கூடாதென்னுமிடம் ப்ரஸித் தமாயிருக்க, ''சரமதசையிலே யமபடர்வந்து நலிவர்கள்'' என்று பயப்பட்டுத்திருவடிகளிலே சரணம்புகுந்து, ''அத்தசையிலே என் னை ரக்ஷித்தருளவேணும்'' என்றுஇவர் அர்த்திக்கிறவிது, கீழ்ச்சொ ன்ன வசநங்களோடு விருத்தமன்றோ வென்னில், ஆழ்வார்கள் தாங்

(க) வராஹசரம. (உ) (ந) தி-மொ-கO-எ-ரு. (ச) (ரு) வி-பு-ந-எ-கச.

மூ.—
துப்புடையாரை யடைவதெல்லாஞ் சோர்விடத்துத் துணையாவரென்றே
ஒப்பிலேனாகிலு நின்னடைந்தே னானைக்குநீ யருள்செய்தமையால்
எய்ப்பென்னை வந்துநலியும்போதங்கேது நானுன்னை நினைக்கமாட்டேன்
அப்போதைக்கிப்போதே சொல்லிவைத்தே னரங்கத்தரவணைப்பள்ளியானே

அவ:—முதற்பாட்டு (துப்பித்யாதி) ஸர்வஶக்தியான நீ அந்திமதசையில் எனக்கு ரக்ஷகனாகவேணுமென்கிறார்.

ஸ்வா;—(துப்பித்யாதி) ஶக்திமான்களை ஆஶ்ரயிக்கிறது, தா

கள், * மயர்வறமதிநல மருளப்பெற்று அவனை உள்ளபடியறிந்து அநுபவியாநிற்கச்செய்தே ஒரோ தசைகளிலே வந்தவாறே, அநாதி காலம் ஸம்ஸரண ஹேதுவாய்க்கொண்டு போந்தஸ்வகர்மபலத்தை யும், அந்தக்கர்மாநுகுணமாகவே நிர்வஹித்துக்கொண்டுபோந்தவனாய், பந்தமோக்ஷஉபய நிர்வாஹகனாயிருக்கிற ஈஶ்வரனுடைய ஸ்வா தந்த்ர்யபலத்தையு மநுஸந்தித்து, 'நிரங்குஶ ஸ்வதந்த்ரனானவிவன் இன்னம் நம்மைஸம்ஸரிப்பிக்கில் செய்வதென்'' என்று (க)''மக்கள் தோற்றக்குழி தோற்றுவிப்பாய் கொல்'' என்றும், ''இன்னம் ஆற்றங்கரை வாழ்மரம்போ லஞ்சுகின்றேன்'' என்றும்,(௨)''வைத்தசிந்தை வாங்குவித்து நீங்குவிக்க நீயினம் மெய்த்தன்வல்லை - உய்த்து நின்மயக்கினில் மயக்கலென்னை மாயனே'' என்றும் அவனைக்குறித்து விண்ணப்பம் செய்யும் ப்ரகாரத்திலே ;

இவரும், ஈஶ்வரஸ்வாதந்த்ர்யத்தையும், அநாதிகாலம் அவன் திருவடிகளைக்கிட்டாதபடி அகலவடித்தகர்மப(ப)லத்தையும் அநுஸந்தித்து, ''ஸ்வதந்த்ரனானவன் நம்முடைய கர்மாநுகுணமாக விட்டு உபேக்ஷித்திருக்குமாகில், முன்புபோலே யமபடரால்வரும் நலிவு நமக்குவரில் செய்வதென்'' என்று அஞ்சி, அவன் திருவடிகளிலே சரணம் புகுந்து, அத்தசையில் என்னைரக்ஷித்தருளவேணும் என்று அர்த்திக்கிறார். ஆகையால், இந்த பயமும் ப்ரார்த்தனையும் இவருடைய அதிஶங்காமூலமான கலக்கமடியாக வந்ததாகையாலே, கீழ்ச்சொன்ன வசநங்களோடு விரோதமில்லை. *

வ்யா.—முதற்பாட்டு. (துப்புடையாரை யடைவது) துப்பு- ஸாமர்த்த்யம். ரக்ஷணஸாமர்த்த்யமுடையாரை ஆஶ்ரயிப்பது. இது

(க) தி-மொ-௧௧-அ-௧. (௨) தி-ச-வி-அ௫.

னும் தன்கரணங்களும் தனக்குதவாதவாபத்தசையிலே தனக்கு ரக்ஷகராவார்களென்றிறே. ஆனபின்பு ஸர்வஶக்தியான நீ உன் பக்கலிலே ஸர்வபரந்யாஸம் பண்ணியிருக்கிற என் ஶரீராவஸாந காலத்தில் என் ஆத்மீயங்களொன்றும் எனக்கு உதவமாட்டா, அத்தசையில் (க)"அஹம்ஸ்மராமி - அஹம்ஸ்மராமி" "நயாமி-நயாமி"

முன்னிலைப் படர்க்கையாய், ஈச்வரன்றன்னையே சொல்லுகிறது. பஹுவசநம் - பூஜாவாசி. ரக்ஷண ஸாமர்த்த்யந்தான் வ்யக்த்யந்தரத்திலே இல்லையிறே; (உ) "நவஸூத்ரம் ஸஹோஹோமோ விவாஹம் விநிவர்த்தநே | ஸுதேசஸ்த்ரீத்வம் விநாவாஸாதா - நஸம்பதாம்ஸமாஹாரே விபதாம் விநிவர்த்தநே | ஸமர்த்தோ த்ருஶ்யதே கஶ்சித்தம் விநாபுருஷோத்தமம்" (ந)"நஹிபாலந ஸாமர்த்யம் ருதே ஸர்வேஶ்வரம் ஹரிம் | ஸ்த்திதெள ஸ்த்திதம்மஹாத்மாநம் பவத்யந்யஸ்ய கஸ்யசித்" என்கிறபடியே. (எல்லாம்சோர்விடத்து) இந்த்ரியங்களுடைய அழிந்து மநஸ்ஸும் அழிந்தவிடத்து. அந்திமதசையைச் சொன்னபடி.

(துணையாவரென்றே) காஷ்ட்டபாஷாண ஸந்நிபமாய்க்கிடக்கிறதசையில், (க) "அஹம்ஸ்மராமி - அஹம்ஸ்மராமி" என்கிற

அரு;—முதற்பாட்டு. (துப்புடையித்யாதி). (முன்னிலைப் படர்க்கையாய்) என்றது-முன்னே நின்றவனைப்பார்த்துச் சொல்லுவதா யென்றபடி. இத்தால் துப்புடையாரான வும்மை யென்றபடி. அப்போ ஈஶ்வரன் தன்னை யென்றந்வயம். "நின்" என்று அவனை ஏகவசநத்தாலே சொல்லியிருக்க இங்கே பஹுவசநம் சேருமோவென்னவருளுகிறார் (பஹுவசந மித்யாதி). (பூஜாவாசி) என்றது-பூஜாஸூசகமென்றபடி. இப்படிபடர்க்கையானபதத்தை முன்னிலையாக்குகைக்கும் பஹு வசநத்தைப் பூஜாஸூசகமாக்குகைக்கும் நிமித்தமென்னென்ன வருளுகிறார் (ரக்ஷணேத்யாதி).

(துணையாவரென்றே) என்றது - துணையாவீரென்றே யென்றபடி. (ஒப்

(க) வராஹசரம் (உ) (ந)

என்று நீ அருளிச்செய்தபடியே ரக்ஷகனாகவேணும். (ஒப்பித்யாதி) உன்னையாஸ்ரயிக்கைக்கு யோக்யதையில்லாதபடி தோஷயுக்தனாயிருக்குமிருப்புக்கு அஸத்ருஶனாயிருந்தேனேயாகிலும் உன்னுடையக்ஷமாவாத்ஸல்யதயாதிகுணங்களை அநுஸந்தித்து உன்னையாஸ்ரயித்தேன். இப்படி நம்மை யாஸ்ரயித்தவர்களை நாம் ரக்ஷிக்க வெங்கேகண்டீரென்ன; (ஆனைக்கு நீயருள்செய்தமையால்) என், ஸ்ரீகஜேந்த்ரனை ரக்ஷித்திலையோ?; ஆனையினுடைய துதிக்கைமுழுத்தினவாபத்திலே உன் க்ருபையாலே ரக்ஷித்திலையோ?.

---

படியே துணையாவரென்றே. "அது நாம்செய்வது, தங்களுடைய இழவுபேறுகள் நம்மதாம்படி யிருக்கும் நம்மோட்டை ஸம்பந்தத்தை யறிந்து நம்பக்கலிலே (க) "ஸ்திதே - ஸ்மர்த்தா" என்கிற படியே ஸக்ருத்ஸ்மரண ப்ரபத்தியைப் பண்ணினவர்களுக்கன்றோ, நீர் அவர்களுக்கு ஒப்போ? என்ன; (ஒப்பிலேனாகிலும் நின்னடைந்தேன்) அவர்களுக்கு ஸத்ருஶனல்லேனாகிலும், என்னுடைய துஃக்காதிஶயத்தாலே, அந்த துஃக்கநிவ்ருத்திக்குறுப்பாக, எதிர்த்தலையில் யோக்யதை பாராதே ரக்ஷிக்கும் உன்னைச்சரணமாக அடைந்தேன். "நாம்இப்படியாரைரக்ஷித்ததுகண்டுநீர்நம்மையடைந்தது" என்ன; (ஆனைக்கு நீயருள் செய்தமையால்) ஆர்த்தியும் அநந்யகதித்வமுமொழிய வேறொரு யோக்யதையு மின்றிக்கேயிருக்கிற ஆனைக்கு நீயருள்பண்ணினபடியினாலே.

---

பிலேனாகிலேன்) என்றதுக்கு ஈஸ்வரோக்திரூபேண வவதாரிகையருளுகிறார் (அதுநாமித்யாதி)(க, "வி[illegible]-விஶ்வரூபஞ்சமாயஜம்" என்றவிடத்தில் விஶ்வரூபபதத்தாலேதோன்றின ஶரீரஶரீரிபாவ ஸம்பந்தத்தால் பலிதமான வர்த்தமருளுகிறார்(தங்களுடையவித்யாதி). (ஸத்ருஶனல்லேனாகிலும்) என்றதுக்கு ஶரீர ஶரீரிபாவ நிபந்தநமான வத்யந்த பாரதந்த்ர்ய ஜ்ஞாநமில்லாமலிருந்தேனே யாகிலு மென்று கருத்து. (வேறொரு யோக்யதையுமின்றிக்கே யிருக்கிறவானைக்கு) என்றது ஸ்ரீபாகவதத்திற் சொல்லுகிறபடியே ஜலபாநார்த்தமாகப்போன வானையை முதலைபிடிக்க ஸாமாந்யேந

உமக்கப்படியாபத்து ஏதென்ன (எய்ப்பித்யாதி) தேஹவிமோசநகாலத்தில் த்ரிவிதகரணங்களும் சோரும்படியானதசையிலே; அன்றிக்கே அத்தசையில் மங்களாசாஸந விச்சேதத்தால் வந்தவிளைப்புநலியுமளவிலென்னுமாம். (அங்கித்யாதி) அத்தசையில் உன்னை ரக்ஷகனாக அநுஸந்திக்கக்ஷமனுகேன். அதுக்காக அநுஸந்தாநக்ஷமனுன விப்போதே விண்ணப்பம் செய்துவைத்தேன். "இந்த ரக்ஷகத்வத்தை ப்ரத்யக்ஷிப்பித்துக்கொண்டு கோயிலிலே திருவநந்தாழ்வானுகிற படுக்கையிலே பிராட்டியோடே கூடப்பள்ளிகொண்டருளுகிறவனே! சொல்லிவைத்தேன்" என்றபடியம். (க)

அவ;—இரண்டாம்பாட்டு. (சாமிடத்தித்யாதி). ஶரீரவியோககாலத்தில் யமபடர்வந்து கிட்டாதபடி நோக்கியருளவேணுமென்கிறார்.

---

ஆனுல் அவ்வானையோபாதி, நீரும் உமக்கு ஆர்த்தி வந்தபோது நினையும், அப்போதுவந்து ரக்ஷிக்கிறோம் என்ன; (எய்ப்பென்னை வந்து நலியும்போது அங்கேதும் நானுன்னை நினைக்கமாட்டேன்) வாத பித்த ச்லேஷ்ம தோஷத்ரயமும் ஒக்க உல்பணித்து நெருக்குகையாலுண்டான இளைப்பானது என்னை வந்து நலியும் காலத்தில், அவ்வவஸ்த்தையில் ஏகதேசமும் நான் உன்னை நினைக்கமாட்டேன். "ஆனுல் செய்யவடுப்பதென்" என்ன; (அப்போதைக் கிப்போதே சொல்லி வைத்தேன்) அக்காலத்துக்கு உடலாக, கரணகளேபரங்கள் இளைப்பற்றுத் தெளிந்திருக்கிற இப்போதே சொல்லி வைத்தேன். "இப்படி நீர் சொல்லிவைத்தால்இத்தை நினைத்திருந்து உம்மை ரக்ஷிக்கவேண்டும் நிர்பந்தமேது நமக்கு" என்ன; (அரங்கத் தரவணைப பள்ளியானே) இப்படி ரக்ஷிக்கைக்காகவன்றோ, தேஶவிப்ரக்ருஷ்டமான க்ஷீராப்தியைப்போலன்றிக்கே, கோயிலிலே திருவனந்தாழ்வானுகிற திருப்படுக்கையின்மேலே கண்வளர்ந்தருளுகிறது. அந்த யோகநித்ரைபோலேயோ இந்த யோகநித்ரை; தாழ்ந்தாரை ரக்ஷிக்கைக்கன்றோ. .... ... (க)

---

ஜகத்காரண வஸ்து ரக்ஷிக்கக்கடவதென்று கூப்பிட்டதாய், அதனவ பகவதத்யந்த பாரதந்த்ர்ய ஜ்ஞாநஶூந்யமானவானைக் கென்றபடி.

(தோஷத்ரயமாவது) வாதபித்தஶ்லேஷ்மங்கள்... ... (க)

மூ.—

சாமிடத்தென்னைக் குறிக்கொள்கண்டாய் சங்கொடு சக்கரமேந்தினனே
நாமடித்தென்னை யனேகதண்டஞ் செய்வதாநிற்பர் நமன்றமர்கள்
போமிடத் துன்திறத்தெத்தனையும் புகாவண்ணம் நிற்பதோர் மாயைவல்லை
ஆமிடத்தேயுன்னைச் சொல்லிவைத்தே னரங்கத் தரவணைப்பள்ளியானே.

ஸ்வா;— (சாமிடமித்யாதி) தேஹவிமோசநம் பிறக்கும்போது என் ப்ரக்ருதியறிந்து என்னைத் திருவுள்ளம் பற்றியருளவேணும்; என் ஸ்வபாவம் கண்டாயிறே. (சங்கித்யாதி) அழகுக்கும் ஆண்பிள்ளைத்தனத்துக்கும் உறுப்பாக ஸ்ரீபாஞ்சஜந்யத்தோடே திருவாழியையும் பூவேந்தினாப்போலே தரித்தவனே! கையுமாழ்வார்களுமான வழகைக்கண்டால் பரியாதிருக்கமாட்டாரிறே.

வ்யா.—இரண்டாம்பாட்டு. (சாமிடத்து) சரீரவிஶ்லேஷஸமயத்திலே. கீழ் "எல்லாம் சேர்விடம்" என்றத்தை இங்கே ஸ்பஷ்டமாக வருளிச்செய்கிறார். (என்னை) தோஷத்ரயவௌல்பண்யத்தாலே கலங்கி, உன்னை நினைக்க க்ஷமனன்றிக்கே யிருக்கிறஎன்னை. (குறிக்கொள்கண்டாய்) "நான் கலங்கிக்கிடந்தேன்" என்று நீஉபேக்ஷித்திராதே திருவுள்ளம் பற்றியருள்கிடாய். அன்றிக்கே, யமபடரால் வந்தநலிவுக்கு அஞ்சி, திருவடிகளிலே இப்போது ஶரணம் புகுந்த வென்னை, அப்போது திருவுள்ளம்பற்றி யருள்கிடாயென்னவுமாம். (சங்கொடு சக்கர மேந்தினனே) ஆஶ்ரித ரக்ஷணத்தில் விளம்பாஸஹத்வத்தாலே அநவரதம் ஸ்ரீ பாஞ்சஜந்யத்தையும் திருவாழியையும் திருக்கையிலே ஏந்திக்கொண்டிருக்கிறவனே. ரக்ஷ்யரக்ஷகபாவத்தைமாறாடி, அவனுக்குத் தாம் மங்களாஶாஸநம் பண்ணும் ஸ்வபாவராய், திவ்யாயுதங்களையும் அழ

அரு.—இரண்டாம்பாட்டு. (சாமிடத்தித்யாதி) கீழ்ப்பாட்டில் "எய்ப்பென்னை வந்து நலியும்போது" என்றத்தைக்கடாக்ஷித்து என்னையென்றதுக்குத் தாத்பர்யமருளுகிறார் (தோஷத்ரயேத்யாதி), நாமடித்தித்யாதியைக் கடாக்ஷித்து, என்னை யென்றதுக்குத் தாத்பர்யாந்தரமருளுகிறார் (அன்றிக்கேயித்யாதி), எம்பெருமான் விஷயத்தில் பரிவரானவிவர் ஸ்வவிஷயத்திலே இப்படி ரக்ஷிக்கச்சொல்லி ப்ரார்த்திக்கக் கூடுமோ வென்னும் ஶங்கையைப் பரிஹரியாநின்றுகொண்டு கூடுபடுகிறார் (ரக்ஷ்யேத்யாதி).

(நாமடித்தித்யாதி) பூர்வதோஷங்களை நினைத்து நாவைமடித்துப் பல்கறுவிக்கொண்டு நாநாவான தண்டங்களைச் செய்யக்கடவதாக அவஸர ப்ரதீக்ஷராய் நிற்பார்களாய்த்து யமபடர். (போமிடமித்யாதி) அவர்கள் கொண்டுபோமிடத்து உன்விஷயத்தில் அத்யல்பமும் நினைவுண்டாகாதபடி. பண்ணும் அத்விதீயமான வாஸ்சர்ய ஸங்கல்பத்தையுடைய. (ஆமிடமித்யாதி) கரணங்கள் விதேயமானதசையிலே "நீயே அந்தகாலத்தில் ரக்ஷகனாக வேணும்" என்று சொல்லிவைத்தேன். (அரங்கமித்யாதி) எனக்கு விண்ணப்பம் செய்யலாம்படி அடுத்தணித்தாகப் பள்ளிகொண்டருளுகிறவனே.

---

குக்குடலாக நினைத்து அவற்றுக்கு மங்களாஸாஸநம்பண்ணுமவர், இப்போது, அவனை ரக்ஷகனாகவும் திவ்யாயுதங்களை ரக்ஷணபரிகரமாகவும் அநுஸந்திக்கும்படியாய்த்துச் சொல்லுகிறபயம்.

பயஹேதுதன்னை யருளிச்செய்கிறார் (நாமடித்தித்யாதி) க்ரோதாதிஸயத்தாலே நாவைமடித்துக்கொண்டு, என்னை கர்மாநுகுணமாக அநேக தண்டங்களைச் செய்யக்கடவதாக நில்லாநிற்பர் யமபடரானவர்கள். ஸரீர விஸ்லேஷ ஸமயத்தில் வேறொருவர்க்குத் தோன்றாமல் இச்சேதநனொருவனுக்குமே தோன்றும்படி இப்படி வந்து புகுந்து நில்லாநிற்பர்களாய்த்து. (போமிடத்து) அவர்கள் இழுத்துக் கொண்டு போமளவில். (உன்திறத் தெத்தனையும் புகாவண்ணம் நிற்பதோர்மாயைவல்லை) இவ்வாத்மாவினுடைய மநஸ்ஸு உன்விஷயத்தில் ஏகதேஸமும் உள்புகுராதபடி உன்னைக்கொண்டு மறைய நிற்பதொரு வஞ்சநத்தை வல்லை. (ஆமிடத்தே யுன்னைச் சொல்லிவைத்தேன்) ஆனபின்பு, கரணங்கள் என் வசமாய்ச் செல்லலான தசையிலே, "சாமிடத்தென்னைக் குறிக்கொள்கண்டாய்" என்று உன்னைக்குறித்துச் சொல்லிவைத்தேன். (அரங்கத்தரவணைப்பள்ளியானே) இவ்வாத்மாக்களுடைய ரக்ஷணார்த்தமாக முற்கோலி வந்து, இவற்றினுடைய ரக்ஷணசிந்தையைப் பண்ணிக்கொண்டு, திருவரங்கத்திருப்பதியிலே திருவநந்தாழ்வானாகிற திருவணையின்மேலே பள்ளிகொண்டருளுகிறவனே.

---

போமிடத்தென்ற வநந்தரம் நெஞ்சென்று அத்யாஹாரம் திவுள்ளம் பற்றி அர்த்தமருளுகிறார் (இவ்வாத்மாவித்யாதி), (வஞ்சநத்தை) என்றவநந்தரம் பண்ணவென்று சேஷம். ... ... (உ)

மூ-—

எல்லையில்வாசல் குறுகச்சென்றா லெற்றி நமன்றமர் பற்றும்போது
நில்லுமினென்னுமுபாயமில்லை நேமியுஞ் சங்கமுமேந்தினானே [ண்டென்றும்
சொல்லலாம்போதே யுன்னாமமெல்லாம் சொல்லினேனென்னைக் குறிக்கொ
அல்லல்படாவண்ணங் காக்கவேண்டு மரங்கத் தரவணைப் பள்ளியானே. (௩)

---

அவ;— மூன்றாம்பாட்டு. (எல்லையித்யாதி) அந்திமஸ்ம்ருதி என்கையிலில்லை. ரக்ஷணத்துக்குப்பரிகரமுடைய நீயேயெனக்கு துக்கங்கள் வாராதபடி ரக்ஷித்தருளவேணுமென்கிறார்,

ஸ்வா;— (எல்லையில்வாசல் குறுகச்சென்றால்) ஆயுஸ்ஸினுடைய வெல்லையிலேயாம்யமார்க்கம் அத்யாஸந்நமானால். (வாசல்) வழி. (எற்றிநமன் தமர்பற்றும்போது) பிடரியிலே ப்ரஹரித்து யமபடர் பிடிக்கும் தசையிலே. (நில்லுமினென்னு முபாயமில்லை) அவர்களை நிவாரிக்கத்தக்கதொரு ஸாதகமென்பக்கலில்லை. (நேமியும்சங்கமுமேந்தினானே) நிவாரணபரிகரமான திருவாழியையும்

---

வ்யா.—மூன்றாம்பாட்டு, (எல்லையில்) ஆயுஸ்ஸினுடையஎல்லையான மரணதசையில், (வாசல் குறுகச்சென்றால்) வாசல் – வழி. "யாம்யமார்க்க(ம)தி இனி ஆஸந்நம்" என்னுமளவாகச்சென்றால். (எற்றி நமன்றமர் பற்றும்போது) யமபடரானவர்கள் பிடிப்பதற்கு முன்னே தியங்க வெற்றிவந்து பிடிக்கும்போது. பிடித்தல்ல அடிப்பது, அடித்தாய்த்துப் பிடிப்பது. இப்படி யமபடர் வந்து கொடுபோவதாகப் பிடிக்குங் காலத்தில். (நில்லுமினென்னு முபாயமில்லை) "நில்லுமின்" என்று அவர்களைத்தகைகைக்குத்தக்க உபாயமொன்றும் என்கையிலில்லை. இத்தால் தம்முடையஸர்வோபாய ஶூந்யதையைச் சொல்லுகிறார். (நேமியும் சங்கமுமேந்தினா

---

அரு,—மூன்றாம்பாட்டு. (எல்லையித்யாதி) வாசலென்று வழிநடையை லக்ஷிக்கிறதென்றருளுகிறார் (யாம்யேத்யாதி). சென்றாலென்றது-காலம் வந்தாலென்றபடி, "நமன்தமர் எற்றிப்பற்றும்போது" என்றந்வயித்தர்த்தமருளுகிறார் (யமபடரித்யாதி), (முன்னே) முந்துறவே. (தியங்க) மதிமயங்க, மேலோடே அந்வயம் வ்யக்தமாகத் தோற்றவேண்டி பலிதார்த்தத்தையருளுகிறார் (இப்படியித்யாதி), மேலே "நேமியும் சங்கமுமேந்தினானே" என்று உபாயம் அவன்கையில் கண்டவராகையாலே இங்கே (என்கையிலில்லை) என்றது

ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும் இடைவிடாமல் தரித்துக்கொண்டிரு க்கிறவனே! உன்கையில் ஸாதநத்துக்கு என்பக்கலிலே ஜீவநமு ண்டென்கை.

(சொல்லலாமித்யாதி) கரணங்கள் வஶவர்த்தியானதசையி லே உன்னுடைய ப்ராப்யவாசகமான திருநாமங்களைச்சொல்லி மங்களாசாஸநம்பண்ணி அநுபவித்தேன். (என்னைக்குறிக்கொ

---

ளே) விரோதி நிரஸநபரிகரமான திவ்யாயுதங்களை ஸர்வகாலமும் திருக்கையிலே ஏந்திக்கொண்டிருக்கிறவனே. இப்படி யிருக்கை யாலே, * பற்றிலார்பற்ற நின்றானுமிருக்கிற தேவரீரை யொழிய எனக்கொரு ரக்ஷகரில்லை யென்கை. கீழே - "சங்கொடு சக்கரமேந் தினனே" என்றார்; இங்கே - "நேமியும் சங்கமு மேந்தினனே" என்கிறார். இதுவாய்த்து இவர் கைக்கண்டிருக்குமுபாயம். (க) "எப்போதும் கைகழலாநேமியான் நம்மேல்வினை கடிவான்" என் றிறே இவர்களிருப்பது.

"நில்லுமினென்னுமுபாயமில்லை" என்பானென், நம்முடைய நாமங்களை எப்போதும் சொல்லாநின்றீரே, அதுதான் உபாயமா னாலோவென்ன, அது நான்ஸாதநமாகச்சொன்னேனோ? (சொல்ல லாம்போதே யுன்னுமமெல்லாம் சொல்லினேன்) கரணங்கள் வஶ வர்த்தியாயிருக்கிறபோதே உன்திருநாமங்களை யெல்லாம் ப்ராப்ய மாக வநுஸந்தித்த வித்தனையன்றோ, மங்களாஶாஸநபரனாய் உன் னுடைய ஸம்ருத்தியை ஆஶாஸித்துக்கொண்டு திரியும் நான் என் னுடைய ஸம்ருத்திக்கு உறுப்பாக ஏதேனுமொன்று செய்கைக்கு யோக்யதையுண்டோ? நீ யறிய உன்னை ரக்ஷகனாக அநுஸந்தித்தி

---

இவனே ரக்ஷகனென்னுமதுக்கு ஸூசகம்காட்டுகிறார் (கீழேயித்யாதி).

மேலுக்கவதாரிகை (நில்லுமினித்யாதி). (சொன்னேனோ) என்ற வநந்தரம் என்கிறாரென்று சேஷம், ஆனால் நீர்ஸாதநமாகச் சொல்லா விட்டால் சொல்லும் க்ரமமேதென்னும் ஶங்கையையும் பரிஹரியா நின்று கொண்டு ஶப்தார்த்தமருளுகிறார் (கரணேத்யாதி). ப்ராப்யமாக வநுஸந்திப்பானேன், ப்ராபகமாக வநுஸந்திக்க வொண்ணாதோவென்ன வருளுகிறார் (மங்களாசாஸநேத்யாதி வாக்யத்வயத்தாலே). ஆனால், இப்போ தான் நம்மை ஸாதநமாக வநுஸந்திப்பானேன், நீர் ஸ்வஸம்ருத்தி பரரல்லவே யென்னவருளுகிறார் (உன்னையித்யாதி), (செயலறுதியாலே)

---

(க) பெரியதிருவ-அஎ.

மூ. —

ஒற்றைவிடையனுநான்முகனுமுன்னை யறியாப்பெருமையோனே
முற்றவுலகெல்லாம் நீயேயாகி மூன்றெழுத்தாய முதல்வனேயோ!
அற்றதுவாணாளிவற்கென்றெண்ணி யஞ்ச நமன்றமர் பற்றலுற்ற
அற்றைக்கு நீயென்னைக்காக்கவேண்டு மரங்கத்தரவணைப்பள்ளியானே.

---

ண்டு) இவன் மங்களாஶாஸநத்தாலல்லது தரியானென்று திருவுள்ளம்பற்றியருளி. (என்றுமித்யாதி) மரணதஶைதுடங்கிமேலுள்ள காலமெல்லாம் மங்களாஶாஸந விச்சேதத்தால்வரும் க்லேஶங்கள் வாராதபடி ரக்ஷித்தருளவேணும். என்னுடைய வல்லலைப்போக்குகைக்கு அவஸர ப்ரதீக்ஷராய்க்கோயிலிலே திருவநந்தாழ்வானைப் படுக்கையாகக்கொண்டு கண்வளர்ந்தருளுகிறவனே; காக்கவேணுமென்றந்வயம். ... .... ... (௩)

அவ;—நாலாம்பாட்டு. (ஒற்றையித்யாதி) மரணதசையில்மங்களாஶாஸந விச்சேதத்தால்வந்தவ்யஸநம் யமபாதையோடொக்குமென்றார் கீழ். இப்பாட்டில் அந்த வ்யஸநத்தை ப்ரணவப்ரதிபாத்யனை நீயே ரக்ஷித்தருளவேணுமென்கிறார்.

ஸ்வா; — (ஒற்றையித்யாதி) ருஷபவாஹநத்வத்தைத்

---

ருக்கிற விதுதானும் என்னுடைய செயலறுதியாலே இப்போது செய்கிற வித்தனையன்றோ. (என்னைக்குறிக்கொண்டென்றும்) இப்படியிருக்கும் ஸ்வபாவனை என்னை, ஸர்வகாலமும் திருவுள்ளம் பற்றி. (அல்லல்படாவண்ணம் காக்கவேண்டும்) என்னுடைய புருஷார்த்தத்துக்கு விரோதியான யமபடரால் வரும் நலிவிலே அகப்பட்டு துஃக்கப்படாதபடி ரக்ஷித்தருளவேணும். (அரங்கத்தரவணைப் பள்ளியானே) இதுக்காகவன்றோ தேவரீர் அணித்தாக வந்து கண்வளர்ந்தருளுகிறது. .... .... ... (௩)

வ்யா. —நாலாம்பாட்டு. (ஒற்றைவிடையனும்) (க)"நுண்ணு

---

செயல்மாட்சியாலே. அதாவது-யமபடரால் வரும் பயத்துக்கு நிவர்த்தகமான வ்யாபாரமில்லாமையால், பயாதிஶயத்தாலே ரக்ஷ்யத்வாநுஸந்தாநமுண்டாய்த்தென்றபடி. "என்னைஎன்றும் குறிக்கொண்டு" என்றந்வயித்தர்த்தமருளுகிறார் (இப்படியித்யாதி). (அணித்தாக) ஸமீபமாக. ... (௩)

அரு,—நாலாம்பாட்டு. (ஒற்றையித்யாதி) "உன்னையறியாப்பெருமையோனே" என்று சொல்லுகைக்கு உறுப்பாக இவர்களுக்கு ஜ்ஞாநாதிசயம்

---

(க) தி-வாய்-சு-க0-அ.

தனக்கஸாதாரணமாக வுடையனானருத்ரனும், அவனுக்குங்கூட ஜநகனாய் நாலுவேதங்களையுமதிகரிக்கைக்கு நாலுமுகங்களையுடையனாயிருக்கிற ப்ரஹ்மாவும் இவர்கள் ப்ரஹ்மபாவனை தலையெடுத்து ஸ்வயத்நத்தாலே உன்னையறியப் பார்த்தால் அவர்களுடைய ஜ்ஞாநத்துக்கு அபூமியான மாஹாத்ம்யத்தையுடையவனே. (௧) "[illegible] - யஸ்யமஹிமார்ணவவிப்ரு

ணர்வில் நீலார் கண்டத்தம்மானும்" என்கிறபடியே ப்ரஹ்மபாவனை தலையெடுத்தபோது. அல்லாதாரைப்போலன்றிக்கே, தத்வத்தை யதாவாக தர்ஶிக்கவல்ல ஸூக்ஷ்ம ஜ்ஞாநத்தையுடையனான அத்விதீய வ்ருஷபவாஹநனும். "ஒற்றைவிடையனும்" என்றது - லோகவ்யாவ்ருத்தமாகையாலே அத்விதீயமாய் அவனுக்கு அபிமதமாயிருக்குமென்னுமிடந்தோற்றுகைக்காக. இத்தையிறே, அவன் தனக்குப்பெருத்தவுடைமையாக நினைத்திருப்பது. (நான்முகனும்) (௨) "[illegible] - யோப்ரஹ்மாணம் விததாதி பூர்வம் யோவை வேதாம்ஶ்ச ப்ரஹிணோதி தஸ்மை" என்கிறபடியே அவ்யவதாநேந திருநாபீகமலத்திலே பிறந்து, பிதாவான தேவரீர் தம்மாலே கொடுக்கப்பட்ட நாலுவேதங்களையுமுடையனாய், (௩) "அமரர்க்குமறிவியந்து" என்கிறபடியே இவ்வருகுள்ளார்க்கெல்லாம் ஜ்ஞாநப்ரதனுமாயிருக்கு மேற்றத்தையுடைய சதுர்முகனும். (உன்னையறியாப் பெருமையோனே) ஸர்வகாரணபூதனாய்

---

சொல்லவேண்டி ப்ரமாணமுகத்தாலே அத்தை அருளிச்செய்யாநின்றுகொண்டு ஶப்தார்த்தமுமருளுகிறார் (நுண்ணுணர்விலித்யாதி) ஆனால் "நுண்ணுர்வில் நீலார் கண்டத்தம்மான்" என்றாப்போலே ஜ்ஞாநாதிசயம் தோன்ற விசேஷிக்கவொண்ணாதோ? ஒற்றைவிடையென்று சொல்லவேணுமோவென்னவருளுகிறார் (ஒற்றையித்யாதி).(அபிமாநியாயிருக்கும்) என்றது-அபிமாநிக்கும்படியாயிருக்கு மென்றபடி. இத்தை விவரிக்கிறார் (இத்தையேயித்யாதி), நான்முகனும்" என்ற அபிஶப்தத்தாலே தோற்றின வதிசயத்தை யருளுகிறார் (யோப்ரஹ்மாணமித்யாதி). "மூன்றெழுத்தாய" என்றத்தையும், "முற்றவுலகெல்லாம் நீயே" என்றத்தையும் கடாக்ஷித்து, உன்னையென்றது-பெருமைக்கு ஹேதுவானமையை அருளுகிறார் (ஸர்வேத்யாதி).

---

(௧) ஸ்தோ-ர-௧௧. (௨) ஶ்வே-௬-௧௮. (௩) தி-வாய்-௧-௧-௮.

ஷஸ்தே'' என்னக்கடவதிறே. வேதங்களால் அபரிச்சேத்யனானவுன்னை கர்மவஸ்யரானவிவர்களால் ஔபாதிகஜ்ஞானங்கொண்டறியப்போமோ?

(முற்றவித்யாதி) அவன்ப்ராதே ஸிகனுகிலன்றோ இவர்களுக்கறியலாவது. லோகமடங்கலும் ஒன்றொழியாமல் நீயென்கிற சொல்லுக்குள்ளே யடங்கும்படி ஜகதாகாரனாய். (மூன்றித்யாதி) இவ்வர்த்தப்ரதிபாதகமாய் அக்ஷரத்ரயாத்மகமான ப்ரணவப்ரதிபாத்யனாய், (க) ''யஃவெராஊஉெஹுராஃ - யஃபரஸ்ஸமஹேஸ்வரஃ'' என்று அத்தாலே ஸர்வஸ்மாத்பரனாக ப்ரதிபாதிக்கப்பட்டவனே;

ஸர்வஶேஷியாய்ஸர்வரக்ஷகனாய் ஸர்வஶரீரியாயிருக்குமுன்னை உள்ளபடி யறியவொண்ணாதபடி நிற்கும் பெருமையையுடையவனே. (உ) '' யஙெசவாநஉஊநயொ நவாஹம நவஶஂகரஃ। ஜாநந்தி வாமெஶஹ தஜிஷெ்ணாஃவாஉவஞூ - யந்நதேவாநமுநயோ நசாஹம்நச ஶங்கரஃ - ஜாநந்திபரமேஶஸ்ய தத்விஷ்ணோஃ பரமம் பதம்'' என்று விஷ்ணுவினுடைய பரமமான ஸ்வரூபத்தைத் தானும் ருத்ரனும் மற்றுமுண்டான தேவர்களும் ருஷிகளும் அறியார்களென்னுமிடம் ப்ரஹ்மாதானே சொன்னானிறே. (ங) ''கார்செறிந்த கண்டத்தான் எண்கண்ணன் காணான் அவன் வைத்த பண்டைத் தானத்தின்பதி'' என்று - அவனெழுந்தருளியிருக்கிற தேசத்தை யுமுட்பட அவர்களறியமாட்டார்களென்றிறே திருமழிசைப்பிரானருளிச்செய்தது.

(முற்றவுலகெல்லாம் நீயேயாகி) ஸ்வவ்யதிரிக்தஸமஸ்தவஸ்துக்களும் ப்ரகாரமாகத் தான்ப்ரகாரியா யிருக்கையாலே, ஒன்றொழியாதபடி ஸகலலோகங்களும் நீயேயாய். (ச) ''ஸவஂவஷிஉஂ ஬ூஹ - ஸர்வம்கல்விதம் ப்ரஹ்ம'' (ரு) '' பாராஷஏவெஉஂ ஸவஂ-புருஷஏவேதம்ஸர்வம்'' என்னக்கடவதிறே. (மூன்றெழுத்தாய முதல்வனே) அக்ஷரத்ரயாத்மகமானப்ரணவத்துக்கு வாச்ய

''முற்றவுலகெல்லாம் நீயே'' என்றதுக்குப்ரகாரப்ரகாரி பாவம் அர்த்தமாகச் சொல்லிற்றேயாகிலும், மூன்றெழுத்தாய வென்றத்தைக் கடாக்ஷித்து ஸர்வகாரணத்வாதிகளைச் சொன்ன விவர்க்கு அதுக்கு ஸங்கிஹிதமான விப்ரதத்தையே கடாக்ஷித்து ஸர்வ ஶரீரத்வம் சொல்லுகை உசிதமாகையால், ஸர்வ ஶரீரபரமாகவும், இதுக்கு யோஜநாந்தரம் கண்டுகொள்வது. ... (ச)

(க) தை-நா. (உ) (ங) (ச) திருவ-எங. (ரு) சாந்தோ. (சு) புருஷஸூ.

ஜகத்காரண பூதனென்றுமாம். (அற்றதித்யாதி) இவர்களுக்கு ஜீவநஹேதுவான ஆயுஸ்ஸு க்ஷயித்ததென்று மநோரதித்துத்தங்கள் தர்ஸநத்தாலும் செயல்களாலும் இவர்கள் பயப்படும்படி யமபடர்பற்றுகையிலே உத்யுக்தரான வந்தவஸரத்தில். (நீயித்யாதி) (௧) "நமன் தமர் என்தமரை வினவப்பெறுவாரலர்" என்னும் நீ. உன்னையே ரக்ஷகனாகவத்யவஸித்த வென்னை ரக்ஷித்தருளவேணும். (அரங்கத்தித்யாதி) உன்னுடையப்ரணவப்ரதிபாத்யதையை ப்ரகாசிப்பித்துக் கொண்டு கோயிலாழ்வாருக்குள்ளே பள்ளிகொண்டருளுகிறவனே. ... ... (௪)

---

ளைக்கொண்டு ஸர்வகாரணபூதனாயிருக்கிறவனே. "மூன்றெழுத்தாய" என்கிற ஸாமாநாதிகரண்யம், வாச்யவாசக பாவஸம்பந்த நிபந்தநம். ப்ரணவந்தான் ஸப்தப்ராதாந்யத்தாலே ஜீவபரமாய், அர்த்தப்ராதாந்யத்தாலே பகவத்பரமாயிறேயிருப்பது. (௨) "𑌓𑌙𑍍𑌕𑌾𑌰𑍋 𑌭𑌗𑌵𑌾𑌨𑍍 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌃 - ஓங்காரோ பகவாந் விஷ்ணு:" என்றும், (௩) "𑌓𑌮𑌿𑌤𑍍𑌯𑍇𑌕𑌾𑌕𑍍𑌷𑌰𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌵𑍍𑌯𑌾𑌹𑌰𑌨𑍍 𑌮𑌾𑌮𑌨𑍁𑌸𑍍𑌮𑌰𑌨𑍍 - ஓமித்யேகாக்ஷரம் ப்ரஹ்மவ்யாஹரந் மாமநுஸ்மரந்" என்றும் சொல்லக்கடவதிறே. அதில் ப்ரதமாக்ஷரத்தில் ப்ரக்ருத்யர்த்தமிறே ஸர்வகாரணத்வம். (௪) இப்படி நீயே நிர்வாஹகன் என்று இருப்பாரிடத்தில் யமபடரால்வரும் நலிவு வரக்கடவதோ! என்று விஷண்ணராகிறார். (அற்றதுவாழ்நாளிவற்கென்றெண்ணி) ஜீவிக்குங் காலமெல்லாம் போகட்டிருந்து இவனுக்கு ஆயுஸ்ஸு அற்றதென்றெண்ணி. (அஞ்சநமன்றமர் பற்றலுற்றவற்றைக்கு) மேல் ஒருவேதனை செய்வதுக்குமுன்னே பிடிக்கிறபிடியிலே அஞ்சும்படியாக யமபடரானவர்கள்வந்து பிடிக்கையாலே நெருப்பட்டவன்றைக்கு. (நீயென்னைக் காக்கவேண்டும்) ஸ்வாமியாய் ஸரணாகதரக்ஷகனான நீ, உனக்குப் பரிந்தன்றியுளேனாகாதபடியிருக்கும் என்னை அவர்கள் கையிலே காட்டிக்கொடாதே ரக்ஷித்தருளவேணும். (அரங்கத்தரவணைப் பள்ளியானே) ஆஸ்ரிதரை ரக்ஷிக்கைக்காகவன்றோ அணித்தாகவந்து கோயிலிலே சாய்ந்தருளிற்று. (௪)

---

(௧) தி-மொ. (௨) (௩) கீ-அ-௧௩.

மூ—
பையரவினணைப்பாற்கடலுட் பள்ளிகொள்கின்ற பரமமூர்த்தி
உய்யவுலகு படைக்கவேண்டியுந்தியிற்றோற்றினாய்நான்முகனை
வையமனிசரைப் பொய்யென்றெண்ணிக்காலனையுமுடனேபடைத்தாய்
ஐயவினியென்னைக் காக்கவேண்டு மரங்கத்தரவணைப்பள்ளியானே.

அவ;—அஞ்சாம்பாட்டு. (பையரவித்யாதி) ஜகத்ஸ்ருஷ்டியைப் பண்ணி ரக்ஷணார்த்தமாகத் திருபாற்கடலிலே சாய்ந்தருளி அதிலும் ஸுலபனாய்க் கோயிலிலே பள்ளிகொண்டருளுகிற நீயே ரக்ஷித்தருள வேணுமென்கிறார்.

ஸ்வா!—(பையரவித்யாதி) ஸ்வஸ்பர்ஶத்தாலே விகஸிதமான பணங்களையுடையனாய், மென்மை, குளிர்த்தி, நாற்றம், இவைகளை ப்ரக்ருதியாகவுடையனாயிருக்கிற திருவனந்தாழ்வானைப் படுக்கையாகக்கொண்டுதிருப்பாற்கடலிலே இவ்விபூதியிலுள்ளார்க்குக்கிட்

வ்யா;—அஞ்சாம்பாட்டு. (பையரவினணைப்பாற்கடலுள்பள்ளி கொள்கின்ற பரமமூர்த்தி) திருப்பாற்கடலிலே ஸ்வஸ்பர்ஶத்தாலே விகஸிதமான பணங்களையுடையனாய், மென்மைகுளிர்த்தி நாற்றங்களை ப்ரக்ருதியாகவுடைய திருவனந்தாழ்வானாகிற படுக்கையின்மேலே. (க)"உள்ளப்பல்யோகுசெய்து" என்கிறபடியேஸம்ஸாரிகளான ஆத்மாக்களை உஜ்ஜீவிப்பிக்கைக்கீடான பல உபாயங்களையும் திருவுள்ளத்திலே சிந்தித்துக்கொண்டு கண்வளர்ந்தருளாநின்ற பரமபேஷியானவனே. மூர்த்திசப்தம்- ஐஸ்வர்யத்துக்கும் விக்ரஹத்துக்கும் வாசகமாகையாலே, இவ்விடத்தில் ஐஸ்வர்யவாசகமாய்க்கொண்டு பேஷித்வத்தைச் சொல்லுகிறது. இத்தால் இவை அறியாதிருக்க, தான் அறிந்ததாக இவற்றினுடைய ரக்ஷணோபாய சிந்தை பண்ணுகைக்கடியானப்ராப்தியைச்சொல்லுகிறது. இப்படி ஸ்ருஷ்டமானஜகத்தினுடையரக்ஷணார்த்தமாகவந்துகண்வளர்ந்தரு

அரு,—அஞ்சாம்பாட்டு. (பையரவித்யாதி) "பாற்கடலுள் பையரவினணைப் பள்ளிகொள்கின்ற "என்றநவயித்து ஹேதுபூர்வகம் ஶப்தார்த்தமருளுகிறார் (திருப்பாற்கடலிலேயித்யாதி), அரவினணையென்ற விடத்தில் இன் சாரியைச் சொல்லாய், அரவாகிறவணையென்று ஶப்தார்த்தமாய், அரவுபத வாஸனையருளுகிறார் (மென்மையித்யாதி), பேஷுக்கவதாரிகை (இப்படியித்

(க) தி-வாய்-எ-அ-ச,

டலாம்படி அணித்தாகப்பள்ளிகொண்டருளுகிற பரமபுருஷனே, அநந்த ஶாயித்வத்தாலே உன்னுடைய ஸர்வஸ்மாத்பரத்வத்தையும் உபாயோபேயத்வங்களையும் ப்ரகாஶித்தவனே யென்கை. இத்தால் வ்யூஹகுணங்களும் பெரியபெருமாள் பக்கலிலே யுண்டென்கை. (உய்யவித்யாதி) லோகமாக வாத்மஜ்ஞாநம் பிறந்து உஜ்ஜீவிக்கைக்குறுப்பாகசேதநர்க்குஶரீரேந்த்ரியங்களைக்கொடுக்கவேணுமென்று நினைத்து அந்த ஸ்ருஷ்டிக்கு உனக்கு உபகரணபூதனான சதுர்முகனைத் திருநாபீகமலத்திலே ஸ்ருஷ்டித்தாய்.

(வையவித்யாதி) ஜகத்திலுண்டான மநுஷ்யரை அஸ்த்திரரென்று நினைத்து அவர்களுடைய நித்யஸம்ஹாரத்துககு உனக்கு உபகரணபூதனான ம்ருத்யுவையும் கூடவே ஸ்ருஷ்டித்தாய். இத்தால உன்னாலே உண்டாக்கப்பட்டவற்றை நீயேபோக்குமிடத்தில்

---

ளின வளவன்றிக்கே. ஜகத்துக்கு, தன்னை முதலிலே ஸ்ருஷ்ட்டித்தருளின உபகாரந்தன்னை யருளிச்செய்கிறார். (உய்யவித்யாதி) கரண களேபரவிதுரராய் போக(ஞா ந)மோக்ஷ ஶூந்யராய்*அசிதவிஶேஷிதராய்க்கிடக்கிற ஆத்மாக்கள் கரணகளேபரங்களைப்பெற்று, திருவடிகளை ஆஶ்ரயித்து உஜ்ஜீவிக்கைக்குறுப்பாக லோகத்தை ஸ்ருஷ்டிக்கையிலே விருப்பத்தை யுடையனாய், வ்யஷ்டி ஸ்ருஷ்டிக்கு கர்த்தாவான சதுர்முகனைத் திருநாபீகமலத்திலே தோற்றுவித்தவனே.

(வையமித்யாதி) ஜகத்ஸ்ருஷ்ட்டி பண்ணுகிறபோதே, "பூமியிலுண்டான மநுஷ்யர் நம்முடைய ஆஜ்ஞாரூபமான ஶாஸ்த்ரமர்யாதையில் நிற்பார் சிலரல்லர், க்ருத்ரிமராய் விபரீதப்ரவ்ருத்தராமவர்கள்" என்று திருவுள்ளம்பற்றி, "அப்படி அதிப்ரவ்ருத்தரான தசையில் அதுக்கீடாக ஶிக்ஷித்தாகிலும் ரக்ஷிக்கவேணும்" என்று காலனையுமுடனே ஸ்ருஷ்டித்தவனே! "பொய்யர்" என்கிறவித்தை, "பொய்" என்று குறைத்துக்கிடக்கிறது. (ஐய) ஐயனே!;

---

யாதி), (ஜகத்துக்கு) என்றதுக்கு (உபகாரத்தை) என்றத்தோடந்வயம், தன்னையென்று ஜகத்தைச்சொல்லுகிறது. "உய்யவுலகுபடைக்க வேண்டி நான்முகனை உந்தியில் தோற்றினாய்" என்றந்வயித்து உந்தியென்று லாக்ஷணிகமாய் நாபீகமலத்தைச்சொல்லுகிறதாக்கி அர்த்தமருளுகிறார் (கரணேத்யாதி).

மூ;—

தண்ணனவில்லை நமன்றமர்கள் சாலக்கொடுமைகள் செய்யாநிற்பர்
மண்ணொடு நீருமெரியுங்காலுமற்றுமாகாசமுமாகிநின்றாய் [டென்றும்
எண்ணலாம்போதே யுன்னாமமெல்லாமெண்ணினே னென்னைக்குறிக்கொண்
அண்ணலே நீயென்னைக்காக்கவேண்டு மரங்கத்தரவணைப்பள்ளியானே. (சு)

---

உனக்கருமையில்லை யென்கை. (ஐய) (க) "ஶாதாவிதாஹ்ராதா மாதாபிதாப்ராதா" என்கிறபடியே எனக்கு நிருபாதிகபந்துவானவனே. (இனியென்னைக்காக்கவேண்டும்) நான் உன்னபிமாநத்திலே ஒதுங்கினபின்பு கைம்முதலற்றவென்னை ரக்ஷித்தருளவேணும். (அரங்கத்தித்யாதி) திருப்பாற்கடலிலேவந்து கிட்டமாட்டாதவென்போல்வார்க் காகவன்றோ நீ கோயிலிலே வந்து சாய்ந்தருளிற்று. .... ... .... .... (ரு)

அவ;—ஆறும்பாட்டு. (தண்ணனவித்யாதி) ஸர்வாந்தர்யாமியான நீ என்னை ரக்ஷித்தருளவேணு மென்கிறார்.

ஸ்வா;—(தண்ணனவில்லை நமன்றமர்கள்) ஐயோவென்னு

---

பரமபந்து வானவனே. இத்தால் - ரக்ஷிக்கைக்கீடான ப்ராப்தியைச் சொல்லுகிறது. (இனியென்னைக் காக்கவேண்டும்) அந்தவையத்திலுள்ளார் படியன்றிக்கே, உன்னுடைய அங்கீகாரவிசேஷத்தாலே வ்யாவ்ருத்தனாய் உனக்கு மங்களாஶாஸநம் பண்ணியன்றி தரியாதபடியான பின்பு, இப்படியிருக்கிற வென்னை, என்னுடைய புருஷார்த்தத்துக்கு விரோதியான யமபடரால்வரும் நலிவில் அந்வயமில்லாதபடி ரக்ஷித்தருளவேணும். (அரங்கத்தரவணைப்பள்ளியானே) ஜகத்ஸ்ருஷ்டியைப்பண்ணி, ஸ்ருஷ்டமான ஜகத்தினுடைய ரக்ஷணார்த்தமாகத் திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளினவளவன்றிக்கே, இங்குவந்து சாய்ந்தருளிற்று - அநந்யகதிகளாய் ஆர்த்தராய்த் திருவடிகளிலே வந்து விழுந்தாரை ரக்ஷிக்கைக்காகவன்றோ. .... ... .... (ரு)

வ்யா.—ஆறும்பாட்டு. (தண்ணனவில்லை) மெத்தனவில்லை. உக்திவ்ருத்திகளெல்லாம்கடிநமாயாய்த்திருப்பது (உ) "கடுஞ்சொலார்

---

திருப்பல்லாண்டில் தோற்றுகிறமங்களாஶாஸநம் பரத்வ ஸ்வபாவாநுகுணமாகவும், இத்திருமொழியில் யமபடரால் வந்த நலிவு சொல்லும் ப்ரகரணத்தாலும் அர்த்தமருளுகிறார் (அந்தவையத்திலுள்ளவித்யாதி) ... (ரு)

அரு;—ஆறும்பாட்டு. (தண்ணனவித்யாதி) தணிநல்-திருப்தி யென்

---

(க) ஸாபா- (உ) தி-மொ.

மிரக்கமில்லாத யமபடர் தண்டிக்கும்போது ஆஶ்ரயங்கள் பொறுக்குமளவன்றியிலே மிகவும் க்ரௌர்யங்களைப்பண்ணாநிற்பர்கள். க்ருபாவானான நீ இத்தைப் பரிஹரித் தருளவேணு மென்கை.

கடியார்'' என்னக்கடவதிறே. அன்றிக்கே, தண்ணனவாவது - தணிதலாய், அது இல்லையென்கையாலே - நலிகையில் ஒவுதலில்லாமையைச் சொல்லுகிறது. ஒருகால் விட்டுப் பற்றுவதில்லையென்கை. (நமன்றமர்கள்) ப்ரதாநனான யமன்தானாகில் கண்குழிவு கண்டவாறே ஒருகாலாக விட்டிருக்கவுங்கூடும்; இவர்கள் அவனுடைய படராகையாலே "அவன்சொன்னதில் ஒன்றும் தப்பாதே செய்யவேணும்" என்னும் நினைவாலே கண்பாராதே க்ரூரமாக நலியா நிற்பர்களாய்த்து. (சாலக்கொடுமைகள் செய்யாநிற்பர்) மிகவும் கொடிதான தண்டனைகளைப் பண்ணாநிற்பர்கள்.

அதாவது - இந்த தேஹவிஶ்லேஷத்துக்குமுன்னே, சிவந்த மயிரும் எரிந்த விழியும் பொறிபறக்கிற முசமும் நாமடிக்கொண்ட உதடுமான உக்ரவேஷத்தோடே, * சேவதக்குவாரைப்போலே, கையும் சூலமும் பாசமும் முதலானவற்றோடே வந்துநிற்கும் நிலை தன்னாலே வயிறுஎரிகொளுந்தும்படி பண்ணுகையும், (க) "நமன்றமர் பாசமவிட்டால் அலைப்பூணுண்ணும்" என்னும்படி இந்தசரீரந்தன்னை விடுவிக்கிற ஸமயத்தில் அலைச்சல் படுகையும், பின்பு யாதநா சரீரத்திலே புகுரச்சொல்லி மோதுகையும், (உ) "பின்னும் வன்கயிற்றால் பிணித்தெற்றிப் பின்முன்னாக விழுப்பதன் முன்னம்" என்கிறபடியே வலியகயிற்றால் காலிலே கட்டித் தியங்க வடித்து, தலைபின்னும் கால்முன்னுமாக யாம்யமார்க்கத்தாலே யிழுத்துக்கொண்டுபோகையும், நாய்களையேவித் துடைவழிகவருவிக்கையும், சூலத்தாலே பாய்கையும், முதலாகச்செய்யும் கொடுமைகளுக்கு ஒரு முடிவில்லையிறே. "செய்யாநிற்பர்" என்கிற வர்த்த

கை. கீழ்ச்சொன்னத்தை விவரிக்கிறார் (ஒருகாலித்யாதி). "சாலக்கொடுமைகள் செய்யாநிற்பர்" என்றதுக்கு ஹேதுவாக வேண்டி, "நமன்றமர்" என்றதுக்கு வ்யாவ்ருத்தி பூர்வகம் தாத்பர்யமருளுகிறார் (ப்ரதாநனித்யாதி).

மிகவும் கொடுமைகளெங்கனேயிருக்கு மென்னும் ப்ரஶ்நத்தை அநுவதித்து அவற்றை விவரிக்கிறார் (அதாவதித்யாதி - இல்லையிறே யென்னுமள

(க) தி-வாய்-ரு-உ-கo. (உ) ச-ரு-எ.

(மண்ணித்யாதி) ஒன்றுக்கொன்று காரணமாய்நின்ற பூதபஞ்சகங்களும் தந்மாத்ரைகளும் இந்த்ரியங்களும் மஹதஹங்காரங்களும் இவையெல்லாத்துக்கும் காரணமான மூலப்ரக்ருதியும் தத்கதரான ஜீவஸமஷ்டியும் இவற்றையெல்லாத்தையும் நினைக்கிறது (மற்றுமென்று). ஆக இவற்றையுடைய வுன்னோடே ஸமாநாதிகரித்துச் சொல்லலாம்படி இவற்றுக்குள் அந்தராத்மாவாய் நின்றாய். இத்தால் அந்தர்யாமியும் பெரிய பெருமாளே யென்கை. (எண்ணலாமித்யாதி) கரணங்கள் வஶவர்த்திகளாய் அநுஸந்தாநத்துக்கு ஸக்

மாநத்தாலே உத்ரோத்தரம் செய்யும் கொடுமைகளையெல்லாம் சொல்லுகிறது.

(மண்ணித்யாதி) பூமியோடே ஜலமும் அக்நியும் வாயுவும் ஆகாசமுமாகிற ஜகத்காரணமாகிய பூதபஞ்சகமும், மற்றும்கார்யரூபமான ஜகத்துத்தானும் "நீ" என்கிற சொல்லுக்குள்ளே அடங்கும்படி உனக்கு ப்ரகாரமாக இவற்றுக்கு ப்ரகாரியாய்க் கொண்டு நின்றவனே. இத்தால் ஸர்வகாரணபூதனாய் ஸர்வப்ரகாரியா யிருக்கையாலே உனக்கு விதேயமல்லாததொன்று இல்லையிறே. ஆனபின்பு இந்த யமபடராலவரும் நலிவை நீயே மாற்றவேணும். (எண்ணலாம்போதே யுன்னுமமெல்லா மெண்ணினேன்) இத்தால் தம்முடைய ப்ராப்யநிஷ்டையைச் சொல்லுகிறார். கரணங்கள் விதேயமாய் அநுஸந்திக்கலானபோதே, உன்னுடைய திருநாமமெல்லாம் எனக்கு தாரகமாகவும் போக்யமாகவும் அநுஸந்தித்தேன். நாராயணஶப்தத்துக்குள்ளே ஸகலநாமங்களு மந்தர்ப்பூதம்.

(அதாவது) என்றவநந்தரம் "எங்ஙனே யென்னில்" என்று சேஷம். (சேவதக்குவார்) என்றது - சேங்கன்றுகளுக்கு பீஜப்ரஹாரம் பண்ணுவாரென்றபடி. (தியங்க) மயங்க.

இவ்விஶேஷணத்துக்குப்ரக்ருதோபயோகம் காட்டுகிறார் (இத்தாலித்யாதிவாக்யத்வயத்தாலே). (மாற்றவேணும், என்ற வநந்தரம் "என்றதாய்த்து" என்று சேஷம். ஸாதநத்வப்ராந்தியை நிவர்த்திப்பிக்கிறார் (இத்தாலித்யாதி). ஶப்தார்த்தம் காட்டுகிறார் (கரணங்களித்யாதி). அஸங்க்யேய குணசேஷ்டித வாசகங்களான திருநாமங்கள்பலபலவாயிருக்க, "உன்னுமமெல்லாம் எண்ணினேன்" என்று சொல்லக்கூடுமோ வென்னவருளுகிறார் (நாராயண

தியுள்ள போதே மங்களாஶாஸந விஷயபூதனானவுன்னுடைய ப்ரா ப்யவாசகங்களாய் மேன்மைக்கும் நீர்மைக்கும் வடிவழகுக்கும் வாசகங்களான திருநாமங்களை வாசகமாக்கி மங்களாஶாஸநம் பண்ணினேன்.

'இப்படிப்பட்டவன்' என்று என்னைத்திருவுள்ளம் பற்றியருளி, எல்லாக்காலத்திலும் இதினுடையவிழவுதன்னதாம்படி ஸ்வாமியானநீ உன்கைபார்த்திருக்கிற வென்னை ரக்ஷித்தருளவேணும்.

---

பூதமாகையாலே, அதொன்றையும் சொல்லவே எல்லா நாமங்களையும் சொன்னாராவரிறே. இவர்தாம் அதொழிய வேறொன்றறியாரிறே. (௧) "நன்மைதீமைகளொன்று மறியேன் நாரணனென்னுமித்தனையல்லால்" என்றும்' (௨) "ஓவாதே நமோநாராணா வென்பன்" என்றுமிறே இவரிருப்பது. மங்களாஶாஸநத்துக்கும் இது தானேயிறே இவர்க்குவாசகம். (௩) "நமோநாராயணாயவென்று-பரமாத்மனைச் சூழ்ந்திருந்து பல்லாண்டு - ஏத்துவர்" என்றாரிறே, ஆகையால், இத்திருநாமமொழிய ஒருக்ஷணமும் தரிக்கமாட்டார். (௨) "உண்ணாநாள் பசியாவதொன்றில்லை.நமோநாராணாவென்றெண்ணாநாள் எனக்கு - பட்டினிநாள்" என்னுமவரிறே. ஆக, இப்படி உன்னமெல்லா மெண்ணினேன்.

(என்னைக் குறிக்கொண்டு) இப்படிஉன்திருநாமத்தைச்சொல்லி உனக்கு மங்களாசாஸநம் பண்ணுதபோது க்ஷணகாலமும் தரிக்கமாட்டாதவென்னைத் திருவுள்ளம்பற்றி. (என்றும்) ஸர்வகாலத்திலும், இந்நிலைதான் இவர்க்கு காதாசித்கமன்றே. (அண்ணலே) ஸர்வ ஸ்வாமியானவனே! இத்தலைபிழவுபேறுகள் உன்னதாம்படியன்றோ குடற்றுடக்கிருப்பது. (நீ என்னைக் காக்கவேண்டும்) இப்

---

ரப்தத்துக்குள்ளேயித்யாதி). அந்தர்ப்பூதமாகையாவது - ஸகல நாமங்களுக்கும் வாச்யங்களானகுண சேஷ்டிதாதிகளெல்லாம் இத்திருநாமத்தில் ஸங்க்ரஹேண சொல்லப்படுகையால் இத்திருநாமமே அல்லா நாமங்களென்கை. இவர் தாம் எல்லாநாமங்களையும் சொன்னாராகைக்கு இத்தைத்தான் சொன்னாரோவென்னுமாகாங்க்ஷயிலே அருளுகிறார் (இவர் தாமித்யாதி). (வாசகம்) என்றது - வார்த்தை யென்றபடி.

---

(௧) ௫-௧-௩. (௨) ௫-௧ ௬. (௩) திருப்பல்-௧௨.

மூ.—
செஞ்சொன் மறைப்பொருளாகிநின்ற தேவர்கள்நாயகனே யெம்மானே
எஞ்சலிலென்னுடை யின்னமுதே யேழுலகுமுடையா யென்னப்பா
வஞ்சவுருவில்நமன்றமர்கள் வலிந்து நலிந்தென்னைப் பற்றும்போது
அஞ்சலமென்றென்னைக் காக்கவேண்டு மரங்கத்தரவணைப் பள்ளியானே. (எ)

(அரங்கத்தித்யாதி) அந்தர்யாமித்வத்தி ழியமாட்டாதவர்களுக்
காகவன்றோ நீ கோயிலில் சாய்ந்தருளிற்று. (௬)

அவ;—ஏழாம்பாட்டு. (செஞ்சொலித்யாதி) வேதைகஸமதி கம்யனாய் ஸர்வாதிகனான நீ எனக்கு அபய ப்ரதாநம் பண்ணியரு ளவேணுமென்கிறார்.

ஸ்வா;—(செஞ்சொல்மறைப்பொருளாகின்ற) யதாபூதவாதி யாய், பாஹ்யகுத்ருஷ்டிகளான ஆஸுரப்ரக்ருதிகளுக்கு ஸ்வார்த் தங்களைப்ரகாஶியாத வேதத்துக்குப்ரதாநார்த்தமாய் (க)“ஸவெ

படி யிருந்துள்ள நீ, கீழ்ச்சொன்ன புருஷார்த்த நிஷ்டையை யுடையேனான வென்னை, இப்புருஷார்த்தத்துக்கு விரோதியாக யம படரால் வரும் நலிவில் அகப்படாதபடி ரக்ஷித்தருளவேணும். (அரங்கத்தரவணைப் பள்ளியானே) இதுதான் நான் இன்று விண் ணப்பம் செய்யவேணுமோ?, இதுக்கு முற்கோலிவந்தன்றோ தேவ ரீர் இங்கே வந்து கண்வளர்ந்தருளுகிறது. .... (௯)

வ்யா.—ஏழாம்பாட்டு. (செஞ்சொல் மறைப் பொருளாகி நின்ற) செவ்விய சொல்லை யுடைத்தான வேதத்தினுடைய அர்த்த பூதனாய்நின்ற. சொல்லுக்குச் செவ்வையாவது - யதாபூ(ஸ-ு)த வாதித்வம். நாஸ்திகரா யிருப்பார்க்கு ஸ்வார்த்தத்தை மறைக்கை யாலே இத்தை “மறை” என்கிறது-இதுதான் பூர்வபாகமென்றும் உத்தரபாகமென்றும் இரண்டுகூறாய், அதில் பூர்வபாகம் கர்மப்ரதி பாதகமாய், உத்தரபாகம் ப்ரஹ்ம ப்ரதிபாதகமா யிருந்தவாகி

(இப்புருஷார்த்தத்துக்கு) என்றது-மங்களாசாஸநரூப புருஷார்த்தத்துக் கென்றபடி. ... ... ... ... ... (௬)

அரு;—ஏழாம்பாட்டு. (செஞ்சொலித்யாதி) மறைப் பொருளென்றுஸா மாந்யமாக வேதத்துக்கெல்லாம் இவன் பொருளென்னக்கூடுமோ ?, பூர்வபா கம் கர்மத்தை ப்ரதிபாதிக்கிற தன்றோவென்ன வருளுகிறார் (இதுதானித்யா தி). பூர்வபாகத்தில் நாராயணாதி ஶப்தங்களையன்றிக்கே அக்நீந்த்ராதிபதங்

வேதாய ... -ஸர்வேவேதாயத்ரைகம்பவந்தி" (க) "ஸர்வே ... - ஸர்வேவேதாயத் பதமாமநந்தி" (உ) "வேதைச்ச ஸர்வைரஹமேவ வேத்ய: - வேதைச்சஸர்வை ரஹமேவவேத்ய:" என்னக்கடவதிறே.

(தேவர்கள்நாயகனே) * அயர்வறுமமர்களதிபதியானவனே; ப்ரஹ்மாதிகளுக்கு நிர்வாஹகனென்னுமாம். (எம்மானே) உன்னுடைய வேதைகஸமதி கம்யத்வத்தையும் ஸர்வநிர்வாஹகத்வத்தை

னும் ஆராதந ஸ்வரூபத்தையும் ஆராத்ய ஸ்வரூபத்தையும் சொல்லுகிறதாகையாலே, (உ) "வேதைச்ச ஸர்வைரஹமேவ வேத்ய: - வேதைச்சஸர்வை ரஹமேவவேத்ய:" என்கிறபடியே "எல்லா வேதங்களுக்கும் இவனே ப்ரதிபாத்யன்" என்னத்தட்டில்லையிறே. (க) "ஸர்வே வேதா யத்பதமாமநந்தி - ஸர்வேவேதாயத்பதமாமநந்தி" என்னக்கடவதிறே. பூர்வபாகத்தில் இவனை ஸத்வாரகமாகப்ரதிபாதியாநிற்கும். உத்தரபாகத்தில் அத்வாரகமாக ப்ரதிபாதியாநிற்கும். அத்தைப்பற்றவிறே "ச்ருதிசிரஸி விதீப்தே - ச்ருதிசிரஸிவிதீப்தே" என்றருளிச்செய்தது.

(தேவர்கள் நாயகனே) (ங) "யத்ர பூர்வே ஸாத்யாஸ் ஸந்தி தேவா: - யத்ரபூர்வே ஸாத்யாஸ்ஸந்திதேவா:" என்கிற நித்யஸூரிகளுக்கு நிர்வாஹகனானவனே. அவர்களுக்கு நிர்வாஹகனாகையாவது - * அஹ்ருத ஸஹஜதாஸ்யராகையாலே தன்னுடைய அநுபவகைங்கர்யங்களையொழிய அரைக்ஷணமும் செல்லாதபடியாய், * அஸ்த்தாநே பயசங்கிகளாய்க்கொண்டு மங்களாசாஸநபரராய்ப் போருகிறவர்களுடையப்ரக்ருதியறிந்து விநியோகங்கொண்டு போருகை. (எம்மானே) அவர்களைப்போலே என்னையும் உன் திருவடிகளுக்குப் பரிவனாக்கி அடிமை

களையிட்டு தேவதாந்தராராதநரூபேண கர்மம் ப்ரதிபாத்யமாயிருக்க இங்ஙன் சொல்லக்கூடுமோ வென்னவருளுகிறார் (பூர்வபாகத்திலித்யாதி).

நித்யஸூரிகளுக்கு அந்யபாரதந்த்யபேக்ஷையின்றிக்கேயிருக்க, இவன் நிர்வஹிக்கையாவதென்னென்ன வருளுகிறார் (அவர்களுக்கித்யாதி), தேவர்கள் நாயகனென்றத்தைக் கடாக்ஷித்தருளுகிறார் (அவர்களையித்யாதி). என்

(க) கட-உ-கரு-எ. (உ) கீ-கரு-கரு. (ங) புருஷஸூ.

 செஞ்சொல்

யும் காட்டி என்னை யடிமைகொண்டவனே; (எஞ்சலிலித்யாதி) நா
ஶரஹிதமாய், போக்யமுமானவம்ருதம்போலே எனக்கு நித்ய
நிரதிஶய போக்யனானவனே.

---

கொண்டு போருகிறவனே. (எஞ்சலி லென்னுடையின்னமுதே
ப்ராக்ருதமான அம்ருதத்தில் வ்யாவ்ருத்தி. எஞ்சல் - சுருங்கல்.
"இல்" என்பது-இல்லாமை. அதாவது - தேசகாலங்களால் வரும்
ஸங்கோசரஹிதமாயிருக்கை. அது எல்லாதேசத்திலு மின்றிக்கே
எல்லாக் காலத்திலும் புஜிக்கவொண்ணுகபடியா யிருக்குமிறே.
"என்னுடையமுது" என்கையாலே - புஜித்தார்க்கு, உடம்பைப்
பூண்கட்டுமதுபோலன்றிக்கே உயிரைப் பூண்கட்டுமதாயிருக்கை.
"இன்னமுது" என்கையாலே - புஜித்தார்க்கு, த்ருப்தியைப் பிறப்
பிக்குமது போலன்றிக்கே,(க)"அப்பொழுதைக் கப்பொழுதென்
னாராவமுதம்"என்கிறபடியே-புஜிக்க புஜிக்க மேன்மேலன த்ருஷ்
ணையை விளைக்குமதாயிருக்கை. கீழ்ச்சொன்ன நித்யஸூரிகளும்,
(உ) "அப்பால் முதலாய்நின்ற அளப்பரியவாரமுது" என்று -
இவ்வம்ருதத்தையிறே புஜிப்பது. அவ்வம்ருதந்தான் (௩)"அரங்க
மேயவந்தணன்" என்னும்படி ஆஸந்நமாய்த்தே இவர்க்கு.

---

சலிலென்றத்தால் வரும் ப்ராக்ருதாம்ருத வ்யாவ்ருத்தியை உபபாதிக்கிறார்
(அதித்யாதி), எல்லாக்காலத்திலும் புஜிக்கவொண்ணுமையாவது—ஶாசியா
யிருக்கும் காலத்திலே தானே புஜிக்கலாயிருக்கை. ஆகையாலேயிறே பெரிய
திருவடி இந்த்ரனை ஜயித்து அம்ருதம் கொணர்ந்தபோது ஸர்ப்பங்களை ஸ்நா
நம்பண்ணிவந்து புஜியுங்கோளென்றது. (என்னுடை) என்ற விடத்தில்
"என்" என்றத்தால் ஆழ்வாருடம்பையுபேக்ஷித்து ஆத்மாவைப் பேணுகையா
கிற ஸ்வபாவம் தோற்றுகையால் அதுக்குச் சேர ப்ராக்ருதாம்ருத வ்யாவ்ருத்
தியையருளிச்செய்கிறார் (என்னுடையவித்யாதி).தெகுட்டாமையாகிற வ்யா
வ்ருத்தியை உபபாதிக்கிறார்(இன்னமுதித்யாதி). எம்பெருமானாகிற வம்ருதந்
தான் பருகப்பருகஆராவமுதமாயிருக்குமோவென்னவருளுகிறார் (கீழித்யாதி)
நித்யஸூரிகளும் இவ்வம்ருதத்தையே அநுபவிக்கிறதாகில் என்னுடைய
வென்று அஸாதாரண்யம் தோற்றச் சொல்லக்கூடுமோ வென்னவருளுகிறார்
(அவ்வம்ருதமித்யாதி).

---

(க) தி-வாய்-உ-டு-௪. (உ) திருநெ-க௪.

(எழுலகுமுடையாய்) (க) "பதிம்விஶ்வஸ்ய - பதிம்விஶ்வஸ்ய" என்கிறபடியே ஸர்வலோகேஶ்வரனானவனே, (என்னப்பா) எனக்கு இவ்வர்த்தங்களையும் ப்ரமாணங்களையுமுபகரித்தவனே; எனக்கு நிருபாதிகபந்துவென்றுமாம். (வரவு தெரியாதபடி வருமவர்களாய் யமனுக்குப் பரதந்த்ரராயிருக்கிறபடர் பலாத்கரித்து ப்ரஹரித்து என்னைப்பிடிக்குமளவில். (அஞ்சலமித்யாதி) அத்தஶையில் (உ) "மாஶுச: - மாஶுச:" என்று என்னை ரக்ஷித்தருளவேணும். (அரங்

(எழுலகுமுடையாய்) இத்தால்-லீலாவிபூதி யோகத்தைச் சொல்லுகிறது, (க) "பதிம்விஶ்வஸ்ய-பதிம் விஶ்வஸ்ய" என்கிற படியே-ஸமஸ்த லோகங்களுக்கும் கடவனான ஸ்வாமியானவனே. (என்னப்பா) இங்கும் ஒரு கூறுண்டே இவர்க்கு. ஆந்தராளிகரா கையாலே இரண்டிடத்திலு மந்வயமுண்டிறே. *பொருளல்லாத வென்னைப் பொருளாக்குகையாலே எனக்கு ஸத்தா காரணமான வனே. (வஞ்சவுருவில் நமன்றமர்கள்) தங்கள் வரவு ஒருவருக் கும் தெரியாதபடி ரூபத்தை மறைத்துக்கொண்டு வரும் யமபட ரானவர்கள். (வலிந்து நலிந்தென்னைப் பற்றும்போது) பலாத்கரி த்துப் பிடித்துக்கொண்டு வந்து என்னைப் பிடிக்கும்போது. (அஞ் சலமென்றென்னைக் காக்கவேண்டும்) 'அஞ்சாதேகொள்' என்று உன் திருமிடற்றோசை கேட்கும்படியருளிச்செய்து, கீழ்ச்சொன்ன படியே உன்னை யநுபவித்து உனக்கு மங்களாசாஸநம் பண்ணுத

"தேவர்கள்நாயகனே" என்றதாலே நித்யவிபூதியோகத்தைச் சொல்லு கிறதாகத் திருவுள்ளம்பற்றி இதுக்குப்பலிதமருளுகிறார் (இத்தாலித்யாதி), "எம்மானே" "என்னப்பா" என்கிறவற்றுக்கு பௌநருக்த்யம் வாராமைக் காக, "தேவர்கள் நாயகனே யெம்மானே" என்ற சேர்த்தியைக்கடாக்ஷித்து அவர்களோடு ஸமமாகவும் "எழுலகமுடையா யென்னப்பா" என்ற சேர்த்தி யாலே இங்குள்ளாரோடு ஸமமாகமுண்டென்றும் தோற்றவேணு மென்று இரண்டும் சொல்லவேண்டிற்றென்று அருளிச்செய்யா நின்றுகொண்டு ஈடு படுகிறார் ( இங்குமித்யாதி ), இத்தால் இவருடைய ஜ்ஞாநாதிஶயத்தாலே நித்யஸூரிகளோடே சேர்த்திசொல்லுகை ப்ராப்தம், இங்கும் கூட்டுண்டோ வென்று இவ்வாக்யத்துக்குத் தாத்பர்யம், (ஆந்தராளிகர்) என்றது-முமுக்ஷுதஶையைப்பற்ற. என்னப்பாவென்றதுக்கு ஹேதுபூர்வகம் ஶப்தார்த்தமரு ளுகிறார் (பொருளித்யாதி).

(க) தை-நா-கக. (உ) கீ-கஅ-சுசு.

மூ —

நானேதுமுன் மாயமொன்றறியேன் நமன்றமர்பற்றி நலிந்திட்டிந்த
ஊனேபுகேயென்றுமோதும்போதங் குன்னைநானொன்று நினைக்கமாட்டேன்
வானேய்வானவர் தங்களீசா மதுரைப்பிறந்த மாமாயனேயென்
னாணைநீ யென்னைக்காக்கவேண்டு மரங்கத்தரவணைப் பள்ளியானே.

---

சக்தித்யாத). எனக்கு அபயப்ரதானம் பண்ணியருளுகைக்காகக் கோயிலிலே சாய்ந்தருளினவனே. ... ... (எ)

அவ;—(எட்டாம்பாட்டு). (நானித்யாதி) பரமபதத்தினின்றும் போந்து க்ருஷ்ணனாய் அவதரித்த நீ என்னை ரக்ஷித்தருளவேணுமென்கிறார்.

ஸ்வா;—(நானித்யாதி) உனக்குப்பரிந்தல்லது நிற்கமாட்டாத நான் உன்னுடைய வாஸ்சர்யாவஹமான குணங்களை யொன்றுமறியேன்; உன்னுடைய ஸங்கல்பங்களை யென்றுமாம். (நமன்றமரி

---

போது தாக்கமாட்டாத வென்னை, இப்புருஷார்த்தத்தைக் கலக்கும் யமபடரால் வரும் பாதையில் அங்வயியாதபடி ரக்ஷித்தருள வேணும். (அரங்கத்தரவணைப் பள்ளியானே) இப்படி ரக்ஷிக்கைக்காகவன்றோ கீழ்ச்சொன்ன இரண்டு விபூதியிலும் வ்யாவ்ருத்தமாய்க்கொண்டு த்ருதீய விபூதியான திருவரங்கத் திருப்பதியிலே வந்து கண்வளர்ந்தருளுகிறது. .... ... ... (எ)

வ்யா; எட்டாம்பாட்டு. (நானித்யாதி) அதீதாநாகதங்களில் ஒன்றுமறியாத நான்ஸர்வஶக்தியான உன்னுடைய மாயைகளிலே தேனுமொன்றுமறியேன். இப்போது இவர் "உன்மாயம்" என்றது, "போமிடத்துன் திறத்தெத்தனையும்புகாவண்ணம் நிற்பதோர் மாயைவல்லை" என்று சொன்னதுபோலே யிருக்குமவற்றையிறே.

---

(த்ருதீயாவிபூதி)என்றது - ப்ரத்யக்ஷ பரமபதமாகையாலே நித்யவிபூதி யென்னலாய், இங்கேயிருக்கையாலே லீலாவிபூதி யென்னலாயிருக்கையாலே உபயாகாரமுண்டென்னுமத்தைப்பற்ற, ... ... ... (எ)

அரு;—எட்டாம்பாட்டு. (நானித்யாதி) ஏதுமென்றதத்தோடு "அறியாத", என்றத்யாஹரித்து அங்வயித்தர்த்தமருளுகிறார் (அதீதேத்யாதி). மாய மென்றது-மூலப்ரக்ருதி முதலானவற்றை யன்று, க்ருத்ரிமத்தை யென்று விவக்ஷித்து த்ருஷ்டாந்த பூர்வகமருளுகிறார் (இப்போதித்யாதி), (அதாவது)

த்யாதி) யமபடர்முற்படவிந்த ஶரீரத்தோடே பிடித்துஹிம்ஸித்து இத்தைவிடுவித்து யாதநாஶரீரத்தையுண்டாக்கி அத்தைக்காட்டி "நீ இந்த ஶரீரத்திலேப்ரவேஶி" என்றுநிர்ப்பந்திக்க, இவன் அதில் புகவிசையாமையாலே கண்ணற்று ப்ரஹரிக்கிறஸமயத்திலே (அங்

---

அதாவது - கர்மாநுகுணமாக இச்சேதநர் விஷயத்தில் அவன்பண்ணிவைக்கும் வஞ்சநங்களநேகங்களிறே; அவையெல்லாம் அவன்றானறியுமத்தனையொழிய, எதிர்த்தலைக்குத் தெரியாதபடியிறேயிருப்பது; அத்தைப்பற்ற வருளிச்செய்கிறார் (நமன்றமர்பற்றிநலிந்திட்டு) கர்மங்களைப் பத்தும்பத்தாகக் கணக்கிட்டு நலியக்கடவ யமபடரானவர்கள், வந்து பிடிக்கிறபோதே எல்லா துக்கங்களும் விளையும்படி வந்துபிடித்து, வாசாமகோசரமாம்படி, இந்த ஶரீரத்தோடே நலியத்தக்கதெல்லாம் நலிந்து.

(இந்தவூனேபுகேயென்று மோதும்போது) அநந்தரம் யாதநாஶரீரத்தைக்காட்டி "இந்தச் சரீரத்திலேபுகு" என்பர்களாய்த்து. "இந்தவூன்" என்று-விட்ட சரீரத்திற்காட்டில் ப்ரவேஶிக்கிற சரீரத்தினுடையகொடுமையைச்சொல்லுகிறது. அதாவது-சேத(ஹௌ) நபேத (ஹௌ) நாதிகளிலும்விடக்கடவதன்றிக்கே அத்யந்த துக்காவஹமாயிருக்குமிறே; அத்தைப்பற்றவிறே "யாதநாசரீரம்" என்று பேராய்த்து. (க) "யாதநா தீவ்ரவேதநா-யாதநாதீவ்ரவேதநா" என்னக்கடவதிறே. இப்படியிருக்கிற சரீரத்தைக்காட்டி "இதிலே புகு" என்றால், இவன் வெருவிப்பிற்காலியா நிற்குமிறே. "இதிலே புகு" என்று கண்பாராதே மோதாநிற்பர்களாய்த்து. அதிலே

---

என்றது-அநேகமாயும் க்ருத்ரிமமாயுமிருக்கையாவதென்றபடி. இதுக்கநந்தரம் "எங்ஙனேயென்னில்" என்றுசேஷம். ஸர்வபூதஸுஹ்ருத்தானவனிடத்தில் ஒரு வஞ்சநமும் சொல்லக்கூடாதிருக்க, அநேக வஞ்சநங்களுண்டோவென்று ஶங்காதாத்பர்யம். இத்தைப்பரிஹரிக்கிறார் (கர்மாநுகுணேத்யாதி வாக்யத்ரயத்தாலே). கொடுமையை வ்யவஹாரமுகத்தாலே த்ருடீகரிக்கிறார் (அத்தையித்யாதி வாக்யத்வயத்தாலே).

புகேயென்று சொன்னவநந்தரம் இவன்ப்ரவேஶிக்க ப்ராப்தமாயிருக்க மோதுவானென்னென்ன ப்ரஸக்தியையருளுகிறார் (இப்படியித்யாதி), (வெருவி) அஞ்சி. ப்ரவேஶிப்பிக்கைக்கு ப்ரயோஜநமருளுகிறார் (அதிலேயித்யாதி),

---

(க) அமரகோ.

கேது நானுன்னை நினைக்கமாட்டேன்) ஆபத்விமோசகனுன வுன்னை ஒருப்ரகாரத்தாலும் ரக்ஷகனாக நினைக்கமாட்டேன்.

(வானேயித்யாதி) பரமபதத்தில் பொருந்திவர்த்திக்கிற நித்ய முக்தர்க்கு நியந்தாவானவனே; (மதுரைப்பிறந்தமாமாயனே) அது உண்டது உருக்காட்டாமையாலே முமுக்ஷுவாபேக்ஷனுய்ஸ்ரீமது

ப்ரவேசிப்பிக்கவேணுமே யவர்களுக்கு, மேலுண்டான துஃக்கங்களை யெல்லாம் இவனை யநுபவிப்பிக்க. இப்படி "இதிலேபுகு" என்று அவர்கள் மோதுங்காலத்தில். (அங்குன்னை நானொன்றும் நினைக்க மாட்டேன்) அவ்விடத்தில், ஆபத்விமோசகனுன உன்னைநான் ஒருப் ரகாரத்தாலும் ரக்ஷகனாக நினைக்கமாட்டேன். "அன்றிக்கே அங்கே தும் நானுன்னை நினைக்கமாட்டேன்" என்று பாடமானபோது - அவ்விடத்தில் ஏகதேசமும் நானுன்னை நினைக்க மாட்டேனென்று பொருளாகக்கடவது. அவர்கள் நலிகிற நலிவிலே அகப்பட்டு மநஸ்ஸு கலங்குகிற தசையிலே தேவரீரை நினைக்கப்போமோ?

(வானேய்வானவர் தங்களீசா) பரமபதத்திலே பொருந்தி வர்த்திக்கிற நித்யமுக்தர்க்கு, ஸ்வரூபாநுரூபமான வடிமைகொள் ளும் நியந்தாவானவனே, எய்கை – பொருந்துகை. (மதுரைப் பிறந்தமாமாயனே) அப்படி ஸர்வஸ்மாத்பரனுயிருந்துவைத்து இங் குள்ளாரை ஆட்கொள்ளுகைக்காக ஸ்ரீ மதுரையிலே இதர ஸஜா தீயனுய் வந்தவதரித்த வாஸ்சர்யபூதனே! அங்கு நியந்தாவாய் நின் று ஆட்கொள்ளும், இங்கு நியாம்யனுயிருந்து ஆட்கொள்ளும். (க) "ஆட்கொள்ளத் தோன்றிய வாயர் தம்கோ" என்ருரிறே. (என் ஆனுய்) தன்னுடைய ஸ்வாபாவிகமான பலத்தால் வந்தபெ ருமதிப்பைப்பாராதே அல்ப பலவிஶிஷ்டனுன பாகன்கையிலேவஶீ க்ருதமான மத்தகஜம்போலே மங்களாஶாஸநபரனுன வெனக்குவஶீ

ஶப்தார்த்தமருளுகிருர் (இப்படியித்யாதி), நினைக்கமாட்டாமைக்கு ஹேது வருளுகிருர் (அவர்களித்யாதி).

தங்களென்றதின் தாத்பர்யம் (ஸ்வரூபாநுரூபமான) என்றது. மாமாய னே யென்றவிடத்தில்மாவென்று பெருமையைச்சொன்னதுக்குவ்யாவ்ருத்தி பூர்வகம் தாத்பர்யமருளுகிருர் (அங்கித்யாதி), நியாம்யனுய் ஆட்கொள்ளுகை ஆஶ்சர்யத்தில் மஹத்த்வமென்று கருத்து. ... ... (அ)

(க) க-எ-கக.

௯.—

குன்றெடுத்தாநிரைகாத்தவாய ! கோநிரைமேய்த்தவனேயெம்மானே
அன்றுமுதலின்றறுதியா வாதியஞ்சோதி மறந்தறியேன் [து
நன்றுங்கொடியநமன்றமர்கள்நலிந்து வலிந்தென்னைப் பற்றும்போ
அன்றங்குநீயென்னைக்காக்கவேண்டுமரங்கத்தரவணைப்பள்ளியானே

---

ரையிலே வந்தவதரித்து அத்யாஶ்சர்யாவஹமான குணசேஷ்டிதங்களை ப்ரகாஶிப்பித்தவனே, (என்றும்) ஆனைதன்பலத்தையறியாதே பாகனுக்கு வஶவர்த்தியாமாபோலே என் மங்களாஶாஸநபரதந்த்ரவஶீக்ருதனானவனே; (நீ என்னைக்காக்கவேண்டும்) ரக்ஷ்யரக்ஷகபாவத்தை ப்ரேமத்தாலே நான் மாறாடி ப்ரதிபத்தி பண்ணிலும் நீயே ரக்ஷகனாகவேணும். (அரங்கத்தித்யாதி). அந்தக்ருஷ்ணாவதாரத்திலுதவாதார்க்கும் உதவுகைக்கன்றோ நீ கோயிலில் சாய்ந்தருளிற்று. ... ... .... (அ)

அவ;—ஒன்பதாம்பாட்டு. (குன்றித்யாதி) அந்தக்ருஷ்ணவ்ருத்தாந்தம் பின்னாட்டி அந்தக்ருஷ்ண குணங்களைப் பெரியபெருமாள் பக்கலிலே மீளவுமநுஸந்திக்கிறார்.

ஸ்வா;—(குன்றெடுத்தா நிரைகாத்தவாயா) இந்த்ரனாலே பசுக்களுக்கும் இடையர்க்கும் வந்தவாபத்தை, ரக்ஷகமாகச்சொன்ன

---

க்ர்தனானவனே (நீ யென்னைக்காக்கவேண்டும்) ஸர்வரக்ஷகனான நீ, உனக்கு மங்களாசாஸநம் பண்ணுதபோது க்ஷணகாலமும் தரிக்கமாட்டாதவென்னை, இதுக்குவிக்நமாக யமபடர்பண்ணும்நலிவால் வந்த கலக்கத்தில் அந்வயியாதபடி ரக்ஷித்தருளவேணும். (அரங்கத்தரவணைப் பள்ளியானே) பயிர்த்தலையிலே குடில்கட்டிக்கிடக்குமாபோலே, பரமபதாதிகளைவிட்டுக்கோயிலிலே வந்து கண்வளர்ந்தருளுகிறது, அபிமாநாந்தர்ப் பூதரானவர்களை அழிவற நோக்குகைக்காகவன்றோ. .... ... ... .... (அ)

வ்யா.—ஒன்பதாம்பாட்டு. (குன்றித்யாதி) இந்த்ரன் பசிக்கோபத்தாலே கல்வர்ஷத்தை வர்ஷித்தபோது, நின்றதொருமலையைக் குடையாகவெடுத்து, அந்த வர்ஷாபத்தில் ஈடுபடாதபடி பசுநிரையை ரக்ஷித்த ஆயனானவனே. இது தான், கோபகோபீஜநங்

மலையை யெடுக்துக்கவித்து ரக்ஷித்தக்ருஷ்ணனே; (கோநிரையித்யாதி) தன்னுடைய ரக்ஷணத்து விலக்காமையையுடைய பசுக்களை ரக்ஷித்து அத்தாலே உன்னுடைய ஸ்வாமித்வத்தைப்ரகாசிப்பித்தவனே. (அன்றித்யாதி) நீ மயர்வறமதிநலமருளின வன்றுமுதல் இன்றளவாகவென்னுதல். * கருவரங்கத்துட்கிடந்து கைதொழுத வன்று முதலென்னுதல். ஜநநம் பிறந்தபின்பு ஸ்ரூமொருபோகியாய்த்தோற்றுகையாலே † யானவன்று முதலென்னுதல். (ஆதியித்யாதி) காரணமாய் விலக்ஷணமான விக்ரஹமென்னுதல். காரா

---

களை ரக்ஷித்ததுக்கு முபலக்ஷணம். ஆனால் அவர்கள் தன்னைச் சொல்லாதே, "ஆநிரைகாத்த ஆயா" என்று இத்தைச்சொல்லுவானென்னென்னில்; எல்லாவற்றிலும் ப்ரதாந ரக்ஷ்யவர்க்கம் இவையேயாகத்திருவுள்ளம்பற்றி யிருக்கையாலே. * ஆயனாயன்றுகுன்றமொன்றெடுத்தான் அரங்கமாநகரமர்ந்தானிறே.

(கோநிரைமேய்த்தவனே) ஆபத்தசையில் ரக்ஷித்தவளவன்றிக்கே, அவதாரத்தின்மெய்ப்பாட்டுக்கீடாக அல்லாத இடையரோபாதி கையிலே கோலெடுத்துப் பசுநிரைமேய்த்தவனே (க) "திவத்திலும் பசுநிரைமேய்ப்புவத்தி" என்று பரமபதத்திலிருப்பிலுங்காட்டில் பசுநிரைமேய்க்கஉகந்திறேயவதரித்தது (எம்மானே) இந்தகுணசேஷ்டிதங்களாலே என்னை யெழுதிக்கொண்டவனே. "அம்மானே" என்று பாடமாகில் "ஸர்வஸ்வாமியானவனே" என்று பொருளாகக்கடவது. அப்போதுகீழ்ச்சொன்னரக்ஷணத்துக்கடியானப்ராப்தியைச்சொல்லுகிறது. (அன்றுமுதல்) * கருவரங்கத்துள் கிடந்த வன்றுமுதலென்னுதல்; திருப்பல்லாண்டுபாட நீவிஷயீகரித்த வன்று முதலென்னுதல், (இன்றறுதியா) இன்றளவாக. (ஆதியஞ்சோதி மறந்தறியேன்) ஸர்வகாரணமாய் விலக்ஷணதேஜோரூபமான உன்

---

அரு;—ஒன்பதாம்பாட்டு. (குன்றித்யாதி) ஆதியென்றதுக்கு இரண்டர்த்தம் "ஆதியான சோதி" என்றும், "ஆதியான வுன்னுடைய சோதி" என்றும். இவ்விரண்டையும் க்ரமேண வருளிச்செய்கிறார் (ஸர்வேத்யாதி வாக்யத்வயத்தாலே)(௨) "முந்நீர் ஞாலம்படைத்தவெம்முகில் வண்ணனே"

---

† இங்கே ஒருபதம் விட்டிருக்கிறது.

(க) தி-வாய்-௧௦-௩-௧௦. (௨) தி-வாய்-௩-௨-௧.

ணத்வரக்ஷகத்வங்களென்னுதல். இவற்றில் எனக்கு விஸ்ம்ருதியில்லையென்கை.

(நன்றித்யாதி) நல்ல நெருப்பென்னுமாபோலே, “நன்றுங் கொடிய” என்று க்ரௌர்யத்தின் மிகுதி சொல்லுகிறது. (நலிந்தித்யாதி) உனக்குப்பரிந்தல்லது நிற்கமாட்டாதவென்னை அவர்கள் பலத்தாலே பாதித்துப்பிடிக்கும்போது, (அன்றித்யாதி) அக்காலத்திலே அவ்விடத்திலேரக்ஷகனுனநீ. (௧)“நமன் தமரென் தமரைவினவப்பெறுவாரலர்” என்ற நீ. (என்னைக்காக்கவேண்டும்) மங்களாஶாஸந விச்சேதம்வருமென்றஞ்சுகிறவென்னை ரக்ஷித்தருளவேணும். மங்களாஶாஸந விரோதியைப்போக்கி மங்களாசாஸநம்பண்ணுவித்துக்கொள்ளுகைக்காகக் கோயிலிலே திருவநந்தாழ்வான்

---

னுடைய விக்ரஹத்தை மறந்தறியேனென்னுதல்; ஸ்வகாரணபூதனை உன்னுடைய விலக்ஷணமான தேஜஸ்ஸையுடைய விக்ரஹத்தை மறந்தறியேனென்னுதல்.

(நன்றுங்கொடியநமன்றமர்கள்) மிகவும் கொடிய யமபடரானவர்கள். “நன்றும்” என்றது - மிகவுமென்றபடி. (நலிந்துவலிந்தென்னைப் பற்றும்போது) நலிந்துகொண்டு பலாத்கரித்து என்னைப் பிடிக்கும்போது. (அன்றங்குநீ என்னைக் காக்கவேண்டும்) அவர்கள் நலியுங்காலத்திலே, அவ்விடத்திலே சேஷியாய் ரக்ஷகனை நீ; உன்பக்கல் விஸ்ம்ருதியின்றிக்கே, மங்களாஶாஸநபரனாய்க் கொண்டு போருமென்னை, இப்புருஷார்த்தத்துக்கு விரோதியானவர்கள்நலிவில்அகப்படாதபடி ரக்ஷித்தருளவேணும். (அரங்கத்தரவணைப்பள்ளியானே) (௨)“அரவணைமேல்பேராயற்காட்பட்டார்பேர் நமன்றமராலாராயப்பட்டறியார்” என்னும்படி (௧)“நமன்றமரென்றமரை வினவப்பெறுவாரலர்” என்று அபிமாநித்து நோக்கிக்கொண்டுபோரும் தேவரீருடைய அபிமாநாந்தர்ப்பூதரானவர்களுக்கு இதுதான் வருகைக்கு ப்ரஸங்கமுண்டோ. என்னுடைய அதிசங்கி

---

என்று ஸவிக்ரஹனாய்க்கொண்டு ஸ்ருஷ்டிக்குமென்கையாலே விக்ரஹத்துக்கும் காரணத்வமுண்டென்று கருத்து. ... ... ... (௯)

---

(௧) தி-மொ-௧௦-௯-௫. (௨) ௧-திருவ-௫௫.

மூ.—
மாயவனை மதுசூதனனை மாதவனை மறையோர்க ளேத்தும்
ஆயர்களேற்றினை யச்சுதனை யரங்கத்தரவணைப் பள்ளியானை
வேயர்புகழ் வில்லிபுத்தூர் மன்விட்டுசித்தன்சொன்னமாலைபத்தும்
தூயமனத்தன ராகி வல்லார் தூமணிவண்ணனுக் காளர்தாமே. (ய)
பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.

---

மேலே பள்ளிகொண்டருளுகிறனே; இதெல்லாம் சரமசதுர்த்தி யிலே திருமந்த்ரத்திலே காணலாமிறே. ... (கூ)

அவ;—நிகமத்தில் இத்திருமொழி கற்றார்க்குப்பலம் சொல்லித்தலைக்கட்டுகிறார்.

ஸ்வா;—(மாயவனை) ஆஶ்சர்யஶக்தியுக்தனை. (மதுசூதநனை) மங்களாஶாஸநவிரோதிகளை மதுவாகிற வஸுரனை நிரஸித்தாப்

---

மூலமான கலக்கத்தால்வந்த பயத்தாலே அடியேன் விண்ணப்பம் செய்த வித்தனையன்றே. .... ... .... (கூ)

அவ;—நிகமத்தில், இத்திருமொழி கற்றார்க்குப்பலம் சொல்லித் தலைக்கட்டுகிறார்.

வ்யா.—(மாயவனை) ஆஶ்சர்யரூபகுண சேஷ்டிதங்களையுடையவனை. இத்தால் விக்ரஹகுணமான ஸௌந்தர்ய ஸௌகுமார்யங்களாலும், ஆத்மகுணமான வாத்ஸல்யஸௌஶீல்ய ஸௌலப்யாதிகளாலும்ஆஶ்ரிதரக்ஷணார்த்தமான மனோஹாரிசேஷ்டிதங்களாலும் அநுபவிதாக்களானப்ரேமயுக்தர்க்கு அநவரதமங்களாசாஸநம்பண்ணவேண்டும்படியான வைலக்ஷண்யத்தையுடையவனென்கை. (மதுசூதனனை) அநுபவிப்பார்க்குவரும் விரோதிகளை, மதுவை நிரஸித்தாப்போலே நிரஸித்துக்கொடுக்குமவனை. இத்தால் அநுபவ

---

அரு:—பத்தாம்பாட்டு. (மாயவனையித்யாதி) ரூபமென்றது - விக்ரஹகுணம். விஷ்ணுசித்தன் சொன்னமாலையென்று மங்களாசாஸநத்துக்கு விரோதியான யமபடரால் வரும் நலிவைப்போக்கித் தரவேணுமென்று சொன்ன திருமொழி இதுவாகையாலே அப்படி சொல்லுகையிலே இவ்விஶேஷணம் ஹேதுவைக் காட்டுகிறதென்று தாத்பர்யமருளுகிறார் (இத்தாலித்யாதி) மதுவை நிரஸித்தாப்போலே யமவஶ்யதையைப் போக்குவன். ஆகையாலே சொன்னாரென்று அவன் விஷயமாக இத்திருமொழியைச் சொல்லுகையிலே ஹேதுவென்றருளுகிறார் (இத்தாலித்யாதி). பகவத்வைபவம்யதார்த்தம் யதா

போலே நிரஸிக்குமவனை. (மாதவனை) அதுக்கடியாகஸ்ரிய:பதி யானவனை.

(மறையோர்களேத்தும் ஆயர்களேற்றினை) வேத தாத்பர்யம் கைப்பட்டிருக்குமவர்களுடைய மங்களாஸாஸநத்துக்கு விஷயபூதனைக்ருஷ்ணனை. கோபகுலத்தின் நடுவே மேனாணித்திருக்குமவனை.

---

விரோதியான யமவஸ்யதைக்கு அஞ்சவேண்டாதபடியான வைலக்ஷண்யத்தை யுடையவனென்கை. (௧) "பரிஹர மதுஸூதந ப்ரபந்நாந் - பரிஹரமதுஸூதந ப்ரபந்நாந்" என்று யமன்றானும் நடுங்கும்படியான விஷயமிறே. (மாதவனை) ஆஸ்ரிதரானவர்களுக்கு உபாயதசையில் புருஷகாரபூதையாய், உபேயதசையில் ப்ராப்ய பூதையாயிருக்கும் பெரிய பிராட்டியாருக்கு வல்லபனானவனை. இத்தால் "அச்சேர்த்திக்கு என் வருகிறதோ!" என்று ஸர்வகாலமும் (௨)"வடிவாய் நின் வலமார்பினில் வாழ்கின்ற மங்கையும் பல்லாண்டு" என்று மங்களாஸாஸநம் பண்ணவேண்டும்படி யிருக்குமவனென்கை.

(மறையோர்களேத்து மாயர்களேற்றினை) அபௌருஷேயமாய் நித்ய நிர்த்தோஷமாய் பகவத்வைபவயாதார்த்த்ய ப்ரதிபாதகமாயிருந்துள்ளவேதத்தினுடையதாத்பர்யத்தையறிந்திருக்குமவர்கள், பரத்வத்திலும் காட்டில் நீர்மையிலேயீடுபட்டு அநவரதம் ஸ்துதிக்கும்படி ஸ்ரீநந்தகோபர் திருமகனாய்க்கொண்டு, கோபர்க்கெல்லாம் தலைவனாகையால் வந்த மேனாணிப்பை யுடையவனை. மேன்மைக்கு "அமரரேறு" என்னுமாபோலேயிறே, நீர்மைக்கு "ஆயர்களேறு" என்கிறவிது. பெரியபெருமாளை க்ருஷ்ணாவதாரமாகவிறே நம் பூர்வாசார்யர்கள் அநுஸந்திப்பது. (௩) "கொண்டல்வண்ணனைக் கோவலனாய் வெண்ணெயுண்டவாயன் என்னுள்

---

பவதிததா ப்ரதிபாதயதி" என்கிற வ்யுத்பத்தியைத் திருவுள்ளம்பற்றி (பகவத் வைபவ யாதார்த்த்ய ப்ரதிபாதகமாய்) என்றது.

ஏத்துகைக்கு ஹேதுபூர்வகம் தாத்பர்யம் (பரத்வத்திலித்யாதி): ஏத்துமென்ற வர்த்தமானார்த்தம் (அநவரதம்) என்றது. ஏற்றினையென்றத்தால் பலிதம் (மேனாணிப்பென்றது). (அமரரேறென்னுமாபோலே) என்றது-அமரர்களதிபதி யென்னுமாபோலே யென்றபடி,

---

(௧) வி-பு ௩-எ-௧௩. (௨) திருப்பல்லா-௨. (௩) அமல-௧௦.

(அச்சுதனை) இப்படி மங்களாசாஸந பரரை ஒருநாளும் நழுவ விடாதவனை. (அரங்கத்தித்யாதி) மங்களாஸாஸநத்துக்கு விஷயபூதனுக்கொண்டு கோயிலிலே தன் ஸௌகுமார்யத்துக்குத்தகுதியாகத் திருவநந்தாழ்வான் மேலே பள்ளிகொண்டருளுகிறவனை. (வேயரித்யாதி) வேயர்-குடிப்பேர். இந்த கோத்ரஜரெல்லாரும் தங்கள் வம்ஸத்திலே இவர்வந்தவதரிக்கப்பெறுகையாலே க்ருதார்த்த

ராங் கவர்ந்தானை" என்றாரிறே திருப்பாணழ்வார். திருப்பவளத்தை மோந்துபார்த்தால் இப்போதும் வெண்ணெய் மணக்கு மாய்த்து. (க) "கூ-ஸ்ரீவ்யாவீ ர நவவரிஜீஜ ஹெதீ யஸோஈநா ஸௌஞ்ருஹண ஸீலம் நலயாயிமியிதி - கூர்மவ்யாக்க்ரீநக பரிமிளத்பஞ்சஹேதீயசோதா நத்தாமௌக்த்யாபரணமதிகம்ஸ்ஸமாதிந்திநோதி" என்று-"யசோதைப்பிராட்டிபிள்ளைப்பணியாகச் சாத்தின திருவாபரணம் இப்போதும் பெரிய பெருமாள் திருக்கழுத்திலே கிடக்கிறது" என்று கண்டநுபவித்தாரிறே பட்டர். ஆகையால் இவ்விடத்தில் "மறையோர்கள்" என்கிறது - திருப்பாணழ்வார், பட்டர்போல் வாரானவர்களை.

(அச்சுதனை) ஆச்ரிதரை ஒருகாலும் நழுவவிடாதவனை. (உ) "பச்சைமாமலைபோல்மேனி பவளவாய் கமலச்செங்கண் அச்சுதா" என்றாரிறே - தொண்டரடிப்பொடியாழ்வார். "அச்சுதா" என்ற வநந்தரம், "ஆயர்தங்கொழுந்தே" என்று மருளிச்செய்தாரிறே. (அரங்கத்தரவணைப் பள்ளியானை) உகந்தருளின நிலங்களெல்லாவற்றிலும் ப்ரதாநமாய், பெரியபிராட்டியாருக்கு ந்ருத்த ஸ்தாநமாகையாலே "ரங்கம்" என்கிற திருநாமத்தை யுடைத்தாயிருக்கிற கோயிலிலே, மென்மைகுளிர்த்தி நாற்றங்களை ப்ரக்ருதியாகவுடைய திருவனந்தாழ்வானுகிற படுக்கையிலே, கீழ்ச்சொன்ன குணங்களெல்லாம் ப்ரகாசிக்கும்படி பள்ளிகொண்டருளுகிறவனை. (வேயர் புகழ் வில்லிபுத்தூர்மன் விட்டு சித்தன்) தாம் திருவவதரித்த குடியிலுள்ளாரெல்லாரும், தம்முடைய வைபவத்தைச் சொல்லிப்புகழும்படியாயிருப்பாராய், ஸ்ரீவில்லிபுத்தூருக்கு நிர்வாஹகராய்,

(க) ரங்க-ஸ்த. (உ) திருமா-உ.

ராய்ப்புகழாநிற்பர்களாய்த்து. திருமாளிகைக்கு நிர்வாஹகராய் பெரியபெருமானைத் தம் திருவுள்ளத்திலே வைத்து மங்களாசாஸந ம்பண்ணும் பெரியாழ்வார், மங்களாசாஸநவிரோதி நிவ்ருத்தியை ப்ரார்த்தித்தருளிச்செய்த வாசிகமான திருமாலையை, அநந்யப்ர யோஜநராய் அநந்ய ஸாதநராய் மங்களாசாஸநபரராய் அப்யஸி க்கவல்லார்.

(தூமணியித்யாதி) நிர்த்துஷ்டமான நீலமணிபோலே யிருக்கி றதிருமேனியையுடைய பெரியபெருமானுக்கு(க) "ஸஹஸ்ரவர்ஷ ஸர்வவ்யாபகனுமஸர்வேஸ்வரனை, *அரவத்தமளிப்படியே தந்திரு வுள்ளத்திலே வைத்துக்கொண்டு, *உறகலுறகல்படியே மங்களா சாஸநம் பண்ணும் பெரியாழ்வார். (சொன்னமாலைபத்தும்) அநுப வத்துக்கும் மங்களாசாஸநத்துக்கும் விரோதியானவற்றைப் போக் கிக் கொள்ளுகைக்காக அருளிச்செய்த ஸப்தஸந்தர்ப்ப ரூபமான இப்பத்துப்பாட்டையும்.

(தூயமனத்தனராகி வல்லார்) ப்ராப்யாந்தரத்திலும் ப்ராப காந்தரத்திலும் அந்வயமில்லாமையாலே நிர்த்தோஷாந்த: கரண ராய், இவரபிமாநத்திலே யொதுங்கி அப்யஸிக்க வல்லவர்கள். (தூமணிவண்ணனுக் காளர்தாமே) பழிப்பற்ற நீலமணிபோலே யிருக்கிற வடிவழகையுடையவனுக்கு, (உ) "மணிவண்ணா வுன்சே வடி செவ்விதிருக்காப்பு" என்று ஸர்வகாலமும் மங்களாசாஸநம் பண்ணுமவர்கள் தாங்களாவார். இங்கிருந்த நாளும் பெரிய பெரு மாள் திருவடிகளிலே மங்களாசாஸநம் பண்ணிக்கொண்டிருந்து, ஸரீராவஸாநத்தில் பரமபதத்திலேபோய் நித்யஸூரிகள் திரளிலே

" உறகலுறகல் " என்கிறபடியே மங்களாசாஸநம் பண்ணுமென்றதுக்கு "அரவத்தமளியினோடு மழகியபாற்கடலோடும்" இத்யாதிப்படியே கண்வ ளர்ந்தருளுகிறானை இத்திருவுள்ளத்திலே வைத்துக்கொண்டிருக்கையாலே யென்று கருத்து.

ஜீயர் திருவடிகளேசரணம்.

——[!]——

பத்தாம்திருமொழி அரும்பதம் முற்றிற்று.

(க) ரா-அயோ. (உ) திருப்பல்லா-க.

ரிஷ்யாமி - அஹம்ஸர்வம் கரிஷ்யாமி'' என்று மங்களாசாஸந ரூப கைங்கர்யங்களைப் பண்ணப்பெறுவார்கள். ... ... (க0)



பிள்ளைதிருவடிகளேசரணம்.

பெரியாழ்வார் திருமொழி

நாலாம்பத்து பத்தாம்திருமொழி முற்றிற்று.

---

புகுந்து (க)"சூழ்ந்திருந்தேத்துவர்பல்லாண்டு'' என்கிறபடியே அங்கே யெழுந்தருளியிருக்கிற விருப்பை யநுபவித்து, காலதத்வமுள்ளதனையும் மங்களாசாஸநம் பண்ணிக் கொண்டிருக்கப் பெறுவரென்கை. ... .... ... .... .... (க0)

பெரியஜீயர் திருவடிகளே சரணம்.

பெரியாழ்வார் திருமொழி நாலாம்பத்து

பத்தாம்திருமொழி முற்றிற்று.







ஆழ்வார் திருவடிகளே சரணம்.

——(:)——

# பெரியாழ்வார் திருமொழி அஞ்சாம்பத்து முதல்திருமொழி வாக்குத்தூய்மைப்ரவேசம்.

ஸ்வா;—கீழில் திருமொழியிலே "சொல்லலாம்போதே யுன்னுமமெல்லாம் சொல்லினேன்" என்று திருநாமத்தில் போக்யதையை அநுபவித்தார். "இத்தை அநாதிகாலம் இழக்கைக்கடியென்" என்று பார்த்தவாறே "அதுக்கு ஹேது இதரவிஷயங்களிலே ப்ராவண்யமாகையாலேயாயிருந்தது" என்றுவெறுத்து இப்படிஅயோ

## பெரியாழ்வார் திருமொழி ஐந்தாம்பத்து முதல்திருமொழி.

### வாக்குத் தூய்மை ப்ரவேசம்.

கீழில் திருமொழியிலே—"சொல்லலாம்போதே யுன்னுமமெல்லாம் சொல்லினேன்" என்று திருநாமத்தின் போக்யதையையநுபவித்து, "இத்தை அநாதிகாலம் இழக்கைக்கடியென்" என்று நிரூபித்தவாறே, அதுக்கு ஹேது, "இதர விஷயங்களிலே (க)'ஆவியேயமுதே' என்று திரிகையாலே யிழந்தது" என்று வெறுத்து, இப்போது (உ)"ஆவியையரங்கமாலை" என்றும், (ங) "ஆவியேயமுதே

ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

அரு,—வாக்குப்ரவேசம்;—ஆழ்வார் கீழ்த்திருமொழியிலே பெரியபெருமாள் போக்யதையையும்திருநாமத்தில் போக்யதையையுமநுபவித்து இதுவே அபராதமாக வெண்ணி, தத்க்ஷாமணபூர்வகம் என்வசமன்றிக்கே கரணங்கள உன்போக்யதையிலும் திருநாமத்தில் போக்யதையிலும்விழுகின்றன வென்கிறாரென்றுஸங்கதியையருளுகிறார்(கீழித்யாதி).(திருநாமத்தில்போக்யதையும்) என்றவந்தரம் "அவன்போக்யதையும்"என்று கூட்டுவது, "ஆவியேயமுதே" என்ற ஏகதேசமெடுத்ததுக்கு "எனநினைந்துருகிவவரவர்பணை முலை துணையாபாவியேனுணராதெத்தனை பகலும்பழுதுபோ யொழிந்தன நாள்கள்" என்னுமவையும் நோக்கு. (என்று) என்கிற பதத்துக்கநந்தரம் "திரிகை"என்று சேஷம். இதுக்கு(அதுக்குஹேது)என்றகீழ்பதத்தோடந்வயம். (திரிகையாலே) என்றதுக்கு "முன் இப்படி" என்று சேஷம். (ஆவியை யரங்கமாலை யென்

(க) தி-மொ-க-க-உ. (உ) திருக்குறு. (ங) திருமாலை.

மூ;—

வாக்குத்தூய்மையிலாமையினாலேமாதவாவுன்னை வாய்க்கொள்ளமாட்டேன்
நாக்குநின்னையல்லா லறியாது நானதஞ்சுவ னென்வசமன்று
மூர்க்குப்பேசுகின்றானிவனென்று முனிவாயேலுமென் னாவினுக்காற்றேன்
காக்கைவாயிலுங் கட்டுரை கொள்வர் காரணா கருளக்கொடியானே. (௧)

---

க்யனான நான் இவ்விஷயத்திலே இழிந்து அத்தை தூஷித்தேன்'' என்றும், "அத்தைப்பொறுத்தருளவேணும்'' என்றும் க்ஷமை கொள்ளாநின்றுகொண்டு அவன் போக்யதையிலே தம்முடைய சரணங்கள் மேல்விழுகிறபடியை யருளிச்செய்கிறார்.

அவ;—முதற்பாட்டு. (வாக்கித்யாதி) நான் அஶுத்தனென்றகலாநிற்க, என்னுடைய ஜிஹ்வை உன் பக்கலிலே மேல்விழாநின்றதென்கிறார்.

ஸ்வா;-(வாக்கித்யாதி) உன்னை அநுஸந்திக்கைக்குக்கரணமான வாக்குக்கு ஶுத்தியில்லாமையாலே, வாக்கு அஶுத்தியா

---

யென்றனாருயிரனைய வெந்தாய்'' என்ற, தப்பைப்பொறுத்தருளவேணுமென்று, பெரியபெருமாள் போக்யதையிலே தம்முடைய கரணத்வயமும் மேல்விழுகிறபடியைச் சொல்லுகிறது. ....

வ்யா;—முதற்பாட்டு. (வாக்கித்யாதி) வாக்குக்கு அசுத்தியாவது-பகவத்ஸந்நிதியிலே அஸத்யம் சொல்லுகையும், ப்ரயோஜநாந்

---

றும்) என்றதுக்கு "அழுக்குடம்பெச்சில் வாயால் தூய்மையில் தொண்டனேன் நான் சொல்லினேன் தொல்லை நாமம் பாவியேன் பிழைத்தவாறென்றஞ்சினேற்கு'' என்று அபராதம் பொறுத்தருளவேணுமென்று இவ்வளவும் நோக்கு. (என்றதப்பை) என்றது - என்றவனையநுபவிக்கையாகிற தப்பையென்றபடி. (பொறுத்தருளவேணும்)என்றது-பாவியேனென்று தம்முடைய தோஷத்தை அநுஸந்திக்கையாலே அர்த்தஸித்தம். "பொறுத்தருள வேணும்''என்றவநந்தரம "திருமங்கைமன்னனும்தொண்டரடிப்பொடியாழ்வாரு மருளிச் செய்தாப்போலே இவரும் உன்னை அநுபவிக்கையாகிற அபராதத்தைப் பொறுத்தருளவேணுமென்று சொல்லா நின்றுகொண்டு'' என்ற இவ் வாக்யம் "பெரிய பெருமாள்'' என்றதுக்குக்கு முன்பு அநுஸந்திப்பது. (பெருமாள்போக்யதையிலே) என்றது-திருநாமத்தின் போக்யதைக்குஉபலக்ஷணம்.

அரு;—முதற்பாட்டு. (வாக்குத்தூய்மையித்யாதி) வாக்குத்தூய்மையில்லாதபோது அஶுத்தி ஸித்தமாகையால் அத்தையருளுகிறார் (வாக்குக்கித்

வது - பகவத்ஸந்நிதியிலே அஸத்யம் சொல்லுகையும், பரஸ்தோத்ரம் பண்ணுகையும், ப்ரயோஜநத்துக்காக பகவத்ஸ்தோத்ரம் பண்ணுகையும் - வாக்கு - சொலவு. (மாதவாவுன்னை வாய்க்கொள்ளமாட்டேன்) ஶ்ரிய:பதியான வுன்னை என்வாக்குக்கு விஷயமாக்க விளையாநின்றேன், ஆனால் தவிருகிறீரென்ன; (நாக்கு நின்னையல்லாலறியாது) ரஸநேந்த்ரியமானது ஸர்வரஸமான வுன்னையல்ல

---

தைக் ‡கணிசிக்கையும், பரஸ்தோத்ரம் பண்ணுகையும். (க) "பாவியேன் பிழைத்தவாறு." வாக்கு-சொலவு. (மாதவாவுன்னை வாய்க்கொள்ளமாட்டேன்) திருநாமம் சொல்லுகைக்கு முடிந்தவதிகாரிகள் பிராட்டியும் நித்யஸூரிகளுமிறே. (க)["பரதனுந்தம்பி" இத்யாதி.] உன்போக்யதைக்குத் தோற்றுப் பெரியபிராட்டியார் தொடக்கமானார் சொல்லும் பாசுரத்தை, இதரவிஷயங்களின் போக்யதைக்குத்தோற்று ஸ்தோத்ரம் பண்ணின நாக்காலே சொல்லமாட்டேன், "மாட்டீராகில் தவிரும்" என்ன; (நாக்குநின்னையல்லாலறியாது) ரஸமறிந்தநாக்கு. *ஸர்வரஸனான நின்னையல்லாலறியாது.

---

யாதி), (பகவத்ஸந்நிதியிலே) என்றது - இவை மூன்றும் அதிக்ரூரமென்று தோன்றுகைக்காக. (கணிசிக்கையும்) என்றது-இச்சித்துக்கேட்கையுமென்றபடி, தூய்மையில்லாமையினாலே உன்நாமம் சொல்லமாட்டேனென்கைக்கு இது அயுக்தமோ, இப்படி சொன்னபேர்தானுண்டோ வென்னவருளுகிறார் (பாவியேனித்யாதி). தூய்மையில்லாதே திருநாமத்தைச்சொல்லி இப்படிப்பட்ட பாவியேனான நான்பிழைத்தவாறு, தப்புச்செய்த ப்ரகாரமென்று திருமங்கையாழ்வார் அநுஸந்திக்கையாலே அயுக்தமென்று கருத்து. "மாதவர்" என்றும், "கருளக்கொடியான்" என்றும் ஸம்போதிக்கையாலே வாய்க்கொள்ளவதிகாரிகள் அவர்களே, வாக்குத்தூய்மையுண்டாகையாலே, அதில்லாமையாலே நான்வாய்க்கொள்ளமாட்டேனென்கிறாரென்று தாத்பர்யமருளுகிறார் (திருநாமமித்யாதி வாக்யத்வயத்தாலே). (முடிந்த) என்றது-அதிகாரத்துக் கெல்லை நிலமானவென்றபடி. பரதனுமென்றெடுத்த பாசுரத்துக்கு "இரவு நண்பகலும் துதிசெய்ய நின்ற" என்றவளவுக்கும் நோக்கு,(இத்யாதி) என்றதுக்கநந்தரம்"ப்ரகாரேண அவர்களே அதிகாரிகளாகையாலே" என்று கூட்டிக்கொள்வது.

(ரஸமறிந்த) என்றவாக்யத்துக்குப்ராதிகூல்யார்த்தம்சா(வா)பு,ஶப்தோச்சார

---

இதுமுதல் பூர்வர்கள்வ்யாக்யாநம் (க) திருக்குறு-கஉ. (உ) தி-மொ-உ-ரு-எ.

தறியாது. அது விஷயாதிசமாய்ப்புறம்போனாலும் அறிகிறதில்லை' ஆனால் நீரும் அத்தோடே கூடினீரோவென்ன, (நானதஞ்சுவனென் வசமன்று) நான்ஸ்வதோஷத்தை அநுஸந்தித்து அஞ்சாநின்றேன்; அது ரஸஜ்ஞையாகையாலே மேல்விழாநின்றது. என்வசத்தில் வருகிறதில்லை.

இங்ஙன் சொல்லப்பெறுமோவென்ன, (மூர்க்கித்யாதி). என்

---

"அத்தால் வரும் குற்றமும் உம்மதன்றோ" என்ன; அது விஷய தோஷம். (க) "அகலகில்லேன்" என்றது மார்வின் குற்றமானாப் போலே. "ஆனால் நீரும் நாக்கோடே கூடிச்சொல்லும்" என்ன; (நான் அதஞ்சுவன்) நாக்கின்தோஷத்தையநுஸந்தித்து நான் அஞ் சாநின்றேன். அது ரஸஜ்ஞமாகையாலே மேல்விழாநின்றது, கர ணியான உம்முடைய வசமாக்கினீரோவென்ன; அது என்வசமன் று. உன்வசம்.

"நாக்கு நின்னையல்லாலறியாது" என்பது, "நானதஞ்சு வன்" என்பதாகாநின்றீர், இதுமூர்க்கர்சொல்லும் பாசுரமா யிராநின்றதீ! என்ன; (மூர்க்குப்பேசுகின்றானிவனென்று முனிவா

---

னத்தால் வருமாநந்தத்தை யறியும் நாக்கு ஆநந்தமயனானவனுடைய திரு நாமமல்லா லறியாதென்று ப்ராக்ருதார்த்தம். உக்திப்ரத்யுக்தி முகத்தாலே "நான் அது அஞ்சுவன்" என்றதுக்கு அவதாரிகை (அத்தாலித்யாதி),(உம்ம தன்றோவென்ன) என்றதுக்கு-கரணீ நீராகையாலேயென்று கருத்து.(விஷய தோஷம்) என்றது-வாக்குக்கு விஷயமான வுன் வைலக்ஷண்ய மென்றபடி. "நானதஞ்சுவன்" என்றதுக்கு "தூய்மையில்லாமையினாலே" என்றத்தைக் கடாக்ஷித்து ஹேதுபூர்வகமர்த்தமருளுகிறார் (நாக்கினித்யாதி), நாக்கான தன்தோஷத்தைக்கண்டஞ்ச வேண்டாவோ வென்னவருளுகிறார் (அதித் யாதி), ரஸத்தையறிந்ததாகையாலே ஆசைமிகுத்துத்தன்தோஷத்தை அநு ஸந்தித்ததல்லவென்று கருத்து. மேலுக்கவதாரிகை (கரணீத்யாதி), என்வச மென்றத்தோடு "அது" என்றெடுத்தது "நானதஞ்சுவன்" என்றவிடத்திலே அதுவென்றத்தை இங்கந்வயித்துக் கொள்வதென்னும் கருத்தாலே. அங்கே "அது" என்றதுக்கர்த்தமருளிச் செய்யாமையால் இங்ஙன கொள்ளவேணும். "என்" என்றதுக்கு வ்யாவர்த்த்யமருளுகிறார் (உன்வசம்)என்று.

மேலுக்கவதாரிகை (நாக்கித்யாதி), "நானதஞ்சுவன்" என்பதென்று

பாசுரத்தைப்பார்க்கில் மூர்க்கர் சொல்லும் பாசுரம்போலே தோற்றி நீ சீறினாயேயாகிலும். (என் நாவினுக்காற்றேன்) உன்முனிவுக்காற்றலாம்; என் நாவுக்காற்றப்போகாது. என்னால் தகையப்போகிறதில்லை. ஆனால் அது நமக்கு அவத்யமாகாதோவென்ன; (காக்கையித்யாதி), பெரியவர்கள். குற்றமாகக் கொள்ளாதவளவேயன்றிக்கேகுணமாகக்கொள்வர்கள்; காகமானது தனக்கு வேண்டினபடி கூப்பிடவற்றை அறிவுடையார் தங்களுக்கு நன்மைக்கு ஹேதுவென்று கொள்வர்கள். (கட்டுரை) நற்சொல்லு, அப்படி

---

யேயும்) என்பாசுரத்தைப்பார்த்தால் மூர்க்கர்சொல்லும் பாசுரம் போலே தோற்றி, முனிகைக்கு யோக்யதையுண்டு; ஆகிலும் (என்னாவினுக்காற்றேன்) உன்முனிவுக்கு ஆற்றலாம், என்னாவுக்கு ஆற்றப்போகாது. ஆனால் அது நமக்கு அவத்யமாகாதோ வென்ன; (காக்கைவாயிலும் கட்டுரைகொள்வர்) அறிவுடையார் குற்றமாகாதவளவன்றிக்கே குணமாகவும் கொள்ளுவர்கள். அது ஓரிடத்தேயிருந்து தனக்குவேண்டினது பிதற்றிப்போகவும், அத்தை அறிவுடையார், "நமக்கு நன்மை சொல்லுகிறது" என்று கொள்ளுவர்களிறே. (கட்டுரை)நற்சொல்லு. அப்படியே நான் வேண்டிற்

---

"அது" என்றத்தைக்கூட்டி யெடுத்தது பாடபலத்தாலே. (மூர்க்கன்சொல்லும் பாசுரம்) என்றதுக்கு "நாக்குச்சொல்லும், நான்சொல்ல வஞ்சுவன்" என்றவசநத்வயமும் "மாதாமேவந்த்யா" என்னுமாபோலே வ்யாஹதார்த்தமாகையால் அஜ்ஞன் சொல்லும் வார்த்தையென்று கருத்து. கீழெடுத்த ப்ரதீகத்துக்குத் தாத்பர்யத்தை ஸூசிப்பித்துக்கொண்டு மேலுக்கவதாரிகை (என்பாசுரத்தை யித்யாதி). (போலே தோற்றி) என்றது-என்புத்தி பூர்வகமாக நாக்குச் சொல்லுகையன்றிக்கே அவஶமாகச் சொல்லுகையால் "நாக்குச்சொல்லும் நான் சொல்லவஞ்சுவன்" என்றதுக்கு வ்யாஹதியில்லையென்னும் கருத்தாலே. வ்யாவர்த்த்யபூர்வகம் தாத்பர்யமருளுகிறார் (உன்னித்யாதி). (ஆற்றலாம்) பொறுக்கலாமென்றபடி. (ஆனால்) என்றது - ஆற்றமாட்டீராகிலென்றபடி. அதென்றது - துஷ்டநாக்கு ஸ்துதிக்குமதென்றபடி, (குற்றமாகாத வளவன்றிக்கே) என்றது-குற்றமாகக் கொள்ளாதவளவன்றிக்கே யென்றபடி. (அறிவுடையார்) என்றது- ஶகுநஶாஸ்த்ரஜ்ஞர். காக்கைவாயிலே தீமைக்கு ஸூசகமான சொல்லுண்டாகிலும் இங்கு நற்சொல்லே விவக்ஷிதமென்கிறார் (கட்டுரையித்யாதி), கீழ்த்ருஷ்டாந்தத்

மூ; —

சழக்குநாக்கொடு புன்கவிசொன்னேன் சங்குசக்கரமேந்துகையானே
பிழைப்பராகிலுந் தம்மடியார்சொற் பொறுப்பது பெரியோர்கடனன்றே [து
விழிக்குங்கண்ணிலேனின்கண்மற்றல்லால்வேறொருவரோ டென்மனம்பற்றா
உழைக்கோர்புள்ளிமிகையன்று கண்டாயூழியேழுலகுண்டுமிழ்ந்தானே. (உ)

---

யே நான் வேண்டிற்றுச்சொன்னத்தையும் குணமாக்கிக் கொள்ள வேணும். நமக்கப்படி செய்யவேண்டுகிறதென்னென்ன. (காரணுகருளக்கொடியானே) உடையவனுகையாலே எல்லாம் பொறுக்கவேணும், இதுக்கு உத்பாதகனானவனல்லேயோ? இல்லாதவற்றை யடையவுண்டாக்குகைக்கும் அபராதக்ஷாமணத்வத்துக்கும் ரக்ஷகத்வத்துக்கும் கொடிக்கட்டியிருக்குமவனல்லேயோ? .... (க)

அவ;—இரண்டாம்பாட்டு. (சழக்கித்யாதி) உனக்கடிமையான நான் அயோக்யமான நாவாலே சொன்னவித்தைப் பொறுத்தருளவேணுமென்கிறார்.

ஸ்வா;—(சழக்கித்யாதி) பிறரைமுன்பு ஸ்துதித்துப்போருகையாலே அஶுத்தமான நாவைக்கொண்டு புல்லிதானகவிகளைச் சொ

---

ன்னத்தையும் குணமாக்கிக் கொள்ளவேணு மென்ன: "நான்கைக்கொள்ள வேண்டுகிறதென்" என்ன; நிரபேக்ஷனுகையாலே யென்கிறார் மேல்—(காரணு) கருளக்கொடியானே) ஜகத்தையுண்டாக்கிற்று அவர்கள் பக்கலிலே ஒருகார்யங் கொள்ளுகைக்கிறே. (க) "விவித்ராதேஹஸம்பத்தி:- விசித்ராதேஹஸம்பத்தி:" ["வாழ்த்துவார் பலராக" இத்யாதி.] ரக்ஷகத்வத்துக்குக் கொடிக்கட்டியன்றோ கிடக்கிறதென்கிறார் - (காரணுகருளக்கொடியானே) உடையவனுகையாலே எல்லாம் பொறுக்கவேணும். .... (க)

வ்யா;—இரண்டாம்பாட்டு. (சழக்கு) பொல்லாங்கு. நாக்குக்கு தோஷமாவது - ஸ்வோத்கர்ஷம் சொல்லுகையும், பகவத்

---

தால் பலிதத்தை தார்ஷ்டாந்திகத்திலே காட்டாநின்றுகொண்டு மேலுக்கவதாரிகை யிடுகிறார் (அப்படியேயித்யாதி). காரணுவென்றதுக்குத்தாத்பர்யாந்தரம் (காரணுவித்யாதி). ... ... ... ... (க)

அரு;—இரண்டாம்பாட்டு. (சழக்கித்யாதி). புன்மை - தோஷமாய், இவர்கவி-லக்ஷணுபேதமாயிருக்க; இப்படி சொல்லக்கூடுமோவென்னவருளு

ன்னேன். சமுக்கு-பொல்லாங்கு. (புன்கவி) உனக்கு அநர்ஹமாயிருக்கை. (சொன்னேன்) நெஞ்சிலே நினைக்கையும் கூட அவத்யமாயிருக்க அதுக்குமேலே சொல்லுவதும் செய்தேன். (சங்கித்யாதி) கையுமாழ்வார்களுமான வழகைப்பேசநான் அர்ஹனோ? வெறும்புறத்திலே ஆலத்தி வழிக்கவேண்டினகையில் பூவேந்தினைப்போலே ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும் திருவாழியையும் தரித்தவனே! இப்படி அறிந்துவைத்துச் சொல்லிற்றென்கொண்டென்ன; (பிழைப்பித்யாதி) தப்பச்செய்தார்களாகிலும் அநந்யார்ஹசேஷபூதர் செய்தவற்றைப் பெரியோர்க்குப் பொறுக்கை உசிதமென்று நினைத்துச்சொன்னேன்.

---

பாகவத ஸந்நிதியிலே அஸத்யஞ்சொல்லுகையும், பரஸ்தோத்ரம் பண்ணுகையும். (புன்கவிசொன்னேன்) கவிக்குக்குற்றமில்லை, நான் சொல்லுகையாலே குற்றமாகச்சொன்னேன். நெஞ்சாலேநினைக்கையே பிடித்து அவத்யமாயிருக்க; சொல்லுவதுஞ்செய்தேன். (சங்குசக்கரமேந்துகையானே) இப்படி அநுதபிக்கைக்கடி - உன்ஸர்வாதிகத்வம்; அதுக்கு அடையாளமிறே-கையிலேந்தின ஆழ்வார்கள். (பிழைப்பராகிலுமித்யாதி) நம்பெருமையையும் உம்முடைய சிறுமையையும்பார்த்தால், பின்னைச்சொல்லப்பெறுவீரோவென்ன; (பிழைப்பராகிலும்) தப்பச்செய்தார்களேயாகிலும், (தம்மடியார் சொல்) அநந்யார்ஹசேஷபூதர் சொன்னசொல்லாகையாலே பெரியோர்க்குப் பொறுக்கைக்கு உசிதம், அடியாராகையாலும் பொறுக்கவேணும், பெருமையாலும் பொறுக்கவேணும். தாம்பொறுக்கிறோம், நம்மையொழிய ரக்ஷகர் உமக்குப்புறம்பு அற்றிருந்ததோவென்ன;

---

கிறார் (கவிக்கித்யாதி), நினைத்தேனென்றதே சொன்னேனென்றதுக்குத் தாத்பர்யமருளுகிறார் (நெஞ்சாலித்யாதி), (நினைக்கையே பிடித்து) என்றது-ஜ்ஞாநேச்சாப்ரயத்நங்கள் மூன்றையும் சொல்லுகிறது. நீர் அநுதபிக்கைக்கு விஷயம் விலக்ஷணமோ வென்னவருளுகிறார் (இப்படியித்யாதி). அதறிந்தபடியெங்ஙனே யென்னவருளுகிறார் (அதுக்கித்யாதி), பிழையென்று தப்பாய், (அத்தைச்செய்தார்களேயாகிலும்) என்றதுக்கு ப்ரஸக்தியைக் காட்டியர்த்தமருளுகிறார் (நம்பெருமையித்யாதி). கடனென்றதினர்த்தம்(உசிதம்)என்றது.

இங்ஙனே செய்யவேண்டுகிறதென்? உமக்குப்புறம்பு விஷயமி ல்லையோவென்ன; (விழிக்குமித்யாதி). உன்னுடைய குளிர்ந்த கடாக்ஷமொழிய வேறு குளிரநோக்குவாரை யுடையேனல்லேன். (வேறித்யாதி)நீகுளிரநோக்காதொழிந்தாலும் வருத்தவுன்னையொ ழிய என்மனஸ்ஸு புறம்புபற்றாது. ஆனால் உம்மைக்கைக்கொள்ளு கை நமக்கவத்யமன்றோவென்ன; (உழைக்கித்யாதி). அது நமக்கவ த்யமாகாது. அபராதஸஹனென்றதுவே உனக்கு நிரூபகமாமெ ன்கிறார். புள்ளிமானுக்கு ஒருபுள்ளியேறி என், குறைந்தென்?; ஸர்வாத்மாக்களுடையவும் அபராதங்களைப் பொறுக்கிற வுனக்கு என்னுடைய வபராதக்ஷாமணம் அவத்யமாகப்புகுகிறதோ; அத வா,"இது உமக்கு அவத்யமன்றோ நாம் பொறுத்தாலும்" என்ன;

---

(விழிக்குங் கண்ணிலேன் நின்கண்மற்றல்லால்) உன்னுடைய கடாக்ஷமொழிய, வேறு நோக்குகைக்கு ஒரு மறுவிழியுடையே னல்லேன்; உன்னையொழிய வேறொரு ரக்ஷகரையுடையேனல்லேன் நம்மைப்போலே ரக்ஷகருமாய்போக்யருமா யிருப்பாருண்டா பற்றக்குறையில்லையே என்ன; (வேறொருவரோடென்மனம் டமு து) குணக்ருததாஸ்யமன்றிக்கே ஸ்வரூப ப்ரயுக்தமான தாஸ்ய மாகையாலே, புறம்புபோகாது. உமக்குப் புறம்பு போக்கில்லை யாகில், உம்மைக் கைக்கொண்டவாறே நமக்கு அவத்யமாகாதோ வென்ன; (உழைக்கோர்புள்ளி மிகையன்றுகண்டாய்) புள்ளிமானு க்கு, ஒருபுள்ளி ஏறியென், குறைந்தென்; ஸர்வாத்மாக்களுடைய வும் அபராதங்களைப்பொறுக்கிற வுனக்கு என்னுடைய அபராதம் பொறுக்கை அவத்யகமாகப் புகுகிறதோ. குற்றவாளரை அங்கீகரிக்

---

"நின் கணல்லால் மற்றுவிழிக்கும் கண்ணிலேன்" என்றந்வயித்தர்த்த மருளுகிறார் (உன்னுடைய வித்யாதி). இத்தால் நான்வேறொருவரை ரக்ஷ ராக வெண்ணிப்பற்றினேனல்லே னென்றதாய்த்து. (போக்யருமாய்) என் றது - கவிசொல்லுகைக்கடியான வைலக்ஷண்யத்தைச் சொன்னபடி. (உனக் கவத்யமாகப் புகுகிறதோ) என்றது - பொறுக்கை அவத்யமுமென்று, பொ றுமை அதிஶயமுமன்றென்றபடி. - மேலுக்கவதாரிகை (குற்றவாளரையித் யாதி). ... ... ... ... (உ)

(உழைக்கித்யாதி). புள்ளிமானுக்கு ஒருபுள்ளியேறி யென்குறைந்தென்; முன்பேஸாபராதி; அத்தோடே இதுவும்கூட தேவர்க்கு மைக்கு விஷயமாகிற தென்றுமாம். நாம் அப்படி அங்கீகரித்ததுண்டோவென்ன; (ஊழியேழித்யாதி) ஸம்ஸாரிகளில் உனக்கபராதம் பண்ணுதிருப்பாருண்டோ? அத்தைப்பாராதேயன்றோ அவர்களை வயிற்றிலேவைத்துப் புறப்படவிட்டு ரக்ஷித்தது. அப்படி இதுவும் செய்தருளவேணும். .... ... (உ)

---

கையன்றோ உனக்குநிரூபகம். "நாம்அப்படிஅங்கீகரித்ததுண்டோ" என்ன; உண்டென்கிறார் - (ஊழியேழுலகுண்டுமிழ்ந்தானே) ஸம்ஸாரிகளில் உனக்கு அபராதம் பண்ணுதிருப்பாரொருவருண்டோ; அவர்களபராதங்களைப் பாராதேயன்றோ அவர்களை வயிற்றிலேவைத்து ரக்ஷித்தது; அப்படியே என்னை ரக்ஷிக்கவேணுமென்கிறார் (உ)

அவ;— மூன்றாம்பாட்டு. (நன்மைதீமையித்யாதி) "காரணு" என்று - நம்முடைய ஸ்ருஷ்டிக்கு ப்ரயோஜநம் "வாழ்த்துவார் பலராக" என்றீர், அதுவும் மாகுணும்படியன்றோ நம்முடையபடியென்ன; அது ஒக்கும்; அப்படியன்றே நான், "கோயிலில்வாழும் வைட்டணவன்" என்னும் வன்மைகண்டாயென்கிறார்.

---

அரு,—மூன்றாம்பாட்டு. (நன்மை) "நன்மைதீமைகளித்யாதி" என்றவநந்தரம் "வ்யாக்க்யாயதே" இதிசேஷம். முதற்பாட்டோடே ஸங்கதியருளுகிறார் (காரணுவித்யாதி). (பலராகவென்றீர்) என்னுமளவுக்கு பலருஜ்ஜீவிக்கும்படி ஸ்துதிக்கைக்காக ஜகத்ஸ்ருஷ்டி நீ பண்ணுகையாலே உன்னுலே ஸ்ருஷ்டமான வென்துஷ்டமான நாவும் ஸ்துதிக்கையாகிற வபராதத்தைப் பொறுக்கவேணு மென்று நின்றுரென்று கருத்து, அதுவுமித்யாதிக்கு பலரப்படி ஸ்துதிக்கையும் நமக்கு மாலிந்யாவஹமாம்படி நம்முடைய வைலக்ஷண்யமிருக்கையாலே நாம் அதுக்காக ஜகத்ஸ்ருஷ்டி பண்ணினோமோ, ஆகையால் உம்முடைய துஷ்டநாவுஸ்துதிக்கையாகிற வபராதம்க்ஷமிக்கையாகிற நிர்பந்தமில்லை யென்று கருத்து. ஒக்குமித்யாதிக்கு உன்வைலக்ஷண்யமப்படிப்பட்டதே, அதில் குறையில்லை. நீ ஜகத்ஸ்ருஷ்டி பண்ணிற்று மங்ஙனேயென்று, ஆகிலும் என்னுடையநாச் செய்யுமபராதம் உனக்கு அவஶ்யம் பொறுக்கவேணும்; உன் விஷயவாஸியான வைஷ்ணவனென்னுமத்தாலேயென்று கருத்து.

௩.—

நன்மைதீமைக ளொன்றுமறியேன்நாரணனென்னு மித்தனையல்லால்
புன்மையாலுன்னைப்புள்ளுவம்பேசிப்புகழ்வானன்று கண்டாய்திருமாலே
உன்னுமாறுன்னை யொன்றுமறியே னோவாதேநமோநாரணனென்பன் [யே.]
வன்மையாவதுன் கோயிலில்வாழும் வைட்டணவனென்னும்வன்மைகண்டா

---

அ:—மூன்றாம்பாட்டு. (நன்மையித்யாதி) உன்னுடையவடிமைக்கடியேனென்ன; உன்கோயிலில் வாழும் வைஷ்ணவனென்னும் வன்மை யென்கிறார்.

ஸ்வா;—(நன்மையித்யாதி) நான் திருநாமத்தைச்சொல்லுகை அத்தலைக்கு நன்மையாய்த்தலைக்கட்டுகிறதோ? தீமையாய்த்தலைக்கட்டுகிறதோ? அறிகிறிலேன். இவனைப்பார்த்தால் தோஷமாய், அவனைப்பார்த்தால் குணமாயிருக்குமிறே. (நாரணனென்னுமித்தனையல்லால்) (க) "நல்கத்தானாகாதோ நாரணனை" என்று சொ

---

வ்யா. (நன்மையித்யாதி) நான் திருநாமம் சொல்லுகை அத்தலைக்கு நன்மையாய்த் தலைக்கட்டுகிறதோ, தீமையாய்த் தலைகட்டுகிறதோ, அறிகிறிலேன். இவனைப்பார்த்தால் தோஷமாய், அவனைப்பார்த்தால் குணமாயிருக்கும்; இத்தலையைப்பார்த்தால் அபராதமாய், அத்தலையைப் பார்த்தால் அபராதஸஹமாயிருக்கும். (நாரணனென்னு மித்தனையல்லால்) (க) "நல்கத்தானாகாதோ, நாரணனைக் கண்டாக்கால்" என்று - அபராத ஸஹத்வத்தைகாட்டும் திருநாமமிறே. ஸம்ஸாரிகள் குற்றங்களைப் பொறுத்து விடமாட்டாதே நிற்கிறவிடமிறே.

---

இப்படிஸந்தேஹிக்கைக்கு ஹேதுவைக் காட்டுகிறார் (இவனையித்யாதி). கீழ்வாக்யத்தை விவரிக்கிறார் (இத்தலையித்யாதி). இத்தலை - சேதநன், வாக்குத்தூய்மையில்லாத விவனைப்பார்த்தால் அபராதமாமென்று கருத்து. (அத்தலையைப்பார்த்தால்) என்றது - அபராத ஸஹனானவனைப் பார்த்தாலென்றபடி. திருநாமம் அபராத ஸஹமானவழி யெங்ஙனே யென்னும் சங்கையிலே அவனுடைய வபராத ஸஹத்வத்தை ப்ரதிபாதிக்கையாலே யென்றத்தைக் காட்டுகிறார் (நல்கவித்யாதி). இப்பாசுரத்தில்தான் நாராயணபதம்அபராத ஸஹத்வத்தைக் காட்டும் ப்ரகாரம் எங்ஙனே யென்னவருளுகிறார் (ஸம்ஸாரிகளித்யாதி). நாரங்களை அயநமாகவுடைய வனென்னும் பஹுவ்ரீஹி

---

(க) தி-வாய்-௧-௪-௫,

ல்லுகிறபடியே இந்நாராயணபதத்துக்கு அபராத ஸஹத்வம் அர்த்தமாகிறது - அபராதங்களைப் பொறுக்கையைத் திருநாமமாக வுடையவனேயென்னுமதொழிய. (புன்மையித்யாதி) தண்மையாலே ஸர்வாதிகனான வுன்னைக்ருத்ரிமம் சொல்லிப்புகழுமவனல்லேன். (திருமாலே) பிராட்டி முன்னாக விழிந்தவெனக்கு அபராதத்துக்கு அஞ்சவேணுமோ ?

(புன்மையால்) தண்மையாலே, (உன்னை) ஸர்வாதிகனான வுன்னை, (புள்ளுருவம்பேசி) க்ருத்ரிமம்சொல்லி. *என்கொள்வனுன்னை விட்டென்னும் வாசகங்கள் சொல்லுகிறேனல்லேன். புன்மை-ப்ரயோஜநத்தை ஆசைப்படுகை; நன்மை - மோக்ஷத்தை ஆசைப்படுகை. (க) "பெருமக்கள்" என்று (உ) - *பேராளன் பேரோதும் பெரியோரே (ங)" மாசூணுவான் கோலத்தமரர்கோன்." (திருமாலே) (ச) " மைதிலியும் துதிசெய்ய நின்ற" என்று - ஸ்தோத்

யாலே அந்தர்யாமித்வம் தோன்றுகையால் அது அபராதங்களைப் பொறுவிடில் கூடாமையால் பொறுதவிடம் அந்தர்யாமித்வமாய் அர்த்தாத்நாராயணபதம் அபராத ஸஹத்வத்தைக்காட்டுமென்று திருவுள்ளம்.

"புகழ்வானன்றுகண்டாய்" என்றதுக்கு ப்பாசுரமுகேந ஸப்தார்த்தமருளுகிறார் (என்கொள்வனித்யாதி). அதாவது - "வன்கள்வனேன்" என்கிறபடியே, அங்குக்கபடமாகச்சொன்னேனென்னுமாபோலே இங்கொருப்ரயோஜநத்தை ஆசைப்பட்டுக் கபடமாகச்சொல்லுகிறேனல்லேன்; பகவல்லாபத்தை யாசைப்பட்டிருந்த நான் ஸத்தை குலையாமைக்குத் திருநாமத்தைச் சொன்னேனென்கை. புன்மைக்குப்ரதிகோடியையும் காட்டாநின்று கொண்டு விவரிக்கிறார் (புன்மையித்யாதி). பகவத்பரராயிருக்குமவர்கள் ஸத்தாஸித்த்யர்த்தமாகத் திருநாமத்தைச் சொல்லுவர்களோ வென்னவருளுகிறார் (பெருமக்களித்யாதி). எமக்கும் பெருமக்கள் "என்று சொல்லவல்லபகவத்பரர் பேராளன்பேரோதும் பெரியோர்" என்று திருமங்கை மன்னன் சொன்னவர்களும் அபி (ஸி)ந்தரென்று திருவுள்ளம். ப்ரயோஜநாந்தரபரர் அவனை ஸ்துதிப்பர்களாகில் அது அவ ய மென்னுமதுக்கு ஸம்வாதம் காட்டுகிறார் (மாசூணவித்யாதி). (திருமாலே) என்று இவ்விடத்தில் ஸம்போதிக்கைக்கு ப்ரயோஜநோக்தி முகேநதாத்பர்யமருளுகிறார் (மைதிலியுமித்யாதி வாக்யத் வயத்தா

(க) தி-வாய்-ங-எ-ரு. (உ)திருவாய்-எ-௮-ச. (ங)தி-வாய்-ங-க அ. திருவாய்-உ-ங-எ.

(உன்னுமாறித்யாதி)ஸாஸ்த்ரோக்தமானக்ரமத்திலே உன்னை அநவரதபாவனை பண்ணவறிகிறிலேன். (ஓவாதித்யாதி) அநந்யப்ரயோஜநனுகையாலே ஓநாளுமிடைவிடாதே திருமந்த்ரத்தை

---

ரத்துக்கு அதிகாரி பிராட்டிபிறே. ப்ரீதிக்குத்தோற்றுச் சொல்லுமவளிறே. (க) "தன்னாகத் திருமங்கை" என்று - அவனுக்கு அநுபவம் ஸத்தாஸித்தியானாப்போலே, எனக்கும் திருநாமஞ்சொல்லுகை ஸத்தாஸித்தி. அன்றிக்கே, ஸர்வாதிகத்வம்; (உ) "வானவர் சிந்தையுள் வைத்துச் சொல்லும்செல்வன்." ப்ரயோஜநத்தோடே சொல்லில் பகவந்மந்த்ரங்களும் கழியுண்கிறதிறே.

இதரபலங்களைவிட்டு மோக்ஷத்துக்கு உறுப்பாகச் சொல்லப்பாரும் என்ன; (உன்னுமாறுன்னை யொன்றுமறியேன்) ஸாஸ்த்ரோக்தமான நிரந்தர ஸ்ம்ருதிபண்ண வறியேன். (ஓவாதே நமோ

---

லே). இத்தால் பிராட்டிபோலவார் அதிகாரிகளொழிய நான் அதிகாரியல்லேனென்று கருத்து. நீர் அதிகாரியாகாவிடில் திருநாமத்தைச் சொல்லுவானென்னென்கிற ஸங்கையிலே த்ருஷ்டாந்த பூர்வகம் பரிஹாரமருளுகிறார் (தன்னாகவித்யாதி). அன்றிக்கே திருமாலே யென்றதுக்கு த்ருஷ்டாந்த மென்று தாத்பர்யாந்தரமாகவுமாம். (தன்னாக) தானுளாக. "தங்கிய சீர்மார்பர்க்கு" என்னுமளவும் விவக்ஷிதம். திருமாலே என்றதுக்கு இன்னமொருதாத்பர்யம் (அன்றிக்கேயித்யாதி). (ஸர்வாதிகனை நான் ஸ்துதிக்கைக்கர்ஹனல்லேன்)என்றதுக்கு த்ருஷ்டாந்தம் காட்டுகிறார் (வானவரித்யாதி). "வானவர் சிந்தையுள்வைத்துச் சொல்லும் செல்வனைச்சிந்தையுள் வைப்பன் சொல்லுவன் பாவியேன் என்னுமளவுங் கண்டுகொள்வது. நீர் ஸத்தை குலையாமைக்குத்திருநாமம் சொன்னேனென்னு மதுக்கு அடையாளமென்னென்ன வருளுகிறார் (ப்ரயோஜநேத்யாதி).

மேலுக்கவதாரிகை - (இதரேத்யாதி). இத்தால் ப்ரயோஜநாந்தரத்துக்காகாவிட்டால் மோக்ஷத்துக்குஸாதநாங்கமாகச்சொல்லுமென்றதாய்த்து. (விட்டு) என்றவநந்தரம் "இருக்கிறீர்" என்று சேஷம். "உன்னையுன்னுமாறு-நினைக்கும் ப்ரகாரமொன்றுமறியேன்" என்று ஸப்தார்த்தமாய் தாத்பர்யமருளுகிறார் (ஸாஸ்த்ரேத்யாதி). ஸாதநமானபக்தியை யறியாமையால் ததங்கமாகச் சொல்லமாட்டேனென்று கருத்து. ஓவாதே யென்றதுக்கு வ்யாவர்த்

---

(க)நா-தி-அ-ச. (உ) தி-வாய்-க ௧௦-எ.

அர்த்த ஸஹிதமாகவநுஸந்திப்பன். வன்மையாவது-எனக்குப(ஃப)லமாகவுள்ளது(உன்கோயிலிலித்யாதி) உன் எல்லைக்குள்ளே வர்த்திக்கிறேனென்னும் ப(ஃப)லமிறே எனக்குள்ளது. (௧) "ஹவஷிஷயவாஸிநः - பவத்விஷயவாஸிநः" என்னக்கடவதிறே. பகவதபிமாநமுள்ளதேசத்திலே வர்த்திக்கையிறே இவ்வாத்மாவுக்குத்தஞ்சம். (௩)

அவ;—நாலாம்பாட்டு. (நெடுமையித்யாதி) அத்தேசவாஸத்தாலே தமக்குண்டான அநந்யப்ரயோஜநத்வத்தை யருளிச்செய்கிறார்.

---

நாரணனென்பன்) ப்ரயோஜநம் பெற்றவாறே குலையும் ஐஸ்வர்யகாமர்க்கு; அங்கி கைப்பட்டவாறே குலையும் உபாஸகர்க்கு; இதுதானே ப்ரயோஜநமாகையாலே, ப்ரபந்நர்க்குக் குலையாது. (ஓவாதே) இதுமாறில் எனக்கு ஸத்தை குலையும். "சொல்லாத போது ஸத்தை குலையுமென்பது, சொல்லில் உனக்கு அவத்யம் என்பதாகாநின்றீர், நல்லவன்மையாயிருந்ததீ! "என்ன;" அவ்வன்மைக்குக்குறையென்" என்கிறார்மேல் (உன்கோயிலிலித்யாதி) வன்மை - மிடுக்கு. "கோயிலில்வாழும்" என்று - புறம்புள்ள அபிமாநம் குலைகையாலும், தாம் அநந்யப்ரயோஜநராகையாலும், இவருடைய ராஜகுலமிருக்கிறபடி. (கோயிலில்வாழும்) (௧) "ஹவத்விஷயவாஸிநः - பவத்விஷயவாஸிநः" (௨) "இவற்றின் புறத்தாளென்றெண்ணே" என்று-பகவதபிமாநமுள்ள தேசத்தே கிடக்கையிறே தங்களுக்குப் பேறாக நினைத்திருப்பது.¶ உன்னல்-நினைத்தல். (௩)

அவ.—நான்காம்பாட்டு. (நெடுமை) கீழ்ப்பாட்டிலே "புன்மையாலுன்னைப்புள்ளுவம்பேசிப் புகழ்வானன்றுகண்டாய்" என்ற

---

த்யபூர்வகம் தாத்பர்ய மருளுகிறார் (ப்ரயோஜநமித்யாதி வாக்யத்ரயத்தாலே). (அங்கி) என்றது - ஸாதநபக்தியை. ஸ்வயம் ப்ரயோஜநமாகில் நடுவே விடவொண்ணாதோ வென்னப்ரதீகக்ரஹணபூர்வகம் ஹேதுவருளுகிறார் (ஓவாதேயித்யாதி). அவத்யமென்ற வநந்தரம் "அத்தைப்பொறுக்கவேணும்" என்று சேஷம். (நல்லவன்மையாயிருந்தது) என்றது - நல்ல மிடுக்குடையவன் வார்த்தையாயிராநின்றதென்றபடி. ... ... (௩)

---

(௧) ஸ்ரீரா-ஆ.

மூ.—

நெடுமையா லுலகேழுமளந்தாய் நின்மலா நெடியாயடியேனைக்
குடிமைகொள்வதற் கையுறவேண்டா கூறைசோறிவைவேண்டுவதில்லை
அடிமையென்னுமக்கோயின்மையாலே யங்கங்கே யவைபோதருங்கண்டாய்
கொடுமைக்கஞ்சனைக்கொன்றுநின்றாதைகோத்தவன்றளைகோள்விடுத்தானே

ஸ்வா;—(நெடுமையாலித்யாதி) ஏகரூபமானவடிவை அபரிச்சேத்யமாக்கிவ்யாபித்து ஸர்வலோகங்களையு மளந்துகொண்டவனே!

தம்முடைய அநந்யப்ரயோஜநத்வத்தை மேலிரண்டுபாட்டாலேயருளிச்செய்கிறார். கீழே - ப்ராப்தியையும் ரக்ஷகத்வத்தையுஞ் சொல்லிற்று; இப்பாட்டில் - அநந்யப்ரயோஜநத்வம் சொல்லுகிறது

வ்யா—(நெடுமை யுலகேழுமளந்தாய்) அபேக்ஷிக்கைக்குச் சிறியனைப்போலே, அளக்கைக்கு நெடியனானபடி. (க) ["ஓங்கி

அரு;— நாலாம்பாட்டு. (நெடுமை) "புன்மையாலுன்னைப் புள்ளுவம் பேசிப்புகழ்வானன்று கண்டாய்" என்ற தம்முடைய வநந்யப்ரயோஜநத்வத்தை யென்றது - "ப்ரயோஜநாந்தரபரதையாகிற புன்மையாலே யுன்னைக்ருத்ரிமஸ்தோத்ரம் பண்ணுவனன்றுகாண்" என்றத்தாலே உன்னுடைய விஷயத்தில் கைங்கர்யமே வேண்டுவன் என்று தோன்றுகையால் அவ்விடத்தில் அர்த்தஸித்தமாகச்சொல்லப்பட்ட வநந்ய ப்ரயோஜநத்தை யென்றபடி. (ப்ராப்தியையும்) என்றது - காரணவென்றத்தைப்பற்ற. (ரக்ஷகத்வம்) என்றது. "விழிக்கும் கண்ணிலேன் நின்கண்மற்றல்லால்" என்றத்தைப்பற்ற. (இப்பாட்டு) என்றது- இப்பாட்டுக்களென்றாய், மூன்று பாட்டையும் சொல்லுகிறது. இத்தால் முதல் மூன்று பாட்டுக்கும் ஸங்கதி காட்டிக்கொண்டு மூன்றாம்பாட்டை விவரிக்கிறதாக ஸங்கதி சொல்லிற்றாய்த்து. அன்றிக்கே (ப்ராப்தியையும்) என்றது - "கோயில் வாழும்வைட்டணவன்" என்றத்தைப் பற்ற. "ஓவாதேநமோ நாரணாவென்பன்" என்றத்தாலேஅபராதஸஹத்வம் சொல்லுகையால் ரக்ஷகத்வம் அர்த்தஸித்தமென்னுமத்தைப்பற்ற (ரக்ஷகத்தையும்) என்றது. ஆக இப்போது கீழ்பாட்டுக்குப்ரதாநப்ரதிபாத்யம் ப்ராப்தி ரக்ஷகத்வங்களாய், அந்தரங்கஷதானும் கைங்கர்யப்ரதாநமே, வேறொன்றன்று என்று தம்முடைய ப்ரயோஜநத்வத்தை இப்பாட்டுச் சொல்லுகிறதென்று கீழ்பாட்டோடுதானே ஸங்கத்யந்தரமருளிச் செய்கிறாராகவுமாம்.

"நெடுமையால்" என்றதுக்குக்கருத்தருளுகிறார் (அபேக்ஷிக்கைக்கித்யாதி), நெடுமையில்லாவிடில் ஏழுலகை ஒருகாலாலே அளக்கக்கூடாதென்று

(க) திருப்பாவை-௩.

(மன்னித்யாதி) ஆஸுரப்ரக்ருதிகளான ராஜாக்கள் முடியும் படியாக மழுவென்கிற வாயுதத்தை வலக்கையிலே தரித்து, ஜ்ஞாந ஶக்த்யாதிகளால் பூர்ணனான பரஶுராமாவதாரத்தைப் பண்

ணவளவில் உம்முடைய விரோதி செய்ததென்னென்ன; என்னளவன்றிக்கே *எந்தை தந்தையிற்படியே மூவேழிருபத்தொரு படிகால், (௧) "க்ஷாத்ரம் விஷ்ணுபரிக்ரஹ: - குலம் விஷ்ணு பரிக்ரஹம்" (௨) "க்ஷாத்ரம் பவித்ரம் ஜநநீக்ருதார்த்தா - குலம்பவித்ரம் ஜநநீக்ருதார்த்தா" விற்படியே ஆச்சுதென்கைக்கு த்ருஷ்டாந்தம் (மன்னடங்க) என்று. அஹங்காரக்ரஸ்தரான ராஜாக்களை நிரஸிக்கைக்கடியான வேஷத்தையும் ஆயுதத்தையும், அதுக்கடியான ஜ்ஞாந ஶக்த்யாதி குணங்களால் வந்த பரிபூர்த்தியையு முடையவனே!. (மழுவலங்கைக்கொண்ட) மழுப்பிடித்த பிடியிலே விரோதிகள் முடிந்தபடி; வ்யாபகரிக்க வேண்டிற்றில்லை. (௩) "வற்புடையவரை நெடுந்தோள்" இத்யாதி. அநேகாயுதராய்க்கொண்டு எதிர்ந்த அநேக ராஜாக்களை ஓராயுதங் கொண்டிறே நிரஸித்தது.

---

ப்ரகாஶிக்கும் காலத்தில் உம்முடைய விரோதிகள் அத்தை ப்ரதிபந்தியாதே என்செய்ததென்று ஶங்கைக்குத் தாத்பர்யம். "சும்மனாதே கைவிட்டோடி" என்றவிடத்தில் ப்ராப்திவிரோதிநிவ்ருத்தியைச் சொல்லுகையாலே அவை செய்ததென்னென்னும் ப்ரஶ்நம் கூடாமையால் இங்ஙன் சொல்லவேணும், நீ இருபத்தொருகால் ராஜாக்களைக்கொன்றாப்போலே என்விரோதிகளை நஶிப்பிக்கையாலே ப்ரகாஶித்ததென்று ஸமாதாநத்துக்குத்தாத்பர்யம். ஶப்தார்த்தம்(அஹங்காரேத்யாதி). "மழுக்கொண்டு" என்னவமைந்திருக்க, "வலங்கை" என்று விஶேஷிக்கையாலே நிரஸிக்கும் போதையில் வீரப்பாடு தோற்றுகிறதென்று திருவுள்ளம்பற்றி (வேஷத்தையும்)என்றது. (ஆயுதத்தையும்) என்றவநந்தரம் "கொண்டு" என்று பூரித்துக்கொள்வது. (வேஷத்தையும்) என்றத்தை விவரிக்கிறார் (மழுவித்யாதி), மழுவென்ற ஏகவசநத்துக்குத் தாத்பர்யம் (அநேகேத்யாதி).

நீர்ஸ்வரூபரூபகுணப்ரதாநரன்றிக்கே, அபதாநப்ரதாநரா யிருந்தீராகில், அதுக்கு விரோதியும் போகப்பெற்றீராகில் இனிநாமிருந்து செய்யவேண்டுவதேது? போய்வருகிறோமென்று ஈஶ்வரனுக்குக்கருத்தாக, என்னிடைவந்தித்யாதியையருளிச் செய்கிறாரென்று ஸங்கதிகண்டுகொள்வது. "என்னிடை

---

(௧) (௨) (௩) திருநெ-௯

ணினவனே; (என்னிடையித்யாதி) என்ஶேஷத்வத்தையும் உன்ஶேஷித்வத்தையும் எனக்குப்ரகாஶிப்பித்து என்னைக்கைக் கொண்

(என்னித்யாதி) என் ஶேஷத்வத்தையும், உன் ஶேஷித்வத்தையும் உதறிப்படுத்தபின்பு உனக்குப்போக்கு இனியெவ்விடத்திலே? என்ஸ்வயத்நத்தாலே வந்ததாகிலிறே உனக்குப்போகலாவது; உன்னருளாலே புகுந்த நீ போகக்கடவையோ? (இராமன் நம்பீ-எங்குப்போகின்றதே) (க)"மன்னஞ்ச வாயிரந்தோள்மழுவில்துணித்த மைந்தா, என்னெஞ்சத்துள்ளிருந்திங்கினிப்போய்ப்பிறரொருவர், வன்னெஞ்சம்புக்கிருக்கவொட்டேன்வளைத்துவைத்தேன்" என்று-அவருமொருவர் வளைத்தாரிறே. போனால் என்செய்வீரென்ன, இதேதேனும் தன்னரசுநாடோ, பெண்ணரசுநாடோ? (க) "நன்னெஞ்சவன்னம் மன்னும்" இத்யாதி. (உ) "மழுவினால் மன்னராருயிர் வவ்வியமைந்தனும் வாரானால்" என்று—*உன்வரவு பார்த்திருந்த நான்போக ஸம்வதிப்பனோ. (ங) "வென்றிநீள்மழுவா வியன் ஞாலமுன் படைத்தாய்," (ச) "வடிவாயமழுவேந்தி யுலகமாண்டு" (ரு)"இருநிலமன்னர் தம்மையிருநாலுமெட்டும்-மழுவாளில்வென்ற திறலோன்-பெருநிலமுண்டுமிழ்ந்த பெருவாயர்" என்று - யோக்யதையில்லாத காலத்திலே ஸ்ருஷ்டித்தும் ரக்ஷித்தும், ஆபத்தசையிலே வயிற்றிலே வைத்து நோக்கியும் போருமவனல்லையோ நீ.

எம்பெருமான் வந்தினிப்போகின்றதெங்கு" என்றநவயித்துத் தாத்பர்யமருளுகிறார் (என்ஶேஷத்வேத்யாதி வாக்யத்வயத்தாலே). (உதறிப்படுக்கை) என்றது-படுக்கையை உதறிப்படுத்தால் நிர்மலமாமாபோலே இதுவும் ப்ரகாஶிக்கையென்று கருத்து. இங்குப்பரஶுராமாழ்வானை யருளுகிறார் (மன்னஞ்சவித்யாதி). கீழெடுத்த பாசுரத்துக்குத் தாத்பர்யம் (போனாலித்யாதி). "அன்னமன்னும்" என்று பிராட்டியைச் சொல்லுகையாலே இது பெண்ணரசுநாடன்றோ, உன் இச்சையாலே ஒன்றும் செய்யப்போகாதென்று தாத்பர்யம். போகைக்கு ஸம்பாவனைதானில்லை யென்கிறார் (வென்றிநீளென்று தொடங்கி-நீ என்னுமளவும்). எடுத்த பாசுரங்களிலே "முன்படைத்தாய்" என்றதினர்த்தம் (யோக்யதையித்யாதி). உலகமாண்டென்றதினர்த்தம் (ரக்ஷித்தும்) என்றது, பெருநிலமுண்டுமிழ்ந்த வித்யாதிக்கர்த்தம் (ஆபத்தசையிலே யித்யாதி).

(க) தி-மொ-எ-உ-எ. (உ) தி-மொ-அ-ரு-அ. (ங) தி-வாய்-கூ-உ-க.
(ச) திருநெ-எ (ரு) தி-மொ-கக-சகூ.

டபின்பு, (இனிஎங்குப்போகின்றதே) இனிஉனக்கொரு போக்கிட முண்டோ?; போகிலும் கூடப்போமித்தனை. .... .... (௬)

அவ;—எழாம்பாட்டு. (பருப்பதமித்யாதி) என்னைஉனக்கே அநந்யார்ஹமாம் படி நிர்ஹேதுகமாகக் கைக்கொண்டு வைத்து இனிப்பொகட்டுப் போகலாமோ வென்கிறார்.

---

(எம்பெருமான்) உன் ஸ்வாமித்வத்துக்குப் போருமோ? இனி உன் க்ருஷிபலித்துத் திருப்பல்லாண்டுதொடங்கி இவ்வளவும் வந்த பின்பு போக்குவரத்துண்டாம்படியோ நாமிருவரும் கலந்தபடி. (௧) "உன்னைக் கொண்டென்னுள் வைத்தேன்" இத்யாதி. (௨)"கொண்டதாளுறி கோலக்கொடுமழு" என்று இடையர்க்கும் மழுஆயுதம்; ஆயுதஸாம்யத்தாலே இவனையும் க்ருஷ்ணனோடொக்க அங்கீகரிக்கிறார். (௩) "தெவ்வாய மறமன்னர்" இத்யாதி.* திருக்குலத்தி லிறந்தோர்க்கோ த்ருப்திபண்ணலாவது, எங்களுக்கு த்ருப்திபண்ணலாகாதோ;. ஆக இப்பாட்டால்அவன் வந்து புகுந்த ப்ரகாரத்தையும்,அவன்போனால் தாம் முடியும்படியான அவஸ்தை பிறந்தபடியையும் அவனுக்குப் போக்கின்றிக்கே நிற்கிறநிலையையும், நிர்ஹேதுகமாக விஷயீகரித்தப்ரகாரத்தையும் சொல்லுகிறது. .... ..: ... ... ... (௭)

அவ.—எழாம்பாட்டு. (பருப்பதத்துக்கயல்பொறித்த) கீழிற் பாட்டிலே,"என்நாவகம்பால் மாற்றின்றியுரைததுக்கொண்டேன்" என்றது-அவன் நிர்ஹேதுக க்ருபையாலே என்னுமிடத்தை இப் பாட்டிலே அருளிச்செய்கிறார்.

---

கலந்தவிடந்தன்னைக்காட்டுகிறார் (உன்னையித்யாதி). க்ருஷ்ணாவதாரத்திலே மண்டின விவர் பரசுராமாழ்வானை அநுபாவ்யமாகச் சொல்லக் கூடுமோ வென்னவருளுகிறார் (கொண்டதாளித்யாதி). க்ருஷ்ணனையும் இவனையும் ஒக்கவநுபவித்ததுக்கு ஸம்வாதம் (தெவ்வாயவித்யாதி), எடுத்த பாசுரத்துக்குத் தாத்பர்யம். (திருக்குலத்திலித்யாதி வாக்யத்வயமும்). (முடியும்படியான அவஸ்தை பிறந்தபடியும்) என்றது, இனியென்ற பதபலிதம் (நிர்ஹேதுகமாக விஷயீகரித்த ப்ரகாரத்தையும்) என்றது - "ஒன்றொழியாமலெல்லாம்" என்றதின்பலிதம்.

அரு;—எழாம்பாட்டு. (பருப்பதமித்யாதி) (நிர்ஹேதுக க்ருபையாலே) என்றது-"உனக்குரித்தாக்கினையே" என்றத்தைப்பற்ற.

---

(௧) ரு-௬-டு. (௨) ௪-௨-டு. (௩) தி மொ-௩-௬-டு.

மூ. —

பருப்பதத்துக்கயல்பொறித்த பாண்டியர்குலபதிபோல்
திருப்பொலிந்த சேவடியென் சென்னியின்மேற்பொறித்தாய்
மருப்பொசித்தாய் மல்லடர்த்தா யென்றென் றுன்வாசகமே
உருப்பொலிந்தநாவினேனை யுனக்குரித்தாக்கினையே. (எ)

---

ஸ்வா;—(பருப்பதமித்யாதி) பாண்ட்யவம்ஶத்துக்குநிர்வாஹகனாயிருப்பானொரு ராஜா தன்தேஶத்தினின்றும், மஹாமேருவளவும் வழியிலுள்ளவன்னியமறுத்து ஜயித்துக்கொடுசென்று மஹாமேருவிலே தன்வெற்றியெல்லாம் தோற்றும்படி தன்னுடையாளமானகயலையிட்டுப்போந்தாப்போலே, பரமபதம்கலவிருக்கையான வீஶ்வரனை நீ அங்குநின்றும் என்பக்கலிலே வருமளவுமுண்டான

---

வ்யா,—(பருப்பதமித்யாதி) பாண்ட்யவம்ஶத்துக்குநிர்வாஹகனாயிருப்பானொருராஜா தானிருந்த தேசத்தில் நின்றும் மஹாமேருவளவும் வழியிலுள்ள காடுசெய்த்து வன்னியமறுத்துத் தனக்கும் தன்பரிகரத்துக்கும் போகலாம்படி பெருவழியாக்கிக்கொண்டு சென்று, மஹாமேருவிலே தன்வெற்றியெல்லாம் தோற்றும்படி தன்னடையாளத்தையுமிட்டுப் போந்தான். (க) "பாண்ட்யவ [illegible] புரூரவஸ்தஸ்ய ஸ்ரீமாந்இந்த்ரத்யும்நோ மஹாபல:। தஸ்யபுத்ரோமஹாபாகோ மலயாசலகேதுமாந்ஸலிலத்யக்ருபாந் ஸர்வாந் மேரோர் தக்ஷிணபார்ஶ்வகாந்। மேரௌஸ்வாஸ்யசிஹ்நமிதநாசவிகித் வாந்ருபஸத்தம:" என்னக்கடவதிறே. அப்படியே, பரமபதம்கலவிருக்கையான ஈஶ்வரன் அங்கு நின்று மிவர் பக்கலிலே வருமளவுமுண்டான * பாவக்காட்டையும் சிய்த்து இவர் வன்னியத்தையு மறுத்து, இவர் * சென்னித்திடரிலேயாதவிலச்சினை வைத்தபடிக்கு த்ருஷ்டாந்தமாகிறது. இவர் வருதல், இருவரும் பாதி பாதி வழிவருதல் செய்கையன்றிக்கே, அவன் தானே வந்தானாய்

---

(சிய்த்து) வெட்டித்தள்ளி, (வன்னியமறுத்து) குறும்பரானவிரோதிகளைப் போக்கி. "பருப்பதம்" என்றது-பர்வதமென்றாய் (மஹாமேருவிலே) என்றது, கயலென்றதினர்த்தம் (அடையாளத்தை) என்றது. கமநமில்லாத பர்வதத்தை த்ருஷ்டாந்தமாகச் சொன்னதுக்கு பாவமருளுகிறார் (இவரித்யாதி). சென்னி

பாவக்காட்டைச் சீய்த்து என்னுடையப்ராதிகூல்யரூபவன்னியம றுத்து என்னிடத்திலே பாதவிலச்சினை வைத்தாய்;-உன்னடையாள மிட்டுக்கொண்டாய்.

(திருப்பொலிந்த சேவடி) அழகுவிஞ்சியிருப்பதாய் ருஜுவான திருவடிகள். ஆர்ஜவ ஸ்வபாவமானதென்கை. அதவா, ஐஶ்வர்யசிஹ்நங்களையுடைத்தான திருவடிகளென்றுமாம். (க) "கதா வுநஃ-கதாபுநஃ" இத்யாதி, * அமரர் சென்னிப்பூவானப்ராப்ய த்து. மலைக்குள்ளது விலக்காமையிறே. அப்படியே, வருவானும் வழியிலுள்ள விரோதியைப்போக்குவானும் தன் விஜயத் துக்கு அடையாள மிடுவானும் தானேயிறே. இவர்க்கும் *ஏதங்களாயின வெல்லா மிறங்கவிடுவித்துப் பாதவிலச்சினை வைத்தான்; தான் பரமபதத்தில் நின்று மிவர்பக்கல்வந்த ப்ரகார மிருக்கிறபடி. (உ) "விண்ணவர்கோன் விரையார்பொழில் வேங்கட வன் - நீண்மதிளரங்கத்தம்மான் திருக்கமலபாதம் வந்தென் கண் ணினுள்ளன" என்னக்கடவதிறே.

(திருப்பொலிந்தசேவடி) அழகு விஞ்சியிருப்பதாய் ருஜுவான திருவடிகள். ஆர்ஜவ குணமிருக்கிறபடி. இவன் செவ்வைக் கேடே தனக்குச் செவ்வையாகை. ஐஶ்வர்யசிஹ்நங்களை யுடைத் தான திருவடிகள். * கதாபுநஃவில் சொல்லுகிறபடியே *பார்த்திவ வ்யஞ்ஜநாங்கிதமான திருவடிகள். (என்சென்னியின்மேல் பொ றித்தாய்) அநாதிகாலம் அப்ராப்தவிஷயங்களின் காற்கடையிலே துவண்டவென் தலையின்மேலே, (௩) "அமரர்சென்னிப்பூ" என்றும் (௪) "வானவருச்சிவைத்த-பெருமணி" என்றும்நித்யஸூரிகளுக்குத் தலையலங்காரமான பொன்னும் பூவுமான உன் திருவடிகளை என்

மேல் பொறித்ததுக்கு பர்வத த்ருஷ்டாந்தத்தால் பலித்த வ்யாஜத்தைத் தோற்றி விவரிக்கிறார் (மலைக்கித்யாதி), உக்தார்த்தத்தை ஸங்க்ஷேபியா நின்று கொண்டு நிகமிக்கிறார் (இவர்க்குமித்யாதி).

திருவென்றதுக்கர்த்தாந்தரமருளிச்செய்கிறார் (ஐஶ்வர்யேத்யாதி வாக்ய த்வயத்தாலே) பைம்பொன்னேயென்றத்தைத்திருவுள்ளம்பற்றி(பொன்னும்) என்றது. (பூவும்) என்றவநந்தரம் "சூடாமணியுமான" என்று கூட்டுவது. பொன்முதலானவைபோலே சென்னிக்குத்திருவடிகள்பொருந்தியிருக்குமோ

(க) ஸ்தோத்ர (உ) அமல - க (௩) திருக்குறு-கூ (௪) தி-மொ-கூ-ரு-௪

தலையிலே அலங்கரித்தாய். (க) [நீள்கழல் சென்னிபொருமே] பொருந்துமே; கொக்குவாயும் படுகண்ணியும்போலே.

தன்வெற்றிக்கும் என்தோல்விக்குமடையாளம் - ஸ்வாதந்த்ர்யம்போகையும், சேஷத்வம் பெறுகையும் இவர்க்குஉகப்பிறே;(உ.) "ராஜந - ராஜந்"என்றது போகையும் சேஷத்வம் பெறுகையும் ஸ்ரீபரதாழ்வானுக்கு உகப்பிறே. இதுதான் தானுமவனும் அறிந்தவளவுபோராது; (௩)"மானிடவர்க்கென்றுபேச்சுப்படில் வாழகில்லேன்" என்று அவனும்தானுமறியில் ஸ்வரூபஹாநியில்லையென்றிருக்கிலும் பிறர்சொல்லில் ஸ்வரூபஹாநியாளுப்போலே, புறம்புள்ளாருமறியசேஷபூதனாகவேணும். பெருமாளும், ஸ்ரீபரதாழ்வானைப்பார்த்து"நம்மை மீட்டுக்கொண்டு போகையிலும், உன்னை 'ஸ்வதந்த்ரன்' என்றவர்கள் முன்னேஉன்பாரதந்த்ர்யத்தைப்பெற்றுப்போகப்பார்" என்று திருவடி நிலைகளைக் கொடுத்தாரிறே. (௪) "என்தலைமிசையாய்" என்கிறதிசை. (பொறித்தாய்) கர்மபாரதந்த்ர்யத்தால்பொறித்த பொறிபோலன்றே ஈச்வரபாரதந்த்ர்யத்தால்பொறித்த பொறி.

(மருப்பொசித்தாய்) தோற்றாரிறே வென்றாரை ஸ்தோத்ரம் பண்ணுவார். (ரு) "எத்துகின்றோம் நாத்தழும்ப விராமன் திருநாமம்" என்னக்கடவதிறே. இவரும் அவனுடைய வீரவாதங்களைச் சொல்லி, ஸ்தோத்ரம் பண்ணுகிறார். தானே சென்று விரோதிநிரஸநம் பண்ணினபடி. (மருப்பொசித்தாய் மல்லடர்த்தாயென்றென்று) மருப்பொசித்தாயென்றும்,மல்லடர்த்தாயென்றும், உன் குணங்களுக்கு வாசகமான திருநாமங்களைப் பலகால் சொல்லி,

---

வென்னவருளுகிறார் (நீளித்யாதி),

வைத்தாயென்றதே "பொறித்தாய்" என்பானென்னென்ன வருளுகிறார். (தன்வெற்றிக்குமித்யாதி), அவன் வெற்றியையும் தன்தோல்வியையுய சொல்லுகைக்கு அது உத்தேச்யமோ வென்ன வருளுகிறார் "(ஸ்வாதந்த்ர்யமித்யாதி). அவன்வெற்றியும் இவருடைய தோல்வியும் இருவருமறிந்தாலபோராதோ? அடையாளமிடவேண்டுவானென்னென்ன வருளுகிறார் (இதுதானியாதி). "பொறித்தாய்' என்று ஈச்வரன் தோன்றுகையாலே, அதற்கு வ்யாவர்த்ய பூர்வகம் கருத்தருளுகிறார் (கர்மேத்யாதி).

---

(க) தி-வாய்-க-கூ-கக. (உ) ரா-அ. (௩) நா-தி-க. (௪) தி-வாய்-௪ப-௪ப-௪.
(ரு) தி-மொ-௪ப-௬-க.

த்தை லபிக்கப்பெற்றேன்.ப்ராப்யவிரோதிகளை, குவலயாபீடத்தையும் சாணூரமுஷ்டிகரையும் நிரஸித்தாப்போலே நிரஸித்துப் பொகட்டு அவ்வபதாநங்களுக்குத் தோற்று நான் ஏத்தும்படி பண்ணினவனே!;(உனக்கு) இதுவே யாத்ரையாம்படி யிருக்கிறவென்னை, உன்னையொழியப்புறம்பு ஆளாகாதபடி பண்ணின பின்பு இனிஎங்குப்போவது. ... .... ... .... ....(எ)

அவ;—எட்டாம்பாட்டு. (அனந்தனித்யாதி) அநந்தகருடாதிகளிலுங்காட்டில் என்பக்கலிலே அதிவ்யாமோஹத்தைப் பண்ணி நீஎன்னோடே ஸம்ஸ்லேஷிக்க, நானும் அத்தை அநுஸந்தித்து விஸ்ராந்தனானபின்பு இனிஉனக்குப் போக்கிடமுண்டோ வென்கிறார்.

(உருப்பொலிந்த நாவினேனை) செவ்வாய்க்கிழமையை "மங்களவாரம்" என்னுமாபோலே, விபரீதலக்ஷணை. இதரவிஷயங்களிலேயிறே என்னுக்கு உருப்பொலிந்தது. உருப்பொலிகை - தழும்பேறுகை. (க) "நாத்தழும்பெழ நாரணாவென்றழைத்து" என்னக்கடவதிறே. (உனக்குரித்தாக்கினையே) இப்படி செய்தாயே!; நான் சொன்னபடியாகவோ நீ விஷயீகரித்தது; அன்றிக்கே, நிர்ஹேதுகமாக விஷயீகரித்தா யென்கிறார். .... ... (எ)

அவ, எட்டாம்பாட்டு. (அநந்தன்பாலும்) அத்வேஷந்தொ

உருவென்றதுக்கு ஸப்தார்த்தம் திருவுள்ளம்பற்றி இதுவிலக்ஷணமாய் அழகில்லாதவென்று விவக்ஷித்து ஸத்ருஷ்டாந்தமருளுகிறார் (செவ்வாயித்யாதி). அர்த்தாந்தரமருளிச் செய்கிறார் (பொலிகையித்யாதி). ஏகாரத்தால் ஈடுபாடு தோற்றுகையைக் காட்டுகிறார் (இப்படியித்யாதி), (விஷயீகரித்தது) என்றவனந்தரம் "இங்ஙன்" என்று சேஷம், "ஆக்கி" என்று அவனைக்கர்த்தாவாகச் சொல்லுகையால், நான்ஒன்று சொல்லாதிருக்க, நீயேசெய்தாயென்று தோற்றுமென்று திருவுள்ளம். ... ... ... (எ)

அரு;—எட்டாம்பாட்டு. (அனந்தனித்யாதி) வண்ணமாடங்கள் தொடங்கி நெய்க்குடமளவாக பரபக்தியும், நெய்க்குடத்திலே பரஜ்ஞாநமும், துக்கச்சுழலை தொடங்கி பரமபக்தியுமாகத் திருவுள்ளம்பற்றி, கீழ்ப்பாட்டிலத்தை பாண்டியர் குலபதியை த்ருஷ்டாந்தமாக்கி, "என்சென்னியில் பொறித்தாய்" என்றதுக்கு விவக்ஷிதமாக்கி அநுவதித்து ஈடுபாட்டோடு ஸங்கதி காட்டுகிறார் (அத்வேஷமித்யாதி), (அசல்பிளந்தேறிட்டு) என்றது - பிளந்து

(க) பெரு-தி-உ-ச,

பெரியாழ்வார்திருமொழி, ரு-ப, ச-தி, அ-பா, அனந்தன். கநடுஞ

ரூ. —

அனந்தன்பாலுங் கருடன்பாலு மைதுநொய்தாகவைத்தென்
மனந்தனுள்ளே வந்துவைகி வாழச்செய்தா யெம்பிரான்
நினைந்தென்னுள்ளே நின்றுநெக்குக் கண்கள்சும்பொழுக
நினைந்திருந்தே சிரமந்தீர்ந்தேன் நேமிநெடியவனே. (அ)

---

ஸ்வா;—(அநந்தனித்யாதி) பிராட்டிமாரோபாதி தனக்கு போக்யரான திருவநந்தாழ்வான் பெரியதிருவடி இவர்கள் பக்கல் தனக்குண்டான ஸ்நேஹம் அத்யல்பமென்னும்படி என்பக்கலிலே

---

டங்கி பரபக்தியளவாக இடையிலுள்ள ஆத்மகுணங்களைப் பிறப்பித்து, அநந்தரம் பரஜ்ஞாநத்தைப் பிறப்பித்து, விரோதியை அசலிலேதேறிட்டு மாநஸ ஸம்ஶ்லேஷமாத்ர மன்றிக்கே பாஹ்யஸம்ஶ்லேஷமாம்படி பண்ணினானென்றார் - கீழ்; "ஸத்தையே பிடித்து பகவதநுபவமே யாத்ரையாய்ப் போந்தவர்களன்றோ" என்றும், "இவர் அநாதிகாலமே பிடித்து நித்ய ஸம்ஸாரியாய் இதர விஷயங்களோடே கலந்து பரிமாறிப்போந்தவரன்றோ" என்றும், அவர்களேற்றமும், இவர் தண்மையும் இவர் நெஞ்சில் படாதபடி அவன் அநுபவிப்பித்தபடியை அருளிச்செய்கிறார் இப்பாட்டில்.

வ்யா;-(அனந்தனித்யாதி) த்ரிபாத்விபூதியிலுள்ளாரெல்லாரு மொத்திருக்கச்செய்தே இவர்களுக்கோரேற்றம் ஸர்வகாலமும் திருமேனியோடே ஸ்பர்ஶிக்கையும்,தர்ஶநீயத்தினினிமையாலேமோம் பழம்போலே முன்னே வைத்துக்கொண்டிருக்கையுமிறே; இப்படிக்கொத்த விவர்கள் பக்கலிலே ஸ்நேஹத்தை அத்யல்பமாக வைத்து. இவ்வளவுதான் வைக்கிறது - இவர் பக்கல்வரும்போதைக்கு

---

அசலிலே யேறிட்டென்றபடி. அதாவது - "புண்யபாபேவிதூய" என்கிறபடியே முக்தனும் சேதநனிடத்தில் நின்றும் விடப்பண்ணி "ஸுஹ்ருத: ஸாதுக்ருத்யாம் - ஸுஹ்ருதஸ்ஸாதுக்ருத்யாம்" என்கிறபடியே அசலிலே ஸங்க்ரமிப்பித்தென்றபடி. (பாஹ்யஸம்ஶ்லேஷமாம்படி) என்றது - "என்சென்னியின்மேல் பொறித்தாய்" என்றதைப்பற்ற.

(மோம்பழம்) மோருமிறபழம். "ஐது" என்றதினர்த்தம் (ஸ்நேஹத்தை) என்றது. இல்லையாம்படி யென்னாதே நொய்தாகவென்றதுக்கு பாவமருளுகிறார் (இவ்வளவுதானித்யாதி). இங்குப்பெரிய ப்ராட்டியாரைச் சொன்னது-

அதிவ்யாமோஹத்தைப்பண்ணி. (என்னித்யாதி) தான்*மயர்வறமதி நலமருள, அத்தாலே நெஞ்சுநாடென்னும்படி திருந்தினவென ஹ்ருதயத்துக்குள்ளே அஹேதுகமாகவந்து வர்த்தித்து, நான் அநுபவித்துஜீவிக்கும்படி பண்ணினவென்னுபகாரகனே; என்னையன் செய்தவுபகாரமென்தான்? த்ரிபாத்விபூதியிலுள்ளாரெல்லாரோடும் பரிமாறும் பரிமாற்றத்தை யெல்லாம் இவரொருவரோடும் பரிமாறின வுபகாரம்.

---

(௧)*சென்றால்குடையாம்,இருந்தால் சிங்காசனமாம், நின்றால்மரவடியாகைக்கும், மணிவிளக்காகைக்கும், பூம்பட்டாகைக்கும், *பொருசிறைப்புள்ளுவந்தேறி இவர்பக்கல் வரும்போதைக்குவாஹநமாகைக்கும், சேரவிடுகைக்கும் பெரியபிராட்டியாரும் வேணுமிறே; அதுக்குறுப்பாக வரித்து அவர்களை விஷயீகரித்தது. இவர்களை விஷயீகரித்தது தான் இனியவர்க்குறுப்பானல்மற்றுள்ளாரைச் சொல்லவேண்டாவிறே.

(என்மனந்தனுள்ளே) அநாதிகாலம் இதர விஷயத்திலே மண்டின வென்மநஸ்ஸிலே. (வந்து) அஹேதுகமாக வந்து. (வைகி) அவஸரித்து;பொருந்தியென்னவுமாம்.(௨)"வந்தாயென்மனம்புகுந்தாய் மன்னி நின்றாய்"(௩)"போயறியாய்" என்றிறே ஈடுபடுவது. (வாழ) "அனந்தன்பாலும்கருடன்பாலும்ஐதுநொய்தாகவைத்து" என்றது ப்ரதம விவாஹத்துக்குச் செங்கற்சீரைகட்டிக் கூப்பிடாமைக்குச் சோறுவைப்பாரைப்போலே; த்விதீயவிவாஹத்திலேயிறே போக்யமுள்ளது. (வாழச்செய்தாயெம்பிரான்) என்னையன் செய்தபடியென்?, (எம்பிரான்) இவர் தண்மைபாராதே உபகரித்தவுபகார மிருக்கிறபடி. த்ரிபாத்விபூதியிலுள்ளாரெல்லாரோடும் பரிமாறும் பரிமாற்றமெல்லாம் இவரொருவரோடும் பரிமாறின உபகாரம்.

---

த்ருஷ்டாந்தார்த்தம். அன்றிக்கே(௧)"திருமாற்கரவு" என்றும், (௪)"பூமகளார் தனிக்கேள்வன்" என்றும் பாசுரத்தையுட்கொண்டு இங்கு இவரும் விவக்ஷிதமென்னவுமாம்.

(அவஸரித்து) என்றது-அவஸரம் பார்த்தென்றபடி. (செங்கற்சீரைகட்டி) வைராக்யமுண்டானவர்களைப் போலே பண்ணி. கீழ்வாக்ய விவரணம் (த்ரிபாதித்யாதி). (பரிமாற்றமெல்லாம்) என்றவநந்தரம் "அவர்களை விட்டு" என்றுபேக்ஷம்.

---

(௧) ௧-திருவ-௫-௩. (௨) தி-மொ-௧-௧௰-௩. (௩) தி-மொ-௮-௯-௬.
(௪) தி-வாய்-௧-௯-௩

(நினைந்தித்யாதி) உன்வ்யாமோஹாதிகல்யாணகுணங்களையும் வடிவழகையும் என்னிலே நினைத்து அத்தால் வந்த ப்ரீதிப்ரகர்ஷத்தாலே ஸ்தப்தனாய்ப் பின்னை ஶிதிலாந்தஃகரணனாய், அந்தஸ்ஸை தில்யம் கண்ணநீராய் ப்ரவஹிக்க; உள்ளுருகின்றது - புறவெள்ளமிட்டபடி. (நினைந்திருந்தேசிரமம் தீர்ந்தேன்) நீபண்ணினவுபகார பரம்பரைகளை யநுஸந்தித்து இளைப்பாறியிருந்து உன்னைப் பெரு

(க) "கருளப்புட்கொடிசக்கரப்படை - அடிமைகொண்டாய்" என்று நித்யஸூரிகளைவிட்டு நித்யஸம்ஸாரிகளுக்குப் புறம்பான தம்மை அடிமைகொண்ட உபகாரம்.

(நினைந்தென்னுள்ளே நின்று) இவர்ப்ராயஶ்சித்தகுடிபோலே, அவர்களேற்றத்தையும், தம்முடைய தண்மையையும் நினைத்துக் கூசாதபடி பண்ணினபடியும், இவர்கள் பக்கல் ஆதரம் குளப்படி யென்னும்படி தம்பக்கல் கடல்போலே அவன்பண்ணின ஆதராதி ஶயத்தையும், இவர் தண்மை பாராதே இவர் நெஞ்சில் புகுந்தபடியையும்நினைத்துஎன்னிலேநினைத்துநின்று. (நெக்கு)(உ)"நினைதொறும்-நெஞ்சிடிந்துகும்" என்கிறபடியே, நெஞ்சு ஶிதிலமாய். (கண்கள் அசும்பொழுக) உள்ளுருகினதுபுறவெள்ளமிட்டபடி. அசும்பு ஒழுக-அசறுமாய.

(நினைந்திருந்தே சிரமந்தீர்ந்தேன்) நீ பண்ணினவுபகாரபரம்பரைகளை அநுஸந்தித்திருந்தே சிரமந் தீர்ந்தேன். ஓடி யாடின இளைப்பெல்லாம் இருந்தவிடத்தேயிருந்து ஆறினேன். சிரமம் - இளைப்பு. "ஸம்ஸாரிகள் பக்கலுபகாரபரம்பரைகளைப் பண்ணிக்

(ப்ராயஶ்சித்தக்குடி) என்றது-ப்ராயஶ்சித்தம் வேண்டினகுடி; தோஷயுக்தமான குடியென்கை. (போலே) என்றதுக்கு (நினைத்து) என்றத்தோடந்வயம். "வாழச்செய்தாய்" என்றத்தைப்பற்ற (கூசாதபடியும்) என்றது. நொய்தாக வென்றத்தைக் கடாக்ஷித்து (இவர்கள் பக்கலித்யாதி). "என் மனந்தனுள்ளே வந்து" என்றத்தை நோக்கி (இவர் தண்மையித்யாதி)-

அவன் பண்ணின வுபகாரங்களை நினைத்தென்று கீழருளிச்செய்து, (ங) "நஹ்ஸாத்வகாரணம் ஸத்வைராத்வதயா| கயமுனுசவகாரணகுதெநெநகெநத-ஷ்டி-நஸ்மரத்யபகாராணாம் ஶதமப்யாத்மவத்தயா| கதஞ்சிதுபகாரேண க்ருதேநைகேந துஷ்யதி" என்னுமவன் மஹாகுணத்தை நினைந்தென்று தாத்பர்யாந்தரமருளுகிறார் (ஸம்ஸாரிகளித்யாதி),

(க) தி-வாய்-ரு-எ-ங. (உ) தி-வாய்-கூ-சு-உ. (ங) ரா.

மூ. —

பனிக்கடலிற்பள்ளிகோளைப் பழகவிட்டோடி வந்தென்
மனக்கடலில்வாழவல்ல மாயமணாளநம்பி
தனிக்கடலே தனிச்சுடரே தனியுலகேயென்றென்
றுனக்கிடமாயிருக்கவென்னை யுனக்குரித்தாக்கினையே. (கூ)

---

மையாலே வந்தஸ்ரமமெல்லா மாறப்பெற்றேன். (நேமிநெடியவனே) கையும் திருவாழியுமானவழகுக்கு எல்லையில்லாதவனே! ஆழ்வார் பக்கல் ப்ரேமத்துக்கு முடிவில்லாதவனென்னுமாம். (அ)

அவ;—ஒன்பதாம்பாட்டு. (பனியித்யாதி) போகஸ்தாநங்களான க்ஷீராப்த்யாதிகளையு முபேக்ஷித்து என்னெஞ்சைபோகஸ்தாநமாகக் கொண்டானென்கிறார்.

---

கொண்டு போராநிற்க, காதாசித்கமாக உபகாரத்திலே ஒன்று குறைதல், ஒரு அபகாரம் புகுருதல் செய்தால், முன்புபண்ணின உபகாரங்களையும் மறந்து இத்தொன்றையுமே நினைத்துக் கொண்டிருப்பர்கள், அநாதிகாலமே பிடித்து இவர்கள்பண்ணும் ப்ராதிகூல்ய பரம்பரைகளொன்றையும் பாராதே, ஓரவகாஸத்திலே அபுத்திபூர்வகமான ஓராநுகூல்யைகதேஸத்தைக் கொண்டு, முன்பு பண்ணினவற்றைப்பொறுத்துரக்ஷிக்கும்ஈஸ்வரன்'' என்றநுஸந்தித்து, அவ்விழவு தீர்ந்தேன் - நெஞ்சாறல் கெட்டேன், (நேமிநெடியவனே) இவர்தாம்பற்றிற்று நிர்விஸேஷ வஸ்துவையன்றே, (நெடியவனே) கையும் திருவாழியுமான வழகுக்கு எல்லைகாணவொண்ணாதவனே. (க)*நிமிர் சுடராழி நெடுமாலிறே - * அமுதிலுமாற்ற வினியன். விரோதியற்றபின்பு அழகுக்குடலிறே திருவாழி. (நெடியவன்), ஆழ்வார்பக்கல் ப்ரேமம் விளைந்தபடி யென்றுமாம். (அ)

அவ;—ஒன்பதாம்பாட்டு. (பனிக்கடலித்யாதி) கீழ்ப்பாட்டில் - "அனந்தன் பாலுங்கருடன்பாலும்" என்று - தன்னை புஜிக்கைக்கு போகஸ்தாநங்கள் ஒரு விபூதியாக வுண்டாயிருக்கச் செய்தே அவர்களை விட்டு என்னை விரும்பிற்றென்றார், இப்பாட்டில் - போகஸ்தாநங்கள் பலவுமுண்டாயிருக்கச்செய்தே அவற்றையுபேக்ஷித்து என்னெஞ்சை போகஸ்தாநமாகக் கொண்டபடி யென்கிறார்.

---

அரு;—ஒன்பதாம்பாட்டு. (பனிக்கடலித்யாதி) (கொண்டபடி.) என்றவநந்தரம்''சொல்லுகிறார்'' இதிஸேஷ:,

---

(க) தி-வாய்-க-கூ-கூ.

ஸ்வா;—(பனிக்கடலித்யாதி). திருமேனியில் ஸௌகுமார்யத்துக்குப் போரும்படி ஶ்ரமஹரமாம்படி குளிர்ந்த திருப்பாற்கடலிலேயிறே பள்ளிகொண்டருளுவது. அத்தைப்பழகவிட்டு-மறந்துவிட்டு. அத்தைமறப்பித்ததிறே இவர்திருவுள்ளத்தில் குளிர்த்தி.

வ்யா.—(பனிக்கடலில் பள்ளிகோளை) ஸகல தாபஹரமான கடல். ஸம்ஸாரத்தில் தாபத்ரய தப்தரானவர்களுக்குத் திருப்பாற்கடலில் கண்வளர்ந்தருளுகிறபடியை அநுஸந்திக்கப் போமென்கை. ஶீதளஸ்வபாவமான கடல். (க) "பாற்கடல்பாம்பணைமேல்பள்ளிகொண்டருளுஞ் சீதனை" என்று - அவனுடைய ஸ்வபாவம் இதுக்குண்டா யிருக்கிறபடி; ஸம்பந்தமடியான வாத்ஸல்யம். (பள்ளிகோளை) பள்ளிகொண்டபடியென்னுமித்தனை, பாசுரமிடப்போகாது. (உ)"கிடந்ததோர்கிடக்கை" என்றும்,(ங)"ஏரார்கோலந்திகழக்கிடந்தாய்"என்றும்சொல்லுமித்தனையிறே. (ச)"நாளும் வாய்க்க" என்கிறபாட்டில் ஒருபோலி சொல்லு மித்தனையிறே. இவர் தாமும் "வெள்ளை வெள்ளத்தின் மேல்" என்று - ஆசைப்பட்டபடியே வந்து புகுந்தாளுய்த்து. (பழகவிட்டு) அங்குண்டான ஆசையை நேராக மறந்து விட்டு.

ஆதபத்தால் வந்ததாபம் போமித்தனை போக்கி, ஸகல தாபங்களும் போமோ வென்ன (ஸம்ஸாரேத்யாதி), "பனி" என்று விஶேஷித்ததுக்கு ஸப்தார்த்தபூர்வகம்த்ருஷ்டாந்தமருளுகிருர்(ஶீதளேத்யாதிவாக்யத்வயத்தாலே). அவனுக்கு ஶீதளத்வமேதென்ன வருளுகிருர் ( ஸம்பந்தமித்யாதி ). பள்ளிகொள்கையை விஶேஷியாமல் ஸாமாந்யமாகச் சொல்லுகைக்கு பாவமருளுகிருர் (பள்ளிகொண்டவித்யாதி வாக்யத்வயத்தாலே). "தாளும் தோளும் முடிகளும்" இத்யாதிப்படியே ப்ரகார விசேஷம் சொல்லியிருக்க, ப்ரகார விசேஷஞ் சொல்லக்கூடாமையால் ஸாமாந்யோக்தி யென்னக்கூடுமோ வென்ன வருளுகிருர் (நாளுமித்யாதி). அங்கும் அநுரூபத்ருஷ்டாந்த மல்லாமையால் ப்ரகார விசேஷம் நேரேசொல்லிற்றில்லையென்று கருத்து. "பழகவிட்டோடி வந்து" என்னுமதுக்கு அவதாரிகையிடுகிருர் (இவர்தாமுமித்யாதி); "வெள்ளை வெள்ளத்தின் மேல்" என்று இவராசைப்பட்டபடியே வந்து புகுந்தானென்றதுக்கு இவர் க்ஷீராப்தியிலே கண்வளர்ந்தருளும்படியைக்காணவேணுமென்றுசைப்பட்டதாகிலும் தன் அபிநிவேஶாதிஶயத்தாலே இவர் மநஸ்ஸையே அக்கடலாக்கிக் கொண்டானென்று கருத்து.

(க)திருவி-எக. (உ)திருமா-உங. (ங)தி-வாய்-ரு-அ-க. (ச)தி-வாய்-அ-க0-அ

கடுநடையிட்டுவந்து, என்னுடைய நெஞ்சாகிற கடலிலே புக்கு அபிமதலாபத்தால் வந்தவைஶ்வர்யத்தாலே குறைவற்று ஸுகிக்க வல்ல, (மாயமணாளநம்பி) ஆஶ்சர்யமான வடிவழகாலும் குணங்

---

(ஓடிவந்து) கர்தக்குதிரை கட்டியாய்த்துவந்தது. (என்மனக் கடலில் வாழவல்ல) அது பனிக்கடலாகையாலே குளிர்ந்திருக்கும்; இது மனக்கடலாகையாலே குளிர்த்தி இரட்டித்திருக்கும். அது ஊற்றுமாறினாலும் இது ஊற்றுமாறாது. பனிக்கடலையும் தனக்குள்ளே அடக்குங்கடலிறே. (௧) ["பரவைத்திரை பலமோத" இத்யாதி.] இக்கடலைக்கண்டவாறே பனிக்கடல் காட்டுத்தீயோடொத்தது. (வாழவல்ல) செருக்கரான ராஜாக்கள் பழைய படைவீட்டைவிட்டு, தாங்களே காடுசெய்துச் சமைத்த படைவீட்டிலேயிறே ஆதரத்தோடே யிருப்பது. ஸாதநதசை போலன்றிறே போக (ஸாம்ய) தசை. பனிக்கடலையும் விரும்புகைக்கடி, இவரைச் சேர்த்துக் கொள்ளுகைக்கு *யோகநித்திரைசிந்தை செய்

---

(சாதக்குதிரை) அஞ்சலிலே குதிரைவைக்கை, (இரட்டித்திருக்கும்) "ஶுஷ்கநம்பரீதவம்ஸோ ஶுஷ்கநாஶவிஶுஷ்கோ: । ஶுஷ்கஶுஷ்கயோர் மத்யே ஶீதலம் ஹிமவந்தாமந:-சந்தநம்ஶீதலம்மந்யே சந்தநாதபிசந்த்ரம:। சந்த்ர சந்தநயோர்மத்த்யே ஶீதலம் ஹிஸதாம்மந:" என்று ஹிமாம்ஶுவிற் காட்டில் அபிப்ராயம் சொல்லுகையால் பனிக்கடலிற் காட்டில் விஞ்சியிருக்குமென்று கருத்து. மநஸ்ஸைக் கடலென்று சொல்லுகைக்கு விஸ்தாரமுண்டோவென்ன வருளுகிறார் ( பனிக்கடலித்யாதி வாக்யத்வயத்தாலே ). "பரவைத்திரை" இத்யாதிப்படியே அத்தோமெநுபவிக்குங்காலத்திலே அடக்குகையாலே விஸ்தாரமுண்டென்றுகருத்து. இரட்டிக்குத்திருக்குமென்று அருளிச்செய்கைக்கு ப்ரமாணமுண்டோவென்ன, அபிப்ராயத்திலே நோக்கென்கிறார் (இக்கடலையித்யாதி), இருக்கவல்ல வென்னாதே, வாழவல்ல வென்றதுக்குத் தாத்பர்யமருளுகிறார் (செருக்கரித்யாதி ), க்ஷீராப்திவாஸம் ஸாதநமானால் ஸாத்யம் கைப்பட்ட பின்பும் விரும்பி அங்கேயிருப்பானேனென்னென்ன வருளுகிறார் (பனிக்கடலையுமித்யாதி). (சிந்தைசெய்கைக்கிறே) என்றது சிந்தை செய்கைக்கிடையாயிருக்கையாலிறே யென்கை. க்ருதஜ்ஞதை பின்பும் விரும்புமென்று கருத்து, ஆழ்வார்தம்முடைய திருவுள்ளத்தில் வாஸம் வாழ்ச்சியாகாதிருக்க, அத்தையும் வாழ்ச்சியாகப்பண்ணுகைக்கு ஸமர்த்தனென்று

---

(௧) இ ௨-௧ப.

களாலும் பூர்ணனானவனே! இவர் திருவுள்ளத்திலே புகுந்த பின் பிறே குணங்களும் திருமேனியில் செவ்வியும் பூர்த்திபெற்றது.

(தனிக்கடலே) அத்விதீயமானகடல்போலே அபரிச்சேத்யனான வனே! (தனிச்சுடரே)(க)"வெங்கதிரோன்குலத்துக்கோர்விளக்கு" என்கிறபடியே வந்தவதரித்து ப்ரகாஶகனானவத்விதீயனே!; ஸ்வயம் ப்ரகாஶஸ்வரூபஸ்வபாவனென்னுமாம். (தனியுலகே) அத்விதீய

கைக்கிறே. (மனக்கடலில்வாழவல்ல) (உ) "வாழவல்ல வாசுதே வா." அக்கடலிட மெங்கும் வாழ்ச்சியிறே. கீழ்ப் பாட்டிலே, "வாழச்செய்தாய்" என்று-ஆழ்வாரை வாழ்வித்து அவ்வாழ்வு கண்டு தான் வாழுகிறபடி. (மாயமணாளநம்பீ) இவர் திருவுள்ளத் திலே புகுந்தபின்பிறே குணங்களும் திருமேனியில் செவ்வியும் பூர்த்தி பெற்றது.

(தனிக்கடலே) அத்விதீயமானகடலே. (௩)*குறைவில் தடங் கடலிறே. பெரிய பிராட்டியாருக்குப் பிறந்தகமான விடமிறே. (ச)*உலகெல்லாம் நன்கொடுங்க யோகணையுங்கடலிறே. (தனிச்சுட ரே) (க)"வெங்கதிரோன் குலத்துக்கோர் விளக்காய்த்தோன்றி" என்று இவன் திருவவதாரம் பண்ணுகைக் கீடான குல குருவானை ந டாலேவந்தஅத்விதீயத்வம். (தனியுலகே) (ரு) "ஒண்டொடியார்

சொன்னவிதுக்கு த்ருஷ்டாந்தம் காட்டுகிறார் (வாழவல்லவாசுதேவா) என்று. பூசலை வாழ்ச்சியாகப்பண்ணினாப்போலே வாழ்ச்சியாகாததையும் வாழ்ச்சியா கப் பண்ணினானென்று கருத்து. மநஸ்ஸிலென்னாதே, "கடலில்" என்று வை புல்யம் தோன்றச் சொல்லுகையாலே அதுக்கு ப்ரயோஜநம் காட்டுகிறார் (அக்கடலித்யாதி). கீழ்ப்பாட்டிலே வாழச்செய்தாயென்றாப்போலே இங்கு வாழச் செய்யவல்ல வென்றால் ஆநுரூப்யமுண்டே; இங்ஙன் சொல்லுவா னென்னென்ன வருளுகிறார் (கீழித்யாதி). "மணாளன்" என்று ஜாமாத்ருத் வம் சொல்லுகையாலே விக்ரஹ வைஶிஷ்ட்யம் தோன்றுகையால் (திரு மேனியில் செவ்வியும்) என்றது.

அதிஶயத்தாலே வந்த வத்விதீயத்வம் விவக்ஷித மென்றதுதன்னைப் பலபடியாகவருளுகிறார் (குறைவிலித்யாதி). (சு)"என்றும் திருமேனி நீ தீண் டப்பெற்று" என்று அவன் திருமேனியோட்டை ஸ்பர்ஶத்தால் வந்த வதி ஶயம் குறைவிலென்றதுக்குத் தாத்பர்யம். (க)

(க) பெரு-தி-௧0-௧ (உ) உ-உ-௩ (௩) தி-வாய்-௩ ௧0 உ
(ச) தி-வாய்-உ ச-அ-௧ (ரு) தி-வாய்-ச-௧-௧0 (சு) ௧-திருவ-௧௧.

மான ப்ராப்யம். ஒரு விபூதிக்காக வொருவனுமேயிறேப்ராப்யம். அங்கினைவிலேயிறே விபூதியாக நடக்கிறது. (என்றென்றித்யாதி) இப்படிப்பட்ட திருநாமங்களை மாறாதே தாஸ்யதையாலே சொல்லும் படிபண்ணி உனக்கு க்ஷீராப்த்த்யாதிகளான தேசங்களநேகங்களுண் டாயிருக்க, அவற்றை உபேக்ஷித்து அவையெல்லா மென்னுடைய ஹ்ருதயமே யாக விரும்புகையாலே அவாப்தகாமனான வுனக்கு ஶேஷபூதனான வென்னை அங்கீகாரஹனாக்கினாய்,.... .... (கூ)

அவ;—பத்தாம்பாட்டு. (தடவரையித்யாதி) பரமபதம் முத லான தேசங்களெல்லாத்தையும் விட்டு என்னெஞ்சிலே புகுந்தபின் பு நீ உஜ்ஜ்வலனானாயென்கிறார்.

---

திருமகளும் நீயுமே" என்று - ஒருநாடாக ஒருமிதுநத்துக்கு ஶேஷமாகையால் வந்த அத்விதீயத்வம். (க)"கலமந்தமில்லதோர் நாடு". (என்றென்றனக் கிடமாயிருக்க) இப்படிக்கொத்த திருநா மங்களையுடைய தேசங்கள் உனக்கு இருப்பிடமாயிருக்க. (என்னை) என்னையுமறியாதே உன்னையுமறியாதே யிருந்த வென்னை. (உ) " ஸமர்யாதஃ. - அமர்யாதஃ", (உனக்கு) அவாப்த ஸமஸ்தகாமனான வுனக்கு. (உரித்தாக்கினையே) ஓரிடமில்லாதாரைப் போலே, என் னெஞ்சை உனக்கு வாஸஸ்தாநமாகப் பண்ணிக்கொண்டாயே; இவ்வுபகாரத்துக்குத் தோற்று அடிமைப்படுகிறார் — உனக்குரித் தாக்கினையே யென்று. .... ... ... (கூ)

அவ;—பத்தாம்பாட்டு. (தடவரையித்யாதி) கீழிற்பாட்டில்- உகந்தருளின நிலங்களோடொக்கத் தம் திருமேனியை விரும்பினா னென்றார்; இப்பாட்டில்-அவற்றைவிட்டுத் தம்மையே விரும்பின படியை யருளிச்செய்கிறார்.

---

அரு;—பத்தாம்பாட்டு. (தடமித்யாதி) கீழிற்பாட்டிலே) என்றது - நெய்க்குடத்தில் பாட்டுக்களிலே யென்றபடி. அங்கேயிறே, "சிங்கப்பிரா னவனெம்மான் சேரும் திருக்கோயில் கண்டீர்" என்றும், "பெற்றங்கள் மேய்க்கும் பிரானார் பேணும் திருக்கோயில் கண்டீர்" என்றும், ஆழ்வார் திரு மேனியை எம்பெருமான் உகந்தருளின நிலங்களோடொக்க, விரும்பிற்று. (இப்பாட்டில்) என்றது-கீழில் பாட்டையும் இத்தையும் காட்டுகிறது, இங்ங

(க) தி-வாய்-உ-அ-ச (உ) ஸ்தோ-ர

மூ;—தடவரைவாய்மிளிர்ந்து மின்னுந்தவள நெடுங்கொடிப்போல்
சுடரொளியாய் நெஞ்சினுள்ளே தோன்று மென்சோதிநம்பீ
வடதடமும் வைகுந்தமும் மதிள் துவராவதியும்
இடவகைக ளிகழ்ந்திட்டென்பா லிடவகை கொண்டனையே.

---

ஸ்வா;—(தடவரையித்யாதி) பரப்பையுடைத்தான மலையிடத்திலே ப்ரகாஶகமுமாய், தேஜஸ்ஸாலேவிளங்கா நிற்பதாய், பரிஶுத்தமான பெரியகொடிபோலே. தடவரை - பெரியபர்வதமென்றபடி. மிளிருகை - ஒளிவிடுகை; தவழுகை யென்றுமாம். (சுடரொளியித்யாதி) நிரவதிகதேஜஸ்ஸாய் நெஞ்சுக்குள்ளே தோன்று

---

வ்யா;—(தடவரைவாய் மிளிர்ந்து மின்னும் தவள நெடுங்கொடிப்போல்) பரப்பையுடைத்தான மலையிலே ப்ரகாசகமுமாய், தேஜஸ்ஸாலே விளங்கா நிற்பதுமாய், பரிஶுத்தமுமான பெரிய கொடி எல்லார்க்கும் காணலாயிருக்குமாபோலே, பெரிய பர்வத ஶிகரத்திலே அதிதவளமாய் மிளிருகிற பெரிய கொடிபோலே. மிளிருகை - திகழுகை. (சுடரொளியாய்) நிரவதிக தேஜஸ்ஸாய். (நெஞ்சினுள்ளே தோன்றும்) ஹ்ருதய கமலத்தினுள்ளே தோன்றா நிற்கும். (சோதிநம்பீ) தேஜஸ்ஸால் பூர்ணனானவனே. (சுடர்)

---

னன்றாகில், கீழ்ப்பாட்டு வ்யாக்க்யாநத்தில் பழகவிட்டென்றவிதுக்கு ஆசையை நேராக மறந்தென்றும், பனிக்கடல் காட்டுத்தியோ டொத்ததென்றும், உகந்தருளின ஸ்த்தலங்களில் விருப்பமற்றபடி சொல்லுகையாலே, அவற்றோடொக்க விரும்புகை சொல்லக் கூடாமையால் சேராதிறே. இப்பாட்டில் வ்யாக்க்யாநாந்தத்தில் "இவ்விரண்டு பாட்டையும் ஈஶ்வரனுடைய முனியே நான்முகன்" என்றிருக்கச் சொல்லுகையும் சேராதிறே.

மிளிர்ந்தென்றதினர்த்தம் (ப்ரகாஶகமுமாய்) என்றது. மின்னுமென்றதினர்த்தம் (விளங்காநிற்பதாய்) என்றது. தடவென்றது-பரப்பாய், அடைவே அந்வயமாய், தவளவென்று பாவநத்வத்தைச் சொல்லுகிறதாய், ஓரர்த்தமருளிச்செய்து, தடவென்று-பெருமையாய், அத்தால் உயர்த்தியை விவக்ஷித்து "தவளமிளிர்ந்து மின்னும்" என்றந்வயமாய், "மிளிர்ந்து மின்னும்" என்ற மீமிசைக்கு அதிப்ரகாஶம் ஶப்தார்த்தமாய், தவளவென்று ஶ்லாக்க்யமாய், பலிதார்த்தத்தை அருளிச்செய்து கொண்டு யோஜநாந்தர மருளுகிறார் (பெரியவித்யாதி). "சுடரொளி" என்றுமீமிசையாய், "சோதி" என்றது-தர்மபூததேஜஸ்ஸாய், ஒரு அர்த்த மருளிச்செய்து அர்த்தாந்தர மருளுகிறார் (சுடரித்யாதி

கிற தேஜஸ்ஸாலே பூர்ணனானவனே! (சுடர்) திவ்யாத்மஸ்வரூபம். (ஒளி) திவ்யமங்களவிக்ரஹமென்னுமாம். (சோதி) குணங்களென்னுமாம். (நம்பி) இவற்றால் குறைவற்றிருக்கிறபடி. (என்) இவையெல்லாம் தமக்கு ப்ரகாஶிப்பித்தபடி. இவர் திருவுள்ளத்தே புகுந்தபின்பு திருமேனியும்புகர்பெற்றுபூர்த்தியுமுண்டாய்த்து.

(வடதடமித்யாதி) ஸநகாதிகளுக்கு முகம் கொடுக்கிற திருப்பாற்கடலும், நித்யஸூரிகளுக்கு முகம் கொடுக்கிற பரமபதமும், ப்ரணயிநிகளுக்குமுகம் கொடுக்கிற ஸ்ரீமத்த்வாரகையும். அரணையுடைத்தான தேசமென்கை. இவை முதலான திவ்யதேஶங்களெல்லாத்தையும் அநாதரித்து;அன்றீன்ற கன்றுக்குத்தாயிரங்கி முன்னணைக்கன்றையும் புல்லிட வந்தவர்களையும் கொம்பிலும் குளம்பிலும் கொள்ளுமாபோலே; (௧) "கல்லும் கனைகடலும் வைகுந்தவானாடும் புல்லென்றொழிந்தன" என்னக்கடவதிறே. (என்

திவ்யாத்ம ஸ்வரூபம். ஒளி - திவ்யமங்கள விக்ரஹம். சோதி - குணங்கள். (நம்பீ) குறைவற்றிருக்கிறபடி. "என்" என்று-இவையெல்லாம் தமக்குப்ரகாசிப்பித்தபடி. தம்முடைய திருவுள்ளத்தே திவ்யமங்கள விக்ரஹத்தோடே ப்ரகாஶித்தபடி; இவர் திருவுள்ளத்தே புகுந்தபின்பு திருமேனியிலே புகருண்டாய், பூர்த்தியுமுண்டானபடி. (௨) "சிக்கெனச்சிறிதோரிடமும்" இத்யாதி. இவர் சரமத்திலே இப்படி அருளிச்செய்கையாலே அநுபவித்த க்ருஷ்ண விஷயம் உள்ளே பூரித்தபடி.

(வடதடமுமித்யாதி) ப்ரஹ்மாதிகளுக்கு முகங் கொடுக்கிறதிருப்பாற்கடலும், (௩)*ஸதாபஶ்யந்தி-ஸதாபஶ்யந்தியில்படியே நித்யஸூரிகளுக்கு முகங்கொடுக்கிற பரமபதமும், ப்ரணயிநிகளுக்கு முகங்கொடுக்கிற ஸ்ரீமத்த்வாரகையும். (இடவகைகளிகழ்ந்திட்டு) இப்படிக்கொத்த விடங்களையெல்லாம், (௧) "கல்லுங்கனைகடலும் வைகுந்தவானாடும்புல்" என்கிறபடியே உபேக்ஷித்து. (என்பாலிடவகை கொண்டனையே) இவற்றில் பண்ணும் ஆதரங்களெல்லாவற்

வாக்ய பஞ்சகத்தாலே), "சிக்கெனச்சிறி தோரிடமும்" இத்யாதிக்கு "புகுந்ததற்பின் மிக்கஞானச்சுடர் விளக்காய்" என்றதிலே நோக்கு.

(௧)பெரியதிருவ-௬௮ (௨) தி-வாய்.௨-௬-௨ (௩) ஸாம-உத்தர.

மூ,—வேயர்தங்கள் குலத்துதித்த விட்டுசித்தன் மனத்தே
கோயில்கொண்டகோவலனைக்கொழுங்குளிர்முகில்வண்ணனை
ஆயரேற்றையமரர்கோவை யந்தணர்தமமுதத்தினைச்
சாயைபோலப் பாடவல்லார்தாமு மணுக்கர்களே. (கக)

பெரியாழ்வார் திருவடிகளேசரணம்.

## பெரியாழ்வார் திருமொழி முற்றிற்று

---

பாவிடவகை கொண்டனையே) இவற்றில் பண்ணுமாதரத்தை என் பக்கலிலேபண்ணினாய். இப்படி ஆரிதரித்தது உன்ப்ரயோஜநமென்னுமிடம் உன்திருமேனியில் காணலாம்படியிருந்தாய். இதென்ன வ்யாமோஹந்தானென்கிறார். ... ... .... (கO)

அவ;—நிகமத்தில் இத்திருமொழியை அப்யஸித்தார்க்குப் பலம் தம்மைப்போலே எம் பெருமானுக்கு அநந்யார்ஹராகை யென்கிறார்.

---

றையும் என்பக்கலிலே பண்ணினாயே!, "உனக்குரித்தாக்கினையே" "என்பாவிடவகை கொண்டனையே" என்று இப்படிச் செய்தாயே யென்று அவன்திருவடிகளிலே விழுந்துகூப்பிட, இவரையெடுத்து மடியிலே வைத்துத்தானும் ஆஶ்வஸ்தனானபடியைக்கண்டு ப்ரீதராய்த் தலைக்கட்டுகிறார். (க) "அதனில் பெரியவென்னவா" என்று, நம்மாழ்வாருக்கு பகவத்விஷயத்தில் பிறந்த அபிநிவேசமெல்லாம், இப்பெரியாழ்வார் பக்கலிலே ஈஶ்வரனுக்குப் பிறந்தபடி இத்திருமொழி. (தனிக்கடலே) ஈஶ்வரனுடைய *முனியே நான்முகன். "வடதடமும்" இத்யாதி. ... ... ... (கO)

அவ.—(வேயர்தங்கள் குலத்துதித்த) நிகமத்தில், இத்திருமொழியை அதிகரித்தார்க்கு பலம், தம்மைப்போலே அநந்யார்ஹ ஶேஷபூதராகப் பெறுவர்களென்கிறார்.

---

இத்திருமொழியில் தனிக்கடலே யித்பாத்யம்ஶமும், வடதடமுமித்யாதயம்ஶமும் ஈஶ்வரனுடைய முனியே நான்முகனென்று கூட்டி யோஜிப்பது.

அரு;—பதினோராம்பாட்டு. (வேயரித்யாதி) "தாமுமணுக்கர்கள்" என்ற ச (ஶ) காத்ரைதக் கடாக்ஷித்து, இப்பாட்டு நிகமநமாகையால் இத்திருமொழிக்குப்பலம் சொன்னதாக அவதாரிகை (இத்திருமொழியித்யாதி).

(க) தி-வாய்-கO-கO

ஸ்வா;—(வேயரித்யாதி) ஜகத்துக்கு ஆதித்யனுதித்து அந்தகாரத்தைப் போக்குமாபோலே வேயர் கோத்ரத்திலே இவர்வந்தவதரித்து ஜகத்திலுண்டான அஜ்ஞாநாந்தகாரத்தைப் போக்கினபடி. இப்படிப்பட்ட வாழ்வாருடைய ஹ்ருதயகமலத்தையே தனக்கு அஸாதாரணமானகோயிலாகவங்கீகரித்தக்ருஷ்ணனையாய்த்து இப்ப்ரபந்தத்தாலே ப்ரதிபாதித்தது. (விட்டுசித்தன்) ஸர்வேஶ்வரனுக்கு ஹ்ருதயரான வாழ்வார். இவர் திருவுள்ளத்திலே. பரவ்யூஹாதிஸ்தலங்களான ஸ்ரீவைகுண்ட்டாதிகளை யெல்லாமுபேக்ஷித்து, ஆழ்வார் திருவுள்ளத்தையே அவை யெல்லாமாகக்

---

வ்யா.—(வேயர்தங்கள்) உதயகிரியிலே ஆதித்யனுதித்தாற்போலே யாய்த்து இக்குடியிலே இவர் வந்தவதரித்தபடி. அவன் கேவலம் அந்தகாரத்தையிறே போக்குவது; "தனிச்சுடரே" என்று அவ்வாதித்யனுமிங்கேயாகையாலே அஜ்ஞாநாந்தகாரத்தைப்போக்கி, ஹ்ருதயகமலத்தை அலர்த்தும்ஆதித்யனாய்த்து இவர். (விட்டுசித்தன்மனத்தே) விஷ்ணுசித்தரென்று திருநாமம். (மனத்தே) ஹ்ருதயத்திலே. "விஷ்ணுசித்தர்" என்று நிரூபகமாய், அவனைவிடாமை அநுஷ்ட்டாந பர்யந்தமானபடி. (கோயில்கொண்ட கோவலனை) திருப்பல்லாண்டு தொடங்கி இவ்வளவும் இவர் திருவுள்ளத்

---

பிறந்தவென்னாதே, உதித்தவென்றதுக்கு பாவமருளுகிறார் (உதயேத்யாதி). (இக்குடியிலே) என்றது-"வேய்" என்று-மூங்கிலாய், மூங்கில் குடியிலேயென்றபடி. (அவ்வாதித்யனும்)என்[illegible] அவ்வாதித்யனுமையுமென்றபடி, அதாவது-(க) "யெநாக்ஷித்ருவஸ்வைக்[illegible]தஜஸா - யேநாதித்யஸ்தபதிதேஜஸா" என்கிறபடியேஎம்பெருமான்வர்த்திக்கையாலே அந்தகாரநிவர்த்[illegible]கனும்படிப்ரகாஶகனுமாபோலே, இவரிடத்தில் அவனைவிட்டு ஆதரத்தைப்பண்ணுகையாலேதத்ஸாம்யமுண்டென்கை.குலத்துதி[illegible]வன்மனத்தேயென்னாதே "விட்டுசித்தன்" என்றதுக்கு பா[illegible]மருளுகிறார் (விஷ்ணுவித்யாதி). மேலுக்கவதாரிகை (விஷ்ணுசித்தரென்றித்யாதி), படியென்றவனந்தரம் "சொல்லுகிறார்" என்று சேஷம். மனத்தில் கோவலனை யென்னாதே "கோயில்கொண்ட" என்று விஷ்ணுகர்த்ருகமாகச் சொல்லுகையாலே அதுக்கு பாவமருளுகிறார் (திருப்பல்லாண்டித்யாதி).

---

(க) தை-நா